மிகப் பெரும் ருஷ்ய எழுத்தாளரும், சோவியத் இலக்கியத்தைத் தோற்று வித்தவருமான மக்ஸீம் கார்க்கியின் (அலெக்ஸி மக்ஸீமவிச் பேஷ்கவ்) (1868-1936) பல இலக்கியப் படைப்புகள் உலக இலக்கியத்தின் தங்கக் கருவூலமாகத் திகழ்கின்றன. ''அர்தமோனவ்கள்'' அவற்றில் ஒன்று.

இந்த நாவலானது 1925இல் முதன் முதலில் தனி நூலாக வெளியிடப்பட்டது. அதைத் தொடர்ந்த ஆண்டுகளில் அது இத்தாலி, ஹங்கேரி, இங்கிலாந்து, அமெரிக்கா, ஜெர்மனி, பிரான்ஸ், ஜப்பான் மற்றும் பிற நாடுகளில் வெளியிடப்பட்டது. ''அர்தமோனவ்கள்'' மீது உலகெங்கிலும் இருக்கக் கூடிய வாசகர்கள் காட்டி வரும் தொடர்ந்த ஆர்வமானது, ஓர் உண்மையான கலைப்படைப்பு குறிப்பிட்ட காலத்தைச் சார்ந்ததில்லை என்ற உண்மையை வெளியிடுவதாக இருக்கிறது.

மக்ஸீம் கார்க்கி

# அர்தமோனவ்கள்

## (மூன்று தலைமுறைகள்)

நாவல்



ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

மொழிபெயர்ப்பாளர்: நா. முகம்மது செரீபு எம்.ஏ.

வடிவமைப்பாளர்: அலெக்சாந்தர் பேர்தவ்

**Максим Горький**

ДЕЛО АРТАМОНОВЫХ

Роман

*На тамильском языке*

**Maxim Gorky**

THE ARTAMONOVS

**A Novel**

***In Tamil***



சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

ISBN 5-05-001433-6

ரோமென் ரோலன்
ஒரு மனிதனுக்கு
ஒரு கவிஞனுக்கு

1

பண்ணை அடிமை ஒழிப்புக்கு சுமார் இரண்டாண்டு களுக்குப் பிறகு, இயேசு நாதரின் திருவுரு மாற்றத் திருநாள் தொழுகையின் போது, புனித நிகோலாவின் சர்ச்சில் ஒரு "வெளியாள்" இருப்பதை வட்டார மக்கள் கவனித்தார்கள். நெருக்கடியான கூட்டத்தினரிடையே, முரட்டுத்தனமாக மக்களை முழங்கையால் இடித்துக் கொண்டு, திரியோமவ் நகரத்தில் மிகவும் மரியாதையோடு வழிபாடு செய்யப்படும் தெய்வச் சின்னங்களுக்கு முன்னால் கனமான மெழுகு வர்த்திகளை அவர் வைத்தார். சற்றுச் சாய்ந்த உடலும், பழுப்பு நிறத்தில் அழுக்கான காற்சட்டை நீண்டு, சுருண்டு நெளிந்த தாடியும், நாய்க்குட்டிகளைப் போலச் சுருண்ட கருமையான தலைமயிரும் கொண்டு காணப்பட்டார்; பெரிய மூக்கும் முன்னுக்கு வந்து தொங்கிய இமைகளுக்குக் கீழே நீலமும்-சாம்பல் நிறமும் கொண்ட கண்களும் பெற்றிருந்தார். அவரது கைகள் சுதந்தரமாகத் தொங்கிய போது, அவரது அகன்ற உள்ளங்கைகள், அவரது முழங்கால்களைத் தொட்டதைக் காண முடிந்தது.

நகரத்தின் மிகவும் பிரபலமான ஆட்களோடு அவரும் சிலுவையை முதலாவதாக நெருங்கினார். அவர்களில் பெரும் பாலோர்க்கு அது மகிழ்ச்சியைத் தரவில்லை; தொழுகை முடிந்த பிறகு திரியோமவ் நகரத்தின் முக்கிய நபர்கள் அந்த அந்நியரைப் பற்றித் தங்களது கருத்துகளைப் பரி மாறிக் கொள்வதற்காக, சர்ச்சின் நுழைவு மண்டபத்திலே நின்று விட்டார்கள். சிலர் அவரைக் கால்நடை வணிகன் என்று கணித்தார்கள், மற்றவர்களோ—நிலக்கிழாருடைய வேலையாள் என கூறினார்கள்; நகரத்தின் மூத்த மனிதரான, யெவ்ஸேய் பய்மகோவ், மோசமான உடல்நலமிருந்தாலும்

நல்ல இதயம் கொண்ட, சமாதானத்தை நேசிக்கின்றவர், மெல்ல இருமிக் கொண்டார்:

''நம்மைப் போல அல்ல, அவர் பண்ணை நில உரிமையாளரின் பண்ணையாளாக இருக்க வேண்டும்—ஒரு வேட்டைக்காரன், அல்லது அது போன்ற ஏதோ ஒன்று, மேற்குடி மக்களின் கேளிக்கைகளுக்குப் பொறுப்பாக இருக்க வேண்டும்.''

''மனைவியிழந்த கரப்பான்பூச்சி'' என்று பட்டப் பெயர் சூட்டப்பட்ட, துணி விற்பனையாளனும், துடிதுடிப்பான சிற்றின்பப் பிரியனும், கெட்ட வார்த்தைகளை ரும்புபவனும், அம்மைத் தழும்பு விழுந்த அருவருப்பான பம்யாலவ், பகையுணர்வோடு குறிப்பிட்டான்:

''அவனது கைகளைப் பார்த்தீங்களா—எவ்வளவு நீளமாக இருக்கின்றன? அவன் எப்படி நடக்கிறான் தப்பாருங்கள்—அவனுக்காகவே சர்ச்சின் எல்லா மணிகளும் ஒலித்துக் கொண்டிருப்பது போல.''

அகன்ற தோள்களும், பெரிய மூக்கும் கொண்ட அம்மனிதர், தனது சொந்த நிலத்தில் நடப்பது போல உறுதியாக காலடி வைத்து தெருவில் சென்றார். நல்ல துணியால் ஆன நீலநிற மேலங்கியும், ருஷ்யத் தோலில் நன்கு செய்யப்பட்ட காலணிகளும் அணிந்திருந்தார். அவரது கைகள் தன்னுடைய சட்டைப் பைகளுக்குள்ளாகத் திணிக்கப்பட்டிருந்தன, முழங்கைகள் அவரது உடலோடு நெருக்கமாக ஒட்டிக் கொண்டிருந்தன. அந்த மனிதர் யார் என்பதைக் கண்டு பிடிப்பதற்காக, யூக்காரிஸ்ட் விருந்துக்கு திரு அப்பம் சுட்டுக் கொடுக்கும் யெர்தான்ஸ்கயாவை நியமித்து விட்டு, மணிகள் ஒலிக்கவும், பம்யாலவின் பழத் தோட்டத்தில் மாலை சந்திக்க வேண்டும் என்ற அழைப்புடன், தங்களது விடுமுறை உணவுக்காக நகரவாழ்நர் வீடு திரும்பினர்.

சிற்றுண்டி முடிந்த பிறகு, பிற நகர மக்கள் ''பசுவின் நாக்கு'' என்ற இடத்தில், நதியின் குறுக்காக ராத்ஸ்கி இளவரசர்களின் நிலத்தில் அந்த அந்நியனைப் பார்த்தனர். வில்லோப் புதர்களுக்கிடையே, மணற்பாங்கான இடத்தைக் காலடி போட்டு நடந்தபடி அவர் நகர்ந்து சென்று கொண்டிருந்தார். தனது கையால் கண்களுக்கு நிழலை ஏற்படுத்திக் கொண்டு, நகரத்தையும், ஒகா நதியையும், தாறுமாறாக சதுப்பு நிலத்தைத் தாண்டிப் பாய்கின்ற அதனது உபநதியாகிய வதராக்ஷாவையும் திரும்பிப் பார்த்தார். திரியோமவ்

...மக்கள் மிகுந்த எச்சரிக்கையோடு இருந்தார்கள். அவனை வெளியே வரும்படி அழைக்கவோ, அவர் யார், எதற்காக வந்திருக்கிறார் என்பதைக் கேட்கவோ எவருக்கும் ...வில்லை. இன்னும், நகரத்துக் காவல்காரனாகப் ...யாற்றிய கோமாளியும், குடிகாரனுமான மீஷ்கா ஸ்து... பிரதிநிதியாக அனுப்பினார்கள். எல்லாருக்கும் ...ல், பெண்களைப் பற்றிக் கலவரமடையாது, ...கமில்லாதபடி போலீஸ்காரன் சீருடையாகிய காற்சட்... உருவிப் போட்டான்; ஆனால் தனது சுருக்கங்கள் ...ந்த வட்டத் தொப்பியினைத் தலையில் விடாது அணிந்திருந்தான். குறுக ஓடும் வதராக்ஷா நதியைக் கடந்து, குடித்திருந்த தனது தொந்தியால் பலமாக மூச்சு விட்டுக்கொண்டு, ...த்துப் போல கேலிக்குரியவாறு நடைபோட்டபடி அந்த அந்நியனை நெருங்கினான். தனது துணிவை நிலைநிறுத்திக் கொள்வதற்கு மிகவும் உரக்கக் கேட்டான்:

''நீ யார்?''

அந்நியனுடைய பதில் காதில் கேட்கவில்லை, ஆனால் ...துபா உடனடியாகத் தனது ஆட்களிடம் திரும்பி விட்... கதை சொன்னான்:

''என்னுடைய மானவெட்கத்தை நான் எங்கே தொலைத்தேன் என்பதை அவன் அறிந்து கொள்ள விரும்புகிறான். அவனுடைய கண்கள் மிகவும் கெடுநோக்கானவை, ...பறிக் கொள்ளைக்காரனைப் போல குறும்புத்தன... தோற்றம் இருந்தது.''

அன்று மாலை, பம்யாலவ் பழத்தோட்டத்தில், கனத்த தொண்டை படைத்த, திரு அப்பம் சுட்டுக் கொடுக்கும் ...தான்ஸ்கயா ஒரு புகழ்பெற்ற புத்திசாலிப் பெண்ணைப் போலவும், வருவதுரைப்பவள் போலவும், பேந்தப் பேந்த ...களை உருட்டி, அச்சந்தருகின்ற முறையில் நகரத்தின் ... பிரமுகர்களிடம் இவ்வாறு அறிவித்தாள்:

''அவனது குடும்பப் பெயர் அர்தமோனவ், திருத்தீக் ... விழாவில் இல்யா எனப் பெயரிடப்பட்டான். தன்னுடைய ...பார நிமித்தம் தான் இங்கே வசிக்கப் போவதாகக் கூறு..., என்ன மாதிரியான வியாபாரம் என்பதை என்னால் ... முடியவில்லை. வோர்கோரத் நகரத்திலி... ...லை வழியாக வந்தான். இன்று மாலை மூன்று ... சற்று பிந்தி அதே சாலையில் அவன் போய்விட்...''

எல்லாமே அவ்வளவுதான். [illegible] மனிதனைப் பற்றி ஆர்வமூட்டும் [illegible] [illegible] அவர்களால் தெரிந்து கொள்ள முடியவில்லை. யாரோ இரவு நேரத்தில் சன்னலைத் தட்டி, [illegible]கின்ற பேரிடரை வார்த்தைகளின்றி எச்சரித்து விட்டுப் போனது போல, அது மகிழ்ச்சியற்றதாக இருந்தது.

மூன்று வாரங்கள் கழிந்தன. நகர மக்களுடைய நினைவி னின்றும் அந்த உணர்வு ஏறத்தாழ மங்கிப் போயிருந்த நிலை யில், இந்த அர்தமோனவ் மூன்று பையன்களுடன் திடீரென்று தோன்றி, நேரடியாக பய்மகோவிடம் சென்று உறுதியாகத் தெரிவித்தார்:

''இதோ, யெவ்ஸேய் மீத்ரிச், உன்னுடைய புத்திசாலித் தனமான ஆட்சியின் கீழே மூன்று புதிய குடியிருப்பாளர்கள். இங்கே உன்னோடு தங்கிக் கொள்ளவும், ஒரு நல்ல வாழ்க் கையை அமைத்துக் கொள்ளவும் தயவு செய்து எனக்கு உதவு.''

விஷயத்தை ஒட்டிச் சுருக்கமாகப் பேசிய அவர், ராத்ஸ்கி இளவரசர்களின் முன்னாள் பண்ணையாள் என்றும், ராத் நதியை ஒட்டி கூர்ஸ்க் மாநிலம் அருகே அவர்கள் பண்ணை இருந்தது என்றும், அங்கே தான் இளவரசர் கியோர்கிக்குக் கண்காணியாக வேலை பார்த்ததாகவும் விளக்கினார். பண்ணை அடிமை ஒழிப்புக்குப் பிறகு ஒரு கணிசமான தொகையைப் பெற்றுக் கொண்டு, தனக்கென்று சொந்த மாக ஒரு வியாபாரத்தை, ஒரு நார்ப்பட்டு ஆலையை, தொடங்க வேண்டும் எனப் புறப்பட்டு வந்து விட்டார். அவர் மனைவியை இழந்தவர். பையன்களுடைய பெயர் கள்: பியோத்தர், மூத்தவன்; நிகீதா கூனல் முதுகுடைய வன்; அல்யோஷா, இளையவன்—மருமகன், ஆனால் சட்ட பூர்வமாக சுவீகாரமாக எடுத்துக் கொள்ளப்பட்டவன்.

''எங்களது குடியானவர்கள் மென்னயச் சணல் தரும் செடிகளைச் சிறிய அளவில்தான் பயிர் செய்கிறார்கள்,'' என்று பய்மகோவ் சிந்தனைவயப்பட்டபடி குறிப்பிட்டார்.

''நாம் அவர்களை அதிகம் பயிர் செய்யும்படி செய் வோம்.''

அர்தமோனவின் குரல் கனமாகவும், கரகரப்பாகவும் இருந்தது, மேலும் அவரது பேச்சு ஒரு பெரிய முரசை அடிப் பது போல இருந்தது. ஆனால் பய்மகோவ், அவரது வாழ்க் கை முழுக்க பூமியில் எச்சரிக்கையோடு நடந்தார், மென்

[illegible] ஏதோ அச்சந்தரும் ஒன்றைக் கிளப்பி [illegible] என்று அவர் அஞ்சுவது போல இருந்தது. தனது [illegible] கண்ணைச் சிமிட்டியபடி, துயரார்ந்த [illegible] நிறந்தோடு, கதவருகே கல்லாய்ச் சமைந்து [illegible] அர்தமோனவின் பையன்களை அவர் மேலோட்ட [illegible] பார்த்தார். அவர்கள் முற்றிலும் வித்தியாசமான [illegible]யிலே இருந்தார்கள். மூத்தவன் தனது தந்தையைப் [illegible] அகன்ற மார்பும், அடர்ந்த புருவமும், மெல்லிய, [illegible] போன்ற கண்களும் கொண்டிருந்தான். நிகிதா, அவனது [illegible]டையைப் போலவே நீலநிறமாக, ஒரு பெண்ணினுடை [illegible] போல பெரிய விழிகளை பெற்றிருந்தான். அலெக்ஸி, [illegible] கன்னங்களுடன், வெண்ணிறத் தோலுடன், சுருண்ட [illegible]யுடன், கபடற்று, உற்சாகமான தோற்றத்துடன் அரு[illegible]யாகக் காணப்பட்டான்.

''ஒருவன் இராணுவத்திற்காகவா?'' பய்மகோவ் வின[illegible]னார்.

''இல்லை. பையன்கள் எனக்கே தேவைப்படுகிறார்கள். நான் விடுவிப்புப் பத்திரம் வைத்திருக்கிறேன்.''

அர்தமோனவ் கட்டளையிடுவது போலப் பையன்களிடம் குறிப்பிட்டார்:

''வெளியே போங்கள்.''

அமைதியாக, ஒரே வரிசையாக, வயதிற்கேற்ப அவர் [illegible] வெளியேறிச் சென்ற பிறகு, பய்மகோவின் முழங்கா[illegible]லே தனது வலுவான கையை வைத்துவிட்டுப் பேசினார்:

''யெவ்ஸேய் மீத்ரிச், நான் இங்கிருக்கின்ற அதே வே[illegible]ளையிலே, ஒரு தொடர்பினையும் நான் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்: உன்னுடைய மகளை எனது மூத்த மகனுக்குத் தர விரும்புகிறேன்.''

பய்மகோவ் உண்மையாகவே அச்சமுற்றுப் போனார், [illegible] கைகளை அலைத்தபடி, தான் அமர்ந்திருந்த பெஞ்சி[illegible]லிருந்து எழுந்திருக்கத் தொடங்கினார்:

''ஐயோ, நீ என்ன சொல்கிறாய்! கடவுள் உன்னோடு [illegible]ராக! நான் உன்னை இதற்கு முன்னர் ஒருபோதும் [illegible]த்ததில்லை, உன்னைப் பற்றி எதுவும் எனக்குத் தெரி[illegible]. நீயோ அதுபோன்ற காரியத்தோடு வந்திருக்கிறாய்! [illegible] ஒரே ஒரு மகள் தான் இருக்கிறாள், அவளும் திரு[illegible]த்திற்கு வேண்டிய வயது வந்தவள் இல்லை, சின்னப் [illegible]. மேலும், நீயும் அவளை ஒருபோதும் பார்த்ததில்லை;

அவள் எப்படி இருப்பாள் என்றும் உனக்குத் தெரியாது... அது போன்ற விஷயங்களை உன்னால் எப்படிக் கூற முடியும்?''

ஆனால் அர்தமோனவ் தனது சுருண்ட தாடி வழியாக முறுவலிக்க மட்டுமே செய்துவிட்டுப் பேசினார்:

''நீ என்னைப் பற்றிய விவரங்களை மாவட்ட தலைமைப் போலீஸ் அதிகாரியிடமிருந்து தெரிந்து கொள்ளலாம். எனது இளவரசருக்கு அவர் பெரிதும் கடமைப்பட்டவர், மேலும் எனக்குத் தேவையான எல்லா உதவிகளையும் செய்யும்படி இளவரசர் அவருக்கு எழுதி இருக்கிறார். மோசமாக எதுவும் உன்னால் கேள்விப்பட முடியாது, புனித தெய்வபீடத்திற்கு முன்னால் என்னால் சத்தியம் செய்ய முடியும். எனக்கு உன் மகளையுங்கூடத் தெரியும். உன்னுடைய நகரத்திலே ஒவ்வொன்றையும் நான் அறிவேன். அமைதியான முறையிலே நான் இங்கு நான்கு முறை வந்திருக்கிறேன், ஒவ்வொன்றையும் கண்டு பிடித்திருக்கிறேன். எனது மூத்த மகன் கூட இங்கு இருந்திருக்கிறான், உன் மகளையும் அவன் பார்த்திருக்கிறான்—நீ அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்!''

கரடியால் இறுகத் தழுவப்பட்ட மனிதனுக்குள்ள உணர்வோடு, பய்மகோவ் தனது பார்வையாளரைப் பார்த்து வினவினார்:

''நீ பொறுத்திருக்கவும்...''

''என்னால் பொறுத்திருக்க முடியும், ஆனால் நீண்ட காலத்திற்கு அல்ல. நீண்ட காலம் காத்திருக்க முடியாத அளவுக்கு நான் மிகவும் வயதாகிப் போனவன்,'' என்று அடம்பிடித்த அந்நியன் உறுதியாக பதிலளித்தார். சன்னலுக்கு வெளியே சாய்ந்து கொண்டு, முற்றத்தை நோக்கி உரக்கக் கத்தினார்:

''வந்து உங்களுடைய ஓம்புநரை வணங்குங்கள்.''

அவர்கள் அங்கிருந்து இடம் பெயர்ந்து போன பிறகு, அச்சத்தோடு புனிதபீடத்தை நோக்கித் திரும்பி மூன்று முறை தானாகவே குறி வைத்துக் கொண்டு, முணுமுணுத்தார் பய்மகோவ்:

''கடவுள் நம்மைக் காப்பார்! இவர்கள் என்ன மாதிரியான ஆட்கள்? தீங்கிலிருந்து எங்களைக் காப்பாற்றும்.''

தனது கைத்தடியின் மீது பலமாகச் சாய்ந்தபடியே, தன்னை இழுத்துக் கொண்டு வெளியே பழத் தோட்டத்

[illegible] சென்றார். அங்கே ஓர் எலுமிச்சை மர நிழலிலே [illegible] மனைவியும் மகளும் பழப்பாகு தயாரித்துக் கொண்டிருந்தார்கள். வீறார்ந்த அழகிய தோற்றங் கொண்ட அவரது மனைவி கேட்டாள்:

''முற்றத்திலே யார் அந்த இளைஞர்கள், மீத்ரிச்?''

''யாருக்கும் தெரியாது. நதால்யா எங்கே?''

''சர்க்கரை எடுப்பதற்காகச் சரக்கறைக்குச் சென்றிருக் கிறாள்.''

''சர்க்கரைக்கா?'' புல்வளர்ந்த ஒரு மேட்டின் மீது [illegible]வாகவே உட்கார்ந்தபடி பய்மகோவ் வாட்டத்தோடு திருப்பிச் சொன்னார். ''சர்க்கரை.ஆமாம், அவர்கள் கூறியது உண்மை: பண்ணையடிமை ஒழிப்பு மக்களுக்கு ஏராளமான தொல்லையைக் கொடுக்கப் போகிறது.''

குறிப்பாக அவரையே பார்த்துக் கொண்டு, ஓர் எச்சரிக் கை உணர்வோடு, அவர் மனைவி கேட்டாள்:

''என்ன கோளாறு? திரும்பவும் மோசமாகக் காணப் படுகிறாய்?''

''என்னுடைய அகம் கோளாறாகி விட்டது. இந்த உல கத்தில் என்னுடைய இடத்தை எடுத்துக் கொள்வதற்கு அந்த மனிதன் வந்து விட்டது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டிருக்கிறது.''

அவரை அமைதிப்படுத்துவதற்கு அவரது மனைவி முயன்றாள்:

''அற்பத்தனமாக இருக்காதே! இப்பொழுதெல்லாம் கிராமப்புறங்களிலிருந்து ஏராளமான ஆட்கள் நகரத்திற்கு வந்து கொண்டிருக்கிறார்கள்.''

''அது அப்படித்தான். அவர்கள் வந்து கொண்டிருக் கிறார்கள். இப்போதைக்கு நான் எதையும் உன்னிடம் கூறப் போவதில்லை. அதைப் பற்றி நான் சிந்திக்கிறேன்...''

ஐந்து நாட்களுக்குப் பிறகு பய்மகோவ் தனது படுக்கை யில் வீழ்ந்தார், பன்னிரண்டு நாட்களுக்குப் பிறகு இறந்து போனார். அவரது சாவு அர்தமோனவ், அவரது பையன் [illegible] மீது இன்னும் அதிகமான மாசு படிய வைத்தது. [illegible]வர் உடல்நலமில்லாது இருந்தபோது அர்தமோனவ் [illegible] இரு முறை பார்த்தார். தனிமையிலே அவர்கள் நீண்ட நேரம் பேசினார்கள். இரண்டாவது முறை, பய்ம கோவ் தனது மனைவியை உள்ளே அழைத்தார், தனது

மார்பின் மீது தனது கைகளை சோர்வாக மடித்து வைத்துக் கொண்டு பேசினார்:

''அங்கே—அவளிடம் பேசு. இதற்கு மேல் இந்த உலக விவகாரங்களில் என்னால் தலையிட முடியாது என்பது போலத் தோன்றுகிறது. எனக்கு ஓய்வு கொடுங்கள்.''

''என்னுடன் வா, உல்யானா இவானவ்னா,'' என்று அர்தமோனவ் அறையை விட்டு வெளியேறினார். அவள் பின் தொடர்ந்து வருகிறாளா என்பதைக் கூடப் பின்னால் திரும்பிப் பார்க்காதபடி சென்றார்.

விருந்தினனைப் பின்பற்றிச் செல்வதற்கு அவள் தயங்குவதைக் கண்டதும், நகரத்தின் முதியவர் தனது மனைவிக்கு அமைதியாக அறிவுரை கூறினார்: ''போ, உல்யானா. இது விதி போலத்தான் தோன்றுகிறது.'' அவளோ நல்ல பண்புகளைக் கொண்ட ஒரு பெண், புத்திசாலி, சீர்தூக்கிப் பார்க்காமல் எந்தக் காரியத்தையும் செய்ய மாட்டாள்; ஆயினும், எப்படியோ, ஒரு மணி நேரத்திற்குப் பிறகு, அவள் தன் கணவனிடம் அவ்வாறு திரும்பும்படி ஆயிற்று, தனது அழகிய கண்ணிமைகளினின்றும் நீர் சொரியப் பேசினாள்:

''என்ன செய்வது, மீத்ரிச். அது விதி போலத்தான் தோன்றுகிறது. நம் மகளுக்கு உன் வாழ்த்தினைச் சொல்லு.''

அன்று மாலை, தன் மகளுக்கு விழாக்கோல உடையுடுத்தி, தந்தையினுடைய படுக்கையருகே அழைத்துச் சென்றாள். அர்தமோனவ் தன் மகனை முன்னுக்குத் தள்ளிவிட்டார். பையனும் பெண்ணும், ஒருவருக்கொருவர் பார்ப்பதைத் தவிர்த்தபடி, கைகளைப் பற்றினார்கள், முழங்காலிட்டு நின்றார்கள், தங்களது தலைகளைக் குனிந்தார்கள், பய்மகோவ் மூச்சுவிடச் சிரமப்பட்டபடி, அவர்களுக்கு மேலாக பண்டைய—முத்துப்பதித்த குடும்பத்தின் தெய்வ வடிவத்தை வைத்தார்.

''தேவனின் பெயராலும், தேவகுமாரனின் பெயராலும்... கடவுளே! எனது ஒரே மகளைக் கைவிட்டு விடாதே!''

அர்தமோனவை நோக்கி, அவர் கண்டிப்புடன் கூறினார்:

''நினைவிருக்கட்டும்: என் மகளுக்காக நீ கடவுளுக்கு பதில் சொல்ல வேண்டி இருக்கும்!''

தனது கையால் தரையைத் தொட்டபடி அர்தமோனவ் வணங்கினார்.

''எனக்குத் தெரியும்.''

அவர் வருங்கால மருமகளுக்கு ஓர் அன்பான வார்த்தை கூடக் கூறாது, அவளையும் தனது மகனையும் வெறுமனே ஒரு பார்வை பார்த்து விட்டு, கதவை நோக்கி தலையாட்டினார்:

''போங்கள்.''

மண உறுதி செய்யப்பட்டவர்கள் அறையை விட்டு நீங்கியதும், படுக்கையின் விளிம்பில் அவர் உட்கார்ந்து உறுதியாகப் பேசினார்:

''எளிதாக ஓய்வு கொள். ஒவ்வொன்றும் நன்றாகவே நடக்கும். என்னுடைய இளவரசர்களுக்கு நான் முப்பத்தேழு ஆண்டுகள் சேவை செய்திருக்கிறேன். ஒருபோதும் சிக்கலில் மாட்டிக் கொண்டதில்லை. மேலும் மனிதன் கடவுள் அல்ல. மனிதன் கருணையுடையவனுமல்ல. அவனைத் திருப்திப்படுத்துவது சிரமம். நீயோ, உல்யானா, எந்த வகையிலும் வருத்தப்பட வேண்டியதில்லை. நீ என் பையன்களுக்குத் தாயாக இருக்கலாம். உன்னை மதிக்கும்படி அவர்கள் கட்டளையிடப் படுவார்கள்.''

ஒரு வார்த்தை கூடப் பேசாது, மூலையிலிருந்த தெய்வபீடத்தை உற்றுப் பார்த்தபடி பய்மகோவ் அதனைச் செவிமடுத்தார். அவர் கண்களினின்றும் நீர் கொட்டியது; உல்யானாவும் தேம்பிக் கொண்டிருந்தாள். ஆனால் இந்த மனிதனோ வருத்தத்தோடு மேலும் தொடர்ந்தார்:

''ஆ, யெவ்ஸேய் மீத்ரிச், எங்களை விட்டு சீக்கிரமாக நீ விலகிக் கொண்டிருக்கிறாய். நீ உன்னைப் பற்றி எந்த அக்கறையும் எடுத்துக் கொண்டதில்லை. மிக கோசமான நிலையில் நான் உன்னை அணுகியபோது—அது எனது தொண்டையில் வைக்கப்பட்ட கத்தி போல இருந்தது!''

அவர் தனது தாடியை விரைவான வேகத்தோடு குறுக்காகத் தடவி விட்டார், பலமாகப் பெருமூச்சு விட்டார்.

''உன்னைப் பற்றி நான் அறிவேன். நீ நேர்மையானவன், புத்திசாலியும் கூட, நல்ல தலைவர். நீயும் நானும் சேர்ந்து, சுமார் அடுத்த ஐந்தாண்டுகளில், நம்மால் எதையும் செய்யாமல் இருக்க முடியாது! வந்து, ஆனால் அது கடவுளின் விருப்பம்.''

உல்யானா துயரத்துடன் கதறினாள்:

''ஏ, அண்டங்காக்கையே. நீ ஏன் கரைகிறாய்? எங்களை ஏன் அச்சுறுத்துகிறாய்? ஒருவேளை அவன்...''

ஆனால் அர்தமோனவ் எழுந்து நின்றார். பிணத்தை வணங்குவதைப் போல பய்மகோவைத் தலை தாழ்ந்து வணங்கினார்.

''உன்னுடைய நம்பிக்கைக்கு நன்றி. போய் வருகிறேன். நான் ஆற்றுக்குச் செல்ல வேண்டும். என்னுடைய சாமான் களோடு படகு அங்கே இருக்கிறது.''

அவர் போய்விட்ட பிறகு, உல்யானா சீற்றங் கொண்ட வளாக உரக்கப் பேசினாள்:

''நாட்டுப்புறத்துக் காட்டான்! திருமணம் உறுதி செய்யப்பட்ட தனது சொந்த மருமகளிடம் கூட அன்பான ஒரு நல்ல வார்த்தை கூறவில்லை!''

அவளது கணவன் அவளை நிறுத்தினார்:

''அடா, படபடக்க வேண்டாம். என்னைக் கவலைக்குள் ளாக்காதே.''

சற்று நேரச் சிந்தனைக்குப் பிறகு, அவர் பேசினார்:

''நீ அவனைப் பற்றி நில். இங்குள்ள நமது ஆட்களைக் காட்டிலும் அவன் மேலானவன் என்ற உணர்வு எனக்கு இருக்கிறது.''

பய்மகோவை மரியாதை செய்வதற்காக அவரது இறுதிச் சடங்கில் கலந்து கொள்ள நகரம் முழுவதும் திரண்டு வந்திருந்தது. சடங்குகளில் ஐந்து சர்ச்சுகளைச் சேர்ந்த பாதிரி மார்கள் ஒரு சேர வந்தார்கள். சவப்பெட்டியைத் தொடர்ந்து சென்ற இறந்து போனவரின் மனைவியையும், மகளையும் அடுத்து, நகர மக்களின் மகிழ்ச்சியின்மையைப் பெறும் வகையில், அர்தமோனவ்கள் சென்றார்கள். தனது தந்தைக்கும், சகோதரர்களுக்கும் பின்னால் சென்ற கூனல் விழுந்த நிகீதா, கூட்டத்தினரின் முணுமுணுக்கும் குரல் களைக் கேட்டான்:

''யாருமே அறியாத ஒரு மனிதன், முதலாவது இடத்திற்குத் தன்னைத் தள்ளிக் கொண்டு போகிறான்.''

தனது கருவாலிக் கொட்டை நிறமான கண்களைத் தன்னைச் சுற்றிலும் சுழலவிட்டபடி பம்யாலவ் கிசுகிசுத்தான்:

''யெவ்ஸேய், உனது ஆன்மா சாந்தியடையட்டும், எச்சரிக்கையான மனிதர், உல்யானவும் அதே போல கவனமான வள் தான். ஒரு நல்ல காரணமில்லாமல் அவர்கள் ஒரு போதும் செயலாற்ற மாட்டார்கள். ஆக, இதில் எங்கோ ஓர் இரகசியம் இருக்கிறது. அந்தத் தடித்த ஆசாமி எப்படியோ அவர்களை ஆக வைத்திருக்கிறான், இல்லாவிட்

பிறகு எதற்காக அவனைத் தங்கள் சொந்தக்கார னாக ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும்?''

''ஆமாம், அது ஓர் இருட்டு வாணிகம்.''

''அது தான் நானும் சொல்வது. ஓர் இருட்டு வாணிகம். பெரும்பாலும் கள்ள நோட்டாகத் தான் இருக்க வேண் டும். பய்மகோவ் எவ்வளவு புனிதமானவராக இருந்தார் என்று எண்ணிப் பாருங்கள், இல்லையா?''

இந்தப் பேச்சைக் கேட்டு, நிகீதா தனது தலையைக் குனிந்தான். ஓர் அடியை எதிர்பார்த்திருந்தது போல தன் கூன் முதுகை வளைத்து சென்றான். அது காற்றடி நாள். மக்களுக்குப் பின்புறமாகக் காற்று அடித்தது. நூற்றுக் கணக்கான காலடிகளில் எழுந்த புழுதியானது ஒரு புகை மேகம் போலத் திரண்டது, நன்கு எண்ணெய் போடப் பட்ட, மூடப்படாத தலைகளை மூடியது. யாரோ சொன் னான்:

''அர்தமோனவைப் பாருங்கள், நம்முடைய புழுதியால் அவர் கிட்டத்தட்ட மறைந்து போய் விட்டார். நாடோடி போல சாம்பல் நிறமாக மாறிப் போய்விட்டார்.''

ஈமச் சடங்கு முடிந்த பத்தாம் நாள், உல்யானா பய் மகோவாவும் அவளது மகளும் கிறிஸ்தவச் சந்நியாசி மடத் திற்குச் சென்றனர். அவர்களுடைய வீட்டை அர்தமோ னவ் வாடகைக்குப் பிடித்துக் கொண்டார். அவரும் பையன் களும் சூறைக் காற்றிலே வசிப்பது போல இருந்தார்கள். நகரத்தின் எல்லாத் தெருக்களிலும் மேலுங் கீழுமாக போய்வந்தபடி காலை முதல் இரவு வரை அவர்கள் காணப்பட்டார்கள். சர்ச்சைக் கடந்து செல்லும் போது அவசரமாக சிலுவை வைத்துக் கொண்டார்கள். தந்தை யோ தனது வெறித்தனமான சக்தியில் தளர்ச்சியடையாத வராக இருந்தார்; மூத்த மகன்—சோர்வார்ந்தவனாகவும் பேச்சைத் தவிர்க்கின்றவனாகவும் இருந்தான், பயங்கொள் ளியாகவோ, நாணமுள்ளவனாகவோ காணப்படான். அழ கான அல்யோஷாவோ நகரத்துப் பையன்களைப் போருக் கழைத்தான், பெண்களைப் பார்த்து துணிவாகக் கண்ண டித்தான். நிகீதாவைப் பொருத்த மட்டில், முக்கோண வடிவக் கூனலுடன், காலைச் சூரியோதயத்தின் போது, நதியைக் கடந்து ''பசு நாக்கிற்கு''ப் புறப்பட்டு விடு வான். இங்கே தச்சர்களும், கொத்தர்களும் காக்கைகளைப் போலக் கூடிக் கிடந்தார்கள். ஒகா நதிக்குச் சற்று தொலை

வில், ஒரு நீளமான செங்கல் கட்டுக் குடியிருப்பையும், அதன் பக்கத்தில் ஒரு பெரிய, பன்னிரண்டு அங்குல மரக்கட்டைகளால் ஆன இரட்டை மாடி வீடு ஒன்றையும் உருவாக்கிக் கொண்டிருந்தார்கள். ஒரு சிறைச் சாலை போல அந்த மரத்து வீடு தோற்றமளித்தது. மாலை நேரங்களில் திரியோமவ் நகர மக்கள் வதராக்ஷா நதிக்கரையில் கூடி, பூசணி விதைகளையும், சூரிய காந்தி விதைகளையும் சிறுகச் சிறுகக் கடித்துக் கொண்டு, ரம்பங்களின் செறுமல்களையும் கணைப்புகளையும், இழைப்புளிகளின் உராய்வுகளையும், கூர்மையான கோடரிகளின் வெட்டு ஒலிகளின் மறு ஓசைகளையும் கேட்டபடி கூடுவார்கள். பாபிலோனில் அமைக்கப்பட்ட உயர் கோபுரத்தின் பயனற்ற கட்டுமானத்தைக் கேலி பேசத் தொடங்குவார்கள், அந்த அந்நியர்களுக்கு எல்லாவித அவக்கேடுகளும் ஏற்படும் என பம்யாலவ் அவர்களிடம் உறுதி கூறிப் பேசுவான்:

''ஓடை நீரானது இந்த அருவருப்பான அமைப்புகளை அடியோடு பெயர்த்து விடும். தச்சர்கள் புகையிலையைப் புகைப்பதுடன் நெருப்புங்கூடச் சேர்ந்து கொள்ளும், எனில் எல்லா இடங்களிலுமே மரத்தூள் சீவல்கள் கிடக்கின்றன.''

காசநோயாளியான பாதிரி வஸீலி இதற்குக் கூறுவார்:

''அவர்கள் மணலில் கட்டுகிறார்கள்.''

''அவர்களுடைய ஆலைக்காக அவர்கள் தொழிலாளர்களை ஒன்று திரட்டும் போது, நாம் குடிபோதையிலும், களவிலும், ஒழுக்கக் கேட்டிலும் இருப்போம்.''

மீல் உரிமையாளனும், மது-உணவு வழங்கும் கடை வைத்திருப்பவனுமான, பெருத்த, ஊதி உப்பிய, கொழுப்பு வைத்த லுகா பார்ஸ்கி, இதற்குக் கரகரத்த குரலில் இப்படி ஆறுதல் கூறுவான்:

''மக்கள் அதிகமாவது, அதிகமான வாடிக்கையாளர்கள். இது எல்லாம் சரிதான்—மக்கள் வேலை செய்யட்டும்.''

நிகீதா அர்தமோனவ் நகரமக்களுக்கு கேளிக்கை விருந்தளித்தான். வில்லோப் புதர்களை வெட்டியும், வேரோடு பிடுங்கியும் ஒரு பெரிய சதுக்கத்தை சுத்தப்படுத்தினான். பிறகு வதராக்ஷா ஆற்றின் அடியில் மூழ்கி கனத்த களி எடுப்பது அல்லது சதுப்பு நிலத்தில் புல்கரி வெட்டுவது, அவற்றைச் சக்கரக் கை வண்டியில் ஏற்றுவது இப்படியாகத் தனது கூனல், வானத்தை நோக்கி நேராக நிமிர்கின்றவரை பல நாட்களை அவன் செலவிட்டான். தனது சதுக்கத்தின்

மணற்பாங்கான தரையில் களியையும் புல்கரியையும் சிறு குவியல்களாகப் பரப்பி வைத்தான்.

''ஒரு காய்கறித் தோட்டம் அமைக்க அவன் முயற்சி செய்து கொண்டிருக்கிறான். எப்படிப்பட்ட முட்டாள்! மணலில் விளைவிக்க யாரால் முடியும்?'' என்று நகரவாசிகள் பரிகாசத்தனமாகக் கூறினார்கள்.

சூரியன் மறைகின்ற வேளையில் அர்தமோனவ்கள் நதியை நடந்து கடப்பார்கள், ஒரே வரிசையாக, தந்தை முதலாவதாக வருவார், அவர்களது நிழல்கள் பச்சைநிற நீரில் விழுந்து கொண்டிருக்கும். இதைச் சுட்டிக் காட்டி பாப்யாலவ் கிசுகிசுப்பான்:

''பாருங்கள், பாருங்கள்—கூனனின் நிழலை!''

ஒவ்வொருவரும் மூன்றாவது நிழலைப் பார்ப்பார்கள், நிகோலாவினுடையது நீரில் படபடப்புடன் நடுங்கியது, மற்ற சகோதரர்களின் நீளமான நிழல்களைக் காட்டிலும் கனமானதாக அது காணப்பட்டது. ஒரு நாள், வலுத்த மழைக்குப் பிறகு, நீர் மட்டம் உயரமாக இருந்த போது, கூனன் தனது காலை மடுவுக்குள் வைத்திருக்கலாம், அல்லது ஒரு வேளை குழியில் தவறி விழுந்திருக்கலாம், நீரின் அடிப்பரப்பில் காணாமற் போய் விட்டான். கரையிலிருந்த எல்லா மக்களுமே மகிழ்ச்சியால் உரக்கச் சிரித்தார்கள். கடிகாரம் தயாரிக்கும் குடிகாரனுடைய பதின்மூன்று வயது மகள் ஓல்கா ஓர்லோவா மட்டுமே அவலத்தோடு கத்தினாள்:

''ஐயோ, அவன் மூழ்கிப் போய்விடுவான்!''

அவள் தலைமீது ஓர் அறை விழுந்தது:

''சும்மா திடீர்க் கூச்சல் போட வேண்டாம்.''

கடைசியாக சென்ற அலெக்ஸி, மூழ்கித் தனது சகோதரனைப் பிடித்து, அவனை நிற்க வைத்தான். அவர்கள் கரையை அடைந்த போது, இருவருமே சகதியால் கருப்பு நிறமாக மாறியிருந்தார்கள். அலெக்ஸி நகரத்து மக்களை நோக்கிச் சென்றான், அப்போதுதான் அவர்கள் ஒதுங்கி வழி விட்டார்கள். அவர்களில் ஒருவன் அச்சத்தோடு முணுமுணுத்தான்:

''ஆ, குட்டி விலங்கு...''

''அவர்கள் நம்மை விரும்பவில்லை,'' பியோத்தர் குறிப்பிட்டான். நிற்காமலே சென்றபடி, அவன் தந்தை அவனைத் திரும்பிப் பார்த்து விட்டுச் சொன்னார்:

''கொஞ்ச நேரம் கொடு—அவர்கள் நம்மை விரும்புவார்கள்.''

அவர் நிகீதாவைத் திட்டினார்:

''நீ—பூச்சாண்டியே! உனது கண்களைத் திறந்து பார், உன்னைக் கேலிப் பொருளாக்கிக் கொள்ளாதே. நாம் கோமாளிகள் அல்ல, முரசுத்தோலே!''

அர்தமோனவ்கள் யாரோடும் தொடர்பு கொள்ளாதபடி தாங்களாகவே இருந்து கொண்டார்கள். முற்றிலும் கருப்பு உடையணிந்த, கொழுத்த வயதான கிழவியால் அவர்களது வீட்டுக்காரியங்கள் செய்யப்பட்டன. அவள் தனது கருப்புக் கைக்குட்டையைத் தனது தலையைச் சுற்றிக் கட்டிக் கொள்வாள், அதன் இரு முனைகளும் விலங்கின் கொம்புகளைப் போல நீட்டி நிற்கும். மிகவும் குறைவாகத்தான் பேசினாள். மிகவும் விநோதமான முறையில் முணுமுணுத்தாள். அவள் ஒரு ருஷ்யப் பெண் அல்ல என்பது போல, அவளது பேச்சை யாராலும் புரிந்து கொள்ள முடியாதபடி இருந்தது. அவளிடமிருந்து அர்தமோனவ்கள் பற்றி எந்தத் தகவலும் பெற முடியாது.

''அவர்கள் தங்களைத் துறவிகள் போலக் காட்டிக் கொள்கிறார்கள், போக்கிரிகள்...'' என்று மக்கள் பேசினார்கள்.

தந்தையும் மூத்த மகனும் சுற்றியுள்ள கிராமப் பகுதிகளுக்கு அடிக்கடி பயணங்கள் மேற்கொண்டு, விவசாயிகளை சணல் நார் பயிரிடும்படி வற்புறுத்தியதாக உறுதி செய்யப்பட்டது. அது போன்ற ஒரு பயணத்தில், இல்யா அர்தமோனவ் ஓடி வந்த போர்வீரர்களால் தாக்கப்பட்டான். பதனிடப்படாத தோலில் பொருத்தப்பட்ட இரண்டு பவுண்டு எடையுள்ள தனது எடைக்கல்லால் போர்வீரர்களில் ஒருவனைக் கொன்றான், மற்றவனுடைய தலையைப் பிளந்தான். மூன்றாமவன் ஓடியே விட்டான். போலீஸ் அதிகாரி அர்தமோனவைப் பாராட்டினார். ஏழ்மை வயப்பட்ட இல்யீன்ஸ்கியின் இளம் பாதிரி உயிரை எடுத்ததற்காகக் கழுவாய் தேடும்படி பணித்தார்: சர்ச்சில் நாற்பது இரவுகளுக்குத் தொழுகை நடத்த வேண்டும்.

இலையுதிர்கால மாலைகளில், சர்ச் பாதிரிகளின் விளக்கப் பேருரைகளையும், துறவிகளின் வாழ்க்கைகளைப் பற்றியும் தனது தந்தைக்கும் சகோதரர்களுக்கும் நிகீதா உரக்கப்

படிப்பான், ஆனால் அவனது தந்தையோ அடிக்கடி அவனை நிறுத்திக் கூறுவார்:

''அது மிகவும் கடுநடையானது, அந்த அறிவு நாம் புரிந்து கொள்வதற்கு முடியாதது. நாம் சாதாரணமாக வேலை செய்யக் கூடிய ஆட்கள், மேலும் அது போன்ற விஷயங்களைச் சிந்திப்பது என்பது நமக்கு வேண்டாதது. நாம் சாதாரண விஷயங்களுக்காகப் பிறந்தோம். இளவரசர் புரி—அவரது ஆத்மா சாந்தியடையட்டும்—ஏழாயிரம் புத்தகங்களைப் படித்திருக்கிறார். அந்தச் சிந்தனைகள் அனைத்திலும் அவர் ஆழமான ஈடுபாடு காட்டினார். கடவுளிடம் உள்ள நம்பிக்கையை அவர் இழந்து விட்டார். உலகம் முழுக்க அவர் பயணம் செய்தார். எல்லா மன்னர்களாலும் அவர் வரவேற்கப்பட்டார். ஒரு புகழ்மிக்க மனிதர்! ஆனால் அவர் ஒரு துணி ஆலை கட்டியபோது, அது நல்லப் படியாக நடக்கவில்லை. எதிலெல்லாம் அவர் கைவைத்தாரோ அது ஒருபோதும் வேலை செய்யவில்லை. ஆகவே அவர் தனது வாழ்நாள் முழுக்கத் தனது குடியானவர்களிடமே வாழ்ந்தார்.''

அவர் தனது வார்த்தைகளைத் தெளிவாக விளங்கக் கூறுவார், தியானம் செய்வதற்கு இடைவெளி விட்டபடி, தனது சமய நற்போதனையைத் தொடர்வதற்கு முன்னதாகத் தனது சொந்தப் பேச்சின் ஒலியைக் கேட்பார்.

''வாழ்க்கை உங்களுக்குக் கடினமானதாக இருக்கலாம். நீங்கள் உங்களது சொந்தச் சட்டத்திலும், உங்களது சொந்தப் பாதுகாப்பிலும் இருக்க வேண்டும். நானோ, என்னுடைய சொந்த விருப்பப்படி வாழவில்லை. விதிக்கேற்ப நான் வாழ்ந்தேன். விஷயங்கள் தவறானால் என்னால் பார்க்க முடிந்தது, ஆனால் என்னால் அதைச் சரி செய்ய முடியவில்லை. அது மேற்குடிமக்களுடைய விவகாரம், என்னுடையதல்ல. எனது சொந்த விருப்பத்தின் பேரில் நடக்க நான் துணிவுகொள்ளவில்லை. நினைத்துப் பார்ப்பதற்குக் கூட நான் பயந்தேன். ஏனெனில் எனது சொந்தச் சிந்தனைகளும் மேற்குடிமக்களுடையதும் கலந்து விடுமோ என்ற அச்சந்தான். பியோத்தர், நீ கேட்டுக் கொண்டிருக்கிறாயா?''

''நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.''

''அதுதான் சரி. நீ புரிந்து கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஒரு மனிதன் உயிரோடு இருக்கி

றான், ஆனாலும் அது வெறுமனே அவன் அங்கே இல்லாதது போலத்தான். உண்மையில், விடையளிப்பதற்குக் குறைவாகத்தான் முடியும். உன்னுடைய சொந்த வழியைப் பார்த்து நீ செல்ல முடியாது. நீ இலக்கு நோக்கி முடுக்கப்பட்டிருக்கிறாய். வாழ்க்கை இலகுவானது, விடையளிக்க ஏதுமில்லை, ஒன்று மட்டும்—எது நல்லது?''

சில நேரங்களில் அவர் ஒரு மணிநேரம் அல்லது இரண்டு மணிநேரங்கூடப் பேசுவார், பையன்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்களா என்பதை விசாரிப்பதற்காக அடிக்கடி நிறுத்திக் கொள்வார். கணப்பின் மீது உட்காருவார், அவரது கால்கள் ஊசலாடும், அவரது விரல்கள் அவரது சுருண்ட தாடிக்குள்ளாக ஒளிந்து கொள்ளும், எந்தவித அவசரமும் இல்லாமல், தொடர் தொடராக, தனது வார்த்தைகளைப் படிப்படியாகக் கூறிச் செல்வார். வெதுவெதுப்பான புகையார்ந்த நிலையானது, தூய்மையான, விரிந்தகன்ற சமையலறையில் ஏற்படும், அதே வேளை கதவுகளுக்கு வெளியே புயற் காற்று ஓசையிடும், சன்னற் சட்டங்களைக் கடந்து வீசும், அல்லது ஒருவேளை உலகமானது மூடுபனியால் ஒரே நீலநிறமாக இருக்கும். தனக்கு முன்னால் ஒரு கொழுப்பு மெழுகு வர்த்தியை வைத்தபடி பியோத்தர் மேசையின் முன் அமர்ந்து, ஆவணங்களைக் கரம்பியபடியும், மணிச் சட்டத்தில் மென்மையாகக் கணக்குப் பார்த்தபடியும் இருப்பான். அலெக்ஸி துணை செய்வான், அதே வேளை நிகீதா தனியாக அமர்ந்து திறமையுடன் பிரம்பு முளைகளை முறுக்கிக் கூடை முடைந்து கொண்டிருப்பான்.

''இப்போது, ஜார், நமது எசமானர்-அரசர், நம் எல்லார்க்கும் சுதந்திரம் வழங்கியுள்ளார். நாம் இதைப் புரிந்து கொள்ள வேண்டி இருக்கிறோம்—இதன் பின்னணியில் உள்ள காரணம் என்ன? ஒரு மனிதன், காரணமில்லாமல் மந்தையிலிருந்து ஓர் ஆட்டை விடமாட்டான், இங்கோ எல்லா மக்களுமே—லட்சக் கணக்கான மக்கள் வெளியே விடப்பட்டுள்ளார்கள். மேற்குடியிடமிருந்து இதற்கு மேல் எதுவும் பெற முடியாது என்பதை ஜார் புரிந்து கொண்டார் என்பதே இதன் பொருளாகும். நாம் நமது விடுதலையைப் பெறுவதற்கு முன்னமேயே இளவரசர் கியோர்கி உணர்ந்தார். பண்ணையடிமை உழைப்புப் பயன் தராது என்று அவர் என்னிடம் கூறினார். ஆகவே இப்பொழுது நம்பிக்கை நம்மீது வைக்கப்பட்டுள்ளது—சுதந்தர மனிதர்

கடினமாக வேலை செய்ய. ஒரு போர்வீரனால் கூட தனது சக்தியை இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு மேலும் இழுத்துக் கொண்டு இருக்க முடியாது. போய் வேலையைப்பாரு! ஒவ்வொருவரும் தான் எதற்கு இலாயக்கானவன் என்பதை இப்போது காட்ட வேண்டும். மேற்குடியினர்—அவர் எனது இறுதி முத்திரை பொறிக்கப்பட்டு விட்டது. உங்களுக்கு நீங்களே மேற்குடியினர்—நான் என்ன சொல்கிறேன் என்பதைக் கேட்கிறீர்களா?''

உல்யானா பய்மகோவா கிட்டத்தட்ட மூன்று மாதங்களுக்கு கிறிஸ்தவ சந்நியாசி மடத்தில் தங்கி இருந்தாள். அவள் வீடு திரும்பியதும், கேட்பதற்காக ஒரே ஒரு நாள் தான் அர்தமோனவ் காத்திருந்தார்:

''எவ்வளவு சீக்கிரத்தில் நாம் மணவிழாவை வைத்துக் கொள்ளப் போகிறோம்?''

அவரை எரிச்சலோடு அவள் பார்த்தாள்.

''நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? அவள் அப்பா இறந்து அரையாண்டுக்குக் கூட குறைவாக ஆகிறது ஆனால் நீ... அது பாவம் என்று கருதவில்லையா?''

ஆனால் அர்தமோனவ் அவளது பேச்சில் கண்டிப்பான முறையில் குறிக்கிட்டார்:

''அதில் எந்தப் பாவத்தையும் நான் காணவில்லை. மேற்குடியினர் இதைவிட மோசமாகச் செய்வார்கள், கடவுள் அதைப் பொறுத்துக் கொள்வார். அது எனக்கு அவசியமாக இருக்கிறது. பியோத்தருக்கு மனைவி தேவைப்படுகிறாள்.''

அவளிடம் எவ்வளவு பணம் இருந்ததென்று பிறகு அவர் கேட்டார். அவள் பதில் சொன்னாள்:

''என் மகளோடு ஐந்நூறுக்கு மேல் நான் கொடுக்கப் போவதில்லை!''

நம்பிக்கையோடும், வித்தியாசமான முறையிலும் அவளது கண்ணை நேராக உற்றுப் பார்த்தபடி ''நீ அதிகம் கொடுப்பாய்,'' என்று அர்தமோனவ் கூறினார். மேசையின் குறுக்காக ஒருவரை யொருவர் பார்த்தபடி அவர்கள் அமர்ந்திருந்தனர். அர்தமோனவ் தனது முழங்கைகளில் தாங்கியபடி இருக்க, அவரது கைகள் சுருண்ட தாடிக்குள்ளாகப் புகுந்திருந்தன. அப்பெண் முகஞ்சுழித்தாள், கவனத்தோடு கேட்பவள் போல அமர்ந்தாள். அவள் தனது முப்பதுகளின் கடைசியில் இருந்தாள். ஆனால் மிகவும் இளமையாகத் தோன்றினாள். சாம்பல் நிறக் கண்கள்

அவளது இளஞ்சிவப்பு நிற முகத்தில் புத்திசாலித்தனத்தைப் பளிச்சிட்டுக் காட்டின. அர்தமோனவ், தனது தோள்களை நிமிர்த்தியபடி எழுந்தார்.

''நீ பார்ப்பதற்கு நன்றாக இருக்கிறாய், உல்யானா இவானவ்னா.''

''பிறகு என்ன?'' என்று கேட்டாள். அவளது குரலில் உடனடியாகக் கோபமும் கேலியும் தெரிந்தது.

''ஒன்றுமில்லை.''

கனமாக அடிபோட்டபடி, அவர் விருப்பமற்ற முறையில் அறையை விட்டு அகன்றார். பய்மகோவா அவரைப் பார்ப்பதற்காகத் திரும்பினாள். எதிரிலிருந்த கண்ணாடியில் தன்னைத்தானே பார்த்துக் கொண்டாள். அவளது பார்வை ஒரு கணம் தயங்கி நின்றது. எரிச்சலோடு அவள் கிசுகிசுத்தாள்:

''தாடிவைத்த சாத்தான். அவன் என்னைப் பசை போல ஒட்டுகிறான்...''

இந்த மனிதனிடமிருந்து வரும் வெறுமையான ஆபத்தின் முன்னெச்சரிக்கையால் உந்தப்பட்டு, தன் மகளின் படுக்கை அறைக்குச் செல்லப் படிக்கட்டுகளில் அவள் ஏறினாள். ஆனால் நதால்யா அங்கே இல்லை. சன்னலின் வழியாக முற்றத்தை பய்மகோவா உற்றுப் பார்த்தாள். வெளிக் கதவருகே, பியோத்தருடன் அவள் மகள் நின்றாள். இந்த விதவை படிக்கட்டுகளில் விரைவாக இறங்கி ஓடினாள், புகுமுக மண்டபத்தில் இருந்து கத்தினாள்:

''நதால்யா, வீட்டுக்கு வா!''

பியோத்தர் அவளுக்குத் தலை வணங்கினான்.

''இது வழியில்லை, எனதருமை இளைஞனே, அவளது தாயார் பார்த்துக் கொண்டிராதபோது, ஒரு பெண்ணிடம் பேசிக் கொண்டிருப்பதா. இதற்கு மேல் வேண்டாம், இப்போது!''

''நாங்கள் நிச்சயம் செய்யப்பட்டு விட்டோம்,'' பியோத்தர் அவளுக்கு நினைவூட்டினான்.

''எல்லாம் இங்கே ஒன்றுதான். எங்களுக்கென்று இங்கே சொந்தப் பழக்கவழக்கங்கள் இருக்கின்றன,'' பய்மகோவா எதிருரைத்தாள். ஆனால் தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள்:

''எனக்கு ஏன் படபடப்பு ஏற்பட வேண்டும்? அவர்கள் சின்னஞ் சிறுசுகள்—ஒன்று சேர்ந்து இருக்க வேண்டும்

வேண்டும். ஏன் அவர்கள் விரும்பக் கூடாது? என்னுடைய பிள்ளைக்கு அவ்வளவு நல்லதல்ல. எனது சொந்த மகளையே நான் பொறாமைப் படுவது போல இருக்கிறது.''

எனினும், வீட்டிற்குள்ளாகத் தனது மகளுடைய சடையை வெளியெடுக்குமாறு இழுத்துவிட்டாள், பியோத்தருடன் தனிமையில் பேச வேண்டாம் எனத் தடை விதித்தாள்.

''உனக்கு நிச்சயமாகி இருக்கலாம், ஆனால் யாரால் சொல்ல முடியும்—ஒருகால் மழை, ஒருகால் பனி, ஒருகால் ஆமாம், ஒருகால் இல்லை,'' அவள் கண்டிப்பாகப் போதித்தாள்.

ஓர் இருளான ஆர்வமிகுதி அவளது சிந்தனைகளைக் குழப்பியது. ஓரிரு நாட்களுக்குப் பிறகு, எதிர்காலம் பற்றி அவரிடம் கேட்பதற்காக அவள் யெர்தான்ஸ்கயாவிடம் சென்றாள். அந்த நகரத்தின் எல்லாப் பெண்களுமே தங்களுடைய பாவங்களை, தங்களுடைய அச்சங்களையும், துயரங்களையும், சுமந்து கொண்டு தடித்த, மணி வடிவமான, நால் வளைச் சுரப்பி வீக்கம் போன்ற குறிசொல்பவளிடம் சென்றார்கள்.

''இது பற்றிச் சீட்டுப் போட்டுப் பார்ப்பது தேவையற்றது,'' என்றாள் யெர்தான்ஸ்கயா. ''என்னால் நேரடியாகவே சொல்லிவிட முடியும், என் அன்புக்குரியவளே: அந்த மனிதனை நீ பற்றிக் கொள். இது போன்ற விழிபிதுங்கியுள்ள கண்ணை நான் பெற்றிருக்கிறேன் என்பது எதற்காகவும் இல்லை—நான் மக்களைப் புரிந்து கொள்கிறேன். என்னுடைய சொந்த சீட்டுத் தொகுதிகளைப் பார்ப்பது போல, அதன் மூலம் அவர்களை நான் பார்க்கிறேன். அவன் எவ்வளவு அதிர்ஷ்டக்காரன் பாரு! அவன் ஆரம்பித்த ஒவ்வொன்றுமே உருண்டு கொண்டிருக்கிறது, நமது ஆண்கள் எல்லாருமே பகைமையோடு வெறுமனே குளறுபடி வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். என் அன்புக்குரியவளே, அவனைக் கண்டு நீ அஞ்ச வேண்டியதில்லை. அவன் ஒரு நரி போல வாழமாட்டான், கரடியைப் போல வாழ்வான்.''

''அப்படியேதான், ஒரு கரடி போல,'' அந்த விதவை ஒப்புக் கொண்டாள், பெருமூச்சு விட்டாள். குறிகாரியிடம் அவள் கூறினாள்:

''நான் நடுங்கிப் போய் விட்டேன். என்னுடைய பெண்ணைக் கேட்டு அவன் வந்த போது, அவனை நான் முதலா

வதாகப் பார்த்ததிலிருந்தே தான் அவன் என்னை அச்சுறுத்தினான். அவன் அவ்வளவு திடீரென்று வந்தான். மேகங்களினின்றும் அவன் விழுந்ததைப் போல இருந்தது, ஒவ்வொருவருக்குமே அந்நியனான அவன், உறவு கொண்டாட முந்திக் கொண்டு வந்து நின்றான். இது போன்ற ஒன்றை யார்தான் கேட்டிருக்க முடியும்? எனக்கு நினைவிருக்கிறது, அவன் பேசினான், அவனுடைய துடுக்கான அந்தக் கண்களை நான் சற்று உற்றுப் பார்த்தேன், ஒவ்வொன்றுக்கும் ஆமாம் சொல்லி வைத்தேன், ஒவ்வொன்றுக்கும் ஒப்புக் கொண்டேன், அவன் ஏதோ என் தொண்டையைப் பற்றியிருந்தது போல உணர்ந்தேன்.''

''அதன் பொருள் அவன் தனது சொந்த வலிமையை நம்புகிறான் என்பதாகும்,'' என்று அந்தப் புத்திசாலி விளக்கினாள்.

ஆனால் இவை எல்லாமே பய்மகோவாவின் சஞ்சலத்தைத் தணிக்கவில்லை. ஆயினும், எரிகின்ற மூலிகைகளின் காரப் புகைநெடியில் நோய்ந்து கிடந்த, இருண்ட அறையினின்றும் அவள் வெளியேறிக் கொண்டிருந்த போது, குறிகாரி மேலும் கூறினாள்:

''நினைவிருக்கட்டும்: தேவதைக் கதைகளில் மட்டுமே முட்டாள்கள் அதிர்ஷ்டக்காரர்களாக இருக்கிறார்கள்...''

அவள் சந்தேகப்படும்படி அர்தமோனவைப் பலமாகப் புகழ்ந்தாள், கையூட்டுப் பெற்றப் பெண்ணைப் போல உரக்கவும், வம்பளக்கவும் செய்தாள். கருத்தும் சிடுசிடுப்பு மிக்க பருத்த மத்ரியோனா பார்ஸ்கயா வித்தியாசமாகப் பேசினாள்:

''நகரம் முழுமையுமே உனக்காக புலம்பிக் கொண்டும், இரங்கியழுது கொண்டும் இருக்கிறது, உல்யானா. அந்த வெளியாட்களைக் கண்டு நீ அஞ்சவில்லையா? கவனமாக இரு! பையன்களில் ஒருவனுக்குக் கூன் விழுந்திருப்பது விபத்து ஒன்றுமில்லை. அவனுடைய பெற்றோர்கள் சாதாரணமானப் பாவம் செய்தவர்கள் இல்லை, இல்லையெனில் அதுபோல ஒரு மிருகம் பிறந்திருக்காது...''

விதவை பய்மகோவாவிற்குக் கஷ்டமாக இருந்தது. தன் மகள் எந்த வகையிலும் குற்றம் சுமத்தப்பட வேண்டியவள் அல்ல என்பதை அவள் உணர்ந்திருந்தாலுங் கூட, மிக அடிக்கடி தன் மகளை அடித்தாள். தன் வீட்டில் வாடகைக்கு இருப்பவர்களை எவ்வளவு குறைவாகப் பார்க்க

[illegible] அவ்வளவுக்கே பார்த்தாள்; ஆனால் அந்த [illegible], நிழல் போல பயமுறுத்தியபடி அவளை [illegible] சந்தித்தார்கள்.

அறிவிப்பு இல்லாமலேயே குளிர்காலம் நகரை ஆட்கொண்டது, ஆரவாரமிக்க சூறைக் காற்றும், கடிக்கின்ற [illegible] இறங்கியது. அது தெருக்களையும், வீடு [illegible] தித்திக்கின்ற பனி மேடுகளால் குவித்தது. பறவை [illegible], சர்ச் தூபிகளுக்கும் பஞ்சின் மென்மயிர்க் [illegible] தொப்பி மாட்டியது. நதிகளைச் சிறை [illegible], பழமைபட்ட சதுப்புநிலத்து நீரை வெள்ளை இரும் [illegible] விலங்கிட்டது. விடுமுறை நாட்களில், பனி படிந்த [illegible] நதியில், பக்கத்து கிராமங்களின் விவசாயிகளோடு [illegible] கைமுட்டிகளால் சண்டையிடுவதற்கு நகரவாசிகள் [illegible]. ஒவ்வொரு போட்டியிலும் அலெக்ஸி பங்கு கொண்டான், ஒவ்வொரு முறையும் வடுப் பெற்றும் வெறி கொண்டும் வீடு திரும்புவான்.

''என்ன தவறு, அல்யோஷா?'' அர்தமோனவ் கேட் [illegible]. ''நமது பகுதிகளைக் காட்டிலும் இங்கே அவர்கள் [illegible] சண்டையிடுகிறார்களா?''

அலெக்ஸி சோர்வான அமைதியைக் கடைப் பிடிப்பான், [illegible] செப்பு நாணயம் அல்லது ஒரு துண்டு பனிக்கட்டி [illegible] தனது வடுக்களைத் தேய்த்துக் கொண்டிருப்பான், [illegible] பருந்தக் கண்கள் மினுமினுக்கும். ஆனால் ஒரு [illegible] பியோத்தர் கூறினான்:

''அலெக்ஸி நன்கு சண்டையிடுகிறான். நம்முடைய [illegible] பக்கத்தில், நகரத்து அணியில், அவனை வடுப் [illegible] விடுகிறார்கள்.''

தனது மூடிய முட்டியை மேசை மீது வைத்துக் கொண்டு [illegible] அர்தமோனவ் கேட்டார்:

''ஏன்?''

''வெறுப்பால்.''

''அவன் மீதா?''

''நம் எல்லாரையும் ஒட்டு மொத்தமாகச் சேர்த்துத் [illegible].''

[illegible] முட்டியால் தந்தை மேசையைத் தட்டினார். மெழுகுவர்த்தி நடுங்கி அணைந்து போயிற்று. இருளின் [illegible] ஓர் உறுமல் குரல் கேட்டது:

''வெறுப்பும் அன்பும்—ஒரு பெண்பிள்ளை போல நீ

என்ன பேசுகிறாய்? மீண்டும் இது போல நான் கேட்கும் படி வைக்காதே!''

மெழுகுவர்த்தியை ஏற்றியபடி, நிகீதா அமைதியாகப் பேசினான்:

''அல்யோஷா சண்டைகளுக்குப் போகக் கூடாது.''

''ஆக மக்கள் நகைப்பார்கள்—அர்தமோனவ் பயந்து விட்டார் என்று கூறுவார்கள்! நிறுத்து, கோயில் மணிப் பணியாளனே, நோஞ்சானே!''

இல்யா அவர்கள் அனைவருக்கும் சரியான திட்டுக் கொடுத்தார். ஓரிரு நாட்களுக்குப் பிறகு, இரவு உணவின் போது, வெடுவெடுப்பான முறையில் பேசினார்:

''கரடிகளுக்குப் பின்னால் நீங்கள் போயிருக்க வேண்டும், பையன்களே—அது நல்ல விளையாட்டு! ரியாஸான் காடுகளில் நான் இளவரசர் கியோர்கியுடன் போவது வழக்கம். எறி ஈட்டிகளை நாங்கள் பயன்படுத்தினோம். அது மிக அருமையாக இருந்தது!''

ஆர்வம் மேலிட்டு, சில வெற்றிகரமான வேட்டைகளை அவர் விவரித்தார். ஒரு வாரத்திற்குப் பிறகு, பியோத்தர் மற்றும் அலெக்ஸியுடன் அவர் காட்டிற்குச் சென்றார், ஒரு பெரிய கரடியைக் கொன்றார்—ஒரு பழம் அநுபவசாலி. பிறகு சகோதரர்களே தனிமையில் சென்றனர், ஒரு தாய்க் கரடியைக் கலைத்து வெளியேற்றினார்கள். அது அலெக்ஸியினுடைய ஆட்டுத்தோல் சட்டையைக் கிழித்தது, அவனது இடுப்பைப் பிறாண்டியது; ஆனால் முடிவில் சகோதரர்கள் வெற்றி பெற்றார்கள். செத்துப் போன விலங்கை ஓநாய்களுக்காகக் காட்டிலேயே போட்டு விட்டு, அதனது இரு குட்டிகளை நகரத்திற்குக் கொண்டு வந்தார்கள்.

''நல்லது, உன்னுடைய அர்தமோனவ்கள் தங்களுக்குள் எப்படி நடந்து கொள்கிறார்கள்?'' நகர மக்கள் பய்மகோவாவைக் கேட்பதுண்டு.

''ஏன், அவர்கள் சரியாகத்தான் இருக்கிறார்கள்.''

''குளிர்காலம் நீடிக்கும் போது, பன்றி அமைதியாக இருக்கும்,'' பய்யாலவ் குறிப்பிட்டார்.

இப்போது சிறிது காலமாக, அர்தமோனவ்களின் மீதான அவர்களுடைய எதிர்ப்பான போக்கு தன்னையே பாதிக்க ஆரம்பித்திருக்கிறது என்றும், அவர்கள் மீதான பொதுவான வெறுப்புக் காற்று தன் மீதும் படுகிறது என்றும் அவநம்பிக்கையோடு அவ்விதவை உணர்ந்தாள். தங்

...ங்களே வகுத்துக் கொண்ட நோக்கத்தைக் காப் ...றிக் கொண்டு, அர்தமோனவ்கள் தெளிந்த அறிவு ...டும், இணக்கத்தோடும், எந்த விதத் தீய எண் ...ங்களுக்கும் இடமளிக்காமல் வாழ்ந்ததை அவள் பார்த் ...ள். தன் மகளையும் பியோத்தரையும் கவனமாக மேற் ...த்ததில் இந்தக் குறுங்கட்டுடலுடைய, பேச்சைத் ...கின்ற இளைஞன் தனது வயதிற்கு மேல் ஆழ்ந்த ...ணை உடையவன் என்ற முடிவுக்கு வந்தாள். ஒரு ...ப் பையனைப் போன்று நதால்யாவை ஓர் இருண்ட ...க்கு வரும்படி வற்புறுத்துவதோ, உணர்ச்சியைக் கிளறி ...டோ, அவள் காதில் கெட்ட வார்த்தைகளைக் கிசு ...தோ போன்று அவன் ஒருபோதும் செய்ததில்லை. ...ளிடத்திலே பியோத்தர் நடந்து கொள்ளும் விநோத ...போக்கால், அதே வேளை அது ஆர்வ விருப்புடைய ..., பொறாமை கொள்ளும்படியானதாக இருந்தாலும் ...கோவா ஒரு மாதிரி கலக்க முற்றாள்.

''அவன் அன்புக்குரிய ஒரு கணவனாகத் திகழமாட் ...ன்.''

...னினும், ஒரு நாள் மாடிப் படிகளில் இறங்கி வருகின்ற ...யில், வாசலில் தனது மகளது குரலைக் கேட்டாள்:

''நீங்கள் திரும்பவும் கரடிகளைத் தேடிப் போய்க் ...டு இருக்கிறீர்களா?''

''நாங்கள் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறோம். ஏன்?''

''அது ஆபத்தானது. அல்யோஷா போன முறை காய ...றான்.''

''அது அவனது தனிப்பட்ட தவறு. அவன் மிகவும் ...க்காரனாக இருந்தான். ஆக, நீங்கள் என்னைப் பற்றி ...கிறீர்களா?''

''நான் உங்களைப் பற்றி எதுவும் சொல்லவில்லை.''

''நீ சரியான சிறுக்கி!'' என்று தாயார் நினைத்தாள். ...ள் முறுவலித்தாள், பெருமூச்சு விட்டாள். ''ஆனால் ...மிகவும் எளிமையானவன்.''

...அர்தமோனவ், அவளிடம் அடிக்கடி, மிகமிக ...வலியுறுத்திக் கூறினார்:

''...வை விரைவு படுத்து அல்லது அவர்கள் ...விரைவு படுத்திக் கொள்வார்கள்.''

...யில், அவர் கூறியது சரிதான் என்பதை அவள் ...ள். அந்தப் பெண் மோசமாகத் தூங்கினாள், தனது

உடலை நன்கு மறைத்து வைத்துக் கொள்ள முடியவில்லை. ஈஸ்தர் வாக்கில், அவள் திரும்பவும் கிறிஸ்தவ சந்நியாசி மடத்திற்குச் சென்றாள். ஒரு மாதத்திற்குப் பிறகு, வீடு திரும்பியதும், கவனிக்கப்படாது இருந்த அவளது பழத் தோட்டம் நல்ல மாதிரியாக ஒழுங்கு செய்யப்பட்டிருப்பதைக் கண்டாள். பாதைகளில் களை அகற்றப்பட்டிருந்தன, மரங்களினின்றும் மரப்பாசிகள் அகற்றப்பட்டிருந்தன, பெர்ரிப் புதர்கள் ஒழுங்காக வெட்டப்பட்டு கட்டப்பட்டிருந்தன, எல்லாமே ஒரு திறமை வாய்ந்த கையால் செய்யப்பட்டிருந்தது. நதிக்குச் செல்லும் பாதையில் திரும்பிய போது, நிகீதாவைப் பார்த்தாள். ஓடை நீரினால் சேதமுற்றுப் போன வேலியைப் பழுது திருத்திக் கொண்டிருந்தான். அவனது கூனானது அவனது நீண்ட பட்டுச் சட்டைக்கு மேலாக நீட்டியபடி இரக்கத்தக்க வகையிலே துருத்திக் கொண்டிருந்தது; அவனது பெரிய தலையை, நிமிர்ந்த அருமையான தலைமுடி மறைத்துக் கொண்டிருந்தது. முகத்தில் தலைமுடி விழாது இருப்பதற்காக நிகீதா அதை எளிதில் வளைக்கக் கூடிய பிர்ச் குச்சியால் சேர்த்துக் கட்டியிருந்தான். அளவுக்கு மீறிய கவர்ச்சியுடைய பசுந்தழைக்கு மத்தியில் சாம்பல் நிறம், ஒரு வயதான துறவியை நினைவு படுத்தியது, தனது பணியில் தன்னையே மறந்திருந்தான். ஒரு மரமுளையைத் திறமையாகக் கூராக்கியபடி அவன் வேலை செய்கையில் அவனது கோடரி சூரிய ஒளியில் வெள்ளி போல மின்னியது. மெல்லிய, சிறுமிக்குரிய குரலில், சில சர்ச் ராகத்தை மெதுவாகப் பாடிக் கொண்டிருந்தான். தண்ணீர் மினுமினுத்தது, பட்டுப் போன்ற பசுமையில், வேலிக்கு அப்பால், விரைந்து பாய்கின்ற தங்க மீன் போல சூரிய ஒளிப் புள்ளிகள் விளையாடின.

தானே முற்றிலும் எதிர்பார்க்காதபடி அந்தப் பெண் மகிழ்ச்சியோடு ''கடவுள் உன் வேலையை விரைவுபடுத்துவார்'' என்றாள். தன்னுடைய நீலநிறக் கண்களின் ஒளியை அவள் பக்கம் திருப்பியபடி, நிகீதா மெதுவாகப் பதிலளித்தான்:

''கடவுள் உங்களை வாழ்த்தட்டும்.''

''பழத் தோட்டத்தைச் சரிப்படுத்தியது நீ தானா?''

''ஆமாம்.''

''மிக அருமையாகச் செய்திருக்கிறாய். பழத் தோட்டங்களை நீ விரும்புவாயா?''

அவனது வேலையில் இன்னமும் குனிந்தபடியே, இளவரசியின் தோட்டக்காரனிடம் தான் ஒன்பது வயது முதலே பயிற்சி பெற்றதாக அவன் விளக்கினான். இப்போது அவனுக்கு வயது பத்தொன்பது.

''அவனுக்கோ கூன் விழுந்திருக்கிறது, ஆனால் அது அவனுக்கு வேதனையாக இல்லாதது போலத் தோன்றுகிறது,'' அப்பெண் தனக்குள்ளாகவே எண்ணினாள்.

மாலையில், தங்களது மேல்மாடி அறையில் அவளும் அவளுடைய மகளும் தேநீருக்காக அமர்ந்திருந்த போது, அவனது கையில் ஒரு மலர்க் கொத்துடனும், வெளிறிய பழுப்பு நிறமான, அருவருப்பான, மகிழ்ச்சியற்ற முகத்தில் புன்முறுவலுடனும் வாயிற்படியில் நிகீதா தோன்றினான்.

''உங்களுக்கு இந்த மலர்க்கொத்தை நான் வழங்கலாமா?''

அழகுற ஒழுங்கு செய்யப்பட்ட மலர்களையும், புற்களையும் சந்தேகத்தோடு பார்த்தபடி, பய்மகோவா தடுமாற்றத்தோடு ''எதற்காக?'' என்றாள். மேற்குடியினருடன் தான் வாழ்ந்த போது ஒவ்வொரு நாள் காலையிலும் இளவரசிக்கு பூக்கள் கொண்டு செல்வது தன்னுடைய கடமையாக இருந்தது என்று அவளிடம் நிகீதா விளக்கினான்.

''அப்படியா,'' என்றாள் பய்மகோவா. இலேசாக முறுவலித்துக் கொண்டு தன்னுடைய தலையை கர்வத்தோடு அவள் நிமிர்த்தினாள். ''ஆனால் நான் உனக்கு உன்னுடைய இளவரசியை நினைவுபடுத்துகிறேனா? அவள் கட்டாயம் அழகாக இருப்பாள்.''

''ஆ, ஆனால் நீங்களும் அப்படித்தான்.''

பய்மகோவா இன்னும் அதிகமாக மலர்ச்சியுற்றாள். தனக்குள்ளாகவே, அவள் நினைத்தாள்:

''இவன் தலையில் இவனுடைய அப்பா இதை வைத்திருப்பாரோ?''

''நல்லது, மரியாதைக்கு நன்றி,'' என்றாள்; ஆனால் நிகீதாவைத் தேநீரில் கலந்து கொள்ளும்படி அவள் அழைக்கவில்லை. அவன் போன பிறகு, அவள் உரக்கவே நினைத்தாள்:

''அருமையான கண்ணை அவன் பெற்றிருக்கிறான். அவனுடைய தந்தையைப் போன்று அல்ல. ஒருவேளை அவர்கள் தாயார் வழியில் வந்திருக்கலாம்.''

அவள் பெருமூச்சுவிட்டாள்.

''அவர்களோடு வாழ்வது என்பது நம்முடைய விதி போலத் தான் தோன்றுகிறது.''

இலையுதிர்காலம் வரை, அவளுடைய கணவன் இறந்து ஓராண்டு முடிந்த பிறகு, திருமணத்தைத் தள்ளிப் போடும்படி அவள் அர்தமோனவை அதிகமாக வலியுறுத்தவில்லை; ஆனால் அவரிடம் தீர்மானமாகப் பேசினாள்:

''இந்த விவகாரத்தில் மட்டும் நீ குழப்ப வேண்டாம், இல்யா வஸீல்யெவிச். எல்லாவற்றையும் என்னை ஏற்பாடு செய்ய விடு. எங்களுடைய சொந்த முறையில், மிகச் சிறந்த பண்டைய முறையில் செய்வேன். அது உங்களுக் குக் கூட உதவி செய்யும்—எங்களுடைய சிறந்த ஆட்கள் மத்தியில் நீயும் உரிமை பெறுவாய், ஒவ்வொருவருடைய பார்வையிலும் படலாம்.''

ஏளன இகழ்ச்சியோடு ''ப்பூ'' என்று உறுமினார். ''இப் போது உள்ளபடியே அவர்கள் என்னை நன்றாகப் பார்க்க முடியும்.''

அவரது இறுமாப்பால் சோர்வுற்று, அவள் பதிலளித் தாள்:

''இங்கே உன்னை அவர்கள் விரும்பவில்லை.''

''நல்லது, பிறகு, அவர்கள் எனக்குப் பயப்படட்டும்.''

அவர் ஒதுக்கித் தள்ளினார், தனது தோள்களைக் குலுக்கிக் கொண்டார்.

''பியோத்தர் கூட—எப்பொழுதுமே விருப்பு வெறுப்பு களில் மூழ்கிப் போகிறான். நீங்கள் என்னைச் சிரிக்க வைக் கிறீர்கள்...''

''பிறகு நானுங்கூட எனது பங்கிற்கு வெறுப்புகளைப் பெறுகிறேன்.''

''கவலைப்பட வேண்டாம், உறவுக்காரப் பெண் மணியே!''

அர்தமோனவ் தனது நீண்ட கையை உயர்த்தினார், விறைப்பான தோல் செந்நிறமாக மாறுகின்றவரை தனது முட்டியை மடக்கிக் கொண்டிருந்தார்.

''மக்களை ஆட்டிப்படைப்பதில் நான் சிறந்த ஆள். நீண்ட காலமாக அவர்கள் விருப்பப்படி நடக்க முடியாது. விரும்பாமலேயே நானும் செய்து கொண்டிருக்கிறேன்...''

அந்தப் பெண் எதுவும் பேசவில்லை. அச்சத்தோடு நடுங்கியபடி, அவள் நினைத்தாள்:

''என்ன காட்டுமிராண்டி!''

அவளுடைய சொகுசான வீட்டில் நதால்யாவின் சிநேகிதி களான, நகரத்தின் சிறந்த குடும்பங்களைச் சேர்ந்தவர் களது மகள்கள், வெள்ளைப் பட்டாலான மிகப் பெரிதாக உப்பிய சட்டைக் கைகளுடனும், வர்ணப் பட்டில் மோர் தோவியன் பூ வேலைப்பாடு மிக்க பிரகாசமான துணிகளு டனும், வெள்ளாட்டுக் குட்டித் தோல் அல்லது பதனிட்ட வெள்ளாட்டுத் தோல் இவற்றாலான செருப்புகளுடனும், தங்களது நீண்ட பின்னல்களில் நாடாக்களைக் கட்டிக் கொண்டும் வந்து குழுமியிருக்கின்ற நாளும் வந்தது. மண மகளாகப் போகிறவள் வெள்ளியால் சித்திரப் பூ வேலைப் பாடு செய்யப்பட்ட பட்டுத் துணியால் தைக்கப்பட்ட, கழுத்திலிருந்து கீழே வரை முலாம் பூசப்பட்ட பொத்தான் கள் வைத்த கவுனும், தோளில் தங்கத்தால் சித்திரப் பூ வேலைகள் செய்த ஜாக்கெட்டுடன், வெள்ளை, மஞ்சள் நிறத்தாலான நாடாக்கள் தலையில் முடித்திருக்க மூச்சுத் திணறியபடி, தெய்வ பீடத்திற்குக் கீழே பனிக் கட்டிச் சிலை போல, முகத்தில் அரும்பிய வியர்வையை குஞ்சம் வைத்த கைக்குட்டையால் துடைத்தபடி, பாத்தொடுத்துக் கொண்டிருந்தாள்:

புல்வெளிக்கு மேலே புல் வளர்ந்தது
பூக்களுக்கு மேலே நீலமாய் வானம்
இளவேனிற் பருவ வெள்ளமாய் நீர் விரைந்து
கவர்ச்சியற்றே நீரும் கலங்க லாயிற்று...

உள்ளடங்கியவாறு மணப்பெண் இவ்வாறு பாடியதைத் தொடர்ந்து அவளுடைய சிநேகிதிகள் உரக்கப் பாடத் தொடங்கினர்கள்:

அழைப்புங்கள் முன்னே என்னை, பிறகு மங்கை முன்னே
அழைப்புங்கள் முன்னே என்னை வீட்டிற்கு நீர் கொணரவே
அழைப்புங்கள் என்னைப் பனிநீரில் வெறுங் காலுடனே
அழைப்புங்கள் என்னை நிர்வாணமாய், ஆ, உடையற்றே...

பெண்கள் கூட்டத்தில் பார்க்க முடியாதபடி இருந்த அலெக்ஸி, சிரிப்புடன் கத்தினான்:

''அது ஒரு வேடிக்கையான பாட்டு! வான் கோழியைத் தூவாளியில் வைப்பது போல அவர்கள் பெண்ணுக்கு

சித்திரப் பூ வேலை செய்யப்பட்ட பட்டுத் துணியை அணி விக்கிறார்கள், அதன் பிறகு அவள் நிர்வாணமாய், உடை யற்று இருக்கிறாள் என்று கத்துகிறார்கள்!''

நீலநிறத் துணியாலான புத்தம் புதிய ஜாக்கெட் அணிந்து நிகீதா மணப்பெண் அருகே அமர்ந்திருந்தான். அவனுடைய கூனுக்கு மேலாக அது அருவருப்பாகவும், கேலிக்குரியதாகவும் மடிந்து காணப்பட்டது. அவனுடைய அகல விரிந்த நீலநிறக் கண்கள் ஒரு விநோதமான உணர்ச் சியுடன் நதால்யா மீது நிலைத்திருந்தது. அந்தப் பெண் உருகி காணாமற் போய் விடுவாளோ என்று அவன் அஞ் சுவது போல இருந்தது. வாசல் வழியில், அதை முழுமை யாக அடைத்துக் கொண்டு மத்ரியோனா பார்ஸ்கயா நின் றாள். உருளுகின்ற அவளது விழிகளைத் தாழ்த்தியபடி, வீறார்ந்த குரலில் பேசினாள்:

''உங்களுடைய பாட்டில் எந்த அழுகையையும் நான் கேட்கவில்லை, கன்னிப் பெண்களே.''

அவள் அறைக்குள்ளாக, ஒரு குதிரையின் நடை போல, நுழைந்தாள். தனது திருமணத்திற்கு அவள் தயாராகின்ற போது, கன்னிப் பெண்ணினுடைய மனத்தில் பயமும் நடுக் கமும் கட்டாயம் ஏற்பட வேண்டும் என்ற பழைய மரபு களின் படி அவர்களுக்குக் கண்டிப்புடன் அறிவுரைகள் கூறத் தொடங்கினாள்.

'' 'கணவன் என்பவன் ஒரு கற்சுவர்' என்று சொல்லப் படுகிறது. தெரிந்து கொள்ளுங்கள், பிறகு: சுவர் வலுவான தாக இருக்கிறது, உடைக்கக் கூடியதாக இருக்கக் கூடாது, சுவர் உயரமானதாக இருக்கிறது, தாவக் கூடியதாக இருக்கக் கூடாது.''

ஆனால் பெண்கள் அதைக் காது கொடுத்துக் கேட்க வில்லை. அறையில் வெப்பமாகவும் கூட்டமாகவும் இருந் தது. கிழவியை முரட்டுத்தனமாகப் பிடித்துத் தள்ளிக் கொண்டு கதவுக்கு வெளியே அவர்கள் ஓடி, பழத் தோட் டத்திற்குள்ளாகச் சென்றார்கள். பூக்களைச் சுற்றி வரும் வண் டினைப் போல அலெக்ஸி அவர்களுக்கிடையே சுற்றி வந் தான். மஞ்சள் நிறப் பட்டுச் சட்டையுடனும், வெல்வெட் காற்சட்டையுடனும் இருந்த அவன் குடித்தவனைப் போல பேசிக் கொண்டு மகிழ்ச்சியாகக் காணப் பட்டான். கண் களை உருட்டிக் கொண்டும், தடித்த உதடுகளைப் புண்படுத் துவது போல சுருங்கிக் கொண்டும், நெசவிலே பட்டால்

...ரக்கப்பட்ட தனது பாவாடையைச் சுருட்டிக் கொண் ... உல்யானவிடம் வருமொழி கூறுவதற்காக, கனத்த புகை ... போல பார்ஸ்கயா படிகளில் ஏறினாள்.

''உன் மகள் மகிழ்ச்சியாக இருக்கிறாள். இது சரியில்லை. ... பழக்கத்திற்கு மாறாக இருக்கிறது. ஒரு மகிழ்ச்சி ... தொடக்கம் ஒரு மோசமான முடிவைக் கொணரும்!'' ... ஒரு தீர்க்கதரிசி போலப் பேசுகிறாள்.

ஒரு பெரிய, இரும்பாலான பெட்டியில் துருவித் தேடு ...தில் ஈடுபட்டவளாய், பய்மகோவா முழங்காலிட்டு நின் ...றாள். நெசவிலே பூ வேலை செய்யப்பட்ட துகில், டபேட் ...ப் பட்டு, சிவப்பு நிற மாஸ்கோ கம்பளி, காஷ்மீர் ...ல்வைகள், நாடாக்கள் மற்றும் பின்னல் வேலை ...ய்யப்பட்ட துவாலைகள் படுக்கையிலும், தரையிலும், ...ாருட்காட்சியில் காட்சிக் கூடத்தில் வைக்கப்பட்டிருப் ... போல அவளைச் சுற்றிலும் சிதறிக் கிடந்தன. ஒரு ...ரிந்த சூரியக் கற்றையானது பிரகாசமான துணிகளின் ... விழுந்து, அஸ்தமனத்தில் மேகம் தோன்றுவது போல ...ண்ணங்களைப் பாய்ச்சிக் கொண்டிருந்தது.

''மணவிழாவிற்கு முன்னர் மணமகளின் வீட்டில் மண ...கன் வசிப்பது என்பது எந்த வகையிலும் கிடையாது. ...ர்தமோனவ்கள் வெளியேறிச் சென்றிருக்க வேண்டும்...''

''முன்னதாகவே ஏன் நீ கூறவில்லை? அது பற்றிப் ...பசுவதற்கு இப்போது காலங் கடந்து விட்டது,'' தனது ...வரப்பட்ட முகத்தை மறைத்துக் கொள்வதற்காகப் ...ட்டிக்கு மேலாகக் கீழே குனிந்தபடி உல்யானா முணு ...ணுத்தாள். வீறார்ந்த குரல் பதிலளித்தது:

''மக்கள் எப்பொழுதுமே உன்னைப் புத்திசாலி என்று ...ழைக்கிறார்கள், ஆகவே தான் எனது நாக்கை அடக்கிக் ...கொண்டேன். நீ அதிகப் புத்திசாலித்தனமாக இருப்பாய் ...ன்று நான் நினைத்தேன். எனக்கென்ன? உண்மையைச் ...சொல்ல மட்டுமே நான் விரும்புகிறேன். மக்கள் அதை ...ற்றுக் கொள்ளவில்லையானால், என்னுடைய கணக்கில் ... அதை வைத்துக் கொள்வார்.''

...ரு நினைவுச் சின்னம் போல பார்ஸ்கயா நின்றாள். ... நிறைய அறிவைக் கொண்ட ஒரு பாத்திரம் போல ... தலை கோலங்காட்டியது. எந்த விடையும் பெறாத ..., ...வைத் தள்ளிக் கொண்டு வெளியேறினாள். பளிச்

சிடுகிற வர்ணங்களுக்கிடையே முழங்காலிட்டபடி, உல் யானா பயத்தாலும், கடுந்துயராலும் கிசுகிசுத்தாள்:

''அன்புள்ள தேவரே, என்னைக் காப்பாற்று! என் மனத்தை எடுத்துக் கொண்டு விடாதே.''

திரும்பவும் வாசலில் ஏதோ சரசரப்புக் கேட்டது, தனது கண்ணீரை மறைப்பதற்காக அவள் தனது தலையை விரைந்து பெட்டிக்குக் கீழே திணித்தாள். அது நிகீதா.

''நதால்யா யெவ்ஸேயெவ்னா என்னை அனுப்பினாள், உங்களுக்கு எந்த உதவியும் தேவைப்படவில்லையா என்று கேட்கச் சொன்னாள்.''

''நன்றி, அன்புள்ள பையனே...''

''சிறுமி ஓல்கா ஓர்லோவா கீழே சமையலறையில் தன் உடம்பு முழுக்க இன்தேன்பாகு நீரைக் கொட்டி விட்டாள்.''

''நீ சொல்ல வேண்டாம்! அவள் மிகவும் அருமையான சிறு பெண், உனக்கேற்ற மணமகள் போல...''

''என்னை யார் மணப்பார்கள்?..''

வெளியே பழத் தோட்டத்தில், வீட்டில் தயாரிக்கப் பட்ட பீரைக் குடித்துக் கொண்டிருந்தனர். ஓர் எலுமிச்சை வகை மரத்தின் நிழலில் போடப்பட்டிருந்த ஒரு வட்ட மேசையைச் சுற்றி இல்யா அர்தமோனவ், மணமகளின் ஞானத்தந்தை கவ்ரீலா பார்ஸ்கி, பம்யாலவ், கண்ணிருந்தும் பார்க்காத தோல் பதனீட்டாளர் ஜிதேய்கின், நான்கு சக்ர வண்டி தயாரிப்பாளர் வரபோனவ் ஆகியோர் அமர்ந் திருந்தனர். மரத்தில் சாய்ந்தபடி, பக்கத்தில் பியோத்தர் நின்றான். அவனது கருத்த தலைமயிரானது அதிகமாக எண்ணெய் இடப்பட்டு, உலோகப் பண்பு வாய்ந்த பள பளப்புடன் அவன் தலை காணப்பட்டது. தன்னுடைய மூத் தவர்களின் உரையாடலை மரியாதையோடு செவிமடுத் தான்.

''உங்களுடைய பழக்கங்கள் வித்தியாசமாக இருக்கின் றன,'' என்றார் அர்தமோனவ் சிந்தனை வயப்பட்டவராக. பம்யாலவ் பதிலுக்குக் கூறினார்:

''நாங்கள் தான் இங்கே எல்லாம்; உண்மைப் பொரு ளின் பழைய காலத்திட்டமிடுபவர்கள். மகாருஷ்யா!''

''நாங்களும் எந்த வகையிலும் அந்நியர்கள் அல்ல.''

''எங்களுடைய பழக்கங்கள் மிகப் பழமை வாய்ந் தவை...''

''இதில் மோர்துவினியர்கள் மற்றும் சுவாஷிகள் பண்பு ...ளம் இருக்கின்றன...''

...ச்சொலி எழுப்பியும், கண்ணை உருட்டியும், நெருக்கித் ...ளிக் கொண்டும், பழத் தோட்டத்திற்குள்ளாக இளம் ...ண்கள் முற்றுகையிட்டனர், ஒளிமிக்க வண்ண மலர் ...ளயத்தால், மணமகனின் தந்தைக்கு வாழ்த்துக் கூறிப் ...டினர்:

ஓ, பெரும் உறவுக்காரரே, இது உங்களுக்கே,
...ல்யாவுக்கே, அய், வஸீல்யெவிச்சுக்கே,
உங்கள் முதலடியில், நீங்கள் ஒரு காலை உடைப்பீர்
உங்கள் இரண்டாமடியில், மற்றொரு காலை,
உங்கள் மூன்றாமடியில், உங்கள் கழுத்தையும் உடைப்பீர்.

தன்னுடைய மகன் பக்கமாகத் திரும்பி ''என்னை எப்படி 'வாழ்த்துகிறார்கள்' பார்த்தாயா?'' என்று அர்தமோனவ், வியப்புற்றவராகக் கூறினார். பக்கவாட்டில் பெண்களைப் பார்த்தபடி, தனது காதுப் பக்கம் இழுத்தபடி, பியோத்தர் எச்சரிக்கையோடு முறுவலித்தான்.

''இன்னும் அதிகம் வந்து கொண்டிருக்கிறது—கேள்!'' என்றான் பார்ஸ்கி, உரக்கச் சிரித்தான்.

நமதுறவுக்காரரிடம் நாமின்று மிக அன்பாய் இருக்கிறோம்
நமது கன்னிகளின் வரிசையினைக் களவாடுபவர்களிடம்...

''இன்னும் கொஞ்சமா?'' அர்தமோனவின் விரல்கள், மேசை மீது தாளமிட்டன. அவர் மிகத் தெளிவாகவே உசுப்பிவிடப்பட்டார், குழப்பப் பட்டார்.

இளம் பெண்கள் வெறி கொண்டு பாடினர்:

தொல்லை தரு பற்களை விடுத்தே நீர் பறக்கலாம்
மலையுச்சியினின்றும் கீழே பாறையை நொறுக்கலாம்
ஆ, நம்மை முட்டாளாக்கவும், ஏமாற்றவும்
ஆ, பாராட்டவும், புகழவும்
தொலைதூர இடங்களுக்கே, நாமறியாத வற்றிற்கே
தொலைதூர குக்கிராமங்கள், எல்லாமே துணையற்றவை,
துயர்படவே விதைத்தோம், துன்பம் நமக்காக
கண்ணீரால் விதைத்தே, நீரிட்டோம் நமக்காக...

''ஆக, அது அப்படியா!'' என்று உள்ளாரத் தொட்டு

விட்ட அர்தமோனவ் கத்தினார். ''நல்லது, சிறுமிகளே, நான் உங்களைக் கோபப்படுத்த விரும்பவில்லை, இதே போல என்னுடைய குடும்பப் பகுதிகளை நான் கட்டாயம் புகழ்ந்தாக வேண்டும்; உங்களுடையதை விட எங்களது பழக்கங்கள் சற்று மென்மையானவை, மேலும் எங்களுடைய ஆட்கள் மிகவும் நாகரிகமானவர்கள். எங்களிடம் ஒரு பழமொழி கூட உண்டு: 'ஸ்வப்பா நதியும் உஸோஜா நதியும் சேய்ம் நதி உள்ளாகவே கலக்கிறது. நல்ல இறைவனுக்கு நன்றி செலுத்துவோம்—இது ஓகா நதியில்லை!'''

''பொறு! நீ இன்னமும் எங்களை அறிந்து கொள்ளவில்லை,'' என்றார் பார்ஸ்கி, சொல்வது கூடச் சிரமமாக இருந்தது: அவர் பாராட்டிக் கொண்டிருந்தாரா, அச்சுறுத்திக் கொண்டிருந்தாரா? ''நல்லது, இளம் பெண்களுக்கு கையூட்டுக் கொடு!''

''நான் அவர்களுக்கு எவ்வளவு கொடுப்பது?''

''நீ பொறாமை கொள்ளாத அளவுக்கு.''

ஆனால் அர்தமோனவ் இரண்டு வெள்ளி ரூபிள்களை அந்தப் பெண்களுக்குக் கொடுத்த போது பம்யாலவ் கோபத்தோடு கூறினார்:

''நிறைய பணம் தருகிறாய்! தற்பெருமை அடித்துக் கொள்கிறாய்!''

''உங்களைத் திருப்திப் படுத்துவது மிகவும் சிரமமானது,'' என்று கத்தினார் இல்யா, கோபமாகக் கூட. பார்ஸ்கி பெருங் கூச்சலிட்டு வாய்விட்டுச் சிரித்தார், ஜிதேய்கின் கனைத்தார்.

மணமகளை அவளுடைய இள வயது விளையாட்டுத் தோழிகளிடமிருந்து பிரிப்பது காலை உதயத்தின் போதுதான் முடிந்தது. விருந்தினர்கள் பிரிந்து சென்றனர், வீட்டிலிருந்தவர்களில் அநேகம் பேர் சீக்கிரமே தூங்கிப் போய் விட்டார்கள். மரங்களைப் பார்த்துக் கொண்டும், மேகங்களின் இளஞ் சிவப்பு நிறத்தைப் பார்த்துக் கொண்டும், பியோத்தருடனும், நிகீதாவுடனும் பழத் தோட்டத்தில் அர்தமோனவ் அமர்ந்திருந்தார். தனது தாடியைத் தடவியபடி, தணிவான குரலில் அவர் பேசினார்:

''அவர்கள் கிறுக்குத்தனமான ஆட்கள். ஒத்துப் போகக் கூடியவர்கள் அல்ல. பியோத்தர், உன் மாமியார் உனக்குக் கூறுவது போல அப்படியே செய். இது எல்லாப் பெண்களுடைய முட்டாள்தனமும் ஆகும், ஆனால் இதைச் செய்

...க வேண்டும்! அலெக்ஸி எங்கே? பெண்களை வீடுவரை ...ன்று வழியனுப்பப் போய்விட்டானா? சிறுமிகள் அவனை ...ம்புகிறார்கள், எல்லாம் சரி, ஆனால் ஆண்களுக்குப் பிடிக்கவில்லை. பார்ஸ்கியின் இளையவன் அவனைக் குத்து ...ளாய்க் காண்கிறான்... ஆமாம்! நீ அவர்களிடம் நாகரிக ...க இருக்க வேண்டும், நிகீதா, அதில் நீ கைதேர்ந்த ...ள். உன்னுடைய அப்பாவுக்காக இழைவாக இரு. நான் ...ரு விரிசலை ஏற்படுத்தும் போது, நீ அதை நிரப்பி விடு.''

மரத்தாலான பெரிய பீப்பாயை அவர் உற்றுப் பார்த்...ார், ஆர்வமில்லாதபடி தொடர்ந்தார்:

''இதை முழுக்கவும் பேராவலோடு அவர்கள் குடித்தார்...ள். குதிரையைப் போல அவர்கள் குடிக்கிறார்கள். அது ...ற்றி நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய், பியோத்தர்?''

தனது மணவுறுதியின் பேரில் கிடைத்த அன்பளிப்பான ...ட்டு இடைக் கச்சையை விரலில் நெருடியபடி மகன் அமைதி...ாக பதிலளித்தான்:

''கிராமப்புற வாழ்க்கை எளிமையானது, இலகுவா...னது.''

''ஹிம்... என்ன எளிமையாக இருக்க முடியும்—நாள் முழுக்கத் தூங்கிக் கொண்டு...''

''அவர்கள் மணவிழாவை இழுத்துக் கொண்டு செல்...கிறார்கள்.''

''பொறுமையாக இரு.''

இப்போது வந்த நாள் பியோத்தருக்கு ஒரு நீண்ட, ...டினமான நாளாக இருந்தது. தெய்வ பீடத்திற்குக் கீழே ...ட்கார்ந்து கொண்டு, கடுகடுப்பால் தனது புருவங்கள் ...ன்று சேர்ந்தது போல அவன் உணர்ந்தான். இது ...ல்லதில்லை என்பதை அவன் அறிவான், தனது ...ணமகன் நிலைக்கு அது அவனுக்கு மகிழ்ச்சியைத் ...ரவில்லை. ஆனால் அவன் எதுவும் செய்ய முடியாத ...வனாக இருந்தான். ஒரு நூலால் தனது புருவங்கள் ...ன்றாகத் தைக்கப்பட்டது போலவும், அவனால் பிரிக்க முடியாதது போலவும் காணப்பட்டது. விருந்தினர் களை ...ரக் கண்களால் பார்த்துக்கொண்டான் அவன். தனது ...லைமுடியைப் பின்னுக்கு இழுத்து விட்டுக் கொண்டான், ...திலிருந்தும் புதிய முசுக்கட்டை இலைகள், மேசை ...மீதும் நதால்யாவின் முகத்திரை மீதும் பரவியபடி கீழே ...விழுந்தது. அவளுங் கூட தலை கவிழ்ந்து அமர்ந்திருந்தாள்.

அவளது இமைகள் கவலையுடன் தாழ்ந்திருந்தன. அவள் மிகவும் வெளிறிப் போய் இருந்தாள். ஒரு குழந்தையைப் போல அச்சமுற்றும், வெட்கத்தால் நடுங்கிக் கொண்டும் இருந்தாள்.

''சகிக்கவில்லை!'' ஒண் சிவப்பு வண்ணமாக, முடிய டர்ந்த, பாசம் பிடித்த பல்லைக் காட்டி அறிவிலிகள் இரு பதாவது முறையாகக் கத்திக் கொண்டிருந்தார்கள்.

தன்னுடைய கழுத்தை வளைக்காமலேயே, ஓநாய் மாதிரி, பியோத்தர் திரும்பினான்; நதால்யாவின் முகத்திரையை உயர்த்தினான், தனது உலர்ந்த உதடுகளை நயமற்ற முறையிலே அவளது கன்னத்தில் அழுத்தினான், அவளது தோலின் பட்டுத் துணியின் குளுமையையும், அவளது தோள்களின் அச்சமுற்ற அதிர்வையும் உணர்ந்தான். நதால்யாவுக்காக அவன் வருந்தினான், அவனுங் கூட வெட்கப்பட்டான். குடித்திருந்த விருந்தினர்கள் அண்மையிலிருந்தபடி கூக்குரலிட்டுக் கொண்டிருந்தனர்:

''எப்படி என்று அவனுக்குத் தெரியாது!''

''உதடுகளுக்குக் குறிவை!''

''நானாக இருந்தால் முத்தமிடாமல் விடுவேனா!..''

ஒரு பெண்ணினுடைய குடிகாரக்குரல் கிரீச்சிட்டது: ''நீ முயன்று பாரேன்!''

''சகிக்கவில்லை!'' பார்ஸ்கி கூக்குரலிட்டான்.

பற்களைப் பொருத்தி, ஈரம் படிந்து நடுங்கிக் கொண்டிருந்த பெண்ணின் உதடுகளில் பியோத்தர் தனது உதடுகளை வைத்தான். சூரிய ஒளியில் வெண் மேகம் போல அவள் உருகிக் கொண்டு போவது காணப்பட்டது. இருவருமே பசியோடு இருந்தார்கள், முந்திய நாளிலிருந்தே அவர்கள் எந்த விதமான உணவும் கொடுக்கப்படவில்லை. சாராயத்தின் கடுமையான நெடி, பதட்டம், தோன் ஒயினை இரண்டு குவளை அருந்தியது ஆகியவற்றால் பியோத்தர் போதையை உணர்ந்தான், தன்னுடைய நிலைமையைத் தனது மணப் பெண் கண்டு கொள்ளலாம் என அஞ்சினான். அவனைச் சுற்றி ஒவ்வொன்றுமே அலைந்தது, மாறி நின்றது, இப்போது எல்லாமே ஒரே வர்ணமாகவும், இப்போது அருவருப்பான முகங்களாக இருந்த சிவப்புக் குமிழிகளின் வரிசைகள் உடைந்து கொண்டிருப்பது போலவும் இருந்தது. பணிவோடும் கோபத்தோடும் மகன் தன் தந்தையை உற்றுப்பார்த்தான். ஆனால் இல்யா அர்தமோனவ்,

...ர்ச்சியால் அழன்றெழுந்து, தலைவிரி கோலமாக, ...கோ வாவையே பார்த்துக் கொண்டிருந்தார்; ...து இளஞ்சிவப்பு நிற முகத்திற்கு நேராகக் கத்திக் கொண்டிருந்தார்:

''உறவுக்காரப் பெண்மணி, உன் கடுந்தேறலை உனக்... குடித்தேன். அதனைத் தயாரித்தவளைப் போல ...து சுவையா இருக்கு.''

வட்டமான, வெண் நிறக் கையை அவள் உயர்த்தினாள். ...ல வண்ணக் கற்கள் பதிக்கப்பட்ட அவளது தங்கக் கை ...ளையில் சூரிய ஒளி மின்னியது, அவளது உயர்ந்த மார் ...பில் இருந்த முத்துக்களில் பட்டு பளிச்சிட்டது. எஞ்சியவர் ...ளைப் போலவே, அவளும் குடித்துக் கொண்டிருந்திருக் ...றாள். அவளது சாம்பல் நிறக் கண்களில் ஓர் ஊக்க ...நிறைந்த புன்னகை மின்னியது. விரிந்த அவளது உதடுகள் ...ர்வத்தோடு நடுங்கின. பிறகு அவர்கள் குவளைகளை ...சிக் கொண்டார்கள், அவள் பருகினாள், தன் உறவுக் காரருக்குத் தலை வணங்கினாள். தளர்ந்து தொங்கிய தனது ...லையை அவர் ஆட்டி பெரு மகிழ்ச்சியோடு கத்திக் கொண்டிருந்தார்:

''வழக்கமரபுகளை நீ தெரிந்திருக்கிறாயே, உறவுக் காரப் பெண்ணே! இளவரசருக்குரிய வழக்கமரபுகள், ஆக ...வுளே என்னைக் காப்பாத்து!''

தனது தந்தை சரியாக நடந்து கொள்ளவில்லை என் ...தை பியோத்தர் வெறுமையாக உணர்ந்தான். விருந்தினர் ...ள் குடிவெறியில் கத்திக் கொண்டிருப்பதன் மூலமாக, ...லவின் பகை உணர்வு கொண்ட விளித்தல்களை, ...ஸ்கயாவின் நுணுகிக் காணக் கூடிய அவதூறுகளை, ...நெய்கினின் இளிக்கின்ற சிரிப்புகளை அவன் தெளிவாகக் ...டான்.

''இது மணவிழா அல்ல, இது ஒரு சோதனை,'' என்று ...வன் நினைத்தான். திரும்பவும் அவன் கேட்டான்:

''பாரு, அவன் உல்யானாவை எப்படிப் பாக்கிறான், ...ன்! எனது, ஓ எனது!''

''மற்றுமொரு மணவிழா வந்துக்கிட்டு இருக்கு, பாதிரி ... இல்லாம...''

...ப் பொழுதிற்கு, இந்தச் சொற்கள் அவனுடைய ...களில் வேதனையோடு ஒலிக்கும்; ஆனால் அவன் ...வின் முழங்காலையோ, முழங்கையையோ தொடு

வதாக உணர்ந்தவுடன் அவை மறந்து போகும். அவளைப் பார்க்காமல் இருப்பதற்காக, தனது தலையை சிறிதும் அசைக்காமல், திரும்பாமல் முன்பாக அமர்ந்திருந்தான். ஆனால் அவனது கண்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவளது திக்கை நோக்கி அவை மீண்டும் நிலையாகத் திரும்பின.

''எவ்வளவு நேரம் இது நடக்கும்?'' அவன் கிசுகிசுத் தான். நதால்யா திரும்பக் கிசுகிசுத்தாள்:

''எனக்குத் தெரியாது.''

''எனக்கு வெட்கமாயிருக்கு...''

''எனக்கும் அப்படித்தான்,'' என்று பதில் வந்தது. அவனைப் போலவே அவளும் உணர்ந்ததில் அவன் மகிழ் வுற்றான்.

பழத் தோட்டத்தில் விருந்துண்ட இளம் பெண்களோடு அலெக்ஸி இருந்தான். நிகீதா அறைக்குள்ளே அமர்ந்திருந் தான், கூடவே, ஈரமான தாடியும், புள்ளி விழுந்த முகத் தில் மஞ்சள் நிற, செம்பு போன்ற கண்ணுடனும், அரு வருப்பாக மெலிந்து நீண்ட ஒரு பாதிரியாரும் இருந் தார். முற்றத்தையும், தெருவையும் நோக்கித் திறந்திருந்த சன்னல்களின் வழியாக நகரத்து மக்கள் அதற்குள்ளாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்: ஏராளமான தலைகள், நீல வானத்திற்குக் குறுக்காக இங்குமங்கும் மாறிக் கொண்டு, தொடர்ச்சியாகத் தோன்றிக் கொண்டும், மறைந்து கொண் டும் இருந்தன; வாய்கள் திறந்தபடி, முணுமுணுத்தபடி, கிசுகிசுத்தபடி, கத்தியபடி காணப்பட்டன. திறந்த கோணிப் பைகளைப் போல சன்னல்கள் தோன்றின. கோணிப்பையி னின்றும் வெளிவரும் அநேக நீர்முலாம் பழங்களைப் போல, ஆரவாரமிக்க தலைகள் எந்தக் கணமும் அறைக்குள்ளாக உருண்டோடி வரலாம் எனத் தோன்றியது. அகழி தோண்டு பவனான தீஹன் வியாலவ் உடைய முகத்தை—சிவப்புப் புள்ளிகளுடன், செந்நிறக் கம்பளி மயிர் அடர்த்தியாக உள்ள கன்ன எலும்புகள் உயரமாக உள்ள—நிகீதா குறிப் பாக கவனித்தான். நிற மற்றது போல ஆரம்பத்தில் காணப் பட்ட கண்கள், சிமிட்டுவது போல விநோதமாக நடுங்கின. ஆனால் கருவிழிகளோ சிமிட்டின, இமைகள் செயலற்று இருந்தன. சுருண்ட மீசையால் இலேசாக நிழல்படிந்த மெல்லிய உதடுகளும் இறுக்கமாக ஒட்டி அசைவற்று இருந்தன. மகிழ்ச்சியில்லாதபடி காதுகள் மண்டையோட்

ிழ்ற்கு அண்மையில் இருந்தன. சன்னல் சட்டத்திற்கு எதி ரானாக் தனது மார்பைக் காட்டியபடி வியாலவ் நின்றான். மற்றவர்கள் அவனைப் பிடித்து அப்பால் தள்ளியபோது அவன் சத்தம் போடவோ, வசை மொழியவோ இல்லை, ஆனால் வெறுமனே அவர்களைத் தனது தோள்பட்டை யாலோ, முழங்கையாலோ பக்கவாட்டில் தள்ளினான். அவ னது தோள்கள் உருண்டு உயரமாக இருந்தன, அவனது தலை அவற்றிற்கிடையே அமுங்கிக் கிடந்தது. அவனது மார்பிலிருந்து நேராக வளர்ந்தது போல அவனது தலை காணப்பட்டது. அவனுங் கூட கூனன் போலக் காணப்பட் டான். அவனுடைய முகத்திலே ஏதோ ஒருவிதமான அன் புள்ள சார்புக் கருத்தினை நிகீதா கண்டான்.

ஒற்றைக் கண் மனிதன் ஒருவன் திடீரென்று கஞ்சிராவை அடித்தான், தனது விரல்களால் அதைத் தடவிக் கொடுத் தான். கஞ்சிரா சிணுங்கியது, இரைச்சலிட்டது. யாரோ கூர்மையாகச் சீட்டியடித்தார்கள். ஓர் அக்கார்டியன் முழங்கியது. அங்கே இளைஞன் ஸ்தெபாஷா பார்ஸ்கி அடர்த்தியான சுருள் முடியுடன், இசைக்கேற்றபடி கத்திக் கொண்டு அறையின் மையப்பகுதியில் சுற்றி வந்து கொண் டிருந்தான்:

ஏய், கன்னிகளே, ஏய், அன்புள்ள எதிரிகளே
ஆடுவோரே, பாடுவோரே, களிமிகு விளையாட்டுத் தோழரே,
கணகணக்கும் தங்கப் பைகள்
கொண்டவர் என்னிலும் யார்?
வாரும், பிறகு, வாரும், மோதிரம்,
அரங்கத்திற்கு என்னுடன் போட்டியிட!

அவனுடைய அப்பா எழுந்து நின்றார், மிகப் பெரிய உருவங் கொண்ட அவர் கர்ஜித்தார்:

''ஸ்தெபாஷா! நகரத்தின் மரியாதையைக் காப்பாற்று! மாஸ்க் பகுதியிலிருந்து வந்துள்ள பொடிப்பையன்களிடம் உன் சமத்தைக் காட்டு!''

பிறகு இல்யா அர்தமோனவ் எழுந்து நின்றார், ஆடிப் போனவர் தனது தலையை ஆட்டினார், அவரது முகம் சிவந் திருந்தது, அவரது மூக்கு எரிகின்ற தணலாய் ஒண்சிவப் பாக இருந்தது. பார்ஸ்கியைப் பார்த்து அவர் கத்தினார்:

''பொடிப்பையன்கள் என்றா சொல்கிறாய்! யாருக்கு

நன்றாக ஆடத் தெரியும் என்பதை நாம் பாத்து விடுவோம்! அல்யோஷா!''

ஒளிவீசுகின்ற, முறுவலித்த அலெக்ஸி, கண நேரத்திற்கு திரியோமவ் நடனக்காரரைப் பார்த்தபடி நின்றான். பிறகு, திடீரென்று வெளிறிப் போய், வட்டத்தைச் சுற்றி வந்தபடி நம்ப முடியாத வேகத்திலே, ஒரு பெண் போலக் கிரீச்சிட்டபடி சுழன்றான்.

''ஒரு பாட்டுக்கூட இல்லாமல் அவன் ஆடிக்கொண்டிருக்கிறான்,'' என்று திரியோமவ் நகரவாசிகள் கத்தினார்கள். அர்தமோனவ் கோபத்தோடு கர்ஜித்தார்:

''அல்யோஷா! நான் உன்னைக் கொல்லப் போகிறேன்!''

அவனுடைய கால்கள் இடைவெளியில்லாமல் ஆடின, அலெக்ஸி இரண்டு விரல்களைத் தனது உதடுகளுக்கு இடையே வைத்து துளைப்பது போலச் சீட்டியடித்தான், அதன் பிறகு தெளிவாகப் பாடினான்:

மொகேய் பிரபு
ஐந்து வேலையாள் வைத்திருந்தார்
ஆனால் இப்போ மொகேய் பிரபு
பாவம், அவரேதான் வேலையாளு!

''இதோ பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று அர்தமோனவ் வெற்றிக் களிப்பில் கர்ஜித்தார்.

''ஆகா!'' என்று குறிப்பிடும்படியாக பாதிரியார் வியந்தார், ஒரு விரலை உயர்த்தினார், தலையை ஒரு முறை ஆட்டினார்.

''அலெக்ஸி உங்கள் ஆளை நடனமாடுவதில் விஞ்சி விடுவான்,'' என்று பியோத்தர் நதால்யாவிடம் கூறினான், அவளும் பீதியோடு பதிலளித்தாள்:

''அவன் கால்கள் மெல்லியனவாக இருக்கின்றன.''

தந்தைமார்கள் தங்களுடைய மகன்களை சண்டைச் சேவல்களைப் போலத் தூண்டி உற்சாகமூட்டினர். அவர்கள் தோளோடு தோள் சேர்ந்து நின்றார்கள், இருவருமே நன்கு குடித்திருந்தார்கள்—பருத்த நபர், கோணிப் பையில் போடப்பட்ட ஓட்ஸ் போல அலங்கோலமாக, புருவங்களுக்குக் கீழேயுள்ள குறுகிய, சிவப்புநிற இமைகளினின்றும் மதுவுண்ட கழிபேருவகையால் நீர் வழிந்தபடியும்; மற்றவரோ பாய்ந்து செல்பவரைப் போலக் காணப்பட்டார். அவரது நீண்ட கைகள் திருகிக் கொண்டு அவரது தொடை

யாய், நட்டிக் கொண்டிருந்தன. அவரது கண்கள் ஏறத் தாழ தன்னிலை மறந்தபடி இருந்தன. அசைந்து கொண் டிருந்த தன் தந்தையினுடைய தாடிக்குக் கீழே, பல் வரிசை களின் இயக்கத்தை ஊகித்தவனாய், பியோத்தர் தனக்குத் தானே எண்ணிக் கொண்டான்:

''அவர் தனது பல்லை அரைத்துக் கொண்டிருக்கிறார்... இப்போ யாரையாவது அடிக்கப் போகிறார்...''

''மட்டமான நடனம், அர்தமோனவ்! நடையே இல்லை! பாவம்!'' மத்ரியோனா பார்ஸ்கயாவினுடைய உறுமுகின்ற குரல் பேசியது.

கருத்த, வட்டமான, வாணலியைப் போன்ற அவளது முகத்தையும் அவளது கனத்த மூக் கையும் பார்த்து இல்யா அர்தமோனவ் சிரித்தார். அலெக்ஸி வென்று விட் டான். பார்ஸ்கி பையன் கதவை நோக்கி நழுவிப் போய்க் கொண்டிருந்தான். பய்மகோவாவின் கையைப் பற்றிய இல்யா, உத்தரவிட்டார்:

''வாம்மா, உறவுக்காரப் பெண்ணே, இது உன்னுடைய முறை!''

அவள் வெளிறிப் போனாள். தன்னுடைய வெறுங் கையால் அவரை அப்பால் தள்ளிவிட முயன்றாள், திடீர் அதிர்ச்சியால் ஏளனக் கோபமுற்றுப் பேசினாள்:

''உனக்கென்ன பைத்தியமா? இது தவறு என்று உனக்குத் தெரியவில்லையா?''

வெட்கத்தோடு பல்லைக் காட்டியபடி விருந்தினர்கள் மௌனமானார்கள். பய்யாலவ் பார்ஸ்கயாவைப் பார்த் தான். அவனது வார்த்தைகள் எண்ணெய்க் கிரீச்சிடுவது போல வெளியே வந்தது:

''இது எல்லாம் சரிதான்! ஆடு உல்யானா, எங்களை மகிழ்விக்க! கடவுள் மன்னிப்பார்...''

''பாவம் என்னுடையது!'' இரைந்தார் அர்தமோனவ்.

அவரது போதை மறைந்தது போலக் காணப்பட்டது. முகஞ்சுளித்தபடி, சண்டைக்குப் போவது போல, தனது சொந்த விருப்பத்தில் நடப்பதைப் போன்று அல்லாது, அவர் முன்வந்தார். யாரோ பய்மகோவாவை முன்னுக்குத் தள்ளினர். குடித்திருந்த பெண் தடுமாறவும் நடுங்கவும் செய்தாள். பிறகு, தனது தோள்களைப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு, தலையை ஆட்டிக் கொண்டு வட்டத்தைச்

சுற்றி வந்தாள். அதிர்ச்சி தரும் கிசுகிசுப்பை பியோத்தர் கேட்டான்:

''கடவுள் நம்மைக் காப்பாராக! கணவன் கல்லறைக்குப் போய் ஓராண்டாகவில்லை, தன் மகளைத் திருமணம் செய்து கொடுக்கிறாள், மணவிழாவிலே நடனமாடுகிறாள்!''

அவன் தன் மனைவியைப் பார்க்கவில்லை, ஆனால் தனது தாயாரின் நடத்தைக்கு அவள் வெட்கப்படுவதை உணர்ந்தான், பின்னர் முணுமுணுத்தான்:

''தந்தை நடனமாடியிருக்கக் கூடாது.''

''அம்மாவும் கூடத்தான்,'' அவள் பதிலளித்தாள். அவளது குரல் தணிவாகவும் துயரமானதாகவும் இருந்தது. அண்மைச் சுற்றில் இருந்த மக்களுடைய தலைகளுக்கு மேலாகப் பார்த்தபடி அவள் பெஞ்சின் மீது நின்று கொண்டிருந்தாள். அவள் திடீரென்று அசைந்து, பியோத்தரின் தோளைப் பற்றினாள்.

''கவனம்!'' அன்பு பாராட்டுகின்ற முறையில் கூறிய அவன், அவளைத் தாங்கிக் கொள்வதற்காக அவளது முழங் கையைப் பற்றித் தூக்கினான்.

திறந்த சன்னல்களின் வழியாக,பார்த்துக் கொண்டிருந்த வர்களின் தலைகளுக்கும் மேலாக, அஸ்தமனச் சூரியனின் செந்நிறக் கதிர்கள் பாய்ந்தன; இந்த வெளிச்சத்தில், குருட்டு மனிதர்களைப் போல, ஆணும் பெண்ணும் சுழன்ற படி சுற்றி வந்தார்கள். கதவுகளுக்கு வெளியே, பழத் தோட் டத்தில், தெருவில் மக்கள் கத்திக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்தார்கள்; ஆனால் புழுக்கமான அறை யில் அமைதி மெல்ல மெல்ல ஏற்பட்டுக் கொண்டிருந்தது. கஞ்சிராவின் நெடிய தோலானது சோர்வாக இரைந்தது, அக்கார்டியன் கிரீச்சிட்டது, ஓலமிட்டது, இளம் ஆண்க ளும் பெண்களும் இருந்த அண்மை வட்டத்தைச் சுற்றிலு மாகச் சுழன்றபடி அந்த இருவரும் நடனமாடினார்கள். இந்த நடனமானது அசாதாரணமான முக்கியத்துவம் உடை யது என்பது போல இளைஞர் குழு மயான அமைதியுடன் கவனித்தது. வயதானவர்களில் அநேகர் வெளியே முற்றத் திற்குச் சென்றிருந்தனர், குடியினால் உணர்வு மழுங்கிய வர்கள் மட்டுமே எஞ்சியிருந்தவர்கள்.

அர்தமோனவ் தனது காலைப் பதித்து உறுதியாக நின்றார்.

''என்னை விட நீ மேலாகப் பெற்றிருக்கிறாய், உல் லியானா இவானவ்னா!''

அந்தப் பெண் திடுக்குற்றாள். ஒரு கற்சுவருக்கு முன்னர் நிற்பது போல அவளுங் கூட திடீரென்று நிலைத்து நின் றாள். வட்டத்திலிருந்தவர்களை நோக்கி தலை குனிந்த படி அவள் கூறினாள்:

''என்னைப் பற்றி மட்டமாகக் கருத வேண்டாம்.''

தனது கைக்குட்டையால் தனக்குத் தானே விசிறிக் கொண்டு, அவள் உடனடியாக அறையை விட்டு வெளி யேறினாள். இப்போது பார்ஸ்கயா இடத்தைப் பிடித்துக் கொண்டாள்:

''மணமகளையும், மணமகனையும் பிரியுங்கள்! பியோத் தர், நீ என்னோடு வா. மாப்பிள்ளைத் தோழர்களே, இவனது கைகளைப் பிடியுங்கள்!''

மாப்பிள்ளைத் தோழர்களை ஒதுக்கித் தள்ளிவிட்டு, தனது கனத்த கைகளைத் தன் மகனுடைய தோள்களின் மீது தந்தை வைத்தபடி கூறினார்:

''போ, கடவுள் உனக்கு மகிழ்ச்சியை வழங்குவார்! நாம் தழுவிக் கொள்வோம்!''

தன் மகனை அவர் கட்டித் தழுவினார், பிறகு அவனை அப்பால் தள்ளிவிட்டார். மாப்பிள்ளைத் தோழர்கள் பியோத்தரின் கைகளைப் பற்றினார்கள். பார்ஸ்கயா அவர் களை நடத்திச் சென்றாள், இடப்புறமும் வலப்புறமும் மாறித் துப்பியபடி முணுமுணுத்தாள்:

''த்தூ, த்தூ! நோயில்லை, கவலையில்லை, எதிர்ப்பு மில்லை, அவமரியாதை இல்லை, த்தூ! நெருப்புக்கும் நீருக் கும் மட்டுமே நேரமும் இடமும் தெரியும், இடையூறுக்கு அல்ல, ஆனால் மகிழ்ச்சிக்காக!''

அவளைத் தொடர்ந்து நதால்யாவின் அறைக்குள்ளாக பியோத்தர் போன போது, அங்கே உயரமான மென்மை யான படுக்கைத் தயாராக இருந்தது, அறையில் நடுவில் ஒரு வயதான கிழவி ஒரு நாற்காலியில் அழுத்தமாக அமர்ந் திருந்தாள்.

''கவனித்து நினைவில் கொள்!'' வினைமுறைப்பாட் டுடன் அவள் தொடங்கினாள். ''இங்கே இரண்டு அரை ரூபிள் கள் இருக்கின்றன. இவற்றை உன்னுடைய காலணிகளில், ஒவ்வொரு காலில் வைத்துக் கொள். நதால்யா வரும் போது, உன்னுடைய காலணிகளைக் கழற்றுவதற்காக முழங்கா

லிட்டுக் குனிவாள். அவற்றை கழற்ற விட வேண்டாம்...''

''இவை எல்லாம் எதற்காக?'' பியோத்தர் எழுச்சியின்றி கேட்டான்.

''அது நீ புரிந்து கொள்வதற்காக அல்ல. மூன்று முறை மறு, நான்காவது முறை அவற்றைக் கழற்ற அவளை விடு, அதன் பிறகு அவள் மூன்று முறை உன்னை முத்தமிடுவாள், அவளுக்கு நீ அரை ரூபிள்கள் கொடுத்துவிட்டுக் கூறு: 'எனது அடிமையே, நான் இதை உனக்குத் தருகிறேன், என் விதி!' மறந்து விட மாட்டாயே! நல்லது, பிறகு ஆடைகளைந்து விட்டு அவளுக்கு முதுகைக் காட்டியபடி அமர்ந்திரு. அந்த இரவு உள்ளே இருக்கத் தன்னை அநுமதிக்க அவள் கெஞ்சுவாள்! ஆனால் நீ அப்படியே இருக்கிறாய், அவள் மூன்றாவது முறை கேட்கும் போது மட்டுமே, உன் கையை அவளிடம் நீட்டுகிறாய்—புரிந்ததா? நல்லது, அதன் பிறகு...''

அகன்ற, கருந்த முகங் கொண்ட தனது பெண் குருவை பியோத்தர் வியப்போடு உற்றுப் பார்த்தான். தனது உதடுகளை நாக்கால் துழாவிக் கொண்டும், கழுத்திலும், கன்னத்தில் வழிந்த வியர்வையைத் தனது கைக்குட்டையால் ஒத்தி அகற்றிக் கொண்டும், மிகவும் தேர்ந்த முறையில் வெட்கமற்ற வார்த்தைகளைக் கரகரத்த குரலில் உச்சரித்துக் கொண்டும் அவள் அங்கே உட்கார்ந்திருந்தாள். பிரிகின்ற போது, அவள் திரும்பக் கூறினாள்:

''அழுகையில் நம்பிக்கை வைக்காதே, கண்ணீரிலும் நம்பிக்கை வைக்காதே.'' தனக்குப் பின்னால் கனத்த சாராய நெடியை விட்டு விட்டு, அவள் அறையை விட்டு அகன்றாள். வெறிகொண்ட கோபத்தால் பியோத்தர் ஆட்கொள்ளப் பட்டான். தனது காலணிகளைக் கழற்றினான், தூரத் தூக்கி எறிந்தான், விரைந்து உடைகளை அகற்றினான், ஒரு குதிரையில் ஏறுவது போல படுக்கை மீது பாய்ந்தான். தனக்குள்ளாகக் கொதித்துக் குமுறிக் கொண்டிருந்த மான உணர்வு காரணமாக அழுதாமல் இருக்கும்படி தனது பற்களைக் கடித்தான்.

''சதுப்புநிலத்துச் சாத்தான்கள்...''

படுக்கையின் அடிப்புறம் சூடாக இருந்தது. அவன் நழுவிச் சென்று, சன்னலுக்குச் சென்றான். அவன் அதைத் திறந்த போது, பழத் தோட்டத்திலிருந்து வந்த குடித்தவர்கள் எழுப்பிய கூச்சலும், பலத்த சிரிப்பும், பெண்க

ளின் முனகல்களும் அவன் காதைச் செவிடாக்கின. நீலநிறக் காயலில் மரங்களுக்கிடையே கருமையான உருவங்கள் தெரிந்தன. ஒரு செம்பு விரல் போல புனித நிகோலா ஆலயத்தின் தூபிமுனை வானத்திலே நீட்டிநின்றது. சிலு வை காணப்படாதிருந்தது. முலாம் பூசுவதற்காக அது கழற்றப்பட்டிருக்கலாம். நகரத்தின் கூரைகளுக்கு மேலாக பார்த்த போது, பியோத்தர் ஓகா நதியைப் பார்த்தான், கரைந்து கொண்டிருந்த மெல்லிய மஞ்சள் ஒளியில் அது அமைதியாகத்தோடு மினுமினுத்துக் கொண்டிருந்தது, ஆற்றுக் கப்பால் எல்லையற்ற காட்டினுடைய கருமையான வெளி மை தெரிந்தது. அவன் மற்றொரு நிலத்தையும் நினைவு கூர்ந்தான்—ஓர் அகன்ற நிலம், பொன்னிறக் கதிர்களுடன் கூடிய பிரகாசமான வயல்கள்—பெருமூச்சு விட்டான்; படிக் கட்டுகளில் காலடி யோசைகளும், அடங்கிய நகைப்பொலி களும் கேட்டன. அவன் மீண்டும் படுக்கையில் தாவிக் குதித்தான். கதவு திறந்தது. பட்டுப் போன்ற நாடாக்க ளின் சரசரப்பொலி கேட்டது. செருப்பு கிரீச்சிட்டது. யாரோ கண்ணீர் மல்கத் தும்மினார்கள். கதவு திறந்த போது கொக்கி ஓசையிட்டது.

பியோத்தர் எச்சரிக்கையோடு தனது தலையை நிமிர்த் தினான். அந்த அரையிருட்டில், கதவுக்கு உள்ளாக அண் மையில் ஒரு வெண்ணிற உருவம் நின்றது, மெதுவாக சிலுவை அடையாளம் போட்டுக் கொண்டது, ஏறத்தாழத் தரையைத் தொடுமாறு குனிந்தது.

''அவள் தொழுது கொண்டிருக்கிறாள். நான் செய்ய வில்லை.''

ஆனால் வழிபடுவதற்கு அவனுக்கு விருப்பமில்லை.

''நதால்யா யெவ்ஸேயெவ்னா,'' அவன் மெதுவாகச் சொன்னான். ''பயப்படாதே. நானே பீதியடைந்து தான் இருக்கிறேன், எல்லாமே சலித்துப் போய் விட்டது.''

தனது இரு கைகளாலும் தனது தலையை நன்கு சரி செய்தான், பிறகு முணுமுணுத்தான்:

''காலணிகளைக் கழற்றுவது போன்ற எல்லா வியா பாரத்திற்கும் அவசியமில்லை. அது வெறுமனே முட்டாள் தனமானது. என் நெஞ்சு வலிக்கிறது, மேலும் அந்தப் பெண் மடத்தனமாகப் பேசுகிறாள். அழ வேண்டாம்.''

பயத்துடன், பக்க வாட்டில், அறையைக் கடந்து சன்

னலுக்குச் சென்றாள். வெளியே பார்த்தபடி, அவள் மெது வாகச் சொன்னாள்:

''அவர்கள் இன்னமும் கொண்டாடிக் கொண்டிருக் கிறார்கள்.''

''ஆமாம்.''

நீண்ட நேரத்திற்கு அவர்கள் இது போலவே பேசி னார்கள், குறிக்கோளின்றி, இருவருமே களைத்துப் போ னார்கள், ஒருவரை யொருவர் நெருங்கிச் செல்கின்ற முடிவு எடுக்க முடியாதபடி ஓரளவுக்கு பயப்படவும் செய்தார்கள். விடியப் போகிற தருணத்தில், படிகள் கிரீச்சிட்டன, சுவ ரிலே ஒரு கை தட்டித் தடவியது. நதால்யா கதவுக்குச் சென்றாள்.

''அது பார்ஸ்கயாவாக இருந்தால், அவளை உள்ளே விட வேண்டாம்,'' பியோத்தர் கிசுகிசுத்தான்.

நாதாங்கியை உயர்த்தியபடி ''அது அம்மா,'' என் றாள் நதால்யா. பியோத்தர் படுக்கையின் மீது அமர்ந் தான், அவனது கால்கள் தரையை நோக்கித் தொங்கிக் கொண்டிருந்தன. தனக்குத் தானே அவன் அதிருப்தி கொண் டான், கவர்ச்சியற்ற வகையில் அவனாகச் சொல்லிக்கொண் டான்:

''நான் சரியில்லை. என்னிடத்தில் தெம்பில்லை. என் னைப் பார்த்து அவள் நகைப்பாள்...''

கதவு திறந்தது, நதால்யா மெதுவாகப் பேசினாள்:

''அம்மா உங்களைக் கூப்பிடுகிறாங்க.''

அவள் கணப்படுப்போடு சாய்ந்து கொண்டாள், வெண் ணிற ஓட்டில் அவள் கிட்டத்தட்ட காணப்படாதது போலா னாள். பியோத்தர் வெளியே சென்றான். கதவுக்கு வெளியே இருட்டில் பய்மகோவா நடுக்கமுற்றபடியும், திகைப்புற்ற படியும் சூடாகக் கிசுகிசுத்தாள்:

''என்ன செய்து கொண்டிருக்கிறாய், பியோத்தர் இல் யீச்? எனக்கும் என் மகளுக்கும் கேவலம் ஏற்படுத்த வேண் டும் என்று நீ விரும்புகிறாயா? கிட்டத்தட்ட காலை நேர மாகிவிட்டது, உங்களை எழுப்புவதற்கு சீக்கிரமே அவர் கள் இங்கே வந்து விடுவார்கள். அவர்களுக்கு என் மகளு டைய மாற்றாடையை நான் கட்டாயம் காண்பிக்க வேண் டும்: அவள் நேர்மையானவள் என்பதை அவர்கள் அறிந்து கொள்ள வேண்டும்!''

அவளுடைய ஒரு கையை பியோத்தரின் தோள் மீது

யைத்திருந்தாள். மற்றொரு கையால் அவனைத் தொடர்ந்து தழுவியபடியே கேட்டாள்:

''என்ன இது? நீ தெம்பில்லாது போய் விட்டாயா, அல்லது குளிர்ந்து போய் விட்டாயா? பதில் பேசு! என்னை பயமுறுத்த வேண்டாம்...''

பியோத்தர் சோர்வாகக் கூறினான்:

''அவளுக்காக நான் வருந்துகிறேன். பீதியாகி விட்டது.''

அந்த விதவையினுடைய முகத்தை அவனால் பார்க்க முடியவில்லை, ஆனால் அவள் சுருக்கென்ற முறையில் சிரித்தது போல அவனுக்குத் தெரிந்தது.

''போ, போய் ஓர் ஆண் பிள்ளையைப் போல உன் வேலையைச் செய்! முனிவர் கிறிஸ்தோஃபரை வணங்கு. போ. பொறு, உன்னை முத்தமிட்டுக் கொள்கிறேன்...''

அவனைச் சுற்றித் தனது கைகளைப் போட்டபடி, குளிய, ஈரமான உதடுகளால் அவனை முத்தமிட்டாள். ஒயினின் வெதுவெதுப்பான நெடி அதில் வீசியது. அவன் திரும்பச் செய்வதற்கு முன்னதாக, அவள் போய் விட்டாள். அவனது உரத்த முத்தம் காற்றைத் தான் சந்தித்தது. அறைக்குத் திரும்பி வந்து தனக்குப் பின்னால் கதவைத் தாழிட்டான், பிறகு தனது கைகளை வேண்டுமென்றே நீட்டினான். அப்பெண் முன்னோக்கி நகர்ந்து சென்று அவனது அரவணைப்புக்குள்ளாகச் சேர்ந்தாள். தடுமாற்றத்தோடு அவள் கூறினாள்:

''கொஞ்சம் ஒயினை அம்மா குடித்திருக்கிறாள்...''

இது போன்ற வார்த்தைகளை அவன் எதிர் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. படுக்கைப் பக்கம் சாய்ந்தபடி, அவன் முணுமுணுத்தான்:

''பயப்படாதே. நான் கவர்ச்சி இல்லாது இருக்கலாம், ஆனால் நான் அன்பானவன்...''

அவனை ஒட்டி நெருக்கமாகச் சென்றாள், முணுமுணுத்த படி:

''நான் விழுந்து கொண்டிருக்கிறேன்...''

...திரியோமவ் நகர மக்கள் விருந்து சாப்பிடுவதைப் பெரிதும் விரும்பினார்கள்: திருமண விழா ஐந்து நாட்களுக்கு இழுத்துக் கொண்டு போனது. காலையிலிருந்து நடு இரவு வரை தெருவிலே மேலும் கீழுமாக, வீட்டுக்கு வீடாய், குடி மயக்கத்தில் போய்க் கொண்டிருந்தார்கள். பாரிஸ்கியாக்கள் எல்லாரிலும் மிக உயர்ந்த, ஆரவாரப்

பகட்டுடைய விருந்தளித்தார்கள். சிறுமி ஓல்கா ஒர்லோவாவிடம் ஏதோ கொஞ்சம் அவமதித்ததற்காக அவர்களுடைய பையனை அலெக்ஸி விளாசி எடுத்தான். அது பற்றித் தன்னிடம் பெற்றோர்கள் முறையிட்ட போது அர்தமோனவ் மிகப் பெருமளவுக்கு வியப்புற்றுப் போனார்:

''பையன்கள் சண்டை போட்டுக் கொள்வதை நாம் எப்போதும் கேள்விப்படாமலா இருந்திருக்கிறோம்?''

நாடாக்களாலும், இனிப்புகளாலும் பெண்களையும், இளைஞர்களைப் பணத்தாலும், தந்தைகளையும் தாய்களையும் கருணையில்லாதபடி குடியினாலும் அவர் குளிப்பாட்டினார், எல்லாரையும் எவரோ சிலரையும் கட்டித் தழுவினார், கத்திக் கொண்டிருந்தார்:

''ஹேய், ஒவ்வொருவருக்கும் தான்! நாம் மகிழ்ச்சியில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம், இல்லையா!''

அர்தமோனவ் தனக்குத்தானே கிளர்ச்சி ஏற்படுத்திக் கொண்டு அளவில்லாமல் குடித்தார், அவருக்குள்ளாக எரிந்த நெருப்பை அணைப்பது போலக் குடித்தார், ஆனால் போதை ஏற்படவில்லை. இந்த சில நாட்களில் அவர் மிகக் குறைவாகவே உணரக் கூடியவராக இருந்தார். உல்யானா பய்மகோவாவிடமிருந்து அவர் விலகி இருந்தாலுங் கூட, அவரது கண்கள் அடிக்கடி அவள் பக்கமாக ஒரு பூரிப்போடு, ஏக்கத்தைப் பிரதிபலிப்பது போலப் பார்த்ததை அவரது பையன்கள் கவனித்தனர். தனது வலிமையெல்லாம் தம்பட்டம் அடித்து நகரத்தின் கோட்டைக் காவற் படையிலிருந்து வந்த காவலர்க்கு எதிராகக் கழியைப் பிடுங்கினார். சுரங்க வெடி வைப்பவனையும், மூன்று கொத்தன்களையும் மற்போரில் வென்றார். பிறகு குழி தோண்டுபவனான தீஹன் வியாலவ் அவரிடம் வந்தான், எதையும் முன்மொழிவதற்காக அல்ல, கோரிக்கை எழுப்பியபடி:

''இப்போது என்னிடம் வா,'' சொன்னான்.

அவனது தொனியால் வியப்புற்ற அர்தமோனவ் தடித்த அந்த குழி தோண்டுபவனை மேலுங் கீழும் பார்த்தார்.

''நீ எப்படி ஆள் — வலிமையானவனா, பீத்தல் தானா?''

''எனக்குத் தெரியாது,'' என்று அந்த மனிதன் சோர்வோடு பதில் சொன்னான்.

ஒருவருடைய இடைவாரை மற்றவர் பிடித்தபடி, அவர்

அவன் முடிவேதும் காணாது சிறிது நேரம் இழுத்துக் கொண் டார்கள். வியாலவின் தோளுக்கு மேலாக, பெண்களை நோக்கி வெட்கமில்லாதபடி இல்யா கண்ணடித்தார். குழி தோண்டுபவனைக் காட்டிலும் அவர் உயரமாக இருந்தார், ஆனால் மெலிந்து ஓரளவுக்கு கட்டுடலோடு காணப்பட் டார். தனக்குப் பின்னால் எதிரியைக் கீழே தாழ்த்துவதற் காக முயற்சித்தபடி வியாலவ், இல்யாவின் மார்பின் மீது தோள் பட்டையால் அழுத்தினான். ஆனால் இல்யா, ஒருவழியாகப் புரிந்து கொண்டு, கத்தினார்:

''இதில் எந்தத் தந்திரமும் இல்லை, சகோதரனே, இது அகா மிக எளிமையானது தான்!''

திடீரென்று, முணுமுணுத்தபடி அவர் தானாகவே வியாலவைத் தனது தலைக்கு மேலே தூக்கினார். குழி தோண்டுபவனுடைய கால்கள் மரத்துப் போகுமளவுக்கு மாறின. புல்லில் அமர்ந்திருந்தபடி, தனது கன்னங்களினின் றும் வியர்வைத் துடைத்தபடி, வியாலவ் வெட்கப்பட்ட முகத்தோடு கூறினான்:

''அவர் வலிமையானவர் தான்.''

''நாங்கள் அதைப் பார்க்கலாம்,'' என்று பார்வையாளர் கள் சிரித்துக்கொண்டு கத்தினார்கள்.

''அவர் திடமாக இருக்கிறார்,'' வியாலவ் திரும்பச் சொன்னான்.

இல்யா அவனிடத்திலே ஒரு கையை நீட்டினார்.

''எழுந்திரு!''

முன் கூட்டியே நீட்டப்பட்ட கையைப் பொருட்படுத் தாதபடி தானாகவே எழுந்திருக்க முயன்று, தோல்வியுற் றான். திரும்பவும் கால்களை விரித்தபடி உட்கார்ந்தான். கலங்குகின்ற கண்களோடு கூட்டத்தினரை விநோதமாகப் பார்த்தான். பரிவோடு வினவியபடி நிகீதா அவனிடம் வந் தாள்:

''அது புண்படுத்துகிறதா? நான் உதவட்டுமா?''

குழி தோண்டுபவன் முறுவலித்தான்:

''எனது எலும்புகள் வலிக்கின்றன. உன் தந்தையை விட நான் வலிமையானவன், அவ்வளவு வேகமில்லை. நல்லது, நாம் மேலே போகலாம், நிகீதா இல்யீச், அற்ப ஆத்மா!''

அவளுடைய கையை அவன் பற்றினான், பிறகு அவர் கள் கூட்டத்தைப் பின்தொடர்ந்தனர். தனது கால்களின்

வலி குறையலாம் என்ற நம்பிக்கையால் வியாலவ் அழுத்த மாக அடிபோட்டபடி நடந்தான்.

களைப்பாலும், தூக்கமின்மையாலும், தொடர்ச்சியாகக் காட்சியளித்தபடி பளபளப்பான, இரைச்சல் மிக்க, குடித் தவர்களின் கூட்டத்துடன் இளம் ஜோடி தெருவிலே மேலுங் கீழுமாகப் பணிவோடு சென்றது. அல்லது ஒவ் வொரு முனையினின்றும் அவர்களை நோக்கி வந்த வெட்க மற்ற கிண்டல்களுடன் முகஞ்சிவந்தபடி மேசையில் சாப் பிடவும் குடிக்கவும் செய்தனர். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளக் கூடாது அல்லது பேசக் கூடக் கூடாது என அவர் கள் மிகுந்த சிரமத்தோடு முயற்சி செய்தனர். தோளோடு தோள் சேர்ந்து நடந்து கொண்டும், எப்பொழுதுமே அரு கருகே உட்கார்ந்து கொண்டு இருந்தும் அவர்கள் அந்நியர் களைப் போலக் காட்சியளிக்க முயன்றனர். மத்ரியோனா பார்ஸ்கயா அவர்களது நடத்தையில் மகிழ்ச்சியுற்ற வளாய் இல்யாவிடமும் உல்யானாவிடமும் தற்புகழ்ச்சி யோடு பேசினாள்:

''உன் பையனுக்கு நான் நன்றாகக் கற்பித்திருக் கிறேனா? அப்படித் தான் நான் நினைக்க வேண்டும்! பார், உல்யானா, மகளுக்கு எங்ஙனம் நான் பயிற்சியளித்திருக் கிறேன்! மருமகனைப் பற்றி உன்னால் என்ன சொல்ல முடி யும்? சரியான ஆள்! அது என்னையல்ல, என்னுடைய மனைவி யல்ல என்று அவன் கூறுவது போல இருக்கிறது!''

எனினும், அவர்களுடைய சொந்த அறையில் பியோத் தரும், நதால்யாவும் தங்கள் மீது திணிக்கப்பட்ட எல்லா வகையான நடைமுறைகளையும் அணிவிக்கப்பட்ட உடைக ளுடன் வீசியெறிந்து விடுவார்கள், ஆனால் வெளியில் இருக் கும் போது கடமை உணர்வோடு ஏற்றுக் கொண்டார்கள். அன்றைய தினம் நடந்ததைப் பற்றி பேசிக்கொண்டார்கள்:

''ஆனாலும் அவர்கள் உங்கள் நகரத்தில் மிகவும் அதிக மாகக் குடிக்கிறார்கள்!'' என்று வியந்தபடி பேசினான் பியோத்தர்.

''உங்கள் பகுதிகளில் அவர்கள் குறைவாகக் குடித்தார் களா?'' என்று அவன் மனைவி கேட்டாள்.

''விவசாயிகளால் அது போலக் குடிக்க முடியாது!''

''நீங்கள் விவசாயிகள் போலக் காணப்படவில்லை.''

''நாங்கள் பண்ணை ஆட்களாக இருந்தோம்—அதா வது கண்ணியமிக்க ஆட்களாக.''

சில நேரங்களில் அவர்கள் சன்னலில் அமைதியாக அமர்வார்கள், ஒருவரையொருவர் தழுவிக்கொள்வார்கள், பழத் தோட்டத்திலிருந்து காற்றால் மெல்ல அடித்து வரப்பட்ட இனிமையான நறுமணத்தை நுகர்ந்தபடி இருப்பார்கள்.

''நீ ஏன் எதுவும் சொல்லாமல் இருக்கிறாய்?'' மனைவி மெதுவாகக் கேட்பாள், கணவனும் மெதுவாகப் பதிலளிப்பான்:

''சாதாரணப் பேச்சுப் பேச நான் விரும்பவில்லை.''

சாதாரணமற்ற, வித்தியாசமான பேச்சுக்காக அவன் ஏங்கினான்; ஆனால் அவன் தேவையை நதால்யா நிறைவேற்ற முடியவில்லை. பிறகு அவன் தானாகவே, பொன்னிற ஸ்டெப்பியின் விரிந்த பரப்பினைப் பற்றிப் பேசும் போது அவள் கேட்பாள்:

''காடுகளே இல்லை, ஒன்றுமே இல்லையா? ஓ, அது எவ்வளவு அச்சந்தருவதாக இருக்க வேண்டும்!''

பியோத்தர் சோர்வாக பதிலளித்தான்: ''காட்டில் தான் பயம் வாழ்கிறது. ஸ்டெப்பியில் பயப்படுவதற்கு என்ன இருக்கப் போகிறது? அங்கே, வெறுமனே பூமி, வானம் மற்றும் நான்.''

ஒரு முறை, சன்னலருகே அவர்கள் அமர்ந்திருந்த போது, நட்சத்திரங்கள் மின்னிய வானத்தை மௌனமான மகிழ்ச்சியில் பார்த்துக் கொண்டிருந்த போது, குளியலறைக்குப் பக்கத்தில், பழத் தோட்டத்தில் ஏதோ அசைவதைக் கேட்டார்கள். ராஸ்பேர்ரி புதர்களை ஒடித்தபடி அதன் வழியாக யாரோ ஓடிக் கொண்டிருந்தார்கள். பிறகு தணிவான கோபமான வெளிப்பாடு கேட்டது:

''என்ன செய்து கொண்டிருக்கிறாய், சாத்தானே?''

நதால்யா விரைந்து எழுந்தாள், நடுக்குற்றாள்:

''அது அம்மா!''

சன்னலுக்கு வெளியே பியோத்தர் குனிந்தான், அவனது அகலமான முதுகு அதை முழுமையாக மறைத்தது. குளியலறையில் அவன் அப்பா நின்றார், அவனது மாமியாரை சுவரோடு வைத்து அழுத்திக் கொண்டும், அவளைக் கீழே கவிழ்த்த முயற்சித்துக் கொண்டும் இருந்தார். அந்தப் பெண் போராடினாள், அவர் தலையில் அடித்துக் கொண்டும், மூச்சுவிட முடியாமல் முணுமுணுத்துக் கொண்டும் இருந்தாள்:

''என்னைப் போக விடு அல்லது நான் கூச்சல் போடு வேன்!''

பிறகு, வெறிபிடித்தபடி அவள் கத்தினாள்:

''அன்புள்ளம் கொண்டு, என்னைத் தொடாதே! இரக்கம் காட்டு...''

ஓசையில்லாதபடி பியோத்தர் சன்னலைச் சாத்தினான், தனது கைகளில் தனது மனைவியைப் பிடித்தபடி தன்னுடைய முழங்காலில் அவளை உட்கார வைத்தான்.

''வெளியே பார்க்க வேண்டாம்.''

அவனுடைய தழுவலில் அவள் பதைபதைத்து கத்தினாள்:

''என்ன விஷயம்? அது யார்?''

''அப்பா,'' அவளை இறுக்கமாகப் பிடித்தபடி பியோத்தர் பதிலளித்தான். ''நீ புரிந்து கொள்ளவில்லை?..''

வெட்கத்தாலும், அச்சத்தாலும் ''ஓ, அவர்களால் எப்படி முடியும்?'' என்று கிசுகிசுத்தாள். அவள் கணவன் அவளைப் படுக்கைக்குத் தூக்கிச் சென்றான், அவளிடம் அமைதியாகச் சொன்னான்:

''நமது பெற்றோர்களை மதிப்பிடுவதற்கு நாம் ஒன்றுமில்லை.''

நதால்யா முன்னும் பின்னும் மோதினாள், அவளது தலை அவளது கைகளில் இருந்தது, புலம்பினாள்:

''பாவம், இது பாவம்!''

தன் தந்தையினுடைய வார்த்தைகளை (''மேற்குடிமக்கள் மட்டமாகத்தான் நடப்பார்கள்'') நினைத்துப் பார்த்தபடி, ''அது நம்முடைய பாவமல்ல'' என்றான் பியோத்தர். மேலும் தொடர்ந்தான்: ''அந்த வழியில் நல்லதுங் கூட— அவர் உன்னை ஓயாது தொந்தரவு செய்ய மாட்டார். வயதானவர்கள், விஷயங்களை எளிதாகச் செய்து கொள்வார்கள். ஒரு மருமகளைக் கட்டாயப் படுத்துவதை அவர்கள் பாவம் என்று அழைக்க மாட்டார்கள். அழ வேண்டாம்.''

அழுகைக்கு ஊடே அவன் மனைவி கூறினாள்:

''அவர்கள் நடனமாடிய போது, அந்த நேரத்தில், நான் நினைத்தேன்... அவர் அம்மாவைக் கட்டாயப் படுத்தினால், நாம் என்ன செய்து கொண்டிருக்கப் போகிறோம்?''

ஆயினும், உள்ளக் கிளர்ச்சியால் களைப்புற்றுப் போன அவள், சீக்கிரமே தூங்கிப் போய் விட்டாள். பியோத்தர்

சன்னலைத் திறந்து, பழத் தோட்டத்திற்குள்ளாகப் பார்த்தான். ஓர் உயிர் கூட இல்லை, தென்றல் வீசிக் கொண்டிருந்தது, நறுமணமுள்ள இருட்டில் மரங்கள் ஆடின. சன்னலைத் திறந்தபடி வைத்து விட்டு, தன் மனைவிக்குப் பக்கத்திலே படுத்தான், என்ன நடந்து விட்டது என்பதைச் சிந்தித்தபடி கண்களை அகலத் திறந்தபடி இருந்தான். எங்காவது ஒரு சிறிய பண்ணையில் வசிப்பது எவ்வளவு அருமையாக இருக்கும், அவனும் நதால்யா மட்டிலுமாக...

...நதால்யா சீக்கிரமே எழுந்து விட்டாள். தனது தாயார் மீது கொண்ட இரக்கத்தாலும், அவளது துயரத்திற்காகக் கொண்ட அநுதாபத்தாலும் தான் விழித்துக் கொண்டுவிட்டது போல அவளுக்குக் காணப்பட்டது. வெறுங்காலுடன், தனது மாற்றுடையோடு மட்டும், படிகளில் விரைந்து ஓடி இறங்கினாள். அவளது தாயாரின் அறைக் கதவு எப்பொழுதுமே இரவு நேரத்தில் மூடியிருக்கும், எனினும் இப்போது அது சிறிது திறந்து கிடந்தது. இது அவளை நடுக்குறச் செய்தது. எனினும், உள்ளே பார்த்தாள், தள்ளி மூலையில் படுக்கை மீது ஒரு போர்வைக்குக் கிழே ஒரு வெள்ளைக் குன்றினை அவள் பார்த்தாள். தலையணைக்கு மேலாக கருமையான தலைமுடி பரந்து கிடந்தது.

''இவள் தூங்குகிறாள். எங்ஙனம் இவள் கதறவும் வருத்தப்பட்டிருக்கவும் முடியும்...''

துயருற்றுப் போன தாயாரை ஆற்றுப் படுத்த ஏதாவது செய்தாக வேண்டும். நதால்யா வெளியே பழத் தோட்டத்திற்குள்ளாகச் சென்றாள். புல், விழுந்திருந்த பனித்துளி சிதறி அவளது கால்களைக் குளிரச் செய்தது. காட்டிற்கு மேலாகச் சூரியன் சற்று முன்னர்தான் வெளிக் கிளம்பியிருந்தது. இன்னமும் அவ்வளவு வெதுவெதுப்பு அடையாத சரிவான அதன் கதிர்களால், அவள் கண்கள் கூசின. பனியால் வெள்ளி போல இருந்த ஒரு புல்லிதழைப் பற்றியிழுத்தாள், அதை ஒரு கன்னத்தின் மீது முதலாவதாக வைத்தாள், அதன் பிறகு மறு கன்னத்தில் வைத்தாள்; பிறகு, புத்துணர்ச்சி பெற்றாள், சிவப்புப் பெர்ரிகளைக் கொத்துக் கொத்தாக எடுப்பதற்காகக் குனிந்தாள். அவளது சிந்தனைகள், கோபமில்லாதபடி, மாமனார் பக்கம் திரும்பியது. அவளது தோள் மீது அழுத்தமாக முறையிலே தட்டி அவர் எக்களிப்போடு கேட்டது நினைவு வந்தது:

''உயிர் வாழ்கிறாயா நீ? நல்லது? அது சரி, வாழு!''

அவளுக்காக அவரால் வேறு வார்த்தைகளைத் தேட முடியவில்லை என்பது போல இருந்தது. அவள் சிறிதளவு நடுங்கியும் போனாள், அவரது அன்பான தட்டுதல்கள்— வருடுதல் குதிரைகளுக்குப் பொருந்தும்.

அவர் மீது தனக்குத்தானே வெறுப்பை வரவழைத்த படி "ஏதோ காட்டு மிராண்டி" என்று நினைத்தாள்.

பறவைகள் கலகலவென ஒலி ஏற்படுத்திக் கொண்டிருந்தன, ஒரு பட்டுப் போன்ற சருகு தலைக்கு மேலே இலைகளினின்றும் விழுந்தது. ஓர் இடையன் தனது குழலை ஊதினான். நகரத்தின் மூலையில் வெகு தொலைவிற்கப்பால், ஆலை இயங்கிக் கொண்டிருந்த வதராக்ஷா நதிக் கரையிலிருந்து, தெளிவான, சந்தடியற்ற இடத்தைக் கடந்து மனிதக் குரல்கள் சோம்பேறித்தனமாக மிதந்து வந்தன. ஏதோ ஓசை கேட்டது. நதால்யா திடுக்குற்றாள், தனது தலையை நிமிர்த்தினாள். அவளுக்குச் சற்று உயரே, ஓர் ஆப்பிள் மரத்தில், பச்சை நிறப் பாடும் பறவை ஒன்று தொங்கிற்று, தப்பித்துச் செல்வதற்காக பெரு முயற்சியோடு போராடிக் கொண்டிருந்தது.

"யார் கண்ணி வைத்தது? நிகீதாவா?"

பழத் தோட்டத்தில் எங்கோ ஒரு காய்ந்த குச்சி ஒடிவது கேட்டது.

அவள் வீட்டுக்குத் திரும்பிய போது, தனது தாயாரின் அறைக்குள்ளாக உற்றுப் பார்த்தாள், விதவை விழித்திருந்தாள், மல்லாக்கப் படுத்துக் கொண்டு, ஒரு கையைத் தனது தலைக்குக் கீழாக வைத்தபடி இருந்தாள், வியப்பைக் காட்டுவது போல அவளது புருவங்கள் உயர்ந்து இருந்தன.

துடுக்குற்றபடி அவள் கேட்டாள், "யார் அங்கே?.. என்ன விஷயம்?"

"ஒன்றுமில்லை. உன் தேநீரோடு சாப்பிடுவதற்காகக் கொஞ்சம் சிவப்பு பெர்ரிகள் சேகரித்திருக்கிறேன்."

படுக்கைக்கு அருகே, மேசையின் மீது குவாஸ்* வைக்கப் பயன்படும் ஒரு பெரிய ஜாடியானது, ஏறத்தாழ காலியாக இருந்தது. அதனது திருகி கீழே கிடந்தது. குவாஸ்

---

* குவாஸ்—கம்பு போன்ற ஒருவகை தானியத்தினின்று இறக்கப்படும் ருஷ்ய நாட்டுக் குடிவகை. (மொ-ர்.)

பட்டு மேசை விரிப்பு கறைபட்டிருந்தது. தாயாருடைய பிரகாசமான முறைப்பான கண்கள், நீலநிற நிழல் படிந்தது போலச் சுற்றி வந்தது, ஆனால் நதால்யா எதிர்பார்த்தபடி அவை கண்ணீர் விட்டதால் வீங்கிப் போயிருக்கவில்லை. அவை கருப்பாகக் காணப்பட்டன, மிக ஆழமாகப் பதிந்திருந்தன, அவளது பார்வையில் எப்போதும் காணப்படும் செருக்கு வாய்ந்த தன்மை இப்போது காணப்படவில்லை. அந்நேரம் அது முற்றாகக் காணப்படாததோடு, தணிந்து இருப்பது போலவும் தெரிந்தது.

''கொசுக்கள் என்னை விழிக்கும் படி செய்து விட்டன. இனிமேல் நான் கொட்டகையில் தான் தூங்கப் போகிறேன்,'' என்றாள் தாயார், கழுத்தைச் சுற்றி போர்வையை இழுத்தபடி, ''முழுக்கவும் நான் கடிபட்டு இருக்கிறேன். இவ்வளவு சீக்கிரம் எதற்காக எழுந்தாய்? வெறுங்காலோடு பனியில் நடந்தாயா? உனது மாற்றாடை ஈரமாக இருக்கிறது. உனக்குத் தடுமன் பிடிக்கப் போகிறது...''

ஏதோ தனது சொந்த நினைவுகளில் மூழ்கிப் போனவள் போல, எந்தவித அன்புமின்றி தாயார் ஆர்வமின்றி பேசினாள். மகளுடைய கவலை படிப்படியாக, பெண்களுக்கே உரிய கடுனமயான சந்தேகமாக மாறியது நன்கு தெரிந்தது.

''நான் சீக்கிரமே விழித்து விட்டேன், உன்னைப் பற்றிய எண்ணம் வந்தது... உன்னைக் கனவு கண்டேன்.''

''எதைப் பற்றிச் சிந்தித்தாய்?'' தாயார் வினவினாள், அவளது கண்கள் கூரையின் மீது பதிந்திருந்தன.

''இப்போது நீ தனிமையில் எப்படி நானில்லாமல் தூங்குகிறாய்...''

''நான் பயப்படவில்லை'' என்று அவள் பதில் பேசும் போது, தாயாருடைய கன்னங்கள் சிவந்தன போன்று நதால்யாவுக்குத் தோன்றியது. அவளுடைய முறுவலிப்பு பொய்யாகத் தெரிந்தது.

''நீ போவது நல்லது. உனது அன்பன் விழித்திருக்கிறான்—அவன் நடை போடுவதை நீ கேட்கவில்லையா?'' அமைதியாக கண்களை மூடியபடி தாயார் கட்டளையிட்டாள்.

படிகளில் மெதுவாக ஏறியபடி, நதால்யா ஏறத்தாழ நம்பிக்கையில்லாத முறையில் அருவருப்பாகச் சிந்தித்தாள்:

''இவளோடு அவர் இரவைக் கழித்திருக்கிறார். குவாஸ் அநேகமாகத்தான் இருந்திருக்கிறது. அவளது கழுத்து

முழுக்கக் கன்றிப் போய் இருந்தது— கொசுக் கடியினால அல்ல, அது முத்தங்களால் ஏற்பட்டது. இது பற்றி நான் பியோத்தரிடம் கூற மாட்டேன். அவள் கூடாரத்தில் தூங்கப் போகிறாள். இருந்தும் அவள் அலறினாளே...''

தனது மனைவியை நெருக்கமாகப் பார்த்துக் கொண்டு ''எங்கு போயிருந்தாய்?'' என்று பியோத்தர் கேட்டான். தவறு செய்த உணர்வோடு அவள் தனது கண்ணைக் கீழே சாய்த்தாள். ஏனென்று அவளுக்குத் தெரியவில்லை.

''சில சிவப்பு பெர்ரிகள் சேகரித்தேன், பிறகு அம்மா வைப் பார்ப்பதற்குச் சென்றேன்.''

''நல்லது, எப்படி இருக்கிறாள்?''

''நன்றாக இருப்பது போலவே அவள் காணப்படு கிறாள்...''

''ஆக,'' என்ற பியோத்தர் தனது காதை இழுத்து விட்டுக் கொண்டான். ''ஆக!''

அவன் முகஞ்சுழித்தபடி முறுவலித்தான், பெருமூச்சு விட்டான், செந்நிற பழத்தோலைத் தனது கன்னத்தில் தேய்த்தபடி:

''முட்டாள் பெண் பார்ஸ்கயா சரியாகத்தான் சொன் னாள் என்பது போலக் காணப்படுகிறது: அலறல்களில் நம் பிக்கை வைக்க வேண்டாம், கண்ணீரிலும் நம்பிக்கை வைக்க வேண்டாம்.''

பிறகு அவன் உறுதியாகக் கேட்டான்:

''நிகீதாவை நீ பார்த்தாயா?''

''இல்லை.''

''என்ன சொல்கிறாய், இல்லையா? இப்பொழுது அவன் அங்கே தான், பழத் தோட்டத்தில் பறவைகளுக்குக் கண்ணி வைத்துக் கொண்டிருக்கிறான்.''

''ஓ, நான்...'' கத்தினாள் நதால்யா, நடுக்குற்றாள். ''அங்கே நான் இது போல, எனது மாற்றாடை தவிர வேறில்லாமல் இருந்தேனே!''

''பார்த்தாயா?..''

''ஆனால் அவன் எப்போது தூங்குகிறான்?''

தனது காலணிகளை இழுத்துக் கொண்டிருந்த பியோத்தர், உரக்கவே உறுமினான். அவனைப் பக்கவாட் டில் பார்த்தபடி, இலேசாக முறுவலித்தபடி அவன் மனைவி சொன்னாள்:

''பாரு, அவனுக்குக் கூன் விழுந்திருந்தாலும், அவன்

அருமையானவன்... அலெக்ஸியை விட அருமையானவன்...''

அவள் கணவன் திரும்பவும் உறுமினான், ஆனால் அவ்வளவு உரக்க அல்ல.

...ஒவ்வொரு காலையிலும் சூரிய உதயத்தின் போது, ஆனாது மந்தையை ஓட்டிச் செல்வதற்காக இடையன் ஒன்று திரட்டும் போது, தனது நீண்ட குழலினை எடுத்துத் துயாரார்ந்த இசையை எழுப்பிச் செல்ல, நதிக்கு அப்பால் மோடரிகளின் ஓசையை ஏற்கெனவே கேட்க முடிந்த நிலையில், நகரத்து மக்கள் தங்களது பசுக்களையும் ஆடுகளையும் ஓட்டிச் செல்லும் போது, ஒருவருக்கொருவர் கேலியாகப் பேசிக் கொள்வர்:

''உற்றுக்கேள்! காலை விடிவதற்கு முன்னதாகவே அவர்கள் திரும்பவும் வந்து விட்டார்கள்...''

''பேராசை—அமைதியைச் சாகடிக்கக் கூடிய எதிராளி.''

சில வேளைகளில் தான் நகரத்தின் சோம்பேறித்தனமான பகைமையை வென்று விட்டது போல இல்யா அர்தமோனவுக்குத் தோன்றும். ஏனெனில் திரியோமவ் வாசிகள் அவருக்கு மரியாதையோடு தங்களது தொப்பிகளைத் தூக்கினார்கள், ராத்ஸ்கி இளவரசர்கள் பற்றிய அவரது கதைகளை கவனத்தோடு கேட்டார்கள். ஆயினும் வித்தியாசமில்லாதபடி எல்லாருமே, அவர்களில் ஒருவரோ மற்றொருவரோ எந்தப் பெருமையும் இல்லாமல் இப்படிக் குறிப்பிடுவர்:

''இங்குள்ள எங்களது மேற்குடியினர் எளிமையும் ஏழ்மையும் மிக்கவர்கள், ஆனால் உங்களை விடக் கண்டிப்பானவர்கள்!''

ஓகா நதிக்கரையில் பார்ஸ்கியினுடைய மது-உணவு வழங்கு கடையின் பழத் தோட்டத்தின் நிழலில், ஒரு விடுமுறை நாளின் மாலை நேரத்தில், திரியோமவ் வாசிகளின் பொருந்த கூட்டத்தில் அவர் கூறுவார்:

''என்னுடைய வியாபாரமானது உங்கள் எல்லாருக்கும் இலாபத்தைக் கொடுக்கும்.''

அவனது உதடுகளைக் குறுக மடித்தபடி அற்பத்தனமாக ஆட்டைப் போல முறுவலித்து ''கடவுள் அதை வழங்குவார்'' என்று பம்யாலவ் கூறுவான். ஒருவனுடைய காலணியை அவன் நக்குகிறானா, கடிக்கிறானா என்று கூறுவது சிரமமானது. அவனது சுருக்கங்கள் விழுந்த முகம் சணல் நார் போன்ற தாடிக்குள்ளாக மெலிந்து காணப்பட்டன.

அவனது மந்தமான மூக்கு ஒவ்வொன்றுக்கும் சந்தேகத்தோடு தும்பியது, அவனது ஓக் மரக் கொட்டை போன்ற கண்களில் வன்மம் ஒளிந்திருந்தது.

''கடவுள் அதை வழங்குவார்,'' அவன் திரும்பச் சொன்னான். ''உண்மைதான், நீ இல்லாமல் நாங்கள் மிக நன்றாக இருந்தோம், ஆனால் உன்னுடன் இருந்தாலும் அது போலவே இருக்கக் கூடும் தானே.''

அர்தமோனவ் முகஞ்சுழித்தார்.

''நீ இரட்டை அருத்தத்தோடு பேசுகிறாய், நண்பனைப் போல அல்ல.''

பார்ஸ்கி கத்தினான், வெடிச் சிரிப்புச் சிரித்தான்:

''அவன் அப்படிப்பட்ட ஆள் தான்!''

பார்ஸ்கியினுடைய முகம் இருக்க வேண்டிய இடத்தில், சில செந்நிறக் கறித்துண்டுகள், ஒழுங்கில்லாதபடி ஒன்று சேர்ந்திருந்தன. அவனது பெருத்த தலை, அவனது கழுத்து, கன்னங்கள், கைகள் — எல்லாவற்றிலுமே கரடி மயிர் அடர்த்தியாக வளர்ந்து கிடந்தது. காதுகள் பார்வைக்குத் தெரியவில்லை, அவனது கண்கள் இந்தச் சதைகளில் தேவையில்லாதது போலக் காணப்பட்டன, அவை உப்பிய கன்னங்களுக்குப் பின்னே ஒளிந்து கிடந்தன.

''எனது எல்லா வலிமையுமே கொழுப்பாக மாறியிருக்கிறது,'' என்று அவன் கூறுவான், கர்ஜிப்பான், சிரிப்பான்; தனது தனது மொண்ணையான பற்கள் நன்கு வெளித் தெரியும்படி தனது வாயை அகலத் திறந்து காட்டுவான்.

வண்டி தயாரிப்பவன் வரபோனவ் தனது ஒளியற்ற கண்ணை அர்தமோனவ் பக்கம் திருப்புவான், அவனது வறண்ட சன்னமான குரல் எச்சரிப்பு செய்வது போலப் பேசும்:

''வியாபாரம் செய்தாக வேண்டும், ஆனால் எந்த வகையிலும் கடவுளினுடைய வேலையைக் கட்டாயம் மறந்து விடக் கூடாது. 'மார்ஃபா, மார்ஃபா, உனது கலை கவனமாக இருக்கட்டும், பல விஷயங்கள் சிக்கலாகி இருக்கின்றன: ஆனால் ஒரு விஷயம் தேவையானது' என்று சொல்வதில்லையா?''

ஒளியற்று அநேகமாக வெறுமையாகத் தோன்றிய அவனது கண்கள், மறைந்திருந்த பொருளை வரபோனவ் ஊகம் செய்ததையும், அவை எல்லாவற்றையும் ஏதாவது அசாதரணமான அறிவிப்பின் மூலம் எல்லாரையும் திகைப்

பான பாய் செய்யும் என்பதையும் குறிப்பிட்டுக் காட்டுவது போலக் காணப்பட்டன. சில நேரங்களில் அத்தகைய மறை வெளியிடுதல் பற்றிப் பேசுவது போல அவன் பேசினான்:

''உண்மையில், கிறிஸ்து கூட அப்பத்தைப் பங்கு போட்டுக் கொண்டார், ஆகவே மார்ஃபா...''

''நிறுத்து, நிறுத்து'' என்று கிறிஸ்தவ சமூகத்தில் மூத்த வனான தோல் பதனிடும் ஜிதேய்கின் கூறுவான். ''நீ எங்கே போய்க் கொண்டிருக்கிறாய் என்பதைப் பார்.''

வரபோனவ் அமைதியாக இருந்து விடுவான், அவனது கவர்ச்சியற்ற காதுகள் திருகிக் கொண்டிருக்கும். இல்யா பேதால் பதனிடுபவனிடம் கேட்டார்:

''நீ இப்போது—எனது வியாபாரத்தைப் புரிந்து கொண் டாயா?''

நியாயமான வியப்புடன் ''நான் எதற்காக?'' என்று திருப்பிக் கேட்டான் ஜிதேய்கின். ''அது உன்னுடைய வியா பாரம், அதைப் புரிந்து கொள்வது என்பது உன்னுடைய தொழில், நீ வித்தியாசமான மீன்! உன்னுடையது உனக்கு, என்னுடையது எனக்கு.''

மரங்களின் வழியாக ஓகா நதியின் சேறு படிந்த பகுதி யையும், அதற்கும் தள்ளி இடப்புறத்தில் வதராக்ஷா நதி யின் பச்சை நிறப் பாம்பு வளைவில், ஊசியிலைக் காட்டுப் புதர்களிலிருந்து, பெரிய நதியோடு கலக்க, பொங்கி எழுந்து ஊர்ந்து வருகிற இடத்தையும் பார்த்தபடி அர்த மோனவ் தனது திண்ணிய பீரைக் குடித்தார். மணலில் தங்கத்தாலான பூவேலைப் பாட்டால் பூசியது போல அந்த முனையில் துகள்களும் மரச்சீவல் சுருளைகளும் மின்னின. அடுக்கிவைத்த செங்கற்களிலிருந்து செம்பழுப்பு நிறமான ஒளி மின்னியது. ஏகமாய் வளர்ந்த வில்லோப் புதர்களி டையே, திறந்த சவப் பெட்டியைப் போல, நீண்ட, மாட்டி றைச்சியின் நிறம் போன்ற கட்டிடம், அந்த ஆலைக்குரி யது நின்றது. பண்ட சாலையினுடைய பளபளப்பற்ற, இன்னமும் வர்ணம் பூசப்படாத கூரை மறைகின்ற சூரிய ஒளியில் பட்டு மின்னுவது போலக் காணப்பட்டது. சாய் வான கதிர்கள், இருமாடிக் குடியிருப்புக் கட்டிடத்தின் மஞ் சள் நிற வரைச் சட்டத்தின் உருக்கி வார்க்கப்பட்ட மெழுகை அதனது விறைப்பான பொன்னிற இறைவாரக் கையை புழுக்கமான வானத்திற்கு மேலாகக் காட்டியது. அலெக்ஸி யின் சரியாகச் சொன்னபடி, தொலைவிலிருந்து பார்ப்

பதற்கு அந்த வீடு ஒரு குஸ்லி* போலக் காணப்பட்டது. நகரத்துப் பையன்களையும், சிறுமிகளையும் விட்டு விலகி அங்கே வாழ்ந்தான் அலெக்ஸி. சமாளிப்பதற்குச் சிரமப்பட்டான், உணர்ச்சி வயப்பட்டவன், எதிர்க்கிற போக்குக் கொண்டவன் அவன். பியோத்தர் அழுத்தமான இயல்பு கொண்டிருந்தான். அவனைச் சுற்றி கலங்கலான ஏதோ ஒன்று இருந்தது; துணிவோடும், உறுதியோடும் எங்ஙனம் செய்து முடிக்க முடியும் என்பதை அவனால் இன்னமும் உணர முடியவில்லை.

அர்தமோனவின் முகத்திற்கு மேலாக ஒரு நிழல் கடந்து சென்றது. தனது அடர்ந்த புருவங்களுக்குக் கீழாக அவர் நகரத்து ஆட்களை மேலோட்டமாகப் பார்த்து ஆணவத்தோடு முறுவலித்தார். ''அற்பமானவர்கள், வேலை செய்யக் கூடச் சக்தியற்றவர்கள், உண்மையான துணிச்சலற்றவர்கள்,'' என்று நினைத்தார்.

இரவில், நகரம் நன்கு தூங்கி விடும் போது, அர்தமோனவ் ஒரு திருடனைப் போல, நதிக் கரை நெடுகிலும், பின் வழிகளில் விதவை பய்மகோவாவின் பழத் தோட்டம் வரையில் பதுங்கிச் செல்வதுண்டு. வெதுவெதுப்பான இருட்டில், வெள்ளரிக்காய், ஆப்பிள்கள் மற்றும் மஞ்சள் நிற மலர்க் கொத்துகளின் இதமான மணத்தை பூமி மீது தாம் தான் பரப்பினவை போன்று கொசுக்கள் இரைச்சலிடுவது உண்டு. மேகங்களின் சாம்பல் நிறக் கரைகளின் மேலே நிலவு உருண்டு சென்றது மென்மையான நிழல்கள் நதியை வருடிச் சென்றன. வேலிக்கு மேலாகக் கடந்தபடி, அர்தமோனவ் பழத் தோட்டத்திலிருந்து முற்றம் வரை மெல்லப் பதுங்கினார். இப்போது அவர் இருண்ட கூடாரத்திற்குள்ளாக நுழைந்தார். ஆர்வமிக்க கிசுகிசுப்பு மூலையில் ஒலித்தது:

''நீ பார்க்கப்படவில்லை என்று நிச்சயமாகச் சொல்கிறாயா?''

தனது ஆடைகளைத் தூக்கி எறிந்து விட்டு, அவர் கடுகடுப்புடன் முணுமுணுத்தார்:

''இது என்னை நோயாளியாக்குகிறது, இந்த மாதிரி ஒளிந்து வருவது! என்ன, நான் முதிராத ஒரு பையனைப் போல இருக்கிறேன்?''

---

* குஸ்லி—ஒரு ருஷ்ய வகை தெறி நரப்பிசைக் கருவி.**(ப-ர்.)**

''பிறகு ஏன் நீ ஒரு காமக்கிழத்தி வைத்துக் கொள்ளக் [illegible]து!''

''எந்த வகையிலும் என்னால் முடியாது, கடவுள் தான் [illegible]க்கு ஒன்றைக் கண்டு பிடித்தார்.''

''ஓ, நீ என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாய், திருச்ச[illegible]க்கு முரணான கோட்பாடு! நீயும் நானும் கடவுளுக்கு [illegible]ராகப் பாவம் செய்து கொண்டிருக்கோம்...''

''சரி, சரி அப்படியே இருக்கட்டும்! வேறு ஏதாவது [illegible]த்தில். ஆனா, உல்யானா, இந்த நகரத்தில் உள்ள ஆட்[illegible]ள்...''

''சரி, உன்னை வருத்தும்படி அவர்களை விடவேண்[illegible]ம்,'' அப்பெண் கிசுகிசுத்தாள், அன்பாக அவரைத் [illegible]விக் கொடுத்து அமைதிப் படுத்தினாள். அவள் ஓய்வாக இருக்கும் போது, நகரத்து மக்களைப் பற்றி அவரிடம் கூறுவாள்: யாருக்குப் பயப்பட வேண்டும், யார் புத்திசாலி, யார் நேர்மையற்றவர்கள், யார் சுலபமாகப் பணம் பெற்றிருக்கிறார்கள்.

''உனக்கு ஏராளமாக மரம் தேவைப்படுகிறது என்பது அவர்களுக்குத் தெரியும், ஆகவே பம்யாலவும், [illegible]போனவும், உனக்குச் சிரமம் ஏற்படுத்துகிற வகையில் சுற்றிலுமுள்ள எல்லா மரங்களையும் வாங்கி விடுவதற்குத் [illegible]ம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.''

''மிகவும் தாமதம். தனது மரத்தை இளவரசர் எனக்கு விற்று விட்டார்.''

அவர்களைச் சுற்றிலும், அவர்களுக்கு மேலாகவும் ஊடு[illegible] முடியாத இருள் தொங்கியது. ஒருவர் கண்ணை மற்ற[illegible] பார்க்கவும் முடியவில்லை. ஓசையில்லாத கிசுகிசுப்[illegible] அவர்கள் பேசினார்கள். வைக்கோல், பிர்ச் விளக்கு[illegible]கள், இவற்றின் மணம் கொட்டகையில் கமழ்ந்தது; [illegible] நிலவறையிலிருந்து ஈரஞ்செறிந்த, மகிழ்ச்சியான [illegible] எழுந்தது. அச்சிறிய நகரமானது கனத்த, அசை[illegible] அமைதியில் ஆழ்ந்துகிடந்தது. அவ்வப்பொழுது ஓர் [illegible] வைக்கோல்களின் வழியாகக் குதியாட்டமிட்டுச் செல்[illegible], அல்லது ஒரு சுண்டெலி மெல்லக் கிரீச்சிடும், ஒவ்[illegible] மணிக்கும் புனித நிக்கோலா ஆலயத்தின் மணியோ[illegible] தளர்ச்சியற்ற, அதிர்வை இரவுக்கு விடுக்கும்.

அவளது வெதுவெதுப்பான, மென்மையான உடலை [illegible] ''ஓ, உனது பெருந்தன்மை! வலிமை! நீ ஏன்

கூடுதலாகப் பிள்ளைகள் பெற்றுக் கொள்ளவில்லை?'' என்று அர்தமோனவ் ஆர்வத்தோடு முணுமுணுத்தார்.

''நதால்யாவுடன் இரண்டு பேர் இருந்தார்கள். அவர்கள் நோய்வாய்ப்பட்டு இறந்து போனார்கள்.''

''பிறகு உனது கணவன் சரியில்லை...''

''நீ இதை நம்ப மாட்டாய்,'' அவள் கிசுகிசுத்தாள், ''ஆனால் நீ இங்கு வருகிற வரை எனக்குக் காதல் என்றால் என்னவென்றே தெரியாது. பெண்கள், தோழிகள் அது பற்றிப் பேசுவாங்க, ஆனா அவற்றை நான் ஒருபோதும் நம்பியதில்லை. வெட்கத்தின் காரணமாக, அவர்கள் பொய் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் என்று நினைத்தேன்! என் கணவரிடம் வெட்கத்தைத் தவிர வேறு எதையும் நான் அறியவில்லை. படுக்கைக்குச் செல்வது என்பது கட்டைக்குச் செல்வது போலவே இருந்தது. அவர் சீக்கிரம் தூங்கிப் போய் விட வேண்டும், என்னைத் தொடக் கூடாது என்று அவருக்காகக் கடவுளிடம் நான் வேண்டிக் கொள்வதுண்டு! அவர் நல்ல மனிதர், அமைதியானவர், புத்திசாலித்தனம் மிக்கவர், காதல் என்ற அன்பளிப்பை மட்டுந்தான் கடவுள் அவருக்கு வழங்கவில்லை...''

அவளது கதை அர்தமோனவுக்குக் கிளர்ச்சி ஏற்படுத்தியது, அதே நேரம் வியப்பாகவும் இருந்தது. கடைசியாக அவளது உயரமான மார்பினை அன்பாகத் தடவியபடி, அவர் முணுமுணுத்தார்:

''ஆக இத்தகைய விஷயங்கள் தான் நடந்திருக்கின்றன. எனக்கு ஒருபோதும் தெரியாது. எந்த மனிதனுமே ஒரு பெண்ணுக்கு இன்பந் தருபவனாக இருப்பான் என்று நான் நினைத்தேன்.''

பகல் நேரத்தில் அமைதியாகவும், இன்னும் விவேகமான குடும்பப் பெண்ணாகவும், இவளது புத்திசாலித்தனத்திற்கும், கல்வி அறிவிற்காகவும், நகரத்து மக்களால் மதிப்பட்ட இந்தப் பெண் அருகிருக்கையில் தான் வலிமையும், புத்திசாலித்தனமும் கொண்டு இருப்பதாக அவர் உணர்ந்தார். ஒருமுறை, குமரிப்பெண் போன்ற அவளது தழுவலில் ஆட்பட்டு அவர் கூறினார்:

''இது உனக்கு எவ்வளவு மதிப்புள்ளது என்பது எனக்குத் தெரியும். நம்முடைய பிள்ளைகளுக்கு நாம் மணம் முடித்திருக்கக் கூடாது. நீயும் நானும் திருமணம் செய்து கொண்டிருக்க வேண்டும்...''

''உன் பையன்கள் நல்லவர்கள். நம்மைப் பற்றி அவர் கள் அறிந்து கொண்டால் கெடுதல் எதுவுமில்லை. ஆனால் பண்ணைத்து ஆட்கள் கண்டு கொண்டால்...''

ஒரு கிடுகிடுப்பு அவளை முழுமையாக நடுக்கிற்று.

''நீ கவலைப்பட வேண்டாம்,'' என்று கிசுகிசுத்தார் இல்யா.

மற்றொரு நாள், அவள் ஆர்வத்தோடு கேட்டாள்:

''எனக்குச் சொல்லு: நீ கொன்ற அந்த ஆள்—அவ னைப் பற்றி நீ கனவு கண்டாயா?''

தனது தாடியை மெதுவாகத் தடவி விட்டுக் கொண்டு இல்யா பதிலளித்தார்:

''இல்லை. நான் நன்றாகத் தூங்குகிறேன். கனவுகள் இல்லை. மேலும் எதற்காக அவனைப் பற்றி நான் கனவு காண வேண்டும்? நான் அவனைப் பார்க்கக் கூட இல்லை. யாரோ என்னை அடித்தார்கள், கிட்டத்தட்ட நான் சாய்ந்து விட்டேன். எனது குண்டாந்தடியை நான் சுழற்றி னேன், அது யார் தலையிலோ அடித்தது, அதன் பிறகு மற்றொருவனை அடித்தேன், மூன்றாவது ஆள் ஓடிவிட் டான்.''

அவர் பெருமூச்சு விட்டார், சீற்றத்தோடு முணுமுணுத் தார்:

''முட்டாள்கள் உன்னிடம் ஓடி வந்தார்கள், அவர்களுக் காக நீயே கடவுளிடம் பதில் சொல்ல வேண்டியிருக் கிறது...''

அவர் சற்று நேரம் பேசாமல் இருந்தார். அவள் கேட் டாள்:

''தூங்கி விட்டாயா?''

''இல்லை.''

''நீ புறப்படுவது நல்லது. கிட்டத்தட்ட விடிந்து விட் டது. எங்கு போகப் போகிறாய் ஆலைக்கா? ஆ, உனக்கு பண்னால் நிம்மதியே இருக்கு போவதில்லை...''

''ஒருபோதும் பயமில்லை. மகிழ்ச்சியற்ற நாட்களில் நின்றேன், விடுமுறைக்காக நான் நின்றேன்,'' அவர் பெரு மையாகப் பேசினார்.

அதிகாலை நேரத்துக் கருக்கலில், குளுமையான தனது பொய்ந்த நிலத்தின் வழியாகத் தனது கைகளைத் தனக்குப் பின்னால் கட்டிக் கொண்டு, தனது துணியை வீட்டுச் சேவ லின் வால் போலத் தூக்கிக் கொண்டு அவர் நடந்து போ

வார். காலுக்குக் கீழாகக் கற்களையும், மரச்சீவல் சுருள் களையும் மிதித்து நடந்தபடி அவர் நினைப்பார்:

''அல்யோஷவை அவனுடைய இஷ்டப்படி விட்டு விடு, ஆடி அடங்கட்டும். அப்போதுதான் அவனுக்குப் புத்தி வரும். சமாளிப்பதற்குச் சிரமமானவன், ஆனால் நல்ல இளைஞன்.''

மணலின் மீதோ, மரச்சீவல் சுருள் குவியலின் மீதோ படுத்து அவர் உடனடியாகத் தூங்கிப் போவார். பசிய வானத்திற்கு மேலாக இப்பொழுது மெதுவாகப் பொழுது புலர்ந்திருந்தது. பெருமைக்குரிய சூரியன் தனது கதிர் களை, ஒரு மயில் தோகை போல், விரித்து எழுந்தது; பொன்னிறம் அதைத் தொடர்ந்து ஏற்பட்டது. கட்டிடத் தொழிலாளிகள் விழித்துக் கொண்டார்கள், குப்புறப்படுத்த நிலையில் உள்ள ஒரு பெரிய உருவத்தைப் பார்த்து ஓர் எச்சரிக்கை கேட்டது:

''அவர் இங்கே இருக்கிறார்!''

தனது தோளுக்கு மேலாக ஓர் இரும்புக் குத்துக் கோடரி இருக்க, உயரமான கன்ன எலும்புகளுடன் தீஹன் வியாலவ், கண்களைச் சிமிட்டியபடி, அர்தமோனவுக்கு மேலாகக் காலை வைக்கப் போனவன் போல, ஆனால் செயல்படுத்த முடியாதபடி, அவரையே பார்த்துக் கொண்டு நின்றான்.

தொழிலாளர்கள் எழுப்பிய ஓசைக்கோ, சுத்தியல் அடிக் கோ அந்தப் பெரிய மனிதன் விழித்தெழவில்லை. முகத்தை வானத்தை நோக்கி வைத்தபடி அவர் படுத்திருந்தார், கூர்மையாக்கப்பட வேண்டிய ரம்பம் போல குறட்டை விட்டுக் கொண்டிருந்தார். தலையில் அடிபட்டவனைப் போன்று கண்ணைச் சிமிட்டியபடி, பல முறை திரும்பிப் பார்த்தபடி குழி தோண்டுபவன் நீளடி வைத்துச் சென் றான். வெள்ளைப் பட்டுச் சட்டையும், நீல நிறக் காற் சட்டையும் அணிந்து அலெக்ஸி வீட்டை விட்டு வெளியே வந்தான். குளிப்பதற்காக ஆற்றை நோக்கிச் சென்றான், காற்றில் நடப்பதைப் போல மெல்ல நடந்து கொண்டிருந் தான், தன் காலடிக்குக் கீழேயுள்ள மரச்சீவல் சுருளையின் இலேசான சலசலப்பு ஒலியினால் மாமா விழித்துக் கொண்டு விடுவாரோ என்று பயந்து கவனத்தோடு அவரைச் சுற்றிக் கொண்டு சென்றான். விடிவதற்கு முன்னதாகவே நிகீதா வண்டியை ஓட்டிக் கொண்டு போய்விட்டான். கிட்டத்தட்ட

[illegible]வொரு நாளும், காட்டிலிருந்து ஒன்று அல்லது இரண்டு [illegible] இலை தழை மக்கிய தோட்ட மண் கொண்டு வந்து, [illegible] பழத் தோட்டத்திற்காக அவன் துப்புரவு செய்து [illegible]திருந்த நிலத்தில் பரத்திப் போட்டான். அவன் ஏற் [illegible] பிர்ச்சுகள், மேப்பிள்கள், பேரிப்பழவகை மரங் [illegible] மற்றும் பறவைச் செர்ரி ஆகியவற்றை நட்டிருந்தான். [illegible]போது பழமரங்களை நடுவதற்காக, ஆழமாகக் குழிகள் [illegible] அதில் இலை தழை மக்கிய தோட்டமண், [illegible]க்களி மற்றும் களிமண் ஆகியவற்றைப் போட்டு [illegible] கொண்டிருந்தான். விடுமுறை நாட்களில் தீஹன் [illegible] அவனுக்கு உதவிக் கரம் நீட்டுவான்.

''பழமரங்கள் நடுவது பாவமல்ல, புனித நாட்களில் [illegible]நாலும் கூட,'' அவன் கூறுவதுண்டு.

[illegible] காதை இழுத்துவிட்டுக் கொண்டே அங்கு [illegible] நடை பெறுவதைப் பார்த்த படி பியோத் [illegible] அர்த்தமோனவ் காலடி போட்டு நடந்தான். மிக மதுர [illegible] மரத்தை ஒரு ரம்பம் தின்றது; இழைப்புளிகள் ஓசை [illegible] படி மேலும் கீழுமாகப் போய் வந்தன; கோடரிகள் [illegible], தெளிவாக பிளந்தன; குழியம்மி கட்டுமான வேலைக் [illegible]வற்றை ஈரப்பதமாக அரைத்தது, மழுங்கிய ஒரு [illegible] முனையை சாணைக்கல் தீட்டியது. தச்சர்கள், [illegible] உத்தரக் கட்டையைத் தூக்கியபடி, ''துபீனுஷ்கா'' [illegible] நின்று போனது, எங்கிருந்தோ ஓர் இளைய குரல் [illegible] பாடியது:

[illegible]பன் ஸகாரி மார்யாவைப் பார்த்தான்
[illegible] மகிழ்விக்க குடுவையை உடைத்தான்...

''[illegible] கொச்சையான பாட்டு,'' என்று பியோத்தர் [illegible] கூறினான். முழங்கால் அளவு மணலில் [illegible] தோண்டுபவன் திரும்பச் சொன்னான்:

''[illegible] பாட்டுக்கும் இதற்கும் எந்த வித்தியாசமும் [illegible].''

''[illegible] சொல்கிறாய்?''

''[illegible]களில் எந்த ஆன்மாவும் இல்லை.''

[illegible] திரும்பியபடி ''ஒரு வேடிக்கை ஆசாமி'' [illegible] நினைத்தான். அவனது தந்தை, வியால [illegible]யாளன் வேலை தந்த போது, தனது

கண்ணைத் தரையில் பதித்தவாறு, இந்த மனிதன் சொன்னதை நினைத்துப் பார்த்தான்:

''இல்லை, நான் அதற்குச் சரியானவன் அல்ல. சுற்றியுள்ள மக்களுக்கு என்னால் உத்தரவிட முடியாது. காவல்காரனாக வேண்டுமானால் வைத்துக் கொள்...''

அர்தமோனவ் அவனை பலமாகத் திட்டினார்.

...இலையுதிர் காலம் வந்தது, குளிரும் ஈரமும் ஏற்பட்டன. பழத் தோட்டத்தை பூஞ்சைகள் மூடின, காடுகளினிடையே கருப்பு எரும்பு தென்பட்டன. ஈரம் நிரம்பிய காற்று அந்த இடத்திற்கு மேலாக, வெளிறிய, மிதிபட்ட மரச்சீவல் சுருள்களை ஆற்றிற்குத் தள்ளியபடி சீட்டியடித்தது. ஒவ்வொரு காலையிலும், மயிரடர்ந்த குதிரைகளால் இழுத்து வரப்பபட்ட வண்டிகள் பண்ட சாலையில் வரிசையாக நின்றன. வண்டிகள் சணல் நாரால் நிரப்பப் பட்டிருந்தன. ''மட்டமான'' நாரால் தன்னை ஏமாற்ற நினைக்கும், ஈரமாக்கி அதன் நிறையைக் கூட்டியோ, சாதாரண வகை சேர்ந்த சணலைக் கொடுத்தோ தன்னை முட்டாளாக்க முயலும், தாடிவைத்த, சோர்வுற்ற விவசாயிகளை உற்றுக் கவனித்து பியோத்தர் பரிசோதனை செய்வான். விவசாயிகளிடம் பேச்சு வார்த்தைகள் வைத்துக் கொள்வது மிகவும் கஷ்டமானதாக இருந்தது. தீப்போன்ற அலெக்ஸி அவர்களுடன் சீற்றத்தோடு கலகம் செய்வான். தந்தை மாஸ்கோவுக்குப் புறப்பட்டுச் சென்றார், பிறகு பியோத்தரின் மாமியாளும் புறப்பட்டுச் செல்கையில் சந்நியாசி மடத்திற்கு வழிபடச் செல்வதாக அவள் சொன்னாள். மாலைநேரங்களில் தேநீர் சாப்பிடும் போதோ, இரவு உணவின் போதோ அலெக்ஸி சிடுசிடுப்போடு புகார் செய்வான்:

''இங்கு வசிப்பது வேடிக்கையானதல்ல, இந்த மக்களை நான் விரும்பவில்லை...''

இது பியோத்தருக்கு மாறாத கோபத்தை ஏற்படுத்தியது.

''அவர்களைக் காட்டிலும் மேலானவன் அல்ல! எப்போது பாத்தாலும் சண்டையிழுத்துக் கொண்டிருக்கிறாய். நீ மிகவும் பெருமையடித்துக் கொள்கிறாய்.''

''பெருமை பேசுவதற்கு என்னிடம் ஏதோ இருக்கிறது, அதனால்தான்.''

தனது சுருள் முடியைக் கலைத்து தோளுக்குப் பின்

ால் போட்டுக் கொண்டு, தனது நெஞ்சை நிமிர்த்தி மூச்சு விட்டுக் கொண்டு, சுருக்கிய கண்களால் தனது சகோதரர்களையும் நதால்யாவையும் பார்ப்பான். அவளோ அவனைத் தவிர்த்து ஒரு மாதிரி நடத்தினாள். அவனிடம் வறட்சியாகத் தான் அவள் பேசிக் கொண்டிருந்தாள்.

சாப்பாட்டிற்குப் பிறகு, அவளது கணவனும் அலெக்ஸியும் திரும்பவும் வேலைக்குச் சென்றதும், நிகீதாவினுடைய சிறிய, துறவிகளுக்குரிய அறைக்குச் சென்று, கைவைத்த நாற்காலி மீது சன்னலருகே அமர்ந்து தனது தையலைத் தொடர்வாள். பீர்ச் மரத்தை மிக திறமையாகச் செதுக்கி கூனன் தானே அவளுக்காக இந்த நாற்காலியைச் செய்திருந்தான். அலுவலக வேலையில் ஈடுபட்டு, தனது பெஞ்சில் எழுதிக் கொண்டும், கணக்குகள் பார்த்துக் கொண்டும் காலையிலிருந்து இரவு வரை அமர்ந்திருப்பான்; ஆனால் நதால்யா வந்த போது, தனது வேலையைச் சற்று நேரத்திற்கு நிறுத்தி விட்டு, இளவரசர்களைப் பற்றியும், அவர்கள் எப்படி வாழ்ந்தார்கள், அவர்களது மூடு தோட்டங்களில் வளர்ந்த பூக்களைப் பற்றியும் அவளிடம் பேசுவான். அவனது உச்சமான பெண்குரல் கெட்டுப் போனது, ஆனாலும் அன்புடன் தடவிக் கொடுப்பது போல இருந்தது. அவளுடைய முகத்தைத் தவிர்த்தபடி, அவனது நீலநிறக் கண்கள் சன்னலுக்கு வெளியே உற்றுப் பார்த்தன. தனது தையல் வேலைக்கு மேலாகக் குனிந்தபடி, தான் ஒருத்தி மட்டுமே இருப்பதைப் போல, சிந்தனை வயப்பட்ட அமைதியில் மூழ்கிப் போவாள். இம்மாதிரியாக அவர்கள் ஒரு மணி நேரம் இருப்பார்கள், சில வேலைகளில் இரண்டு மணி நேரங்கூட, ஒருவரை யொருவர் பார்க்காதபடி; அவ்வப்பொழுது அவன் அச்சத்துடன், அதுவும் அரைகுறை மனத்துடன் பார்த்துக் கொள்வான். தனது அண்ணியை தனது நீல விழிகளால் அன்பொழுகப் பார்ப்பான். அவனது பெரிய நாய்க் காதுகள் செந்நிறமாக மாறி இருக்கும். சில வேளைகளில் அவனது கணநேரப் பார்வை, அவளை அன்போடு புன்முறுவலித்தபடி அவனைப் பார்க்கச் செய்யும். அது விநோதமான புன்முறுவலாக இருந்தது. தனது காதலைப் பற்றி நதால்யா சந்தேகிப்பாளோ என்று சில வேளை உணர்வான், சில நேரங்களில் அவளது சிரிப்பு அவள் சங்கடப்படுவது போலக் காட்டும், உடனே குற்ற உணர்வோடு தனது தலையைத் தாழ்த்திக் கொள்வான்.

மழை விளாசியடித்தது, சன்னலுக்கு வெளியே முணு முணுத்தது, கோடைக் காலத்தின் மக்கிய துணுக்குகளை அடித்துக் கொண்டு போனது. சமீபத்தில் முற்றத்தில் சங் கிலி கொண்டு கட்டப்பட்டிருந்த ஒரு கரடிக் குட்டி உரக்க கர்ஜித்தது. முற்றத்திலிருந்து மந்தமான ஒலி கிளம்பியது, அங்கே பெண்கள் சணல் ஈரப்பத நாரை அடித்துக் கோதிக் கொண்டிருந்தார்கள். முற்றாக நனைந்து போயும், சேற டிக்கப்பட்டும் போன அலெக்ஸி பிதற்றியபடி உள்ளே வந் தான். அவனது தொப்பி அவன் தலையின் பின்பக்கமாகத் தள்ளிக் கிடந்தது. எனினும், வசந்த காலத்தை நினைவு படுத்துவது போல அவன் இருந்தான். அசட்டுச் சிரிப்பு டன் தீஹன் வியாலவ் ஒரு விரலைத் துண்டித்து விட்டான் என்று கூறினான்.

''அது ஒரு விபத்து என்று அவன் பாசாங்கு செய்கி றான், ஆனால் அது மிகத் தெளிவாகவே தெரிகிறது: ஒரு போர்வீரனாக இருப்பதற்கு அவன் பயப்படுகிறான். இங் கிருந்து புறப்பட்டு அப்பால் சென் றால் போதும், போர்வீ ரனாக மாறக் கூட நான் தயார்.''

அவன் முகஞ்சுளித்தான், கரடிக் குட்டியைப் போல உறுமினான்:

''நாமாகவே இங்கே ஒரு குழியில் மாட்டிக் கொண் டோம் என்பது போல இருக்கிறது...''

பிறகு அவன் கோரிக்கை ஒன்றை விட்டு, கையை நீட்டி னான்:

''எனக்குக் கொஞ்சம் பணம் கொடு. நான் நகரத் திற்குப் போய்க் கொண்டிருக்கிறேன்.''

''எதற்காக?''

''உனக்கு வேண்டாத வேலை.''

அவன் வெளியே சென்ற போது, ஒரு பாடலைத் தொ டங்கினான்:

புல்வழியே ஓடுகிறாள் சிறுக்கி
புருஷனுக்குப் பிட்டுடனே தருக்கி...

''ஆ, ஆனால் ஒரு நாளைக்கு அவன் சங்கடத்தில் மாட் டுவான்!'' என்றாள் நதால்யா. ''எனது தோழிகள் அடிக் கடி அவனை ஓல்கா ஓர்லோவாவுடன் பார்க்கின்றனர், அவ ளுக்குப் பதினான்கு வயதே தான். அவள் அம்மா இறந்து விட்டாள், அவளது அப்பா ஒரு குடிகாரன்...''

அவன் அதைக் கூறிய விதம் நிகீதாவிற்குப் பிடிக்கவில்லை, அவளுடைய வார்த்தைகளில் அளவிற்கதிகமான சோகமும் கவலையும் கலந்திருந்தன, அவற்றில் ஏதோ ஒருவிதப் பொறாமையும் இருந்தது போல் அவனுக்குப் பட்டது.

சன்னல் வழியாக வெளியே அமைதியாக அவன் பார்த்தான். வெளியில் ஈரப்பதமான காற்றில் பைன் மரக் கொப்புகள் அலைந்து கொண்டிருந்தன, அவற்றின் பசுமையான ஊசிகளினின்றும் வெள்ளிபோன்ற மழைத் துளிகள் சொட்டிக் கொண்டிருந்தன. அந்தப் பைன் மரங்களை எல்லாம் நட்டிருந்தவன் அவன் தான். வீட்டைச் சுற்றிலுமுள்ள எல்லா மரங்களுமே அவனுடைய நடுகைதான்...

வாட்டமுற்றும் களைப்புற்றும் பியோத்தர் உள்ளே நுழைந்தான்.

''தேநீருக்கான நேரம், நதால்யா.''

''இன்னும் சரியான நேரமாகவில்லை, அதற்குள்ளா கவா?''

''இது தான் நேரம் என்கிறேன் நான்!'' அவன் இரைந்தான். அவன் மனைவி அறையை விட்டுப் போய் விட்ட பிறகு, அவளது இடத்தில் அவன் உட்கார்ந்தான். அவனுங் கூட முணுமுணுத்தான், புகார் செய்தான்:

''வியாபாரம் முழுமையையும் அப்பா என் தோள்களில் சுமத்தி விட்டார். ஒரு சக்கரம் போல நான் சுழல்கிறேன், எங்கே நான் சுற்றிக் கொண்டிருக்கிறேன் என்று எனக்கே தெரியாது. நான் விஷயங்களை ஒழுங்காக நடத்திச் செல்லவில்லை என்றால், எனக்காக அவர் செய்வார்...''

மென்மையான, எச்சரிக்கையான சொற்களால் அலெக்ஸியையும் ஓர்லோவா பெண்ணையும் பற்றி நிகீதா அவனிடம் கூறினான்; ஆனால் பியோத்தரோ அதைச் செவிமடுக்காமலேயே தனது கையை மட்டிலுமே அலைத்தான்.

''பெண்களைப் பற்றிக் கவலைப்பட எனக்கு நேரமில்லை! அரைத் தூக்கத்தில் நான் இருக்கும் போது இரவு நேரத்தைத் தவிர, எனது மனைவியைக் கூட நான் பார்ப்பதில்லை. பகற் பொழுதில் நான் இமைபோல குருடாக இருக்கிறேன். உனது தலை முழுக்க முட்டாள்தனந்தான் நிறைந்திருக்கிறது...''

அவன் தன் காதை இழுத்துவிட்டுக் கொண்டு, எச்சரிக்கையோடு தொடர்ந்தான்:

''இந்த ஆலை விஷயமிருக்கிறதே, அது எங்களுக்குத்

தேவையில்லாதது. நாங்கள் ஸ்டெப்பிக்குப் போயிருக்க வேண்டும், கொஞ்சம் நிலத்தை வாங்கி அதில் வேலை செய் திருக்க வேண்டும். மிகக் குறைவான இரைச்சல், அதிகமான பலன்கள்...''

தனது பயணத்திலிருந்து இல்யா அர்தமோனவ் மிகுந்த ஆர்வத்தோடு, இளைஞர் போன்ற தோற்றத்துடன் திரும் பினார். அவர் தனது தாடியை குறைத்துக் கொண்டிருந் தார், எப்போதையும் விட அவரது தோள்கள் விரிந்தும், கண்கள் பிரகாசமாகவும் காணப்பட்டன. அவர் புதிய வராகக் காணப்பட்டார். சோபாவின் பின் பக்கம் வசதியாகச் சாய்ந்து கொண்டு கூறினார்:

''இராணுவம் முன்னேறிச் செல்வது போல நமது தொழில் கட்டாயம் முன்னேறியாக வேண்டும். உங்களுக் கும், உங்கள் குழந்தைகளுக்கும், உங்களது பேரக்குழந்தை களுக்கும் ஏராளமான வேலை இருக்கிறது. வரப்போ கிற முன்னூறு ஆண்டுகளுக்கு அர்தமோனவ்களாகிய நாம் —நாட்டின் வியாபாரத்தில் புதிய வாழ்வைக் கட்டாயம் கொண்டு வர வேண்டும்!''

தனது மருமகளைக் கண்களால் தேடியபடி கத்தினார்:

''உன் வயிறு பெரிதாகிக் கொண்டு வருகிறதே, நதால்யா? அது பையனாக இருந்தால், உனக்கு நான் ஓர் அருமையான பரிசு தருவேன்.''

மாலையில், படுக்கைக்கான தயாரிப்புகளை செய்து கொண்டிருந்த போது, நதால்யா தனது கணவனிடம் கூறி னாள்:

''மகிழ்ச்சியாக இருக்கும் போது அப்பா அருமையாக இருக்கிறார்.''

பக்கப் பார்வை பார்த்தபடி, அவளது கணவன் இத மாக பதிலளித்தான்:

''உண்மைதான், அவர் அருமையானவர்—உனக்கு ஒரு பரிசு தருவதாக உறுதி கூறியிருக்கிறார்.''

எனினும், இரண்டு அல்லது மூன்று வாரங்களுக்குப் பிறகு, அர்தமோனவினுடைய மகிழ்ச்சி திடீரெனக் குறைந் தது, ஏதோ சிந்தனையில் மூழ்கியவராகக் காணப்பட்டார். நதால்யா நிகீதாவிடம் கேட்டாள்:

''எதற்காக அப்பா கோபமாக இருக்கிறார்?''

''எனக்குத் தெரியாது. அவரைப் புரிந்து கொள்வது கஷ்டம்.''

அதே மாலையில், தேநீர் வேளையின் போது, அலெக்ஸி திடீரென்று, மிகவும் உரக்கத் தெளிவாகப் பேசினான்:

''அப்பா! என்னை இராணுவத்திற்குப் போக விடு.''

''என்-என்ன அது?'' இல்யா திக்கிப் பேசினார்.

''நான் இங்கே வசிக்கப் போவதில்லை...''

''வெளியே போங்கள்!'' அவர்கள் எல்லாருக்கும் அர்த்தமான உத்தரவிட்டார்; ஆனால் மற்றவர்களுடன் அலெக்ஸி கதவருகே சென்றவுடன், அவர் கத்தினார்:

''பொறு, அல்யோஷா!''

நீண்ட நேரத்திற்குப் பையனைப் பார்த்துக் கொண்டு நின்றார், அவரது கைகள் முதுகுப் பின்னால் இருந்தன, அவரது புருவங்கள் வளைந்திருந்தன. பிறகு அவர் சொன்னார்:

''எத்தகைய நம்பிக்கைகளை உன்னிடம் வைத்தேன்!''

''என்னால் இங்கே வாழவே முடியாது!''

''மோசடி! உன்னுடைய இடம் இங்கே இருக்கிறது. உன்னுடைய தாயார் உன்னை என்னிடம், எனக்காகத் தந்திருக்கிறாள். போ!''

அலெக்ஸி தயங்கியபடி எட்டு ஒன்று வைத்தான், ஆனால் அவனுடைய மாமா அவனை நிறுத்தினார், வலுவான கையை அவன் தோள் மீது வைத்தபடி:

''நான் உன்னிடம் மிகச் சுலபமாக இருந்து விட்டேன். என் அப்பாவாக இருந்தால் கைமுட்டியைப் பயன் படுத்தியிருப்பார். போ...''

பையனைப் பொறுத்திருக்கும் படி மீண்டும் ஒரு முறை அவர் அழைத்தார், கண்டிப்பாகக் கூறினார்:

''நீ பெரிய மனிதனாகப் போய்க் கொண்டிருக்கிறாய்—புரிந்ததா? மேற்கொண்டு புலம்பல் எதையும் என்னைக் கேட்கும் படி செய்யாதே...''

தனது தாடியை உருவியபடி, பூமியின் மீது விழுந்து கிடந்த பனி விழுந்த ஈரமான தரையைப் பார்த்தபடி சன்னலருகே தனிமையில் அவர் நீண்ட நேரம் நின்றார். நிலவறை போல வெளியே இருள் பரவத்தொடங்கியதும், அவர் நகரத்திற்குக் கிளம்பிச் சென்றார். பய்மகோவாவின் வெளிவாசல் ஏற்கெனவே பூட்டப்பட்டு விட்டது. அவர் சன்னலைத் தட்டினார், உல்யானா தானே வந்து அவரை உள்ளே விட்டாள். முகஞ்சுளித்தபடி அவள் கேட்டாள்:

''இது போன்ற நேரத்தில் இங்கே வந்து கொண்டு?''

பதிக்காமலும், தனது புறமேற் சட்டையைக் கழற்றாமலும், அவளைக் கடந்து விரைவாக அறைக்குள் சென்றார். தனது தொப்பியை மூலையில் எறிந்து விட்டு, ஒரு நாற்காலியின் மீது விழுந்தார், அவரது முழங்கைகள் மேசையின் மீதும், அவரது விரல்கள் தாடியிலும் இருக்க, அலெக்ஸியைப் பற்றி அவளிடம் கூறினார்.

''அவன் அந்நியன்—என் சகோதரி எசமானனால் ஏமாற்றப்பட்டாள். அவ்வாறு பிறந்தவன். அவன் குருதி சொல்கிறது.''

பலகணியின் கதவுகள் சரியாகப் பொருந்தி இருக்கின்றனவா என்பதைப் பார்த்தாள், மெழுகு வர்த்தியை ஊதி அணைத்தாள். மூலையில், தெய்வ பீடத்திற்குக் கீழே ஒரு வெள்ளித் தட்டின் மீது நீலநிற விளக்கு மெதுவாக ஒளி விட்டுக் கொண்டிருந்தது.

''அவனுக்கு ஒரு மனைவியைப் பாரு. அது அவனைக் கட்டிப் போட்டு வைக்கும்,'' என்றாள்.

''ஆமாம். அது தான் செய்தாக வேண்டும். ஆனால் அது மட்டுமே எல்லாமாகி விடாது. பியோத்தர்—அவனிடத்தில் எந்த ஆர்வமும் இல்லை. இது மகா மோசம்! ஆர்வமில்லாத ஒரு மனிதனால் உருவாக்கவோ, உடைக்கவோ முடியாது. தனக்காக இல்லாதது போல, அவன் இன்னமும் ஒரு பண்ணை அடிமை போல, தனது எசமானனுக்காக இன்னமும் வேலை செய்துவது போல இருக்கிறான். அவன் தனது சுதந்தரத்தை உணரவில்லை—புரிந்ததா? நிகீதா—அவனைப் பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? அவன் ஓர் ஊனன். தோட்டங்களையும் மலர்களையும் தவிர வேறு எதையும் அவன் நினைப்பதில்லை. அலெக்ஸியால் தான் வேலையில் முழு அளவில் ஈடுபட முடியும் என்று நினைத்தேன்...''

பய்மகோவா அவருக்குத் திரும்பவும் உறுதி கூற முயன்றாள்:

''நீ மிக சீக்கிரத்திலேயே கவலைப்பட்டு விடுகிறாய். பொறுமையாக இரு. சக்கரம் வேகமாகச் சுழலும் போது, அவர்களையும் அது உள்ளே இழுத்துக் கொள்ளும்.''

தெய்வ பீடத்து மூலையில் இருந்த விளக்கின் சுடரினின்றும் வந்த மேகம் போன்ற மங்கலான நீலநிற வெளிச்சத்தில், அறையின் சந்தடியற்ற சூழலில் அருகருகே அமர்ந்து

முனாக்கள் நள்ளிரவு வரையிலும் பேசிக் கொண்டிருந்தார் கள். தமது சொந்தப் பையன்களிடம் வியாபார ஆர்வமில் லாத புகாரிலிருந்து, அர்தமோனவ் நகரத்து ஆட்கள் பக் கம் திரும்பினார்:

''சிறிய இதயம் கொண்ட படைப்புகள்.''

''அவர்கள் உன்னை வெறுப்பதற்குக் காரணம் அதிர்ஷ் டம் உனக்குச் சாதகமாக இருப்பதுதான். நாங்கள், பெண் கள் அதை விரும்புகிறோம், ஆனால் ஒரு மனிதனுக்கு மற்றொரு மனிதனுடைய நல்லதிர்ஷ்டம் கண்ணெரிச்சல் போன்றது தானே.''

எப்படி வேதனை தணிப்பது, அமைதிப் படுத்துவது என் பது உல்யானா பய்மகோவாவிற்குத் தெரியும். ''என்னை வருத்தப்படுத்துகிற ஒரே விஷயம்—ஒரு குழந்தை,'' என்று அவள் சொன்ன போது அர்தமோனவ் முணுமுணுக்க மட் டுமே செய்தார்.

''மாஸ்கோவிலுள்ள வியாபாரம் கொதிக்கின்ற ஒரு பானை போல இருக்கிறது!'' என்று அவர் தொடர்ந்தார், எழுந்து கொண்டு, அவளைத் தழுவினார். ''ஓ, நீ மட்டும் ஓர் ஆணாக இருந்தால்...''

''போய்வா, என் அன்பரே. வணக்கம்!''

அவளை முத்தமிட்டுவிட்டு, புறப்பட்டார்.

...ஸரோவித்யம் விழாவின் போது நகரத்திலிருந்து அலெக்ஸியை, உணர்வு மயங்கும் அளவுக்கு அடிக்கப்பட்டு, அவனது துணிகள் கிழிக்கப்பட்ட நிலையில், ஒரு ஸ்லெட்ஜ் வண்டியில் யெர்தான்ஸ்கயா கொண்டு வந்தாள். அவனது தலை யெர்தான்ஸ்கயாவும் நிகீதாவும் காரமான வே ரையுடைய கிழங்குச் செடியையும், வோத்காவும் கொண்டு தேய்த்தார்கள், ஆனால் நீண்ட நேரமாக அவன் வேத னையால் முணகவே செய்தான், பேசவில்லை. ஒரு கொடிய விலங்கைப் போல அர்தமோனவ் அறைக்குள்ளாகப் பாய்ந் தார். தனது சட்டைக் கையைச் சுருட்டி மேலே ஏற்றுவ தும், திரும்ப இறக்கி விடுவதுமாகவும், தனது பற்களை நற நறவெனக் கடித்துக் கொண்டும் இருந்தார். அலெக்ஸிக்கு நினைவு வந்த போது, தனது முட்டியை அலைத்துக் கொண்டு அவர் கர்ஜித்தார்:

''யார் அது? சொல்லு!''

அதிகமான வேதனையோடும் கோபத்தோடும் வீங்கிப்

போன ஒரு கண்ணைத் திறந்தபடி, மூச்சு விட ஏங்கியபடி, குருதியைத் துப்பியபடி அலெக்ஸி இது மட்டுமே கூறினான்:

''என்னைத் தீர்த்து விடு...''

அச்சத்தால் நதால்யா உரக்கத் தேம்பினாள். அர்த மோனவ் கோபத்தோடு அவளைப் பார்த்துக் கூக்குரலிட் டார்:

''நிறுத்து! இங்கிருந்து வெளியே போ!''

அலெக்ஸி தனது தலையை இறுகப் பற்றியிருந்தான், அதைப் பிடுங்கி எறிய முயற்சிப்பது போல இருந்தது, முணங்கினான்.

பிறகு, தனது கைகளை நீட்டியபடி, பக்க வாட்டில் உருண்டான், அசையாது படுத்திருந்தான், குருதி படிந்த அவனுடைய வாய், மூச்சுக் காற்றுக்காக அகலத் திறந் திருந்தது. படுக்கைக்கு அருகே ஒரு மெழுகுவர்த்தி சிமிட்டிக் கொண்டிருந்தது, அவனது உருச்சிதைந்த உடலுக்கு மே லாக நிழல்கள் படிந்து, அது வீங்கியது போலவும், கருத் தது போலவும் காட்டிக் கொண்டிருந்தது. படுக்கையின் கால்மாட்டில் சகோதரர்கள் அமைதியாக, சோர்வுற்று நின் றார்கள். அதே வேளை தந்தை அறையில் நடை போட்டுக் கொண்டிருந்தார், ஏதோ கட்புலனாகாத நடுவரிடம் கோரு வது போலப் பேசினார்:

''அவன் தேறி வர மாட்டானோ?''

ஆனால் எட்டு நாட்களுக்குப் பிறகு அலெக்ஸி எழுந்து நின்றான், எனினும் இன்னமும் சளிப் பிடித் தது போல இருமினான், குருதி துப்பினான். குளியலறை யில் அவனாகவே நீராவிக் குளியல் செய்து கொண்டான், மிளகுத் தூள் கலந்த வோத்கா பருகினான். ஒரு கருமை யான சிடுசிடுப்புமிக்க நெருப்பு அவனது கண்களில் கிளர்ந் தெழுந்து, அவற்றை இன்னும் கவர்ச்சிமிக்க தாக்கியது. தன்னை யார் அடித்தது என்பதை அவன் கூற மறுத்தான், ஆனால் யெர்தான்ஸ்கயா கண்டு பிடித்து விட்டு அறிவித் தாள்: ஸ்தெபான் பார்ஸ்கி, இரண்டு தீயணைப்பு ஆட்கள் மற்றும் வரபோனவின் மார்த்வினியன் கொட்டில் பாது காவலன். இது அவ்வாறு தானா என்று அர்தமோனவ் அலெக்ஸியிடம் கேட்ட போது அவன் பதில் கூறினான்:

''எனக்குத் தெரியாது.''

''நீ பொய் சொல்கிறாய்!''

''நான் அவர்களைப் பார்க்கவில்லை. பின்னாலிருந்து

னின் தலைக்கு மேலாக ஏதோ ஒன்றை அவர்கள் வீசினார்கள் —அது ஒரு தடியாகத் தான் இருக்க வேண்டும்.''

''நீ எதையோ மறைத்துக் கொண்டிருக்கிறாய்,'' என்றார் அர்தமோனவ். அலெக்ஸி அவரை நேராகப் பார்த்தான், அவனது கண்களில் ஆரோக்கியமற்ற ஒளி தெரிந்தது.

''நான் நலமடைந்து கொண்டிருக்கிறேன்,'' என்றான்.

''நீ அதிகமாகச் சாப்பிட வேண்டும்!'' என்று அர்தமோனவ் அறிவுரை கூறினார், தனது தாடிக்குள்ளாக முணுமுணுத்தார்: ''அது போன்ற காரியத்திற்காக அவர்களது வீட்டிற்குத் தீ வைக்க வேண்டும்—அவர்களது உள்ளங்கைகளை எடுத்து வறுத்திருக்க வேண்டும்...''

அவர் அலெக்ஸி மீது மிகுந்த அக்கறை காட்டலானார், மிகவும் முரட்டுத்தனமான பாசம்; செய்து காட்டும் வலிமையோடு அவர் வேலை செய்தார், தனது நோக்கம் குறித்து எந்த ரகசியமும் வைத்துக் கொள்ளவில்லை: உழைப்பதற்கான தனது சொந்த விருப்பத்தால் பையன்களுக்கு ஆர்வமூட்டினார்.

''ஒவ்வொன்றின் மீதும் உங்கள் கையை வையுங்கள், எந்த ஒரு வேலையிலும் உங்கள் மூக்கைத் திணிக்காதீர்கள்!'' என்று அவர்களுக்கு வற்புறுத்தினார். மற்றவர்களுக்காக விடப்பட்டதை தானே அதிகம் செய்தார். தான் மேற்கொண்ட ஒவ்வொன்றிலும், அவர் புத்திசாலித்தனத்தைக் காட்டினார், அது அவருக்கு எங்கே எதிர்ப்பு வலுவாக இருக்கிறது என்பதையும், எவ்வளவு எளிமையாக அதை வெல்வது என்பதையும் சரியாகச் சொல்ல வைத்தது.

அவர் மருமகளது பிரசவம் காலத்தை இழுத்துக் கொண்டு சென்றது. இறுதியாக, இரண்டு நாள் வேதனைக்குப் பிறகு, நதால்யா பெண் மகவு பெற்றெடுத்த போது, அவர் பெரிதும் துயருற்றுப் போனார்:

''இதனால் என்ன பயன்?..''

''கடவுளின் கருணைக்காக அந்த நல்லவர்க்கு நன்றி கூறு,'' உல்யானா அவரிடம் கண்டிப்பாகக் கூறினாள். ''இது யாருடைய நாள் என்று உனக்குத் தெரியுமா? மென்சணல் நாரின் எலேனா நாள்.''*

---

* இந்த நாளில் பெண் குழந்தை பிறப்பது நல்ல அடையாளமாகக் கருதப் பட்டது. (ப-ர்.)

''அப்படியா?''

அவர் சர்ச் பஞ்சாங்கத்தை எடுத்து நாளைப் பார்த்தார், குழந்தை போல மகிழ்ச்சியுற்றார்:

''என்னை அவளிடம் கூட்டிப் போ!''

ஒரு ஜோடி மாணிக்கக் கல் பதித்த காது வளையங்களையும் ஐந்து தங்கக் கட்டிகளையும் நதால்யாவின் மார்பு மீது வைத்தபடி, அவர் கத்தினார்:

''இதை எடுத்துக்கொள்! பையன் இல்லாவிடிலும், நல்ல நாளில் குழந்தை பெற்றாய்!''

பியோத்தர் பக்கம் திரும்பிக் கேட்டார்:

''நல்லது, பழைய மீனே, உனக்கு மகிழ்ச்சி தானே? நீ பிறந்த போது நான் அப்படி மகிழ்ந்தேன்!''

குருதியில்லாமல், துயருற்று, அடையாளந் தெரியாதபடி போன தன் மனைவியின் முகத்தை புலன்களால் உணர்ந்தபடி பியோத்தர் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். எப்போதோ மறந்துவிட்ட ஆட்களையும், விஷயங்களையும் திரும்ப நினைவுக்குக் கொண்டு வருவது போன்று, அவளது துயருற்ற கண்கள் இருண்ட குழிக்குள்ளாகக் கிடந்தன. தனது கடிபட்ட உதடுகளுக்கு மேலாக அவள் மெதுவாக தனது நாக்கைத் துழாவினாள்.

''ஏன் அவள் எதுவுமே சொல்லாமல் இருக்கிறாள்?'' பியோத்தர் தனது மாமியாரைக் கேட்டான்.

''அவள் போதிய அளவுக்குக் கூச்சல் போட்டு விட்டாள்,'' என்றாள் உல்யானா. அறையை விட்டு அவனை வெளியே தள்ளினாள்.

இரண்டு பகல்களும் இரண்டு இரவுகளும் தன் மனைவியினுடைய கூச்சல்களை அவன் கேட்டான். முதலில் அவளுக்காக இரக்கங் கொண்டான், அவள் இறந்து விடுவாள் என்று அஞ்சினான். பின்னர், அவளது அழுகைகளாலும் வீட்டில் நிறைந்து நின்ற இரைச்சல்களாலும் பாதி மந்தமாகிப் போய், பயப்படவோ பரிதாபப்படவோ அவன் மிகவும் முடியாதவனாகிப் போனான். அவற்றைக் கேட்க முடியாத எங்கேனும் ஓரிடத்திற்குக் கூடியவரை போய் விட வேண்டும் என்று மட்டுமே அவன் முயன்றான். ஆனால் அழுகைகளினின்றும் தப்பிக்க முடியாமற் போனது, ஏனெனில் அவை அவனது மூளைக்குள்ளாகவே, மிகவும் வலிமையற்ற சிந்தனைகளை ஏற்படுத்தியபடி ஒலித்தன. எங்கெல்லாம் அவன் சென்றானோ அங்கு அவன், ஒரு

மண்வாரி அல்லது மண்வாரியுடன், வெட்டிக் கொண்டும், பிளந்து கொண்டும், குழி தோண்டிக் கொண்டும், ஓசை யற்ற துன்னெலி போல விரைந்து இங்குமங்கும் போய் வந்தபடி இருந்த நிகீதாவைச் சந்தித்தான்.

''அவள் தேறிவர மாட்டாள் என்பது போலவே காணப் படுகிறது,'' என்று பியோத்தர் தனது தம்பியிடம் கூறி னான். தனது மண்வாரியை மணலுக்குள்ளாகத் திணித்த படி, கூன் விழுந்தவன் கேட்டான்:

''தாதி என்ன சொல்கிறாள்?''

''கவலைப்பட வேண்டாம், எல்லாமே சரியாகிவிடும் என்கிறாள். எதற்காக இப்படி நடுங்குகிறாய்?''

''எனக்குப் பல்வலி இருக்கிறது.''

குழந்தை பிறந்த பிறகு அந்த மாலையில் புகுமுக மண்டபத்தில் நிகீதாவுடனும், தீஹனுடனும் உட்கார்ந்து கொண்டு, சிந்தனை வயப்பட்ட புன்முறுவலுடன் பியோத்தர் சொன்னான்:

''மாமியார் எனது கைகளில் குழந்தையை வைத்தாள், நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன், என்னால் கனத்தைக் கூட உணர முடியவில்லை. கிட்டத்தட்ட மேற் கூரை அள வுக்குக் குழந்தையைத் தூக்கிப் போட்டுப் பிடித்தேன். அது விநோதமானது, எத்தனை சிறிய பொருள், அது காரணமாகத்தான் எவ்வளவு துயரம்...''

தீஹன் வியாலவ், தியானத்தில் ஆழ்ந்தபடி தனது தாடி யைத் தடவிக் கொண்டவன், வழக்கமான தனது மெல்லிய குரலில் பேசினான்:

''எல்லா மனிதத் துயரங்களுமே சிறிய பொருள்களில் இருந்தே வருகின்றன.''

''இது எப்படி?'' என்று நிகீதா கண்டிப்புடன் கேட் டான். தீஹன், கொட்டாவி விட்டபடி, வித்தியாசமாகப் பதிலளித்தான்:

''விஷயங்கள் இந்த வழியில் தான் போகின்றன...''

இரவுச் சாப்பாட்டிற்காக அவர்கள் வீட்டிற்குள்ளாக அழைக்கப் பட்டார்கள்.

குழந்தை கனமாகவும், நலமாகவும் இருந்தது, ஆனால் கரிக்கட்டைக் காற்றினால் நஞ்சூட்டப்பட்டு ஐந்து மாதங் களுக்குப் பிறகு அது இறந்து விட்டது. தாக்குதலுக்கு ஆட்பட்ட தாயார், ஒரு வழியாகக் காப்பாற்றப் பட்டாள்.

''நல்லது, வேறு புகலில்லை!'' என்று அர்தமோனவ்

பியோத்தரிடம் கல்லறையில் கூறினார். ''அவள் வேறு பிள்ளைகள் பெற்றுத் தருவாள். இப்போது, இங்கே நமக்கென்று சொந்தக் கல்லறையை நாம் பெற்று விட்டோம். நங்கூரம் ஆழமாக இடப்படுள்ளது. மனிதன் தனக்குரியதைத் தன்னுடன் வைத்திருக்கும் போது, அவனுக்குரியது அவனுக்குக் கீழாக இருக்கிறது. அவனுடய சொந்தம் தரைக்கு மேலாகவும், அவனுடைய சொந்தம் தரைக்குக் கீழாகவும் இருக்கிறது—அது அவன் ஆழமாக வேரூன்றும் போது!''

பியோத்தர் தலையசைத்தான். தனது மனைவியை அவன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அலங்கோலமாகத் தலை குனிந்து நதால்யா நின்றாள், அவளது காலடியில் இருந்த சிறிய கேட்டின் மீது அவளது கண்கள் பதிந்திருந்தன, அதை நிகீதா ஒரு மண்வாரியால் கவனமாக ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தான். சிவந்து வீங்கிப் போயிருந்த மூக்கின் மீது தனது விரல்களை வைக்க அஞ்சியது போல, தனது கன்னங்களில் வழிந்த நீரை துடைத்தபடி, காய்ச்சல் உணர்வுடன் அவள் கிசுகிசுத்தாள்:

''ஓ கடவுளே, கடவுளே...''

சிலுவைகளுக்கிடையே அலெக்ஸி செதுக்கு எழுத்துகளைப் படித்தபடி கால்போனபடி போய்வந்தான். மெலிந்து போய், வயதானவனைப் போலக் காணப்பட்டான். கன்னங்களிலும் மோவாயிலும் கருத்த மயிர் வளரத் தொடங்கியிருந்தது. கொப்புளித்தது போலவும், புகைக் கரி போலவும் மகிழ்ச்சியற்ற தோற்றத்தை ஏற்படுத்தி இருந்தது. அவனது துடுக்குத்தனமான கண்கள், உலகம் முழுவதையும் வெறுப்போடு பார்ப்பது போல, கருத்த புருவங்களுக்குக் கீழே ஆழத்தில் புதைந்து காணப்பட்டது. அவன் சோர்வாகவும், குறும்புத்தனமாகவும் பேசினான். அதிலே தெளிவாகவே விளக்கமற்ற தன்மை காணப்பட்டது. அதனை மக்கள் புரிந்து கொள்ள முடியாத போது, சீச்சிடுவது போல அவர்களைத் திட்டினான்:

''என்ன நான் கூறுவதைக் கேட்கவில்லையா?''

தனது சகோதர்களிடம் அவனது போக்கில் ஒருவித மகிழ்ச்சியற்ற, நையாண்டித்தன்மை காணப்பட்டது. ஒரு வேலைக்காரி போல நதால்யாவிடம் கத்தினான். பழி சொல்வது போல நிகீதா கூறிய போது, ''நீ நதாஷாவிடம் இவ்வளவு மட்டமாக இருக்கக் கூடாது,'' என்று அவன் திரும்பக் கூறினான்:

''நான் ஒரு நோயாளி.''

''அவள் அமைதியுடனிருப்பவள்.''

''நல்லது. அவள் தனது அமைதியைக் காப்பாற்றிக் கொள்ளட்டும்.''

தனது உடல் நலக்குறைவு குறித்து அலெக்ஸி அடிக்கடி பேசினான், ஏதோ சிறப்பு தன்னை மற்ற சாதாரண மக்களிடமிருந்து பிரிப்பது போல, பெரும்பாலும் எப்போதுமே பெருமையோடு கூறினான்.

தனது மாமாவுடன் கல்லறையினின்றும் வீடு நோக்கிச் செல்கையில், அவன் கூறினான்:

''நமக்கொன்று சொந்தக் கல்லறையை நாம் பெற்றாக வேண்டும். இந்தக் கூட்டத்தோடு இருப்பது அவமரியாதை, நாம் சாகின்ற போது கூடத் தான்.''

சிறிது சிரித்தபடி அர்தமோனவ் பதிலளித்தார்:

''நாம் பெறுவோம். நமக்கென்று சொந்தமாக ஒவ்வொன்றும்—சர்ச், கல்லறை, பள்ளிக்கூடம் மற்றும் மருத்துவமனை. எனக்குக் கொஞ்சம் நேரம் கொடு!''

வதராக்ஷா ஆற்றுப் பாலத்தைக் கடந்து கொண்டிருந்த போது, அருவருப்பான தோற்றமும், புகை படிந்த நிறமுங் கொண்ட பிச்சைக்காரனைப் போன்ற ஒரு மனிதன் கைப்பிடியில் சாய்ந்தபடி நிற்பதைக் கடந்து சென்றனர். குடியால் நாசமடைந்து போன ஒரு குட்டி அதிகாரி போல அவன் காணப்பட்டான். அவனது தொங்கிய கன்னங்களில் புதற்கட்டை போல மயிர் வளர்ந்திருந்தது. பற்களின் கருப்பான அடிப்பகுதியை முணுமுணுத்த உதடுகள் வெளிப்படுத்தின. மங்கிய ஒளி அவனது கண்களில் பளிச்சிட்டது. அர்தமோனவ் தனது முகத்தை மறு பக்கம் திருப்பியபடித் துப்பினார். எனினும், அலெக்ஸி இந்த இழிவான மனிதனைப் பார்த்து அசாதாரண அன்போடு தலையசைப்பதைக் கவனித்து கேட்டார்:

''யார் அது?''

''அவன் ஓர்லோவ், கடிகாரம் தயாரிப்பவன்.''

''அது ஓர்லோவ்* என்பதை என்னால் கூடப் பார்க்க முடிந்தது!''

''தலையோடு கூடிய ஒரு மனிதன். அவன் அடக்கு

---

* ஓர்லோவ்—கழுகு என்று ருஷ்யனில் பொருள்படும். (ப-ர்.)

முறைக்கு ஆளாகி இருக்கிறான்...'' அலெக்ஸி வற்புறுத்திச் சொன்னான்.

அர்தமோனவ் தனது மருமகனைக் கூர்ந்து கவனித்தார், ஆனால் எதுவும் சொல்லவில்லை.

கோடைக்காலம் வந்தது, வெப்பமாகவும், வறட்சியாகவும் இருந்தது. ஓகா நதிக்கு அப்பால் காட்டுத் தீ அடிக்கடி ஏற்பட்டது. பகலில், உறைப்பான புகையின் நிறமாறும் மேகத்தால் பூமியானது நிழல் படிந்து காணப்பட்டது; இரவில், முழுமையான நிலவு அருவருப்பான சிவப்பாக மாறி, செம்பாலான ஆணிகளின் கொண்டை போன்ற பிரகாச மற்ற நட்சத்திரங்களுக்கு மத்தியிலே தொங்கியது, மங்கலான வானத்தைப் பிரதிபலித்தது. நிலத்திற்குக் கீழாக புகை மண்டிய பசை போல ஓடை சில்லிட்டு ஓடியது.

இரவுச் சாப்பாட்டிற்குப் பிறகு, புழுக்கமான மாலையில், பழத் தோட்டத்தில், மேப்பிள் மரங்களுக்குக் கீழாகத் தேநீருக்காக அர்தமோனவ்கள் அமர்ந்திருந்தனர். மரங்கள் நன்றாக வளர்ந்திருந்தன, ஆனால் அவற்றின் இலை முடிகளால் புகையார்ந்த மாலையில் நிழல் கொடுக்க முடியவில்லை. சில் வண்டுகள் கிறீச்சொலி எழுப்பிக் கொண்டும், வண்டுகள் இரைச்சலிட்டுக் கொண்டும் இருந்தன. சமோவார் ஓசையிட்டது.

நதால்யா அமைதியாகத் தேநீர் ஊற்றினாள். தனது சட்டையின் மேற் பொத்தானை அவள் கழற்றி விட்டிருந்தாள். அந்தத் திறவையில் அவளது தோல், வெதுவெதுப்பாகப் பாலேடு போன்று காணப்பட்டது. தலை தாழ்த்தியபடி அமர்ந்து, பறவைக் கூண்டுக்கான குச்சிகளை கூனன் துண்டு துண்டாக நறுக்கிக் கொண்டிருந்தான். அவனது காது மடலை இழுத்தபடி பியோத்தர் தாழ்ந்த குரலில் பேசினான்:

''மக்களை ஆர்வங் கொள்ளச் செய்வது எந்த நன்மையும் செய்யாது, எல்லா நேரமும் அப்பா அதைச் செய்கிறார்.''

எதிர்பார்ப்பது போல நகரத்துப் பக்கமாகத் தனது தலையைத் திருப்பிக் கொண்டு அலெக்ஸி வறட்டுத்தனமாக இருமிக் கொண்டிருந்தான்.

நகரத்தில் துயரார்ந்த முறையில் ஒரு மணி ஒலித்தது.

''எச்சரிக்கை? தீ?'' என்று அலெக்ஸி இரைந்தான்,

ஃபுள்ளி எழுந்தான், ஒரு கையைத் தன் தலைக்குத் தூக்கி னான்.

''உனக்கு என்ன கோளாறு? அது சர்ச் மணி, நேரத் திற்காக அடிக்கிறது.''

அலெக்ஸி மேசையை விட்டு அகன்றான். அமைதி நிலவி யது, பிறகு நிகீதா மெதுவாகக் குறிப்பிட்டான்:

''அவனுடைய மூளையில் அவன் நெருப்பை வைத்திருக் கிறான்.''

''அவனுக்கு அடிக்கடி கோபம் வருகிறது. அவன் எவ் வளவு மகிழ்ச்சியாக இருப்பதுண்டு என்பதை எண்ணும் போது...'' என்று நதால்யா நம்பிக்கையற்றுச் சொன் னாள்.

மூத்தவன் என்ற முறையில் பியோத்தர் தன் மனைவி யிடமும், தம்பியிடமும் கண்டிப்பாகப் பேசினான்:

''நீங்கள் இரண்டு பேருமே அவனைக் கயவன் போலப் பார்க்கிறீர்கள். இரக்கப்பட வேண்டும் என்பதற்காக அவ னால் நின்று கொண்டிருக்க முடியாது. நாம் தூங்கப் போக லாம், நதால்யா.''

அவர்கள் கிளம்பினார்கள். கூனன் தனது கண்களால் அவர்களைப் பின்தொடர்ந்தான். பிறகு, அவனுங் கூட எழுந்து, கோடை இல்லத்திற்குச் சென்றான். அங்கே உலர்புல் படுக்கை ஒன்றைத் தயாரித்து வைத்திருந்தான். நுழைவாயிலில் அவன் அமர்ந்தான். கோடை இல்லமா னது புல் மூடிய மேட்டின் மீது நின்றது. கதவு வழியாக வேலியைத் தாண்டி வெளியே பார்க்கின்ற போது, நகரத் தின் வீடுகளையும், கருத்த மந்தையினையும், சர்ச் தூபி களையும், தீயணைப்பு ஆட்களின் கண்காணிப்பு கோபுரங் களையும் காண முடிந்தது. மேப்பிள்களுக்குக் கீழே வேலைக் காரர்கள் தேநீர் மேசையைத் துப்புரவு செய்து கொண் டிருந்த இடத்தில் குவளைகள் கணகணவென ஒலி எழுப் பின. நெசவாளிகளில் சிலர் வேலி வழியாகச் சென்றனர். ஒருவன் இழுவலை ஒன்றை தூக்கிச் சென்றான், மற் றொருவன் வாளியைத் தட்டிக் கொண்டு சென்றான். சிக்கி முக்கிக் கல்லையும், இரும்பையும் தட்டி தீப்பொறி யுற்படுத்தி அதினின்றும், தனது சுங்கானைப் பற்ற வைக்க நெருப்புப் பெற முயன்றபடி மூன்றாவது நபர் சென்றான். ஒரு நாய் உறுமியது. தீஹன் வியாலவினுடைய சாந்தமான குரல் அமைதியான இருளின் வழியாக ஒலித்தது:

''யார் போவது?''

சந்தடியின்மை பூமியில் பரவியது, முரசுத் தோல் போல விறைப்பானதாக இருந்தது. மணலில் மெதுவாக ஓசை எழுப்பிச் சென்ற நெசவாளிகளது காலடிகள் கூட, துயரத்தோடு தெளிவாகப் பிரதிபலித்தது. இத்தகைய இரவுகளின் அமைதியான தன்மையை நிகீதா நேசித்தான். சந்தடியின்மை அதிகமானது, நதால்யாவை மையமிட்ட அவனது கற்பனையின் ஆழத்தை அதிகம் கூட்டியது. எப் போதுமே சிறிது நடுக்கத்துடனோ, வியப்புடனோ இருந்த அவளது அன்பான கண்களை மிகத் தெளிவாக அவனால் நினைத்துப் பார்க்க முடிந்தது. எல்லாவிதமான இன்ப நிகழ்வுகளையும் நினைத்துப் பார்ப்பது சுலபமாக இருந் தது: ஒருவேளை, பியோத்தரிடம் ஒப்படைக்க அவன் ஓர் அரிய செல்வத்தைக் கண்டு பிடிக்கலாம், பியோத்தர் அவ னிடம் நதால்யாவை ஒப்படைக்கலாம். அல்லது ஒருவேளை கொள்ளையர்கள் தாக்கலாம், இவன் வீரச் செயல்கள் புரி யலாம், அவன் செய்ததைப் பாராட்டிப் பரிசாக, அவனது தந்தையும், சகோதரனும் தங்களது சொந்த விருப்பத்தின் பேரில் நதால்யாவை அவனிடம் ஒப்படைக்கலாம். அல் லது நோய் வரலாம், இருவரைத் தவிர—அவனையும் நதால்யாவையும் தவிர—குடும்பத்திலுள்ள அனைவரை யும் அது கொண்டு போகலாம்; பிறகு அவளுடைய மகிழ்ச்சி அவனிடம் தான் இருக்கிறது என்பதை அவள் காணுமாறு அவன் செய்வான்.

நடு இரவில், நகரத்தின் வீடுகளின் தொகுதிகளுக்கு மேலாக, பழமரங்களின் அசைவற்ற நிழல்களிலிருந்து ஒரு புதிய மேகம் எழுவதை அவன் பார்த்த போது, வானத்தின் கருமையான இருளை நோக்கி அது மெதுவாக உயர்ந்து கொண்டிருந்தது. கண நேரத்திற்குப் பிறகு, கீழிலிருந்து அது செந்நிறமாக மாறியது, அது ஒரு தீ என்பதைக் காட்டு கிறது என அவன் உணர்ந்தான். வீட்டை நோக்கி ஓடிய போது, பண்ட சாலைக் கூரையின் மீது ஓர் ஏணி மீது அலெக்ஸி தாறுமாறாக ஏறிக் கொண்டிருப்பதைப் பார்த் தான்.

''தீ!'' நிகீதா கத்தினான். அவனது மைத்துனன் ஏணி யில் ஏறியபடி பதிலளித்தான்:

''எனக்குத் தெரியும். அதனாலென்ன?''

''ஏன், நீ இதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாயா,''

என்று கூனன் திடீரென்று கூறினான், முற்றத்தின் நடுவழியில் நின்றபடி.

''ஆம், இதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு என்ன? இது போன்ற வறண்ட காலநிலையில் எப்போதுமே தீ ஏற்படத்தான் செய்கிறது.''

''நாம் நெசவாளிகளை அழைக்க வேண்டும்...''

ஆனால் தீஹன் அவர்களை ஏற்கெனவே அழைத்து விட்டிருந்தான், உரக்கக் கத்தியபடி அவர்கள் நதியை நோக்கி ஓடிவந்து கொண்டிருந்தார்கள்.

இப்போது கூரையின் விளிம்பில் இருமருங்கும் ஒவ்வொரு கால் வைத்தபடி அமர்ந்திருந்த அலெக்ஸி ''இங்கு ஏறு'' என்றான். கூனன் கீழ்ப்படிந்தபடி மேலே ஏறினான், முணுமுணுத்தபடி:

''நதால்யா பீதியடைய மாட்டாள் என்று நம்புகிறேன்.''

''பியோத்தர் நையப் புடைத்து உன் முதுகில் மற்றொரு கூனை ஏற்படுத்துவான் என்று நீ கலக்கமடையவில்லையா?''

''ஏன் அவன் செய்வான்?'' என்று மென்மையாகக் கேட்டான் நிகீதா. பதில் கிடைத்தது:

''அவன் மனைவியிடமிருந்து உன் பார்வையைத் திருப்பு.''

நீண்ட நேரத்திற்குக் கூனனால் பதில் பேச முடியவில்லை. கூரையிலிருந்து நழுவி விழுந்து கொண்டிருப்பது போல உணர்ந்தான். அடுத்த கணத்தில் தரையில் விழுந்து மோதிக் கொள்வது போலத் தோன்றியது.

''என்ன சொல்கிறாய்? பேசுவதற்கு முன்னால் நீ சிந்தித்துப் பார்க்க வேண்டும்,'' என்று முணுமுணுத்தான்.

''சரி, சரி! நான் குருடனல்ல... கவலைப் படாதே,'' என்றான் அலெக்ஸி, நீண்ட காலமாக அவன் இவ்வளவு மகிழ்ச்சியாகப் பேசியதில்லை. தனது கையால் தனது கண்ணுக்கு நிழல் ஏற்படுத்திக் கொண்டு, அமைதியைக் குலைத்து உள்ளடக்கிய குமுறலாக மாறிக் கொண்டிருந்த அனைத்து ஊசலாடிய தீச் சுவாலையைக் கவனித்தான்.

''அது பார்ஸ்கியினுடையது. அவர்களது முற்றத்திலே ஏராளமான தார் பீப்பாய்கள் வைத்திருந்தார்கள். பக்கத்து இடங்களுக்கு நெருப்புப் பரவாது—பழமரங்கள் அதைத் தடுத்து விடும்,'' என்று அவன் ஆர்வத்தோடு கூறினான்.

இருளைக் கிழித்து வந்த நெருப்பைப் பார்த்தபடி

''நான் ஓடி விட வேண்டும்'' என்று நிகீதா நினைத்துக் கொண்டிருந்தான். செந்நிறக் காற்றில் மரங்கள் நின்றன, அது இரும்பில் காய்ச்சி அடித்து உருவாக்கியது போலக் காணப்பட்டன; சிவந்து காணப்பட்ட தரையில் பொம்மைகள் போன்ற மனித உருவங்கள் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தன. நீண்ட மெல்லிய தொறட்டிகளை அவர்கள் திணிப்பதைக் கூட அவனால் காண முடிந்தது.

ஏற்றுக் கொள்ளும் முறையில் ''அது அருமையாக எரிந்து கொண்டிருக்கிறது,'' என்றான் அலெக்ஸி.

''நான் ஒரு துறவி மடத்திற்குச் செல்வேன்,'' என்று கூனன் நினைத்தான்.

பியோத்தரினுடைய குரல் முணுமுணுத்தபடி முற்றத்திலிருந்து அவர்களுக்குக் கேட்டது, பிறகு தீஹன் வியாலவினுடைய சுணக்கமான பதில். ஒரு சட்டத்தில் இருக்கும் உருவப்படம் போல, தானாகவே சிலுவைக் குறி போட்டுக் கொண்டு, நதால்யா சன்னலில் நின்றாள்.

புகைப் போக்கிகளின் நீண்ட வரிசைகளைச் சுற்றி பொன்னிறமான தகிக்கின்ற கங்குகள் தவிர நெருப்புக்கு எதுவுமே மிஞ்சாமல் போகும் வரை நிகீதா கூரை மீது உட்கார்ந்திருந்தான். பிறகு கீழே இறங்கினான், படலையைத் தாண்டி வெளியே புறப்பட்டான், ஆனால் தனது தந்தை மீது மோதிக் கொண்டான்—ஈரமாக நனைந்து போய், புகைக் கரியால் பூசப்பட்டு, தனது தொப்பி இல்லாமலும், அவரது புறமேற்சட்டை கந்தலாகியும் காணப்பட்டார்.

நிகீதாவை படலைக்குள்ளாகத் தள்ளியபடி, அசாதாரணமான கோபத்தோடு ''எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?'' என்று அர்தமோனவ் கூச்சல் போட்டார். அலெக்ஸியின் வெண்ணிற உருவம் கூரையின் மீது இருப்பதைப் பார்த்தபடி, இன்னும் நாகரிகமற்ற முறையில் கத்தினார்:

''அங்கே நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? கீழே இறங்கு! உன்னையே நீ கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும், முட்டாள்...''

நிகீதா பழத் தோட்டத்திற்குள் சென்றான், தனது தந்தையினுடைய சன்னலுக்குக் கீழே பெஞ்சின் மீது உட்கார்ந்தான். சீக்கிரமே கதவு அடிபடும் ஓசை கேட்டான், அவனுக்கு மேலாக அறையில் அர்தமோனவினுடைய குரல், தணிவான முறையில் ஒலித்தது:

''உன்னை நீயே பாழாக்கிக் கொள்ளப் போகிறாயா? என் குலைக்கு அவமானத்தைக் கொண்டு வரப் போகிறாயா? நான் உனக்குக் காட்டுகிறேன்...''

அலெக்ஸி கிரீச்சிட்டபடி திரும்பச் சொன்னான்:

''நீயாகத் தானே இந்த யோசனையை எனக்குத் தந்தாய்.''

''நிறுத்து! அந்தப் போக்கிரியால் பேச முடியாது என்பதற்காக நீ கடவுளுக்கு நன்றி சொல்வது நல்லது...''

நிகீதா எழுந்தான், மெதுவாக ஆனால் பதட்டத்தோடு, பழத் தோட்டத்தின் வழியாகக் கோடை இல்லத்திற்குப் பின்வாங்கிச் சென்றான்.

மறுநாள் காலையில், தேநீர் வேளையில், அப்பா சொன்னார்:

''அது எரியூட்டப்பட்டது. அந்தக் குடிகாரன், கடிகாரம் பழுதுபார்ப்பவன் தான் அதைச் செய்தான். அவனை அவர்கள் உதைத்தார்கள், அவன் செத்து விடுவான் போலத் தோன்றுகிறது. பார்ஸ்கி அவனைப் பாழாக்கி விட்டான் என்று மக்கள் பேசுகிறார்கள், அவன் ஸ்தெபானுக்கு எதிராக வெறுப்பு காழ்ப்புக் கொண்டிருந்திருக்கிறான். அது இருட்டு விவகாரம்.''

பாலைக் குடித்தபடி அலெக்ஸி அமைதியாக உட்கார்ந்திருந்தான். நிகீதாவினுடைய கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன. தனது முழங்கால்களுக்கு இடையே அவற்றைத் திணித்து பலமாக அழுத்தினான். அவனது செயலைக் கவனித்த அப்பா கேட்டார்:

''உனக்கு என்ன கோளாறு?''

''உடம்புக்குச் சரியில்லாதது போல உணர்கிறேன்.''

''நீங்கள் எல்லாருமே சரியில்லாதது போலத் தான் இருக்கிறீர்கள். நான் ஒருவன் மட்டுமே நன்றாக இருக்கிறேன்...''

குடித்து முடிக்காத தனது தேநீரை கோபமாக ஒதுக்கித் தள்ளிவிட்டு, மேசையை விட்டு அவர் அகன்றார்.

அர்தமோனவினுடைய தொழில் விரைவாக மக்களைச் சேர்த்துக் கொண்டிருந்தது. ஆலையினின்றும் இரண்டு வெர்ஸ்ட்[*] தொலைவிற்கு, குட்டைப் புதர்ச் செடிகள் நிறைந்த குன்றுகளின் பக்கங்களில், பரவலாக நின்ற ஊசி

[*] வெர்ஸ்ட்—3500 அடி நீளமுள்ள பழைய ருஷ்ய அளவை முறை. (மொ-ர்.)

யிலை மரங்களுக்கு மத்தியில், தாழ்வான குடிசைகள் இருந்தன; எவ்வித வெளி முற்றங்களோ, அடைப்புகளோ இல்லாமல் கட்டப்பட்டிருந்த அவை தொலைவிலிருந்து ஏதோ தேனீக்கூடுகளைப் போலக் காட்சியளித்தன. ஆழமற்ற, நீர் அரித்தோடிய மலை இடுக்கிற்கு அருகே, ஒரு காலத்தில் நதிப்படுகை ஒன்று இருந்தது, இப்போது அதன் பெயர் மறந்துபோய் விட்டிருந்தது. குடும்பங்களே இல்லாத தொழிலாளர்களுக்காக அர்தமோனவ் குடியிருப்பு ஒன்று கட்டினார். இது ஒரு நீளமான கட்டிடம், ஒரு பக்கக் கூரையையும், மூன்று புகைப்போக்கிகளையும், வெதுவெதுப்புப் போய் விடக் கூடாது என்னும் முறையில் அமைக்கப்பட்ட சிறிய சன்னல்களையும் கொண்டிருந்தது. அந்தச் சன்னல்கள் அதை ஒரு குதிரைலாயம் போலக் காட்டின. தொழிலாளர்கள் அதை ''பொலி குதிரைகளின் மாளிகை'' என்று அழைத்தனர்.

இல்யா அர்தமோனவ் அதிகமாக இரைச்சல் போடுபவராகவும், பெருமை பேசிக் கொள்பவராகவும் மாறினார்; செல்வத்தோடு வரக்கூடிய அகம் பாவத்தை அவர் வரவழைத்துக் கொள்ளவில்லை. தொழிலாளர்களோடு சுமுகமாகப் பழகினார்—அவர்களது திருமண விழாக்களிலே விருந்துண்டார், அவர்களது குழந்தைகளுக்கு ஞானத் தந்தையாகச் செயல்பட்டார், விடுமுறை நாளின் போது அவர்களுக்கிடையே அமர்ந்து, வயதான நெசவாளிகளுடன் பேசிக் கொண்டிருப்பதை விரும்பினார். வளமிழந்த நிலத்திலும், காட்டுத் தீ ஏற்பட்ட இடங்களிலும் சணல் பயிரிடுகின்ற முறைகளை அவர்கள் அவருக்குச் சொன்னார்கள். முடிவுகள் அருமையானதாக இருந்தன. எசமானரைப் புகழ்ந்து வயதான நெசவாளிகள் பாடினார்கள், அதிர்ஷ்டம் வாய்க்கப் பெற்ற ஒரு விவசாயியாக அவரைப் பார்த்தார்கள்; இளைஞர்களை அவர்கள் நயமாகக் கண்டித்தார்கள்:

''வியாபாரம் எப்படிச் செய்யப்படுகிறது என்பதை அவரிடமிருந்து கற்றுக் கொள்ளுங்கள்!''

தனது பங்கிற்கு, இல்யா அர்தமோனவ் தனது பையன்களிடம் கூறினார்:

''விவசாயிகள், உழைக்கிற மக்கள், நகரத்து மக்களை விட அதிக அறிவு வாய்க்கப் பெற்றவர்கள். நகரத்திலுள்ள மக்கள் எலும்பாக மெலிந்து இருக்கிறார்கள், அவர்களது மூளைகள் உருச்சிதைந்து போனவை. ஒரு நகரவாசி பேரா

..ரக்காரன், ஆனால் துணிவு கொள்வதற்குப் பயப்படுகி றான். அவனது வினைத் திட்டம் ஆழமற்றது, அவன் செய் ..து கடைசிவரை நில்லாது. எதையும் எப்படி அளப்ப தென்று நகர மக்களுக்குத் தெரியாது. விவசாயி, உள்ளுக் குள்ளாக உண்மையின் வரையறையைக் கொண்டிருக்கி றான், ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் பாயமாட்டான். உண்மை என்பது அவனுக்கு எளிமையானது: எடுத்துக் காட்டாக கடவுள், தானியம் மற்றும் ஜார். விவசாயி எளி மையானவன். அவனைப் பற்றிக் கொள். நீ, பியோத்தர், தொழிலாளர்களிடம் கடுமையாக இருக்கிறாய். தொழிலைத் தவிர வேறு எதையுமே நீ பேசுகிறாய் இல்லை. இது நல்ல தல்ல. சிறிய அளவிலேனும் நீ பேச வேண்டும், கேலிகள், மகிழ்ச்சியான உரையாடல் இலகுவில் புரிந்து கொள்ளவைக் கும்.''

''எனக்குக் கேலிப் பேச்செல்லாம் வராது,'' என்று எந் திரகதியில் பியோத்தர் கூறியபடி வழக்கம் போல தனது காதை இழுத்துவிட்டுக் கொண்டான்.

''அதில் சிறப்பாக இருக்கக் கற்றுக் கொள். ஒரு நிமிட வேடிக்கை—ஒரு மணி நேரக் களைப்பைப் போக்கும். ஆட் களிடத்தில் எந்த வகையிலும் அலெக்ஸி சரியில்லை. மிக அதிகமாக அவன் கத்துகிறான், ஒவ்வொரு அற்பத்தையும் பெரிது படுத்துகிறான்.''

''அவர்கள் மோசடிக்காரர்கள், சோம்பேறிகள்,'' அலெக்ஸி வேகத்தோடு திரும்பச் சொன்னான்.

அர்தமோனவ் அவனைக் கடுமையாகக் கண்டனம் செய் தார்:

''அவர்களைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?'' ஆனால் அவர் தனது தாடிக்குள்ளாகச் சிரித்தார். அதைக் கண்டு கொள்ளக் கூடாது என்பதற்காக தனது கையால் முறு வலிப்பை மறைத்துக் கொண்டார். கல்லறை விஷயமாக நடந்து ஆட்களிடம் எவ்வளவு துணிச்சலாகவும், புத்தி சாலித்தனமாகவும் அலெக்ஸி நடந்து கொண்டான் என் பதை நினைவு கூர்ந்தார். திரியோமவ் வாசிகள், ஆலை யால் ஈர்க்கப்பட்ட ஆட்கள், அவர்களுடைய கல்லறையில் புதைக்கப்படுவதைத் தடுத்து விட்டார்கள்; கடைசியில் பம் பாயெவிடமிருந்து ஒரு பெரிய பூர்ச்ச மரத் தோப்பை விலைக்கு வாங்கி, தனது சொந்தக் கல்லறைக்குச் சுத்தம் செய்து கொள்ள வேண்டி ஏற்பட்டது.

''ஒரு கல்லறை,'' என்று தானும் நிகீதாவும் மெலிந்து நோய்வாய்ப்பட்ட ஆல்டர் மரங்களை வெட்டிச் சாய்த்த போது தீஹன் வியாலவ் ஆழ்ந்து சிந்தித்தான். ''நாம் தவறான வார்த்தையைத் தவறான இடத்தில் பயன்படுத்துகிறோம். இதை நாம் முற்றம் என்று அழைக்கிறோம், இது தான் நம்முடைய அனைத்துப் பேரூழி காலத்திற்குமான வீடு. வீடுகள் மற்றும் நகரங்கள்—இத்தகைய முற்றங்களின் வழியாகத் தான் நாம் நிலைபேறுடைமைக்குச் செல்கிறோம்.''

அவனது தெளிவற்ற நிலைமைக்கும், வழக்கமான எதிர்பாராத அறிவிப்புகளுக்கும் மாறாக, சுலபமான திறமையோடு, தனது உழைப்பில் பெரும் தர்க்கத்தை வெளிக்காட்டியபடி, வியாலவ் வேலை செய்ததை நிகீதா கண்டுபிடித்திருந்தான். அர்தமோனவ் போல, எந்தப் பணியிலும் குறைந்தளவு எதிர்ப்பையும் அவன் உடனடியாகக் கண்டு பிடித்து விடுவான். கைத்திறனாலும், திறமையாலும் தனது வலிமையை ஒழுங்கு படுத்திக் காரியத்தை முடிப்பான். ஆனால் தெளிவாகத் தெரிந்த வித்தியாசம் ஒன்று இருந்தது: அர்தமோனவ் ஒவ்வொரு செயலையும் விருப்பார்வத்தோடு செய்வார், அதே வேளை வியாலவ் தயக்கத்தோடு செய்தது போலக் காணப்பட்டது. அன்பு காரணமாக—காரியங்களைத் திறமையாகச் செயலாற்றுவதை அறிந்த ஒரு மனிதனைப் போலக் காணப்பட்டது. பேச்சில் கூட அவனது முறை அது போலவே இருந்தது: நறுக்குத் தெறித்தாற் போல, சுருக்கமாக, குறிப்பிடும்படியாக வழமையான வித்தியாசத்துடன், சுட்டிக் காட்டுவது போல இருக்கும்:

''இத்துடன் எனக்கு இன்னும் ஏராளம் தெரியும். நான் பாதி கூடச் சொல்லவில்லை.''

மேலும், இந்த மனிதன் மீது ஒருவித மனக்கசப்பான உணர்வையும், அச்சத்தையும், அதே வேளை ஆழமான, மன உலைவுமிக்க ஆர்வத்தையும் ஏற்படுத்தியபடி, அவனுடைய ஒவ்வொரு வார்த்தையும் வெறுமையான குறிப்புகளைக் கொண்டது போல அவனுக்குப் பட்டது.

''உனக்கு ஏராளம் தெரியும்,'' என்று அவன் வியாலவிடம் கூறினான். முற்றப் பாதுகாப்பாளன் அமைதியாக பதிலளித்தான்:

''அதற்காகத்தான் நான் வாழ்கிறேன். நான் அறிந்

இருப்பது துரதிர்ஷ்டமானது இல்லை, ஏனெனில் எனக்காக நான் அறிந்திருக்கிறேன். என்னவெல்லாம் நான் அறிந் திருக்கிறேனோ அது ஒரு கருமியினுடைய சேமக் காப்புப் பேழையில் வைத்துப் பூட்டப்பட்டது போல இருக்கிறது. அதை எவரும் பார்க்க முடியாது. அது பற்றி நீ சுலபமாக மறந்துக் கொள்ளலாம்...''

மற்றவர்களுடைய எண்ணங்களைப் பற்றி அவர்க ளிடம் தீஹன் ஒருபோதும் கேள்வி கேட்டதில்லை. அவன் வெறுமனே ஒரு மனிதனைத் தொடர்ச்சியாக உற்றுப் பார்ப்பான், அவனது பறவைக் கண்கள் சிமிட்டிக் கொண் டிருக்கும், பிறகு, மற்றவர்களுடைய சிந்தனைகளை இவன் கடன்வாங்கிக் கொண்டது போல, இவன் ஒருபோதும் அறிந் திருக்க முடியாது என்ற விஷயங்களைத் திடீரென்று பேசு வான். தனது விரலைத் தான் துண்டித்துக் கொண்டது போல, வியாலவ் தன்னுடைய நாக்கைக் கடித்துக் கொள் வான் அல்லது துண்டித்துக் கொள்வான் என்று நிகீதா சில வேளைகளில் விரும்புவான். அவன் குளறுபடி செய்திருந் தாலுங் கூட, வலது கைக்கு பதிலாக இடது கை மோதிர விரலை வெட்டிக் கொண்டு விட்டான். அர்தமோனவ், பியோத்தர் மற்ற எஞ்சியவர்களும் வியாலவை மதிகெட் டவன் என்று நினைத்தார்கள்; ஆனால் நிகீதா அவனைப் பற்றி அது போல நினைக்கவில்லை. இந்த விநோதமான, சோர்ந்த கன்னெலும்புகள் கொண்ட மனிதன் பால் ஆர்வ மும் அச்சமும் கலந்த ஒருவித உணர்வு மெதுவாக வளர்ந்து வந்தது. ஒரு நாள் அவனும் நிகீதாவும் காட்டின் வழியாக வீட்டிற்கு நடந்து வந்து கொண்டிருந்த போது, வியாலவ் திடீரென்று பேசத் தொடங்கியதும், இந்த பய உணர்வு குறிப்பாக அழுத்தம் பெற்றது.

''நீ இன்னமும் அவளுக்காகக் குறிவைத்துக் கொண் டிருக்கிறாய். ஏய் வாத்தே, நீ ஏன் அவளிடம் சொல்லக் கூடாது? ஒருவேளை அவள் உன்னிடம் அன்பாக நடந்து கொள்ளலாம். அன்பானவள் போலவே காணப்படுகிறாள்.''

அவன் அப்படியே நின்று விட்டான், அவனது இதயம் பயத்தில் மூழ்கிக் கொண்டிருந்தது, அவனது கால்கள் ஈயம் போல கனமாக இருந்தன, குழப்பத்தோடு உளறி னான்:

''என்ன சொல்லு? யாரிடம்?''

வியாலவ் அவனை மேலோட்டமாகப் பார்க்க மட்டுமே

செய்தான், நீளடியிட்டு நடக்க முயன்றான். அவனுடைய சட்டைக் கையை நிகீதா பற்றினான், ஆனால் தீஹனோ அவனுடைய கையை வெறுப்போடு தடவிவிட்டான்:

''கள்ளத்தனத்தில் என்ன பயனிருக்கிறது?''

தனது தோளில் தூக்கி வந்த பீர்ச் மரத்தைக் கீழே போட்டபடி, தன்னைச் சுற்றிலும் நிகீதா வெறி கொண்டது போலப் பார்த்தான். தீஹனுடைய கரடுமுரடான முகத்தில் அறைய விரும்பினான், அவனுடைய நாக்கை அடக்கி வைக்கும்படி செய்ய விரும்பினான். ஆனால் தீஹனோ, தனது உருட்டிய விழிகளால் தூரப் பார்த்துக் கொண்டு, தனது வழமையான அமைதிமிக்க தன்னிறைவோடு பேசினான்:

''அவள் அன்பாக இல்லையென்றால், அதை அவள் காட்டியிருக்க வேண்டும். பெண்கள்—அறியும் அவாமிக்கவர்கள். மற்றொரு ஆணை முயன்று பார்க்க விரும்பாத ஒரு பெண்ணே கிடையாது, சர்க்கரையை விட இனிப்பானது ஏது என்று அறிய விரும்புவார்கள். நமக்கோ—அதிகம் நமக்குத் தேவைப்படவில்லை. ஓரிரு முறை — அவ்வளவுதான், நன்றாகவே திருப்தியடைந்து விட்டோம். அவளால் நீ மெலிந்தும் போய்விட்டாய். உனது அதிர்ஷ்டத்தை முயன்று பார். அவளிடம் கூறு. ஒருவேளை அவள் சம்மதிக்கக் கூடும்.''

இதற்கு முன்னர் ஒருபோதும் சந்தித்திராதது போன்ற, நட்புமுறையிலான இரக்கம் இந்த வார்த்தைகளில் இருப்பதை நிகீதா உணர்ந்தான். அவனது தொண்டை வலியுடன் துடித்தது. எனினும் அதே நேரத்தில் தீஹன் தனது உடையை அகற்றிக் கொண்டிருக்கிறான் என்பது போல உணர்ந்தான்.

''நீ முட்டாள்தனமாகப் பேசிக் கொண்டிருக்கிறாய்,'' என்றான்.

வழிபாட்டிற்கு மக்களை அழைக்கின்ற மணியோசை நகரத்தில் கேட்டுக் கொண்டிருந்தது. தனது மரச் சுமையை சரிசெய்து கொண்டு தீஹன் நகன்றான், தனது இரும்புக் கொழுவால் நிலத்தை முரட்டுத்தனமாகக் குத்தியபடி, அதே போன்ற அமைதியான குரலில் சொல்லிக் கொண்டிருந்தான்:

''என்னிடத்தில் நீ பயப்பட வேண்டாம். நான் உனக்காக வருத்தப்படுகிறேன். நீ ஓர் அருமையான, ஆர்வமூட்டும் ஆள். நீங்கள், அர்தமோனவ்கள் எல்லாருமே மிகவும்

அநியாயமானவர்கள்... உனது முதுகில் கூன் இருந்தாலும், உள்ளுக்குள்ளாக நீ ஒரு கூனனைப் போன்றே இல்லை.''

நிகீதாவினுடைய அச்சம், பொங்கியெழுந்த மனச் சோர்வில் கரைந்து போயிற்று. அவனது கண்கள் இருண்டன, குடித்தவனைப் போல அவன் தள்ளாடினான். தரை மீது சாய்ந்து கொண்டிருப்பது போல அவன் உணர்ந்தான். மெதுவாக, அவன் கோரினான்:

''இதை உனக்குள்ளாகவே வைத்துக் கொள், செய்வாயா?''

''அது முழுக்கப் பத்திரமாகப் பூட்டப்பட்டு விட்டது என்று உனக்குச் சொன்னேனே.''

''இதை மறந்து விடு. அவளிடம் எதையும் கூற வேண்டாம்.''

''அவளிடம் நான் ஒருபோதும் பேசியதில்லை... இது பற்றி அவளிடம் நான் என்ன பேசப் போகிறேன்?''

எஞ்சிய பாதை முழுக்க அவர்கள் அமைதியாக நடந்தார்கள். கூனனுடைய நீலக் கண்கள் பெரிதாகவும், வட்டமாகவும், துயரமிக்கதாகவும் மாறின. முன்னைக் காட்டிலும் மௌனமாக, முனைப் பற்று மக்களுடைய தோள்களை ஏதுமின்றி வெறித்துப் பார்த்தான். ஆனால் இந்த மாற்றங்களை நதால்யா புரிந்து கொண்டுவிட்டாள்.

''இப்போதெல்லாம் எது உன்னை இத்தனை சோர்வாக இருக்கும்படி செய்கிறது?'' என்று அவள் கேட்டாள். நிகீதா பதிலளித்தான்:

''மிகவும் அதிகமான வேலை''—விரைந்து அங்கிருந்து சென்றுவிட்டான். புண்பட்டது போல உணர்ந்தாள், தனது மைத்துனனுடைய முன்னாளைய பாசத்தில் ஒரு மாற்றம் இருப்பதை அந்தப் பெண் உணர்ந்தது இது முதல் முறையல்ல. அவள் ஒரு சோர்வுற்ற வாழ்க்கையே நடத்தினாள். நான்கு ஆண்டுகளில் மேலும் இரண்டு பெண் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள், இப்போது அவள் திரும்பவும் வாயும் வயிறுமாக இருந்தாள்.

''பெட்டைகளை எதற்காகப் பெற்றுக் கொண்டிருக்கிறாய்? அவர்களால் என்ன நன்மை?'' என்று இரண்டாவது பிறந்த போது அவளது மாமனார் முணுமுணுத்தார். அவளுக்கு அவர் பரிசு ஏதும் வழங்கவில்லை, பியோத்தரிடம் புகார் செய்தார்:

''எனக்குப் பேரக்குழந்தைகள்தான் தேவைப் படுகிறதே

யன்றி, மருமகன்கள் அல்ல. அந்நியர்களுக்காக என்னுடைய தொழிலை நான் ஆரம்பிக்கவில்லை.''

அவரது ஒவ்வொரு வார்த்தையும் குற்ற உணர்வினை அவளுக்குள்ளாக உள்நின்று இயக்கியது. அவள் கணவன் கூட மகிழ்ச்சியடையவில்லை என்பதை அவள் உணர்ந்தாள். இரவில் அவனுக்கு அருகே படுத்தபடி, சன்னலுக்கு வெளியே தொலை தூரத்து நட்சத்திரங்களில் கண்ணைப் பதிப்பாள், தனது வயிற்றைத் தடவியபடி, அமைதியாக வேண்டிக் கொள்வாள்:

''அன்புக் கடவுளே, எனக்கு ஒரு மகனைக் கொடு...''

ஆனால் தனது கணவனிடமும் மாமனாரிடமும் அவள் கத்த விரும்பிய நேரங்களில் இப்படி நினைப்பதுண்டு:

''நோக்கத்தோடு தான் நான் பெட்டைகளை வைத்திருக்கிறேன், உங்களைக் காரித் துப்புவதற்காக!''

ஏதாவது அசாதாரணமாகச் செய்ய வேண்டும் என்று அவள் விரும்பியதுண்டு. அவர்கள் எல்லாரையும் வியப்பில் ஆழ்த்த ஏதாவது, அவளிடத்தில் அவர்களை அன்பு கொள்ளும்படி செய்ய ஏதாவது அதிசயமாக, அல்லது அவர்களை அச்சுறுத்துவதற்கு ஏதாவது மோசமானதாகச் செய்ய நினைத்தாள். ஆனால் நல்லதாகவோ, கெட்டதாகவோ அவளால் உருப்படியாக எதையும் சிந்திக்க முடியவில்லை.

அதிகாலையில் எழுந்து, காலைத் தேநீர் தயாரிக்க சமையல்காரனுக்கு உதவுவதற்காகக் கீழே அடுப்படிக்குச் செல்வாள். பிறகு தனது குழந்தைகளுக்கு ஊட்டுவதற்காகப் படிகளில் ஓடிச் செல்வாள், பின்னர் தனது மாமனார், தனது கணவன், தனது கொழுந்தன்களுக்குத் தேநீர் வழங்குவாள், பின்னர் திரும்பவும் குழந்தைகளுக்கு ஊட்டுவாள், பிறகு தைப்பாள், குடும்பத்திற்காகக் கிழிசல்கள் தைப்பாள். சிற்றுண்டிக்குப் பிறகு, பழத் தோட்டத்திற்குத் தன் குழந்தைகளை அழைத்துச் செல்வாள், மாலை தேநீர் வரை அங்கேயே தங்கி இருப்பாள். அருமையான சுருள் முடிகளைக் கொண்ட தொழிலாளிப் பெண்கள் பழத் தோட்டத்திற்குள்ளாக ஊடுருவிப் பார்ப்பார்கள், குழந்தைகளுடைய நல்ல தோற்றங்களைப் பாராட்டி மகிழ்வார்கள். நதால்யா புன்னகை செய்வாள், ஆனால் அவர்களுடைய புகழ்ச்சிக்கு மதிப்புத் தரமாட்டாள். ஏனெனில் குழந்தைகளிடத்தில் அவள் எந்த அழகையும் காணவில்லை.

சில நேரங்களில், மரங்களுக்கிடையே, அவர்கள் எல்லாரிலும் தன்னிடம் அன்பாகப் பேசக் கூடிய ஒரே ஓர் ஆளான நிகிதாவைப் பார்ப்பாள். ஆனால் இப்பொழுதெல்லாம், அவளோடு சற்று நேரம் உட்காரும் படி அவள் கேட்கும் போது, அவன் குற்ற உணர்வோடு பதிலளிப்பான்:

''மன்னிக்கவும், எனக்கு நேரமே இல்லை.''

படிப்படியாக, ஒரு மோசமான சிந்தனை அவளுடைய மனத்திலே உருக் கொண்டது. கூனனுடைய அன்பு கள்ளத் தனமானது என்பதை அவள் உணர்ந்தாள். தன்னையும் அலெக்ஸியையும் ஒற்றறிவதற்கான, தன் கணவனுடைய காவல்நாய் மட்டுமே அவன் என நினைத்தாள். அலெக் ஸியைக் கண்டு அவள் அஞ்சினாள், ஏனெனில் அவள் உள் ளத்தைக் கவர்ந்தான். இந்தக் கவர்ச்சியான மைத்துனன் விரும்பினால், அவனைப் புறக்கணிக்கத் தன்னால் இயலாது என்பதை அவள் அறிவாள். ஆனால் அவன் விரும்பவில்லை, அவளை அரிதாகத்தான் கவனித்தான். இது பெண் என்ற முறையில் அவளுக்கு வருத்தமாக இருந்தது, அருமையான, துணிச்சல் மிக்க அலெக்ஸி மீது பகைமை உணர்வை ஏற் படுத்தியது.

ஐந்து மணிக்கு தேநீரும், எட்டு மணிக்கு இரவுச் சாப் பாடும் கொண்டார்கள். பிறகு நதால்யா குழந்தைகளைக் குளிப்பாட்டுவாள், அவர்களுக்கு உணவு ஊட்டுவாள், பிறகு படுக்கையில் தூங்கப் போடுவாள். அதன் பிறகு, முழங்கா லிட்டபடி நீண்ட நேரத்திற்குத் தொழுவாள், ஒரு மகனைக் கருத்தறிக்க வேண்டும் என்ற நம்பிக்கையில் தனது கணவ னுக்கு அருகே படுப்பாள். அவளுடைய கணவன் அவளை அநுபவிக்க விரும்பினால், படுக்கையிலிருந்தவாறே முணு முணுப்பான்:

''அது போதும். வா.''

தனது தொழுகையைச் சுருக்க முடித்தபடி, அவசர மாக சிலுவை இட்டுக் கொண்டு, அவனுக்கு அருகே பணி வோடு படுப்பாள். சில நேரங்களில், மிகவும் அபூர்வமாக, பியோத்தர் வேடிக்கையாகப் பேசுவான்:

''இவ்வளவு அதிகமாக எதற்குத் தொழுகிறாய்? எந்த வகையிலும் நீ கேட்பதை எல்லாம் உன்னால் பெற முடி யாது, எஞ்சிய உலக மக்களுக்காக எதுவுமே மீதம் இல் லாமல் போகாதா?..''

இரவில், ஒரு குழந்தையின் அழுகையால் விழித்துக்

கொண்ட போது, குழந்தைக்குப் பாலூட்டி அமைதிப் படுத்திய பிறகு, சன்னலுக்குச் சென்று வெளியே பழமரங் களையும் வானத்தையும் பார்த்துக் கொண்டு நிற்பாள்; தன்னையும், தனது தாயையும், தனது மாமனாரையும், தனது கணவனையும், அவ்வளவு விரைவாகக் கடந்துவிட்ட கஷ்டமான அந்த நாள் தனக்குக் கொண்டு வந்த அனைத்தையும் சிந்தித்தபடி நிற்பாள். பழக்கப்பட்ட குரல்களையும், ஒரு நேரம் மகிழ்ச்சியாகவும், ஒரு நேரம் துயரமாகவும் இருக்கக் கூடிய வேலைக்காரச் சிறுமிகளது பாடல்களையும், மிகப் பெரிய தேன் கூட்டின் உரத்த இரைச்சலில் அடங்கிப் போவது போன்ற ஆலையி னுடைய பல்வேறு வித ஓசைகளையும், சலசலப்புகளையும் கேட்கக் கூடாது என்று இருந்தது விநோதமாக இருந்தது. இத்தகைய தொடர்ந்த விரைவான தொல்லைகளாலேயே எப்பொழுதுமே நாட்கள் முழுக்க நிரம்பி இருந்தன. அதனது எதிரொலிகள் அறைகளின் ஊடாக மிதந்து சென்றது, பழத் தோட்டத்தின் இலைத் தொகுதிகளில் முணுமுணுத்தது, பலகணிச் சட்டங்களில் மென்மையாகத் தடவிச் சென்றது. வேலை செய்கின்ற ஒலிகள், கவனத்தை ஈர்த்து, சிந்தனையைத் தடுத்தன.

ஆனால் இரவின் ஆழ்ந்த அமைதியில், எல்லா உயிரி னங்களுமே அமைதியாக ஆழ்ந்து உறங்குகின்ற போது, நிகீதாவால் சொல்லப்பட்ட தாத்தர்களால் பிடிபட்ட பெண் களைப் பற்றிய பயங்கரமான கதைகளையும், சமயத் துறவி கள் மற்றும் புனிதத் தியாகிகளது வாழ்க்கைகளையும் அவள் நினைவு கூர்வதுண்டு. சில நேரங்களில் உற்சாகமூட்டும் மகிழ்ச்சியான வாழ்க்கைக் கதைகளை நினைத்துப் பார்ப் பாள்; ஆனால் மிகப் பெரும்பாலும் வேதனை மிக்க சிந் தனைகளே நினைவுக்கு வந்தன.

அவளுடைய மாமனார் அவள் அங்கு இருந்திராதவள் போல அவளைப் பார்த்தார். அதுவும் மிக நன்றாக. ஆனால் சில நேரங்களில், மையக் கூடத்திலோ, அறை களிலோ அவளைத் தனியாகச் சந்தித்த போது, அவரது கூர்மையான கண்கள் அவளை வெட்கமில்லாதபடி மேலி ருந்து கீழே, அவளது மார்பிலிருந்து முழங்கால் வரை பார்த்தது, மேலும் அருவருப்பான முறையில் கனைத்துக் கொள்வார்.

அவள் கணவன் கண்டிப்பானவனாகவும், பாசமற்றவ

வாகவும் இருந்தான், சில வேளைகளில் அவனது வழியில் அவள் குறுக்கிடுவதாகவும், அவளுக்குப் பின்னால் இருப்பதை அவனது பார்வையினின்றும் ஏதோ மறைப்பதாகவும், அவளை அவன் பார்த்த போது அவள் உணர்ந்தாள். அவன் உடைகளைக் களைந்திருந்தபடி, அடிக்கடி படுக்கையின் விளிம்பில் நீண்ட நேரம் உட்கார்ந்திருப்பான், ஒரு கைசிறகுத் தலையணைக்குள்ளாகப் புதைந்து இருக்கும், மற்றொரு கை அவனுடைய காதை இழுத்தபடி அல்லது அவனுக்குப் பல்வலி வந்தது போல கன்னத்திற்கு மேலாகத் தாடியைத் தேய்த்து விட்டபடி இருக்கும். அவனது சாதாரண முகமானது சிடுசிடுப்பு வாய்ந்ததாகவோ, கோபத்தில் முகஞ்சுளித்தது போலவோ மடிப்புகளாகத் திரண்டு போகும்,—அக்கணங்களில் படுக்கைக்கு வரவே நதால்யா அஞ்சுவாள். மிகக் குறைவாகவே பேசினான், குடும்ப விவகாரங்களைப் பற்றிப் பேசினான், அதிலும் நினைவுக்கு அரிதாக வந்த அவனது விவசாய, பண்ணை வாழ்க்கை பற்றி, நதால்யாவுக்குப் புரிந்து கொள்ள முடியாதபடி பேசினான். குளிர்கால விடுமுறையின் போது, கிறிஸ்துமஸ் மற்றும் ஸரோவித்யத்தின் போது, நகரத்திற்கு அவளைக் கூட்டிக்கொண்டு செல்வான். ஒரு கனத்த கருப்புப் பொலிகுதிரை ஸ்லெட்ஜ் வண்டியை இழுத்துச் செல்லும். அது செம்பு போன்ற மஞ்சள் நிறத்தில், குருதி பாய்ந்த கண்களைப் பெற்றிருந்தது, கோபமான உணர்ச்சி துடிப்போடு அது தனது தலையை ஆட்டியது, உரக்கக் கனைத்தது, இந்த விலங்கைக் கண்டு நதால்யா அஞ்சினாள், தீஹன் வியாலவ் இவ்வாறு சொன்ன போது அவளது அச்சம் அதிகரித்தது:

''இந்தக் குதிரை மற்றவர்களுடைய ஆதிக்கத்தில் இருக்க மறுக்கிறது, கெட்ட குதிரை...''

அடிக்கடி நதால்யாவின் தாயார் வருவாள். தனது தாயாரின் சுதந்தரத்தைக் கண்டு அவளது கண்களில் பளிச்சிட்ட மகிழ்ச்சி நிரம்பிய மினுமினுப்பைக் கண்டு, மகள் பொறாமைப் பட்டாள். தனது தாயுடன் அர்தமோனவ் எந்தனை இளமைத் துடிப்புடன் கேலி பேசுகிறார் என்பதையும், அவருக்கு முன்னால் தனது உதடுகளை அலைத்தபடி, வெட்கமில்லாமல் தனது அழகைத் தற்புகழ்ச்சியாகப் பெருமையோடு காட்டிக் கொண்ட காதற் கிழத்தியைப் பாராட்டியபடி, தனது தாடியை எவ்வளவு அகமகிழ்வோடு அவர் தடவுகிறார் என்பதையும் பார்த்த போது,

இந்தப் பகைமையானது கூர்மையானதாகவும், மிக்க வேதனை மிக்கதாகவும் மாறியது. தனது உறவுக்காரருடன் பய்மகோவாவின் நெருக்கத்தை நகர மக்கள் அறிந்து எவ்வளவோ காலமாகி விட்டது. அதைக் கடுமையாகக் கண்டனம் செய்தார்கள். எல்லாராலும் அவள் அறவே வெறுத்து ஒதுக்கப் பட்டாள். நதால்யாவும் தனது முன்னாளைய தோழிகளை, நகரத்தின் சிறந்த குடும்பங்களைச் சேர்ந்தவர்களது மகள்களை, இழந்து விட்டாள். பாவத்திற்கு ஆளான ஒரு பெண்ணினுடைய மகளை, இரக்கமற்ற, அயலார் விவசாயின் மருமகளை, சிடுசிடுப்பான, செருக்கு வாய்ந்த ஒரு கணவனின் மனைவியை—பார்ப்பதினின்றும் அவர்கள் தடுக்கப் பட்டார்கள். சிறுமிப் பிராயத்தின் சிறிய மகிழ்ச்சிகள் இப்போது குறிப்பிடும்படியாகவும், விரிவானதாகவும் நதால்யாவுக்குத் தென்பட்டன.

முன்பெல்லாம் எப்பொழுதுமே நேர்மையாக இருந்த, இப்போது வஞ்சகத்திற்கும் சொற்புரட்டுக்கும் தலை தாழ்கிற தனது தாயாரைப் பார்ப்பதற்கு மிக்க வேதனையாக இருந்தது. பியோத்தருக்கு இந்த விதவை பயப்படுவது போலத் தோன்றியது. ஆகவேதான் அவனை அவள் பாராட்டவும், அவனுடைய வியாபாரத் தன்மைகளைப் புகழவும் செய்தாள். அலெக்ஸியினுடைய கேலி செய்யும் கண்களுக்குக் கூட அவள் கட்டாயம் பயந்திருக்க வேண்டும். ஏனெனில் அவனிடத்தில் அவள் நட்பு மிக்க கேலிகளைப் பரிமாறிக் கொண்டாள், ரகசியமாக அவனிடத்தில் கிசுகிசுத்தாள், அடிக்கடி அவனுக்குப் பரிசுகளும் அளித்தாள், அவனுடைய பிறந்த நாளில், அவனுக்காக, மேய்கின்ற ஆடும், மலர்கள் கொண்ட ஒரு பெண்ணுடன் அலங்கரிக்கப்பட்ட ஒரு பளிங்கு மணிப்பொறி ஒன்று கொண்டு வந்தாள். ஒவ்வொருவரும் அதைப் புகழ்ந்தார்கள்.

''ஒரு கடனுக்காக யாரோ என்னிடம் இதை விட்டு விட்டுப் போனார்கள்,'' என்று அவள் விளக்கினாள். ''மூன்று ரூபிள் மட்டுமே. இது பழையது, இப்போதெல்லாம் இது ஓடவில்லை. அல்யோஷா திருமணம் செய்கின்ற போது, அவன் இந்த மணிப்பொறி கொண்டு தனது வீட்டை அலங்கரிப்பான்...''

''என்னுடைய வீட்டையும் அலங்கரிக்க விரும்புகிறேன்,'' என்று நதால்யா நினைத்தாள்.

நதால்யா விற்குச் சலிப்பூட்டும் கட்டளைகளை இட்டபடி யே, வீட்டு விவகாரங்களில் தாயார் தலையிட்டாள்:

''வாரநாட்களில் கைத்துண்டுகளை வெளியில் போடாதே. ஆண்களுடைய தாடிகளாலும், மீசைகளாலும் அவை வெகு சீக்கிரத்தில் அழுக்கடைந்து போகும்.''

நிகிதாவை அவள் முதலில் விரும்பியிருந்தாலும், இப்போது அவள் அவனைப் பார்த்த போது தன்னுடைய உதடுகளைச் சுருக்கினாள், நேர்மையற்றவர்கள் என்று சந்தேகப்படக் கூடிய எழுத்தர்களிடம் மக்கள் பேசுவது போல அவனிடம் பேசினாள். அவள் தனது மகளை எச்சரித்தாள்:

''அவனோடு மிகவும் நட்பாகி விடாதவாறு பார்த்துக் கொள். கூனர்கள் குறும்புக்காரர்கள்.''

தனது கணவன் தன்னை நம்புவதில்லை என்றும், தன்னைக் காவல் காக்கும்படி கூனனை ஏற்பாடு செய்திருக்கிறான் என்பதையும் தனது தாயிடம் புகார் செய்ய வேண்டும் என்று நதால்யா, ஒன்றுக்கும் மேற்பட்ட முறை எண்ணினாள்; ஆனால் ஏதோ அவளை எப்போதுமே தடுத்து விட்டது.

எனினும், எல்லாவற்றிற்கும் மோசமாக, ஆண் குழந்தை பெற முடியாமற் போன நதால்யாவிடம் கவலையுற்று, அவளது கணவனோடு அவளது இரவு விவகாரங்கள் குறித்து அவளது தாயார் கேட்ட போது, வெட்கமில்லாமல் வெளிப்படையாகக் கேட்ட போது, அவளது ஈரமான கண்கள் உருண்டன, முறுவலித்தபடி, அவளது குரல் மென்மையான உறுமலில் அமுங்கியது. இந்த ஆர்வத்தைப் பொறுத்துக் கொள்ள மிகவும் கடினமாக இருந்தது. தனது மாமனார் அழைப்பதைக் கேட்கின்ற போது மட்டுமே நதால்யா மிகவும் திருப்தியடைவாள்.

''உறவுக்காரரே, உன்னை அழைத்துச் செல்ல ஒரு குதிரை ஏற்பாடு செய்யட்டுமா?''

''நான் நடந்தே போகிறேன்.''

''நல்லது. உன்னை உன் வீடு வரை கொண்டு வந்து விடுகிறேன்.''

நதால்யாவின் கணவன் சிந்தனைவயப்பட்டபடி கூறினான்:

''அவள் ஒரு புத்திசாலி, உன்னுடைய அம்மாதான், அப்பாவைக் கைக்குள் போட்டு வைத்திருக்கிறாள். அவள்

சுற்றியிருக்கும் போது, அவர் நம்மிடம் அவ்வளவு கடுமை யாக இல்லை. அவள் தன்னுடைய வீட்டை விற்று விட்டு இங்கு வந்திருக்க வேண்டும்.''

''நான் அதை விரும்பவில்லை,'' என்று நதால்யா சொல்ல நினைத்தாள், ஆனால் அதற்கு அவள் துணிய வில்லை. மகிழ்ச்சியாகவும், மிக அன்பாகவும் இருப்பதற் காக, தன் தாயாரிடம் முன்னை விட மோசமாகச் சங்கடப் பட்டாள்.

பழமரங்களை நோக்கித் திறந்த சன்னலில் அல்லது மரங்களுக்குக் கீழே உட்கார்ந்தபடி, தனது கைகள் தையல் வேலை செய்து கொண்டிருக்க, பெர்ரிப் புதர்களுக்கு அப் பால், குளியல் வீட்டிற்கு அருகே, தீஹனும் நிகீதாவும் ஏதோ வேலையில் இருந்தபடி பேசுவதில் ஒரு சிலவற்றை அவள் கேட்பாள். ஆலையினுடைய இரைச்சல் ஒலிக்கி டையே முற்றக் காவலனுடைய அமைதியான குரல் வந் தது:

''மக்களிடமிருந்து கவலைகள் வருகின்றன. மக்கள் ஒரு கூட்டத்தாரிடம் வந்து சேர்கிறார்கள். பிறகு அவர்கள் அந்தக் கவலைகளில் ஆழ்ந்து போய் விடுகிறார்கள்!''

''எவ்வளவு உண்மை!'' என்று நதால்யா எண்ணினாள்; ஆனால் நிகீதாவினுடைய இனிமையான குரல் மறுப்புக் கூறியது:

''நீ எல்லா வாய்சொற்கள் சொல்கிறாயே. விளை யாட்டுகளும் நடனங்களும் என்னவாவது? மக்கள் இல்லா மல் கேலி இல்லை.''

''அது கூட உண்மைதான்,'' திகைக்கச் செய்வது போல அந்தப் பெண் நினைத்தாள்.

அவள் அறிந்த மக்கள், தங்கள் ஒவ்வொருவருக்குமுரிய அவ்வளவு நம்பிக்கையோடும், அத்தனை உறுதியான அறி வோடும் பேசினார்கள் என்பதை அவள் அறிவாள். அதை அவள் தெளிவாகக் காண முடிந்தது: எளிமையான, உறுதி மிக்க வார்த்தைகள் இலகுவாகவும் நெருக்கமாகவும் ஒன் றோடு ஒன்று இணைந்து, ஒவ்வொரு பேச்சாளியையும், தனது சொந்த உறுதியோடும், நம்பிக்கைக்குரிய உண்மை யோடும் வேலியிட்டுப் பிரித்தது. தங்களது வார்த்தைகளா லேயே மக்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் வித்தியாசப்படு கிறார்கள். தங்கம் மற்றும் வெள்ளி கடிகாரச் சங்கிலிகள் போல அவர்கள் தங்களைத் தாங்களே வார்த்தைகளைக்

கொண்டு மணி ஒலிக்கச் செய்கிறார்கள். அத்தகைய வார்த்தைகள் எதையும் நதால்யா பெற்றிருக்கவில்லை. அந்த எண்ணங்களை வெளிப்படுத்திக் காட்ட அவளிடம் வார்த்தையில்லை. இலையுதிர் கால மூடுபனி போல, பிடிபடாம லும் விளங்காமலும் அவளது சிந்தனைகள் அவளை அழுத் தவே செய்தன, அவளது திறமைகளைக் குன்றச் செய்தன. உணர்ச்சி புண்படுவதையும், கலக்கமடைவதையும் அவள் மிகவும் அடிக்கடி நினைத்தாள்:

''நான் ஒரு முட்டாள், ஒரு விஷயங்கூடத் தெரிய வில்லை...''

''ஒரு கரடியை எடுத்துக் கொள்ளுங்கள். தேன் எங்கே இருக்கிறதென்று அதற்குத் தெரியும். இப்படியாகத் தான் அது தன்னுடைய பெயரைப் பெற்றிருக்கிறது,'' ராபஸ் பெர்ரி புதர்களுக்கிடையே தீஹன் தெளிவின்றி முணு முணுத்தான்.

''ஆக, அது தான்,'' என்று நதால்யா நினைத்தாள். நடுங்கியபடியே, தனது வளர்ப்புப் பிராணியை அலெக்ஸி எங்ஙனம் கொன்றிருப்பான் என்பதை நினைத்துப் பார்த் தாள். பதின்மூன்று மாதங்கள் வரை, பழகிய, பாசமிக்க ஒரு நாய் போல, அந்தக் கரடி முற்றத்திலே சுற்றி வந்து விளையாடியது. சமையலறைக்கு வந்து, தனது பின்னங் கால்களை நிமிர்த்தி, மென்மையாக உறுமி, தனது வேடிக் கையான சிறிய கண்களைச் சிமிட்டியபடி, ரொட்டிக் காகக் கெஞ்சி நிற்கும் — அத்தகைய ஒரு வேடிக்கைப் பிராணி, ஆனால் அன்புக்கு நட்பும் பிரதிபலிப்பும் காட்டக் கூடியது. ஒவ்வொருவரும் அதை விரும்பினார்கள். அத னது அடர்ந்த, சிக்கலான கம்பளி மயிரை நிகீதா சீவி விடுவான், குளிப்பதற்காக அதை ஆற்றுக்குக் கூட்டிச் செல் வான், அவனிடத்தில் அது மிக நெருக்கமாகி விட்டது, நிகீதா வீட்டில் இல்லாத போது, அது தனது மேல் நோக் கிய மூஞ்சியால் ஆர்வத்தோடு காற்றை மோப்பம் பிடிக் கும், செறுமல் ஒலி எழுப்பியபடி முற்றத்தின் வழியாக அவனது அலுவலகச் சன்னலுக்கு விரைந்து செல்லும். ஒன் றிற்கு மேற்பட்ட முறை, அது பலகணிச் சட்டங்களை நொறுக்கியது. ரொட்டியும் கருப்பஞ்சாறும் தந்து அதற்கு ஊனூட்ட நதால்யா விரும்பினாள். வெகு சீக்கிரத்திலேயே ரொட்டியைக் கருப்பஞ்சாறு உள்ள கிண்ணத்தில் தானாகவே நனைக்க அது கற்றுக் கொண்டது. மகிழ்ச்சியோடு உறுமிய

படி, மயிரடர்ந்த தனது முன்னங் கால்களில் நின்ற படி, அது தன்னுடைய பழுப்பு நிற கூரிய பற்கள் கொண்ட வாய்க்குள்ளாக சொட்டுச் சொட்டாக வடிகின்ற ரொட்டியைத் திணிக்கும். பிறகு தனது உள்ளங்கைகளில் ஒட்டி உள்ள கருப்பஞ்சாறை நக்கும். அதனுடைய நல்லியல்புடைய சிறிய கண்கள் மகிழ்ச்சியால் ஒளி விடும், விளையாடும் படி அவளைக் கெஞ்சியபடி, நதால்யாவின் முழங்காலுக்கு மேலாகத் தனது தலையை அது தேய்க்கும். இந்த அன்பான விலங்கோடு ஒருவர் பேச முடிந்து—அது ஏதோ புரிந்து கொண்டது போலக் காணப்பட்டது.

ஆனால் ஒரு நாள் அலெக்ஸி அதற்குக் கொஞ்சம் வோத்கா சாராயம் கொடுத்து விட்டான். குடிவெறியில் கரடி உருளவும் துள்ளவும் தொடங்கியது. குளியல் வீட்டின் கூரையின் மீது அது தொத்தி ஏறியது, புகைப் போக்கியை துண்டு துண்டாக இழுத்துப்போட்டது, செங்கற்களைத் தரை மீது வீசியது. இந்த விலங்கினது குறும்பு விளையாட்டுக்களில் உரக்கச் சிரித்தபடி தொழிலாளர்கள் கூட்டம் ஒன்று கூடி விட்டது. அந்நேரம் தொடங்கி, மக்களுடைய மகிழ்ச்சிக்காக, கரடிக்கு விடுமுறை நாட்களில் குடிக்கக் கொடுக்காமல் ஒரு நாளும் இருந்ததில்லை. விலங்கும் அந்தக் குடிவெறிக்குப் பழகிப் போய்விட்டது. எந்தத் தொழிலாளியிடம் வோத்கா வாசனை வருகிறதோ, அவனைத் துரத்திக் கொண்டு பின்னால் செல்லும், அலெக்ஸிக்கு எந்த அமைதியையும் கொடுக்கவில்லை, முற்றத்தைக் கடந்து அவன் செல்கின்ற ஒவ்வொரு முறையும் அவனை நோக்கி விரைந்தது. அதை அவர்கள் சங்கிலியால் கட்டினார்கள்; ஆனால் அதனுடைய கழிநீர்க் குழாயை உடைத்தெறிந்து விட்டு, சங்கிலி போட்டுக் கட்டப்பட்ட காலை இழுத்துக் கொண்டு, தனது தலையை ஆட்டியபடி முற்றத்தில் வலம் வந்தது. அதைப் பிடிக்க ஒரு முயற்சி நடந்தது. தீஹனுடைய காலைப் பிறாண்டியது, மரோஸவ் என்ற இளம் தொழிலாளியை அடித்து வீழ்த்தியது, உள்ளங்கையால் கனமான குத்து விட்டு நிகிதாவினுடைய தொடையை வடுப்படுத்தியது. பிறகு அலெக்ஸி ஓர் எறி ஈட்டியோடு ஓடிவந்தான், அந்த விலங்கினுடைய வயிற்றுக்குக் கீழாக நுழைத்தான். தனது சன்னலிலிருந்து இதை கவனித்துக் கொண்டிருந்த நதால்யா, கரடி தன்னுடைய இடுப்புப் பகுதியை வைத்துப் பின்னுக்குச் சாய்ந்து,

அவனைச் சுற்றிக் கோபத்தோடு கத்திக் கொண்டிருந்த அவனுடைய மன்னிப்பைக் கோருவது போல தனது முன் பாதங்களை அலைத்தபடி இருந்ததைப் பார்த்தாள். யாரோ அலெக்ஸியிடம் ஒரு கூர்மையான கோடரியைக் கொடுத் தார்கள். முன்னோக்கிப் பாய்ந்தபடி, ஓர் உள்ளங்கையை நோக்கி முதலில் அடித்தான், பிறகு இரண்டாவதில் அடித்தான். ஒரு பெரும் கர்ஜனையுடன், காயமுற்ற தனது உள்ளங்கை களுடன் கீழே சாய்ந்தது. வலது புறமும் இடது புறமும் குருதி பீச்சியடித்ததில், கடினமான நிலத்தின் மீது கருஞ் சிவப்புக் கறையை ஏற்படுத்தியது. பரிதாபமான முறையில் முனகலையிட்டபடி, கரடி தனது தலையைச் சாய்த்தது, ஒரு புதிய அடியை வரவேற்பது போலிருந்தது. பிறகு அலெக்ஸி ஓர் உறுதியான நிலை எடுத்தான், அவனது கால்கள் அகல விரிந்து இருந்தன, அது ஒரு மரக் கட்டை என்பதுபோல, கரடியின் மண்டை ஓட்டின் மீது அவன் கோடரியைக் கீழே கொணர்ந்தான். தனது சொந்தக் குருதிக் குளத்திலேயே அந்த விலங்கின் மூஞ்சி விழுந்தது. அலெக்ஸி தனது வலி மையெல்லாம் திரட்டி இழுக்கும் அளவுக்கு எலும்புக்குள் ளாக அந்தக் கோடரி பதிந்திருந்தது. அதை வெளியே இழுப்பதற்கு முன்னால், செத்த விலங்கின் மீது தனது காலை வைத்துக் கொண்டான். இது மகா மட்டமாக இருந்தது. ஆனால் இந்த மகிழ்ச்சிமிக்க, அச்சமற்ற, போக்கிரித்தன மான மைத்துனன் நதால்யா அறியாமல் யாரோ ஒரு மதிப்பு எதுவுமில்லா இளம் பெண்ணுடன் சென்றது இதைவிட மட்டமாக இருந்தது.

அலெக்ஸியினுடைய துணிச்சலுக்கும் முன்னெச்சரிக்கைக் கும் ஒவ்வொருவரும் அவனைப் பாராட்டினார்கள். அவ னது தோள் மீது தட்டியபடி, தந்தை சத்தம் போட்டார்:

''உனக்கு உடம்புக்குச் சரியில்லை என்று நீ சொல் கிறாயே. ஓகோ, நீயே...''

நிகீதா முற்றத்திலிருந்து ஓடி விட்டான். நதால்யா விம்மி விம்மி அழுதாள். அவளுடைய கணவன் வியப்புடனும் பரிச்சலுடனும் கேட்டான்:

''உனக்கு முன்னால் ஒரு மனிதன் கொல்லப்பட்டதாக வைத்துக் கொள்வோம்? அப்போது நீ என்ன செய்வாய்?''

அவள் ஒரு குழந்தை போல எண்ணி அவன் சத்தம் போட்டான்:

''நிறுத்து, முட்டாள்!''

தன்னை அவன் அடிக்கப் போகிறான் என்று அவள் எண்ணினாள். தனது கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, இளைத்தபடி, அவனோடு இருந்த முதலாவது இரவை அவள் நினைவு கூர்ந்தாள்—எவ்வளவு அன்பாக இருந்தான், எவ்வளவு வெட்கப்படுகிறவனாக இருந்தான். எல்லாக் கணவன்களும் தங்களது மனைவிகளைச் செய்வது போல, இத்தனை நாட்களிலும் அவளை அவன் ஒருபோதும் அடித்ததே இல்லை. தனது தேம்பலை நிறுத்திக் கொண்டு அவள் கூறினாள்:

''நான் மிகவும் வருந்துகிறேன். அந்தக் கரடியிடம் நான் மிகவும் அன்பாக இருந்தேன்.''

''நீ என்னிடத்தில் தான் அன்பாக இருந்திருக்க வேண்டுமே தவிர, கரடி இடத்தில் அல்ல,'' அவன் அத்தனை உரக்க இல்லாமலும், மிகுந்த மென்மையுடனும் கூறினான்.

முதல் முறையாகத் தனது கணவனுடைய கண்டிப்புப் பற்றி அவள் தன் தாயாரிடம் புகார் செய்தாள். தாயார் கூறியதை அவள் எண்ணிப் பார்த்தாள்:

''ஆண்கள் தேனீக்கள். நாம் அவர்களுடைய மலர்கள். தேனுக்காக அவர்கள் நம்மிடம் வருகிறார்கள். என் கண்ணே, இதை நீ புரிந்து கொள், பொறுமையாக இருக்கக் கற்றுக் கொள். ஒவ்வொன்றிலுமே ஆண்கள் எசமானர்களாக இருக்கிறார்கள். நம்மைக் காட்டிலும் அவர்கள் அதிகமான பொறுப்புகள் கொண்டிருக்கின்றனர். சர்ச்சுகளையும், தொழிற்சாலைகளையும் கட்டுகிறார்கள். முன்னர் ஏதுமே இல்லாத இடத்தில் உன் மாமனார் என்ன கட்டியிருக்கிறார் என்று பார்...''

முன்னிலும் வேகமாக, இல்யா அர்தமோனவ் தனது தொழிலைப் பெருக்கவும், ஒரு முகப்படுத்தவும் விரும்பினார். அவர் நீண்ட நாள்கள் வாழ போவதில்லை என்று அவருக்குத் தெரிந்தது போலிருந்தது. மே மாதத்தில், புனித நிகோலா நாளுக்குச் சற்று முன்னர், ஆலையின் இரண்டாவது பகுதிக்கான கொதிகலம் வந்து சேர்ந்தது. அதைக் கொண்டு வந்த படகு, வதராக்ஷா ஆற்றின் சதுப்பு நில நீர் சோம்பேறித்தனமாகச் சேருமிடத்தில், ஒகா ஆற்றின் மணற் பாங்கான கரையில் நிலைத்து விட்டது. ஒரு கடினமான பணி முன்னோக்கி இருந்தது: மணற்பாங்கான நிலத்தின் மீது ஏறத்தாழ முன்னூற்று ஐம்

பது அடி தொலைவிற்கு அந்தக் கொதிகலத்தை இழுத்து வர வேண்டி இருந்தது. புனித நிகோலா நாளன்று தன் னுடைய தொழிலாளர்களுக்கு, பெருமளவில் வோத்காவும் பீரும் கொடுத்து ஓர் அருமையான விடுமுறை நாள் விருந் தளித்தார் அர்தமோனவ். முற்றத்தில் மேசைகள் போடப் பட்டன. ஊசியிலை மற்றும் பிர்ச் மரங்களுக்கும், முதலா வது இளவேனிற் கால மலர்க் கொத்துகளுக்கும் இடையே, அந்தப் பூக்களை விடவும் பிரகாசமான உடைகளை அணிந்து கொண்ட பெண்கள் ஏற்பாடு செய்தார்கள். எச மானர், தனது குடும்பத்தினருடன், அழைக்கப்பட்டிருந்த ஒரிரு விருந்தினர்களுடனும், வயதான நெசவாளர்களுக்கு மத்தியில் அமர்ந்து, அதிகமாகக் குடித்துக் கொண்டு, உற் சாகத்தை ஏற்படுத்துவது மாதிரி உரையாடிக் கொண்டு, கூரிய நாக்குப் படைத்த பெண்களிடம் துணிச்சலாகப் பேசியபடி இருந்தார். ஏற்கெனவே நரைத்து விட்ட தனது தாடிக்கு மேலாகத் தனது கையை ஓட விட்டபடி, பேரிரைச்சலிட்டவாறு அவர் கத்தினார்:

''ஆ, கூட்டாளிகளே! நாம் வாழ்ந்து கொண்டிருக்க வில்லையா?''

அவரையும் அவரது நடத்தையையும் மக்கள் பாராட்டி னார்கள், இதை உணர்ந்து இப்படிப்பட்ட ஒரு மனிதனாக இருக்கிறோம் என்கிற மகிழ்ச்சியால் அவரது போதை மேன்மேலும் கூடுதலானது. இளவேனிற் கால இந்த நாளைப் போல அவர் மினுமினுத்தார், ஒளிவீசினார்; பூமி முழுதும் போல, தங்களது பொன்னிறக் கூம்புகளை வெளி றிய நீல வானத்தை நோக்கி உயர்கின்ற பீர்ச்சுகள் மற் றும் இளம் பைன் மரங்களுடன் கூடிய, இளமை மிக்க பச்சைப் பசேலென்ற புற்கள் மற்றும் இலைத்தொகுதிகள் கூர்மையோடும் நறுமணத்தோடும் இருந்தன. அந்த ஆண்டு இளவேனில் காலம் முன்னதாகவே வந்து விட்டது, வெது வெதுப்பாகவும் இருந்தது. நறுமண மலர்ப் புதர்ச் செடி களும், பறவைச் செர்ரிகளும் ஏற்கெனவே மலர்ந்துவிட் டன. உலகம் முழுவதுமே மகிழ்ச்சியுற்றது, கொண்டாடி யது, மனிதர்களுடைய உள்ளங்களில் கூட வீறுகொண்ட உணர்ச்சிகள் மலர்ந்திருப்பது போலக் காணப்பட்டது.

கிழவனாகிய நெசவாளி ஒருவன் எழுந்தான்: பரீஸ் மரோஸவ், நோயுற்ற கிழவன், புத்தம் புதிதாகக் கழுவப் பட்ட பிணத்தைப் போன்று வெள்ளையாகவும், சுத்தமாக

வும் காணப்பட்டான். வயது காரணமாக பசுமையாக மாறி விட்ட முகத்தில், மெழுகு போன்ற சிறிய முகத்தில், தாடி நரைத்துக் காணப்பட்டது. தனது மூத்த மகனது தோளில் சாய்ந்தபடி, அறுபது வயது ஆள் அவன், தனது எலும்பான, தசையற்ற கையை அலைத்தபடி ஆர்வத்தோடு கூச்சலிட்டான்:

''பாருங்க, எனக்குத் தொண்ணூறு வயசாகிறது, தொண்ணூறுக்கும் மேலேயே, நீங்க இதை எப்படி பாக்குறீங்க? நான் போர்வீரனாக இருந்தேன்—புகசோவுடன் சண்டை போட்டேன், பிளேக் வந்த ஆண்டு மாஸ்கோவில் கலகம் செய்தேன்! போனபார்ட்டுடன் நான் சண்டைபோட்டேன்...''

''நீ யாரைத் தழுவுவாய்?'' அவனது காதுக்கு அண்மையில் அர்தமோனவ் கத்தினார். அந்த நெசவாளி செவிடனாக இருந்தான்.

''இரண்டு பெண்டாட்டி, அத்தோட தனியா வேறே, பாரு: ஏழு பிள்ளை, இரண்டு பொண்ணு, பத்தொன்பது பேரக் கொழந்தைகள், ஐந்து கொள்ளுப் பேரக் கொழந்தைகள்—என்னுடைய பரம்பரையில் வந்தவுங்க. உங்களோட வாழ்ந்துக் கிட்டிருங்காக! அங்கே அவுங்க உக்கார்ந்து...''

''இன்னும் அதிகக் குழந்தைகளைத் தா!'' என்று கத்தினார் இல்யா.

''அவுங்களைக் கொண்டு வருவேன். மூன்று ஜார்களையும், ஒரு சக்கரவர்த்தினியையும் மார்த்திருக்கிறேன்—இது எப்படி? எல்லா எசமானர்களுக்கும் நான் வேலை செஞ்சேன்— அவுங்க எல்லாருமே செத்துப் போயிட்டாங்க, நான் உயிரோடு இருக்கேன்! மைல் கணக்கில் துணிகள் தயாரித்தேன். இல்யா வஸீல்யெவிச், நீ தான் உண்மையான மூலப்பொருள். நீ வாழ வேண்டிய ஆள். ஓர் உண்மையான எசமானர். வேலையை நீ விரும்புகிறாய், வேலை உன்னை விரும்புகிறது. உன்னிடத்தில் மட்டமான தன்மை எதுவுமில்லை. எங்களுடைய மரத்திலிருந்து வெட்டப்பட்ட ஒரு கிளை நீயே. உனக்கு அதிர்ஷ்டம் என்பது சட்டபூர்வமான மனைவியே தவிர காமக்கிழத்தியல்ல: அவள் ஆட்டம் காட்டி விட்டு ஓடி விடுவாள்! முன்னேறிச் செல். உன் நலம், சகோதரனே! உன்னுடைய நலம், நான் வாழ்த் துறேன்...''

அந்தக் கிழவனை அர்தமோனவ் தன்னுடைய கைகளில்

வாரியெடுத்தார், அவனை முத்தமிட்டார், உணர்ச்சி வயப் பட்டுக் கத்தினார்:

''நன்றி, குழந்தாய்! என்னுடைய மானேஜராக உன்னை நான் நியமிப்பேன்...''

உரத்த கூக்குரல்களுக்கும், வெடிச் சிரிப்புகளுக்குமிடையே, குடித்திருந்த கிழவன், மேசைக்கு மேலாக எழுந்து நின்றான், தனது எலும்பு கை முட்டியைச் சுழற்றிக் காட்டி, அழுங்கிய நகைப் பொலி செய்தான்:

''ஒவ்வொன்னுக்கும் அவர் தனக்கென்று சொந்த முறையைப் பெற்றிருக்கிறார், அவருக்கென்ற சொந்த வழியில்...''

''மறைவு ஏதுமின்றி உல்யானா பய்மகோவா, தனது கன்னங்களில் வழிந்த மகிழ்ச்சிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

''அத்தனை பெரிய மகிழ்ச்சி,'' என்று அவளுடைய மகள் கூறினாள். பதில் பேசுவதற்கு முன்னர் பய்மகோவா தனது மூக்கை உறிஞ்சிக் கொண்டாள்:

''அந்த மாதிரியான மனிதர் அவர். மகிழ்ச்சிக்கென்றே கடவுள் அவரைப் படைத்திருக்கிறார்...''

''இங்கே உங்களுக்கொரு பாடம் இருக்கிறது, இளைஞர்களே. மக்களோடு எப்படிப் பழகுவது என்பதைக் கற்றுக் கொள்ளுங்கள். பியோத்தர், நீ கவனி!'' என்று தனது பையன்களிடம் அர்தமோனவ் கத்தினார்.

விருந்து முடிந்து, மேசைகள் தூக்கிச் செல்லப்பட்டு சுத்தம் செய்யப்பட்ட போது, பெண்கள் பாடத் தொடங்கினார்கள், அதே வேளையில் ஆண்கள் தங்களது தசை வலிமையைக் காட்டுவதற்கு மற்போரிலும், பிற போட்டிகளிலும் முயன்று பார்த்தார்கள். சிறந்த நடனங்கள், மற்போர்கள் இப்படி ஒவ்வொரு இடத்திலும் அர்தமோனவ் இருந்தார். காலை விடிகின்ற வரை அவர்கள் குதூகலமாக இருந்தார்கள்; கதிரவனின் முதலாவது கதிர் வந்ததுடன், எழுபது தொழிலாளர்களைக் கொண்ட ஒரு குழு, எசமானர் அவர்களுக்கு முன் நிற்க, கொள்ளையில் ஈடுபடும் கொள்ளைக்காரர்கள் போல, குடிவெறியில் கூச்சலுடனும், பாடல்களுடனும் நதிக்கரையை நோக்கி ஆரவாரத்தோடு கிளம்பினார்கள். தங்களுடைய தோள்களின் மீது அவர்கள், தடித்த உருளைகளையும், கருவாலிக் கட்டை இரும்பு கோல்களையும், கனத்த கயிற்றுச் சுருள்களையும் தூக்கிச் சென்றார்கள். அவர்களுக்குப் பின்னால் மணற்பரப்

பில் நொண்டியடித்தபடி சென்ற மெலிந்த கிழட்டு நெசவாளி, நிகீதாவிடம் முணுமுணுத்தான்:

''அவர் தனது விருப்பத்தை நிறைவேற்றி விடுவார்! அவரா? எனக்குத் தெரியும்...''

தலையற்ற காளை போலக் காணப்பட்ட, அந்தச் செந்நிற கோர உருவை படகிலிருந்து நதிக்கரைக்கு அவர்கள் மாற்றினார்கள். அதைச் சுற்றிலும் தங்களது கயிறுகளால் கட்டினார்கள், ஒன்று சேர்ந்த முயற்சியில், மணலுக்குக் குறுக்காகச் சட்டங்களை வைத்து, அதை உருளைகளின் மீது வைத்தார்கள். முன்னேறி வந்த கொதிகலம் அலைந்தது, அதனுடைய முட்டாள்தனமான வட்டமான வாய், இந்த ஆட்களுடைய மகிழ்ச்சியான வலிமைக்கு முன் வாய் பிளந்தது என்று நிகீதவுக்குத் தோன்றியது. குடித்திருந்த அப்பாவும் மற்றவர்களோடு சேர்ந்து இழுத்தபடி, உணர்ச்சி வயப்பட்டுக் கத்தினார்:

''மெல்ல, அங்கே, மெல்லப் போங்கள்!''

இரும்புக் கோர உருவத்தின் செந்நிறப் பக்கத்தை அவர் உள்ளங்கையால் அடித்தார், அதனிடம் வலியுறுத்துவது போலக் கூறினார்:

''உருளு, கொதிகலமே, உருளு!''

வழக்கத்திற்கு மாறாகக் கொதிகலம் மூர்க்கமாக அலைந்து, முன் உருளையினின்றும் அவசரமில்லாமல் சாய்ந்து, அதனது முனை மழுங்கிய குடுவை தரையில் பதிந்த போது, அவர்கள் ஆலையினின்றும் நூறு கஜ தூரத்தில் மட்டுமே இருந்தனர். அதனது வட்ட வாயினின்றும் வந்த அவன் தந்தையின் காலுக்கு மேலாக சாம்பல் நிறத்தில் தூசி படிந்து இருப்பதை நிகீதா பார்த்தான். கனத்த கொதிகலத்தைச் சுற்றிலும் ஆட்கள் கோபத்தோடு கூடினார்கள்; உருளையைக் கீழே தள்ள முயன்றார்கள். ஆனால் அவர்கள் களைத்துப் போய் விட்டார்கள். கொதிகலம் மணலில் உறுதியாகப் பதிந்து கொண்டு விட்டது. அவர்கள் தங்களால் முடிந்த அளவுக்குச் செய்து பார்த்தும், அது மிக ஆழத்தில் போய்க் கொண்டிருந்தது. தனது கைகளில் ஒரு நெம்பு கோலை வைத்துக் கொண்டு கத்தியபடி, மற்றவர்களோடு சேர்ந்து அர்தமோனவும் தூக்க முயன்றார்:

''கூட்டாளிகளே, எல்லாரும் சேர்ந்து! எல்லாரும் சேர்ந்து—இப்போது!...''

கொதிகலம் அரை குறையாக அசைந்தது, திரும்பவும்

அழுத்தமாகப் பதிந்து கொண்டது. தொழிலாளர்கள் கூட்டத்தை விட்டு தன் அப்பா வந்து கொண்டிருப்பதை நிகீதா பார்த்தான், அவரது நடைபாணி விநோதமானதாகவும், பார்த்திராதது போலவும் இருந்தது, அவரது முகங் கூட விநோதமாகவும், பார்த்திராதது போலவும் இருந்தது. ஒரு கையானது அவரது தாடிக்குள்ளாக நுழைந்து அவரது தொண்டையைப் பற்றிக் கொண்டிருந்தது. மற்றொன்று குருடனைப் போல காற்றில் தட்டித் தடவித் தேடியது. கிழட்டு நெசவாளி அவருக்குப் பின்னே அருவருப்பாக நடந்து சென்றவாறு கத்தினான்:

''கொஞ்சம் மண்ணைச் சாப்பிடு, கொஞ்சம் மண்...''*

நிகீதா தன் தந்தையிடம் ஓடினான். அர்தமோனவ் விக்கினார், துப்பினார். ஒரு துளி குருதி நிகீதாவின் காலடியில் விழுந்தது. தந்தை சோர்வாகச் சொன்னார்:

''குருதி.''

அவரது முகம் வெளிறிப் போயிருந்தது. அச்சத்தால் அவரது கண்கள் இமைத்தன. அவரது பற்கள் படபடத்தன, அவரது பெரும் வலிமைமிக்க உடல் முழுக்கவே குறுகிப் போவது போலக் காணப்பட்டது.

கையால் அவரைப் பற்றியபடி ''உனக்கு அடிபட்டு விட்டதா?'' என்று நிகீதா கேட்டான். அவனை நோக்கித் தன் னை இழுத்துச் சென்ற தந்தை மிகவும் தாழ்ந்த குரலில் பதில் சொன்னார்:

''ஒரு குருதி நாளம் வெடித்துவிட்டதென்று நினைக்கிறேன்...''

''கொஞ்சம் மண்ணைச் சாப்பிடு, நான் சொல்கிறேன்...''

''என்னைத் தனியே விடு, இங்கிருந்து போய்விடு!''

மீண்டும் அர்தமோனவ் அதிகமாகக் குருதி துப்பினார். தடுமாற்றத்தோடு அவர் முணுமுணுத்தார்:

''அது வந்து கொண்டே இருக்கிறது. எங்கே உல்யானா?''

கூனன் வீட்டிற்கு ஓடவிருந்தான், ஆனால் அவனுடைய அப்பா அவனது தோளை உறுதியாகப் பற்றி நிறுத்தினார். தலை குனிந்தபடி அர்தமோனவ், தனது கால்களில் மாற்றி

---

* கனமான பொருள்களைத் தூக்குகின்ற போது யாரேனும் காயப்பட்டுப் போனால், கொஞ்சம் மண்ணைச் சாப்பிட்டால், அவன் திரும்பவும் தனது உடல்நலம் பெறுவான் என்ற நம்பிக்கை இருந்து வந்தது. (ப-ர்.)

மாற்றி நின்றபடி, தொழிலாளர்களின் கோபக் கூக்குரல் களின் இடையே அரை குறையாகக் கேட்ட, அவர்கள் எழுப்பிய பல்லரைப் பொலியைக் கேட்பது போல நின்றார்.

''என்ன விஷயம்?'' என்று கேட்ட படி, ஆழமான ஆற் றின் குறுக்காகப் போடப்பட்ட ஒடுக்கமான பலகையின் மீது நடக்கும் ஒருவரைப் போல எச்சரிக்கையாக நடை போட்டு, வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினார். தன் மகளுக்கு பிரியா விடை தெரிவித்தபடி, பய்மகோவா முற்றத் தில் நின்றாள். அர்தமோனவ் அவளது பார்வையில் பட்ட போது, அவளது அழகிய முகம் விநோதமாக முறுக்கிக் கொண்டு, ஒரு சக்கரம் போல, வலமும் பின்னர் இடமுமாக நெளிந்து, வெளிறிப்போனதை நிகீதா கவனித்தான்.

முற்றத்துப் படிகளில் அர்தமோனவ் நிலை குலைந்து சாய்ந்து, கூடுதலான அளவில் விக்கிக் கொண்டு குருதியைத் துப்பிய போது ''சீக்கிரம் ஐஸ்'' என்று கத்தினாள். ஒரு கனவு போல, தீஹன் முணுமுணுப்பதை நிகீதா கேட்டான்:

''ஐஸ் தண்ணீர் தானே. தண்ணீரிலிருந்து உங்களால் குருதி உண்டாக்க முடியாது...''

''அவர் கொஞ்சம் மண்ணை மென்றிருக்க வேண்டும்...''

''தீஹன், குதிரையில் சென்று பாதிரியை அழைத்து வா...''

''அவரைத் தூக்கி உள்ளே கொண்டு வாருங்கள்,'' என்று அலெக்ஸி உத்தரவிட்டான். தன் தந்தையினுடைய முழங்கையை நிகீதா பற்றினான். ஆனால் யாரோ அவ னுடைய நுனி விரல்களில் பலமாக மிதித்து விட்டார்கள், கண நேரத்திற்கு ஒவ்வொன்றும் இருளானது போலாகி விட்டது. பிறகு, அவனுடைய கண்கள் முன்னிலும் அதிக மான கூர்மையோடு பார்க்கத் தொடங்கின; தன் தந்தை யினுடைய ஆட்கள் நிறைந்த அறையிலும், முற்றத்திலும் மக்கள் பரபரத்துக் கொண்டிருந்தது மனநிலை திரிந்த நிலை யில் இவனது மூளையில் பதிந்து கொண்டிருந்தது. தீஹன் முற்றத்திலே வட்டமிட்டுக் கொண்டிருந்தான்; நீண்ட நடை போட்ட ஒரு பெரிய கருப்புக் குதிரையை அவனால் சமா ளிக்க முடியவில்லை. படலையில் குதிரை திடுக்கிட்டது, அது எகிறியது, வட்டமடித்தது, கோபத்தோடு தனது தலையை ஆட்டிக் கொண்டிருந்தது. அதற்கு முன்னால் மக்கள் பரவலாக நின்றனர். வானத்திலே உதய சூரியனது பெருந் தீ போன்ற ஒளியால் தூண்டப்பட்டு, அச்சமுற்றது.

பிறகு, கடைசியாக, அது வெளியே பாய்ந்து குதித்தோடிச் சென்றது; ஆனால் கொதிகலத்தின் அழுத்தமான சிவப்பு நிறத்தைப் பார்த்ததும் அது திடுக்கிட்டது, தீஹனைக் கீழே தள்ளியது, முற்றத்தின் பக்கம் திரும்பி, கனைத்துக் கொண்டும், தனது வாலை ஆட்டிக் கொண்டும் இருந்தது.

யாரோ கத்தினார்கள்:

''பையன்களே! ஓடி வாருங்கள்...''

தனது கருமையான, கூர்மையான தாடியைத் திருகிக் கொண்டு சன்னல் சட்டத்தில் அலெக்ஸி அமர்ந்திருந்தான். அவனுடைய கடுமையான, மகிழ்ச்சியற்ற முகமானது நலிந்து மெலிவுற்றிருந்தது, தூசியால் மூடப்பட்டது போல பழுப்பு நிறமாகக் காணப்பட்டது. கண்ணை இமைக்காதபடி, மக்களுடைய தலைகளுக்கு மேலாகவும், அர்தமோனவ் படுத்திருந்த படுக்கைக்கு மேலாகவும், அறையின் குறுக்காக உற்று நோக்கினான். விநோதமாக மாறிய குரலில் தந்தை முணுமுணுத்துக் கொண்டிருந்தார்:

''ஆக நான் தவறு செய்துவிட்டேன். இது கடவுளினுடைய விருப்பம். பையன்களே, உல்யானாவை உங்கள் தாயாக உங்களிடம் விட்டுச் செல்கிறேன்—கேட்கிறீர்களா? உல்யானா, கிறிஸ்துவின் பெயரால் இவர்களுக்கு உதவி செய்... ஆ! வெளியாட்களை அப்பால் அனுப்புங்கள்...''

அவரது வாய்க்குள்ளாகப் பனிக்கட்டித் துண்டுகளைப் போட்டபடி ''அப்படியே இரு, இங்கே வெளியாட்கள் யாருமில்லை,'' என்று பய்மகோவா சோகத்தோடு முணுமுணுத்தாள்.

அர்தமோனவ் பனிக்கட்டியை விழுங்கிவிட்டு, தயக்கத்தோடு பெருமூச்சு விட்டார்:

''எனது பாவத்திற்கு நீங்கள் நீதிபதி அல்ல; அவளைக் குற்றம் சொல்ல முடியாது; நதால்யா, நான் உன்னிடம் கடுரமாக இருந்தேன், ஆனால் பரவாயில்லை. எங்கே என் பையன்கள்? பியோத்தர், அல்யோஷா நட்போடு வாழுங்கள். மக்களை நன்றாக நடத்துங்கள். அவர்கள் நல்ல மாதிரியானவர்கள். மிக நல்ல மக்கள். அல்யோஷா, உன்னுடைய இந்தப்... பெண்ணையே மணந்து கொள். அது எல்லாம் சரிதான்!''

''அப்பா, எங்களை விட்டுப் போய்விடாதே,'' தனது முழங்காலில் நின்றபடி பியோத்தர் கெஞ்சினான்; ஆனால்

அலெக்ஸி அவனை முழங்கையால் இடித்து, கிசுகிசுத்தான்:
''நீ என்னடா? நான் நம்ப மாட்டேன்...''

ஒரு செப்புப் பாத்திரத்தில் வைத்து சமையல் கத்தியால் பனிக்கட்டியை நதால்யா உடைத்துக் கொண்டிருந்தாள். பனிக்கட்டி நொறுங்கி, பாத்திரத்தில் மோதியது. இந்த ஓசைகளோடு பெண்ணினுடைய தேம்பியழுகின்ற ஓசையும் சேர்ந்து கொண்டது. அவளுடைய கண்ணீர் பனிக்கட்டிக்கு மேலாக வடிவதை நிகீதா கண்டான். மஞ்சள் நிற சூரிய ஒளிக்கற்றை அறைக்குள்ளாக நுழைந்து, கண்ணாடியில் பிரதிபலித்து, சுவரின் மீது ஓர் உருவமற்ற, துடிக்கின்ற மையத்தை உருவாக்கி, சிவப்பு நிறமான, நீண்ட மீசை கொண்ட சீன ஆட்களை, இரவு வானத்தைப் போல சுவர்த் தாளில் இருந்தது மறைக்க முயன்றது.

தன் தந்தை தன்னை நினைத்துப் பார்க்கட்டும் எனக் காத்திருந்தபடி, நிகீதா அர்தமோனவின் காலருகில் நின்றான். இல்யாவின் அடர்ந்த சுருண்ட முடியை பய்மகோவா சீவி விட்டுக் கொண்டிருந்தாள். அவரது வாயின் ஓரத்திலிருந்து முடிவில்லாதபடி வழிந்து கொண்டிருந்த குருதியை ஒரு கைத் துண்டால் துடைப்பதற்காக அவ்வப்பொழுது சற்று இடைவெளி விட்டபடி இருந்தாள். அவரது முன் தலையிலும் நெற்றியிலும் வியர்வைத் துளிகள் அரும்பி வெளியேறின. அவருடைய மங்கலாகிப் போய்க் கொண்டிருக்கின்ற கண்ணை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தபடி, அவள் எதையோ கிசுகிசுத்தாள்—வழிபாட்டின் போது சொல்வதைப் போல ஆர்வத்தோடு கிசுகிசுத்தாள். அவளுடைய தோள்மீது ஒரு கையைப் போட்டபடியும், மற்றொன்றை அவளது முழங்காலின் மீது வைத்தபடியும், கனத்த குரலில், அவரது கடைசி விருப்பத்தை அவர் முணுமுணுத்தார்:

''எனக்குத் தெரியும். கிறிஸ்து உன்னைக் காப்பாற்றுவாராக. நம்முடைய சொந்த இடுகாட்டில் என்னைப் புதையுங்கள், நகரத்தில் வேண்டாம். அங்கே புதைப்பதற்கு நான் விரும்பவில்லை. அவர்களால் முடிந்ததெல்லாம்...''

திரும்பவும், தாங்க முடியாத பெருங் கவலையில், அவர் கிசுகிசுத்தார்:

''ஆ, ஆனால் நான் தவறு செய்து விட்டேன், ஓ, கடவுளே... தவறு செய்து விட்டேன்...''

ஓர் உயரமான, உடல் கூனிக் குறுகிய மனிதர், கிறிஸ்

மெழுகைப் போன்ற தாடியும் துயரார்ந்த கண்களும் கொண்ட பாதிரியார் வந்தார்.

''பொறு, ஃபாதர்,'' என்றார் அர்தமோனவ், திரும்ப வும் தனது மகன்களிடம் கூறினார்:

''பையன்களே, நீங்கள் மூவரும் சேர்ந்தே இருங்கள் சொத்தைப் பிரிக்காதீர்கள்! சண்டை போடாதீர்கள். பகைமையில் தொழில் நிலைக்காது. பியோத்தர், நீ தான் மூத்தவன், எல்லாவற்றுக்கும் நீயே பதில் சொல்—நீ கேட் கிறாயா? இப்போது போங்க...''

''நிகீதா,'' பய்மகோவா அவனுக்கு நினைவுபடுத்தினாள்.

''நிகீதாவை நேசிக்கிறீங்க. எங்கே அவன்? போங்க... பிறகு... பிறகு நதால்யா...''

மத்தியானத்திற்குப் பிறகு, சூரியன் இன்னமும் நன்மை பயப்பது போல உச்சி வானிலே பிரகாசித்த போது, குருதிக் குறைவினால், அவர் இறந்து போனார். தலை உயரமாக வும், அவரது மெழுகு போன்ற முகம் கடுநோக்குக் கொண்ட தாகவும், அக்கறை கொண்டதாகவும் காணப்பட, தனது மார்பு மீது பணிவோடு மடித்து வைக்கப்பட்டிருந்த, தனது கைகளைச் சிந்தனை வயப்பட்டபடி பாதித் திறந்த கண் களோடு பார்ப்பது போலவும் அவர் படுத்துக் கிடந் தார்.

இந்த மரணத்தில், எதிர்பார்க்கப்பட்டது போல வீட்டி லுள்ளவர்கள் போதுமான அளவுக்குத் துயரமும் திகைப் பும் அடையாது வியப்புற்றது போல நிகீதாவுக்குத் தென் பட்டது. இந்த வெறுமையான வியப்பு பய்மகோவாவைத் தவிர எல்லாரிடமும் இருந்ததை அவன் உணர்ந்தான். செயலற்றுப் போன ஓர் உருவமாய், உலகத்தைச் செவிமடுக் காமல், தனது கைகள் தனது முழங்காலின் மீது தளர்ந்து கிடக்க, தன்னுடைய கண்கள் அசையாதபடி தாடிக்கு மேலிருந்த கல்லாகிப் போன முகத்தின் மீது பதிந்திருந்த அவள் இறந்துபோனவர் அருகே கண்ணீர் இன்றி உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

தன்னைத்தானே வளைந்து கொடுக்காதவனாகவும், கண்டிப்பானவனாகவும் பியோத்தர் வைத்துக் கொண்டான். மிக அதிகமாகவும், அதிக இரைச்சலுடனும் பேசினான், அவ னுடைய தந்தை படுத்திருந்த அறைக்கு வந்த போது, அங்கே நிகீதாவும், தடித்த சந்நியாசினியும் மாறிமாறி தாவீதின் தோத்திரப் பாடல் திரட்டுச் சுவடிகளைப் புரட்டி இசை

யோடு ஓதிக் கொண்டிருந்தார்கள். தன் தந்தையின் முகத்தை உசாவுகின்ற முறையில் பியோத்தர் உற்றுப் பார்ப்பான், தானாகவே சிலுவை வைத்துக் கொள்வான், படுக்கை அருகே இரண்டு அல்லது மூன்று நிமிடங்கள் நிற்பான், கட்டை விரல் நுனியால் எச்சரிக்கையோடு நடந்தபடி அறையை விட்டுச் செல்வான். பிறகு அவனது தடித்த உருவம் முற்றத்திலும், பழ மரங்களுக்கு இடையிலும் காணப்படும்; அவன் எதையோ தேடிக் கொண்டு இருப்பது போலக் காணப்படும்.

இறுதிச் சடங்கிற்கான ஏற்பாடுகளைச் செய்வதில், அலெக்ஸி உணர்ச்சிப் பரபரப்பில் இருந்தான். வண்டியில் அவன் நகரத்திற்கு விரைந்து செல்வான், திரும்பி வருவான், பிறகு அடக்கம் செய்வது மற்றும் நினைவு விருந்து வைப்பது பற்றிய வழக்கங்களையும் மரபுகளையும் உல்யானாவிடம் கேட்பதற்காகத் தன் தந்தையின் அறைக்கு ஓடுவான்.

''பொறு,'' என்று அவள் பதிலளிப்பாள், சூடாகவும் களைப்பாகவும் இருந்த அலெக்ஸி காணாமற் போவான். தனது தாயாரைக் கொஞ்சம் உணவு அல்லது ஒரு குவளைத் தேநீர் கொள்ளக் கெஞ்சியபடி, அச்சத்துடனும், பரிவுடனும் நதால்யா உள்ளே வருவாள். அதை அவள் அமைதியாகக் கேட்டுப் பதிலளிப்பாள்:

''பொறு.''

அர்தமோனவ் உயிருடன் இருந்த நேரத்தில், தான் தனது தந்தையை நேசித்தானா இல்லையா என்பதை நிகீதா ஒருபோதும் அறியான். அவன் அச்சவுணர்வை மட்டுமே பெற்றிருந்தான்—இந்த அச்சத்தால் பாதிக்காதபடி, தன் மீது பாசத்தைக் காட்டாத, உண்மையில், கூனன் உயிரோடு இருக்கிறானா செத்து விட்டானா என்பதைப் பற்றி சிறிதும் கவனிக்காத, இந்த மனிதரது ஆர்வமிக்க நடவடிக்கையில் மரியாதை வைத்திருந்தான். ஆனால் இப்போது நிகீதாவுக்குத் தான் மட்டுமே நேர்மையான முறையில் ஆழ்ந்து தன் தந்தையை நேசித்தது போலக் காணப்பட்டது. இந்த வலிமை மிக்க மனிதரது திடீர் மரணத்தால், இரக்கமற்ற தீமைகளை மொத்தமாக அநுபவிக்கக் கூடியத் துயரார்ந்த மனச் சோர்வால் அவன் நிறைந்து காணப்பட்டான்; அவனது நெஞ்சு சுருங்கியதால் சிரமப் பட்டே அவனால் சுவாசிக்க முடிந்தது. தோத்திரப் பாடல்

...ம் தனது முறையை எதிர்பார்த்தபடி, அவன் மூலை
...டு பேழையின் மீது அமர்ந்திருந்தான். பிரபலமான
...கள் அவனது மூளையில் சோர்வாகக் கடந்து சென்
றன. அதே வேளையில் அவனுடைய கண்கள் அறையின்
...வெதுப்பான அரையிருளை, மெழுகு வர்த்திகளினின்
...ம் அலைந்தபடி இருந்த மஞ்சள் நிற வனப்புகளை
...ப் பார்த்தன. தங்களது தோள்களின் மேலாக இருந்த
...டிகளினின்றும் தொங்கிய தேயிலைப் பொட்டலங்
...ச் சமநிலைப் படுத்தியபடி, நீளமான மீசை கொண்ட
...க்காரர்கள் சுவர்களின் மீது கழைக் கூத்தாடிகள்
... ஒட்டிக் கொண்டு நின்றார்கள். பதினெட்டுச்
...க்காரர்கள், இரண்டு வரிசையாக, சுவர்த் தாளின்
...வொரு துண்டிலும் இருந்தார்கள். ஒரு வரிசையில் அவர்
...ள் முன் நோக்கி, கூரையை நோக்கிச் சென்று கொண்
...ந்தார்கள்; மற்றதில், கீழ் நோக்கி, தரையை நோக்கிய
... . நிலவொளியின் எண்ணெய் போன்ற ஒரு கதிர் சுவரின்
... விழுந்தது, இங்கே சீனாக்காரர்கள் மேலும் கீழுமாகச்
...றுப்பாகச் செல்வது போலக் காணப்பட்டனர்.

திடீரென்று, சலசலப்பூட்டுவது போல வந்து கொண்
...ந்த தோத்திரப் பாடல்களுக்கு இடையே, தணிவான,
...யமான கேள்வி ஒன்றை நிகீதா செவிமடுத்தான்:

''அவர் உண்மையாகவே இறந்து விட்டாரா? ஓ கட
...ளே?''

அது உல்யானா, தாங்கிக்கொள்ள முடியாத துயரத்தை
...ன்றின்று இயக்குவது போல அவள் குரல் இருந்தது. வருத்
...த் தெரிவிப்பது போல பதில் பேச முயன்ற சந்நியாசினி
... வாசிப்புக்கு இடைவெளி விட்டாள்:

''அவர் இறந்து விட்டார், தாயே, கடவுளது விருப்பப்
... அவர் இறந்து விட்டார்...''

இது முற்றிலும் தாங்கிக்கொள்ள முடியாததாக இருந்
... . நிகீதா எழுந்தான், அந்தச் சந்நியாசினியின் மீது
... மனக் கசப்பைத் தாங்கிய இதயத்தைச் சுமந்த
... , ஓசை எழும்ப அறையை விட்டு அகன்றான்.

வெளிவாசலுக்கு அருகே ஒரு பெஞ்சின் மீது தீஹன்
...ந்திருந்தான். ஒரு மரக் கட்டையிலிருந்து சிராய்களை
... முரித்துக் கொண்டிருந்தான். ஒன்றன் பின் ஒன்
... சிராய்களை மணல் மீது திணித்து, அவை மறையும்

மட்டும் தனது காலால் அவற்றைக் கீழே அழுத்தினான். அவனுக்கு அருகே கீழே அமர்ந்த நிகீதா வார்த்தை ஏதுமின்றி கவனித்துக் கொண்டிருந்தான். தீஹனுடைய வேலை அச்சம் விளைவிக்கின்ற நகரத்து முட்டாள் அந்தோனுஷ்காவை நினைவு படுத்தியது. இவன் ஒரு கரிய, சுருள் முடி கொண்ட இளைஞன், ஒரு காலின் கனுக்காலில் திருகிக் கொண்டும், கழுகினைப் போன்று வட்டமான கண்களும் பெற்றிருந்தான். அந்தோனுஷ்கா மணலில் ஒரு குச்சியால் வளையங்களைத் தேடுவான், இந்த வளையங்களுக்குள்ளாகக் குச்சிகளும்,சிராய்களும் கொண்ட சிறிய கூண்டுகளைக் கட்டுவான். அவனது வீடு முடிந்ததும், தனது காலுக்குக் கீழே அதை உடனடியாகச் சிதைப்பான். மூக்கால் பாடிய படி, இடிபாடுகளுக்கு மேலாக மணலையும் தூசியையும் கிளறுவான்:

> ஓ, கிறிஸ்து எழுந்திட்டார், எழுந்திட்டார்,
> சக்கரம் ஒன்றை வண்டி இழந்தது, சக்கரம்
> ஒன்றை இழந்தது,
> புத்திர்மா, தாலாட்டு, பஸ்தார்மா,
> தாலாட்டு, கிறிஸ்து, தாலாட்டு.

''ஆக அது எப்படி இருக்கிறது, ஹும்?'' என்றான் தீஹன். ஒரு கொசுவைக் கொல்வதற்காக அவன் தன்னுடைய கழுத்தின் மீது தட்டினான், முழங்காலுக்கு மேலாகக் கையால் தடவி விட்டான், நிலவைப் பார்த்தான், நதிக்கு மேலாக ஒரு வில்லோ மரக் கிளையைப் பிடித்தான். பிறகு அவனுடைய கண்கள் தடித்துக் கனத்த கொதிகலம் பக்கம் திரும்பின.

''இந்த ஆண்டு கொசுக்கள் முன்னதாகவே வந்து விட்டன,'' என்றான் அமைதியாக. ''ஆமாம், கொசு இருக்கிறது, மேலும்...''

ஆனால் அவன் பேச்சை முடிப்பதற்கு முன்னர், என்ன தொடருமோ என்று ஒருவகையில் பயந்த கூனன், மிகக் கண்டிப்பாக அவனுக்கு நினைவூட்டினான்:

''ஆனால் நீ கொசுவைக் கொன்று விட்டாய்.''

முற்றப் பாதுகாவலனிடமிருந்து அவன் மிகவும் விரைந்து வெளிச் சென்றான். ஓரிரு நிமிடங்களுக்குப் பிறகு, தனக்குத் தானே என்ன செய்வதென்று தெரியாமல், திரும்பவும் தன்னுடைய தந்தையின் அறைக்குத் திரும்பி வாசிப்பதி

...றும் சந்நியாசினிக்கு ஓய்வு கொடுத்தான். தோத்திரப் பாடல்களின் வார்த்தைகளில் தனது துயரத்தைக் கொட்டி ...கள், நதால்யா உள்ளே வருவதை அவன் கவனிக்க வில்லை. திடீரென்று, அவனுக்குப் பின்னால் அவளது மென்மையான குரலின் அதிர்வலைகள் கேட்டன. அவள் அருகே வந்த போது தான் ஏதாவது சொல்லக் கூடும் அல்லது ஏதாவது வித்தியாசமானதாக—ஒரு வகையில் ஏதாவது ...முள்ளதாகச் செய்யலாம் என அவன் எப்பொழுதுமே உணர்ந்தான். இந்தப் பயபக்தி மிக்க வேளையில் கூட தனது விருப்பத்திற்கு மாறாகக் குறைந்த அளவிலேனும் அத்தகைய வார்த்தைகள் வெளிவரக் கூடும் என்று அவன் ...யந்தான். தனது கூனலின் நிழல் விழுகின்ற வரைத் தனது தலையைக் கீழே தாழ்த்தினான், திடீரென்று உடைந்து போய்விட்டிருந்த தனது குரலைத் தாழ்த்தினான், அதன் பிறகு ஒன்பதாவது பாசுரத்துடன் சோகத்தோடு இணைந்து வந்த இரு குரல்களைக் கேட்டான்.

"பார், அணிவதற்காக அவருடைய சிலுவையை நான் எடுத்துக் கொண்டு விட்டேன். அதை நான் அணிவேன்."

"அம்மா, அன்பே, நானுங்கூடத் தனிமையாகி விட்டேன்."

இந்தக் கண்ணீர் மல்கும் கிசுகிசுப்புகளைப் போக்குவதற்காக, நிகீதா மிகவும் உரத்த குரலில் இசையோடு ஓதினான், ஆனாலும் அவனால் கேட்காதிருக்க முடியவில்லை.

"கடவுள் நமது பாவத்தை ஏற்றுக் கொள்ள மாட்டார்..."

"வேறொரு கூட்டில் நான் மட்டும் தனியாக..."

"உன்னுடைய உணர்வோடு நான் சேரிடம் போய்ச் சேர்வேனா? அல்லது உன்னுடைய முன்னிலையிலிருந்து நான் சேரிடத்திற்கு ஓடிப் போவேனா?" இசையோடு ஓதினான் நிகீதா, அச்சம் மற்றும் பயம் மிகுந்த இந்தக் கூக்குரலுக்கு இடையே, துயரம் மிகுந்த ஒரு பழமொழி அவனது நினைவுக்கு வந்தது: "காதலில்லாத வாழ்க்கை துயரமானது; மேலும் காதல் வரும்போது—இரட்டைத் துயரம்". ...ந்து வெட்கத்துடன், நதால்யாவின் துயரம் ஒரு மகிழ்ச்சி ...ான நம்பிக்கையைத் தனக்குத் தருவதாக அவன் உணர்ந்தான்.

காலையில், நகரத்திலிருந்து பார்ஸ்கி வண்டியில் வந்தார், அவருடன் "அரை-வேக்காடு" என்று பட்டப் பெயர்

சூட்டப்பட்ட, பாவமற்ற கண்களைக் கொண்ட நகரத்து தலைவனான யாக்கவ் ஜிதேய்கின் வந்தான். வேகாத பிசைந்த மாவில் செய்யப்பட்டது போலச் சிறுத்தும், உருண்டையாயும், வெளிறிய தோற்றத்துடனும் காணப் பட்டான். ஒருவகையான பயத்தோடு கூடிய சந்தேகத் துடன், கருத்துப் போன முகத்தைப் பார்த்தபடி, அவர்கள் இறந்து போனவருக்கு முன்னால் தலையைத் தாழ்த்தினார்கள். தெளிவாகவே, அவர்களுங் கூட, அர்த மோனவினுடைய மரணத்தில் திகைப்புற்றுப் போனார்கள். பிறகு ஜிதேய்கின், பியோத்தரிடம் தனது கடிக்கின்ற, அமிலக் குரலில் பேசினான்:

''உங்கள் அப்பாவை நீங்கள் உங்களுடைய சொந்த இடுகாட்டில் புதைக்க நினைப்பதாக அவர்கள் கூறுகிறார் கள்—அது அப்படித்தானா? அது நகரத்திற்குச் செய்யும் மிகப் பெரிய கேவலமாக இருக்கும், பியோத்தர் இல்யீச், அது எங்களோடு எந்த விதமான உறவும் வைத்துக் கொள்ள விரும்பாமல், நண்பர்களாக வாழ விரும்பாதது போ லாகும்—அது அப்படித் தானா?''

தனது பற்களை நெறித்தபடி, அலெக்ஸி தனது சகோ தரனிடம் கிசுகிசுத்தான்:

''அவர்களை வெளியே விரட்டி அடி!''

''உறவுக்காரப் பெண்ணே, அது வழியல்ல. நீங்கள் எங்களைப் பகைத்துக் கொள்கிறீர்கள். இது எங்களுக்கு நன்றாயில்லை,'' என்று பார்ஸ்கி உல்யானாவைத் தாக்கி இரைந்து பேசினார்.

ஜிதேய்கின் பியோத்தரைக் கேள்வி கேட்கத் தொடங் கினான்:

''பாதிரியார் கிலேப், அவர் தான் உங்களுக்கு இத்தகைய ஆலோசனையைக் கூறியிருக்கக் கூடும்? இல்லை, இல்லை. உங்கள் முடிவை மாற்றிக் கொள்ளுங்கள். உங்கள் தந்தை இந்த மாவட்டத்தில் மிகப் பெரிய உற்பத்தியாளர், புது மாதிரியான வியாபாரத்தின் நிறுவனர், நகரத்திற்குப் பெருமை சேர்த்தவர். போலீஸ் அதிகாரி கூட வியப்படை கிறான்: நீங்கள் கட்டாயம் புறச் சமயத்தினராக இருக்க வேண்டும் என்று கூறுகிறான்.''

ஒரே வார்த்தையில் தெரிவிக்க முயன்ற பியோத்தரைப் பொருட் படுத்தாதபடி, இடை நிறுத்தாமல் அவன் விரைந்து பேசினான்; ஆனால் இறுதியாக அது தன் தந்தையினுடைய

விருப்பம் என்று விளக்குவதில் பியோத்தர் வெற்றிய டைந்த போது, ஜிதேய்கின் உடனடியாக அடங்கிப் போனான்.

''எப்படியாகிலும், நாங்கள் இறுதிச் சடங்கில் கலந்து கொள்வோம்.''

அவன் பேசியதற்கும் அப்பால் வேறு ஏதோ நோக்கங் களுடன் அவன் வந்திருக்கிறான் என்பது எல்லாருக்குமே மிகத் தெளிவாகிவிட்டது. பார்ஸ்கி உல்யானாவைச் சுவ ரோடு அழுத்தியபடி, அவளிடத்தில் எதையோ கிசுகிசுத்துக் கொண்டிருந்த அறையின் மூலை நோக்கி அவன் நகர்ந் தான்; ஆனால் ஜிதேய்கின் அவர்களோடு சேர்ந்து கொள் ளும் முன்னமேயே, உல்யானா இரைந்து கத்தினாள்:

''நீ ஒரு முட்டாள், உறவுக்காரனே! போய் விடு!''

அவளது உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன, புருவங் கள் நெளிந்தன. கர்வமாகத் தனது தலையை நிமிர்த்திய படி, பியோத்தரிடம் கூறினாள்:

''இந்த இரண்டு பேரும், பம்யாலவும் வரபோனவும் அவர்களிடம் ஆலையை விற்பது பற்றி சகோதரர்களா கிய உங்களிடம் என்னைப் பேசும்படி விரும்புகிறார்கள். அவர்களுக்கு உதவுவதற்காக எனக்குப் பணம் தருவதாகக் கூறுகிறார்கள்...''

''வெளியே போங்கள்... பெரிய மனிதர்களே!'' என்ற அலெக்ஸி கதவைச் சுட்டிக் காட்டினான்.

ஜிதேய்கின் ஊளையிட்டான், இரைந்தான், அசட்டுத் தனமாகச் சிரித்தான், பார்ஸ்கியை முழங்கையால் கதவை நோக்கித் தள்ளி வெளியேற்றினான். பய்மகோவா பேழை யின் கீழே அமர்ந்து கத்தத் தொடங்கினாள்:

''அவரது புனிதமான நினைவை அவர்கள் அழிக்க விரும்புகிறார்கள்...''

தன் தந்தையினுடைய முகத்தைக் கீழே உற்றுப் பார்த் தபடி, அலெக்ஸி, வினைமுறைமையோடு அறிவித்தான்:

''அம் மாதிரியாக வாழ்வதற்கு நான் விரும்ப மாட்டேன்! அதற்கு பதில் என் மண்டைடைபை உடைத்துக்கொள்வேன்.''

''பேரம் பேசுவதற்கு மிக அருமையான நேரம்,'' என்று பியோத்தர் முணுமுணுத்தான், அவனுங்கூட தன் தந்தை யை நோக்கிப் பார்த்தான்.

நிகிதாவிடம் நெருங்கி வந்து, அவனிடத்தில் நதால்யா மென்மையாகக் கேட்டாள்:

''நீயும் ஏன் ஏதாவது சொல்லாமல் இருக்கிறாய்?''

தன்னைப் பற்றி நினைத்துப் பார்த்ததை அறிந்து அவன் நெகிழ்ந்தான்; நதால்யா அவனை நினைத்துப் பார்ப்பது மகிழ்ச்சியாக இருந்தது, பதில் பேசிய போது அவனால் மகிழ்ச்சியான புன்னகையை அடக்க முடியவில்லை:

''ஏன்... நீயும் நானும்...''

ஆனால் அவள் ஏற்கெனவே சிந்தனையில் மூழ்கியவளாகத் திரும்பி நின்றிருந்தாள்.

நகரத்தைச் சேர்ந்த சிறந்த ஆட்களில் பெரும்பாலும் எல்லாருமே இல்யா அர்தமோனவினுடைய இறுதிச் சடங்கில் கலந்து கொண்டார்கள். போலீஸ் அதிகாரி வந்திருந்தான், மெலிந்தும் உயரமாகவும், மழிக்கப்பட்ட மோவாயுடன், சாம்பல் நிறப் பக்கக் குறுமீசை மயிருடன். அவன் மணற் பாங்கான சாலையில் பியோத்தருடன் கம்பீரமாக நொண்டியபடி நடந்தான்; இரண்டு முறை சரியாக அதே வார்த்தைகளில் அவனிடம் கூறினான்:

''மேன்மை தங்கிய இளவரசர் கியோர்கி ராத்ஸ்கியால் இறந்து போனவர் அருமையான முறையில் எனக்குச் சிபாரிசு செய்து வைக்கப் பட்டார். ஒவ்வொரு வழியிலும் அந்த சிபாரிசுக்கேற்ப அவர் வாழ்ந்தார்.''

ஆனால் அவன் அறிவித்து அதிக நேரமாகி விடவில்லை:

''இறந்தவர்களைச் செங்குத்து மலைச்சரிவிற்குக் கொண்டு போவது சிரமமானது!''

கூட்டத்தினின்றும் பக்க வாட்டில் தனது பாதைக்காகத் தள்ளிக் கொண்டு வெளிவந்து, ஒரு பைன் மரத்து நிழலில் நின்றான், அவனது உதடுகள் இறுக்கமாக மூடியிருந்தன, கடந்து செல்கின்ற நகர மக்கள் மற்றும் வேலையாட்களின் கூட்டத்தை, போர்வீரர்களின் அணிவகுப்பைப் பார்வையிட நிற்பது போல பார்த்துக் கொண்டு இருந்தான்.

அது வெளிச்சமான பகல் நேரம். பூமியின் பிரகாசமான பச்சை மற்றும் மஞ்சள் நிறப் பொருள்களின் மீதும், மணற்பாங்கான இரு குன்றுகளுக்கிடையே மெதுவாக நகர்ந்து செல்கின்ற வண்ணமிகு ஊர்வலத்தின் மூன்றாவது குன்றின் மீது மீதும், சூரியன் வண்மையோடு காய்ந்தது. இங்கே ஏலவே பல சிலுவைகள் நின்றன, தெளிவான நீல வானத்திற்கு எதிராகச் சில கூர்மையாகத் தெரிந்தன, மற்றவை வளைந்து நின்ற பழைய பைன் மரத்தின் பரவி நின்ற கிளைகளுக்குக் கீழாக இருந்தன. வைரங்

அலைபாய் போல மணல் மின்னிக் கொண்டிருந்தது. மக்களு டைய கால்களுக்குக் கீழாக அவை மிதித்து நசுக்கப்பட்டன; அவர்களுடைய தலைகளுக்கு மேலாகப் பாதிரிகளின் சோர் வான பண்ணிசைப்புகள் அலைந்து நடுங்கின. துள்ளிக் கொண்டும் தடுமாறிக் கொண்டும் முட்டாள் அந்தோனுஷ் கா பின்புறமாக வந்தான். அவனுடைய வட்ட விழிகள், மயிரற்ற புருவங்களுக்குக் கீழாக, தரை மீது நிலையாகப் பதிந்திருந்தன. சாலையருகில் கிடந்த காய்ந்த குச்சிகளைப் பொறுக்குவதற்காக அவன் குனிந்தபடி இருந்தான். அவற் றைத் தனது சட்டைப் பைக்குள்ளாகத் திணித்துக் கொண் டான். அவனுங் கூட கீச்சுக் குரலில் பண்ணிசைத்தான்:

ஓ, கிறிஸ்து எழுந்திட்டார், எழுந்திட்டார்
சக்கரம் ஒன்றை வண்டி இழந்தது,
சக்கரம் ஒன்றை இழந்தது...

இந்தப் பாட்டைப் பாடுவதற்காக தெய்வ நம்பிக்கை கொண்டவர்கள் அவனை அடிக்கடி அடித்தார்கள். இந்த முறை, போலீஸ் அதிகாரி அச்சுறுத்தக் கூடிய வகையில் கத்தினான்:

''பேசாதிரு, முட்டாள்...''

ஒரு மோர்த்வினியன் அல்லது சுவாஷ் என்ற முறையில் நகர மக்கள் அந்தோனுஷ்கா மீது எந்த அன்பையும் வீணாக்கவில்லை, கிறிஸ்துவுக்காகத் துயருற்றவன் என்பது போலவும் அவன் மிக அதிகமாக மதிக்கப்பட முடியாதிருந் தான். எனினும், இன்னலை அழைத்து வரக் கூடியவன் என அவனை நம்பிக் கொண்டு, அவனுக்கு அவர்கள் பயந் தார்கள். இறுதிச் சடங்கு விருந்தில், அர்தமோனவ்களு டைய முற்றத்தில் மேசைகளுக்கிடையே துள்ளிக் குதித்து அவன் காணப்பட்ட போது, அருத்தமில்லாமல் கூக்குர லிட்டுக் கொண்டிருந்தான்: ''குவாதிர், குவாதிர், மணிக் கூண்டில் சாத்தான் இருக்கிறது, எனது மழை வரும், குளிர் வரும், கயாமாஸ்கள் கருப்புக் கண்ணீரில்!'' அங்கிருந் தவர்களின் கிசுகிசுப்பு:

''இப்போது அர்தமோனவ்களுக்கு எந்த அதிர்ஷ்டமும் இல்லாது போய்விடும்!''

இந்தக் கிசுகிசுப்புகளை பியோத்தர் கேட்டான். சற்று நேரங் கழித்து, முற்றத்தின் மூலையில் அந்த முட்டாளை டிஹோன் வியாலவ் பிடித்து வைத்திருந்ததைக் கவனித்தான்.

முற்றப் பாதுகாவலன் அமைதியாக ஆனால் தொடர்ந்தாற் போல வினவிக் கொண்டிருந்ததைக் கேட்டான்:

''கயாமாஸ்—என்றால் என்ன அருத்தம்? உனக்குத் தெரியாதா? இங்கே வெளியே போ! போ, போ...''

...மலைச்சரிவுகளில் சுழன்றோடும் இலையுதிர் கால கலங்கல் நீரோடைகள் போல ஓராண்டு நழுவிச் சென்றது. உல்யானா பய்மகோவாவினுடைய தலைமுடி நரைத்துப் போனது, அவளது நெற்றியில் வயதின் துயர ரேகைகள் தோன்றியது என்பதைத் தவிர முக்கியமான எதுவும் நடைபெறவில்லை. அலெக்ஸி புலன்களால் உணரக்கூடிய அளவுக்கு மாறி இருந்தான். சாந்தமானவனாகவும், பெருந்தன்மை மிக்கவனாகவும் மாறி இருந்தான், இன்னும் அதே நேரத்தில், செயல்வகையில் மகிழ்ச்சியற்ற வெறுப்பையும் வளர்த்துக் கொண்டிருந்தான், தன்னுடைய மகிழ்ச்சியான கிண்டல்களாலும் வேதனையூட்டும் வியப்புரைகளாலும் மக்களைத் தாக்கிக் கொண்டிருப்பது போல இருந்தது. தொழிலில், குறிப்பாகத் தன்னுடைய சுதந்தரமான, கட்டற்ற போக்கினால் பியோத்தர் தொல்லைப் பட்டான். ஒரு முறை அவன் கரடியோடு விளையாடியது போல, அதன் பிறகு அதைக் கொன்று விடுவதற்காக, ஆலையோடு அவன் விளையாடிக் கொண்டிருப்பது போலக் காணப்பட்டது. மேட்டுக் குடியினரின் வாழ்க்கையை அலங்கரிக்கக் கூடிய பொருள்களின் மீது அவன் ஒரு விநோதமான பலவீனத்தைப் பெற்றிருந்தான். பய்மகோவா அவனுக்குக் கொடுத்திருந்த ஒரு சுவர்க் கடிகாரம் தவிர, வேறு பிற சிற்றணிகளும் அவனுடைய அறையில் காணப்பட்டன, பயனற்றவை, ஆனால் பார்வைக்கு நன்றாக இருந்தன. சுவரில் ஒரு படம் தொங்கியது: குமிழ் மணியால் பின்னப்பட்டிருந்த ஒரு வளையத்தில் பெண்கள் நடனமாடினார்கள். அலெக்ஸி சிக்கனமானவனாக இருந்தான். பிறகு, ஏன் அவன் வீண்பகட்டானவற்றில் பணத்தைச் செலவிட்டான்? மிகவும் கூடுதல் பணச் செலவில் ஆடம்பரமான முறையில், வித்தியாசமாக அவன் உடையணியத் தொடங்கினான். தன்னுடைய கருத்த, கூர்மையான தாடியில் அவன் பெரிதும் அக்கறை காட்டினான், ஒரு சாதாரண விவசாயியைப் போல அல்லாது, வளரக் கூடிய மயிரைக் கன்னங்களினின்றும் மழித்து விட்டான். ஆகவே அவன் மெல்லமெல்ல எளிமையை இழந்து வந்தான். தனது இந்த அத்தை மகன்

பற்றி ஏதோ மிகவும் அந்நியமாகவும், தெளிவில்லாதது போலவும் பியோத்தருக்குப் பட்டது. அவநம்பிக்கையை மறைத்தபடி, அலெக்ஸியை அவன் கள்ளத்தனமாக கவனித்தான்.

மக்களிடத்தில் தன்னுடைய அணுகு முறை இருந்தது போலவே, தொழிலிலும் தனது அணுகு முறையில் பியோத்தர் எச்சரிக்கையாகவும், இடையறா விழிப்புடனும் இருந்தான். அவசரமில்லாத நடை பாணிக்குப் பயிற்சி கொடுத்துக் கொண்டான்; தனது வேலையை அவனே தேடிச் சென்று பெற்றான், அது மறைந்து போய் விடும் என்று எதிர்பார்ப்பதைப் போல, தன்னுடைய கரடிக் கண்களைத் திருகிக் கொண்டான். சில வேளைகளில் களைப்புற்று, விநோதமான, மனச் சோர்வுடன் கூடிய கிளர்ச்சியற்ற மேகத்திற்குள் அகப்பட்டுக் கொண்டது போல உணர்வான். அத்தகு கணங்களில், ஆலையானது உயிருடன் உள்ள, ஒரு கல்லாலான கொடு விலங்கு போலக் காணப்படும். அந்த விலங்கு பூமிக்கு அண்மையில் பதுங்கியும், இறக்கைகளைப் போல நிழல்களை ஏற்படுத்தியும், அதனுடைய வால் சிலிர்க்கச் செய்யும் கப்பல் புகைப்போக்கி போலவும் காணப்பட்டது. அதனது கொடிய முகபாவமானது அச்சம் தரும் பொருளாக இருந்தது. பகற் பொழுதில், பனிப் பற்களைப் போல சன்னல்கள் மினுமினுத்தன; குளிர் கால மாலையில், கொடுமையாகப் பழுக்கக் காய்ச்சிய இரும்பால் ஆனது போல இருந்தது. ஆலையினுடைய உண்மையான நோக்கம், அதனது ரகசியமான நோக்கம், மைமல் கணக்கான செயற்கைப் பட்டை நெய்வதில் இல்லை, ஆனால் வேறு ஏதோ ஒன்று, பியோத்தர் அர்தமோனவுக்கு ஏதோ நட்பில்லாத ஒன்று போலவே அது காணப்பட்டது.

தந்தை இறந்த முதலாவது ஆண்டில், இடுகாட்டில் நினைவு வழிபாடு முடிந்த பிறகு, குடும்பம் முழுமையும் அலெக்ஸியினுடைய பிரகாசமான, மகிழ்ச்சிமிக்க அறையில் ஒன்று கூடியது. ஒரு வகையில் நடுக்கத்தோடு அவன் பேசத் தொடங்கினான்:

''நாம் சச்சரவிட்டுக் கொள்ளக் கூடாது என்பது தந்தையினுடைய விருப்பம். அவர் சொன்னது சரிதான். இந்த இடத்தில் நாம் கைதிகளைப் போல இருக்கிறோம்.''

தனக்கருகில் உட்கார்ந்து கொண்டிருந்த நதால்யா, ஒரு வியப்பான பார்வையோடு, அலெக்ஸியை உற்று நோக்கி

யதை நிகீதா கவனித்தான். அலெக்ஸி மிகவும் மென்மை யாகத் தொடர்ந்தான்:

''ஆனால் நாம் சச்சரவிட்டுக் கொள்வதில்லை என் றால், அது ஒருவருடைய வழியில் மற்றவர் நிற்க வேண்டும் என்பது பொருளன்று. நம் எல்லாருக்குமாகச் சேர்ந்தது தான் தொழில், ஆனால் நம்முடைய வாழ்க்கை நம் ஒவ் வொருவருக்கும் சொந்தமான தனி வாழ்க்கை. அது அப் படித்தானே?''

''மேலே சொல்,'' தன் சகோதரனின் தலைக்கு மேலாக எதையோ பார்த்தபடி, எச்சரிக்கையோடு பியோத்தர் கூறி னான்.

''ஓர்லோவா என்பவளுடன் நான் வாழ்ந்து கொண்டிருக் கிறேன் என்பது உங்கள் எல்லாருக்கும் தெரியும். இப் பொழுது அவளை நான் மணக்க விரும்புகிறேன். நிகீதா நினைவிருக்கட்டும் — நீ நீரில் விழுந்த போது வருத்தப் பட்டவள் அவள் ஒருத்தி மட்டுமே?''

நிகீதா தலையாட்டினான். இன்று போல நதால்யா வுடன் இவ்வளவு நெருக்கமாக அவன் மிக அரிதாகத்தான் அமர்ந்திருக்கிறான். அது மிக மகிழ்ச்சியாக இருந்தது, நகரவோ, பேசவோ, மற்றவர்கள் என்ன சொல்லிக் கொண் டிருக்கிறார்கள் என்பதைக் கேட்கவோ அவன் விரும்ப வில்லை. ஏதோ நதால்யாவைப் புறப்பட வைத்தது, அவ ளது முழங்கை அவனுக்கு மேலாகத் தட்டிய போது, மேசைக்குக் கீழாக அவளது முழங்கால்களைப் பார்த்த படி அவன் முறுவலித்தான்.

''அவள் எனக்காகவே விதிக்கப்பட்டவள் என்று நான் நினைக்கிறேன். அவளுடன் என்னால் வாழ்க்கையை வித்தி யாசமானதாக ஆக்கிக் கொள்ள முடியும். வசிப்பதற்காக அவளை இங்கே அழைத்து வர நான் விரும்பவில்லை. நீங் கள் எல்லாரும் சேர்ந்து இருக்க மாட்டீர்கள் என்று நான் அஞ்சுகிறேன்.''

துயரம் நிரம்பிய தனது கண்களை உயர்த்தியபடி, உல் யானா பய்மகோவா அலெக்ஸியினுடைய உதவிக்கு வந்தாள்.

''நான் அவளை நன்றாக அறிவேன். செயலூக்கமும், கல்வியறிவும் பெற்ற அபூர்வமான பெண். மிகவும் சின்ன வளாக இருந்ததிலிருந்தே அவள் தனது குடிகாரத் தந்தை யைக் காப்பாற்றினாள். ஒன்று மட்டும் — அவள் தனது சொந்த வழியில் செல்வதற்கு விரும்புகிறாள். அவளோடு

நதால்யா ஒத்துப் போவாளா என்று எனக்குத் தெரிய வில்லை.''

''எல்லாருடனும் நான் ஒத்துப் போகிறேன்,'' என்றாள் நதால்யா உணர்ச்சி வயப்பட்டவளாக. அவளது கணவன் அவளையே பார்த்தான், தன் தம்பியிடம் கூறினான்:

''ஆமாம், அது உண்மையாக உன்னுடைய விவகாரம்.''

அவளுடைய வீட்டை தன்னிடம் விற்கும்படி அலெக்ஸி பப்னோவாவிடம் கூறினான்:

''இந்த வீடு உனக்கு எதற்கு?''

இதில் பியோத்தர் அவனுக்குத் துணை நின்றான், அவளிடம் கூறினான்:

''உன்னுடைய இடம் எங்களிடம் இருக்கிறது.''

''நல்லது, நான் போய் ஒல்காவிடம் இந்த மகிழ்ச்சியை சொல்கிறேன்,'' என்றான் அலெக்ஸி.

அவன் போய்விட்ட பிறகு பியோத்தர் நிகீதாவினுடைய தோளைப் பற்றி உலுக்கியபடி கேட்டான்:

''நீ தூங்கி விட்டாயா? எதைப் பற்றி நீ சிந்தித்துக் கொண்டிருக்கிறாய்?''

''அலெக்ஸி சரியாகச் செய்து கொண்டிருக்கிறான்...''

''அப்படி நினைக்கிறாயா? நாம் பார்க்கலாம். அம்மா, நீ என்ன நினைக்கிறாய்?''

''உண்மையில், அவளை அவன் மணப்பது சரிதான். அவர்கள் எப்படிச் சேர்ந்து வாழ்வார்கள் என்பதை யாரால் கூற முடியும்? அவள் ஒரு மாதிரியானவள், விசித்திரமானவள்.''

''அத்தகைய உறவுக்காக நன்றி,'' என்று திரும்பச் சொன்னான் பியோத்தர், ஒரு வறட்டுப் புன்னகையுடன்.

அவளுடைய பார்வைக்குத் தெரியாதபடி ஒவ்வொன்றும் அலைந்தபடியும், ஒன்று சேர்ந்தபடியும் இருந்த இருண்ட அறைக்குள்ளாகப் பார்த்துக் கொண்டிருப்பது போல, ''ஒரு வகையில் நான் தவறான வார்த்தையைப் பயன்படுத்தி விட்டேன்,'' என்று உல்யானா மெதுவாகக் கூறினாள். ''அவள் நரித்தனம் மிக்கவள். அவளது தந்தை ஏராளமான பொருள்களைப் பெற்றிருந்தான், குடிக்காக அவற்றை அவன் விற்றுவிடக் கூடாது என்பதற்காக, ஒளித்து வைப்பதற்காக அவற்றை அவள் என்னிடம் கொண்டு வந்தாள். அல்யோஷா இரவிலேயே அவற்றைக் கொண்டு வந்து சேர்த்தான். பிறகு அவனுக்குப் பரிசுகள்

தருவதாக நான் பாவனை செய்தேன். இங்கு இருக்கக் கூடிய எல்லாப் பொருள்களுமே அவளுடையவைதாம். அவளுடைய சீதனம். அவற்றில் சில விலைமதிப்புள்ளவை. மொத்தத்தில், அவளை நான் பெரிதும் விரும்பவில்லை— அவள் மிகவும் சுயநலக்காரி.''

தனது மாமியார் பக்கம் முதுகைக் காட்டியபடி பியோத்தர் சன்னலில் நின்றான். வெளியே தோட்டத்தில் பகல் நேர ஒலிகளை உரக்கப் பிரதிபலித்தபடி சிறு பறவைகள் பறந்தன. தீஹனுடைய வார்த்தைகள் மனத்திற்கு வந்தன:

''நான் சிறு பறவைகளை விரும்பவில்லை. அவை சாத்தானைப் போலத் தோன்றுகின்றன.'' அந்தத் தீஹன் ஒரு புத்தியற்ற மனிதன். இவ்வளவு மகா முட்டாளாக இருக்கிறானே என்று, அவனை நாம் கவனியாமலும் இருக்க முடியாது.

அதே போன்ற தணிந்த ஆர்வமற்ற குரலில், தெளிவாகவே மற்ற பொருள்களில் சிந்தனையைச் செலுத்தியபடி, ஓல்காவின் தாயாருடைய, ஒரு நிலச் சொந்தக்காரனின் மனைவியினுடைய, ஒரு வெட்கமற்ற பெண்ணினுடைய—தன்னுடைய கணவன் இன்னமும் உயிரோடு இருந்தபோது ஓர்லோவுடன் வசிப்பதற்காகச் சென்று அவனோடு ஐந்து ஆண்டுகள் வாழ்ந்தவளுடைய — கதையைக் கூறினாள்.

''அவன் ஒரு கைவினைஞன். தட்டுமுட்டு சாமான்கள் செய்தான், கடிகாரங்கள் பழுது திருத்தினான், மரத்திலே உருவங்கள் செதுக்கினான். அவற்றில் ஒன்றை நான் வீட்டில் வைத்திருக்கிறேன்— ஓர் ஆடையற்ற பெண். அது தன்னுடைய தாயின் உருவப்படம் என்று ஓல்கா நினைக்கிறாள். இருவருமே குடிகாரர்கள். அவளுடைய கணவன் இறந்த போது, அவர்கள் திருமணம் செய்து கொண்டார்கள். அதே ஆண்டு குடித்த நிலையில் அவள் குளிக்கச் சென்று மூழ்கி விட்டாள்...''

''அதைத் தான் நீ காதல் என்று அழைக்கிறாய்,'' என்றாள் நதால்யா திடீரென்று.

பொருந்த மற்ற இந்த வார்த்தைகளினால் தன் மகளை உல்யானா கண்டிக்கக் கூடிய முறையிலே பார்வையைச் செலுத்தினாள், அதே வேளை குறுகச் சிரித்தபடி பியோத்தர் குறிப்பிட்டான்:

''நாம் குடிவெறி பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம், காதலைப் பற்றி அல்ல.''

எல்லாரும் பேச்சை நிறுத்தினார்கள். நதால்யாவை கவனித்தபடி, அவளது தாயாருடைய கதையினால் அவள் மனமுடைந்து போயிருப்பதை நிகீதா பார்த்தான். அவளது விரல்கள் திருகிக் கொண்டன, மேசை விரிப்பின் விளிம்பை அவை இழுத்துக் கொண்டிருந்தன. அவன் முன்னர் பார்த்திராதபடி, அவளது எளிமையான, அன்புருவான முகம் குருதி பாய்ந்து கோபத்தோடு காணப்பட்டது.

இரவுச் சாப்பாட்டிற்குப் பிறகு, தோட்டத்தின் இளஞ்சிவப்பு நிறமான புதர்களுக்கு மத்தியில் ஒரு பெஞ்சின் மீது அமர்ந்தபடி, சரியாக நதால்யாவின் சன்னலுக்குக் கீழாக, தனக்கு மேலாக இருந்த அறையினின்றும் வந்த குரல்களை நிகீதா கேட்டான். சிந்தனை வயப்பட்டபடி பியோத்தர் கூறினான்:

''அலெக்ஸி சுறுசுறுப்பானவன். புத்திசாலி.''

திடீரென்று நதால்யா, நெஞ்சைத் தொடுவது போலக் கூறினாள்:

''நீங்கள் எல்லாருமே புத்திசாலிகள். நான் மட்டிலுமே முட்டாள். அவன் என்ன சொன்னானோ அது சரியானது—அகதிகளைப் போல! உங்களுடைய வீட்டில் நான் தான் அகதி...''

அச்சத்தோடும் இரக்கத்தோடும் நிகீதா பெருமூச்சு விட்டான். இரு கைகளாலும் பெஞ்சைப் பற்றி இருந்தான், இனம் புரியாத சக்தி ஒன்று அவனுக்குள்ளாகத் தூண்டிக் கொண்டிருந்தது, அதனது சேரிடம் அவனுக்குத் தெரியாது. அவனுக்கு மேலாக, அதிக இரைச்சலுடன், அவன் காதலித்த ஒரு பெண்ணின் குரல், சூடு பறப்பது போல, சீறியெழுந்த நம்பிக்கைகளுடன் எதிரொலித்தது.

நதால்யா தனது தலைமுடியைப் பின்னிக் கொண்டிருந்த போது, அவள் கணவனது வார்த்தைகள் அவளுக்குள் ஆழமாகத் திடீரென்று ஒருவித சீற்ற நெருப்பைத் தோற்றுவித்தன. சுவர்ப் பக்கமாக அவள் சாய்ந்து கொண்டாள், அமுக்குமாறும், இரண்டாகப் பிளக்குமாறும் உறுத்திய தனது கைகளைப் பின்னுக்கு வைத்து அழுத்தினாள். வறண்ட உதடுகளுக்கிடையே நடுங்கியபடி குரல் வந்தது. தான் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறோம் என்பதை அவளால் கேட்க முடியவில்லை. திகைப்புற்றுப் போன தனது கண

வனது கோபச் சொற்களை அவள் கேட்கவில்லை. அவர்களுக்கு மத்தியில் தான் ஒரு வெளியாளாக இருப்பதாக, தன்னை யாருமே நேசிக்கவில்லை, தான் வெறுமனே வீட்டில் ஒரு வேலைக்காரி என்று அவள் சொல்லிக் கதறினாள்.

''நீ என்னைக் காதலிப்பதில்லை. எதைப்பற்றியும் நீ என்னிடம் ஒருபோதும் பேசியது கூட இல்லை. நீ என்னிடத்தில் ஒரு கல்லைப் போலவே வருகிறாய், அவ்வளவே! நீ ஏன் என்னை நேசிப்பதில்லை? நான் உன்னுடைய மனைவியா, இல்லையா? என்னைப் பற்றி ஏதாவது தவறாக இருக்கிறதா, நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன். உன் அப்பாவை என் அம்மா நேசித்த முறையைப் பார். சில நேரங்களில் பொறாமையால் என் நெஞ்சு கிட்டத்தட்ட உடைந்து போவதுண்டு...''

''நல்லது, பிறகு, அதே வழியில் என்னை நேசி,'' என்று பியோத்தர் முன்மொழிந்தான். அறையின் இருண்ட மூலையில் தன் மனைவியினுடைய நிலைகுலைந்து போயிருந்த தோற்றத்தை உற்றுப் பார்த்துக்கொண்டு பியோத்தர் சன்னல் கட்டையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவளது வார்த்தைகள் முட்டாள்தனமானவை என்று அவன் நினைத்தான்; ஆனால் அவளது துயரம் நியாயமானது என்பதை வியப்போடு உணர்ந்தான். அது ஒரு முட்டாள்தனமான துயரமில்லை என்பதைப் புரிந்து கொண்டான். இந்தத் துயரத்தைப் பற்றிய மிகவும் மோசமான விஷயம் என்னவென்றால், அவனும் அதே போன்ற பல அக்கறைகளைக் கொண்டிருந்த போது, அது காலங்கடந்த கொதிப்பையும், புதிய அக்கறைகளையும், எச்சரிக்கைகளையும் அது காட்டியதாகும்.

அவனது மனைவியினுடைய, வெண்ணிறமான உருவமானது, அலையலையாகப் பரவுகின்ற இரவு கவுனில் அலைந்தது, நடுங்கியது, உருகிப் போய் விடுமோ என அச்சுறுத்தியது. அவளது குரல் உயர்ந்து தாழ்ந்தது, இப்போது கிசுகிசுத்தது, இப்போது அலறியது, அவள் ஊஞ்சலில் இருந்தது போல, தலைக்கு மேலாகப் பறப்பது போலவும், கீழே சரிவது போலவும் இருந்தது.

''அலெக்ஸி தன்னுடைய பெண்ணை எப்படி நேசிக்கிறான் என்பதைப் பார். மேலும் அவனை விரும்புவது கூட எளிமையானது. அவன் எப்பொழுதுமே குதூகலமாக இருக்கிறான், மேற்குடியினர் போல உடையணிகிறான்.

மேலும் உன்னிடம்? யாருக்குமே ஓர் அன்பான வார்த்தையில்லை. ஒருபோதும் சிரிப்பு இல்லை. அலெக்ஸியும் நானும் அத்தகைய நல்ல நண்பர்களாக இருக்க முடியும், அவனிடத்தில் ஒரு வார்த்தை சொல்ல ஒருபோதும் துணிந்ததில்லை, ஏனெனில் நீ உன்னுடைய கூனனை, அந்த வெறுப்பூட்டக் கூடிய நரித்தனமான உருவத்தை, என்னைக் கண்காணிக்கும்படி திட்டமிட்டே வைத்திருக்கிறாய்...''

நிகீதா எழுந்து, நகர்ந்து சென்றான், தலையைத் தொங்க விட்டபடி துயரத்துடன் பழத் தோட்டத்திற்குள் ளாகச் சென்றான். மரங்கள் அவனது தோளில் தட்டின, அக்கறையற்ற முறையில் அவற்றைப் பக்கவாட்டில் தள்ளி விட்டான்.

பியோத்தருங் கூட எழுந்தான். தன் மனைவியிடம் தாவி நடந்தான், அவளது முடியைப் பிடித்துப் பற்றினான், அவள் தலையைப் பின்னுக்குச் சாய்த்து, அவளது கண்களை உற்றுப் பார்த்தான்.

''அலெக்ஸியுடனா?'' என்று அவன் கேட்டான். அவனது குரல் பலமாக இல்லை, ஆனால் கனமாக இருந்தது. தன் மனைவி என்ன சொன்னாள் என்பதில் அவன் திகைத்துப் பின் வாங்கிப் போய் விட்டான். அவளிடம் கோபமடைய அவனால் முடியவில்லை, அவளை அடிக்க வேண்டும் என்ற எண்ணத்திற்கும் வர முடியவில்லை. மிகுந்த தெளிவோடு, அவளது வாழ்க்கை சோகமாகவும், ஆர்வமற்றதாகவும் உள்ளது என்று, தன் மனைவி உண்மையைத் தான் பேசிக் கொண்டிருக்கிறாள் என்று உணர்ந்தான். அலுப்பு என்ன என்பதை அவன் அறிவான். ஆனால் அவளை எந்த வகையிலேனும் அமைதிப் படுத்த வேண்டும். அவளை அமைதிப் படுத்த வேண்டி அவளது தலையை சுவற்றுக்கு நேராகச் சாய்த்தபடி மெதுவாகக் கேட்டான்:

''நீ என்ன சொன்னாய், முட்டாள்? அலெக்ஸியுடனா?''

''போக விடு, போக விடு—நான் கத்துவேன்...''

தனது மற்றொரு கையால், அவளது தொண்டையைப் பிடித்து அழுத்தினான். அவன் மனைவியினுடைய முகம் சிவந்தது, அவள் திணறத் தொடங்கினாள்.

அவளைச் சுவர்ப் பக்கமாக அழுத்தியபடி ''துடுக்குக் காரி'' என்ற பியோத்தர், திரும்பிக் கொண்டான். அவள் முன்னுக்குப் பாய்ந்து, அவனைத் தாண்டிக் கொண்டு தோட்

டிலுக்குச் சென்றாள், அங்கே சற்று நேரமாகக் குழந்தை சிணுங்கிக் கொண்டிருந்தது. தனக்கு மேலாக நடந்து போய் விட்டாள் என்ற உணர்வு பியோத்தருக்கு இருந்தது. அவனது கண்களுக்கு முன்னால் வானத்தின் கரு நீலத்துண்டு முன்னும் பின்னும் அலைவது போலும், நட்சத்திரங்கள் துள்ளுவது போலும் இருந்தன. மிக அண்மையில் உட்கார்ந்து கொண்டிருந்த தன் மனைவியை அவன் பக்கவாட்டில் பார்த்தான். எழுந்திருக்காமலேயே கூட அவனால் அவளது முகத்தில் அறைந்திருக்க முடியும். ஏறத்தாழ மரத்தாலானது போல அவளது முகம் அசையாதிருந்தது, ஆனால் கன்னங்களில் கண்ணீர் மெதுவாக வழிந்தோடியது. தன்னுடைய சின்னப் பெண் குழந்தைக்குப் பாலூட்டியபடி, கண்ணீர்த் திவலைகளின் ஊடாக, மூலையை உற்று நோக்கினாள், வசதியாக குழந்தையால் பாலைச் சப்ப முடியவில்லை என்பதை அவள் கவனிக்கவில்லை. அதனுடைய உதடுகளினின்றும் முலைக் காம்பானது நழுவிக் கொண்டே இருந்தது, ஆதரவற்றபடி சிணுங்கிக் கொண்டே அது வாயைச் சப்பிக் கொண்டிருந்தது. கொடுங் கனவுக்குப் பிறகு செய்வது போல, பியோத்தர் தன்னைத் தானே குலுக்கிக் கொண்டு பேசினான்:

''குழந்தைக்கு உன்னால் ஒழுங்காகப் பசியமர்த்த முடியாதா?''

''வீட்டிலே ஒரு ஈ. சிறகுகள் இல்லாத ஒரு ஈ...'' என்று நதால்யா முணுமுணுத்தாள்.

''மொத்தத்தில், நான் கூடத் தனியாகத் தான் இருக்கிறேன். இரண்டு பியோத்தர் அர்தமோனவ்கள் கிடையாது.''

அவன் கூடுதலாகச் சொல்ல விரும்பியது இதுவல்ல என்பதை அவன் தெளிவற்ற முறையில் உணர்ந்தான், இதில் ஏதோ தவறு இருந்தது. தன் மனைவியை அமைதிப் படுத்தவும், தனக்கு முன்னால் தொங்கிக் கொண்டிருந்த ஆபத்தைத் தவிர்க்கவும், அவளுக்கு அவன் அவசியம் உண்மையைச் சொல்ல வேண்டும். விவாதத்திற்கு அப்பாற்பட்ட எளிமையான, தெளிவான உண்மை. ஏனெனில் அதை அவள் உடனடியாகப் புரிந்து கொள்ள முடியும், அதற்குக் கீழ்ப்படிய வேண்டும், முட்டாள்தனமான புகாரையும், கண்ணீரையும் அவன் பொருட்படுத்தக் கூடாது, இது போன்ற பெண்மைத்தனமான முறைகளில் அவள் முன்னர் ஒரு போதும் இருந்ததே கிடையாது. குழந்தையைத் தொட்டி

யிய் போட்ட போது, அவளது பொறுப்பற்ற, அலங்கோல மான நடவடிக்கைகளை கவனித்த அவன் கூறினான்:

''கவனித்துக் கொள்வதற்கு எனக்குத் தொழில் இருக் கிறது! ஓர் ஆலை—அது தானியத்தை விதைக்கக் கூடியது மில்லை, உருளைக்கிழங்கை நடுவதுமில்லை அது ஒரு பொறியினை. மேலும் நீ? கவலைப்படுவதற்கு உனக்கு என்ன இருக்கிறது?''

ஆரம்பத்தில் அவன் உறுதியாகவும்,பதியுமாறும், இந்தத் தெளிவான உண்மைக்கு அணுகக்கூடியவாறு பேசினான்; ஆனால் அது அவனிடமிருந்து தப்பி விட்டது, அவனது குரல் ஏறத்தாழ குற்றஞ்சாட்டுகின்ற முறையில் மாறியது.

அவனது வார்த்தைகளின் இருப்புப் பெரும்பாலும் தீர்ந்து போய்விட்டது என்ற உணர்வோடு, சொல்வதற்குத் தன்னிடம் ஏதுமில்லை என்பது போல, ''ஓர் ஆலை என் பது சாதாரண விஷயமல்ல,'' என்று திரும்பச் சொன் னான். அவன் பக்கம் முதுகைக் காட்டியபடி, தொட்டிலை ஆட்டிக்கொண்டு அவன் மனைவி மௌனமாக நின்றாள். தீஹன் வியாலவினுடைய தணிந்த அமைதியான குரலால் அவன் காப்பாற்றப் பட்டான்:

''பியோத்தர் இல்யீச்! ஹேய்! அங்கே!''

சன்னலை நோக்கி நகர்ந்தபடி ''என்ன வேண்டும்?'' என்று அவன் வினவினான்.

''இங்கே வெளியே வா,'' என்று முற்றப் பாதுகாவ லன் கட்டளையிடுவது போலக் கூறினான்.

''காட்டான்!'' என்று முணுமுணுத்தான் பியோத்தர், மேலும் இடித்துரைப்பது போலத் தன் மனைவியிடம் கூறி னான்: ''அங்கே! இரவில் கூட அமைதியில்லை, நீயோ இங்கே நின்று கொண்டு அழுகிறாய்...''

தொப்பியில்லாமல், கண்ணைச் சிமிட்டியபடி முகப்பு மண்டபத்தில் தீஹன் அவனைச் சந்தித்தான். வெளிச்ச மான, நிலவொளி பட்ட முற்றத்தைச் சுற்றிலும் பார்த்த படி, மிகவும் தணிந்த குரலில் அவன் பேசினான்:

''நிகீதா இல்யீச் தானாகவே தூக்குப் போட்டுக் கொள்ள முயன்றான்...''

''என்ன? நீ என்ன சொன்னாய்?''

அவனுக்கு முன்னால் பூமியானது அமுங்கிப் போய்விட் டதைப் போல முகப்பு மண்டபத்துப் படியில் பியோத்தர் உட்கார்ந்தான்.

''எதற்காக நீ உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்? கூட வா. அவன் உன்னைப் பார்க்க விரும்புகிறான்...''

பியோத்தர் எழுந்திருக்கவில்லை, ஆனால் கிசுகிசுத்த படி கேட்டான்:

''எது அவனைச் செய்ய வைத்தது, ஹிம்?''

''அவன் இப்பொழுது உணர்வோடு இருக்கிறான். அவனுக்கு உணர்வு வருகின்ற வரை அவன் மீது நான் நீர் ஊற்றினேன். நாம் போய்க் கொண்டிருப்போம்...''

தனது எசமானனை தீஹன் முழங்கையைப் பற்றி இழுத்து, பழத் தோட்டத்திற்குள்ளாக கூட்டிச் சென்றான்.

''குளியல் வீட்டில் உடை மாற்றும் அறையில் இதை அவன் செய்து கொண்டான். மோட்டு மச்சின் உத்திரக் கட்டையிலிருந்து ஒரு கயிற்றைத் தொங்கவிட்டு...''

பியோத்தர் சற்று நின்று, திரும்பக் கேட்டான்:

''எது அவனைச் செய்ய வைத்தது? தந்தைக்காக அவன் மனம் நொந்து போனானா, என்ன?''

முற்றப் பாதுகாவலனும் நின்றான்.

''அவன் மிகவும் மோசமாகப் போய் விட்டான், அவளுடைய உள்ளாடைகளை அவன் முத்தமிட்டான்...''

''என்ன உள்ளாடைகள்? எதைப் பற்றி நீ பேசிக் கொண்டிருக்கிறாய்?''

தனது வெறுங் காலை இடம் மாற்றியபடி, புதர்களினின்றும் வெளிவந்திருந்த முற்றப் பாதுகாவலனுடைய நாயைக் கீழே உற்றுப் பார்த்தான். அது தனது வாலை ஆட்டிக் கொண்டு, இவனை உசாவுவது போலப் பார்த்துக் கொண்டிருந்தது. தன் சகோதரனிடம் போவதற்கு அவன் பயந்து போயிருந்தான். தனக்குள்ளாக அவன் வெறுமையை உணர்ந்தான், நிகீதாவிடம் என்ன சொல்ல வேண்டும் என்பது அவனுக்குத் தெரியவில்லை.

''ஹூம், ஆனால் நீ குருடன்,'' என்று முற்றப் பாதுகாவலன் முணுமுணுத்தான். அவன் தொடரட்டும் என்பதற்காக பியோத்தர் அமைதியாகக் காத்திருந்தான்.

''அவளுடைய உள்ளாடைகள், நதால்யா வெல்ஸேயெவ்னா உடையவை. காய வைப்பதற்காக அவை தொங்கிக் கொண்டிருந்தன.''

''ஆனால் அவன் என்ன... நிறுத்து!''

பியோத்தர் நாயை அப்பால் உதைந்தான். அவன் திடீரென்று தன் தம்பி குந்தியபடி, கூன் விழுந்த உருவத்துடன்,

அவள் பெண்ணினுடைய உள்ளாடையை முத்தமிட்டுக் கொண்டிருப்பதைக் கற்பனை செய்து பார்த்தான். அது வேடிக்கையாக இருந்தது, எனினும் அதே நேரத்தில் எரிச்ச லோடு காறித்துப்ப வைத்தது. பிறகு, உடனடியாக, உய்த் துணரும் சக்தியால் அவன் ஆட்கொள்ளப் பட்டான். முற்றப் பாதுகாவலனின் தோள்களைப் பற்றிப் பிடித்து, அவனை கோபத்தோடு உலுக்கி, பற்களை நெறித்தபடி கேட்டான்:

''அவர்கள் முத்தமிட்டார்களா? அவர்களை நீ பார்த் தாயா? சொல்லு!''

''ஒவ்வொன்றையும் நான் பார்த்தேன், நதால்யா யெவ் லேயெவ்னாவுக்கே தெரியாது.''

''நீ பொய் சொல்கிறாய்!''

''நான் ஏன் பொய் சொல்ல வேண்டும்? உன்னிடமிருந்து நான் எதையும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கவில்லை.''

தனது எசமானனிடம், அவனது தம்பியின் அவக்கேட்டை தீஹறன் சுருக்கமாக விவரித்தான். இருளின் ஊடே ஒரு கோடரி கொண்டு அவன் ஒரு சன்னலைப் பிளந்தது போலி ருந்தது. முற்றப் பாதுகாவலன் உண்மையைத் தான் சொல் லிக் கொண்டிருந்தான் என்பதை பியோத்தரால் உணர முடிந்தது. உண்மையாகவே, தன் தம்பியினுடைய நீல நிறக் கண்களின் பார்வையிலிருந்து, நதால்யாவுக்குப் பயன்படும் படி இருக்க அவனுக்கிருந்த ஆர்வத்திலிருந்து, அவனுடைய கீழ்த்தரமான, ஆனால் அவளுக்காகத் தொடர்ச்சியான உள் ளார்ந்த கவலையிலிருந்து அது பற்றி அவனுங் கூட தெளிவற்ற ஓர் ஐயப்பாட்டைக் கொண்டிருந்தான்.

''ஆ...க,'' என்று அவன் கிசுகிசுத்தான், பிறகு உரக் கவே சிந்தித்தான்: ''எனக்குப் புரிந்து கொள்வவே நேரமில்லை.''

அவன் தீஹனை முன்னுக்குத் தள்ளிவிட்டான்:

''போகலாம்.''

நிகீதாவினுடைய கண்ணைச் சந்திப்பதில் முதலாவது ஆளாக இருக்க அவன் விரும்பவில்லை. தாழ்வான குளியல் வீட்டுக் கதவின் வழியாக உள்ளே நுழைந்தபடி, இருட்டில் தன் தம்பியை அவன் கண்டு பிடிப்பதற்கு முன்பாகவே, தீஹ னுக்குப் பின்னால் நின்று தடு மாற்றத்தோடு கேட்டான்:

''உனக்கு என்ன ஆகி விட்டது, நிகீதா?''

கூனன் பதில் பேசவில்லை. சன்னலுக்கு அருகே பெஞ் சின் மீது அவன் சரியாகப் பார்க்க முடியாதபடி அமர்ந்

திருந்தான், மங்கலான வெளிச்சம் அவனது கால்களின் மீதும், வயிற்றின் மீதும் விழுந்து கொண்டிருந்தது. சற்று நேரங் கழித்தே, தலையைத் தாழ்த்தியபடி, தனது கூன் விழுந்த முதுகைச் சுவரின் மீது சாய்த்து நிகீதா உட்கார்ந்து கொண்டிருப்பதை பியோத்தரால் உணர முடிந்தது. அவ னுடைய சட்டையானது, கழுத்திலிருந்து விளிம்பு வரை கிழிந்திருந்தது. நனைந்து போய், அது அவனுடைய உட லோடு ஒட்டிக் கிடந்தது. அவனுடைய தலைமயிர் கூட நனைந்து போயிருந்தது. அவனது கன்னத்திலிருந்த கரு மையான ஒரு புள்ளியிலிருந்து ஈரமான கதிர்கள் பரவிச் சென்றன.

''என்ன அது—குருதி? கீழே நீ விழுந்துவிட்டாயா?'' கிசுகிசுத்தவாறு பியோத்தர் கேட்டான்.

''இல்லை, என்னுடைய அவசரத்தில் அவனை இலே சாக நான் தான் புண் படுத்தி விட்டேன்,'' என்று தீஹன் பதிலளித்தான், முட்டாள்தனமாக உரக்கப் பேசிய அவன் பக்கவாட்டில் நகர்ந்து கொண்டான்.

நெருங்கிச் செல்வது அச்சந்தருவதாக இருந்தது. வருந்தந் தெரிவிப்பது போல பியோத்தர் தனது காதை இழுத்து விட்டுக் கொண்டான். யாரோ அந்நியர் அவர்க ளிடம் சொல்லிக் கொண்டிருப்பது போல அவனுடைய வார்த்தைகள் இருந்தன.

''வெட்கக் கேடு. தம்பி, நீ கடவுளுக்கு எதிராகச் சென்று விட்டாய். ஐயோ, நீ...''

''எனக்குத் தெரியும்,'' என்று நிகீதா கரகரத்த குரலில் பதில் சொன்னான். அவனுடைய குரல் கூட ஓர் அந்நிய னுடையதைப் போல இருந்தது. ''அதை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. என்னை ஒரு துறவி மடத்திற்குப் போக விடு. நான் பிரமச்சரிய விரதம் எடுத்துக் கொள் வேன். உனக்குக் கேட்கிறதா? என் நிறைந்த நெஞ்சத் தோடு உன்னை நான் மன்றாடுகிறேன்...''

பலமாக அவன் இருமினான், அதற்கு மேல் பேச வில்லை.

உணர்ச்சிவயப்பட்ட பியோத்தர் மீண்டும் அவனைக் கண்டிக்கத் தொடங்கினான், மென்மையாகவும், பாசத் தோடும் பேசினான். முடிவில் அவன் சொன்னான்:

''நதால்யாவைப் பொருத்த மட்டில், உண்மையில் அவள் உன்னைத் தூண்டுகின்ற சாத்தானாக இருந்திருக்கிறாள்...''

''ஓ, தீஹன்,'' பரிதாபமாக நிகீதா புலம்பினான். ''நான் உன்னைக் கெஞ்சவில்லையா, தீஹன், உன்னுடைய நாவை அடக்கும் படி! கிறிஸ்துவுக்காக, குறைந்தது அவளுக்காவது சொல்லாமல் வை! அவள் என்னைக் கேலி செய்வாள் அல்லது குற்றமாகக் கொள்வாள். கருணை காட்டுங்க! எஞ்சிய என் வாழ்நாள் முழுக்க நான் உனக்காக வேண்டிக் கொள்வேன். அவளிடம் சொல்லாதே! எப்போதுமே அவளிடம் கூறாதே. ஐயோ தீஹன், இது எல்லாமே உன்னுடைய தவறு...''

அவன் முணுமுணுத்தான், அவனது தலை இயற்கையாக இல்லாது நிமிர்ந்தும் அசைவற்றும் இருந்தது. அது கூட அச்சந் தருவதாக இருந்தது. முற்றப் பாதுகாவலன் கூறினான்:

''எனது நாக்கை நான் அடக்கி வைத்திருக்கக் கூடும், இந்த மாதிரி நடக்கவில்லை என்றால். அவள் என்னிடமிருந்து எதையும் கேட்க மாட்டாள்...''

மிகமிக ஆழமாக உணர்ச்சியுற்று, தனது சொந்த உணர்வுகளாலும் கிளர்ச்சியுற்று, பியோத்தர் திடமாக உறுதி கூறினான்:

''சிலுவையில் சத்தியம் செய்கிறேன். அவளுக்கு எதுவும் தெரியக் கூடாது.''

''நன்றி! நான் ஒரு துறவி மடத்திற்குப் போகிறேன்.''

தான் தூங்கிப் போய்விட்டது போல, நிகீதா அமைதியில் ஆழ்ந்தான்.

''காயம் பட்டு விட்டதா?'' அவனது சகோதரன் கேட்டான். எந்த பதிலும் பெறாததால், திரும்பவும் கேட்டான்:

''உன்னுடைய கழுத்து—அது காயம் பட்டு விட்டதா?''

''அது சரியாக இருக்கிறது,'' என்று நிகீதா கரகரத்த குரலில் கூறினான். ''நீங்கள் இப்போது போங்க...''

''அவனைத் தனியே விட வேண்டாம்,'' முற்றப் பாதுகாவலனிடம் பியோத்தர் கிசுகிசுத்தான், கதவுக்கு அவனுக்குப் பின்னால் சென்றபடி.

ஆனால் அவன் வெளியே பழத் தோட்டத்திற்கு வந்த போது, வெதுவெதுப்பான, பூமியின் தெவிட்டுகிற மணத்தை ஆழ்ந்து சுவாசித்தான், அமைதி குலைக்கிற சிந்தனைகளின் முன்னோக்கிய பாய்ச்சலால் அவனுடைய மென்மையான மனநிலை மறைந்தது. காலுக்குக் கீழாக சரளைக்கல் அரைப் பொலி எழுப்பக் கூடாது என்பதற்காக, சாலையின் கீழாக,

கவனமாக மிதித்தபடி அவன் நடந்தான். அங்கே முழுமை யான அமைதி இருக்க வேண்டும், அல்லது இத்தகைய சிந்தனைகளுக்கு எந்தவித முறைமையும் இருக்காது. ஏராள மாக இருந்து அச்சுறுத்துகின்ற எதிர்ப்புணர்ச்சி, உள்ளுக் குள் இருந்து வெளித்தோன்றுவதாகத் தெரியவில்லை, ஆனால், இரவின் வெறுமையிலிருந்தும், இருளில் பறந்து திரிகின்ற வௌவால்களினின்றும்—வெளியிலிருந்து முற்று கை இடுகிறது. ஆக அவைகள் ஒன்று பின் ஒன்றாக விரைந்து சென்றன. பியோத்தரால் அவர்களைப் பிடிக்க முடியவில்லை, வார்த்தைகளால் புறவுருவம் கொடுக்க முடியவில்லை, ஆனால் அவர்களுடைய திருக்கு மறுக்கான கண்ணிகளையும், முடிச்சுகளையும், வடிவமைப்புகளையும் மட்டுமே அரைகுறையாகக் காண முடிந்தது. அவை அவனையும், நதால்யா, அலெக்ஸி, நிகீதா, தீஹன்—இப் படி அனைவரையும் பிரித்தறிய முடியாதபடி மிகவும் விரை வாகச் சுழற்றுகின்ற முறுக்கப்பட்ட வளையத்தில் கண் ணியில் சிக்க வைத்தன. மேலும் அவன் மட்டும் மையத் தில் தனிமையில் இருந்தான். தனக்குத்தானே மிகவும் எளிமையாக அவன் சிந்தித்தான்:

''நதால்யாவின் தாயாரை வீட்டிற்கு நல்ல விதமாக வும், விரைவாகவும் நான் கொண்டு வந்து சேர்க்க வேண் டும், அலெக்ஸியும் வெளியேறிப் போகும்படி பார்க்க வேண்டும். நதால்யாவிடமும் ஓரளவுக்கு அன்பு காட்ட வேண்டும். 'அதைத் தான் நீங்கள் காதல் என்று அழைக் கிறீர்கள்!' ஏன், அந்தக் காதல் தானா அவனைத் தானா கவே தூக்குப் போடும்படி செய்தது. அல்ல, வெறுமனே அவனுடைய கூனல் தான். ஒரு நல்ல காரியம் அவன் துறவி மடத்திற்குப் போக விரும்புகிறான். இந்த உலகத்தில் அவனுக்காக எதுவுமே இல்லை. ஆமாம், அது ஒரு நல்ல விஷயம். தீஹன் ஒரு முட்டாள். அவன் முன்னதாகவே என்னிடத்தில் சொல்லியிருக்க வேண்டும்.''

ஆனால், அவனை மிகவும் குழப்பியும், அச்சுறுத்தியும், இரவின் ஈரஞ்செறிந்த இருட்டிற்குள்ளாக அச்சத்தோடு அவனைப் பார்க்கும்படி செய்த, பிடிபடாத, வார்த்தை களற்ற அந்தச் சிந்தனைகளுடன் என்ன செய்ய முடியும்? தொலைவிலே, ஒரு மெல்லிய சிற்றாறின் சோகமான பாடல் ஒலித்தது, ஆலைத் தொழிலாளர்களது குடியிருப் புக்கு மேலாக மங்கலான ஒளி வீசியது. கொசுக்கள் இரைச்ச

விட்டன. ஒரு விஷயத்தை பியோத்தர் அர்த்தமோனவ் தெளி வாக உணர்ந்து கொண்டான்: இந்த மன உலைவை அவன் கட்டாயம் வென்றாக வேண்டும், கட்டாயம் கட்டுப் படுத்தி யாக வேண்டும், எவ்வளவு விரைவாகச் செய்ய முடியுமோ அவ்வளவு விரைவாகச் செய்ய வேண்டும். எதிர்பாராத படி, தனது படுக்கை அறைச் சன்னலுக்குக் கீழாக உள்ள புதர்களுக்கு மத்தியில் தான் இருப்பதை அவன் கண்டான். நீண்ட நேரம் அங்கே பெஞ்சின் மீது அமர்ந்திருந்தான், அவனது முழங்கைகள் முழங்காலின் மீது இருந்தன, அவ னது முகம் அவனது கைகளில் புதைந்திருந்தது, காலுக்குக் கீழாக கருத்த பூமியை பார்த்துக் கொண்டிருந்தான். பூமி யானது மூழ்கிப் போகப் போவது போல அதிர்ந்தது, கொதித்துக் குமுறியது.

''இது மலைப்பூட்டுகிறது, எப்படி நிகீதாவால் இந்த மணலின் மீது வெற்றிகொள்ள முடிந்து. அவனுடைய பிரமச் சரிய விரதத்தை அவன் ஏற்கும் போது, அவன் ஒரு துறவி மடத்துத் தோட்டத்தில் வேலை செய்வான். அவன் அதை விரும்புவான்.''

அவனுடைய மனைவி நெருங்கி வந்ததை அவன் கவ னிக்கவில்லை, அவளுடைய வெண்ணிற உருவம் அவனுக்கு முன்னால் எழுந்து வந்த போது, பூமியிலிருந்து பாய்வது போல, எச்சரிக்கையோடு குதித்து நின்றான். ஆனால் அறி முகமான குரல் ஓரளவுக்கு அவனை அமைதிப் படுத்தியது:

''கிறிஸ்துவின் பெயரால், எனது கத்தலை மன்னி...''

''ஆ, நல்லது, கடவுள் மன்னிப்பார். நானுங்கூடக் கத் தினேன்,'' பெருந்தன்மையோடு பேசினான், தன் மனைவி வந்ததற்காக மகிழ்ந்தான், அவர்களது சச்சரவால் ஏற் பட்ட விரிசலை அடைப்பதற்குத் தேவையான மென்மை யான சொற்களை அவன் இனிமேலும் தேட வேண்டிய அவசியமில்லாமற் போய் விட்டது.

அவன் உட்கார்ந்தான், அவனுக்குப் பக்கத்தில் நதால் யாவும் தயக்கத்தோடு அமர்ந்தாள். ஆம், அவளை அமைதிப் படுத்துவதற்கு அவன் கட்டாயம் ஏதாவது செய்தாக வேண்டும். அவன் கூறினான்:

''அது உனக்குச் சோர்வாக இருக்கிறது என்பதை நான் அறிவேன். நமது வீட்டில் எந்த மகிழ்ச்சியும் இல்லை. அது எங்கிருந்து வரும்? வேலையிலிருந்தே அப்பா தன்னுடைய மகிழ்ச்சியைப் பெற்றார். அவர் பார்த்த முறையில், மக்

களைப் போல அத்தகைய பொருள் ஒன்று இல்லை என்பது தான். பிச்சைக்காரர்களையும், மேற்குடியினரையும் தவிர நாம் எல்லாருமே தொழிலாளிகள் தாம். உழைப்பதற்காக நாம் வாழ்கிறோம். மேலும் வேலைக்குப் பின்னுள்ள ஆட்கள் தெரியவில்லை.''

அவன் வார்த்தைகளைக் கவனமாகப் பொறுக்கிப் பேசினான், பொருத்தமானதற்கு மேல் கூடுதலாக எதையும் பேச அஞ்சினான்; மேலும் தனக்குத் தானே செவிமடுத்துக் கொண்டான், நிறைவான ஒரு மனிதனைப் போல, ஒரு தொழிலதிபரைப் போல, ஓர் உண்மையான எசமானனைப் போலத் தான் பேசியதாக அவன் நினைத்தான். எனினும் இந்த வார்த்தைகள் ஒரு வகையில் செயற்கையானவை என்ற உணர்வினைப் பெற்றிருந்தான், ஏனெனில் அவை அவனுடைய சிந்தனைகளின் மேற்பரப்பிற்கு மேலாக அவற்றை வெளிப்படுத்த முடியாமல் நழுவியும், ஊடுருவ முடியாமலும் சென்றன. ஒரு குழியின் விளிம்பில் அமர்ந்திருப்பதாகவும், எந்தக் கணமும் அவனை யாரேனும் தூக்கி எறியக் கூடும் என்றும் அவனுக்குத் தோன்றியது. அவன் என்ன சொன்னான் என்பதைக் கேட்ட யாரோ கிசுகிசுப்பது போலத் தோன்றியது:

''அதுவல்ல உண்மை.''

மிகவும் பொருத்தமாக, தனது தலையை அவனுடைய தோள் மீது சாய்த்து அவனுடைய மனைவி கிசுகிசுத்தாள்:

''மொத்தத்தில், என்னுடைய எஞ்சிய வாழ்நாள் முழுக்க, உன்னுடன் வாழப் போகிறவள் நான் தான். உன்னால் இதை ஏன் புரிந்து கொள்ள முடியவில்லை?''

காலந் தாழ்த்தாதபடி அவளை அணைத்து மிக நெருக்கமாக அழுத்திக் கொண்டு அவளது வெப்பமான கிசுகிசுப்பைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

''புரிந்து கொள்ள முடியாதது ஒரு பாவந்தான். நீ ஒருத்தியைக் கூட்டி வந்தாய், அவள் உனக்குக் குழந்தைகள் பெற்றுத்தருகிறாள். எனினும் நீ இங்கு இல்லாதது போலவும், எனக்காக உன்னிடத்தில் எந்த இதயமும் இல்லாதது போலவும் இருக்கிறது. இது ஒரு பாவம், பேத்யா. என்னை விட நெருக்கமாக உனக்கு யாரேனும் இருக்கிறார்களா? மிகவும் தவிர்க்க முடியாதபடி உனக்கு ஆதரவு தேவைப்படும் போது, யார் உனக்குப் பரிவு காட்டுவார்கள்?''

தன் மனைவி தன்னைத் தூக்கிக் கொண்டு காற்றில்

மிருப்பது போலவும், தனது அவயவங்கள் மகிழ்வான இன்பத்தால் நிறைந்தது போலவும் அவன் உணர்ந்தான். ஓர் அருணிமை உறவை உணர்ந்தவனாய், ஒருவித புத்துணர்ச்சி மிக்க குளுமையில் திளைத்தபடி, அவளுக்கு நன்றி பாராட்டும் முகத்தான் அவன் முணுமுணுத்தான்:

''நான் ரகசியத்தைக் காப்பேன் என்று அவனிடம் உறுதி கூறினேன், ஆனால் என்னால் முடியாது!''

அவன் அவசர அவசரமாக முற்றப் பாதுகாவலன் நிகீதாவைப் பற்றிக் கூறிய எல்லாவற்றையும் அவளிடம் சொல்லத் தொடங்கினான்:

''முற்றத்தில் காய்ந்து கொண்டிருந்த போது அவன் உன்னுடைய உள்ளாடைகளை முத்தமிட்டான்—அந்தளவுக்கு அவன் போயிருக்கிறான்! உனக்குத் தெரியாதா? அவனிடத்தில் எப்படி இருக்கிறது என்பதை உன்னால் உணர முடியவில்லையா?''

தன் மனைவி மிகவும் பயங்கரமாக நடுங்கியதை அவன் உணர்ந்தான்.

''அவனுக்காக வருத்தமா?'' பியோத்தர் வியப்போடு நினைத்தான்; ஆனால் அவளோ கடுஞ்சினத்தோடு பதிலளித்தாள்:

''ஒரு விஷயமும் எனக்கு ஒருபோதும் தெரியாது! ஆ, மர்மங் காக்கின்ற படைப்பு! அவர்கள் சொல்வது என்னவோ உண்மைதான்—கூனர்கள் சூழ்ச்சியானவர்கள்.''

''அருவருக்கிறாளா? நடிக்கிறாளா?'' அர்தமோனவ் தனக்குள்ளாகவே கேட்டுக் கொண்டான். தன் மனைவியிடம் அவன் பேசினான்:

''அவன் உன்னிடத்தில் எப்போதுமே பெருந்தன்மையோடு இருந்திருக்கிறான்...''

''நல்லது, அதைப் பற்றி என்ன?'' ஏற்க மறுப்பது போல அவள் பேசினாள். ''துலூனும் கூட பெருந்தன்மை கொண்டது.''

''நல்லது, ஆனால்... துலூன் ஒரு நாய்.''

''அவனும்? ஒரு நாயைப் போல அவனை எனக்குப் பின்னால், என்னைக் கண்காணித்துக் கொள்ளவும், உன் அப்பாவிடமிருந்தும் அலெக்ஸியிடமிருந்தும் என்னைப் பாதுகாக்கவும், நீ அனுப்பி வைத்தாய். மிக நன்றாகவே நான் கண்டேன்! ஓ! அவன் என்னிடத்தில் எத்தனை ஐயத்தோடும், எத்தனை வெறுப்போடும் இருந்தான்...''

தெளிவாகவே, நதால்யா அவமானமும் கடுங் கோபமும் கொண்டாள். அது அவளது நடுக்கத்திலிருந்தும், அவள் விரல்களை முறிப்பதிலிருந்தும், அவளது இரவு உடையை முறுக்கிக் கொண்டும், இழுத்துக் கொண்டும் இருப்பதிலிருந்தும் தெளிவாகத் தெரிந்தது. ஆனால்அவனுக்கு அவளுடைய கோப உணர்ச்சி மிகைப் படுத்தப்பட்டது போலவும், அதை நம்பாதது போலவும் காணப்பட்டது, அவன் இறுதி அடி கொடுத்தான்:

''தானாகவே தூக்குப் போட்டுக் கொள்ள அவன் முயன்றான். தீஹன் அவனைக் கண்டுபிடித்தான். அவன் குளியல் வீட்டிலே படுத்துக் கொண்டிருக்கிறான்.''

அவன் மனைவி வளைந்து போனாள். வெளிப்படையான பயத்தில் அவள் கத்தினாள்:

''இல்லை!.. நீ என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாய்? கடவுளே...''

''ஆக, அவள் பொய் சொல்லிக் கொண்டிருந்திருக்கிறாள்,'' என்று பியோத்தர் எண்ணினான். ஆனால் தனது நெற்றி அடிபட்டு விட்டது போல அவள் தன்னுடைய தலையைப் பின்னுக்குத் தூக்கியவாறு, கண்ணீர் மல்கக் கிசுகிசுத்தாள்:

''அடுத்து என்ன? அப்பாவினுடைய மரணம் ஊர் வாயை ஓரளவுக்கு அடைத்து வைத்திருந்தது, இப்போது எல்லாப் பக்கமும் பேச்சு திரும்பவும் ஆரம்பித்து விடும். என்ன பாவத்திற்கோ, ஓ கடவுளே? ஒரு தம்பி தனக்குத் தானே தூக்குப் போட்டுக் கொள்ள முயல்கிறான், மற்றவனோ யாரோ ஓர் ஆசை நாயகியை மணக்கிறான். இதை எந்த வகையிலும் செய்ய முடியுமா? ஆ, நிகீதா இல்யீச், வெட்கமில்லாமல், உன்னால் எப்படி இருக்க முடிகிறது? அத்தகைய அன்புக்கு அநேக நன்றி, நீ ஓர் இதயமற்றவன்...''

ஒரு நிம்மதிப் பெருமூச்சுடன், அவளுடைய கணவன் தன் மனைவியின் தோள் மீது தட்டினான்.

''கவலைப் படாதே. யாருக்கும் தெரியவராது. தீஹன் பேசவே மாட்டான். அவனோடு அவன் நட்பாய் இருக்கிறான், மேலும், அவனுடைய வருவாயை அவன் நம்மிடமிருந்துதான் பெறுகிறான். நிகீதா பிரமச்சரிய விரதம் எடுத்துக் கொள்ள விரும்புகிறான்...''

''எப்போது?''

''எனக்குத் தெரியாது.''

''ஓ, அது சீக்கிரமாகவே இருந்தால்! இப்போது அவன் முகத்தில் எப்படி நான் விழிக்க முடியும்?''

சற்று அமைதிக்குப் பிறகு, பியோத்தர் சொன்னான்: ''அவனைப் பார்க்க நீ போயிருக்க வேண்டும்...''

ஆனால் அவள் திரும்பவும், அவளை அவன் அடித்தது போல அழத் தொடங்கினாள்:

''முடியாது, முடியாது, என்னைக் கேட்க வேண்டாம்— நான் போக மாட்டேன். என்னால் முடியாது! நான் நடுங்கிப் போய் விட்டேன்...''

''எதனால்?'' பியோத்தர் விரைவாகக் கேட்டான்.

''தற்கொலையால். என்னால் போக முடியாது, இந்த உலகத்தில் எதற்காகவும் முடியாது... நான் நடுங்கிப் போய் விட்டேன்.''

''நல்லது, தூங்கலாம் வா,'' என்றான் அர்தமோனவ், தனது கால்களில் நின்று உறுதிப் படுத்திக் கொண்டான். ''ஒரு நாளைக்குப் போதுமான தொல்லையை நாம் பெற்று விட்டோம்.''

தன் மனைவிக்குப் பக்கத்தில் மெதுவாக நடந்தபடி, இந்த நாளானது அதனுடைய தீமையோடு கூட ஒருவிதப் பயனையும் கொண்டு வந்து விட்டது என்று அவன் உணர்ந்தான். அவனோ, பியோத்தர் அர்தமோனவ், இந்த நாள் வரையிலும் தான் மிகவும் புத்திசாலி, தந்திரமான மனிதன் என்று தன்னைப் பற்றி அறிந்து கொண்டதில்லை. இப்போதோ மிகத் திறமையோடு, தனது உள்ளத்தைத் தீய எண்ணங்களால் விடாப்பிடியாக அலட்டிக் கொண்டிருந்த யாரையோ ஏமாற்றிவிட்டான்.

''உண்மையில், நீதான் எனக்கு மிகவும் நெருக்கமான வள். யார் நெருக்கமாக இருக்க முடியும்? இதை மனத்தில் நிறுத்திக் கொள். நீதான் நெருக்கமானவள். பிறகு ஒவ் வொன்றும் சரியாகி விடும்...'' என்று தன் மனைவியிடம் அவன் கூறினான்.

அந்த இரவைத் தொடர்ந்த பன்னிரெண்டாவது நாளில், காலை உதயத்தின் போது, தன்னுடைய கையில் ஒரு கம்போடும், முதுகில் ஒரு தோல் சாக்குமாக நிகீதா அர்தமோனவ் காணப் பட்டான். குறுகலான, மணற் பாங் கான, கனமாகப் பனி விழுந்ததனால் கருப்பாகிப் போன பாதையில் திரும்பி, தனது குடும்பத்தைப் பிரிந்த நினைவு

களினின்றும் விடுபட்டு விலக ஆர்வங்கொண்டிருப்பது போல, நீளடியிட்டு நடந்தான். சரியாகத் தூக்கமில்லாதபடி, அவர்கள் எல்லாருமே, சமையலறைக்கு அடுத்து இருந்த உணவருந்தும் அறையில் கூடியிருந்தார்கள். அவர்கள் விறைப்பாக இருந்தார்கள். நெகிழ்வற்ற முறையில் பேசிக் கொண்டார்கள். நெஞ்சைத் தொடுவது போல ஒரு வார்த்தை கூட அவனுக்காகச் சொல்ல அவர்களில் யாருமில்லை என்பது மிகத் தெளிவாகத் தெரிந்தது. இலாபந்தரும் பேரத்தை முடித்தவனைப் போல பியோத்தர் பாசத்தோடும், ஏறத்தாழ மகிழ்ச்சியோடும் காணப்பட்டான். இரண்டு அல்லது மூன்று முறைகள் சொன்னதையே அவன் கூறினான்:

''நல்லது, இப்போது குடும்பத்தில் நமக்குச் சொந்தமாக குறையிரப்பவரைப் பெறுவோம். நமது பாவங்களை மன்னிக்க வேண்டுவோம்...''

நதால்யா தேநீர் ஊற்றினாள், முரண்பாடாகவும், பிறிது கவனமாகவும் காணப்பட்டாள். அவளுடைய சிறிய எலிக் காதுகள் குறிப்பிடும் படியாகச் சிவப்பாகவும், வளைந்த தோற்றத்தோடும் காணப்பட்டன. அவள் உற்சாகமற்றுத் தோன்றினாள், அறையை விட்டு அடிக்கடி அகன்றாள். சிந்தனை வயப்பட்ட மௌனத்தில் அவள் தாய் அமர்ந்திருந்தாள்; அவ்வப்பொழுது தனது நாக்கால் ஒரு விரலை ஈரப் படுத்திக் கொண்டும், நெற்றிக்கு மேலாக விழுந்த நரைத்த முடியைத் தடவி விட்டுக் கொண்டும் இருந்தாள். அலெக்ஸி மட்டும் கிளர்ச்சியுற்று, அவனிடத்தில் வழமையில்லாதபடி, காணப்பட்டான். தனது தோள்களைக் குலுக்கிக் கொண்டபடி, கேட்டான்:

''எது உன்னை இப்படிச் செய்ய வைத்தது, நிகீதா? இத்தனை அவசரமாக, ஹூம்? இது எனக்கு விநோதமாக இருக்கிறது...''

அவனுக்கு அருகே, சிறிய, கூரிய மூக்கினைக் கொண்ட ஓர்லோவா சிறுமி உட்கார்ந்திருந்தாள். அவளுடைய கருத்த புருவங்கள் நிமிர்ந்து நின்றன, ஒவ்வொருவரையும் முரட்டுத்தனமாகப் பார்த்தாள். இவளுடைய கண்களை நிகீதா விரும்பவில்லை. அவளது எஞ்சிய முகத்திற்கு அவை மிகவும் பெரிதாக இருந்தன. ஒரு சிறுமிக்குப் பொருந்தாது மிகக் கூர்மையானதாகவே இருந்தன, அடிக்கடி அவளும் சிமிட்டிக் கொண்டாள்.

அவர்களுக்கு மத்தியில் அமர்வதற்கு நிகீதா வலிய

...யாற்றி செய்து கொண்டிருந்தான், ஆர்வமிக்க எண்ணம் ...ர்ந்து வளர்ந்து கொண்டிருந்தது:

''ஒருவேளை பியோத்தர் ஒவ்வொருவரிடமும் கூறி விட் ...ல்? அது முடிந்ததாக இருக்கவே நான் விரும்புகிறேன்...''

...பிரிந்து செல்வதை முதலில் பியோத்தரே தொடங் ...னான். நிகீதாவிடம் வந்தபடி, அவனை அணைத்து உரத்த ...வில் ஒரு பிடிப்போடு கூறினான்:

''நல்லது, தம்பி, போய்வா...''

ஆனால் பய்மகோவா அவனை நிறுத்தினாள்:

''நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? நாம் எல்லாரும் முதலில் கட்டாயம் உட்கார வேண்டும், சற்று நேரத்திற்குப் பேசாமல் இருக்க வேண்டும், பிறகு, நாம் வணங்கியதும், நாம் பிரியாவிடை கூற வேண்டும்.''

இது எல்லாமே சீக்கிரம் நடந்தன, பியோத்தர் திரும் ...வும் நெருங்கிச் சென்று கூறினான்:

''எங்களை மன்னித்து விடு. மானிய அளிப்புப் பற்றி ...ங்களுக்குத் தெரியப்படுத்து, நாங்கள் அதை அனுப்பி ...நர் செய்கிறோம். பலமான விரதம் மேற்கொள்ள ஒப்புக் கொள்ளாதே. போய் வா. எங்களுக்காக அடிக்கடி வேண்டிக் கொள்.''

அவனுக்கு மேலாக பய்மகோவா சிலுவை அடையா ...ம் வைத்தாள், அவனுடைய கன்னங்களையும், நெற்றி ...யையும் முத்தமிட்டாள். ஏதோ காரணத்திற்காக அவள் அழத் தொடங்கினாள். அலெக்ஸி அவனை இறுக்கமாகக் கட்டித் ...றுவினான், அவனது கண்களைப் பார்த்துப் பேசினான்:

''நல்லது, கடவுள் உனக்கு உதவுவார். ஒவ்வொருவரும் ...ங்களது சொந்தப் பாதையை எடுத்துக் கொள்கிறார்கள். ஆனால் அதே முறையில், இத்தனை அவசரமாக முடி ...வெடுக்க எது உன்னை ஏற்படுத்தியது என்பதை என்னால் ...ரிந்து கொள்ள முடியவில்லை...''

எல்லாரிலும் கடைசியாக நதால்யா நெருங்கி வந்தாள்; ஆனால் சற்று தூரத்திற்கு முந்தியே அவள் நின்று கொண் ...ள், தலையைக் குனிந்தாள், தனது கையைத் தன் மார் ...து வைத்து அழுத்தியபடி, தெளிவில்லாதபடி பேசினாள்:

''போய் வா, நிகீதா இல்யீச்...''

மூன்று குழந்தைகளுக்கு அவள் பாலூட்டி இருந்தா ...ம் இன்னமும் அவளுடைய மார்பகங்கள் ஒரு சிறுமியினு ...டையதைப் போல உயரமாகவே இருந்தன.

நல்லது, எல்லாமே முடிந்தன. ஆ, இன்னமும் ஓர்லோவா இருந்தாள். ஒரு பலகை போல கடினமான, வெப்பமான சிறிய கையை அவனிடத்தில் அவள் திணித்தாள். அண்மையில் பார்க்க அவளது முகம் இன்னும் மகிழ்ச்சியற்றதாகவே காணப்பட்டது. அவள் முட்டாள்தனமாகக் கேட்டாள்:

''நீங்கள் உண்மையிலேயே பாதிரியாகி விடப் போகிறீர்களா?''

வெளியே முற்றத்தில், சுமார் முப்பது முதிய நெசவாளிகள் அவனுக்குப் பிரியாவிடை கூறுவதற்காக வந்திருந்தனர். செவிடன், கிழவன் பரீஸ் மரோஸவ் அரற்றினான், ஆவேசமாகத் தலையசைத்தான்:

''போர்வீரர்களும் துறவிகளும்—சமூகத்தினுடைய முதலாவது வேலையாட்கள், அது தான் உண்மை!''

தனது தந்தையினுடைய கல்லறையினின்றும் விடைபெற்றுக் கொள்வதற்காக இடுகாட்டுப் பக்கம் நிகீதா திரும்பினான். அதன் முன்னால் முழங்காலிட்டபடி அவன் வணங்கவில்லை, ஆனால் சிந்தனையில் ஆழ்ந்தான். வாழ்க்கையில் என்ன மாதிரியான மாற்றம் ஏற்பட்டு விட்டிருந்தது! அவனுக்குப் பின்னால் சூரியன் எழுந்த போது, கல்லறைத் தளத்தின் பனியால் கழுவப்பட்ட புற்கரண் மீது, சாய்வான நிழலை ஏற்படுத்தியது, துலூனின் நாய்ப்பட்டியின் கேவலமான உருவத்தைப் போலிருந்தது. நிகீதா தனது தலையைத் தரைப் பக்கம் தாழ்த்திச் சொன்னான்:

''என்னை மன்னி, தந்தையே.''

காலை நேரத்தின் சந்தடியற்ற அமைதியில் அவனது குரல் கரகரப்பாகவும், சோர்வாகவும் இருந்தது. சற்று இடைவெளிக்குப் பிறகு, திரும்பவும் உரக்கச் சொன்னான்:

''என்னை மன்னி, தந்தையே.''

ஒரு காலத்தில் தெளிவான மணி போன்று ஒலிக்கக் கூடிய தனது குரலின் தாங்கிக் கொள்ள முடியாத இழப்புக்காகக் கண்ணீர் விட்டான், ஒரு பெண்ணைப் போலத் தேம்பித் துடித்தான்.

இடுகாட்டினின்றும் ஏறத்தாழ ஒரு வெர்ஸ்தா தூரம் அவன் கடந்து சென்றிருந்த போது, நிகீதா திடீரென்று முற்றப் பாதுகாவலனைச் சந்தித்தான். தனது தோளின் மீது ஒரு மண்வாரியும், தனது இடைவாரில் ஒரு கோடரியும் இருக்க, சாலையோரத்துப் புதர்களுக்கிடையே ஒரு பாதுகாவலனைப் போல தீஹன் நின்று கொண்டிருந்தான்.

''புறப்பட்டு விட்டாயா நீ?'' தீஹன் கேட்டான்.

''நான் செல்கிறேன். நீ இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

''எனது சன்னலருகே நடுவதற்காக ஒரு செந்நிறப் பெர்ரி மரத்தைத் தோண்டலாம் என்று நான் எண்ணினேன்.''

ஒருவரை ஒருவர் அமைதியாகப் பார்த்தபடி அவர்கள் சிறிது நேரம் நின்றார்கள். நீர் சொட்டும் கண்களோடு தீஹன் அப்பக்கமாகத் திரும்பினான்.

''நட. கீழே சாலையை அடைகின்ற வரை நானும் உன்னுடன் வருகிறேன்.''

மௌனமாக அவர்கள் நகர்ந்தார்கள். தீஹன் தான் முதலாவதாகப் பேசினான்:

''பனித்திவலைகள் கனமாக விழுந்து கொண்டிருக்கின்றன. இது ஒரு கெட்ட அடையாளம். இத்தகைய பனித்திவலைகள் வறட்சியும், மோசமான அறுவடையும் என்பது பொருளாகும்.''

''கடவுள் அதைத் தவிர்ப்பார்.''

தீஹன் வியாலவ் ஏதோ பதிலை முணுமுணுத்தான்.

''நீ என்ன சொன்னாய்?'' என்று சற்று நடுக்கமுற்றவனாக நிகீதா கூறினான், ஏனெனில் இந்த மனிதனிடமிருந்து அவன் எப்பொழுதுமே, மற்றவர்களிடம் எதிர்பார்ப்பதை விட, ஆன்மாவைச் சங்கடத்திற்குள்ளாக்கும் வித்தியாசமான வார்த்தைகளை எதிர்பார்த்தான்.

''அவர் ஒருவேளை தவிர்க்கக் கூடும் என்று நான் கூறினேன்.''

ஆனால் குழி தோண்டுபவன் வேறு எதையோ சொல்லியிருக்க வேண்டும் என்பதிலும்,அதைத் திரும்பவும் கூறுவதற்கு அவன் விரும்பவில்லை என்பதிலும் நிகீதா உறுதியாக இருந்தான்.

''ஏன்? கடவுளினுடைய கருணையில் உனக்கு நம்பிக்கை இல்லையா?'' என்று இடித்துரைப்பது போலக் கேட்டான்.

''ஏன்?'' திருப்பிக் கேட்டான் தீஹன் அமைதியாக. ''நமது இப்போதைய தேவையெல்லாம் மழை. இந்தப் பனித்திவலைகள் காளான்களுக்குக் கூட கெடுதலாகும். ஒரு சரியான எசமானனால், ஒவ்வொன்றும் சரியான நேரத்தில் செய்யப்பட வேண்டும்.''

நிகீதா பெருமூச்சு விட்டு, தனது தலையை அலைத்தான்.

''இதுவல்ல சிந்திப்பதற்கு சரியான முறை, தீஹன்...''

''இது போதுமானது. நான் எனது கண்களால் எனது சிந்தனையைச் செய்யவதில்லை.''

மற்றொரு ஐம்பது எட்டுகள் மௌனமாகச் சென்றனர். தனது அகன்ற நிழலைக் கவனித்தபடி, நிகீதா தனது கண்களால் தரையைப் பார்த்தபடி இருந்தான். தனது காலடிகளின் நேரத்தைக் கவனித்தபடி, வியாலவின் விரல்கள் அவனுடைய கோடரிக் கைப்பிடியைத் தட்டின.

''ஓர் ஆண்டு அல்லது சற்று தள்ளி உன்னைப் பார்க்க நான் வருவேன், நிகீதா இல்யீச்; நான் வரலாமா?''

''நீ விரும்பினால். உனக்கு ஆர்வமுள்ளவன்.''

''அது உண்மை.''

அவன் நின்று, தனது தொப்பியைக் கழற்றினான்.

''நல்லது, அப்புறம் போய் வருக நலத்துடன், நிகீதா இல்யீச்!'' என்றான் அவன், தனது கன்னத்தைத் தேய்த்தபடி, சிந்தனைவயப்பட்டபடி மேலுங் கூறினான்:

''உன்னுடைய பணிவான உள்ளத்திற்காக, நான் உன்னை விரும்புகிறேன். உன் தந்தையினுடைய குணங்களோ அவன் உடலின் மீது இருக்கின்றன, ஆனால் நீ—உன்னுடையது உன் உள்ளத்திலே, உன்னுடைய ஆன்மாவிலே இருக் கிறது...''

நிகீதா தனது கைத்தடியைக் கீழே போட்டான், தனது கூனல் மீது உள்ள சாக்கைத் தானாகவே சரிசெய்துகொண்டான், முற்றப் பாதுகாவலனை அமைதியாகக் கட்டித் தழுவினான். தீஹனும் கரடி போலத் திரும்பி அணைத்தான், மறுபடியும் வலியுறுத்தி உரக்கச் சொன்னான்:

''ஆக, நான் வந்துகொண்டிருப்பேன்.''

''நன்றி.''

சாலையானது பைன் மரக் காட்டுக்குள் நுழையும் ஓர் ஒடுக்கமான திருப்பத்தில், நிகீதா திரும்பிப் பார்த்தான். தனது மண்வாரி மீது சாய்ந்தபடி, கையிடுக்கில் தனது தொப்பியை வைத்துக் கொண்டு யாரையும் போகவிடக் கூடாது என்ற தீர்மானத்தோடு நிற்பது போல, சாலையின் மையத்தில் தீஹன் நின்றுகொண்டிருந்தான்; அவனது அருவருப்பான தலையின் முடியைக் காலை நேரத் தென்றல் கலைத்தது.

தொலைவிலிருந்து பார்க்க முட்டாள் அந்தோனுஷ்காவை தீஹன் எப்படியோ நினைவு படுத்தினான். நிகீதா

அர்தமோனவ் தனது நடையை விரைவு படுத்தினான். அவனுடைய எண்ணங்கள் இந்தப் புதிரான நபரைச் சுற்றி வட்டமிட்டது, திரும்பத் திரும்ப இதை அவன் கேட்பது போலக் காணப்பட்டது:

ஓ, கிறிஸ்து எழுந்திட்டார், எழுந்திட்டார்,
சக்கரம் ஒன்றை வண்டி இழந்தது,
சக்கரம் ஒன்றை இழந்தது...

2

அவர்கள் தந்தையினுடைய ஒன்பதாவது இறந்த ஆண்டு விழா வரையிலுங் கூட அர்தமோனவுடைய பெயரால் சர்ச் கட்டி முடிக்கப் பெறவில்லை. திருத்தூதர் இல்யாவுக்கு அதைப் படையல் செய்திருந்தார்கள். ஏழு ஆண்டுகளாக அந்த வேலையானது இழுத்துக் கொண்டு போனது. இந்த மந்தமான போக்கிற்கு அலெக்ஸியே காரணம்.

''கடவுள் பொறுத்துக் கொள்வார்—அவருக்கு அவசரமென்ன?'' கடவுள் பற்றில்லாமல் அவன் விரைந்து பேசுவதுண்டு; சர்ச்சுக்காகத் தயாரிக்கப்பட்ட செங்கற்களை அவன் மாற்றியனுப்பினான்: முதலாவதாக ஆலையின் மூன்றாவது பகுதியைக் கட்டவும், பிறகு ஒரு மருத்துவமனை கட்டவும் பயன்படுத்தினான்.

படையல் சடங்குகள் முடிந்தன. அவர்களுடைய தந்தை, குழந்தைகளின் கல்லறைகளில் நினைவு வழிபாடு செய்யப்பட்டது, கூட்டம் கலைந்து போகின்ற வரை, அர்தமோனவ்கள் இடுகாட்டில் தயங்கித் தயங்கி நின்றார்கள். பிறகு பீர்ச் மரங்களுக்குக் கீழாக ஒரு பெஞ்சின் அடியில், குடும்ப வட்டத்திற்குள்ளாகத் தங்கி விட்ட, உல்யானா பய்மகோவாவைத் தந்திரமாகப் புறக்கணித்து விட்டு, அவர்கள் மெதுவாக வீடு நோக்கி நகர்ந்தார்கள். அவசரப்பட்டுப் போக வேண்டும் என்பதற்கு அவசியமில்லாதிருந்தது. ஏனெனில் திருச் சபைகுருமார், அறிமுகமானவர்கள் மற்றும் ஊழியர்களுக்கான விருந்து மூன்று மணிக்கே ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

அன்று மேக மூட்டமான நாள். வானம் இலையுதிர் காலத்திற்குரிய தோற்றத்தைக் கொண்டிருந்தது. ஈரப்பதமான காற்று, மழைவரும் அறிகுறியோடு, களைத்துப்

போன குதிரையைப் போல, ஊசியிலை மரங்களின் கொப்பு களை வளைத்து வீசிக் கொண்டிருந்தது. ஆலையை நோக்கிச் சென்ற மணற் பாங்கான செந்நிறப் பாட்டையின் கீழே கருத்த மனித உருவங்கள் நழுவிச் சென்றன, ஒரு பொது வான வட்டத்தைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த ஆலையினு டைய மூன்று செங்கற் தொகுதிகளும், பூமியை ஒரு செந் நிறமாகக் காட்டியது.

தனது கைத்தடியை அலைத்தபடி அலெக்ஸி கூறினான்:

''நாம் எப்படி நமது தொழிலைச் செய்து கொண்டிருக் கிறோம் என்பதைக் காண தந்தை மகிழ்ச்சி அடைந்திருக் கக் கூடும்!''

''ஜார் கொல்லப்பட்ட போது அவர் கவலைப்பட்டிருக் கக் கூடும்,'' என்று கண நேர சிந்தனைக்குப் பிறகு பியோத்தர் பதிலளித்தான். அவனுடைய தம்பி சொல் வதை எல்லாம் ஒப்புக் கொள்வதற்கு அவன் விரும்பவில்லை.

''நல்லது, கவலைப் படுவதற்கு அவர் விரும்பியதில்லை. அவர் தனது சொந்த நகைத்திறன்களைப் பயன் படுத்தி னார், ஜாருடையதையல்ல.''

தனது நெற்றியின் கீழே வருமாறு தனது குல்லாவை இழுத்து விட்டுக் கொண்டு அலெக்ஸி நின்று, பின்னால் திரும்பி பெண்களைப் பார்த்தான். சிறிய, மெலிந்த கருத்த உருவமாக, எளிய உடையுடன் அவனது மனைவி, ஒரு கைக்குட்டையால் தனது கண்ணிமைகளைத் துடைத்தபடி, மிதிபட்ட மணல் மீது மெதுவாகக் கால் வைத்து நடந் தாள். தோள்களிலும், கைகளிலும் அழகுக்காகத் தைக்கப் பட்ட நீண்ட கருமணிகளுடன் கூடிய கருப்புப் பட்டுத்தளர் மேலுடுப்பும், அடர்ந்த செந்நிற தலைமுடியின் மீது நன்கு பொருந்துகிற மாதிரி கருஞ் சிவப்புக் கைக்குட்டை கட்டி, வளர்ந்து, கொழுகொழுத்த நதால்யாவுக்குப் பக்கத்தில் வருகின்ற போது அவள் கிராமப் பள்ளியாசிரியை போலக் காணப்பட்டாள்.

''உன் மனைவி கவர்ச்சி மிக்கவளாகக் காணப்படு கிறாள்.''

பியோத்தர் பதில் பேசவில்லை.

''இந்த ஆண்டு எந்த வகையிலும் நிகீதா ஆண்டு விழா வுக்கு மீண்டும் வரவில்லை. நம் மீது அவன் கோபமாக இருக்கிறானா, என்ன?''

பரப்பதமான தட்ப நிலை நிலையில் தனது நெஞ்சும் காலும் வலிப்பதை அலெக்ஸி உணர்ந்தான். தனது கைத் தடி மீது தாங்கியபடி அவன் இலேசாக நொண்டியபடி நடந்தான். நினைவு வழிபாட்டின் போது ஏற்பட்ட துய ரார்ந்த மனநிலையையும், இந்த மேக மூட்டமான நாளின் வருத்தத்தையும் போக்கி விட அவன் ஆர்வத்தோடு இருந் தான். எப்போதும் பிடிவாதமாக இருப்பது போல தனது அண்ணனைப் பேசவைக்கும் தனது முயற்சியைத் தொடர்ந்து செய்து வந்தான்.

''கதறி அழுவதற்காக உன் மாமியார் பின்னுக்குத் தங்கி விட்டாள். அவரை அவளால் மறக்க முடியாது. ஓர் அருமையான கிழவி. அவள் வீடு திரும்பும் வரை பொ றுத்திருக்குமாறு தீஹனிடம் நான் கிசுகிசுத்து விட்டு வந் தேன். தனக்கு மூச்சு முட்டுகிறது என்றும், நடப்பது சிரம மாக இருக்கிறது என்றும் அவள் புகார் செய்கிறாள்.''

கட்டாயப் படுத்தப்பட்டது போல, மூத்த அர்தமோ னவ் தாழ்வான குரலில் திரும்பச் சொன்னான்:

''சோர்வு.''

''நீ தூங்கி விட்டாயா? என்ன சோர்வு?''

தொலைவில், ஊசியிலை மரங்களால் மண்டிக் கிடந்த குன்றுகளின் பக்கங்களைப் பார்த்துக் கொண்டு ''தீஹன் வெளியேற்றப் பட்டிருக்க வேண்டும்,'' பியோத்தர் பதில ளித்தான்.

''ஏன்?'' என்று அவனது சகோதரன் வியப்புற்றவனாகக் கேட்டான். ''இந்த மனிதன் நேர்மை, தவறாதவன், சுறுசுறு ப்பானவன்...''

''அவன் முட்டாளும் கூட,'' பியோத்தர் சேர்த்துச் சொன்னான்.

பெண்கள் வந்து சேர்ந்தார்கள். அவளது சிறிய தோற் றத்திற்கு வியப்பூட்டுகின்ற வகையில் உரத்த குரலில் ஓல்கா தனது கணவனிடம் கூறினாள்:

''இல்யாவைப் பள்ளிக்கு அனுப்புமாறு சொல்லி நான் நதால்யாவைத் தொடர்ந்து வற்புறுத்திக் கொண்டு வரு கிறேன். ஆனால் அவள் பயப்படுகிறாள்.''

கருவுற்றிருந்த நதால்யா, கொழுத்த வாத்தைப் போல, ஒவ்வொரு எட்டுக்கும் பக்க வாட்டில் அசைந்து அசைந்து நடந்தாள். மூத்தவளுக்குப் பொருந்தும் மாதிரி, அவள் மெதுவாக, மூக்கால் பேசினாள்:

''இந்தப் பள்ளிகளெல்லாம் தீங்கு பயப்பன என்று என் மனத்திற்குப் படுகிறது. எலேனா தனது கடிதங்களில் எழுதுகிறாள், அவள் என்ன சொல்ல முயற்சிக்கிறாள் என்பதை உன்னால் தெரிய முடியாது.''

தனது நெற்றியிலிருந்த வியர்வையைத் துடைப்பதற்காகத் தனது தொப்பியை உயர்த்தியபடி அலெக்ஸி ''பள்ளி, பள்ளி, அவர்கள் எல்லாருக்குந்தான்'' என்று கண்டிப்போடு கூறினான். ஒரு முதிர்ச்சி அடையாத வழுக்கை நெற்றியிலிருந்து உச்சி வரை, இரண்டு கூர்மையான கோணங்களை உருவாக்கி, அவனது முகத்தை மிகவும் நீளமானதாகக் காட்டிக் கொண்டிருந்தது.

உசாவுகின்ற பாவனையில் தனது கணவனிடம் நதால்யா வினாதித்தாள்:

''பம்யாலவ் சொல்வது சரி. கற்பது என்பது மக்களைக் கட்டுப் பாடற்றவர்களாக்குகிறது என்று அவர் கூறுகிறார்.''

''ஆமாம்,'' என்றான் பியோத்தர்.

''பாத்தீங்களா?'' என்று மிகவும் திருப்திகரமாக நதால்யா வியந்து கூறினாள்; ஆனால் அவளது கணவன் சிந்தனைவயப்பட்ட முறையில் தொடர்ந்தான்:

''கற்பிக்க வேண்டும்!''

அவனது சகோதரனும், ஒல்காவும் கொல்லென்று சிரித்தார்கள்; அவர்களை நிந்தித்தாள் நதால்யா:

''நீங்கள் எப்படிச் சிரிக்க முடியும்? நாம் எங்கிருந்து வந்து கொண்டிருக்கிறோம் என்பதை நினைவில் கொள்ளுங்கள்!''

அவர்கள் அவளது கைகளைப் பற்றினார்கள், மிகவும் விரைவாக நடந்தார்கள். ஆனால் பியோத்தர் தனது நடையை மெதுவாக்கியபடி கூறினான்:

''நான் தாயாருக்காகக் காத்திருப்பேன்.''

அந்த மகிழ்ச்சியற்ற ஆசாமி தீஹன் வியாலவ், இவனை நிலை குலையச் செய்து விட்டான். கல்லறையிலிருந்து ஆலையைப் பார்த்தபடி, நினைவு வழிபாட்டுக்குச் சற்று முன்னர், பியோத்தர் தனக்குத்தானே, தற்பெருமையாக அல்ல, ஆனால் தான் என்ன கண்டானோ அதை வெறுமனே வெளிப் படுத்துவது போல, உரக்கக் கூறினான்:

''வியாபாரம் வளர்ந்திருக்கிறது.''

தனக்குப் பின்புறத்தில் இதைக் கேட்ட உடனேயே,

முன்னாளைய குழி தோண்டுபவனுடைய அமைதியான குரல் பேசியது:

''ஒரு நிலவறையில் பூஞ்சக் காளான் மாதிரி தனது சொந்த சக்தியில் வியாபாரம் வளர்கிறது.''

பியோத்தர் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை, தனது தலையைக் கூடத் திருப்பவில்லை. ஆனால் ஐயத்திற்கிடமில்லாது, மட்டு மீறி அறிவு மழுங்கிய முற்றப் பாதுகாவலனுடைய வார்த்தைகள் அவனது ஊக்கமின்மையைக் கிளப்பிவிட்டன. ஒரு மனிதன் வேலை செய்கிறான்: நூற்றுக்கணக்கானவர்களுக்கு அவர்களுக்குரிய ரொட்டியை அவன் தருகிறான்; இதனது அக்கறையால் அவன் பகலும் இரவும் தன்னைப் பற்றியும் மறக்கிறான். திடீரென்று யாரோ ஒரு முட்டாள், வியாபாரம் அதனது எசமானனுடைய மூளையால் அல்லாது, தனது சொந்த சக்தியில் வாழ்கிறது என்று அறிவிக்கிறான். மேலும் அவனைப் பார்க்கும் பொழுதெல்லாம் இந்த ஆசாமி ஆன்மா மற்றும் பாவம் என்று எதையாவது முணுமுணுத்துக் கொண்டிருக்கிறான்.

சாலையோரத்தில் கிடந்த ஒரு பழைய பைன் மரக் கட்டையின் மீது அர்தமோனவ் உட்கார்ந்தான். தனது காதை இழுத்துவிட்டுக் கொண்டு ஒரு நாள் ஓல்காவிடம் புகார் செய்தது எப்படி என்பதை அவன் நினைத்துப் பார்த்தான்:

''என்னுடைய ஆன்மாவைப் பற்றிச் சிந்திப்பதற்கு எனக்கு ஒருபோதும் நேரம் இருந்ததில்லை.''

அவளிடத்தில் அவன் ஒரு விநோதமான கேள்வியைக் கேட்டான்:

''ஏன், உன்னுடைய ஆன்மா உன்னை விட்டுத் தனியாக வா வசிக்கிறது?''

முதலில் இந்த வார்த்தைகளை அவன் ஒரு பெண்ணினுடைய கேலியாகத்தான் எடுத்துக் கொண்டான். ஆனால் ஓல்காவினுடைய பறவை போன்ற முகமானது கிளர்ச்சியற்றதாக இருந்தது, அவளது கண்ணாடிகளுக்குப் பின்னால் அவளது கருண்ட கண்கள் அன்போடு மினுமினுத்தன.

''நான் புரிந்து கொள்ளவில்லை,'' என்றான் அவன்.

''ஆன்மாவை ஒரு மனிதனை விட்டுத் தவிர்த்து, ஓர் எடுப்புப் பிள்ளை போல, மக்கள் பேசுகின்ற போது என்னால் புரிந்து கொள்ள முடிவதில்லை.''

''என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை,'' என்று

பியோத்தர் திரும்பிக் கூறினான். இந்தப் பெண்ணோடு உரையாட வேண்டும் என்ற அனைத்து விருப்பத்தையும் இழந்து விட்டான். அவள் மிகவும் அந்நியளாக இருந்தாள், பெரும்பாலும் புரிந்து கொள்ள முடியாதவளாகவும் இருந்தாள். மேலும், காணுகின்ற இந்த எளிமையானது சூழ்ச்சிக்கான ஒரு திரையாக இருக்கலாம் என அவன் பயந்தாலும், அவளது எளிமை கவர்ந்திழுத்தது.

தீஹன் வியாலவைப் பொருத்தமட்டில், பியோத்தர் எப்போதுமே அவனை வெறுத்து வந்தான். அவனது புள்ளி விழுந்த முகம், உயரமான கன்ன எலும்புகள், அவனது விநோதமான கண்கள், மண்டை ஓட்டோடு நெருக்கமாக ஒட்டப்பட்டது போல, அவனது செந்நிற தலைமுடிக்குள்ளாகப் பாதி மறைந்து காணப்பட்ட காதுகள், அவனது நெருக்கமற்ற தாடி, விரைவற்ற ஆனால் திறமையான நடக்கும் பாணி, திண்ணுறுதி வாய்ந்த உடல் இவற்றைப் பார்த்த மாத்திரத்தின் அவன் சங்கடப் பட்டான். தீஹனுடைய தன்னிறைவமைதி கூட கவலையைத் தந்தது, ஒருவகையில் பகைமை கொள்ளத் தக்கதாகவும் இருந்தது• அவனுடைய சுறுசுறுப்புக் கூட எரிச்சலூட்டியது. தீஹன் ஓர் எந்திரத்தைப் போல வேலை செய்தான். கடிந்துரைக்கும் எந்த மறுப்பையும் அபூர்வமாகத் தந்தான், ஆனால் அதுவும் நச்சரிப்பதாக இருந்தது; கடந்து சென்ற ஒவ்வோர் ஆண்டிலும் குடும்பத்தின் ஓர் அங்கமாகப் பிரிக்க முடியாதபடி வளர்ந்து கொண்டு வந்தது, அர்தமோனவின் வாழ்க்கைச் சக்கரத்தில் பிரிக்க முடியாத அளவுக்குத் தான் பேசப்படுவதாக அவன் உணர்ந்தது ஆகியனவற்றை உணர்ந்த போது கவலையானது கூடிக் கொண்டே வந்தது. நாய்களும், குதிரைகளும் அவனை நேசித்தது போல, அதிசயமாக குழந்தைகளும் அவனை விரும்பினார்கள். ஒநாய் வேட்டை நாய் துலூன், நிச்சயமாக அது கட்டிப் போடப் பட்டிருந்தால், தீஹனைத் தவிர பிற யாரையும் தன்னை நெருங்குவதற்கு அநுமதிக்காது; பியோத்தருடைய மூத்த மகன், அடங்காத இல்யா, தனது அப்பா, அம்மாவைக் காட்டிலும் முற்றப் பாதுகாவலனுக்கு மிகவும் உடனுக்குடன் கீழ்ப்படிந்தான்.

வியாலவினுடைய பார்வையினின்றும் தன்னைத் தவிர்த்துக் கொள்வதற்காக, சர்ச் காவல்காரன் அல்லது காடுக் காவலன் என்ற மற்றொரு வேலையை அர்தமோனவ்

அவனுக்கு வழங்கினான். மறுப்புச் சொல்வது போல தீஹன் அவனது தலையை பலமாக அசைத்தான்:

''அதற்கு நான் இலாயக்கானவன் அல்ல. என்னால் நீ களைத்துப்போயிருந்தால், கொஞ்சம் ஓய்வு கொள். எனக்கு ஒரு மாதம் விடுமுறை கொடு. நான் நிகீதா இல்யீச்சைப் போய்ப் பார்க்கிறேன்.''

அவன் சொன்னதெல்லாம் இது தான்: ''கொஞ்சம் ஓய்வு கொள்''. இந்தச் சொற்றொடர் மிகவும் முட்டாள் தனமாக, திமிராக, சதுப்பு நிலத்திற்கு அப்பால் எங்கோ போய் மறைந்திருக்கக் கூடிய, வறுமைப்பட்ட துறவி இல்லம் ஒன்றில் உள்ள தனது தம்பியை நினைவு படுத்திப் பேசியது, பியோத்தருடைய மனத்தில் ஆர்வமிக்க சந்தேகத்தைக் கிளப்பியது. நிகீதாவினுடைய தற்கொலை முயற்சிக்குப் பிறகு தீஹன் அது பற்றி அவனிடம் கூறியிருந்த கட்டுக் கதைக்கு மேலாக, வேறு ஏதோ கட்டாயம் இருக்க வேண்டும், வெட்கப்படக் கூடிய எதோ ஒன்று இருக்கும் என்று அவன் அறிவான். புதிய அவக்கேடுகளுக்காக அவன் எதிர் பார்த்துக் கொண்டிருப்பது போலக் காணப்பட்டது. அவனது இமை துடித்த கண்கள் எச்சரிக்கை செய்தன:

''என்னைத் தொடாதே! உனக்கு நான் தேவைப் படுகிறேன்.''

அவன் ஏற்கெனவே மூன்று முறை துறவி மடத்திற்குச் சென்றிருக்கிறான். தனது முதுகில் ஒரு பையைப் போட்டுக் கொண்டு, கையில் ஒரு கம்பை எடுத்துக் கொண்டு, அவசரமில்லாதபடி, பூமியின் மீது கருணைமிக்க செயல் புரிவது போல புறப்பட்டுச் செல்வான். உண்மையில், அவன் செய்த ஒவ்வொன்றும் கருணையின் பாற்பட்டு செய்யப் பட்டது போலக் காணப்பட்டது.

திரும்பி வந்ததும், நிகீதாவைப் பற்றிய அவர்களுடைய வினாக்களுக்கு தீஹன் மெதுவாக, விளக்கமில்லாதபடி பதில் பேசுவான். அவனுக்குத் தெரிந்த எல்லாவற்றையும் அவன் சொல்லிக் கொண்டிருக்கவில்லை என்று நினைக்கும்படியான சிந்தனையை எப்பொழுதுமே அது ஏற்படுத்தும்.

''அவன் நல்லாத்தான் இருக்கிறான். மதிக்கப்படுகிறான். உங்களுடைய கடிதங்களுக்கும் பரிசுகளுக்கும் நன்றி கூறச் சொன்னான்.''

அதைத் தவிர வேறு எதையாவது கேட்டுத் தெரிந்து

கொள்ளலாம் என்ற முயற்சியில், ''அவன் என்ன சொல்கிறான்?'' என்று பியோத்தர் கேட்பான்.

''ஒரு துறவியால் என்ன கூற முடியும்?''

''சரி, அப்புறம் என்ன?'' பொறுமையில்லாதபடி அலெக்ஸி கேட்பான்.

''அவன் கடவுளைப் பற்றிப் பேசுகிறான். கால நிலையில் அவன் ஆர்வங் கொண்டிருக்கிறான்—மழை வர வேண்டிய போது, வரவில்லையே என்கிறான். கொசுக்களைப் பற்றிப் புகார் செய்தான். அங்கே ஏராளமாகக் கொசுக்கள் இருக்கின்றன. அவன் உங்களைப் பற்றிக் கேட்டான்.''

''என்ன?''

''அவன் உங்களுக்காக வருத்தப் படுகிறான்.''

''எங்களுக்காகவா? ஏன்?''

''எல்லாவற்றுக்காகவும். ஏனென்றால் நீங்கள் ஓட்டத்தில் வாழ்கிறீர்கள், அவன் அப்படியே நின்று விட்டான், நல்லது, மேலும் அவன் உங்களுக்காக வருத்தப் படுகிறான், ஏனெனில் நீங்கள் மன நலத்தோடு இல்லை.''

அலெக்ஸி உரக்கக் கத்துவான், வெடிச் சிரிப்புடன்: ''என்ன முட்டாள்தனம்!''

தீஹனுடைய கண்மணிகள் சுருங்கும், அவனுடைய கண்கள் வெறுமையாக மாறும்.

''சரி, அவன் என்ன நினைக்கிறான் என்று எனக்குத் தெரியாது. அவன் என்ன சொன்னானோ அதை நான் உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். நான் ஒரு அப்பாவி மனிதன்.''

''ஆமாம், நீ அப்பாவி தான்!'' அலெக்ஸி அவனிடம் கிண்டலாகக் கூறுவான். ''முட்டாளைப் போல, அந்தோன்.''

இளங்காற்று வீசியது, பியோத்தர் அர்தமோனவை நறுமணமுள்ள வெதுவெதுப்பில் சுற்றிச் சூழ்ந்தது, பகற்பொழுது பிரகாசமானதாக வளர்ந்தது. மேகங்களுக்கிடையே நீல நிறமான எல்லையற்ற பாழ்வெளி ஒன்று உருவானது, அதனுடைய எல்லையற்ற ஆழத்தினின்றும் சூரியன் எட்டிப் பார்த்தது. பியோத்தர் சூரியனை மேலோட்டமாகப் பார்த்தான், கண்ணைக் கூசச் செய்தது, இன்னும் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினான்.

ஒருவகையில், அது உணர்ச்சியைப் புண் படுத்துவதாகவே இருந்தது, ஒரு துறவி மடத்தில் ஆயிரம் ரூபிள்களை இருப்பில் வைத்த பிறகு, ஆண்டுத் தொகையாக நூற்றி

...யாதை வாழ்க்கை முழுவதும் நிகீதா தனக்கு உறுதிப் படுத்திக் கொண்டு, தனது சகோதரர்கள் பெறும்படியாக அவனுடைய மரபுரிமைச் சொத்தை விலக்கிக் கொண்டிருந் தான்.

''அவன் எதற்காக நம்மிடம் அம்மாதிரி நடந்து கொள் கிறான்?'' பியோத்தர் முணுமுணுத்தான்; ஆனால் அலெக்ஸி மகிழ்ச்சியாக இருந்தான்:

''எதற்காக அவனுக்குப் பணம் தேவை? அந்தத் தண் டந்தீனி ஆசாமிகளை, ஒன்றுமே செய்யாத அந்தத் துறவி களைக் கொழுக்க வைக்கவா? இல்லை, அவன் சரியாக முடிவுசெய்தான். நமக்குத் தொழில் இருக்கிறது, குழந் தைகள் இருக்கிறார்கள்.''

நதால்யா உண்மையாகவே நெகிழ்ந்து போய் விட் டிருந்தாள்.

''ஆக அவன் நமக்குச் செய்த தீங்கை மறந்து போய் விட்டிருக்கவில்லை,'' மன நிறைவோடு அவள் கூறினாள். அவளது சிவந்த கன்னத்தில் தனித்து வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். ''எலேனாவுடைய சீதனம் இருக் கிறது.''

தனது தம்பியினுடைய இந்த நடவடிக்கை பியோத் தரின் மனத்தில் நிழலாடியது, ஏனெனில் துறவி மடத்திற்கு நிகீதா புறப்பட்டுச் சென்றது, நகரத்தில் கெடு நோக் கோடு பொருள் கொள்ளப்பட்டது, அது அர்தமோனவ் களுக்கு அனுகூலமற்ற நிலையை ஏற்படுத்தியது.

சீக்கிரமாகப் புரிந்து கொள்ளும் தன்னுடைய தம்பி, தன்னுடைய வியாபாரத்தில் சுலபமான பணியினைப் பொ றுக்கிக் கொண்டு விட்டதை—நீழ்னி-நோவ்கரத் சந்தைக்கு ஆண்டில் இரண்டு முறை போல போய் வருவது, மாஸ் கோவுக்குச் சென்று வருவது—போன்றவற்றை அவன் காண முடிந்தாலும், அலெக்ஸியிடம் பியோத்தர் மிக நன்றாக நடந்து கொண்டான். அத்தகைய பயணங்களிலிருந்து திரும்பிய அலெக்ஸி மாஸ்கோ உற்பத்தியாளர்களுடைய செல்வ வளத்தின் நல்ல கதைகளைக் கூறுவான்.

''பிரபுக்களை விட மட்டமில்லாமல், அவர்கள் ஆடம்பர மாக வாழ்கிறார்கள்.''

''ஒரு பிரபுவைப் போல வசிப்பது சுலபமானது,'' பியோத்தர் சுட்டிக் காட்டினான்; ஆனால் அக்குறிப்பை

அவன் தம்பி உணரத் தவறி விட்டான், ஏனெனில் அவன் ஆர்வத்தோடு தொடர்ந்தான்:

''ஒரு வியாபாரி தனக்காக ஒரு வீடு கட்டும் போது, அது ஒரு முறையான கத்தீட்ரல் போல இருக்கிறது! அவர்கள் தங்களுடைய குழந்தைகளுக்குக் கல்வி புகட்டுகிறார்கள்.''

மிகவும் வயதாகிய போதிலும், அலெக்ஸி ஆரம்பகால வாலிபப் பருவத்தின் சுறுசுறுப்பினை திரும்பப் பெற்றிருந்தான், அவனது பருந்துக் கண்கள் எப்பொழுதுமே பிரகாசமாயிருந்தன.

''எதற்காக எல்லா நேரத்திலும் உன்னுடைய முகத்தைச் சுழித்தபடி வைத்துக் கொள்கிறாய்?'' என்று அவன் தன்னுடைய அண்ணனைக் கேட்பதுண்டு. மேலும், அவனுக்கு போதிக்கவும் செய்வான்: ''வியாபாரம் இலேசாகச் செய்யப்பட வேண்டும். வியாபாரம் மனச் சோர்வில் நிற்க முடியாது.''

தங்களுடைய தந்தையின் பொதுவான குணாம்சம் அநேகத்தை அலெக்ஸி பெற்றிருந்ததை பியோத்தரால் காண முடிந்தது; ஆனால் அவனைப் புரிந்து கொள்வது மிகமிகக் கடினமானதாக இருப்பதை உணர்ந்தான்.

''நான் ஒரு நோயாளி,'' அலெக்ஸி இன்னமும் குடும்பத்தாரிடம் நினைவு படுத்துவான். ஆனால், தனது உடல் நலம் பற்றி அவன் எந்த அக்கறையும் எடுத்துக் கொள்ளவில்லை: நிறையக் குடித்தான், இரவு மாறி இரவு அதிகமாகச் சூதாடினான், பெண்களிடத்தில் ஒழுங்கீனமாக நடந்து கொண்டது போலக் காணப்பட்டது. எது அவனது வாழ்க்கையின் நோக்கமாக இருந்தது? அவனும் இல்லை, அவனுடைய குடும்பமும் இல்லை என்பது போன்று இருந்தது. பய்மகோவாவினுடைய வீடு மராமத்துப் பார்க்கக் கூடிய நிலையில் எப்பொழுதிலிருந்தோ இருந்தது, ஆனால் அலெக்ஸி அதில் கவனம் செலுத்தவில்லை. அவனுடைய குழந்தைகள் பிறந்ததிலிருந்தே நோய்வாய்ப் பட்டிருந்தார்கள், ஐந்து வயதுக்கு முன்பே இறந்து விட்டார்கள். ஒரே ஒருவன் மட்டுமே தப்பிப் பிழைத்திருந்தான்—மிரோன், அருவருக்கத்தக்கவாறு, எலும்புந் தோலுமாகவும் இருந்தான், இல்யாவை விட மூன்று ஆண்டு மூத்தவன். அலெக்ஸியும் அவன் மனைவியும் பயனற்ற பொருள்கள் மீது கேலிக்குரிய பேராசை என்ற நோய்க்கு ஆளாகி இருந்தார்கள். மேல் குடியினரிடமிருந்து வாங்கப்பட்ட தட்டு முட்டுச்

சாமான்களின் ஒழுங்கில்லாத கதம்பக் கூளங்களால் அவள் அறைகள் நிறைந்து கிடந்தன. தட்டுமுட்டு சாமானைப் பரிசளிக்க விரும்பினார்கள். அவர்கள் நதால்யாவுக்கு ரீங்கானால் அலங்கரிக்கப் பட்டிருந்த தனி மாதிரியான உடை அலமாரியைக் கொடுத்திருந்தார்கள், அவளுடைய தாயாருக்குத் தோல் கைவைத்த ஒரு பெரிய நாற்காலியும், கரிலியன் பிரம்பால் செய்யப்பட்டதும், வெண்கலத்தால் அலங்கரிக்கப் பட்டதுமான அற்புதமான படுக்கை கொடுத்திருந்தார்கள். ஓல்கா பாசி மணி வடிவமுள்ள படங்களில் ஆர்வம் கொண்டவள், இன்னும் அவளுடைய கணவன் மாவட்டங்கள் வழியான தனது பயணங்களின் போது அதே மாதிரியான படங்களை அவளுக்கு வாங்கி வருவான்.

கடைசல் வேலைப்பாட்டுடன் செதுக்கப் பட்டு, எண்ணற்ற செருகுப் பெட்டிகள் பொருத்தப் பட்ட ஒரு பெரிய சாய்வு மேசையை அவனது அண்ணன் பியோத்தருக்குத் தந்த போது பியோத்தர்: "நீ ஆர்வவெறி கொண்டவன்," என்றான். ஆனால் அலெக்ஸி சாய்வு மேசையை மட்டுமே தட்டிவிட்டுக் கத்தினான்:

"இது பாடுகின்ற மரத்தைக் கொண்டு செய்யப்பட்டது! அதுபோல அவர்கள் இனிமேல் செய்ய மாட்டார்கள். அதை அவர்கள் மாஸ்கோவில் தான் அறிவார்கள்!"

"நீ வெள்ளிச் சாமானாக வாங்குவது நல்லது. பிரபுக்கள் நிறைய வெள்ளிச் சாமான்கள் வைத்திருக்கிறார்கள்..."

"எனக்கு அவகாசம் கொடு—ஒவ்வொன்றையும் நாம் வாங்குவோம்! மாஸ்கோவில்..."

அலெக்ஸியின் பேச்சை நம்புவதானால், மாஸ்கோவானது முழுக்கவும் ஆர்வவெறி கொண்டவர்களால் நிரம்பியது என எண்ணத்தோன்றும். உல்லாசமாக வாழ வேண்டும் என்ற முயற்சியை விட வியாபார ஆர்வம் மிக்க குறைவானதாகவே இடம் பெற்றது—அவர்களில் ஒவ்வொருவரும்—மேல் குடியினரைப் போல, என்ன நோக்கத்திற்காக, மேல் குடியினர் விற்கும் பண்ணைகளிலிருந்து தேநீர்க் குவளைகள் வரை, ஒவ்வொன்றையும் வாங்குகிறார்கள் என எண்ணத் தோன்றும்.

தனது தம்பியைப் பார்க்கையில், தன்னுடைய சொந்த வீட்டில் இருப்பதைக் காட்டிலும் மிகவும் வசதியாக இருக்கிறான் என்று வேதனையுடன் கூடிய மனத்தாங்கலையும் பொறாமையையும் பியோத்தர் எப்போதுமே உணர்வான்.

அது புரிந்து கொள்ள சிரமமானதாக இருந்தது. ஓல்கா விடம் அவன் என்ன விரும்பினான் என்பதை அவனாலும் புரிந்து கொள்ள முடியாது. நதால்யா அருகிருந்தால், ஓல்கா வீட்டுப் பணிப் பெண் போலக் காணப்பட்டாள், ஆனால் மண்ணெண்ணெய் விளக்குகளிடம் அவள் அற்பத் தனமான பயம் எதையும் காட்டவில்லை, மேலும் தற் கொலை செய்து கொண்டவர்களுடைய கொழுப்பினின்றும் மாணவர்களால் மண்ணெண்ணெய் தயாரிக்கப் பட்டது என் பதையும் அவள் நம்பவில்லை. அவளுடைய மென்மையான குரல் இனிமையானதாக இருந்தது, அவளது கண்கள் அழ காக இருந்தன, அதனது அன்புதவழும் மினுமினுப்பு கண் ணாடிகளில் பளிச்சிட்டது. ஆனால் சிறுபிள்ளைத்தனமாக எரிச்சல் மூட்டுவது போல அவள் விஷயங்களைப் பற்றி யும், ஆட்களைப் பற்றியும் அவை தொலைவிலிருப்பவை போலப் பேசினாள். இது அவனைக் குழப்பியது, ஆத்திரம டையச் செய்தது.

''யாரையும் எதற்காகவும் குற்றஞ் சுமத்தலாம் என்று நீ நம்புகிறாயா?'' என்று பியோத்தர் வசைப் பாங்கோடு கேட்பான், அதற்கு அவள் பதில் கூறுவாள்:

''மக்கள் குற்றஞ் சாட்டப் பட வேண்டியவர்களே, ஆனால் மதிப்பீடு செய்வதற்கு நான் விரும்பவில்லை.''

பியோத்தர் அவளை நம்பவில்லை.

அவள் கணவனோடு, அவனை விட வயதானவள் போல நடந்து கொள்வாள், தானே புத்திசாலியாக இருக்க முடி யும் என்பதை அறிவாள். இதை அலெக்ஸி மனத்தாங்க லாகக் கொள்ளவில்லை. அவனும் அவளை ''அத்தை'' என்று அழைத்தான், அலைக்கழிப்பு நிலையில் அபூர்வமாக மட்டுமே அப்படி சொல்வான்:

''அது போதும், அத்தை—நான் களைப்பாக இருக் கிறேன்! நான் ஒரு நோயாளி, எனக்கு ஓரளவுக்குச் சலுகை காட்டுவதால் ஒன்றும் தீங்கு நேர்ந்து விடாது!''

''நீங்கள் போதுமான அளவு ஆதாயம் தேடுபவர் தானே, போதுமானது!''

அவள் தன் கணவனைப் பார்த்து முறுவலிப்பாள், அதே முறுவலிப்பைத் தன் சொந்த மனைவியினுடைய முகத்தில் பார்க்க வேண்டுமென்று பியோத்தர் விரும்பினான். நதால் யா மனைவிக்கு ஓர் எடுத்துக்காட்டு, திறமையான குடும் பத்தலைவி. வெள்ளரிக்காய் மற்றும் காளான்களை ஊறு

தயாரிப்பதிலும், பாதுகாப்பதிலும் அவள் விஞ்சி
ள், அவள் வீட்டிலிருந்த வேலையாட்கள் கடிகாரத்
சக்கரங்களைப் போல வேலை செய்தார்கள். அமைதி
காதலோடு, பசையைப் போலக் கணமாக ஆர்வங்
தபடி நதால்யா தன்னுடைய கணவனை நேசித்தாள்.
சிக்கனமாக இருந்தாள்.

''இப்போது வங்கியில் நாம் எவ்வளவு வைத்திருக்
றாம்?'' என்று கேட்பாள், ஆர்வத்தோடு தொடர்வாள்: ''அது ஒரு நல்ல வங்கி என்று உறுதியாகச் சொல்கிறாயா? அது மூழ்கிப் போய் விடாதே?''

அவள் பணத்தைக் கைகளில் எடுக்கின்ற போது, அவ அழகான முகம் கண்டிப்பானதாக மாறும். தனது இதழ்களைச் சேர்த்து இறுக்கிக் கொள்வாள், மறைப்பான, கொழுப்புப் போன்ற ஒளி அவளது கண்ணில் தோன்றும். தடித்த, அவளது கொழுத்த விரல்களால் பல முடைய காகித ரூபிள்களை எண்ணுகையில், ஈக் களைப் போல பணமானது பறந்து போய்விடும் என்று அஞ்சு போல, கவனமாகத் தொடுவாள்.

''நீயும் அலெக்ஸியும்—இலாபத்தை எப்படிப் பிரித்துக் கொள்கிறீர்கள்?'' பியோத்தருடன் படுக்கையில் அமர்ந்து இருக்கும் போது அன்பாகத் தடவிக் கொடுத்தபடி, கேட் பாள். ''உன்னை அவர் ஏமாற்றமாட்டார் என்று நிச்சய மாக நம்புகிறாயா? அவர் சுறுசுறுப்பானவர்! அவரும் அவ ருடைய மனைவியும், பேராசைக்காரர்கள். அவர்கள் கை யில் இருக்கக் கூடிய ஒவ்வொன்றையும் சுரண்டிக் கொள்ள முடியும், சுரண்டுதல், சுரண்டுதல்!''

கொக்கிகளால் சுற்றிவளைக்கப் பட்டிருப்பதாக அவள் தனக்குத்தானே எண்ணி அறிவித்தாள்:

''தீஹனைத் தவிர வேறு எவரையும் என்னால் நம்ப முடியாது.''

''பிறகு நீ ஒரு முட்டாளை நம்புகிறாய்,'' என்று கோபத்தோடு பியோத்தர் முணுமுணுப்பான்.

''அவன் ஒரு முட்டாள், ஆனால் அவனுக்கு மனச்சாட்சி இருக்கிறது.''

நீழ்னி-நோவ்கரத் சந்தைக்கு முதன் முறையாக பியோத் தர் அவளை அழைத்துச் சென்ற போது, இந்த அனைத்து ரஷ்யக் கடையின் பயங்கரமான வியாபாரத்தால் வியப்புற் றவளாய் பியோத்தர் அவளைக் கேட்டான்:

''அதை நீ எப்படி விரும்புகிறாய்?''

''மிகவும் அருமையாக இருக்கிறது, ஒவ்வொன்றும் ஏராளமிருக்கிறது, நமது ஊரில் இருப்பதைக் காட்டிலும் மிகவும் விலை மலிவாக இருக்கிறது.''

அவர்கள் வாங்குவதற்கு வேண்டிய பொருள்களை அவள் விவரிக்கத் தொடங்கினாள்:

''அரைப் பாரம் சோப், மெழுகுவத்தி ஒரு பெட்டி, ஒரு சாக்கு சர்க்கரை, அத்துடன் சுத்தம் செய்யப்பட்ட சர்க்கரை ஒரு சாக்கு...''

சர்க்கஸில், கழைக் கூத்தாடி தோன்றிய போது அவள் தனது கண்ணை மூடிக் கொண்டாள்:

''ஓ, வெட்கங்கெட்ட படைப்புகள்! ஓ, அவர்கள் அரை நிர்வாணமாக இருக்கிறார்கள்! ஓ, வயிற்றுப்பிள்ளைக்காரியாகிய நான் அவர்களைப் பார்க்க மாட்டேன். இது போன்ற பயங்கரமான இடங்களுக்கு நீ என்னை அழைத்துவரக் கூடாது— என் வயிறு கனமாக இருக்கிறது, பையனாகத் தான் இருக்க வேண்டும்!''

அத்தகைய நேரங்களில் பியோத்தர் அர்தமோனவ் சலிப்பிலே திக்கு முக்காடிக் கொண்டிருப்பது போல உணர்வான். எந்த மீனும் வசிக்காத வதராக்ஷா நதியில் இலைகளும் பசை போன்ற மாசுகளும் நிறைந்தது போன்ற உணர்வு ஏற்படும்.

வியாபார ரீதியில் நதால்யா இன்னமும் நீண்ட நேரம் பிரார்த்தனை செய்தாள். அவளது தொழுகைகளை முடித்ததும், படுக்கையில் கிடந்து, தனது மென்மையான தளதளத்த உடலை அநுபவிக்குமாறு தனது கணவனைப் பொறாமையோடு தூண்டி விடுவாள். ஊறுகாய் ஜாடிகள், வதக்கிய மீன், உப்பிட்ட பன்றித் தொடைக் கறி ஆகியவை வைக்கப் பட்டிருந்த சரக்கறையின் மணமானது அவளது தோலில் மணத்தது, தன் மனைவியினுடைய உணர்ச்சி வெறி மிக அதிகமானது என்பதை பியோத்தர் திரும்பத் திரும்பவும், அடுத்தடுத்துப் பெருவதாகவும் உணர்ந்தான், அவளுடைய வருடல்கள் அவனைக் கசிந்தொழுகச் செய்தன.

''என்னைத் தனிமையில் விடு, நான் களைப்பாக இருக்கிறேன்,'' என்று அவன் கூறுவான்.

''அப்படியானால் தூங்கச் செல், உன்னைத் திருவருள் பாலிக்கட்டும்,'' என்று கடமை உணர்வோடு பதில் கூறு

வாள், அவளும் செறிதுயிலில் சீக்கிரத்திலேயே மூழ்கிவிடு வாள், முன்னர் ஒருபோதும் பார்த்திராத ஏதோ அழகிய காட்சியைக் கண்ணுற்று அவள் கண்களை மூடிக்கொண்டது போல, அவளது புருவங்கள் வியப்பில் வளைந்தும், அவ ளது உதடுகள் முறுவலித்தும் காணப்படும்.

அத்தகைய துயரார்ந்த கணங்களில், நதால்யாவின் மீதான வெறுப்பைக் குறிப்பான நிலையில் பியோத்தர் உணர்ந்த போது, அவர்களுக்கு முதலாவது மகன் பிறந்த துயரமான நாளைத் தனக்குத்தானே கட்டாயமாக நினைத் துப் பார்க்க முயல்வான். பதினெட்டு மணி நேரமாக இழுத் துச் சென்ற கடும் வேதனைக்குப் பிறகு, அவனுடைய மாமி யார் நடுக்குற்றவாறும், கண்ணீர் மல்கியபடியும் விநோத மான திணறல் நிறைந்திருந்த அறைக்குள்ளாக அவனை அழைத்துச் சென்றாள். அலங்கோலமாகக் கிடந்த படுக் கையின் மீது அவனுடைய மனைவி சுருண்டு நெளிந்தபடி கிடந்தாள். தனது விழிகளை உருட்டிக் கொண்டிருந்தாள், பயங்கரமான வேதனையால் துடித்துக் கொண்டும் நிலை குலைந்தபடியும் இருந்தாள், வியர்த்துக் கொட்டியது, அடையாளங் காண முடியாதபடி இருந்தாள். மிருகத்தன் மையான ஊளையுடன் அவனைப் பார்த்துக் கூச்சலிட்டாள்:

''பேத்யா, போய் வருகிறேன், நான் செத்துக் கொண் டிருக்கிறேன். அது ஒரு பையனாக இருக்கும்... பேத்யா, மன்னித்து விடு...''

கடிபட்ட அவளது உதடுகள் மிகவும் வலியெடுத்ததால், அவற்றை நகர்த்தக் கூட முடியவில்லை, வெளிவரவிருந்த வார்த்தைகள் அவளுடைய தொண்டையிலிருந்து வராமல் அவளுடைய தாழத் தொங்கிய அடிவயிற்றிலிருந்து வருவது போலக் காணப்பட்டது. அவளுடைய நீல நிற முகமானது வீங்கிப் போயிருந்தது. களைத்துப் போன நாயைப் போல அவள் மூச்சுத் திணறினாள், ஒரு நாயைப் போல, வலியெ டுத்த, நைந்து போன தனது நாக்கை வெளியே நீட்டிக் கொண்டிருந்தாள். தனது தலை முடியை அவ்வப்பொழுது பற்றிப் பிடித்துக் கொண்டு, அதை இழுக்கவும், பிடுங்க வும் செய்தாள், இடைவிடாதபடி அவள் உறுமினாள், ஊளையிட்டாள், அவளது விருப்பத்தை நிறைவேற்ற அல் லது முறியடிக்க இயலாத, அல்லது முடியாத யாரையோ அவள் சமாதானப்படுத்த முயன்று கொண்டிருப்பது போல இருந்தது:

''ஒரு ஆண் குழந்தை...''

அது காற்றோட்டமான நாள். ஒரு பறவை செர்ரிப் பழத்தை உருட்டி விட்டது, அதன் நிழல்கள் சன்னல் கண்ணாடிகளின் மீது விழுந்து நடுங்கிக் கொண்டிருந்தன. அந்த நிழல்களின் குதியாட்டத்தை பியோத்தர் பார்த்தான். இலைகளுடைய சலசலப்பைக் கேட்டான். வெறிபிடித்தவாறு கத்தினான்:

''சன்னலுக்குத் திரையிடுங்கள்! உன்னால் பார்க்க முடியவில்லையா?''

அவளுடைய அலறல்களைத் தொடர்ந்து, அச்சத்தோடு அவன் ஓடினான்.

''ஆ...ஆ...ா...''

ஒன்றரை மணி நேரத்திற்குப் பிறகு, மிகவும் மகிழ்ச்சியாகவும், பேச முடியாது களைத்தும் போயிருந்த அவனுடைய மாமியார் அவனை மீண்டும் அவன் மனைவியினுடைய படுக்கைக்குப் பக்கமாகக் கூட்டிச் சென்றாள். தனது கண்களில் உயிர்த்தியாகம் செய்த பெருமையோடு அவனை நதால்யா உற்றுப் பார்த்து, சோர்வுடனும், மயக்க நிலையிலும் சொன்னாள்:

''பையன். மகன்.''

அவளுக்கு மேலாகக் குனிந்து, தனது கன்னத்தை அவளது தோளோடு வைத்து முணுமுணுத்தான்:

''நல்லது, அம்மா, நான் உயிரோடு இருக்கின்ற போது இதை என்னால் மறக்க முடியாது, அதை உனக்கு நான் கூற முடியும்! நல்லது, நன்றி...''

அவளை ''அம்மா'' என்று அவன் அழைத்திருந்தது அதுதான் முதல் தடவை. அவனது எல்லா பயமும், எல்லா மகிழ்ச்சியும் ஒரே சொல்லாகப் போய் விட்டது. தனது கண்களை மூடியபடி, சோர்வுற்ற, கனத்த கையால் அவனது தலையை அவள் வருடினாள்.

பெரிய மூக்கும், அம்மைத் தழும்பும் வாய்த்த தாதி, தானே அந்தக் குழந்தையைப் பெற்றிருந்தது போல பெருமையோடு தெரியக் காட்டி, ''இவன் பெரு வலிமையுடையவன்'' என்றாள். ஆனால் பியோத்தர் தன் மகனைப் பார்க்கவில்லை. கண்களுக்குப் பதிலாக குழிகளைக் கொண்டு, பேயறைந்தது போல வெளிறிய முகத்துடனான தன் மனைவியின் முகத்தைத் தவிர அவனால் எதையும் பார்க்க முடியவில்லை.

''அவள் இறந்து போவாளா?''

''மண்ணாங்கட்டி!'' அம்மைத் தழும்பு விழுந்த தாதி ...ப்பாகத் திரும்பச் சொன்னாள். ''இதற்கெல்லாம் ...ள் இறந்தால், தாதிகளே இருக்க மாட்டார்கள்.''

இப்போது அந்தப் பெரு வலிமையுடையவன் ஒன்பதா ...து வயதில் இருந்தான், கரு நீல நிறத்தில் தெளிவான பள ...கும் பெரிய கண்களைக் கொண்ட முகமும், அகலமான ...றியும், வளைந்த மூக்கும் கொண்டு உயரமாகவும், ...கவும் இருந்தான். அத்தகைய கண்கள் அலெக்ஸியி ...டைய தாயாருக்கும் நிகீதாவுக்கும் இருந்தன. இரண்டா ...து மகனான யாக்கவ், முதல் பையன் பிறந்த ஓராண் ...குப் பிறகு பிறந்திருந்தான்; ஆனால் இல்யாவுக்கு ஐந்து ...தாகும் பொழுதே அந்த வீட்டில் தன்னை மிகவும் ...ப்பான ஆளாக அவன் ஆக்கிக் கொண்டான். எல்லா ...லும் அதிகச் சலுகை காட்டப்பட்டு, அவன் யாருக்குமே ...ப்படியவில்லை. மிகவும் வசதியற்றதும், ஆபத்தான சூழ் ...லைகளிலும் தன்னைத்தானே ஈடுபடுத்திக் கொண்டு, ...ப்பட்ட வாழ்க்கை நடத்தினான். அவனுடைய போக் ...த்தனங்கள் பெரும்பாலும் எப்போதுமே ஒருவகையில் ...தாரண நிலைக்கு அப்பாற் பட்டதாகவே இருந்தன, இது ...வனுடைய தந்தைக்குக் குருதித் தொடர்பு மிக்க பெரு ...மையை ஏற்படுத்தியது.

மரத்தாலான தண்ணீர்த் தொட்டிக்குத் தள்ளுவண்டிச் ...க்கரம் ஒன்றைச் சேர்ப்பதற்கு முயன்று கொண்டிருந்த ...ன் மகனை ஒரு நாள் பியோத்தர் கொட்டகையில் கண் ...ன்.

''அது என்னவாகப் போகிறது?''

''ஒரு நீராவிக் கப்பல்.''

''அது போகாது.''

''அதை நான் போக வைப்பேன்!'' தன் தாத்தாவி ...டைய ஆர்வத்தோடு பையன் கூறினான். அவனுடைய ...லை வீணாக முடியும் என்பதை அவனிடம் தெளிவு ...த்து எடுத்துக் கொண்ட தனது முயற்சி தோல்வியடை ..., பியோத்தர் தனக்குத்தானே நினைத்தான்:

''அவனுடைய தாத்தா மாதிரியே பிடிவாதம்.''

...து வடிவமைப்பு முயற்சியிலே இல்யா பிடிவாதமாக ...ந்தான்; ஆனால் முடிந்த மட்டும் முயன்றான், தன்னு ...ய நீர்த்தொட்டி மற்றும் இரண்டு கைவண்டிச் சக்கரங்

கள் இவற்றைக் கொண்டு நீராவிக் கப்பலைக் கட்ட அவ னால் முடியவில்லை. பிறகு நீர்த் தொட்டியின் பக்கங்களில் கரிக் கட்டையால் சக்கரங்கள் வரைந்தான், நதிக்கு இழுத் துச் சென்றான், கிளம்பியது சகதியில் மாட்டிக் கொண்டது. எனினும், பயப்படுவதற்கு மாறாக, நதியில் துணிகளை அலசிக் கொண்டிருந்த சில பெண்களைப் பார்த்து அவன் கத்தினான்:

''ஏ, யாரங்கே! என்னை வெளியே இழுங்க, இல்லாட்டி நான் மூழ்கிப் போவேன்...''

இல்யாவை அடித்து விரைந்து ஓடச் செய்தாள் நதால்யா. நீர்த்தொட்டியை விறகுக்காக உடைத்துப் போட்டிருந் தாள். அன்றையிலிருந்து அவனை விட மூன்று வயது இளைய சகோதரி தான்யாவிடம் நடத்து கொண்டதைக் காட்டிலும் அதிகமாகத் தன் தாயாரிடம் நடக்கவில்லை. சுறுசுறுப் பாகச் செயலாற்றும் சிறு பையனாக இருந்தான். துண் டாக்குவது, வெட்டுவது, அழிப்பது, சரிப்படுத்துவது இப் படி எதையாவது எப்போதும் செய்து கொண்டிருப்பான். அவனைக் கவனித்த அவனுடைய தந்தை நினைத்தான்:

''யாரைப் போலாவான். ஒரு கட்டிட அமைப்பாளன்.''

சில வேளைகளில் நாள் கணக்காகத் தந்தையைப் பொருட்படுத்தாதபடி இல்யா இருப்பான். பிறகு, திடீரென்று அலுவலகத்திற்குள்ளாக நுழைந்து கொண்டு, பியோத்தரு டைய முழங்காலில் ஏறி, வற்புறுத்திக் கேட்பான்:

''எனக்கு ஒரு கதை சொல்.''

''எனக்கு நேரமில்லை.''

''எனக்குந்தான் இல்லை.''

அகமகிழ்வுடன், தன்னுடைய காகிதங்களைத் தந்தை பக்கவாட்டில் தள்ளி வைப்பான்.

''சரி, கேள். ஒரு காலத்தில் சில மனிதர்கள் இருந்தார் கள்...''

''அந்த மனிதர்களைப் பற்றிய எல்லாம் எனக்குத் தெரி யும்; வேடிக்கையான கதையாக எனக்குச் சொல்.''

தந்தைக்கு எந்த வேடிக்கைக் கதையும் தெரியாது.

''உன் பாட்டியிடம் போவது நல்லது.''

''இன்றைக்கு அவளுக்குத் தடுமன் பிடித்திருக்கிறது.''

''சரி, பிறகு, உன் அம்மாவிடம் முயற்சி செய்.''

''அவள் என்னை வெளுக்கத் தொடங்கி விடுவாள்.''

அர்தமோனவ் சிரித்தான். அவனை அத்தனை சுலப

...மாகவும், பாதிக்காதபடியும் சிரிக்க வைக்க முடிந்த ஒரே ...ள் அவனுடைய மகன்தான்.

''பிறகு நான் தீஹனிடம் போகிறேன்,'' என்று தெரி...த்த, இல்யா, தன் தந்தையினுடைய கால்களினின்றும் ...ளி ஓட முயன்றான்; ஆனால் பியோத்தர் அவனை நிறுத்தி ...னான்.

''தீஹன் உனக்கு என்ன சொல்வான்?''

''ஒவ்வொன்றையும்.''

''சரி, ஆனால் என்ன?''

''அவர் எல்லாவற்றையும் அறிவார். அவர் பலஹ்னா ...யில் வசிப்பது வழக்கம். அங்கே அவர்கள் படகுகளும், ...ணிகளும் கட்டுகிறார்கள்...''

எங்கேயோ இல்யா உருண்டு விழுந்த போது அவன் ...முகம் வடுப்பட்டது; அவன் தாய் அவனை நையப் புடைத்து, ...த்தினாள்:

''கூரைகளின் மீது ஏறாதே, அல்லது ஒரு முடமாகிப் போவாய், ஒரு கூனனாய்!''

கோபத்தில் முகம் சிவந்த பையன் அழாது தன்னுடைய ...யாரை அச்சுறுத்தினான்:

''இதற்கு மேலும் நீ என்னை அடித்தால், உன் மீது விழுந்து நான் செத்து விடுவேன்!''

தந்தையிடம் இந்த அச்சுறுத்தலைப் பற்றி அவள் கூறி ...னாள். அவன் ஏளனமாக நகைத்தான்.

''அவனை அடித்து விரட்ட வேண்டாம், அவனை என்னி...ம் அனுப்பி வை.''

பையன் வந்து, கதவு வழியில் நின்றான், அவனுடைய ...கைகள் அவனது முதுகுக்குப் பின்னால் இருந்தன. ஆர்வத் ...தினாலும், பொங்கியெழுகின்ற இரக்கத்தினாலும் பிற ...உணர்வுகள் அனைத்தும் மறைந்து போயின, பியோத்தர் கேட்டான்:

''உன் தாயாரிடம் ஏன் முரண்டு பிடிக்கிறாய்?''

''நான் முட்டாள் அல்ல,'' கோபமாக மகன் பதிலளித் ...தான்.

''முரட்டுத்தனமாக இருக்க வேண்டுமென்றால் நீ கட் ...டாயம் முட்டாளாகத்தான் இருக்க வேண்டும்.''

''அவள் என்னை அடிக்கிறாள். முட்டாள்கள் மட்டுமே ...படுவார்கள் என்று தீஹன் கூறுகிறார்.''

''தீஹனா? தீஹன் அவனே...''

ஆனால் ஏதோ காரணத்திற்காக முற்றப் பாதுகாவலனை முட்டாள் என்று அழைப்பதற்கு பியோத்தர் தயங்கினான். வாசல் வழியில் நின்ற மகனை உற்றுப் பார்த்தபடி, என்ன சொல்வதென்று தெரியாமல் அறையில் மேலும் கீழும் நடந்தான்.

''உன் தம்பி யாக்கவை நீ அடிக்கிறாயே.''

''அவன் ஒரு முட்டாள். மேலும், அது அவனுக்கு தீங்கு செய்யாது. அவன் கொழுத்தவன்.''

''சரி, அவன் கொழுத்திருந்தால், அவனை அடித்தாக வேண்டும் என்று அர்த்தமா?''

''அவன் பேராசைக்காரன்.''

தன் மகனை ஒழுங்குக்குக் கொண்டு வர முடியாது என்று அவனுடைய மகனும் அறிவான் என்பதை பியோத்தர் உணர்ந்தான். பையனுடைய காதுகளைப் பிடித்து திருகுவது, ஒருவேளை மிகவும் எளிமையானதாக இருந்திருக்கலாம், மிகவும் நன்மையும் செய்திருக்கலாம்; ஆனால் அந்த மயிரடர்ந்த தலையை நோக்கி, துன்பந்தருவது போல அவன் வெறுமனே தனது கையை உயர்த்த முடியாது. அன்புக்குரிய நீலநிறக் கண்களுடைய நிலையான, எதிர் நோக்குகிற பார்வைக்கு முன்னால் தண்டிப்புப் பற்றிய இந்த நினைப்பே அவனை நிலைகுலையச் செய்தது. சூரிய ஒளியும் கூட குறுக்கிட்டது. எப்படியோ, கதிரவனொளி பரவிய நாட்களில் எப்பொழுதுமே இல்யா மிகவும் திட்டமிட்டே போக்கிரித்தனம் செய்தான். வழமையான எச்சரிக்கின்ற வார்த்தைகளைக் கூறியபடி, தானும் இத்தகைய வார்த்தைகளைக் கேட்க வேண்டி இருந்த நேரத்தை பியோத்தர் நினைவு கூர்ந்தான். அவை அவனுடைய நெஞ்சத்தைத் தொடத் தவறின, அவனுடைய நினைவில் எந்த அடையாளத்தையும் அவை ஏற்படுத்தவில்லை, மாறாக சலிப்பை மட்டுமே ஏற்படுத்தின, சுருங்கச் சொன்னால் அச்சத்தையே உண்டு பண்ணின. ஆனால் உதைகள் நன்கு தகுதியுடையதாக இருந்தால், சுலபமாக மறந்து விட முடியாது, அதையும் கூட அர்தமோனவ் நன்றாக அறிவான்.

வட்டமான, இளஞ்சிவப்பு நிற கன்னங் கொண்ட இரண்டாவது மகன் யாக்கவ் தோற்றத்தில் அவனுடைய தாயாரை ஒத்திருந்தான். உண்மையாகவே நடைமுறையை அநுபவிக்க வேண்டும் என வெளித்தோற்றத்தில் காணப்பட்ட யாக்கவ் அடிக்கடி அழுதான். கண்ணீரைச் சிந்துவதற்கு முன் நட

...மூக்கை உறிஞ்சுவான், திக்கித் திணறிப் பேசு... முட்டியால் கண்களைத் தேய்ப்பான். கோழை... இருந்தான். மிகவும் அதிகமாகவும், பேராசைக்காக... சாப்பிட்டான். கனத்த சாப்பாட்டிற்குப் பிறகு ஒன்று... போனான் அல்லது புகார் செய்தான்:

''அம்மா, எனக்குச் சலிப்பாக இருக்கிறது!''

...மகள் எலேனா, கோடைக் காலத்தின் போது மட்... வீட்டில் இருந்தாள். ஓர் இளம் பெண்ணாக, தொலை... வெளியாளாக மாறியிருந்தாள்.

...வது வயதில், பாதிரியார் கிலேபிடம் இல்யா படிக்... தொடங்கியிருந்தான். எனினும் தாவீதின் தோத்திரப்... ல் திரட்டுச் சுவடி என்ற நூலிற்குப் பதிலாக ''தாய் மொழி'' எனப்பட்ட படங்களுடன் கூடிய அரிச்சுவடியை, ...எழுத்தருடைய மகன் நிகனோவ் கற்றுக் கொண்டிருக்கிறான் என்பதைக் கண்டுபிடித்துத் தன் தந்தையிடம் ...றியிருந்தான்:

''இதற்கு மேலும் நான் படித்துக் கொண்டிருக்கப் போவதில்லை. எனது நாக்குப் புண்ணாகிறது.''

நீண்ட, எச்சரிக்கையான வினாக்களுக்குப் பிறகே அவன் விளக்கிச் சொன்னான்:

''பாஷா நிகனோவ் அவனுடைய தாய்மொழியில் படிக்கிறான், ஆனால் நானோ அந்நிய மொழியில் படித்துக் கொண்டிருக்கிறேன்.''

ஆனால் சில நேரங்களில் ஏதோ உள்தடுப்பால் தடுக்கப்பட்டது போல, இந்தத் துடிப்பான பையன் மணிக்கணக்காக, தன்னந்தனியாக குன்றின் மீதிருந்த ஒரு பைன் மரத்துக்கடியில், வதராக்ஷா ஆற்றின் கலங்கிய பச்சை நிற நீருக்குள்ளாகப் பைன் மரத்துக் காய்ந்து போன கூம்புகளை வீசியபடி அமர்ந்திருப்பான்.

''அவனுக்குச் சலிச்சுப் போச்சு,'' என்று தந்தை நினைப்பான்.

அவனுங் கூட, தனது தொழில் பிரச்சினைகளின் காதைச் செவிடாக்கும் இரைச்சலில் சுழன்று சுழன்று, பிறகு தெளிவற்ற சிந்தனைகளின் அடர்த்தியான மூட்டத்தில் அவனாகவே திடீரென்று மூழ்கி விடுவான், மனச்சோர்வின் முரட்டுத்தனமான ஒரு கடும் புதிர், மிகவும் உணர்வு மழுங்கச் செய்வது எது என்பதை அவனால் தெரிய முடியவில்லை; அவனது வியாபாரக் கவலைகளா, இந்தத் தவிர்க்க இயலாத

சலிப்பூட்டும் பிரச்சினைகளால் தூண்டப்பட்ட மனச் சோர்வா? அடிக்கடி, அத்தகைய நாளில், தான் சந்திக்கின்ற ஆட்களை அவன் வெறுக்கத் தொடங்கி விடுவான்— பக்கப் பார்வை பார்த்ததற்காக ஒருவனையும், தவறான வார்த்தையைப் பயன்படுத்தியதற்காக மற்றொருவனையும். இம்மாதிரியே, அந்த மேக மூட்டமான நாளில், அவன் பெரும்பாலும் தீஹன் வியாலவை வெறுத்தான்.

வியாலவ் நெருங்கி வந்து கொண்டிருந்தான், பியோத்தரின் மாமியார் அவனது கையில் சாய்ந்தபடி வந்தாள்; அவன் சொல்ல பியோத்தர் கேட்டான்:

''நாங்கள், வியாலவ்கள் ஒரு பெரிய குடும்பம்...''

''பிறகு ஏன் உன்னுடைய உறவினர்களிடம் நீ வசிக்கக் கூடாது?'' அவர்களை நெருங்கி வந்து பய்மகோவாவின் மற்றொரு கையைப் பற்றிக் கொண்டு கோரினான் பியோத்தர்; தீஹன் மௌனமாகி அப்பால் நகர்ந்து போனான்; கண்டிப்புடனும், தொடர்ச்சியாகவும் அர்தமோனவ் தனது வினாவைத் திரும்பக் கூறினான். பிறகு தனது நிறமற்ற கண்களைச் சுருக்கிக் கொண்டு, மாறுபட்ட முறையில் முற்றப் பாதுகாவலன் பதில் தந்தான்:

''ஏன், அவர்களில் யாருமே விட்டுவைக்கப் படவில்லை. அவர்கள் எல்லாருமே கொல்லப்பட்டு விட்டார்கள்.''

''என்ன அர்த்தம்— கொல்லப்பட்டு விட்டார்கள்? அவர்களைக் கொன்றது யார்?''

''என்னுடைய இரண்டு சகோதரர்கள் பிடிபட்டு செவஸ்தோபல் நகரத்துக்கு அனுப்பப்பட்டார்கள், அங்கே போரில் அவர்கள் கொல்லப்பட்டார்கள். பண்ணை அடிமை ஒழிப்புக் குறித்துப் பைத்தியமான பொழுது, மூத்தவன் கலகத்தோடு இணைந்து விட்டான். அவர்களுடைய அப்பாவும் ஒரு கலகக்காரராக இருந்தார்— பாமர மக்களைக் கட்டாயப்படுத்தி உருளைக் கிழங்கு திண்ணச் செய்த போது, அவருக்கு உருளைக் கிழங்கு பிடிக்கவே பிடிக்காது; அவருக்குக் கசையடி கொடுக்க அவர்கள் போய்க் கொண்டிருந்தார்கள். ஆகவே அவர் ஓடிவிட்டார். அவர் காலடியிலிருந்த பனிப்பாறை உடைந்து விட்டதால், மூழ்கிப் போனார். பிறகு மீனவனான வியாலவ் என்ற மற்றொரு கணவனுடன் என் தாய் மேலும் இரண்டு பிள்ளைகள் பெற்றாள்: நான், என் சகோதரன் செர்கேய்...''

இன்னமும் பலமாக அழுதபடி, தன்னுடைய கண்ணைச்

பிடித்துக் கொண்டு "உன்னுடைய சகோதரன் எங்கே?" என்று உல்யானா கேட்டாள்.

"அவன் கொல்லப்பட்டு விட்டான்."

"இறந்து போனவனுக்காக வேண்டிக் கொள்வது போல நீ குரல் கொடுக்கிறாய்," என்றான் கோபத்தோடு அர்த மோனவ்.

"உல்யானா இவானவ்னா என்னிடம் கேட்டுக் கொண்டிருந்தாள்... அவள் கொஞ்சம் நிலைகுலைந்து போய்விட்டாள், ஆகவே நான்..."

அவன் பேச்சை முடிக்கவில்லை. கீழே குனிந்து, சாலையிலிருந்து ஒரு காய்ந்த குச்சியைத் தூக்கி, பக்கவாட்டில் வீசினான். சுமார் இரண்டு நிமிடங்களுக்கு அவர்கள் எதுவும் பேசிக் கொள்ளாமல் நடந்தார்கள்.

"உன் தம்பியைக் கொன்றது யார்?" அர்தமோனவ் திடீரென்று கேட்டான்.

"யார் அவனைக் கொல்ல முடியும்? ஆட்கள் தான் கொல்கிறார்கள்," என்றான் வியாலவ் அமைதியாக. பய்மகோவா பெருமூச்சு விட்டு, மேலும் தொடர்ந்தாள்:

"மின்னலுங் கூட மனிதர்களைக் கொல்கிறது..."

...நடுவேனிற் காலம் சிரமமான நாட்களையும் கொண்டு வந்தது. மஞ்சள் நிற, புகைபடர்ந்த மேகத்திற்குக் கீழே, ஒரு கொடுமையான சந்தடியின்மையில் இரக்கமற்ற சுட்டுப் பொசுக்குகின்ற வெப்பம் பூமிக்கு மேலாக ஊசலாடியது. கருப்பு நிலத்துக்கு மேலும், காட்டிற்கு மேலும் அனல் காற்று வீசியது. வறண்ட, வெப்பமான காற்று திடீரென்று தோன்றி பேரிரைச்சல் மிக்க வலிமையுடன் பலமாக விசில் அடித்தபடியும், கிஸ் என்ற ஒலியுடனும் மரங்களினின்றும் காய்ந்த இலைகளைக் கீழே உதிர்த்து விட்டபடி, முந்திய ஆண்டு கீழே விழுந்த பைன் மரத்துக் கூர் இலைகளைப் பாய்ந்தி விட்டு, மணல் மேகங்களாய் சுழித்து ஓடியது, அவற்றோடு மரப்பட்டைகளும், கோழிகளின் சிறகுகளும் சேர்ந்து கொண்டன, மக்களை நெருக்கித் தள்ளியபடி, அவர்களது கண்களைக் கிழித்துத் தள்ள முயன்று, இறுதியில் காடுகளுக்குள்ளாக ஓடி மறைந்து, அங்கே இன்னும் அதிகமான வேகத்தோடு நெருப்புக் கொழுந்தாய் எரிந்தது.

ஆலையில் அதிகமான ஆட்களுக்கு நோய் பிடித்திருந்தது. நூற்கதிர்களின் இரைச்சலுக்கும், ஓடக்கட்டைகளின் முணுமுணுப்புக்கும் இடையே அர்தமோனவ் வறண்ட குறு

குறு வறட்டு இருமல் ஒலிகளைக் கேட்டான். தறிகளுக்கு அருகே இருந்த முகங்கள் தொங்கவிட்டபடி, சோர்வாகக் காணப்பட்டன, தொழிலாளர்களுடைய நடவடிக்கைகள் ஊக்கமிழந்து காணப்பட்டன. உற்பத்தி குறைந்தது, துணியின் தரமும் அறியக் கூடியவாறு தாழ்ந்தது. வேலைக்கு வராமல் இருப்பவர்களுடைய எண்ணிக்கை அதிகரித்தது, ஆண்கள் மிக அதிகமாகக் குடிக்கத் தொடங்கினார்கள், நோய்வாய்ப்பட்ட பிள்ளைகளைப் பார்த்துக் கொள்ள வேண்டி பெண்கள் வீட்டிலேயே தங்கினார்கள். தச்சு வேலை செய்யும், மகிழ்ச்சிமிக்க பிள்ளைகளைப் பொருந்திய இளஞ்சிவப்பு நிறங் கொண்ட ஸெரஃபீம், வயதான கிழவன், நாளுக்கு நாள் சின்னஞ்சிறு சவப்பெட்டிகளைத் தயாரித்தான்; தங்களது பூமியின் பணிகளை முடித்துக் கொண்ட வயது வந்த ஆண்களுக்கும் பெண்களுக்குமாக, பழுப்பு நிறத்தாலான ஒழுங்காகச் செய்யப்பட்ட பலகைகளை அவன் ஒருபோதும் ஒன்று சேர்ப்பதற்காக நோகவில்லை.

''அவர்களுடைய தேவை என்னவென்றால் ஒரு மக்கள் விழா தான்,'' என்று அலெக்ஸி வற்புறுத்திக் கூறினான். ''அது அவர்களை மகிழ்விக்கவும், ஆர்வத்தைப் பெருக்கவும் செய்யும்!''

தன் மனைவியுடன் சந்தைக்குச் செல்லும் போதும் தனது இந்த அறிவுரையை அவன் திரும்பக் கூறினான்:

''அவர்களுக்காக ஒரு மக்கள் விழா நடத்து. அவர்கள் கிளர்ச்சியடைவார்கள்! என்னை நம்பு, எல்லாத் தொல்லைகளையும் குணப்படுத்துவது ஒரு மக்கள் விழா தான்!''

''அதைச் செய். மக்கள் விழாவைச் சிறப்பாக நடத்து, அவர்களுக்கு ஏராளமான உணவுவகைகளையும், குடிக்கவும் கொடு,'' என்று தன் மனைவிக்குப் பியோத்தர் கட்டளையிட்டான்.

நதால்யா முணுமுணுக்கத் தொடங்கினாள். கோபத்தோடு அவன் கேட்டான்:

''என்ன இப்போது?''

அவள் தனது சட்டை முன்றானையில் தனது மூக்கை பலமாக, எதிர்ப்புத் தெரிவிப்பது போலச் சிந்தினாள், ஆனால் பதில் பேசினாள்:

''மிகவும் நல்லது.''

மக்கள் விழாவை விஷேடமான வழிபாடுகளுடன் அவர்கள் தொடங்கினார்கள். பாதிரியார் கிலேப் பயபக்தியோடு

அதை நடத்தினார். பாதிரியார் முன்னிலும் மெலிந்து காணப்பட்டார். அவரது உடைந்த குரலானது, பழக்கப் பட்ட வார்த்தைகளை உச்சரித்தபடி, அவரிடம் கடைசி யாக மிஞ்சிய வலிமை முழுவதையும் அவருடைய வேண்டு தலுக்காகச் செலவிட்டது போல சோகமான முறையிலே ஒலித்தது. எலும்புருக்கி நோய்வாய்ப்பட்ட நெசவாளி களின் சாம்பல் நிறமான முகங்கள் வேதனையோடு முகஞ் சுளித்தபடி, மதிப்பார்வம் குறித்து அசையாமல் இருந்தன. பெண்களில் பலர் உரக்கத் தேம்பினார்கள். மேலும் தனது சோகமான கண்களைச் சாம்பல் நிறமான வானத்தை நோக் கிப் பார்ப்பதற்காக பாதிரியார் உயர்த்திய போது, பணிவு மிக்க பாதிரியார், தான் அறிந்த ஒருவர், தனது வேண்டு தலைக் கேட்பார் என்பது போல, சுவர்க்கத்திலே யாரை யோ பார்க்கிறார் என நினைத்துக் கொண்டு, மக்களும் கூட மன்றாடிய படி ஒளி மங்கிக் காணப்பட்ட சூரியனை மேகத்தின் ஊடாக மேலே உற்றுப் பார்த்தார்கள்.

வழிபாடுகளுக்குப் பிறகு, தொழிலாளர்களுடைய குடி யிருப்புத் தெருவுக்குப் பெண்கள் மேசைகளை எடுத்து வந் தார்கள், கொழுப்பான இறைச்சியுடன் கூடிய சூப்புப் பொங்கி வழியும் மரக் கிண்ணங்களுக்கு முன்னர் ஆலை ஆட்கள் எல்லாரும் உட்கார்ந்தார்கள். ஒவ்வொரு கிண் ணத்தைச் சுற்றிலும் பத்து ஆட்கள் உட்கார்ந்தார்கள்; மேலும் ஒவ்வொரு மேசையிலும் வீட்டில் தயாரித்த பீர் ஒரு வாளி நிறையவும், பிரம்புக் கூடையில் வைக்கப்பட்ட ஒரு பெரிய போத்தல் நிறைய வோத்கா சாராயமும் இருந் தன. கடின வேலையில் சோர்வுற்றுப் போன, மனம் ஒடிந்து போன மக்களின் ஆர்வத்தை இது சீக்கிரமாகவே உயர்த்தி யது. பூமியை மூடி மறைத்துக் கொண்டிருந்த மூச்சுத் திணற வைக்கின்ற சந்தடியின்மையானது கிளர்ச்சியுற்று, கரும்பு நிலங்களையும், அனல் பறக்கும் காடுகளையும் நோக்கிப் பின் வாங்கிச் சென்றது. குடியிருப்புகளில் மரக் கரண்டிகளின் ஓசை, குழந்தைகளின் சிரிப்பொலி, தாயார் களின் வசை மொழி, இளைஞர்களின் கிண்டல் இவற்றுடன் கூடிய மகிழ்ச்சி ஆரவாரம் ஒலித்தது.

ஒரு கனமான விருந்து அவர்களைச் சுமார் மூன்று மணி நேரம் மேசை முன் தங்க வைத்தது. அதன் பிறகு குடிவெறி யில் மயங்கிப் போனவர்களை அவர்களுடைய வீடுகளுக்கு எடுத்துச் சென்ற பின் இளைஞர்கள் கூட்டமானது, பல

சலவைகளுக்குப் பிறகு நிறம் மங்கிப் போயிருந்த தனது நீலநிறப் பருத்திச் சட்டையுடனும், காற்சட்டையுடனும் இருந்த துப்புரவான ஸெரஃபீம் தச்சனைச் சுற்றி அமர்ந்தார்கள். கூரிய மூக்குக்கொண்ட தச்சனுடைய பழுப்பு நிற முகமானது ஓரளவு குடித்திருந்ததால் பெரு மகிழ்வு கொள்வது போல மின்னியது, அவனது உயிர்த்துடிப்புள்ள கண்கள், இமைகளுக்கு ஊடாக அவனுடைய வயதைப் பொய்யாக்குவது போல ஆர்வத்தோடு மின்னின. இந்த மகிழ்ச்சியான சவப்பெட்டித் தயாரிப்பாளனிடம் ஒரு வித துடிதுடிப்பு உண்டு. ஒரு தெய்வீகமான மகிழ்ச்சி, அவனது பெயருடன் சேர்ந்தே இருந்தது. அவனது கூரிய முழங்கால்களின் மீது அவனது குஸ்லி இருக்க ஒரு பெஞ்சின் மீது அமர்ந்து, உணவுக்குச் சுவையூட்டும் கிழங்குச் செடி போலக் கருத்தும், கணுக்கள் கொண்டதுமான விரல்களால் நரம்புகளைத் தெரிந்தெடுத்துக் கொண்டு, வேண்டுமென்றே மகிழ்ச்சியற்று, மூக்கினால், மூக்கொலிப்புச் செய்தபடி, குருட்டுப் பிச்சைக்காரர்களைப் போன்ற முறையில் பாடிக் கொண்டிருந்தான்:

நன்று, அருமை மக்களே,
உங்கள் மகிழ்வுக் கிதோ ஓர் விடுகதை,
கேட்பதும், புதிர் விடுப்பதும்
உங்கள் அறிவுக்கானதே!

இளம் பெண்களைப் பார்த்து அவன் கண் சிமிட்டினான். அவர்களுக்கிடையே கம்பீரமாக அவனுடைய மகள் ஸினயீதா நின்றாள்: நல்ல தோற்றம், உயர்ந்த மார்பு, துடுக்குத்தனமான கண்கள். அவனோ இன்னும் உச்சத்தில், இன்னும் அதிகமான துயரத்தோடு பாடினான்:

இனிய தேவன் கிறிஸ்து,
சுடரொளியில் வீற்றிருந்தார்,
மிகு உயரமாய் பொன்னிறத்தில் அரும்பவிழ்த்த,
எலுமிச்சை மரத்தின் கீழே
தனது மென்மர அரியாசனமதில், நிலையாய்
இருந்தார்,
மின்னும் தங்கம் வெள்ளிதனை வழங்கியபடி,
சொர்க்கத்தின் நறுமணத்திலும் குளுமையிலும்,
அழகு மிகு ஆபரணங்களை வழங்குகிறார்,
செல்வர் தம் தகுதிக்காக அளிக்கிறார்,
எனில் அச்செல்வர் தரும் சிந்தையினர்,

ஏழை அபலைகளிடம் அன்புகாட்டினர்,
ஏழைகளைச் சோதரராய் நேசித்தனர்,
பசித்தவர்க்கும், பாமரர்க்கும் உணவூட்டினர்.

திரும்பவும் அவன் இளம் பெண்களைப் பார்த்து கண் மிமிட்டினான், திடீரென்று நடன இசையை மாற்றினான். ...சிடுகின்ற குழந்தையொலியுடன், அவனுடைய மகள் முன் ...க்குப் பாய்ந்தாள், ஜிப்சி மாதிரியில் அவளது கைகள் ...லைக்குப் பின்னால் இருந்தன, விரிந்த மார்பு குலுங்கிக் கொண்டிருந்தது, தந்தியின் ஒலிக்கும் அவளது தந்தையி ...டைய பண்ணிசைப்புக்கும் ஏற்ப நடனமாடத் தொடங்கி ...னாள்.

அவர்கள் எடுத்துச் சென்ற வெள்ளியோ
அவர்தம் காலை நோக வைத்தன!
பளிச்சிட்ட தங்கத்தின் வேட்கையால்,
சுடு நெருப்பு அவர்களைச் சுட்டன!
பரிசாய்ப் பெற்ற முத்தும் பவளமும்
அவர்தம் கண்ணொளியைப் பறிந்ததுவே!

தந்தித் தெறிப்பிலும், ஸெரஃபீமுடைய இனிய இசையிலும் மூழ்கிய பையன்கள் கிரீச்சொலியுடன் விசிலடித்தார்கள். பிறகு சிறுமிகளும், பெண்களும் நடனத்தில் மூழ்கினார்கள்:

கடல் மீதே கப்பல்கள் விரைந்தேகின,
கன்னியர்க்கெல்லாம் பரிசுகளைத் தாங்கியே!

ஸினயீதா, துளைத்து ஊடுருவி வந்து, நடனமாடினாள், பாடினாள்:

இளம் பாஷ்கா பாலாஷ்காவுக்கே அனுப்பினான்
சட்டைக்கே முழக் கணக்கில் சாக்குத் துணியே;
தெர்யோஷ்கா மத்ரியோஷ்காவுக்கே அனுப்பினான்,
ஒயிலான காதுவளையமும், பிர்ச்மர மஞ்சரியும்.

தன்னுடைய கழுத்தின் மீது சிரமமான முறையில், வழுக்கை விழுந்த தனது தலையை எப்போதுமே ஆட்டிக் கொண்டும், வெளிறிய தோற்றத்துடன், நோய்வாய்ப்பட்டது போல, மருளுகிற பழுப்பு நிறக் கண்களை பேரார்வத்தோடு உருட்டிக் கொண்டும் இருந்த பாவெல் நிகனோவுடன், இல்யா அர்தமோனவ் பயனற்ற மரக்கட்டைக் குவிய

லின் மீது அமர்ந்தான். நீல நிறத்தில் உடையணிந்திருந்த கிழவன் இல்யாவுக்கு மிகவும் அருமையாகக் காணப்பட்டான், குஸ்லி இசையையும், ஸெரஃபீமின் மகிழ்ச்சிமிக்க வேடிக்கைக் குரலையும், அவன் விரும்பினான். ஆனால் பளபளப்பான சிவப்பு நிறத்தில் சட்டை அணிந்திருந்த அப் பெண் திடீரென்று சீற்றங் கொள்ள வேண்டியதாயிற்று, கடுமையாக விசிலடித்தபடி, ராகமில்லாது, கிரீச்சிடுகிற பாடலுடன் ஒவ்வொன்றையும் நாசமாக்கியபடி சுற்றிச் சுழலத் தொடங்கினாள். மொத்தத்தில், நிகனோவ் மிகவும் தாழ்ந்த குரலில் சொன்ன போது, இந்தப் பெண் அவனுடைய மனத்தில் வெறுப்புக்குரியவளானாள்.

''ஸினயீதா தான் தோன்றித்தனமானவள். ஒவ்வொருவருடனும் அவள் வசிக்கிறாள். உன் அப்பாவிடம் கூட— அவளை அவர் கசக்கிக் கொண்டிருந்ததை நானே பார்த்தேன்.''

''எதற்காக?'' இல்யா முட்டாள்தனமாகக் கேட்டான்.

''உனக்கே மிக நன்றாகத் தெரியும்!''

இல்யா தனது கண்ணைத் தாழ்த்தினான். எந்தப் பெண்கள் கசக்கப்படுவார்கள் என்பது அவனுக்குத் தெரியும், தன் நண்பனிடம் அது பற்றிக் கேட்பதற்காகத் தனக்குத் தானே சங்கடப்பட்டுக் கொண்டான்.

''நீ பொய் சொல்கிறாய்,'' என்று அவன் வெறுப்போடு கூறினான், நிகனோவின் முணுமுணுப்பு விமரிசனங்களைக் கேட்பதை நிறுத்தினான். இந்தக் கீழ்ப்பட்ட, கோழைத்தனமான பையனை அவனது மந்தமான செயல்களுக்காகவும், ஆலைப் பெண்களைப் பற்றிக் கூறும் சலிப்பூட்டக் கூடிய, ஆர்வமற்ற கதைகளுக்காவும் அவன் வெறுத்தான். ஆனால் புறாக்களைப் பொருத்த மட்டில் நிகனோவ் கைதேர்ந்தவனாக இருந்தான், இல்யா புறாக்களை விரும்பினான். மேலும், குடியிருப்பைச் சேர்ந்த பையன்களிடமிருந்து தனது வாட்டமுற்ற கூட்டாளியைப் பாதுகாக்கின்ற உரிமையை அவன் போற்றினான். இதற்கு மேலும், தான் பார்த்த பொருள்களை விவரிக்கின்ற திறமை நிகனோவ் வாய்க்கப் பெற்றிருந்தான். உலகத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் எதிராகப் புகார் செய்வது போல அவன் பேசினான். இந்த வகையில் அவன் இல்யாவின் தம்பி யாக்கவ் போலவே இருந்தான்.

சற்று நேரம் எதுவும் பேசாமல் இல்யா உட்கார்ந்திருந்

தான், பின்னர் எழுந்து வீட்டிற்குச் சென்றான். புழுதியில் படிந்துபோகிப் போன மரங்களின் வெப்பமான நிழலின் கீழே, பழத் தோட்டத்தில் தேநீர் பரத்தி வைக்கப்பட்டிருந்தது. பெரிய மேசையைச் சுற்றி விருந்தினர்கள் அமர்ந்திருந்த னர்: அமைதியே உருவான பாதிரியார் கிலேப், நாடோடி யைப் போல கரிய, சுருள்முடி கொண்ட எந்திரப் பொறி யாளர் கோப்தெவ், முகமானது நன்றாகக் கழுவப்பட்டு, எந்த வித உணர்ச்சிகளும் எஞ்சியிராதபடி காணப்பட்ட நிகனோர் இருந்தனர். நிகனோவிற்கு மீசையுடைய சிறிய மூக்கும், நெற்றியில் ஒரு புடைப்பும் காணப்பட்டது, குறு கிய கண் குழிகளைச் சுற்றித் துடித்துக் கொண்டிருந்த மடிப்புகளை உயர்த்தியபடி மூக்கிற்கும் புடைப்புக்கும் இடையே புன்முறுவல் கசிந்து வெளிப்பட்டது.

இல்யா தன்னுடைய தந்தைக்கு அருகே அமர்ந்தான். மகிழ்ச்சியற்ற இந்த மனிதர் வெட்கமற்ற அந்தப் பெண் ணோடு உறவு எதுவும் கொண்டிருப்பார் என்பதை அவன் நம்பவில்லை. கனத்த தனது கையால் அவனுடைய தந்தை அவனது தோளைத் தடவிக் கொடுத்தான், ஆனால் பேச வில்லை. வியர்வை பெருக்கெடுத்து ஓட, அவர்கள் எல்லா ருமே வெக்கையால் வாடிப் போயிருந்தனர். வலிந்து பேச வேண்டி இருந்தது. குளிர் கால இரவில் விறைப்பாகவும் படிகம் போன்று தெளிவாகவும் கோப்தெவுடைய உரத்த குரல் மட்டுமே ஒலித்தது.

''நாம் குடியிருப்புக்குப் போய்க் கொண்டிருக்கிறோமா?'' தாயார் வினவினாள்.

''ஆம், என்னுடைய குல்லாவை எடுக்க நான் போவேன்,'' என்றான் தந்தை. அவன் எழுந்து வீட்டை நோக்கி நடந் தான். இல்யா பின் தொடர்ந்தான், கண நேரத்திற்குப் பிறகு, அவனை முற்றத்தில் சந்தித்தான்.

''என்ன இது?'' பாசத்தோடு தந்தை வினவினான். அவ னுடைய கண்ணை நேராக உற்றுப் பார்த்தபடி மகன் கேட் டான்:

''நீ ஸினயீதாவை கசக்கினாயா, இல்லையா?''

தன் தந்தை நடுக்கமுற்றது போல இல்யாவிற்குத் தோன் றியது. அது அவனை வியப்படையச் செய்யவில்லை, ஏனெ னில் தன்னுடைய தந்தையை, ஒவ்வொருவருக்கும் பயப் படும் பயந்தாங் கொள்ளித்தனம் காரணமாகத்தான் அவன் மிகவும் குறைவாகப் பேசினான் என்று அவன் கருதினான்.

தீனக்குக் கூடத் தன் தந்தை பயந்ததாக இல்யா அடிக்கடி நினைத்தான். உண்மையில், இந்தக் கணத்தில் அவன் பயந்தே போயிருந்தான். அச்சமுற்ற தந்தையை உற்சாகப் படுத்துவதற்காக பையன் பேசினான்:

''அதை நான் நம்பவில்லை. கேட்க மட்டுமே செய் கிறேன்.''

அறையின் நுழைவாயிலுக்குள்ளே அவனைத் தந்தை தள்ளிவிட்டான். தன்னுடைய அறையிலும், கதவை இறுக் கமாக மூடிக்கொண்டு, மேலும் கீழுமாக, மூலையிலிருந்து மூலைக்கு, கனமாக மூச்சிழுத்தபடி, கோபமாக இருந்த போது செய்தது போல, நடக்கத் தொடங்கினான்.

மேசையைச் சற்று ஒட்டிநின்று ''இங்கே வா,'' என்று மூத்த அர்தமோனவ் கூறினான். இளைய அர்தமோனவ் கீழ்ப் படிந்தான்.

''நீ சொன்னது என்ன?''

''அதைச் சொன்னது பவ்லூஷ்கா. அவனை நான் நம்ப வில்லை.''

''நீ அவனை நம்பவில்லையா? அப்படியா.''

தன் மகனுடைய ஏறிய நெற்றியையும், துயரார்ந்த, முறுவலிக்காத முகத்தையும் உற்றுப் பார்க்கையில் பியோத் தருடைய கோபம் ஆவியாக மறைந்தது. தன் காதை இழுத்து விட்டுக் கொண்டான், அவனைப் போன்ற ஓர் இளைஞனு டைய அற்பத்தனமான பேச்சை தன் மகன் நம்பவில்லை, அது சரியா, தவறா என்பதைத் தீர்மானிக்க முயன்றபடி இருந்தான்—அதை நம்பவில்லை, நம்பாத இதை தெளிவா கவே ஓர் ஆறுதலாக எடுத்துக் கொள்ள முடியுமா? தன் மகனிடத்தில் என்ன சொல்வது, எப்படி என்பது அவனுக் குத் தெரியவில்லை, பையனை அடிப்பதற்கு அவன் மிகவும் தயங்கினான். ஆனால் ஏதாவது செய்தாக வேண்டும், அடிப் பது தான் எளிமையானதும், மிகவும் ஏற்றுக் கொள்ளக் கூடியதுமான நடவடிக்கையாக இருக்கும் என்று அவன் முடிவு செய்தான். விருப்பமில்லாதபடி கையை பலமாக உயர்த்தியபடி, தனது விரல்களைத் தன் மகனுடைய சுருண்ட தலை முடிக்குள் நுழைத்து, முணுமுணுத்தவாறு அவனை உலுக்கத் தொடங்கினான்:

''முட்டாள்களின் பேச்சைக் கேட்காதே, கேட்காதே!''

பிறகு பையனை அப்பால் தள்ளிவிட்டுக் கட்டளையிட் டான்:

''போய் உன் அறையில் தங்கு. அங்கேயே இரு. ஆம்.''

பையன் கதவுக்குச் சென்றான், அவனுடைய தலை பக்க வாட்டில் சாய்ந்திருந்தது, உடலுக்கு அது அந்நியமானது போல இருந்தது. அவனைக் சவனித்தபடி, தந்தை தனக்குத்தானே ஒரு முடிவுடன் ஆறுதல் கூறிக் கொண்டான்:

''அவன் அழுது கொண்டிருக்கவில்லை. நான் அவனைப் புண்படுத்தவில்லை.''

தனக்குத்தானே கோபம் கொள்ள அவன் முயன்றான்.

''அதைப் பற்றி எண்ணிப் பார்! அவன் அதை நம்பவில்லை! சரி, இப்போது உனக்கு நான் காட்டிவிட்டேன்.''

ஆனால் இதனால் தன் மகனுக்கான இரக்க உணர்வு மற்றும் தீங்கு அல்லது தனக்குத்தானே கொண்ட அவனது சங்கடம் இவற்றைத் தணிவிக்க முடியவில்லை.

சிவந்த தனது மயிரடர்ந்த கையை வெறுப்போடு குனிந்து பார்த்தபடி ''முதல் தடவையாக அவனை நான் அடித்து விட்டேன்,'' என்று நினைத்தான். ''நானே, பத்து வயதுக்கு முன்னால் ஒரு நூறு முறையாவது விளாசப்பட்டிருக்க வேண்டும்.''

ஆனால் இது கூட அவனுக்கு ஆறுதல் தரவில்லை. கலங்கிய நீரில் பசை போன்ற புள்ளியாய்த் தோன்றிய சூரியவட்டத்தைச் சன்னல் வழியாக அர்தமோனவ் பார்த்தான், குடியிருப்பிலிருந்து வந்த பேரிரைச்சலை சற்று நேரம் கேட்டான்; பிறகு விழா நடைமுறைகளைக் காண்பதற்காகத் தயக்கத்தோடு வெளிக் கிளம்பினான். வழியில், நிகனோவிடம் மெதுவாகச் சொன்னான்:

''உன்னுடைய மாற்றுரிமை மகன் என் இல்யாவிடம் பல்லா வகையான முட்டாள்தனத்தையும் கூறுகிறான்...''

''அவனுக்குச் சாத்து வைக்கிறேன்,'' என்று எழுத்தர் முற்றிலும் தயாராக, மகிழ்ச்சியான தோற்றத்துடன் பதிலளித்தான்.

''அவனுடைய நாக்கைப் பார்த்துக் கொள்ளும்படி அவனுக்குப் பாடம் புகட்டு,'' பியோத்தர் மேலும் கூறினான். பக்கவாட்டில் நிகனோவின் வெறுமை படர்ந்த முகத்தைப் பார்த்தபடி, துன்பந் துடைப்பது போல அவன் எண்ணினான்:

''அது எல்லாவற்றையும் போல எளிமையானது.''

குடியிருப்பினர் உரத்த மகிழ்ச்சிமிக்க குரலில் எசமானனை வாழ்த்தினர். அரைகுறை குடிவெறிப் புன்னகையில்

முகங்கள் பளிச்சிட்டன, பெருமையடிப்பது உரக்கக் கேட்டது. மோர்துவினியன் மாதிரியில், கால் மறைப்பு சிவப்பு நாடாக்களால் ஆன, பூணிட்ட புதிய மென்மரத்தாலான நடையன்கள் அணிந்து ஸெரஃபீம், அர்தமோனவ் முன்பாக இறைபுகழ் வாழ்த்தொலியை சுழன்றாடியபடி பாடிக் கொண்டிருந்தான்:

யாரிங்கு வந்ததென இப்போது கூறு?
பெருமைமிகு நமது பிரபு!
அவரோடு வந்ததாரு?
பெருமகனார் தானே வந்தார்.

நரைத்த தாடியும், நீண்ட முடியும் கொண்டு மதகுரு போலக் காணப்பட்ட இவான் மரோஸவ் அடித் தொண்டையில் இரைந்து பேசினான்:

''உன்னிடம் நாங்கள் நிறைவு பெற்று விட்டோம். நாங்கள் நிறைவு பெற்று விட்டோம்.''

மற்றொரு கிழவன் மமாயெவ், பெரு மகிழ்ச்சியோடு இரைந்து பேசினான்:

''அர்தமோனவ்கள் தங்களுடைய ஆட்களைப் பிரபுக்களைப் போலக் கவனித்துக் கொள்கிறார்கள்!''

எல்லாருக்கும் கேட்கும் படியாக, நிகனோவ் கோப்தெவிடம் குறிப்பிட்டான்:

''இவர்கள் நன்றியுள்ள ஆட்கள். தங்கள் புரவலரை எப்படி மதிக்க வேண்டும் என்பதை அவர்கள் அறிவார்கள்!''

''அம்மா, அவர்கள் என்னைத் தள்ளிக் கொண்டு இருக்கிறார்கள்!'' தனது ரோஜாநிறப் பட்டுச் சட்டையில் ஓர் உருண்டை போலக் காணப்பட்ட யாக்கவ் புகார் செய்தான். பெண்களைப் பார்த்துக் கம்பீரமாக முறுவலித்தபடி, அவனிடம் நதால்யா கூறினாள்:

''அந்தக் கிழவன் எப்படி நடனமாடுகிறான் பார்...''

அந்தத் தச்சன் தளர்ச்சியில்லாதபடி சுற்றினான், குதித்தான், கிண்டலான பாடலடிகளை ஒன்றன் பின் ஒன்றாகப் பாடினான்:

ஏய், ஓங்கிமிதி, அப்பால் ஓங்கிமிதி!
ஏய், விரைந்தே அப்பால் ஓங்கிமிதி!
தோல் காலணி மரக் காலணியைவிடக் கணக்கிறது—
மரப்பட்டையினும் ஒரு பெண் இனியவளே!

பாராட்டுகள் அர்தமோனவுக்கு ஒன்றும் புதுமையாக் ல்லை. அவற்றினுடைய நம்பிக்கையைச் சந்தேகிப்பதற்கு அவனுக்குக் காரணம் இருந்தது. எனினும், அவை அவனை ாக வைத்தன. மகிழ்வோடு புன்னகை செய்தபடி அவன் றினான்:

''நல்லது, நன்றி, நன்றி! நாம் ஒருவரோடு ஒருவர் கலந்து நட்புறவுடன் வாழ்கிறோம்!''

தனக்குத்தானே, அவன் சிந்தித்தான்:

''தன்னுடைய தந்தை பாராட்டப்படுவதைப் பார்க்க இல்யா இங்கில்லாதது வெட்கப் படத்தக்கது.''

அந்த மக்களுக்கு எந்த வகையிலேனும் உதவி செய்ய வேண்டும், ஏதேனும் அன்புடன் செய்ய வேண்டிய தேவை இருப்பதை அவன் உணர்ந்தான். சற்று நேர யோசனைக்குப் பிறகு, தன் காதை இழுத்துவிட்டுக் கொண்டு அவன் அறிவித் தான்:

''குழந்தைகள் மருத்துவமனையின் அளவை நாம் இரட் டிப்பாக்க வேண்டி இருக்கிறது.''

ஸெரஃபீம் தனது கைகளை ஆட்டியபடி, அப்பால் பாய்ந்தான்.

''கேட்டீர்களா? அப்படியா? எசமானருக்கு வாழ்த்து!''

ஒழுங்கில்லாதபடி மக்கள் உரக்க மகிழ்ச்சி தெரிவித் தார்கள். பெண்களால் சூழப்பட்ட நதால்யா மிகவும் உணர்ச்சிவயப்பட்டுப் போய், மூக்காலேயே சொன்னாள்:

''பெண்களே, உங்களில் யாராவது போய் இன்னும் மூன்று சிறு மிடாக்களில் பீர் எடுத்து வாருங்கள். தீஹன் அவற்றை உங்களுக்குத் தருவான். போங்கள்.''

இது இன்னமும் கூடுதலாகப் பெண்களுடைய கழிபேரு வகையைப் பெருக்கியது. நிகனோவ் தனது தலையை அசைத்தான், உணர்ச்சிவயப்பட்டுப் பேசினான்:

''ஒரு பாதிரியார்க்குப் பொருத்தமான ஒரு கூட்டம்...''

''அம்-மா, எனக்குப் புழுக்கமாக இருக்கிறது,'' யாக் கவ் ஊளையிட்டான்.

அந்த மகிழ்ச்சியான நேரத்தில், கருந்தாடிக்காரன் ஆளை காப்போன் வோல்கவ், தனது பெரிய கற்றாழைக் கண்களுடன் நதால்யாவை நோக்கி ஓடி வந்த போது அமைதி குலைந்தது. மெலிந்து போய், வெப்பத்தால் பாதி உணர்வு மயங்கிய நிலையில், தனது நீல-வெண்மைத் தோல் புண் களால் மூடப்பட்ட ஒரு குழந்தை அவனது இடது தோளுக்கு

மேலாக ஆதரவற்றபடி ஊசலாடியது. நதால்யா வரை ஓடிவந்த அவன், பித்துப் பிடித்தவன் போல உரக்கக் கத்த ஆரம்பித்தான்:

''நான் என்ன செய்வேன்? என் மனைவி செத்துப் போனாள். வெக்கை நோயால் அவள் போய் விட்டாள்! இதை விட்டுப் போய் விட்டாள். நான் என்ன செய்வேன்?''

சூளை காப்போனுடைய பித்துப் பிடித்த கண்ணினின் றும் விநோதமான, மஞ்சள் நிறக் கண்ணீர் சொட்டியது. மன்னிப்புக் கேட்பது போல, ஆர்ப்பரித்தபடி நதால்யா விடமிருந்து அவனை அப்பால் தள்ளிவிட பெண்கள் முயன் றார்கள்:

''அவன் சொல்வதைக் கேட்காதே. அவனுக்கு மூளை குழம்பிப் போய் இருக்கிறது. அவனுடைய மனைவி பாவ நிலையில் இருந்தாள். எலும்புருக்கி நோய் கொண்டவள். இவனுங் கூட நோயாளி.''

''அவனிடமிருந்து யாராவது குழந்தையை வாங்குங் கள்,'' என்று கண்டிப்பான குரலில் அர்தமோனவ் பேசி னான்; உடனே தொங்கிக் கிடந்த அந்தக் குழந்தையை நோக்கி பல ஜோடிக் கைகள் நீட்டன. ஆனால் வோல்கவ் அவர்களை உரக்கத் திட்டி விட்டு அப்பால் ஓடிவிட்டான்.

மொத்தத்தில், ஒரு விழா நாள் இருக்க வேண்டியது போல, ஒவ்வொன்றும் அருமையாகவும், அழகாகவும், பிர காசமாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது. தொழிலாளர்களி டையே புதிய முகங்களைப் பார்த்த போது, பெருமிதம் கொள்ளும் உணர்வோடு அர்தமோனவ் நினைத்தான்:

''நம்முடைய எண்ணிக்கையானது வளர்ந்து கொண் டிருக்கிறது. இதைத் தந்தை பார்க்க முடிந்தால்...''

திடீரென்று அவனுடைய மனைவி வருத்தத்தோடு கூறி னாள்:

''இல்யாவைத் தண்டிப்பதற்கு நீ மோசமான நேரத் தைத் தேர்ந்தெடுத்து விட்டாய். மக்கள் உன்னை எப்படி நேசிக்கிறார்கள் என்பதை அவன் பார்க்கவில்லை.''

அர்தமோனவ் பதில் பேசவில்லை, ஆனால் கள்ளத்தன மாக ஸினயீதாவைப் பார்த்தான். ஒரு டஜன் பெண்கள் அவளைப் பின்தொடர, தாழ்வான சந்தத்தில், மகிழ்ச்சி யற்ற குரலில் பாடிக்கொண்டு, அவள் சுற்றித் திரிந்து கொண்டிருந்தாள்:

ஒரு பக்கமாய் எனைக் கடந்தே
என்மீது விழியுருட்டுகிறார்,
குறியாய் நிற்கிறார், ஆமா,
எனைக் காதலித்தபடியே!

''நடுக்குக்காரி. அது ஒரு மட்டரகமான பாடலுங் கூட,'' என்று நினைத்தான்.

தனது கடிகாரத்தை வெளியே எடுத்துப் பார்த்தான். ஆனால் இனம் புரியாத காரணத்தால் தன் மனைவியிடம் பொய் சொன்னான்:

''நான் வீட்டிற்குச் செல்ல வேண்டும். அலெக்ஸியிட மிருந்து ஒரு தகவலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.''

தன் மகனிடம் தான் அவசியம் என்ன கூற வேண்டும் என் பதை நினைத்துப் பார்த்தபடி, அவன் விரைந்து புறப்பட் டான். பல சொற்றொடர்களைத் தயாரித்தான், மிகவும் கண்டிப்பான முறையில், அதே வேளையில் பாசமிக்கதாக வும் இருந்தன. ஆனால் இல்யாவினுடைய அறைக் கதவை அவன் மெதுவாகத் திறந்த போது, அவை எல்லாவற்றை யுமே அவன் மறந்து விட்டான். ஒரு நாற்காலி மீது முழங் காலிட்டபடி பையன் அமர்ந்திருந்தான், அவனுடைய முழங் கைகள் சன்னல் சட்டத்தின் மீது இருக்க, வெளியே செந் நிறமான புகையார்ந்த வானத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பழுப்பு நிறமான தூசியோடு அந்தச் சிறிய அறையானது இருட்டாக மாறிக் கொண்டிருந்தது. கூரைியிலே தொங்கிக் கொண்டிருந்த ஒரு பெரிய கூண்டில், ஒரு கருப்புப் பறவை தூங்கச் செல்லத் தயாரான படி, அதனது மஞ்சள் நிற அலகால் பிறாண்டியது.

''சரி, இன்னுமா இங்கே உட்கார்ந்து கொண்டு இருக் கிறாய்?''

இல்யா திடுக்குற்றுத் தன் தலையைத் திருப்பினான். அவசரமில்லாதபடி, தனது நாற்காலியிலிருந்து அவன் கீழே இறங்கினான்.

''அங்கேயா! எல்லாவிதமான குப்பைக் கூளங்களையும் கேட்டபடி.''

தன் தலையைத் தாழ்த்தியபடி பையன் நின்றான். பெற்றுக் கொண்ட தண்டனையைத் தனக்கு நினைவு படுத்து வதற்காக இது செய்யப்பட்டது என்பதைத் தந்தை புரிந்து கொண்டான்.

''ஏன் தொங்கப் போடுகிறாய்? உன் தலையை நிமிர்த்தி நில்.''

இல்யா தனது இமைகளை உயர்த்தினான், ஆனால் தன் தந்தையைப் பார்க்கவில்லை. மென்மையாகச் சீழ்க்கைச் செய்தபடி, கருப்புப் பறவை தனது கூண்டிற்குள்ளாக குதிக்கத் தொடங்கியது.

''அவன் கோபமாக இருக்கிறான்,'' என்று அர்தமோனவ் நினைத்தான். இல்யாவின் படுக்கையின் மீது அமர்ந்து, தனது விரலால் தலையணையைக் குத்தியபடி கூறினான்: ''முட்டாள்தனமானவற்றை நீ கேட்டிருக்கக் கூடாது.''

இல்யா கேட்டான்:

''ஆனால் அவர்கள் சொல்கின்ற போது, என்னால் என்ன செய்ய முடியும்?''

அவனுடைய துயராந்த, நியாயமான குரல் தந்தையை ஆறுதல் படுத்தியது. மிகுந்த மென்மையோடும், அதிகமான துணிச்சலோடும் பியோத்தர் பேசினான்:

''அப்படி அவர்கள் செய்யட்டும். ஆனால் அவற்றை நீ பொருட்படுத்த வேண்டாம்! அவர்கள் கூறுவதை மறந்து விடு. அவர்கள் ஆபாசமாகப் பேசுவதை நீ கேட்டால், அதை நீ உடனே மறந்து விடு.''

''நீ மறந்து விடுகிறாயா?''

''ஏனில்லை? கேட்கின்ற ஒவ்வொன்றையும் நான் நினைவு வைத்துக் கொண்டிருந்தால் நீ என்ன நினைக்கிறாயோ அது போலவே எனக்கும் ஆகி விடும்?''

மிகுதியும் எளிமைக்கான வார்த்தைகளைக் கவனமாகப் பொறுக்கியபடி, அந்த வார்த்தைகள் எல்லாம் மொத்தத்தில் உண்மையாகவே தேவைப்படவில்லை என்பதைத் தெளிவாகப் புரிந்து கொண்டு, அவன் மெதுவாகப் பேசினான்:

''இங்கே என்னிடம் வா.''

இல்யா எச்சரிக்கையோடு முன்னேறினான். தனது இரண்டு முழங்கால்களுக்கிடையேயும் பையனை வைத்துக் கொண்டு, அவனது அகன்ற நெற்றி மீது தந்தை தனது கையை வைத்து, அதை இலேசாக மேல் நோக்கி உயர்த்தினான். ஆனால் இல்யா தனது தலையை நிமிர்த்தவில்லை, தந்தை சங்கடப்பட்டான்.

''எதற்காக நீ இப்படிப் பிணங்கிக் கொண்டிருக்கிறாய்? என்னைப் பார்.''

இல்யா அவனுடைய கண்களை நேராக உற்றுப் பார்த்தான், ஆனால் அது விஷயங்களை மோசமாக்கியது, ஏனென்றால் அவன் கேட்டான்:

''எதற்காக என்னை அடித்தாய்? பவ்லூஷ்காவை நான் நம்பவில்லை என்று உன்னிடம் கூறினேனே.''

மூத்த அர்தமோனவ் உடனடியாக பதில் பேசவில்லை. தான் வியக்குமாறு, ஏதோ சில அற்புதத்தால் தன்னுடைய பையன் அவன் அளவில் நின்றான் என்பதைப் புரிந்து கொண்டான். பெரியவனுக்குரிய கூறுகளுக்குப் பையன் உயர்ந்து விட்டிருந்தான், அல்லது, ஒருவேளை, பெரியவனைத் தன்னுடைய மட்டத்திற்குத் தாழ்த்தியிருக்க வேண்டும்.

''அவனுடைய வயதிற்கு அதிகமாக கூருணர்வுடையவனாக இருக்கிறான்,'' பியோத்தர் சிந்தித்தான். இடத்தினின்றும் எழுந்து, தன்னோடு தன் மகனின் சமரசத்தை விரைவுபடுத்தும் ஆர்வத்தோடு அவசரமாகப் பேசினான்:

''நான் உன்னைப் புண்படுத்தவில்லை. குழந்தைகள் கற்பிக்கப்பட வேண்டும். என்னுடைய அப்பா என்னை எப்படி விளாசுவது வழக்கம் என்பதை நீ அறிந்தால்! என்னுடைய அம்மாவும் கூடத்தான். இன்னும் குதிரை இலாயக்காரன், பழுத்தர் மற்றும் ஜெர்மானியப் பணியாள். உன்னுடைய சொந்த ஆட்களே உன்னை விளாசுவது அவ்வளவு மோசமானதில்லை, ஆனால் ஒரு வெளியாள் அடிக்கையில் புண்படுத்துகிறது மனம். குருதி உறவு கொண்டவர்களுடைய கையோ இலேசாக அடிக்கிறது.''

அவன் அறையில் மேலுங் கீழும் நடை போட்டான், கதவிலிருந்து சன்னலுக்கு ஆறு காலடிகள், பெரும்பாலும் தன் மகன் வேறு ஏதேனும் புதிய கேள்வியைக் கேட்டு விடுவானோ என்று ஓரளவு பயந்து, இந்த உரையாடலை முடிவுக்குக் கொண்டு வர விரைந்து கொண்டிருந்தான்.

படுக்கையில் காலை அழுத்திக் கொண்டு நின்ற தன் மகனுக்கு அப்பால் தனது கண்ணைத் திருப்பி வைத்துக் கொண்டு அவன் முணுமுணுத்தான்: ''ஆலையைச் சுற்றி நடக்கின்ற எல்லாவற்றையும் நீ கேட்கவோ, பார்க்கவோ கூடாது. நகரத்திற்கு, பள்ளிக்கு உன்னை நான் அனுப்பி வைக்க வேண்டி இருக்கிறது. அதை நீ விரும்புவாயா?''

''ஆமாம்.''

''நல்லது, பிறகு...''

தன் மகனைத் தடவிக் கொடுக்க அவன் விரும்பினான்,

ஆனால் ஏதோ அவனை நிறுத்திவிட்டது. தன்னுடைய உணர்வுகளைப் புண்படுத்தி விட்ட பிறகு, தன்னுடைய சொந்த அப்பாவும் அம்மாவும் எப்போதாவது தன்னைத் தடவிக் கொடுத்ததுண்டா?—அவனால் நினைத்துப் பார்க்க முடியவில்லை.

''சரி, நீ வெளியே போய் விளையாடலாம். நீ பவ்லூரஷ்காவைச் சுற்றி ஓடிக் கொண்டிருக்க வேண்டாம் என்பது மட்டுமே நான் விரும்புவது.''

''அவனை யாருமே விரும்புவதில்லை.''

''அவனை விரும்புவதற்கு எதுவுமே இல்லை, அத்தகைய ஒரு சீக்குப் பிடித்த நாய்க்குட்டி.''

திரும்பவும் கீழ்த் தளத்தில், தன்னுடைய சொந்த அறையில், தன் மகனிடத்தில் தான் மேற்கொண்ட பேச்சு மிகவும் நல்லபடியாக முடியவில்லை என்பதை நினைத்துப் பார்த்தபடி, திறந்த சன்னல் அருகே அர்தமோனவ் நின்றான்.

''அவனுக்கு நான் செல்லங் கொடுத்தேன். எனக்கு அவன் பயப்படுவது இல்லை.''

குடியிருப்பிலிருந்து குழப்பமான ஒலிகள் வந்தன: இளம் பெண்களுடைய கிரீச்சொலிகளும் பாடல்களும், உரத்த உரையாடலும், ஓர் அக்கார்டியனின் 'கிஸ்' என்ற ஒலியும் கேட்டன. வெளி வாயிற் புறத்திலிருந்து தீஹனுடைய குரல் மிகத் தெளிவாக வந்தது:

''என்ன குழந்தாய் வீட்டில் தங்கி விட்டாய்? இங்கே ஒரு விழா ஆனால் நீ வீட்டில் உட்கார்ந்திருக்கிறாய்? பள்ளி செல்லப் போகிறாயா? அருமையானது. 'கற்காதது என்பது பிறக்காததைப் போன்றது' இப்படித்தான் கூறுவார்கள். சரி, குழந்தாய், நீ இல்லாமல் தனிமையில் இருக்க எனக்குச் சலிப்பாயிருக்கும்.''

அர்தமோனவ் கத்த விரும்பினான்:

''நீ பொய் சொல்கிறாய், எனக்குத் தான் தனிமையில் சலிப்பாயிருக்கும்!'' கெடு நோக்கோடு அவன் சிந்தித்தான். ''நயவஞ்சகமான அற்பக் கோழை! எசமானனின் மகனைக் கெஞ்சிப் பசப்புகிறான்.''

பாதியார் கிலேபின் சகோதரரான ஆசிரியர் ஒருவரிடம், பள்ளியில் சேர்க்கத் தயாரிக்கும் பொருட்டுப் பையனை நகரத்திற்கு அனுப்பிய போது, தன்னுடைய இதயம் வெறுமையாக இருப்பது போலவும், தனது வீடு சலிப்பூட்டுவது போலக் காணப்படுவதாகவும் பியோத்தர் உணர்ந்தான்,

வாசோதா ஒன்று ஒழுங்கின்றி இருப்பது போன்ற மகிழ்ச்சியற்ற உணர்வினைப் பெற்றிருந்தான். தனது படுக்கையறையின் தெய்வ பீடத்தில் விளக்கு எரியாத போதும் இதே போன்ற உணர்வு அவனை வந்து ஆட்கொண்டது. அந்த நீலநிற விளக்கு வெளிச்சத்திற்கு பியோத்தர் பெரிதும் பழக்க மாகிப் போயிருந்தான், முடிவில்லாத இரவுகளில் அது எரியாத போது அவன் விழித்தெழுந்து விடுவதுண்டு.

புறப்படுவதற்கு முன்னால், தனக்குப் பின்னால் கெட்ட நினைவுகளை விட்டுச் செல்ல வேண்டும் என்று வலுக் கட்டாயமாக முயன்றபடி, இல்யா மிக மோசமாக நடந்து கொண்டது போலக் காணப்பட்டது. தன் தாயாரிடம் முரட்டுத்தனமாக நடந்து கொண்டான், அவளை அழ வைத்தான். யாக்கவினுடைய பறவைகள் அனைத்தையும் அதன் கூடுகளினின்றும் வெளியே விட்டான். யாக்கவிற்கு வாக்களித்திருந்த கருங்குருவியை நிகனோவிற்குக் கொடுத்தான்.

''உனக்குள்ளாக என்ன நுழைந்து விட்டது?'' தந்தை வினவினான். ஆனால் இல்யா விடையளிக்கவில்லை, பக்கவாட்டில் தனது தலையை மட்டுமே அசைத்தான். எதை மறக்க வேண்டும் என்று அவன் விரும்பியிருந்தானோ, அதைத் திரும்பவும் நினைவு படுத்துவது போல, தன் மகன் தன்னைக் கேலி செய்து கொண்டிருக்கிறான் என்பது போல அர்தமோனவுக்குத் தென்பட்டது. அவனுடைய இதயத்தில் இந்தச் சிறிய உயிர் எவ்வளவு பெரிய இடத்தைப் பிடித்திருக்கிறது என்பது விநோதமானது.

''இந்த முறையில் அப்பாவும் என்னைப் பற்றி எப்போதேனும் கவலைப்பட்டாரா?''

ஒரு பொறுப்புள்ள, மிகவும் நேசிக்கிற பெற்றோராகத் தன் தந்தையை பியோத்தர் ஒருபோதும் கண்டதில்லை, ஆனால் அலெக்ஸியைக் காட்டிலும் தன் மீது மிகுதியும் அன்பிப்பாக இருந்த ஒரு எடுபிடி மேலாளராக மட்டுமே இருந்ததாக நினைவு நம்பிக்கையோடு பதிலளித்தது.

''என்ன, அப்பாவை விட நான் அன்பாக இருக்கிறேனா?'' அர்தமோனவ் தனக்குத்தானே கேட்டுக் கொண்டான், மனக் குழப்பத்தோடு சற்று நேரம் இருந்தான். தான் எத்தகையவன் எனத் தன்னைப் பற்றி அவனால் கூற முடியவில்லை: அன்பான மனிதனா, வெறுப்பூட்டுகிறவனா? இத்தகைய நினைவுகள் அவனுக்கு அமைதியைத் தரவில்லை, அவன் வேலையில் இருக்கின்ற போது, மனச் சஞ்சலமுற்ற நேரங்

களில் திடீரென்று அவை அவனைப் பற்றிக் கொள்ளத் தொடங்கின. வியாபாரம் ஆற்றல் மிக்கதாக வளர்ந்து கொண்டிருந்தது, நூற்றுக் கணக்கான கண்களை எசமானன் பக்கம் திரும்ப வைத்தது, தொடர்ந்து கடினமான அக்கறையைக் காட்டுமாறு செய்தது. ஆனால் ஏதாவது இல்யாவைப் பற்றி அவனுக்கு நினைவு படுத்துகையில், அவனுடைய வியாபாரச் சிந்தனைகள் பாவுநூல் அறுந்தது போல ஆகி, அவற்றைப் பெரு முயற்சி செய்து ஒன்றுசேர்க்க வேண்டி இருந்தது. இல்யா இல்லாததால் ஏற்பட்ட வெறுமையை, தனது இளைய மகன் மீது காட்டும் கூடுதலான அக்கறையின் மூலம் நிரப்ப முயன்றான், ஆனால் யாக்கவால் அவனுக்கு எந்த ஆறுதலையும் தர முடியாது என்பதைத் துயரார்ந்த ஏமாற்றத்தோடு அவன் உணர்ந்தான்.

''அப்பா, எனக்கு ஒரு வெள்ளாடு வாங்கித் தா,'' யாக்கவ் கெஞ்சினான். எதற்காகவாவது அவன் எப்பொழுதுமே கெஞ்சிக் கொண்டே இருந்தான்.

''வெள்ளாடு எதற்காக?''

''சவாரி செய்வதற்கு.''

''மட்டரகமான யோசனை. மந்திரவாதிகள் தாம் வெள்ளாடுகளில் பயணம் செய்வார்கள்.''

''எலேனா எனக்கு ஒரு படப்புத்தகம் கொடுத்தாள், அதில் ஒரு வெள்ளாட்டின் மீது சவாரி செய்தபடி ஓர் அருமையான பையன் இருக்கிறான்...''

தந்தை சிந்தனை செய்தான்:

''இல்யா நம்பிக்கையோடு படத்தை எடுத்துக் கொண்டிருக்க மாட்டான், நான் மந்திரவாதியைப் பற்றி அவனுக்குச் சொல்கின்ற வரை அவன் என்னை ஒட்டிக் கொண்டிருப்பான்.''

ஆலைக் குடியிருப்பில் பையன்களை ஓயாமல் தொல்லை கொடுத்துக் கொண்டும், பிறகு அவர்கள் இவனை அடிப்பதாகவும் புகார் செய்கிற யாக்கவின் போக்கை அவன் விரும்பவில்லை.

மூத்த மகனும் கூட வம்பிழுக்கின்றவனாக, சண்டைக்காரனாகத்தான் இருந்தான், ஆனால் பூசல் தீர்வுகளில் அவனது விளையாட்டுத் தோழர்களால் அவன் அடிக்கடி காயம் பட்டாலும், அடிபட்டாலும், யாரைப் பற்றியும் அவன் ஒரு போதும் புகார் செய்ததில்லை. இளைய மகன் கோழையாகவும் சோம்பேறியாகவும் இருந்தான். அவன் எப்பொழுது

...ர்த்தாலும் எதையாவது சூப்பிக் கொண்டோ, மென்று ...ண்டோ இருந்தான். சில நேரங்களில் யாக்கவினுடைய ...யல்களைப் புரிந்து கொள்வது கஷ்டமானதாக இருந்தது. ... நாள், தேநீர் வேளையின் போது, அவனுக்கு அவனு... ய தாயார் பால் ஊற்றிக் கொண்டிருக்கையில் அவளது ...டைக் கைபட்டு, ஒரு கிளாஸ் தேநீர் கவிழ்ந்து, அவள் ...து வெந்நீர் கொட்டியது.

''அதை நீ கவிழ்த்துப் போடுவதை நான் பார்த்தேன்,'' என்று யாக்கவ் தற்பெருமையாகக் கூறி பல்லை நெறித்...ான்.

''அதை நீ பார்த்தாய், ஒரு வார்த்தை கூட நீ பேச...வில்லை. அது நல்லதில்லை. இப்போது அம்மா தன்னுடைய ...ல்களைப் புண்ணாக்கிக் கொண்டாள்,'' என்று அவனிடத்...ில் தந்தை கூறினான்.

யாக்கவ் ஒரு வார்த்தை கூடப் பேசாது அசை போட்...டுக் கொண்டும், கண் சிமிட்டிக் கொண்டும், காற்றை ஊதிக் கொண்டுமிருந்தான். சில நாட்களுக்குப் பிறகு, முற்றத்தில் ...ஞ்சீற்றத்தோடு பேசிய அவனது குரலை தந்தை கேட்...ான்:

''அவனை அடிக்க அவன் போய்க் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அவன் ஒதுங்கி நழுவினான், ஒதுங்கி நழுவி...ான், மேலும் பின் பக்கமிருந்து வெளி வந்தான், அவ...னுக்கு அவன் வெறுமனே கொடுக்கவில்லை!''

சன்னலுக்கு வெளியே பார்க்கையில், தன்னுடைய மகன் ...ந்த ஆபாசம் பிடித்த பவ்லூஷ்கா நிகனோவுடன் அங்க...சைவுகளுடன் கூடிய ஆர்வமிக்க உரையாடல் ஒன்றை ...ற்கொண்டிருப்பதை அர்தமோனவ் பார்த்தான். யாக்...வை அவன் வீட்டிற்குள்ளாகக் கூப்பிட்டான், நிகனோவு...ன் உள்ள தொடர்பை விலக்கும்படி கூறினான். மேலும் ...ேதா சொல்வதற்கு இருந்தான்: ஆனால் ஊதா வெண்...மையுடன், விநோதமான ஒளிகொண்ட கண்மணிகளைக் கொண்ட பையனுடைய கண்ணைப் பார்த்த பிறகு, அவன் ...ருமூச்சு மட்டுமே விட்டு, அவனை அப்பால் தள்ளினான்:

''போ, வெற்றுக் கண்ணா...''

...ரையில் பனிபடிந்து இருந்தது போன்று எவ்வளவு முடி...மோ அவ்வளவு எச்சரிக்கையோடு யாக்கவ் சென்றான், ...து முழங்கைகள் பக்க வாட்டில் அழுத்தி நின்றன, எளி...ில் கையாள முடியாத, கனத்த சுமை எதையோ எடுத்துச்

செல்கிற ஒரு மனிதனுடைய பாவனையில் அவனது கைகள் நீட்டி இருந்தன.

''அருவருப்பானவன். முட்டாள்,'' என்று தந்தை தீர் மானித்தான்.

அவனுடைய உயரமான, அதிகம் பேசாத மகளிடம் கூட, யாக்கவிடம் அவன் கண்ட அதே மாதிரியான ஒருவித சோம்பேறித்தனமான மனச்சோர்வு இருந்தது. படிக்கும் போது படுத்துக் கொள்ள விரும்பினாள். தேநீருடன் அதிக ளவு ஜாம் சாப்பிடுவாள், சிற்றுண்டியின் போது ஒயிலாக வளைந்த விரல்களால் தன்னுடைய ரொட்டியை எளிதில் மனநிறைவு பெறாதது போல உடைப்பாள், சூப்பில் ஒரு ஈ கிடந்தது என்று அவள் நினைத்துக் கொண்டது போலத் தனது கரண்டியை ஆட்டுவாள். நன்கு சிவந்த அவளது உத டுகள் எப்போதுமே சுருங்கி இருந்தன. அவளது சிறுமி நிலைக்கு முற்றிலும் பொருந்தாத குரலில் தன் தாயாரிடம் அடிக்கடி கூறுவாள்:

''அது இப்போது செய்யக் கூடியது அல்ல, இது நாகரிக மற்றது.''

அவளுடைய தந்தை கேட்ட போது: ''இங்கே பார், எனது படித்த பெண்ணே, நீ ஏன் ஆலையைப் பார்த்துக் கொள்ளக் கூடாது, உனது மாற்றாடைக்கான பட்டுத்துணி எப்படித் தயாரிக்கப் படுகிறது என்பதைக் கற்றுக் கொண் டாலென்ன?''— அவள் பதில் பேசினாள்:

''மிகவும் நல்லது.''

அழகிய உடையுடுத்திக் கொண்டாள், அவளுடைய சித் தப்பா அலெக்ஸியிடமிருந்து பரிசாகப் பெற்ற தனது கைக் குடையை எடுத்துக் கொண்டு, தனது உடை எதிலும் மாட் டிக் கொள்ளக் கூடாது என்பதில் மிகுந்த கவனம் செலுத்தி யபடி, தந்தையைப் பணிவோடு பின் தொடர்ந்தாள். ஓரிரு முறைகள் அவள் தும்மினாள்; ஆனால் தொழிலாளர்கள் அவளது நல்ல உடல்நலத்திற்காக வாழ்த்திய போது, ஒரு வார்த்தை பேசவோ, முறுவலிக்கவோ செய்யாது, முகஞ் சிவந்தபடி போக்கிரித்தனமாகத் தலையை மட்டிலுமே ஆட் டினாள். பியோத்தர் வழிமுறைகளை விளக்க ஆரம்பித் தான், ஆனால், எந்திரங்களுக்குப் பதிலாக அவள் தரை யையே பார்த்துக் கொண்டிருந்த போது, அவன் சீக்கி ரமே மௌனமானான், மிகவும் அதிகமான அக்கறை தேவைப்பட்ட வியாபாரத்தில் தனது மகளுடைய முரண்

ப்பட்டால் புண்பட்டான். மேலும், தறிப் பகுதியினின்றும் அவர்கள் வெளியேறுகையில் அவன் கேட்டான்:

''நல்லது, அதை நீ எங்ஙனம் விரும்பினாய்?''

தனது ஆடைகள் சேதமுற்று இருக்கின்றனவா என்பதைச் சோதித்துப் பார்த்த படி அவள் பதிலளித்தாள்: ''அது மிகவும் அழுக்காக இருந்தது.''

''நீ அதிகம் பார்க்கவில்லை,'' என்றான் பியோத்தர் ஒரு வறட்டுப் புன்னகையுடன். எரிச்சலோடு அவளைப் பார்த்துக் கத்தினான்:

''எதற்காக உனது ஸ்கர்ட்டை இழுத்துக் கொண்டிருக்கிறாய்? சுற்றுவட்டகை வெளி துப்புரவாக இருக்கிறது, மேலும் உன்னுடைய ஸ்கர்ட் தரையைத் தொடாதபடி தானே இருக்கிறது.''

அச்சமுற்றவளாய், தனது இரண்டு விரல்களுக்கிடையே மும் பிடித்துக் கொண்டிருந்த ஸ்கர்ட்டை கீழே விட்டாள், மன்னிப்புக் கேட்பது போல முணுமுணுத்தாள்:

''அங்கே ஒருவித எண்ணெய் வாசனை இருந்தது.''

குறிப்பாக வேதனைப் படுத்தியது இந்த மாதிரி இரண்டு விரல்களைப் பயன் படுத்தியது தான், அர்தமோனவ் முணுமுணுத்தான்:

''இரு விரல்களால் உன்னால் வாழ்க்கையினின்றும் நிறைய எடுத்துக் கொள்ள முடியாது!''

மழைக் காலத்தில் ஒரு நாள், ஒரு புத்தகத்தில் ஆழ்ந்த படி அவள் ஒரு சாய்விருக்கையில் படுத்திருந்த போது, அவள் அருகே அமர்ந்து என்ன படித்துக் கொண்டிருக்கிறாள் என்று தந்தை கேட்டான்.

''ஒரு டாக்டரைப் பற்றி.''

''அப்படியா. விஞ்ஞானம் பற்றியது.''

ஆனால் புத்தகத்தை அவன் உற்றுப் பார்த்த போது, எரிச்சலோடு கூறினான்:

''எதற்காகப் பொய் பேசுகிறாய்? இது கவிதை. யாரும் விஞ்ஞானத்தைக் கவிதையாக எழுதுவார்கள் என்று என் னிடம் கூற முயல வேண்டாம்!''

விரைவாகவும், குழப்பத்துடனும், ஒரு ஜெர்மானிய டாக்டரை மயக்கி வசப்படுத்துவதற்குச் சாத்தானுக்குக் கடவுள் எங்ஙனம் அநுமதி கொடுத்தார் என்பதையும், டாக்டரைச் சுற்றி வளைப்பதற்கு ஒரு பிசாசை சாத்தான் அனுப்பியது எங்ஙனம் என்பதையும் குறித்த ஏதோ கதையை

அவனிடம் கூறினாள்.* இந்தக் கதையின் மூலக் கருத்தை விளங்கிக் கொள்வதற்கு அர்தமோனவ் முயன்றான், ஆனால் ஓர் ஆசிரியைப் போன்று தன் மகளுடைய கேலி நிறைந்த குரலானது மிகவும் குழப்புவதாக இருந்தது, புரிந்து கொள்வது சிரமமானதாக இருந்தது.

''இந்த டாக்டர்— அவன் ஒரு குடிகாரனா?''

இந்தக் கேள்வியால் எலேனா உணர்ச்சி வயப்பட்டுப் போனதை அவனால் காண முடிந்தது. அவளது விளக்கங்களில் மேற்கொண்டு கவனம் செலுத்தாதபடி, அவன் கோபத்தோடு சொன்னான்:

''இதில் எல்லாமே ஒரே குழப்பம். தேவதைக் கதை. டாக்டர்கள் பேய்களை நம்புவதில்லை. இந்தப் புத்தகத்தை எங்கிருந்து நீ பெற்றாய்?''

''அந்த மெக்கானிக் எனக்கு இதைத் தந்தார்.''

சாம்பல் நிறப் பூனைக் கண்ணால் வானத்தை நோக்கி சிந்தனை வயப்பட்டபடி பார்த்த எலேனாவின் பார்வையை நினைவு கூர்ந்தபடி, அவளைக் கண்டிக்க வேண்டும் என்று அவன் உணர்ந்தான்:

''கோப்தெவ் உனக்குப் பொருத்தமில்லாதவன். அவனோடு மிகவும் நெருக்கமாகப் போய் விடாதே.''

ஆம், எலேனாவும் யாக்கவும் மந்தமாய் இருந்தனர், இல்யாவைக் காட்டிலும் அதிகமாக மழுங்கலாக இருந்தனர். அதை அவனால் மிகத் தெளிவாகக் காண முடிந்தது. படிப் படியாக, அறியாதபடியே, தன் மகனின் பாசத்துக்குப் பதிலாக பாவெல் நிகனோவ் மீது அவனுக்குள்ளாகவே வெறுப்பு வளர்ந்தது. நோய் வாய்ப்பட்ட சிறிய உருவத்தை அவன் சந்தித்த போது, அவன் தனக்குள்ளாகவே நினைத்துக் கொள்வான்:

''எல்லா விளைவுமே அந்த மட்டமான...''

இந்தப் பையனுக்காக அவன் உடல் தளர்ச்சியை உணர்ந்தான். தனது மெலிந்த கழுத்தின் மேலே சிரமமானபடி அலைந்து கொண்டிருந்த தலையுடன், நிகனோவ் கூனிய தோளோடு நடந்தான். அந்தப் பையன் ஓடிக் கொண்டிருந்த போது கூட, ஏதோ கோழைத்தனமான தவறு செய்தவன் மறைந்து ஒதுங்கி நழுவுவது போல அர்தமோனவுக்

---

* கேதே எழுதிய துன்பியல் காவியமான 'ஃபாவுஸ்த்'தை இது குறிப்பிடுகிறது. **(மொ-ர்.)**

டுக் காணப்பட்டான். தனது சித்தப்பாவினுடைய காலணி களுக்கு பளபளப்புப் பசையிடுவது, அவனது ஆடைகளை துவைசுவது, மரத்தை வெட்டுவது, கட்டித் தூக்குவது, நீர் பாடுப்பது, சமையல் அறையினின்றும் தெளிந்த நீர் வாளி களை இழுத்து வருவது, தனது சகோதரனுடைய கைத் துண்டுகளை ஆற்றில் நனைப்பது போன்று அவன் கடின மாக வேலை செய்தான். சிட்டுக் குருவி போல சுறுசுறுப்பு, கிளர்ச்சியற்ற கந்தலுடையுடன், மறைமுகமான குறிப் புடன், நாய் போன்ற முறுவலிப்புடன் ஒவ்வொருவரையும் அவன் வணங்கினான். அர்தமோனவ் பார்வையில் வந்த போதெல்லாம், எவ்வளவு தொலைவில் என்பதைப் பொருட் படுத்தாது, தனது நெஞ்சில் கழுத்து விழுகின்ற வரை, தனது வ...த்துக் கழுத்தை மடக்கி பையன் வணங்கத் தொடங்கி விடுவான். இலையுதிர் கால மழையில் நனைந்த படி அவனைப் பார்ப்பது அல்லது காற்றடி காலத்தில் அவன் மரத்தை வெட்டுவதைப் பார்ப்பது, தனது மூச்சி னால் தனது மெலிந்த விரல்களை வெதுவெதுப்பாக்க முனைந்தபடி, வாத்தைப் போல ஒற்றைக் காலில் சமன் செய்து நின்று கொண்டு, ஏறத்தாழ விழுவது போல இருக் கின்ற காலணி கொண்ட காலை உயர்த்தியபடி நிற்பதைப் பார்ப்பது அர்தமோனவுக்குப் பெரும்பாலும் மகிழ்ச்சியா னதாக இருந்தது. அவன் இருமிய போது அவனது உடல் முழுக்க வேதனை தாங்காமல் முறுக்கி நெளிவுற்றது, அவனது நீல-வெண்ணிறச் சிறு கைகள் அவனது மார்பைப் பற்றிக் கொள்ளும்.

குளியலறை அட்டாலையில் இரண்டு சதை மாடப்பு றாக்களை இந்தப் பையன் வைத்திருப்பதைக் கேள்வியுற்று, அந்தப் பறவைகளை விடுவிக்கும்படியும், அட்டாலையில் அந்தப் பையன் ஏறுவதை நிறுத்தும்படி பார்த்துக் கொள் ளவும் அர்தமோனவ் தீஹனிடம் உத்தரவிட்டான்.

''கூரையினின்றும் அவன் கீழே விழுந்து தன்னைத்தானே காயப் படுத்திக் கொள்ளலாம். அவன் அந்தளவுக்கு மெலி வான இளைஞனாக இருக்கிறான்.''

ஒரு நாள் மாலை அலுவலகத்திற்குள்ளாக வந்து கொண் டிருந்த போது, கறைபட்ட மையை அகற்றுவதற்காகக் கத்தி யினால் இந்தப் பையன் தரையைப் பிறாண்டிக் கொண் டும், காய்ந்து போன கந்தல் துணியால் அதைத் துடைத் துக் கொண்டிருப்பதையும் அவன் பார்த்தான்.

''யார் இதை சிந்தியது?''

''அப்பா.''

''அது நீ இல்லை என்று உறுதியாகச் சொல்கிறாயா?''

''அதை நான் செய்யவில்லை. கடவுளுக்குப் பொதுவாக!''

''பிறகு ஏன் உன் மூஞ்சியில் ஒரே கண்ணீராக இருக்கிறது?''

அவனுடைய முழங்கால்களுக்குக் கீழாக, ஓர் அடியை எதிர்பார்ப்பது போல அவனுடைய தலை குனிந்திருந்து பாவெல் பதில் அளிக்கவில்லை. ஒரு பார்வை பார்த்தது, அவனைத் திகைக்கவும், கூனிக் குறுகவும் வைத்தது. திருப்தியோடு அர்தமோனவ் அறிவித்தான்:

''அது உனக்குச் சரியாகப் பயன்படுகிறது.''

பிறகு, திடீரென்ற துலக்க ஒளியில், இந்த அற்பமான உயிருக்கு எதிராக எவ்வளவு கேலிக்குரியதாகவும், குழந்தைத்தனமாகவும் தான் பகைமை கொண்டதை அவன் உணர்ந்து, தனது முறுவலிப்பைத் தாடிக்குக் கீழாக மறைந்தான்.

''என்னுடைய நேரத்தை நான் வீணாக்குவது என்ன முட்டாள்தனம்!'' என்று அவன் தனக்குத்தானே இளக்காரத்தோடு எண்ணினான், மேலும் கனத்த ஐந்து கோபெக் செம்பு நாணயத்தைத் தரை மீது வீசி எறிந்தான்.

''அங்கே! கொஞ்சம் மிட்டாயை நீயாகவே வாங்கிக் கொள்.''

அந்தச் செம்பானது தன்னுடைய மெலிந்த, அழுக்கான விரல்களைக் கொட்டிவிடும் என அவன் பயந்தது போல மிருந்த எச்சரிக்கையோடு அந்த நாணயத்தை எடுப்பதற்காகப் பையன் வெளியேறினான்.

''உனது வளர்ப்புத் தந்தை உன்னை விளாசுகிறாரா?''

''ஆமாம்.''

''சரி. அதற்கொன்றும் செய்ய முடியாது. ஒவ்வொருவரும் அவ்வப்பொழுது அடிபடவே செய்கிறார்கள்,'' என்று ஆறுதல் படுத்துவது போல அர்தமோனவ் கூறினான். சில நாட்களுக்குப் பிறகு, பவ்லூஷ்கா குறித்து யாக்கவ் ஏதோ புகார் செய்த போது, மூத்த அர்தமோனவ், தன் மகனை நம்பவில்லை என்றாலும், முற்றிலும் பழக்கத்தின் கட்டாயத்தால் தனது எழுத்தரிடம் கூறினான்:

''உனது வளர்ப்பு மகனுக்கு ஒரு சாத்துக் கொடு.''

''அவனுக்குச் சரியாக நான் உதை கொடுக்கிறேன்,'' மரியாதையோடு நிகனோர் உறுதி கூறினான்.

வித்தியாசமான உடைகளில் ஆடையணிந்து, தலை முடியைக் குட்டையாக வெட்டி, தனது நெற்றி முன்னினும் பெரிதாகும்படி செய்து கொண்டு, கோடையில் விடுமுறைக் காக இல்யா வீடு வந்த போது, பாவெல் மீதான அர்தமோ னவினுடைய வெறுப்பு இன்னும் கசப்பானதாக வளர்ந்தது, ஏனெனில் அவனுடைய மகன் தனது நட்புறவைப் பிடிவாத மான முறையில் எலும்புந்தோலுமான கந்தலுடுத்திய இந்த அழுக்குப் பிடித்த கீழ் மகனோடு கொண்டிருந்தான். தனது அப்பாவையும் அம்மாவையும் அழைக்க சம்பிரதா யமான நீங்கள் என்ற சொல்லைப் பயன்படுத்துமளவு இல்யா தனக்குத்தானே நச்சுத்தன்மை கொண்டவனாக மாறி இருந் தான். வீட்டிற்கு வந்த விருந்ினரைப் போல, சட்டைப் பைகளுக்குள்ளாகத் தனது கைகளை விட்டுக் கொண்டு நடந்தான்; கண்ணீர் மல்க அழுகுமளவுக்குத் தன் தம்பி யைத் திட்டினான், இவன் மீது அவளுடைய புத்தகங்களை வீசி எறிகின்ற வரை சகோதரியைத் தொல்லைப் படுத்தி னான். மொத்தத்தில், அவன் வெறுக்கத் தக்கவாறு நடந் தான்.

''அது பற்றி உன்னிடம் நான் கூறினேன்,'' நதால்யா தன் கணவனிடத்தில் புகார் செய்தாள். ''மேலும் ஒவ்வொ ருவரும் இதையே கூறுகிறார்கள்: படிக்கவைத்தது வெட் கங் கெட்டதன்மைக்கு வழி வகுக்கிறது.''

அர்தமோனவ் எதுவும் கூறவில்லை, ஆனால் தன் மகனை கர்வத்தோடு கண்காணித்தான். இல்யா இடைவிடாது குறும்புகள் செய்தாலும், அவற்றில் மொத்தத்தில் இதய மில்லாது, திட்டமிட்ட குறிக்கோள் மட்டுமே இருப்பது போல அவனுக்குக் காணப்பட்டது. புறாக்கள் திரும்பவும் தோன்றின, குளியல் வீட்டுக் கூரையின் விளிம்பின் மீது வீண் பெருமையோடு நடந்தபடியும், கூவிக் கொண்டும் இருந்தன. தங்களுடைய பறவைகள் சுறுசுறுப்பாய் பறந்து கொண்டிராத போது, இல்யாவும் பாவெலும் புகைப்போக்கி அருகே அமர்ந்து, துடிதுடிப்பான உரையாடலில் ஈடுபட் டிருப்பார்கள். ஒரு முறை, இல்யாவின் வருகையை அடுத்தே, தந்தை கூறினான்:

''நல்லது, பள்ளியில் எப்படி இருக்கிறது என்று எனக் குக் கூறு. ஏராளமான கதைகளை உனக்கு நான் கூறியிருந்

திருக்கிறேன். இப்பொழுது அது உன்னுடைய முறை.''

மிகவும் சுருக்கமாகவும், அவசரமாகவும், தங்களுடைய ஆசிரியர்களிடத்திலே மாணவர்கள் செய்யும் தந்திரங்களைப் பற்றிய சில மந்தமான கதைகளை இல்யா அவனிடம் கூறினான்.

''அவர்களிடத்தில் ஏன் அத்தகைய தந்திரங்களை நீங்கள் விளையாடுகிறீர்கள்?''

''அவர்கள் எங்களைத் தொந்தரவு செய்கிறார்கள்,'' என்று இல்யா விளக்கினான்.

''அப்படியா. அது நன்றாகத் தெரியவில்லை. உனது பாடங்கள் கடினமாக இருக்கின்றனவா? ''

''இல்லை, அவை இலகுவாக இருக்கின்றன.''

''அதுவா உண்மை?''

''என்னுடைய தேர்ச்சி அட்டையைப் பாருங்கள்,'' இல்யா திருப்பிச் சொன்னான், ஒரு குலுக்கலுடன். பழமரங்களுக்கு மேலாக உயரே வானத்தின் மீது அவனது கண்கள் நிலைக்குத்தி இருந்தன. தந்தை கேட்டான்:

''அங்கே நீ என்ன பார்க்கிறாய்?''

''ஒரு பருந்தை.''

மூத்த அர்தமோனவ் பெருமூச்சுவிட்டான்.

''சரி, நீ வெளியே ஓடிப் போய் விளையாடுவது நல்லது. என்னிடத்தில் உனக்குச் சங்கடமாக இருப்பது போலக் காணப்படுகிறது.''

தனிமையில் தங்கிவிட்டபடி, தானும் கூட குழந்தைப் பருவத்தில், தந்தை தன்னிடம் பேசிய போது, பெரும்பாலும் உணர்ந்த சலிப்பையோ, அச்சத்தையோ அவன் நினைத்துப் பார்த்தான்.

''அவர்களுடைய ஆசிரியர்களிடத்தில் அவர்கள் தந்திரங்களைச் செய்கிறார்கள். தோல் பட்டையின் முனையில் எனக்குத் திருச்சபை எழுத்தாளர் எழுத்துகளைக் கற்பித்துக் கொண்டிருந்த போது, இத்தகைய எண்ணம் ஒருபோதும் என் தலையில் ஏறியதில்லை. குழந்தைகளுக்கு இப்போது வாழ்க்கை மிகவும் சுலபமானதாகத் தோன்றுகிறது.''

பள்ளிக்குத் திரும்புவதற்கு முன்னால், இல்யா கேட்டான்— இது தான் அவனுடைய ஒரே ஒரு வேண்டுகோளாக இருந்தது:

''அப்பா, குளியல் வீட்டின் அட்டாலியில் தனது புறாக்களை பாவெல் வைத்துக் கொள்ள விடுங்கள்...''

வாக்குறுதி எதுவுமளிக்காமல், தந்தை பதிலளித்தான்:

''என்னால் ஒவ்வொருவருடைய தொல்லைகளையும் சமாளிப்படுத்த முடியாது.''

''பிறகு அவன் வைத்துக் கொள்ளட்டும்,'' மகன் பேசி முடித்தான். ''நான் போய் அவனிடம் கூறுகிறேன். அவன் மகிழ்ச்சி அடைவான்.''

தனது சொந்தத் தந்தையினுடைய வாழ்க்கையில் மகிழ்ச்சி ஏற்படுத்துவது பற்றிக் கவலையோ, முயற்சியோ செய்யாமல், ஒரு மோசமான சின்னப் பையனுக்கு உதவப் படுவதற்காக இத்தனை அக்கறை கொள்கின்ற தன் மகன் காரணமாக மூத்த அர்தமோனவ் புண்பட்டுப் போனான். மேலும் மகனின் புறப்பாட்டுக்குப் பின்னால் கூட, எழுத்தருடைய வளர்ப்பு மகன் மீதான இடைவிடாத வெறுப்பு முன்னும் அதிகமாக அவனிடையே நிறைந்து காணத் தொடங்கியது. ஏதேனும் நிகழ்ச்சி வீட்டிலோ, ஆலையிலோ, நகரத்திலோ தவறாக நடக்கின்ற போதெல்லாம், அர்தமோனவினுடைய எரிச்சலூட்டுகின்ற பார்வையில் அழையாமலேயே இந்தக் கந்தையணிந்த அழுக்குப் பிடித்த குழந்தையின் கற்பனையானது, அதனுடைய மெலிந்த கைகால்களை, அவற்றின் மீது அவனுடைய கசப்பான சிந்தனைகளையும், அவனுடைய எல்லாவித அருவருப்பான உணர்வுகளையும் தொங்க விட்டுக் கொள்ளத் தருவது போல அவனுக்காக நீட்டியபடி தள்ளிக் கொண்டு வரும். மாலை நேர நிழல்களைப் போல, பையன் வார்த்தெடுத்தது போல வளர்ந்தான். திருடும் இயல்புடைய குறும்புத்தனமான ஒரு குழந்தையைப் போல நழுவிக் கொண்டு, பார்வையில் மிக வும் அடிக்கடி அவன் வந்தான்.

இந்தியாவின் கோடைக் காலத்தைப் போன்ற ஒரு மிதமான நாளில், தனது பழமரத் தோப்புக்குள்ளாக அர்தமோனவ் சென்றான். அவன் களைப்பாகவும், கோபமாகவும் இருந்தான். மாலை நேரம் சாய்ந்து கொண்டிருந்தது, காற்றால் பெருக்கப்பட்டும், மழையால் சுத்தமாகக் கழுவப் பட்ட பசுமை நிறமான வானத்தில் வெக்கை இல்லாதபடி இலையுதிர் காலச் சூரியன் தளதளப்புற்றிருந்தது. பழத் தோட்டத்தின் ஒரு மூலையில் தீஹன் வியாலவ், கீழே விழுந்து கிடந்த சருகுகளைப் பெருக்கும் வேலையில் இருந்தான். அவற்றினுடைய மென்மையான, வேதனை மிக்க சலசலப்பு மரங்களுக்கிடையே மிதந்து வந்தது. பழத் தோட்

டத்திற்கு அப்பால், ஆலை இரைச்சல் ஒலி எழுப்பிக் கொண் டிருந்தது, தெளிவான காற்றைக் கெடுத்தபடி சாம்பல் நிறப் புகையானது சோம்பேறித்தனமாக மேலே எழும்பி யது. முற்றப் பாதுகாவலனைப் பார்ப்பதைத் தவிர்க்கவோ, அவனிடம் பேசாமல் இருப்பதற்காகவோ, குளியல் வீடு இருந்த பழத் தோட்டத்தின் எதிர்ப்புறமாக அர்தமோனவ் திரும்பினான். குளியல் வீட்டின் கதவு சிறிது திறந்து இருப் பதைக் கவனித்தான்.

''அந்தப் பயல் அங்கேதான் இருக்கிறான்.''

ஆடைமாற்றும் அறைக்குள்ளாகக் கள்ளத்தனமாக உற் றுப் பார்த்ததில், அவனது எதிரியினுடைய சிறிய உருவம், இருள்படிந்த மூலையில் ஒரு பெஞ்சின் மீது உட்கார்ந் திருப்பதைப் பார்த்தான். அவனுடைய தலை ஆடியது, கால்கள் அகலப் பரப்பி இருந்தன, செயற்கைச் சிற்றின்பக் கையாடலில் பையன் தன்னை மறந்தவனாக இருந்தான். ஒரு கணப் பொழுதிற்கு, அர்தமோனவ் மகிழ்ச்சியாக இருந் தான்; ஆனால் பிறகு, யாக்கவையும் இல்யாவையும் நினைவு கூர்ந்தபடி, பயத்தோடும், வெறுப்போடும் கடுஞ் சீற்றத் தோடு பேசினான்:

''என்ன செய்து கொண்டிருக்கிறாய், பன்றியே?''

பாவெல் உடைய கை விறைத்து, நீண்டது. அவனது உடம்பு முழுக்க வளைந்து நடுங்கியது, அவனது உதடுகள் மெல்லிய கத்தலில் விலகி இருந்தன, திகைப்புற்றுப் போய், பெரிய மனிதன் நின்று கொண்டிருந்த கதவை நோக்கி விரைந்து தானே வந்தான். அர்தமோனவ், திடீரென்று ஏற் பட்ட கிளர்ச்சியின் மகிழ்வுடன் அவனது நெஞ்சுக்கு நேரா கத் தனது வலது காலை வைத்து உதைந்து அவனை நிறுத்தி னான். ஏதோ நொறுங்கும் ஓசை கேட்டது. பையன் வேத னையால் முனங்கினான், தரையில் பக்கவாட்டில் கவிழ்ந் தான்.

தன்னைக் களைப்புறுமாறு செய்திருந்த பளு, தனது ஆன்மாவை அழுத்திக் கொண்டிருந்த அருவருப்பான கந் தல் சுமை, இந்த உதையினால் விடுபட்டுப் போனதாக அர் தமோனவுக்குக் கண நேரம் காணப்பட்டது. ஆனால் அடுத்த கணமே பழத் தோட்டத்திற்குள்ளாக வெளியே பார்வை யைச் செலுத்தி, கேட்டபடி இருந்தான், பிறகு கதவைத் தாழிட்டு விட்டு பாவெலுக்கு மேலாகக் குனிந்து, மிகவும் தாழ்ந்த குரலில் சொன்னான்:

''சரி, எழுந்திரு. நாம் போகலாம்.''

ஒரு கையை முன்னுக்கு நீட்டியபடியும், மற்றொரு கையை மடங்கிக்கிடந்த தன்னுடைய முழங்காலுக்குக் கீழ் தரையை நோக்கி அழுத்தியபடியும் பையன் படுத்திருந்தான். ஒரு கால் மற்றொன்றை விட குட்டையானது போலக் காணப்பட்டது. பியோத்தரை நோக்கி மறைவாய் அவன் நெருங்கி ஊர்ந்து வருவது போல அவனது தோற்றம் காணப்பட்டது. வெளியே நீட்டிக் கொண்டிருந்த கையானது இயற்கையாக இல்லாது, நடுக்கந்தருவது போல நீளமாக இருந்தது. அர்தமோனவ் தடுமாறினான், ஆதரவுக்ாகக் கதவுச்சட்டத்தைப் பிடித்துக் கொண்டான். தனது தொப்பியைக் கழற்றி, அதனது ஓரத்தால் தனது நெற்றியில் திடீரென்று அதிகளவு வெளியேறிய வியர்வையை, துடைத்துக் கொண்டான்.

''எழுந்திரு. நான் யாரிடமும் சொல்ல மாட்டேன்,'' என்று அவன் கிசுகிசுத்தான்; ஆனால் அந்தப் பையனைத் தான் கொன்று போட்டு விட்டதை அவன் ஏற்கெனவே அறிவான், அவனுடைய கன்னத்திற்குக் கீழே தரை மீது கருமையான குருதி ஒரு சிறிய நாடாப் போலக் கசிந்து வெளியேறிக் கிடந்ததை அவன் ஏற்கெனவே பார்த்து விட்டான்.

''இவனை நான் கொன்று விட்டேன்,'' பியோத்தர் நினைத்தான். சாதாரண, குறுகிய சொல் செவிடாக்கும்படியான ஒலியதிர்வைக் கொண்டு வந்தது. தனது தொப்பியைத் தனது கோட்டுப் பைக்குள்ளாகத் திணித்துக் கொண்டான், தானாகவே சிலுவையிட்டுக் கொண்டான், இரங்கத்தக்கவாறு வளைந்த சிறிய உருவத்தைக் கீழே அறிவு மழுக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்தான். அவனது மூளையானது திருந்தாத சிந்தனையால் அச்சத்தோடு அதிர்வுற்றது:

''அது ஒரு விபத்து என்று நான் கூறிவிடுவேன். கதவால் அவனை நான் அடிப்பேன். ஆமாம். கதவு. இது கனமான கதவு.''

சுற்றிலும் அவன் பார்த்தான், தனக்குப் பின்னால் நீல்லோவ் தன்னுடைய பெருக்கு மாறுடன் இருப்பதைக் கண்ட அதிர்ச்சியினால் பெஞ்சின் மீது அப்படியே அழுந்திப் போய் உட்கார்ந்து விட்டான். முற்றக் காவலனுடைய நீர்வடியும் கண்கள் நிகனோவ் மீது நிலை குத்தி நின்றன. அவனுடைய கல்போன்ற கன்னத்தை அவனது விரல்கள் பிறண்டின.

ஆழ்ந்த சிந்தனையில் இருப்பவன் போலக் காணப்பட்டான்.

பெஞ்சின் விளிம்பை இரு கைகளாலும் பற்றியபடி ''இதோ,'' என்று அர்தமோனவ் உரக்கக் கத்தத் தொடங்கினான். ஆனால் தீஹன் இடை மறித்தான். தனது தலையை ஆட்டியபடி, அவன் சொன்னான்:

''ஒரு மெலிவான சின்னப் பையன், அருவருப்பானவன். அங்கே உயரத்தில் ஏறப்போக வேண்டாம் என்று எத்தனை தடவைகள் அவனிடம் கூறியிருக்கிறேன்.''

''என்ன அது?'' என அதிர்ச்சியுற்ற பியோத்தர், ஆனால் நம்பிக்கையோடு கேட்டான்.

'' 'நீ உன்னுடைய கழுத்தை முரித்துக் கொள்வாய்' என்று அவனிடம் நான் கூறினேன். நீயும் கூட அதையேதான் சொன்னாய், பியோத்தர் இல்யீச்— நினைவிருக்கிறதா? எந்த விளையாட்டாக இருந்தாலும் நீ சுறுசுறுப்பானவனாகி விடுவாய். நினைவுமயங்கியா இருக்கிறான்?''

குந்தியமர்ந்தபடி, முற்றப் பாதுகாவலன் பாவெலினுடைய மணிக்கட்டிலும், தொண்டையிலும் நாடித் துடிப்பைப் பார்த்தான், பையனுடைய கன்னத்தில் ஒரு விரலை வைத்தான். பிறகு விரலைத் தனது முன்றானையில் துடைத்துக் கொண்டான், ஒரு தீக்குச்சியை உரசிக் கொளுத்துவது போல ஒரு வித சிறீச் ஒலி செய்தான். மேலும் சொன்னான்:

''சாகடிக்கப் பட்டவன் போலக் காணப்படுகிறான். நோய் பிடித்த சிறிய உருவம், இவன் இப்படித்தான். இவனை முடிப்பதற்கு அதிகமாகத் தேவைப் படவில்லை.''

தீஹனுடைய பேச்சு அமைதியாக இருந்தது, அவனது இயக்கங்கள் மெதுவாக இருந்தன, அவனுடைய நடத்தை வழக்கம் போலவே அமைதியாக இருந்தது; ஆனால், அவனுடைய எசமானன் சந்தேகத்தோடு, கடுமையான கண்டனச் சொற்களை எதிர்பார்த்தபடி காத்திருந்தான். கூரையில் இருந்த சதுரமான ஓட்டை வழியாக தீஹன் மேலே பார்த்தான், புறாக்கள் கூவுவதைச் சற்று நேரம் கேட்டான், முன்னர் போலவே எளிமையாகவும் அமைதியாகவும் பேசினான்:

''கதவில் தான் அவன் எப்போதுமே ஏறினான். பெஞ்சின் மீது ஏறி நின்று கொள்வான், கதவுக் குமிழி மீது தனது காலை வைப்பான், அங்கிருந்து கதவின் உச்சிக்குப் போய் விடுவான், பிறகு தனது கைகளைத் தானாகவே இழுத்துக் கொண்டு ஓட்டைக்கு வெளியே வருவான். அவனுடைய

...க்குப் போதுமான தெம்பு இல்லை, ஆகவே அவன் ... பிடியை இழந்து விழுந்துவிட்டான். கதவின் மூலை ... அவனது இதயத்தை அடித்துக் கொண்டிருக்க வேண் ...''

''அப்படி நடந்ததை நான் பார்க்கவில்லை,'' பியோத் ... கூறினான். தற்காப்பு உணர்வானது விரைவான ஐயுறவு ...த்திற்கு வழி கோலியது:

''அவன் பொய் பேசுகிறானா? பாசாங்கு செய்கிறானா? ...னுடைய கைகளில் நான் மாட்டிக் கொள்வதற்காக, ...க்கு வலை விரிக்கிறானா? அல்லது உண்மையாகவே ...வன் புரிந்து கொள்ளவில்லையா, முட்டாள்?''

கடைசியாகச் சொன்னது தான் பெரும்பாலும் காணப் ...டது. தீஹன் கிறுக்குத்தனமாக நடந்து கொண்டிருந் ...தான். யாரையோ வெளியே முட்டித் தள்ளுவது போல, ...னது தலை ஆட்டலுடன், அவன் பெருமூச்சு விட்டான்:

''ஹூம், புழுதிக் கறை! எதற்காக இப்படிப்பட்டவர் ...கள் இந்த உலகத்திற்கு வருகிறார்கள்? நான் அவனுடைய அம்மாவிடம் போய்ச் சொல்கிறேன். வளர்ப்புத் தந்தை ...பெரிதும் சங்கடப்பட மாட்டான் என்றே நான் கருதுகிறேன். அவனுக்கு, இந்தப் பையன் வெறுமனே ஒரு கூடுதல் வாயா ...கத்தான் இருந்தான்.''

முற்றப் பாதுகாவலனுடைய பேச்சை அர்தமோனவ் சந் ...தேகத்தோடு பின்பற்றினான், ஏதேனும் பாசாங்கின் அடை ...யாளம் தெரிகிறதா என்று எச்சரிக்கையாக இருந்தான்; ஆனால் தீஹன், ஆர்வம் மேலிடாத மனிதனுடைய தொனி ...யில் வழக்கம் போலவே பேசினான்.

தனது புருவங்களை ஒன்று சேர்த்துக் கேட்டபடி ''உற் ...றுக் கேள்!'' என்றான். எங்கோ வெளியில் ஒரு பெண் கூப் ...பிட்டுக் கொண்டிருந்தாள்:

''பாஷ்கா! பாஷ்கா-கா...''

தீஹன் தனது கன்னத்தைத் தேய்த்துக் கொண்டான்.

''பாஷ்கா, உண்மையில்! உனது கண்ணீரைத் தயாராக ...வைத்துக் கொள்...''

''அவன் சரியான ஒரு முட்டாள்,'' என்று அர்தமோனவ் ...முடிவு செய்தான், பழத் தோட்டத்திற்குச் செல்ல வெளி ...யேறினான், தனது பையிலிருந்து குல்லாவை இழுத்துக் ...கொண்டு, அதனுடைய கிழிந்த முனையைக் கவனமாகப் ...பரிசீலித்தான்.

இரண்டு அல்லது மூன்று வாரங்களுக்கு, உறுத்திக் கொண்டிருந்த அச்ச உணர்வால், நாள்தோறும் வந்த புதிய தொல்லைகளாலும், குறிப்பிட்டுச் சொல்ல முடியாத இடர்ப்பாடாலும், அவன் நிலையில்லாது வாழ்ந்து வந்தான். மற்றொரு சமயத்தில், கதவு திறக்கும், தீஹன் உள்ளே தள் ளிக் கொண்டு நுழைந்தபடி கூறுவான்:

''சரி, உண்மையில், அது பற்றி எனக்கு எல்லாம் தெரியும்...''

எனினும், வெளிப்புறத்தில் எல்லாமே ஒழுங்காக நடை பெற்றன. பிறப்புக்கும், இறப்புக்கும் பழகிப் போன மக்கள், பையனுடைய மரணத்தைச் சாதாரணமாகவே எடுத்துக் கொண்டார்கள். தன்னுடைய மஞ்சள் நிறக் கழுத்தில், நிகனோவ் ஒரு புதிய கருப்பு 'டை'யைக் கட்டியிருந்தான், கழுவியிருந்த அவனது முகமானது, நீண்ட காலமாக எதிர் பார்த்திருந்த பரிசினை அவன் பெற்றிருந்தது போல, தெளி வான தோற்றத்தினைக் காட்டியது. கொல்லப்பட்ட பைய னுடைய தாய், உயரமான, ஒட்டியுலர்ந்த, குதிரை முகங் கொண்ட பெண், மௌனமாக, கண்ணீரின்றி, தன் மகனு டைய சவ அடக்கத்தை விரைவு படுத்த விருப்பம் கொண் டிருந்தாள்—என்பது போல அர்தமோனவுக்குத் தென்பட் டது. சவப்பெட்டியின் தலை மாட்டில் வெள்ளைத் திரையை ஒழுங்கு செய்தபடியும், நீல நிற நெற்றியில் புனிதருக்குரிய தோற்றத்துடன் காகிதக் கட்டைச் சரி செய்தபடியும், கண் களை மறைத்திருந்த பிரகாசமான புதிய செம்புக் கோப் பெக்குகளை, வித்தியாசமான விரைவுடன் கவனமான விரல் களால் கீழே அழுத்தியபடியும் அவசரமாக சிலுவை வரைந்து கொண்டும் இருந்த அவளது கையை பியோத்தர் கவனித் தான். இறுதிக் காரியத்தின் போது இரண்டு முறை அவளால் கையை உயரே தூக்க முடியாமற் போய்விட்டது. குறியிட்டுக் கொள்ளத் தனக்குத்தானே முயன்றாள், ஆனால் எலும்பு முறிந்து போய்விட்டிருந்தது போல அவளது கை கீழே விழுந்து விட்டது.

ஆமாம், அதைப் பொருத்த மட்டில் எல்லாமே இலகு வாக முடிந்தன. அளவுக்கதிகமான பெருந்தன்மையுடன் நடந்து கொள்வது தீஹனுக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தும் என்ற அச்ச உணர்வு எழுந்தாலும், இறுதிச் சடங்கிற்கான செலவிற்கு அவனது பங்களிப்புக்காக நிகனோவ்கள் மனச் சோர்வுடனும், வம்பளந்தபடியும் நன்றி கூடச் சொன்னார்

கள். அன்றைய தினம் குளியல் வீட்டில் முற்றப் பாதுகா வலன் அத்தனை முட்டாளாகக் காணப்பட்டான் என்பதை நம்ப அர்தமோனவ் இன்னமுங் கூட கஷ்டமானதாகவே கருதி னான். பியோத்தருடைய வாழ்க்கைக்குள்ளாக இன்னும் அதிகமாக ஆட்பிடுகின்ற மாதிரி குளியல் வீட்டின் முன் பகுதிக்கு இந்த மனிதனைத் தள்ளிச் சென்றது இது இரண் டாவது முறை. ஒரு விநோதமானது, நடுக்கந்தருவது. குளி யல் வீட்டை எரிந்து விடுவது அல்லது விறகுக்காக உடைத்து விடுவது என்று கூட அர்தமோனவுக்குத் தோன்றியது. எந்த வகையிலும், அது பழையதாகிக் கொண்டு வந்தது, பலகை கள் எல்லாம் ஆடத் தொடங்கி விட்டன. பழத் தோட்டத் தின் வேறொரு பகுதியில், புதிதாக ஒன்று கட்டப்பட வேண்டி இருந்தது.

தீஹனைக் கூர்மையாக கவனித்ததில், முற்றப் பாதுகா வலனுடைய வாழ்க்கையில் எந்த மாற்றத்தையும் அவன் காணவில்லை. எப்போதும் போல, அவன் இருப்பதானது விருப்பமற்ற முறையில் அளிக்கப்பட்ட சலுகை போன்றிருந் தது, தன்னுடைய சொந்த விருப்பத்திற்கு மாறாக அன்பு காட்டுவது போலிருந்தது, எப்போதும் போல அதிகம் பேசா திருந்தான், தன்னை வெறுத்தொதுக்கிய அவன், நிச்சய மாக ஆலைத் தொழிலாளர்களோடு ஒரு போலீஸ்கார னாகவும், குறிப்பாக, பெண்களிடத்தில் வெறுப்புத்தரும்படி முரட்டுத்தனமாகவும் நடந்து கொண்டான். நதால்யாவுடன் மட்டுமே அவனுடைய பழக்கமுறை மாறியிருந்தது. தன்னை வேலை வாங்குபவருடைய மனைவியிடம் பேசுவது போல அவன் பேச மாட்டான், ஆனால் அவனுடைய சொந்த உறவினர் போலவும், ஓர் அத்தையிடம் போல, ஒருவகை யில் ஒரு மூத்த சகோதரியிடம் பேசுவது போலப் பேசினான்.

''தீஹனிடத்தில் இத்தனை நெருக்கமாக உன்னை இருக் கச் செய்வது எது?'' பியோத்தர் திரும்பத் திரும்பக் கேட் டிருக்கிறான்; அவன் மனைவி எப்போதுமே பதில் சொன் னதாவது:

''அவனிடத்தில் நான் அப்படிப் பழகிப் போய் விட் டேன்.''

முற்றப் பாதுகாவலனுக்கு நண்பர்கள் எவரும் இருந் ததில்லை, எங்காவது போயிருக்கிறானா, பியோத்தர் அவனை ஒரு உட்குழுவினனாகவே நினைத்திருக்க வேண்டும். அத்த னையும் அநேகம், பல்வேறு மாதிரிகளில், கடந்த சில ஆண்டு

களாகத் தோன்றியிருக்கின்றன. ஆனால் தச்சன் ஸெரஃபீமைத் தவிர தீஹனுக்கு நண்பர்களே இருந்ததில்லை, சர்ச்சுக்குப் போக அவன் விரும்பினான், அங்கே அவன் பக்தியோடு வணங்கினான், ஏதோ ஊளையிடுவது போல, எப்போதுமே தன்னுடைய வாயைப் பார்க்கச் சகிக்காதபடி திறந்து வைத்துக் கொள்வான். சில நேரங்களில் தீஹனுடைய படபடக்கின்ற கண்களைப் பார்ப்பது அவனுடைய எசமானனின் முகத்தை இருளடைந்த துயருடையதாக்கும். அதனுடைய நீர்படிந்த ஆழத்தில் ஓர் அச்சுறுத்தல் ஒளிந்து இருப்பது போல அர்தமோனவுக்குக் காணப்பட்டது. அந்த மனிதனை அவனுடைய சட்டைக் கழுத்தைப் பற்றி, அவனை நன்றாக உலுக்கி, கத்த வேண்டும் போல விரும்புவதாக அவன் உணர்ந்தான்:

''நல்லது, பேசு!''

ஆனால் தீஹனுடைய கரு விழிகள் விரிந்து உணர்ச்சி வெளிப்பாட்டை இழந்து விடும், அவனுடைய உணர்ச்சியற்ற தோற்றமானது பியோத்தரின் எச்சரிக்கையை உயிரற்றதாக்கிவிடும். முட்டாள் அந்தோன், உயிரோடு இருந்த போது, முற்றப் பாதுகாவலனுடைய இருப்பிடத்திற்கு அடிக்கடி வந்தான், அல்லது மாலை நேரத்தில் வெளிவாசலை ஒட்டிய பெஞ்சில் அவனோடு உட்கார்ந்தான். தீஹன் எப்போதுமே பாதி கிண்டலோடு வினவவே முயன்றான்:

''முட்டாள்தனமாகப் பேசாதே. நீ சற்று நேரம் சிந்தி, பிறகு என்னிடம் பேசு. குயாத்திர்— யார் அது?''

''கயமாஸ்,'' பெரு மகிழ்ச்சியோடு அந்தோன் கீச்சொலி செய்வான். தனது பாடலைத் தொடங்குவான்:

ஓ, கிறிஸ்து எழுந்திட்டார், எழுந்திட்டார்...

''நிறுத்து!''

வண்டிச் சக்கரம் ஒன்றை இழந்தது,
சக்கரம் ஒன்றை இழந்தது...

தன்னாலேயே விளங்கிக் கொள்ள முடியாத சஞ்சலத்தால் ''அவனிடமிருந்து நீ என்ன விரும்புகிறாய்?'' என்று அர்தமோனவ் வற்புறுத்தினான்.

''அவனுடைய மனிதத்தன்மையற்ற வார்த்தைகளை அவன் விளக்க வேண்டியிருக்கிறது.''

''ஆனால் அவை முட்டாளுடைய சொற்கள்.''

''சரி, ஒரு முட்டாளுங் கூட அவனுக்கென்று சுயமாக

ஏதேனும் மூலம் பெற்றுத் தான் இருக்க வேண்டும்,'' என்று கூறுன் மற்றோட்டுடன் சொன்னான்.

எந்த வகையிலும், அவனோடு பேசாமல் இருப்பதே சிறந்தது. ஆனால் இந்தச் சாவுச் சுமையைத் தனது ஆன் மாவின் மேல் இனிமேலும் தாங்கிக் கொண்டிருக்க முடியாது என்று அர்தமோனவ் நினைத்த போது, புயல் வீசுகிற தூங்காத இரவு வந்தது. தனது மனைவியை எழுப்பி, நிக னோவ் பையனுடைய கதையை அவளிடம் கூறினான். தூக்கத்தோடு, இமைகளைச் சிமிட்டியபடி நதால்யா அவன் கூறுவதை, அமைதியாகக் கேட்டாள், ஒரு கொட்டாவி யோடு குறிப்பிட்டாள்: ''நான் கனவுகளை ஒருபோதும் நினைத்துப் பார்ப்பதில்லை.''

ஆனால் திடீரென்று பயத்தோடு பேசத் தொடங்கி னாள்:

''ஓ, யாக்கவும் அது போலச் செய்யத் தொடங்கக் கூடும் என்று நான் மிகவும் அஞ்சுகிறேன்!''

''என்ன செய்வான்?'' அவளுடைய கணவன் வியப்போடு கேட்டான். அவள் எதைப் பற்றிப் பயப்படுகிறாள் என்பது அவனிடம் தெளிவாக விளக்கிச் சொல்லிவிட்டிருந்த போது, உணர்ச்சியைப் புண்படுத்துவது போல நினைத்துக் கொண் டான்.

''இவளிடம் சொல்லிக் கொண்டிருப்பதில் பயனில்லை.''

அந்த இரவு, குளிர் காலப் புயற்காற்றின் முணுமுணுப்பு களுக்கும், கிறீச் ஒலிகளுக்கும் ஊடாக, அவனுடைய சொந்தத் தனிமையின் உச்ச உணர்வோடு, அவன் செய்துவிட் டிருந்த கொலை குறித்துத் தெளிவுபடுத்துவது போலவும், விளக்குவது போலவும், ஏதோ காணப்படுவதாக அவன் எண் ணினான்: இல்யாவின் ஆபத்தான விளையாட்டுத் தோழ னான, அந்த ஒழுக்கக் கேடான பையனை அவன் கொன்று போட்டு விட்டான், தன் மகன் மீது உள்ள அன்புக்காகவும், அவன் மீது இருந்த பயமுமே காரணமாகும். நிகனோவின் பையனிடம் அவன் கொண்டிருந்த கடுமையான வெறுப்புக் குத் தெளிவான ஆதாரத்தைத் தேடிக் கொண்டது அவனை ஓரளவுக்கு இயல்மைதிப் படுத்தியது. ஆனால் அவன் விரும்பி யதெல்லாம் தன்னிடமிருந்து இந்தச் சுமையை முழுமை யாக, மற்றொரு தோள்களுக்கு மாற்றிவிடுவதே ஆகும். சாதாரணமாக மிகவும் மன்னிக்கத்தக்க பாவங்களின் வெளி யிட்டுரைத்தலுக்கு மாறாக இந்தச் சாவுக்குரிய தவறைப்

பற்றிப் பேசுவதற்குச் சிந்தித்தபடி கிலேப் பாதிரியாருக்குச் சொல்லியனுப்பினான்.

மெலிந்த, வளைந்த தோள்களைக் கொண்ட பாதிரியார் மாலையில் வந்தார், ஒரு மூலையில் அமைதியாக உட்கார்ந்தார். ஏதோ வெட்கத்தினின்றும் தன்னை மறைத்து கொண்டு விடுவது போல, அவர் எப்பொழுதுமே இப்படித்தான், கோரமான முறையில் நெட்டையான தன்னை எங்காவது ஒரு மூலைக்குள்ளாக—இருட்டாகவும், நெருக்கமாகவும் இருப்பது நல்லது—தன்னைத் திணித்துக் கொண்டு விடுவார். அவருடைய அருவருக்கத்தக்க உள்ளங்கியின் இருண்ட மடிப்புகள் பெரும்பாலும், கைவைத்த நாற்காலியின் கருத்த தோலோடு ஒன்றிக் கலந்து விடும், சோகமான பின்னணியில் அவரது முகம் மட்டுமே மங்கலாகத் தெரிந்தது. அவருடைய தலை முடியில், நெற்றிக்கு மேலாகப் பனித்திவலைகள் கண்ணாடியாய்ப் பளபளத்தன. எலும்பு போன்ற அவரது கை வழக்கம் போல அவரது நீண்ட, அடர்த்தியான தாடியைப் பற்றித் தடவியது.

விஷயத்திற்குள் நேரடியாக நுழைவதற்குத் துணிவு இல்லாதபடி, மக்கள் எப்படியெல்லாம் கீழ் நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பது பற்றியும், அவர்களுடைய சினமூட்டுகிற சோம்பேறித்தனம், குடிவெறி, வரம்பு மீறிய ஒழுக்கக் கேடு இவை பற்றியும் அர்தமோனவ் பேசத் தொடங்கினான். இந்த விஷயம் சீக்கிரமே அவனுக்குச் சலிப்பு மூட்டியது, மௌனமாகிப் போனான், அறையில் மேலுங்கீழுமாக நடை போட்டான். பிறகு இருண்ட மூலையிலிருந்து பாதிரியாருடைய குரல் மிதந்து வந்தது, அவர் சொன்னது பெரும்பாலும் புகார் போலவே இருந்தது.

''யாருமே சாதாரண மக்களைச் சிந்திப்பதில்லை, அவர்களும் சரி, தங்களுடைய ஆன்மீகத் தேவைகளைப் பற்றி, எந்த சிந்தனைக்கும் தங்களைப் பழக்கிக் கொள்வதில்லை. எப்படி என்றும் அவர்களுக்குத் தெரியாது. படித்த ஆட்களும்... சரி, அது நான் தீர்மானிக்க வேண்டியது அல்ல. எந்த வழியிலும், அத்தகையவர்கள் நம்மிடையே அதிகம் இல்லை. மேலும், பாருங்கள், நம்முடைய அன்றாட வாழ்க்கையில் அவர்களால் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள முடியாது. அவர்கள் அதிகமாகவே தேடுகிறார்கள், இது உண்மை, ஆனால் எது அவசியமானதோ அதையல்ல. கலவரம் அவர்களைக் கவர்கிறது, அது ஆட்சியாளர்களை அடக்கு

முறைக்குக் கொண்டு செல்கிறது. எப்படியோ, நம்மிடை யே ஏதுவும் சரியாகப் போவது போலக் காணப்படவில்லை. ஒரே ஒரு குரல் மட்டுமே, திரும்ப ஒலிக்கிறது, முன்னிலும் உரக்க, இடைவிடாத அமளிக்கிடையே, தவிர்க்க முடியாத படி தூண்டியபடி மனித இனத்தின் ஆன்மாவை விழித் தெழும்படி வேண்டுகிறது. அது தான் தத்துவவியலாளரும், எழுத்தாளருமாகிய யாரோ பெருமகன் தல்ஸ்தோயினு டைய குரல். மிகவும் குறிப்பிடத்தக்க ஒரு மனிதர்; அவ ருடைய பேச்சு துடுக்குத்தனத்திற்கு அஞ்சாததாக இருக் கிறது. ஆனால், இதன் காரணத்தினால்... பாருங்கள், ஆர் தோடாக்ஸ் சர்ச்சில் அவர் தலையிடுகிறார்...''

அவர் லேவ் தல்ஸ்தோய் பற்றி நீண்ட நேரம் பேசினார்; அர்தமோனவ் அதை முழுமையாகப் புரிந்து கொள்ளாவிட் டாலும் கூட, பாதிரியாருடைய கரகரத்த குரலானது, இருட் டினின்றும் சிற்றலைப் போல மென்மையாக வந்தது, ஆனால் புனை சுருட்டாகக் கூறப்பட்ட, இந்த அசாதாரணமான மனிதரைப் பற்றிய விளக்க வருணனை எல்லாமே கேட் டுக் கொண்டிருந்தவனுடைய சிந்தனைகளை அவனிடமி ருந்து அப்பால் திருப்பிவிட்டது. தான் என்ன நோக்கத்திற் காகப் பாதிரியாரை அழைத்திருந்தோம் என்பதை மறக்கா விட்டாலும், அவருக்காகப் படிப்படியாகத் தான் இரக்க உணர்வுக்கு ஆட்பட்டு வருவதை பியோத்தர் அறிந்தான். நகரத்திலிருந்த சாதாரண மக்கள், கிலேப் அதிகம் தொடப் படாதவர் என்று நினைத்தனர் என்பது அவனுக்குத் தெரி யும், ஏனெனில் பிறர் பொருளைக் கவரும் ஆசைக்கு பாதிரி யார் அப்பாற்பட்டவர், ஏனெனில் எல்லாரிடமும் ஒன்று போலவே மென்மையாக நடந்து கொண்டார், ஏனெனில் எல்லாவிதமான சமயச் சடங்குகளையும், நன்றாகச் செய் தார். இவை எல்லாமே அர்தமோனவுக்கு இயற்கை போலவே காணப்பட்டது. சமய குரு நிலையின் அலுவலானது அத் தகையதாக இருந்தது. கிலேபிடம் அவனுக்கு அதிகம் கவர்ந் தது என்னவெனில், திரியோமவ் திருச்சபை குருமார்களி டம், பிரபலமான நகரத்து ஆட்களிடம் எதிர்ப்பட்டவற்றை அவர் வெறுத்ததே ஆகும். ஆனால் பாதிரியாரின் உள்ளங் கள் கண்டிப்பானதாக இருக்க வேண்டும். நுழைந்து உட் செல்வதாகவும், வெட்டுவதாகவும் கூடிய மிகவும் சிறப் பானதன்மை கொண்ட வார்த்தைகளைக் கண்டு பிடிப்ப தும், சொல்வதும் அவருடைய கடமை; பாவம் பற்றிய அச்

சத்தை வெளியேற்றுவதும், பாவத்திற்கு எதிராக வெறுப்புக் கொள்ளச் செய்வதும் அவர் கடமை. இந்த வலிமையை கிலேப் இழந்து விட்டதை அர்தமோனவ் அறிவான். பாதிரியாருடைய தயக்கமான பேச்சை சிறிது நேரத்திற்கு அவன் கேட்டுவிட்ட நிலையில், யாருடைய உணர்வுகளையோ புண் படுத்தக் கூடிய ஊசலாட்டமிட்ட வார்த்தைகள் என்பது போலக் காணப்பட்டதால், அவன் திடீரென்று அறிவித்தான்:

''ஃபாதர் கிலேப், உனக்கு நான் தொல்லை கொடுத்ததற்கான காரணம், இந்த ஆண்டு நான் நோன்பு இருக்கப் போவதில்லை என்பதை உன்னிடம் சொல்வதற்குத்தான்.''

''ஏனில்லை?'' என்று பாதிரியார் தன்னை மறந்தவராகக் கேட்டார்; எந்த பதிலும் கிடைக்காமல், தொடர்ந்து பேசினார்: ''உங்களுடைய சொந்த மனச்சாட்சிக்கு நீங்கள் கடமைப் பட்டிருக்கிறீர்கள்.''

வித்தியாசமான முற்றப் பாதுகாவலன் தீஹனுடையது போன்ற தடிப்பான மாறுபட்ட தொனியில் இந்த வார்த்தைகளை கிலேப் மொழிந்தது போல அர்தமோனவுக்குத் தென்பட்டது. ஏழையான படியால், பாதிரியாரிடம் ரப்பர் காலணி ஏதும் இருக்கவில்லை, கனத்த, விவசாயியினுடைய காலணியோடு அவர் எடுத்து வந்திருந்த பனிக்கட்டியானது, தரை மீது சேற்று மடுக்குள்ளாக உருகிப் போயிருந்தது. இந்தச் சேற்று மடுக்களுக்கு ஊடாக அவர் தனது கால்களைத் தொடர்ந்து மாறிமாறி வைத்துக் கொண்டு, கண்டனம் தெரிவிக்காதபடி பரிதாபங்கொண்டு பேசிக் கொண்டிருந்தார்:

''என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை நாம் பார்க்கும் போது, நமக்கு ஆறுதல் சொல்ல ஒன்றே ஒன்று தான் உள்ளது: வாழ்க்கை பாவமானது, அது பெருகுகின்ற போது, வெல்வதற்குச் சுலபமானதாக்குவது போல அது ஒரே மொத்தமாகச் சேர்கிறது. அது அந்த மாதிரி தான் எப்போதுமே இருக்கிறது என்பதை நான் கவனித்திருக்கிறேன்: ஓரளவுக்குப் பாவம் தோன்றுகிற போது, கதிரில் இருக்கும் நூல் போல அதைச் சுற்றி அதிகமான பாவம் சேர்ந்து கொள்கிறது. எதையேனும் பிரிப்பது என்பது மிகவும் கடினமானது; ஆனால் அது ஒன்று சேர்ந்து விட்டால், நீதியின் வாளால் ஒரே அடியில் அது பிரிந்து போய்விடலாம்...''

இந்த வார்த்தைகள் அர்தமோனவினுடைய நினைவிலே தங்கிப் போய்விட்டன. அவற்றிலே, ஓரளவுக்கு ஆறுதலை அவன் கண்டான். பாவெல்—உள்ளிடமாக இருந்தது. அர்த மோனவினுடைய எல்லா அருவருப்பான சிந்தனைகளுமே அவனைச் சுற்றி, பாராங்கல்லைப் போல கவர்ந்திழுக்காமல் இருந்திருந்தால்? திரும்பவும், தன்னுடைய பாவத்தின் ஓரளவு பங்கிற்குத் தன் மகன் கணக்குக் காட்ட வேண்டும் என்று நினைத்தான். ஓர் ஆழமான நிம்மதிப் பெருமூச்சுடன், பாதிரியாரைத் தேநீருக்கு அழைத்தான்.

உணவுக் கூடம் பிரகாசமாகவும் ஆடம்பரமானதாகவும் இருந்தது, அதனுடைய வெதுவெதுப்பான நறுமணமிக்க காற்று, உணவின் காரமான வாசனையோடு வீசியது. மேசையின் மீது கொதித்துக் கொண்டிருந்த சமோவார் தனக்கு மேலாக சிறிது சிறிதாக நீராவிக் குமிழ்களை விட்டுக் கொண்டிருந்தது. பியோத்தரின் மாமியாள், கை வைத்த நாற்காலியில் இருந்தபடி தன்னுடைய நான்கு வயதுப் பேத்திக்கு மகிழ்ச்சியாகப் பாடிக் கொண்டிருந்தாள்:

புனிதமான ஒளியின் தாய்
தனது சிறந்த பரிசுகளை அளித்தாள்:
திருத்தூதர் பியோத்தருக்கு, தெளிவற்ற
புழுக்கமான கோடை நாட்களிலே;
புனித நிகோலாவுக்கு அவளும் தந்தாள்
அலைதனை உருட்டி ஆட்சி;
இல்யாவுக்கு, தீர்க்க தரிசனமும் மெய்யறிவும்
தங்க ஈட்டி வேண்டுமெனக் கட்டளையிட்டாள்...

''ஒரு புறச்சமயி பாடல்,'' என்றார் பாதிரியார் மனக் குறையாற்றுகிற முறுவலிப்புடன், தனது இருக்கையில் நிமிர்ந்து உட்கார்ந்தபடி.

படுக்கை அறையில் பியோத்தரின் மனைவி தனது கணவனிடம் கூறினாள்:

''அலெக்ஸி திரும்பிவிட்டான். அவனை நான் பார்த்தேன். ஒவ்வொரு முறையும் மாஸ்கோவிற்குச் செல்கின்றபோது அவன் முரட்டுத்தனமாகப் போகிறான். எனக்கு அச்சமாக இருக்கிறது...''

அந்தக் கோடையில், நதால்யாவினுடைய வெள்ளைக் கழுத்திலும், மென்மையான இளஞ்சிவப்புக் கன்னங்களிலும் சிவப்புப் புள்ளிகள் தோன்றியிருந்தன. ஊசி குத்தியது போல அவை மிகச் சிறியனவாக இருந்தன; ஆனால் அவளை அவைச் சங்கடத்திற்குள்ளாக்கின, வாரத்தில் இரு முறை

படுக்கைக்குச் செல்லும் முன்பு, தோலின் மீது தேன் நிற மான புண்ணாற்று மருந்து ஒன்றினை ஊக்கந்தளராதபடி தேய்த்துக் கொள்வாள். கண்ணாடிக்கு முன் அமர்ந்து, அவளது வெறுமையான முழங்கால்கள் முன்னும் பின்னும் போய்வந்த படியும், அவளது உயர்ந்த புடைத்த மார்புகள் அவளது நகர்வில் அலைந்தபடியும் இருக்க அக்கணத்தில் அவள் சுறுசுறுப்பாக இருப்பாள். பியோத்தர் தனது கைகளை மடித்துத் தனது தலைக்குப் பின்னால் வைத்து படுக்கையில் மல்லாந்து கிடந்தான், அவனது தாடி கூரையை நோக்கி நீட்டிக் கொண்டிருந்தது. பக்கவாட்டில் தனது மனைவியைப் பார்த்தபடி, ஏதோ ஒருவித எந்திரம் போல அவள் தோற்ற மளித்தாள் என்றும், அவளுடைய புண்ணாற்று மருந்து வேகவைக்கப்பட்ட மீனைப் போல மணத்தது என்றும் தீர்மானித்தான். உள்ளார்வத்தோடு வழிபாட்டினைக் கிசுகிசுத்த பிறகு, நதால்யா படுக்கைக்கு வந்த போது, தனது நலமார்ந்த உடலின் பழக்கத்திற்குக் கீழ்ப்பட்டபடி, தூங்குவது போலப் பாசாங்கு செய்த தனது கணவனிடம் தன்னைத்தானே ஒப்படைத்தாள்.

''ஒரு மைய உட்புரி,'' என்று அவன் நினைத்தான். ''எனக்கு கூட—ஒரு கதிர்தான். திரும்பிக் கொண்டும் முறுக்கிக் கொண்டும் யார் நூற்றுக் கொண்டிருப்பது? தீஹன் சொல்கிறான்: மனிதன் நூற்கிறான், சாத்தான் சாக்குத் துணியை நெய்கிறான். எல்லா அடி முட்டாள் களிலும்!''

அலெக்ஸி ஆர்வத்தோடு பெருக்கிக் கொண்டிருந்த தொழிலானது, நதிக்கு அப்பால் மணற்குன்றுகளின் நெடுகிலும் பரவியது. குன்றுப் பகுதிகள் தங்களுடைய பொன் நிற நிறத்தை இழந்துவிட்டன. மைக்காவின் வெள்ளி போன்ற மினுக்கம் மறையத் தொடங்கியது, படிகக்கல்லினுடைய ஒளி தரும் முனைகள் மங்கத் தொடங்கின. மாறிக் கிடக்கிற மணல் நசுங்கி உறுதியாயிற்று. ஒவ்வோர் ஆண்டும், வசந்தமானது பச்சைப் பசேலென்ற அளவு மீறிய செழிப்பு வாய்ந்த களைகளை வளரச் செய்தது. மிதிபட்ட பாதைகள் நெடுகிலும், குறுஞ்செடிவகைகளும் தொங்கு காதுடைய புல்லி தறித்த புல்வகைகளும் வளர்ந்தன. ஆலையைச் சுற்றிலும் பழ மரங்கள் புதிதாக வளர்ந்திருந்தன. இலையுதிர் காலத்தில் விழுந்த இலைகள் மண்ணைச் செழிப்பாக்கின. அபாயங்களையும், அக்கறைகளை

யும் கொண்ட சூழலைச் சுவாசித்தபடி, ஆலை முன்னிலும் அதிகமாக முணுமுணுத்தது. நூற்றுக் கணக்கான கதிர் களும், நூற்றுக் கணக்கான தறிகளும் சுழல, காலை முதல் இரவு வரை எந்திரங்களின் இடைவிடாத மூச்சுத் திணறலும், ஆலை முழுவதும் சுறுசுறுப்பாகக் கேட்ட இரைச்சலும் நிறுத்தி வைக்கப் படாதபடி கேட்டது. இவை எல்லாவற் றுக்குமே தானே எசமானன் என்று நினைப்பது மகிழ்ச்சி யானதாக இருந்தது—பெருமை ஏற்படுத்துகிற வியப்பூட்டு கின்ற மகிழ்ச்சி.

ஆனால் அர்தமோனவுக்குச் சோர்வு ஏற்படுகின்ற நேரம் மிகவும் அடிக்கடி ஏற்படத்தான் செய்தது. தன்னு டைய குழந்தைப் பருவத்தைச் செலவிட்ட, தெளிவாக அமைதியோடு பாயும் சிறிய ராத் நதி, விவசாயிகளின் எளிமையான வாழ்க்கை, கிராமப்புறம் இவற்றை நினைத் துப் பார்க்கத் தொடங்கிவிடுவான். எதிர்பாராத, ஆனால் இரக்கங் காட்டாத பிடிக்குள்ளாக, தான் மாட்டிக் கொண் டதாக, அது அவனை விருப்பத்துடன் திருப்பி முறுக்கி விட்டதாக அவன் நினைப்பான்; நாள் முழுக்கக் கேட்ட இரைச்சல், அவனது மூளையில் சேர்ந்தபடி, தொழிலோடு தொடர்பு கொண்ட எதையும் சிந்திப்பதற்கு இடந்தராத படி; ஆலையினுடைய புகைப்போக்கிகளினின்றும் வெளி யேறிய சுருள் புகையானது சுற்றியிருந்த உலகம் முழுவ தையும் துயரார்ந்த மனத்தளர்ச்சியுடனும் சோர்வுடனும் நிழல் படிய வைத்தது.

அத்தகைய மணிகளும் நாட்களும் கொண்ட மன நிலையில், தொழிலாளர்களை அவன் அதிகமாக விரும்ப வில்லை. அவர்களுடைய வலிமையானது மெதுவாக மறைந்து கொண்டிருப்பது போல அவனுக்குக் காணப்பட் டது; விவசாயிக்குரிய உழைப்பாற்றலை அவர்கள் இழந்து கொண்டிருந்தார்கள், சீக்கிரத்திலேயே பெண்களுக்குரிய எரிச்சலுடன் பாதிக்கப்பட்டார்கள்; எல்லா நடவடிக்கை களுக்கு அப்பாலும் உணர்ச்சி வயப்பட்டவர்களாகவும், பேச்சிலே துடுக்குத்தனம் கொண்டவர்களாகவும் காணப் பட்டனர். ஊதாரித்தனம் மற்றும் நிலையற்றதன்மை இவற்றின் புதிய கூறுகள் அவர்களுக்கு மத்தியிலே தோன்றி யிருந்தன. பழைய நாட்களில், பியோத்தருடைய அப்பா உயிரோடு இருந்த போது, அவர்கள் மிகவும் நட்பிணக்கம் கொண்டவர்களாக இருந்தார்கள். அவ்வளவு அதிகம் அவர்

கள் குடித்ததில்லை. இப்போது ஒவ்வொன்றும் சிக்கலுடையதாகி விட்டது. தொழிலாளர்கள் ஆர்வத்தைப் பெற்றிருந்தார்கள், இன்னும் புரிந்து கொள்ளவும் செய்தார்கள் என்பது போலக் காணப்பட்டது; ஆனால் தங்களுடைய வேலையைப் பற்றிக் மிகக் குறைவான அக்கறையே எடுத்துக் கொண்டார்கள், மற்றவர்களைப் பற்றிக் குறைவாகவே சிந்தித்தார்கள். மக்களைப் பார்ப்பதில் மகிழ்ச்சியற்ற, அற்பக் கோழைத்தனமான வழிகளை அவர்கள் எல்லாருமே பெற்றிருந்தார்கள். இளைஞர்கள் குறிப்பாகப் போக்கிரிகளாகவும், மரியாதை அற்றவர்களாகவும் இருந்தார்கள். இளமையின் விவசாயிக்குரிய எல்லாவித உழைப்பாற்றலையும் ஆலை மிகவும் விரைவாகக் கொன்றுவிட்டது.

உலையூட்டி வோல்கவை மாவட்ட மனநோய் மருத்துவமனைக்கு அனுப்பிவைக்கப்பட வேண்டி இருந்தது. இன்னும், அவன் ஆலையில் காணப்பட்டு ஐந்து ஆண்டுகளே ஆகியிருந்தன, நல்ல தோற்றமும், உற்சாகமும் கொண்ட மனிதனாக, அருமையான மனைவியுடன், கிராமப்புறத்தில் ஏற்பட்ட தீவிபத்தில் அவர்களது வீடு சாம்பலாகிப் போனதால் அங்கிருந்து துரத்தப்பட்டு வந்தனர். ஓராண்டுக்குப் பிறகு, அவன் மனைவி தான் தோன்றித்தனமாக விளையாடத் தொடங்கியதால், வோல்கவ் அவளை அடிப்பதற்குத் தொடங்கியிருந்தான். அதன் காரணமாக அவள் காச நோயாளி ஆனாள். இப்போது அவர்கள் இருவருமே சென்றுவிட்டனர். விரைவான வீழ்ச்சி கொண்ட அத்தகைய வழக்குகள் பலவற்றை அர்தமோனவ் ஊன்றி கவனித்திருக்கிறான். ஐந்து ஆண்டுகளில், நான்கு கொலைகள் நடந்திருந்தன— இரண்டு குடிவெறிச் சண்டையிலும், ஒன்று பழிவாங்குதலிலும், மற்றொன்று பொறாமையாலும் செய்யப்பட்டது: ஒரு மூத்த நெசவாளி பின்னல் வேலை செய்யும் பெண்ணைக் குத்திக் கொன்றான். பலமான காயங்களோடு முடியக் கூடிய, தீவிர வாக்குவாதங்கள் அடிக்கடி நடந்தன.

இவை எல்லாவற்றாலும் அலெக்ஸி முற்றிலும் பாதிக்கப்படாதது போலவே காணப்பட்டான். பொதுவாகவே, புரிந்து கொள்வதற்கு மிகவும் சிரமமானவனாக அவன் வளர்ந்து கொண்டிருந்தான். ஆலையைச் சேர்ந்த குழந்தைகளுக்காக சரியானத் திறமையோடும், மகிழ்ச்சியோடும் வில்களும், ஊதிகளும் தயாரித்த, இன்னும் அவர்களுக்காகச் சவப்பெட்டிகளில் ஆணிகளும் அறைந்த சின்னஞ்சிறு

வேலைக்காரியும் தச்சனுமான ஸெரஃபீம் அவனுடைய நிலைமையில் ஓரளவுக்கு இருந்தான். எல்லாமே நல்லபடியாகப் போய்க் கொண்டிருந்தன, எப்போதுமே நன்றாகச் செல்லும் என்ற உறுதியுடன், அலெக்ஸினுடைய பருந்துக் கண்கள் சுடர்விட்டுப் பிரகாசித்தன. கல்லறையில் ஏற்கெனவே அவன் மூன்று சிறிய மேடுகளைப் பெற்றிருந்தான். ஒரே ஒரு மகன் மட்டும், மிரோன், வாழ்க்கையோடு விடாப்பிடியான பிடிப்பைக் கொண்டிருந்தான். நீண்ட எலும்புகளாலும், குருத்தெலும்புகளாலும் அருவருப்பாகவும், கவனக் குறைவாகவும் உருவாக்கப்பட்ட மிரோனின் ஒவ்வொரு எலும்பு மூட்டுக்களுமே சொடுக்கு விடுவது போல உரத்த நொறுங்குகின்ற ஒலி எழுப்பின. தன்னுடைய கைமுட்டியைக் கடுமையான முறையிலே உடைக்கின்ற பழக்கத்தை அவன் பெற்றிருந்தான். பதின்மூன்று வயதில், அவன் ஏற்கெனவே கண்ணாடி அணிந்திருந்தான், அது அவனது நீளமான வளைந்த மூக்கை ஓரளவு குட்டையாகக் காட்டியது, அவனது கண்ணில் மகிழ்ச்சியற்ற ஒளியின் நிழல் படிந்தது. தனது கையில் ஒரு புத்தகமில்லாமல் அவன் எங்குமே சென்றதில்லை, தன்னுடைய இடத்தைக் காட்டுவதற்காக அவனது விரல் பக்கங்களுக்கிடையே நுழைந்து கிடக்கும், ஆகவே புத்தகமும் கையும் ஒன்று சேர்ந்து வளர்ந்தது போலக் காணப்படும். தன் அப்பாவிடமும் அம்மாவிடமும் அவன் சமமாகவே-அதிகமாகவே பேசினான், அவர்களிடம் அவன் பேசக்கூட இல்லை, ஆனால் விவாதித்தான். அதை அவர்கள் விரும்புவது போலக் காணப்பட்டது. தனது மருமகனுடைய வெறுப்பைத் தெளிவாகப் புரிந்த பியோத்ருக்கு, அதைப் போலவே அவனும் வெறுக்க முனைந்தான்.

அலெக்ஸியினுடைய வீட்டில் ஒவ்வொன்றும் முனைப்பற்றதாகவும், ஆதாரமற்றதாகவும் இருந்தது. மூத்த அர்தமோனவுக்கு, தனது சொந்த வாழ்க்கைக்கும் தனது சகோதரனுடைய வாழ்க்கைக்கும் இடையே இருந்த வித்தியாசமானது ஏறத்தாழ ஒரு துறவி மடத்திற்கும், சந்தையில் இருந்த காட்சியரங்கத்திற்கும் இடையே இருக்கக் கூடியது போல இருந்தது. நகரத்து மக்கள் மத்தியிலே அலெக்ஸியும் அவன் மனைவியும் நண்பர்களைப் பெற்றிருக்கவில்லை; ஆனால் அவர்களுடைய குறுகிய அறைகள்—பழைய சிற்றழகுப் பொருள்களாலும், தட்டுமுட்டுச்

சாமான்களாலும் நெருங்கிக் கிடந்த முறையான வைப்பறைகள்—மிகவும் சந்தேகத்திற்கிடமான தன்மை கொண்ட ஆட்களால் இடங்கொள்ளாது நிறைந்து இருக்கும்: ஆலையின் மருத்துவர், யாக்கவ்லெவ், தனது தங்கப் பற்களுடன், கெட்ட நோக்கங் கொண்ட, கேலி செய்யும் மனிதன்; உரத்த வாய்கொண்ட மெக்கானிக் கோப்தெவ் ஒரு குடிகாரனும், சூதாடியும் ஆவான்; மிரோனின் ஆசிரியர், மேற்படிப்புக்குச் செல்வதினின்றும் போலீசால் நிறுத்தி வைக்கப்பட்ட ஒரு மாணவன், அவனுடைய சப்பட்டை மூக்கு மனைவி, புகைப்பிடித்தபடி கித்தார் வாசித்தாள். மனிதச் சீரழிவின் எல்லா விதங்களிலும் கூட பிற ஆட்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லாருமே ஒரே மாதிரியான வெறுப்போடு திருச்சபை குருமார் தொகுதியினையும், பணியாளர் தொகுதியினையும் வைதுரைத்தார்கள், அவர்களில் ஒவ்வொருவருமே தங்களுடைய சொந்தப் புத்திசாலித்தனம் பற்றி மனநிறைவு கொண்டார்கள். இந்த ஆட்கள் எல்லாம் மெய்யானவர்கள் இல்லை—இதை அர்தமோனவ் தனது ஒவ்வொரு நூலிழை அமைப்பிலும் உணர்ந்தான். மிகப் பெரியதும், முக்கியமான வியாபாரத்தின் பாதி உரிமையாளனான, தனது தம்பியால் என்ன பயன் என்பதை அவனால் அறிந்து கொள்ள முடியவில்லை. அவர்களுடைய உரத்த பேச்சைக் கேட்டபடி, பாதிரியாருடைய புகாரை அவன் நினைவு கூர்வான்:

''அவர்கள் அதிகம் தேடுகிறார்கள், ஆனால் எது அத்தியாவசியமானதோ அதை அல்ல.''

அவன் தனக்குத்தானே கேட்டுக் கொள்ளவில்லை: பிறகு, எது அத்தியாவசியமானது? எங்கே சாராம்சம் அடங்கியிருந்தது? அவன் அறிவான்: அது தொழிலில் அடங்கியிருந்தது.

அவனது சகோதரனுக்கு விருப்பமானவனாக அந்த ஆரவாரமிக்க நாடோடி கோப்தெவ் காணப்பட்டான். அந்த மெக்கானிக் எப்போதுமே குடித்திருந்தவனாகக் காணப்பட்டான். அவனைச் செலுத்துகின்ற சக்தி ஒன்று இருந்தது, மேலும் ஒரு வகையில், ஒருவித ஞானம். மற்ற எவரைக் காட்டிலும் மிகவும் அடிக்கடி அவன் சொல்வதுண்டு:

''அவை எல்லாமே முட்டாள்தனம், சுத்தமான தத்துவம்! தொழிற்சாலை— அது தான் விஷயம்! எந்திரங்கள்!''

ஆனால், கோப்தெவிடம் திருச்சபைக்கு முரணான கோட்பாடும், அழிவார்ந்த அம்சத்தின் மையம் இருப்பதாகவும் மறந்த அர்தமோனவ் சந்தேகித்தான்.

''ஓர் ஆபத்தான ஆசாமி,'' தனது சகோதரனிடம் அவன் கூறினான். பெரிதும் வியப்புற்றது போல அலெக்ஸி காணப்பட்டான்:

''கோப்தெவா? முட்டாள்தனமானது! அவன் அருமையானவன், திறமைவாய்ந்தவன், கடின உழைப்பாளி, புத்திசாலி! அவனைப் போல ஆயிரக்கணக்கான பேர் நமக்குத் தேவைப் படுகிறார்கள்!''

கொக்கரித்தபடி, அவன் தொடர்ந்தான்:

''எனக்கு ஒரு மகள் இருந்திருந்தால், அவனை எனது மருமகனாக்கிக் கொண்டிருப்பேன், தொழிலோடு அவனை இணைப்பேன்!''

வாட்டங்கொண்டபடி பியோத்தர் அப்பால் திரும்பினான். கூட்டத்தினர் சீட்டு விளையாடிக் கொண்டிராத போது, தனது விருப்பமான கை வைத்த நாற்காலியில், படுக்கை போல மென்மையாகவும், அகலமாகவும் இருந்ததில், அவன் தனிமையில் அமர்ந்து தனது காதை இழுத்துவிட்டுக் கொண்டான். அந்த ஆட்கள் எவரோடும் அவனால் ஒத்துப் போக முடியவில்லை, அவர்கள் ஒவ்வொருவரோடும் விவாதம் செய்யவே விரும்பி இருக்கிறான். இது அவர்கள் எல்லாருமே மூத்த பங்காளியான அவனை மதிக்கவில்லை என்பதால் மட்டுமல்ல, இவற்றோடு வேறு பிற காரணங்களும் இருந்தன; அவற்றை அவன் அவர்களிடம் விளக்கிச் சொல்ல முடியாவிட்டாலுங்கூட, இந்தப் பிற காரணங்கள், அவனுக்கும் கூட விளங்காதனவாகவே இருந்தன. அபூர்வமாக மட்டுமே, செயற்கையான முறையில், ஒரு வார்த்தையில் கூறுவான்:

''அன்றொரு நாள் ஒரு குறிப்பிட்ட பிரபுவைப் பற்றி கிலேப் பாதிரியார் என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார்...''

திடீரென்று கோப்தெவ் அவனைப் பார்த்துக் குரைத்தான்:

''அந்தப் பிரபுவைப் பற்றி அவர் என்ன உங்களிடத்தில்? உங்களிடமா, உங்களிடமா? விவசாய ருஷ்யாவினுடைய கடைசிப் பெருமூச்சு அந்தப் பிரபு...''

இம்மாதிரியாகக் கத்திக் கொண்டு, மிகவும் மரியாதைக் குறைவான வகையில் பியோத்தரின் திசையில் தனது

விரலைக் குத்திக் காட்டினான். நாடோடியாய்த் திரியும் வீடற்ற ஜிப்சிகளை ஒத்திருந்த, கேட்டுக் கொண்டிருந்த மற்ற எல்லாரும், கோப்தெவ் போலவே காணப்பட்டார்கள்.

''விட்டில் பூச்சிகள்,'' பியோத்தர் நினைத்துக்கொண்டான். ''சுரண்டிப் பிழைப்பவர்கள்.''

ஒரு நாள், அவன் சொன்னான்:

'''காட்டிற்கு ஓடிப் போவதற்கு தொழில் ஒன்றும் கரடி அல்ல' என்பது முற்றிலும் தவறானது. வியாபாரம் ஒரு கரடிதான், அது ஏன் ஓடிப் போக வேண்டும்? அது நம்மைப் பற்றி நிற்கிறது, அது நம்மை இறுக்கமாகத் தழுவுகிறது. தொழில்தான் ஒரு மனிதனுக்கு எசமானன்.''

''கேளுங்கள், கேளுங்கள்,'' என்று குரைத்தான் கோப்தெவ். ''இத்தகைய அறிவை வேறு எங்கே ஒருவர் கேட்க முடியும்? யாரிடமிருந்து? இதோ, இதில் தான் நமக்கு ஆபத்துத் தெரிகிறது!''

சகோதரன் அலெக்ஸி கிண்டலோடு கோரினான்:

''உன்னுடைய கருத்துகளை நீ எங்கிருந்து பெற்றாய் —தீஹனிடமிருந்தா?''

பியோத்தர் மிகவும் புண்பட்டுப் போனான். வீட்டில், தன் மனைவியிடம் அவன் கூறினான்:

''உன்னுடைய கண்ணை எலேனா மீது வைத்திரு. அந்த நாடோடி கோப்தெவ் அவளைச் சுற்றி வட்டமிடுகிறான். அலெக்ஸியே அவனுக்கு எல்லாமும். அவனுக்குப் பிடிப்பதற்கு எலேனாவும் மிகவும் அருமையானவள். அவள் அவனுக்குப் பொருத்தம் இல்லை. அவளுக்கு ஒரு மாப்பிள்ளையைத் தேட வேண்டும்.''

''இங்கே அவளுக்குப் பொருத்தமான மாப்பிள்ளைகளே கிடையாது,'' நதால்யா சிந்தனை வயப்பட்டபடி கூறினாள். ''நாம் நகரத்தில் தான் முயற்சிக்க வேண்டி இருக்கிறது. ஆனாலும் அவளுக்கு இவ்வளவு சீக்கிரமாகவா...''

''அவர்கள் தொல்லைகளைத் தருவார்கள்,'' அர்தமோனவ் திருப்பிச் சொன்னான். அவனுடைய வார்த்தைகள் அவன் மனைவியைக் கிளர்ச்சியடையச் செய்தன.

வியாபாரப் பொறுப்புகளின் குறுகிய வட்டத்தினின்றும் விலகிப் போய், சற்று நேரத்திற்குச் சுதந்திரமாக இருக்க அவன் முயற்சிக்கின்ற போது, தன்னைச் சுற்றிலுமிருக்கின்ற மக்கள் மீதான வெறுப்பு, தன்னைப் பற்றிய மன

றைவின்மை என்ற கனத்த பனிமூட்டத்தால் தான் திரும் பும் சுற்றி வளைக்கப் பட்டிருப்பதை அவன் காண்பான். பிரகாசமான புள்ளி ஒன்றே ஒன்று இருந்தது—தன் மகன் மீதான அவனது அன்பு; இந்த அன்பு கூட ஒளிமங்கியது, நிகனோவ் பையனால் நிழல் மறைக்கப்பட்டது, அல்லது, ஒருவேளை, கொலைக் குற்றத்தின் சுமையால் அன்பு பூமிக்கும் கீழ் மட்டத்திற்கு விரட்டிச் செல்லப் பட்டிருக் கலாம். இல்யாவை கவனிக்கிற போது, அவனிடம் சொல்ல வேண்டும் என்ற உந்துதல் ஏற்படுவதை சில நேரங்களில் அவன் உணர்ந்திருக்கிறான்:

"நான் என்ன செய்தேன் என்பது உனக்காக ஏற்பட்ட அச்சத்தால்தான்."

தன் மகனைப் பற்றிய பயமானது அந்தக் கொலைக்கு முன்னர் திடீரென்று ஏற்பட்டிருந்தது தான் என்பதை மறைக்கக் கூடிய அளவுக்கு அவனுடைய மனம் போது மான திறமை பெற்றிருக்கவில்லை; ஆனால் இந்த அச்சத் தினால் மட்டுமே அவன் பாவமன்னிப்புப் பெற முடியும், எவ்வளவு சிறிதாக இருந்தாலும், என்பதை பியோத்தர் அறிந்திருந்தான். இன்னும், இல்யா பக்கத்தில் இருந்த போது, நிகனோவ் என்ற பெயரைக் குறிப்பிடுவதைக் கூடத் தவிர்த்தான், ஒரு வீர சாதனை என்பதை அவன் படம் பிடித்துக் காட்ட விரும்பி அந்தக் குற்றம் பற்றி வாய் தவறி ஏதேனும் சாடையாகக் கூடச் சொல்வது நிகழ்ந்து விடக் கூடாது என்று எண்ணினான்.

இல்யா வேகமாக வளர்ந்து கொண்டிருந்ததை, ஆனால் வித்தியாசமான திசையில், பியோத்தர் பார்த்தான். பையன் மிகவும் அடக்கமானவனாக வளர்ந்து கொண்டிருந்தான். தன் தாயாரிடம் மிகவும் நாகரிகமாகப் பேசினான். மேலும் இப்போது பள்ளியில் சேர்ந்து இருந்த யாக்கவைத் திட்டு வதையும் விட்டு விட்டிருந்தான், தனது இளைய சகோதரி நத்யானாவுடன் துரத்திப் பிடித்து விளையாட விரும்பி னான், எலேனாவுடன் சாதாரண கேலிப் பேச்சுக்கு மேல் செல்வதில்லை. ஆனால் அவன் சொன்னது, செய்தது ஆகிய எல்லாவற்றிலுமே மனவேறுபாடு கொண்ட, வேறு ஏதோ பொருள்களோடு சம்பந்தப்பட்ட ஒன்று இருந்தது. பாவெல் நிகனோவ் இடத்தை மிரோனால் பெற்றுக் கொண்டான். அந்த இரு பையன்களுமே பெரும்பாலும் எப்பொழுதும் ஒன்றாகவே இருந்து, இடையறாதபடி பேசிக் கொண்டிருந்

தனர். அவர்கள் ஒன்றாகவே வாசித்தார்கள், படித்தார்கள், பழத்தோட்டத்தில் கோடைக்கால வீட்டில் இருந்தார்கள். இல்யா வீட்டில் இருப்பது அரிதாகத்தான் இருந்தது. காலையில், தேநீர் வேளையில் சற்று நேரம் காணப் படுவான், பிறகு நகரத்தில் தன் சித்தப்பாவின் வீட்டிற்குப் புறப்பட்டு போய் விடுவான், அல்லது மிரோனுடனும், காட்டு ரோசா புதர் போல முள்ளாய், உலாவித் திரிகின்ற நடை பாணியுடன் நையாண்டி காட்டுகிற கண்களுடன், முனைந்து மேற் செல்கிற கருநிறமான கொரித்ஸ்வேதவ் என்ற பையனுடனும் காட்டிற்குள்ளாக மறைந்து விடுவான்.

''சே, சே! இப்படிப்பட்ட ஒரு யூதப்பூச்சியுடன் நட்பா, உன்னால் எப்படிச் செய்ய முடிகிறது?'' என்று வெறுப்போடு தன் மகனிடம் நதால்யா கேட்டாள். பையனுடைய அருமையான புருவங்கள் வளைவதை பியோத்தர் கவனித்தான்.

''யூதப்பூச்சி என்பது கேவலமான சொல், அம்மா. பாதிரியார் கிலேபினுடைய மருமகன் அலெக்சாந்தர் என்பது உனக்கு மிக நன்றாகத் தெரியும். ஆக அவன் ஒரு ருஷ்யன். பள்ளியில் அவன் வகுப்பில் முன்னணியில் இருக்கிறான்...''

தாய் இறுமாப்போடு செறுமினாள்:

''யூதப்பூச்சிகள் எப்போதுமே முன்னுக்குத் தள்ளிக் கொண்டு செல்வார்கள்.''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' பையன் திரும்பக் கேட்டான். ''நகர் முழுவதிலுமே நான்கு யூதர்களே இருக்கிறார்கள், மருந்துக் கடைக்காரரைத் தவிர அவர்கள் எல்லாருமே ஏழைகள்.''

''ஆமாம், நாற்பது சிறிய யூதப்பூச்சிகள். மேலும் நீ வோர்கோரத்துக்குச் சென்றால், அந்த இடம் முழுக்கவும், சந்தையிலும் அவர்களே இருக்கிறார்கள்...''

இல்யா வெறுப்புணர்ச்சியோடு திரும்பச் சொன்னான்:

''யூதப்பூச்சி என்பது ஒரு கெட்ட வார்த்தை.''

பிறகு தாயார் தன்னுடைய கரண்டியைக் கின்னத்திலே தட்டி, கோபத்தோடு அவனைப் பார்த்துக் கத்தினாள்:

''எனக்குச் சொல்லிக் கொடுப்பதற்கு நீ முயற்சித்துக் கொண்டிருக்கிறாயா? எதைப் பற்றி நான் பேசிக் கொண்டிருக்கிறேன் என்பது எனக்கு என்ன, தெரியாதா? எனது

மூலையில்தான் நான் கண்களைப் பெற்றிருக்கிறேன். அந்த சின்னஞ் சிறிய, இச்சகம் பேசுபவன் ஒவ்வொருவரை யும், தீஹனைக் கூட, சுற்றி வர முயற்சி செய்வதை நான் பார்க்கத்தான் செய்கிறேன், ஆகவேதான் கூறுகிறேன்: அவன் யூதப்பூச்சிபோல ஒரு மழுப்புப் பேச்சுக்காரன். அவர் கள் ஆபத்தானவர்கள். அம்மாதிரி இச்சகம் பேசிய ஒரு வனை எனக்குத் தெரியும், ஒரு முறை...''

''அது போதும்!'' என்று குறுக்கிட்டான் பியோத்தர் கண்டிப்புடன். கண்ணீர் மல்க, அவள் புகார் செய்தாள்:

''என்ன இது, பியோத்தர் இல்யீச்? ஒருவர் ஒரு வார்த் தை கூடப் பேச முடியவில்லை!''

புருவங்களைச் சுழித்தபடி இல்யா அமைதியாக உட் கார்ந்தான். அவனது தாயார் அவனை நினைவு படுத்தி னாள்:

''இந்த உலகத்திற்கு உன்னைக் கொண்டு வந்தவள் நான்.''

''நன்றி,'' என்றான் இல்யா, தன்னுடைய காலிக் கோப்பையை அப்பால் தள்ளிவிட்டான். பக்கவாட்டில் தந்தை அவனைப் பார்த்து விட்டு, தனது காதை இழுத்து விட்டுக் கொண்டு, கேலியாக மெல்ல நகைத்தான்.

தனது மனைவியினுடைய குரலில் இருந்து, ஒரு சமயம் மண்ணெண்ணெய் விளக்குகளைக் கண்டு அவள் பயப்பட் டது போல, மிக அண்மையில், அவளிடம் ஒல்கா கொடுத் திருந்த புது மாதிரியான காஃபி பாத்திரமானது, என்றாவது ஒரு நாள் வெடித்துப் போகும் என்பதில் அவள் உறுதியாக இருந்ததால், தன் மகனுக்காக அவள் பயப்பட்டாள் என் பதை பியோத்தர் அறிந்தான். அவனுங் கூட, தன் மகனுக் காகத் தாயினுடைய நகைப்புக்கிடமான அச்சத்தைப் போ லவே அநுபவித்தான். பையனைப் புரிந்து கொள்வது மிக வும் சிரமமானதாக இருந்தது. அவர்கள் மூன்று பேருமே புரிந்து கொள்ளச் சிரமமானவர்களாக இருந்தார்கள். முற் றப் பாதுகாவலன் தீஹனிடம் தாங்கள் மகிழ்ச்சியுறுமாறு அவர்கள் என்ன கண்டார்கள்? மாலை நேரத்தில் வெளி வாயிலில் அவனோடு உட்கார்வார்கள், முற்றப் பாதுகாவ லனுடைய அறிவுறுத்தும் குரல் உயர்வதை மூத்த அர்த மோனவால் கேட்க முடிந்தது:

''அது உண்மை. நீ குறைவாக எடுத்துச் சென்றால், நடை உனக்குச் சுலபமாக இருக்கும். ஆனால் மூளை

களைப் பொருத்த மட்டில், நீங்கள் அதை நம்பக்கூடாது. வானத்தில் மூலைகள் எங்ஙனம் இருக்க முடியும்? அங்கே சுவர்களே கிடையாது.''

பையன்கள் சிரிப்பார்கள். இல்யாவினுடைய சிரிப்பானது மென்மையாகவும், சுருக்கமாகவும் இருந்தது, மிரோனுடையது வறட்சியாகவும், எரிச்சல் தருவதாகவும் இருந்தது. மற்றவர்களை விட கொரித்ஸ்வேதவ் குறைவாகவே சிரித்தான்; தனது நண்பர்களைச் சரிக்கட்டி அவன் எப்போதுமே உறுதியோடு சிரிப்பை நிறுத்தி விடுவான்:

''நிறுத்துங்கள், இது கேலிக்குரியதே அல்ல!''

திரும்பவும் தீஹனுடைய விளக்கமற்ற அறிவுரையானது சோம்பேறித்தனமாகத் தொடரும்:

''பையன்களே, மனிதர்களைப் பற்றி நீங்கள் இன்னும் அதிகம் படிக்க வேண்டும். எந்த வகையிலும் மனிதன் என்பவன் யார்? அவனுக்காக என்ன வேலை இருக்கிறது, அவனுடைய எதிர்காலம் என்ன? நீங்கள் சிந்திக்க வேண்டியதெல்லாம் இது தான். அதன் பிறகு வார்த்தைகள். அவை மேன்மேலும் படிக்கப்பட வேண்டும். நீங்களும் கூட சில மென்மையான சொல்லைப் பயன்படுத்த விரும்ப வேண்டும். நீங்கள் சிந்திப்பதை நிறுத்தினால் மட்டுமே, எதற்குமே, எப்போதும் ஒரு முடிவில்லாது போகும்!''

பியோத்தருக்கு மிகவும் அறிமுகமான தன்னுடைய பழைய பழமொழியை தீஹன் திரும்பவும் ஒப்பிப்பான்:

''மனிதன் நூலை நூற்கிறான், சாத்தான் சாக்குத்துணி நெய்கிறது, முடிவில்லாதபடி அது அங்ஙனமாகத்தான் போகிறது.''

இளைஞர்கள் திரும்பவும் சிரிப்பார்கள், அவர்களோடு தீஹனும் உரக்கச் சிரிப்பான். பிறகு அவன் பெருமூச்சு விடுவான்:

''ஷூம், பிரகாசமான கண்கள்! புத்திகூர்மையானவை, ஆனால் உருவில் சிறியவை!''

மாலை நேரத்து நிழல்களில் பையன்கள் சின்னவர்களாகக் காணப்பட்டார்கள், சூரிய ஒளியில் காட்டிலும் மிகவும் சிறுத்துப் போனார்கள், அதே வேளை தீஹன் உப்பியவனாய்க் காணப்பட்டான், பகல் நேரத்தைக் காட்டிலும் இன்னும் மிக முட்டாள்தனமாகப் பேசினான்.

தீஹனுடன் கொண்ட இல்யாவின் உரையாடல்கள், முற்றப் பாதுகாவலனிடம் அர்தமோனவ் கொண்டிருந்த

வெறுப்பை ஆழப்படுத்தியது, அதே நேரம், வெறுமையான காரணமற்ற அச்சம் அவனை உள்நின்று இயக்குவித்தது. தன் மகனிடம் அவன் வினவினான்:

''தீஹனிடத்தில் நீ என்ன கண்டாய்?''

''அவர் ஓர் ஆர்வமூட்டக்கூடிய ஆள்.''

''அவனைப் பற்றி ஆர்வமூட்டுவது என்ன இருக்கிறது? அவனுடைய முட்டாள்தனம்?''

இல்யா அமைதியாகப் பதிலளித்தான்:

''முட்டாள்தனத்தைக் கூடத்தான் புரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.''

இந்தப் பதில் அர்தமோனவை மகிழ்வித்தது.

''அது உண்மைதான். உலகமே முட்டாள்தனத்தால் நிறைந்திருக்கிறது.''

ஆனால் கண நேரத்திற்குப் பிறகு அவன் உணர்ந்தான்:

''தீஹனுடைய அதே வார்த்தைகள்!''

மிகவும் சிறப்பான இயல்பு கொண்ட நம்பிக்கைகளை அவனுக்குள்ளாக அவன் மகன் ஏற்படுத்தினான். இல்யா சன்னலில் நின்ற போது, அவனுடைய கைகள் பைக்குள் ளாகத் திணிக்கப் பட்டிருந்தன, முற்றத்தில் இருந்த தொழி லாளர்களைக் கவனித்தபடி அவன் மெதுவாகச் சீட்டியடித் தான்; தறிக் கூடத்தின் வழியாக அவன் அவசரமில்லாமல் சென்ற போது, அல்லது குடியிருப்பை நோக்கி அவனது மெல்லிய நடையைத் திருப்பிய போது, தந்தை மனநிறை வோடு நினைத்துக் கொள்வான்:

''அவன் ஓர் அக்கறையுள்ள எசமானனாக இருப்பான். மேலும் அது என்னைப் போல இருக்காது, அவன் தொழி லுக்கு வந்து விடுவான்—இணைக்கப் பெற்றிருத்தலும் விலகிச் செல்லலும்.''

பையன் அவ்வளவு அதிகம் பேசாதவனாக இருந்தது சிறிதளவு ஏமாற்றம் தருவதாக இருந்தது. அவன் பேசிய பொழுது, அது சொற்செறிவுடையதாக இருந்தது, உரை யாடலைத் தொடர வேண்டும் என்ற விருப்பமின்மையை ஏற்படுத்திய படித்த சொற்கள்.

''அவன் சற்று வறட்சியானவன்,'' என்று அர்தமோ னவ் நினைத்தான். ஆனால் மற்ற பையன்களினின்றும் இல்யா எங்ஙனம் வேறுபட்டிருந்தான் என்பதை அறிய சற்று ஆறுதல் தருவதாக இருந்தது—அந்த இரைச்சல் மிக்க வாயாடி கொரித்ஸ்வேதவ், ஊக்கமிழந்த, சோம்

பேறி யாக்கவ் மற்றும் மிரோன் இவர்களுக்கு மேலானவ னாகவே அவனை ஒப்பிட்டுப் பார்த்தான். சீக்கிரமாகவே இளமையின் கூறுகளை இழந்தபடி, மிரோன் ஏட்டறிவுடன் பேசினான், தன்னைத்தானே மோசமாகச் சலித்துக் கொண் டான், மொத்தத்தில், வாழ்க்கையின் எல்லாத் தற்செயல் நிகழ்வுகளுக்கும், அச்சிட்ட வார்த்தையையே தெளிவான தாகக் காணக் கூடிய, மறுத்துப் பேசாத அதிகாரமனப் பான்மை கொண்ட சில அலுவலரை ஒத்திருந்தான்.

விடுமுறை வாரங்கள் நழுவித் தப்பிக்கின்ற வேகத்து டன் சென்றன, புறப்படுவதற்குப் பையன்கள் தயாரானார் கள். எப்படியோ, யாக்கவை நதால்யா பிரிகின்ற நேரப் புத்திமதி சொல்வதும், அதே வேளை தந்தை இல்யாவு டன் பேசுவதும் நடந்தது, ஆனால் அவன் சொல்ல விரும்பி யதைத்தவிர வேறெதுவும் பேசவில்லை. சலிப்பூட்டுகின்ற வியாபாரக் கவலைகளின் கொசுப் பிடுங்கல்களினால், வாழ்க் கை அவனுக்குச் சலிப்பாக இருந்தது என்பதை அவன் எங்ஙனம் கூற முடியும்? அத்தகைய விஷயங்களைச் சிறுவர் களிடத்தில் ஒருவரும் பேச மாட்டார்கள்.

மூத்த அர்தமோனவ் ஏதோ வித்தியாசமானவற்றிற் காக மிகவும் வேட்கையோடு இருந்தான், பனி, மழை, சகதி, வெப்பம், தூசி போலத் தவிர்க்க முடியாத—அன்றாட வாழ்க்கையின் வெளி உலக சில அநுபவங்கள்—தனக்கு என்ன தேவைப்பட்டது என்பதைக் கடைசியில் அவன் அறிந்தான் அல்லது கண்டு பிடித்தான். தொலை தூரத்தில் மரங்களடர்ந்த பகுதி வழியாகப் பயணம் செய்கின்ற போது, முழங்குகின்ற இடியுடனும், நீல ஒளியுடன் மினு மினுக்கின்ற மேகங்களுடனும் கூடிய ஜூன் மாதத்திய இடிமின் புயலில் சாலையோரத்தில் அவன் மாட்டிக் கொண் டான். வண்டிச் சக்கரங்களின் குடங்களை சேறு அப்பு கின்ற அளவுக்குக் குதிரைகளின் குளம்புகளுக்குக் கீழே மணல் கரைந்தோடியது, முன்பின் எதிர்பாராத இடைவெளி களில், ஒரு குளுமையான நீலநிற சுவாலை, பூமியின் உருக்கி வார்க்கப்பட்ட குழைவுக்கு மேலாகத் திடீரென்று தோன்றியது, அதனுடைய அச்சுறுத்துகின்ற ஒளியில், மழை யின் கண்ணாடி போன்ற விளிம்பின் வழியாக, சாலையின் இரு மறுங்கிலும், இருள் படிந்திருந்த இடங்களுக்கு ஊடாக, திகிலூட்டுகிற கருநிற மரங்கள் வானத்தை நோக்கி எழும்பி நிற்பது தெரிந்தது. கண்ணுக்கு எதுவும் புலனா

..ாத அக்காரிருளில் குதிரைகள் விறைத்து நின்று கனைத் ..ன, ஒய்வற்ற அவற்றின் கால்களைச் சுற்றி நீர் ஒலி யெழுப்பின. தடித்த வண்டியோட்டி, கோழையாகிய யகீம், ..வைகளிடம் வேதனையைத் தணிக்கும் வகையில் பேசி ..ான். ஆலங்கட்டி மழை சீக்கிரமே நின்றது, காட்டில் ..தனுடைய பனிக் கட்டியின் சலசலப்பு நின்றது; ஆனால் மழை வலுத்துக் கனமாக விழுந்தது, கோபமான கர்ஜனை யுடன் லட்சக் கணக்கான கனத்த துளிகள், இலைத் தொகுதி களை விளாசியபடியும், இருளை நிறைத்தபடியும் விழுந்தன.

''நாம் பபோவ்களின் வீட்டுக்குப் போக வேண்டி இருக் கிறது,'' என்றான் யகீம்.

ஆகவே, ஒரு கனவு போல, தனது முழங்கால்களைப் பற்றிப் பிடித்த காய்ந்து போன உடைகளுடன், ஒரு மேசை யின் முன், அசையக் கூச்சப்பட்டபடி, மகிழ்ச்சிமிக்க அரை யிருட்டுக் கொண்ட வெதுவெதுப்பான அறையில் தான் உட் கார்ந்திருப்பதை அர்தமோனவ் உணர்ந்தான். நிக்கல் முலாம் பூசப்பட்ட ஒரு சமோவார் மேசையின் மீது ஒலியெழுப்பி யது, உயரமான, மெலிந்து காணப்பட்ட பெண் ஒருத்தி, போதுமான மடிப்புகள் கொண்ட, கருப்பு நிற உடையில் தேநீரை ஊற்றிக் கொண்டிருந்தாள். செந்நிற முடியின் தலைப்பாகைக்குக் கீழாக, அழகிய சாம்பல் நிறக் கண்கள் வெளிறிய முகத்தில் சுடர்விட்டன. மிகவும் எளிமையான தும் உறுதியானதுமான அவளுடைய கீச்சுக் குரலானது புகார்க் குறிப்பு எதையும் எடுத்துவராதபடி வந்தது. தன் கணவனுடைய சமீபத்திய மரணம் பற்றியும், தனது சொத் தை விற்று விட்டு நகரத்திற்குச் சென்று, அங்கு ஒரு தனியார் பள்ளியை நிறுவுவது பற்றியும் தனது நோக்கத்தைக் கூறி னாள்.

''அது உங்கள் தம்பியினுடைய ஆலோசனை. அவர் ஓர் ஆர்வமூட்டுகின்ற நபர், மிகவும் உயிரோட்டத்துடனும் சுயமாகவும் செய்யக் கூடியவர்.''

அந்த அறையைச் சுற்றிப் பார்த்த போது பியோத்தர் பொறாமையுணர்வுடன் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். தன்னுடைய வாலிபப் பிராயத்தில் தனது தந்தையுடன் மாவட்டம் வழியாகப் பயணம் செய்ததில், பிரபுக்களின் வீடுகளை இவன் அடிக்கடி பார்த்திருந்திருக் கிறான்; ஆனால் அவற்றில் குறிப்பாகக் கவர்ந்திழுப்பது போல அவன் எதையும் பார்த்ததில்லை. ஆட்கள், தட்டு

முட்டுச் சாமான்கள் ஒருவித எதிர்ப்பு உணர்வையே ஏற்ப டுத்தியிருந்தன. இந்த வீட்டில் ஒறுக்கும் பாங்குடைய எது வும் இருக்கவில்லை. அந்தச் சூழ்நிலையானது அன்பான தாகவும், சிறப்பானதாகவும் இருந்தது. மங்கலான நிழல் மறைப்புக்குக் கீழாக ஒரு பெரிய விளக்கானது பால் ஒளியை மேசையின் மீது இருந்த கின்னங்களுக்கும், வெள்ளிக் கரண்டி களுக்கும் மேலாகப் பாய்ச்சியது. அதனுடைய மென்மை யான ஒளிக் கற்றை, ஒரு குறிப்பேட்டிற்கு மேலாகத் தனது கண்ணிற்கு மேலாகப் பச்சை நிற நிழலுடன் குனிந்து நின்ற ஒரு சிறுமியின் கருப்பு நிறத் தலையைத் தடவிக் கொடுத்தது. கூர்மையாக்கப்பட்ட பென்சிலால் அச்சிறுமி வரைந்து கொண்டு, தனக்குத்தானே எதையோ முணகிக் கொண்டு இருந்தாள், ஆனால் தனது தாயாருடைய அமைதி யான பேச்சிற்கு இடையூறு ஏற்படுத்தாதபடி அவ்வளவு மென்மையாக முணுமுணுத்தாள். அறை பெரியதாக இல்லை, தட்டு முட்டுச் சாமான்களால் நிறைந்து இருந்தது. ஒவ்வொரு பொருளுமே அறையின் ஒருங்கிணைந்த பகுதி யாகக் காணப்பட்டது, அதே வேளை அது தானாகவே, தன்னைப் பற்றி எதையோ வெளியிடுவது போல இருந்தது, சுவர்களின் மீது காணப்பட்ட ஒளி பொருந்திய மூன்று ஓவியங்களுக்கும் இது உண்மையாக இருந்தது; பியோத்த ருக்கு நேராக இருந்த ஒன்று, ஏதோ ஒரு தேவதைக் கதை யில் வரும் ஒரு வெள்ளைக் குதிரையைச் சித்திரித்தது, கம்பீரமாக வளைந்த கழுத்துடனும், ஏறத்தாழ தரை யைக் கூட்டுவது போல வியக்கத்தக்கவாறு நீளமான பிட ரிமயிருடன் காணப்பட்டது. அவை எல்லாமே வியக்கத் தக்க ஆடம்பரத்துடனும், அமைதியுடனும் இருந்தது. எச மானியினுடைய இனிமையான குரல் அவனுடைய காது களுக்குத் தொலைவிலிருந்து கேட்கும் ஒரு துயரார்ந்த பாடல் போலக் கேட்டது. அத்தகு சூழ்நிலைகளில் எந்த விதமான பயமும் இன்றி, எந்தத் தீங்கும் செய்யாது ஒரு வரால் வாழ முடியும். அத்தகைய ஒரு பெண்ணை மனைவி யாகப் பெற்றால் ஒருவர் மரியாதை செய்ய முடியும், அவளிடத்தில் ஒவ்வொன்றையும் பேச முடியும்.

வராந்தாக் கதவின் வண்ணக் கண்ணாடிகளுக்கு அப் பால், நீல வண்ணச் சுவாலைகள், இதுவரை அச்சந்தரா திருந்தது, கும்மிருட்டு வானத்தை அஞ்சி நடுங்க வைத்தது.

காலை விடியலின் போது, அன்பான அமைதியும் இன்

பமும் கொண்ட எண்ணத்தின் நினைவினையும், இந்த இன் பத்தை நல்கியிருந்த, அமைதியான சாம்பல் நிறக் கண் ணும் கொண்ட பெண்ணின், ஏறத்தாழ நுண்ணியலான கற்பனையையும், ஒரு செல்வமாகத் தன்னுடன் எடுத்துக் கொண்டு அர்தமோனவ் புறப்பட்டான். சூரியனின் பொன் நிறத்தையும், காற்றால் அலைக் கழிக்கப்பட்ட மேகங்க ளின் கறைப்படுத்தப் பெற்ற கருப்பு நிறத்தையும் வித்தி யாசமில்லாமல் பிரதிபலித்தபடி, அவனுடைய வண்டி சேற்று மடுக்களின் வழியாக உருண்டோடியதில், பொறாமை நிறைந்த துயரத்தோடு நினைத்தான்:

''இங்ஙனமாகத்தான் சில மக்கள் வாழ்கிறார்கள்.''

ஏதோ ஒரு காரணத்திற்காக இந்தப் புதிய அறிமுகம் பற்றி அவன் தன் மனைவியிடம் சொல்லவோ, அது பற்றி அலெக் ஸியிடம் தெரிவிக்கவோ இல்லை. ஒரு சில வாரங்களுக்குப் பிறகு, தன் சகோதரனுடைய வரவேற்பு அறைக்கு வந் ததில், ஓல்காவுக்குப் பக்கத்தில் பபோவாவை அவன் பார்த்த போது, இது எல்லாவற்றினும் மிகவும் திகைப் புறச் செய்தது. அலெக்ஸி அவனை முன்னுக்குத் தள்ளிக் கூறினான்:

''இதோ என் அண்ணன் இவன், வேரா நிகலாயெவ் னா.''

முறுவலித்தபடி அவள் தனது கையை நீட்டினாள்:

''நாங்கள் ஏற்கெனவே அறிமுகமாகியுள்ளோம்.''

''என்ன இது?'' அலெக்ஸி வியப்போடு கத்தினான். ''எப்போதிலிருந்து? என்னிடம் ஏன் நீ சொல்லவில்லை, சகோதரனே?''

தன் தம்பியின் வியப்பில் மறைமுகமான குறிப்பு இருந் ததை பியோத்தர் புரிந்து கொண்டான். தனது தாடியின் அடிப்பகுதியில் ஒருவித சிலிர்ப்பு ஏற்பட்டதை அவன் உணர்ந்தான், தனது காதை இழுத்துவிட்டுக் கொண்டு பதி லளித்தான்:

''நான் மறந்துவிட்டேன்.''

அவனை வெட்கமில்லாதபடி சுட்டிக்காட்டியபடி அலெக்ஸி இரைந்தான்:

''பாருங்கள்— அவன் முகஞ்சிவந்து போய்விட்டான், இல்லையா? என்ன புத்திசாலித்தனமான பதில், சிறு பையன்! அவளை ஒரு முறை பார்த்த பிறகு, யாராலும் அத்தகைய ஒரு பெண்ணை மறக்க முடியுமா? பாருங்கள்—

அவனுடைய காதுகள் துடிதுடிக்கின்றன— அவை வளர்ந்து கொண்டிருக்கின்றன!''

பபோவா முறுவலித்தாள், ஆனால் அவளுடைய முறுவலிப்பு எந்தச் சங்கடத்தையும் காட்டவில்லை.

பட்டை தீட்டிய உயரமான கண்ணாடிக் குவளைகளிலிருந்து, அவர்கள் பனிக்கட்டி போடப்பட்ட கடுந்தேறலைப் பருகினார்கள். இந்தப் பெண்ணிடமிருந்து ஓல்காவுக்கு அன்பளிப்பாகக் கிடைத்த இந்தக் கடுந்தேறலானது பொன்னிறமாக, அம்பர் மஞ்சளாக இருந்தது, மகிழ்ச்சியான முறையில் நாக்கினைச் சுண்டியது. எல்லாவிதமான சாதுர்யமிக்க வார்த்தைகளையும் அது பியோத்தரின் மூளைக்குள்ளாக வைத்தது, அவர்களிடம் சொல்வதற்கு அவனுக்கு ஒருபோதும் வாய்ப்பே கிடைத்ததில்லை, ஏனெனில் அவனுடைய தம்பி இடைவிடாது வெற்றுப் பேச்சுப் பேசிக் கொண்டிருந்தான்:

''இல்லை, வேரா நிகலாயெவ்னா, விற்பதற்கு நீங்கள் எந்த வகையிலும் அவசரப்பட வேண்டாம்! அமைதியையும் ஓய்வையும் தேடிக் கொண்டிருக்கக் கூடிய ஒருவர் உங்கள் இடத்திற்குத் தேவைப்படுகிறார். இதயத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளத் தக்க ஓர் இடம். எங்களுடைய ஆட்கள் உங்களுக்கு எந்த வகையான விலையும் தரமாட்டார்கள். நீங்கள் என்ன வைத்திருக்கிறீர்கள்? நிலம் இல்லை, காடுகள் எதுவும் அறவே கிடையாது, அதிலென்ன இருக்கிறது, மோசம். இத்துடன் இந்தப் பகுதியில் முயல்களைத் தவிர காடுகளை யார் விரும்புவார்கள்?''

பியோத்தர் கூறினான்:

''நீங்கள் விற்கக் கூடாது.''

''ஏன் கூடாது?'' என்றாள் பபோவா, மறந்தவளாகத் தேறலை ஒரு வாய் பருகியபடி. ஒரு பெருமூச்சுடன் அவள் தொடர்ந்தாள்: ''நான் அதை விற்றாக வேண்டும்.''

ஓல்கா தன்னைப் பார்த்த முறையிலோ, முறுவலிப்பை வலிந்து கட்டுப் படுத்திக் கொண்டு அவளது உதடுகள் துடித்ததையோ பியோத்தர் விரும்பவில்லை. பபோவாவுக்குப் பதிலேதும் கூறாது, வாட்டத்துடன் தனது தேறல் பக்கம் அவன் திரும்பினான்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு, அலுவலகத்தில், பபோவாவுடைய தட்டுமுட்டு சாமான்களின் பேரில் அவளுக்குத் தான் பணம் கொடுக்க விரும்பதாக அலெக்ஸி அறிவித்தான்.

''அவளுடைய இடம் எந்தவகையிலும் மதிப்புள்ளது அல்ல, ஆனால் அவளிடத்தில் பண்டம் இருக்கிறது...''

''வேண்டாம்,'' என்றான் பியோத்தர், மிகவும் தீர்மானத்துடன்.

''ஏன் வேண்டாம்? இந்தப் பொருள்களின் விலை எனக்குத் தெரியும்...''

''வேண்டாம்.''

''ஆனால் ஏன்?'' இரைந்தான் அலெக்ஸி. ''ஒரு விவரமான ஆளுடன் அங்கு போய் ஒவ்வொன்றுக்கும் விலை மதிப்பிடுவேன்.''

பியோத்தர் தனது தலையை சிடுசிடுப்போடு ஆட்டினான். இந்தக் கடனிலிருந்து தன் சகோதரனின் கருத்தைத் திசை திருப்ப மிகவும் மோசமாக அவன் விரும்பினான், ஆனால் அதற்கு எதிராக எந்த விவாதத்தையும் அவன் செய்ய முடியவில்லை. மாறாக அவன் திடீரென்று முன்மொழிந்தான்:

''நாம் பாதிபாதியாக வைத்துக் கொள்வோம்; பாதி உன்னிடமிருந்து, பாதி என்னிடமிருந்து.''

அலெக்ஸி சிரித்தான், அவனைக் கூர்மையாகப் பார்த்தபடி:

''முட்டாள் விளையாட்டைத் தொடங்குகிறாய்?''

''இதன் பொருள், அதற்கான நேரம் வந்துவிட்டது என்பதாகும்,'' என்று உரக்கப் பேசினான் பியோத்தர் அர்தமோனவ்.

''நீயாகவே பார்த்துக் கொள்— இது சரியான முகவரி இல்லை. நான் முயற்சித்தேன். காதல் விவகாரத்தில் ஒன்றும் அவ்வளவு சரியில்லை,'' என்று அவனை அலெக்ஸி எச்சரித்தான்.

பபோவாவுடன் இரண்டு அல்லது மூன்று எதிர்ப்பாடுகளுக்குப் பிறகு, அர்தமோனவ் அவளைப் பற்றிக் கனவு காணக் கற்றுக் கொண்டான். தன்னோடு இந்தப் பெண்ணைக் கற்பனை செய்து பார்ப்பான், மகிழ்வூட்டும் அமைதியை ஊக்குவிக்கும், கண்ணுக்கும் மனத்திற்கும் அழகாக, வியப்பூட்டுகின்ற எளிமையும் வசதியும் படைத்த ஒரு வாழ்க்கையானது உடனடியாக அவனுக்கு முன்னதாக எதிர்நோக்கியிருக்கும்; அந்த வாழ்க்கையில் நாள்தோறும் டஜன் கணக்கான சோம்பேறிகளோடு தொடர்பு வைத்துக் கொள்வது, எப்போதுமே மனநிறைவின்மையுடனும், எப்போதுமே

கத்திக் கொண்டும், புகார் செய்து கொண்டும், எப்போதுமே பொய் சொல்லிக் கொண்டும் ஏமாற்றிக் கொண்டும், தவறாகக் கருதப்பட்டும் மெதுவாக வளர்கின்ற எதிர்ப்பினையும் விட எந்த வகையிலும் குறைவாக எரிச்சலூட்டும், அவசரப் படுத்தி நெருக்குகின்ற தற்புகழ்ச்சிகளால் தன்னைச் சூழ வைத்துக் கொள்ள வேண்டிய தேவையிருக்காது. இவை எல்லாவற்றினின்றும் சுதந்திரமான ஒரு வாழ்க்கையை, எப்போதுமே விரிவாகி வருகின்ற நூலாம்படையுடன் கூடிய தடித்த சிவப்புச் சிலந்தி போன்ற தனது ஆலையினின்றும் மிகவும் ஒதுங்கிய ஒரு வாழ்க்கையை, படம் வரைவது இலகுவானதாக இருந்தது. பாதுகாப்பான அமைதியில் வைக்கப்பட்டு தனது எசமானியால் நேசிக்கவும், தட்டிக் கொடுக்கவும் படும் ஒருவிதமான பெரிய ஆண் பூனையாக அவனால் தன்னைப் பார்க்க முடிந்தது, இதைவிட வேறெதையும் விரும்பவில்லை, எதுவுமில்லை.

துன்பந் தருவதும், ஏற்றுக் கொள்ளத் தகாததுமான எல்லாவற்றுக்கும் ஒரு கருமையான குவிமையத்தை நிகனோவ் பையன் ஒரு முறை ஏற்படுத்தி இருந்தது போல, இலேசானதும், ஏற்றுக் கொள்ளத்தக்க சிந்தனைகளையும், நோக்கங்களையும் மட்டுமே கவர்கின்ற ஒரு காந்தமாக பபோவா மாறியிருந்தாள். பபோவாவினுடைய எஸ்டேட்டிற்கு, அவளுடைய உடைமைகளை மதிப்பிடுவதற்காக நியமிக்கப்பட்டிருந்த கண்ணாடி அணிந்த அந்தக் கிழவன் உடன்வர, தனது தம்பியுடன் உடன் செல்வதற்கு அவன் மறுத்து விட்டான். ஆனால் தொழில் முறை இடைபாடு முடிந்து அலெக்ஸி திரும்பிய போது, அவன் கூறினான்:

''அடைமானப் பத்திரத்தை என்னிடம் விற்றுவிடு.''

அலெக்ஸி மகிழ்ச்சியற்ற முறையில் வியப்புற்றான். கணக்கற்ற கேள்விகளை அவன் தொகுத்தான்: ஏன், எதற்காக— இறுதியாக அறிவித்தான்:

''இங்கே கேள், இதனால் எனக்கு ஒன்றும் லாபம் கிடையாது! அவளால் கொடுப்பதற்கு இயலாது, அவளது பண்டம் மதிப்பிடத்தக்கது— புரிந்ததா? நீ ஏதாவது கொஞ்சம் கூட்டித் தர வேண்டியிருக்கும்.''

பேரம் முடிந்தது. முகஞ்சுளித்து அலெக்ஸி கூறினான்:

''உனக்கு அதிர்ஷ்டம் ஏற்பட வாழ்த்துகிறேன். அது ஒரு நல்ல காரியம்.''

தான் ஒரு நல்ல காரியத்தைச் செய்து முடித்ததாக

பியோத்தர் கூட உணர்ந்தான். அவன் தனக்குத்தானே மேலான ஓய்வினை அளித்துக் கொண்டான்.

''உனது மனைவி பற்றி என்ன? நான் வாய்மூடி இருக்கட்டுமா?'' என்று கண்ணைச் சிமிட்டியபடி அவனது தம்பி கேட்டான்.

''அது உன்னுடைய பொறுப்பு.''

அலெக்ஸி அவனைக் கூர்ந்து நோக்குவது போலப் பார்த்துக் கூறினான்:

''நீ பபோவாவிடம் காதல் கொண்டிருப்பதாக ஓல்கா நினைக்கிறாள்.''

''அது என் பொறுப்பு.''

''என் மீது குரைக்க வேண்டாம். நமது காலத்தில் பெரும்பான்மையான ஆண்கள் சுற்றிலும் ஏதாவது இம்மாதிரி விளையாடுகிறார்கள்.''

பியோத்தர் முரட்டுத்தனமாகவும், கோபமாகவும் பதிலளித்தான்:

''என்னை நீ தனிமையில் விடு...''

சீக்கிரத்திலேயே அவனை நோக்கிய ஓல்காவினுடைய குரல், முன்னைக் காட்டிலும் நட்புடையதாக, மொத்தத்தில் அவனுடைய விருப்பத்திற்கில்லாதபடி, ஒரு விதமான இரக்க உணர்ச்சிக் குறிப்புப் பெற்றிருப்பதை அவன் கவனிக்கத் தொடங்கினான். அவளுடைய வரவேற்பு அறையில் உட்கார்ந்தபடி, ஓர் இலையுதிர் காலத்து மாலையில், அவன் கேட்டான்:

''பபோவாவைப் பற்றி அலெக்ஸி உன்னிடம் ஏதேனும் முட்டாள்தனமாகப் பேசிக் கொண்டு வந்திருக்கிறானா?''

தனது மெல்லிய விரல்களால் நட்புமுறையுடன் அவனது மயிரடர்ந்த கைவிரல்களைத் தொட்டு, அவள் கூறினாள்:

''அந்த விஷயத்தை நான் இங்கே நிறுத்திவிட்டேன்.''

''அந்த விஷயம் இங்கிருந்து போகாது,'' என்ற அர்தமோனவ் தனது மடக்கிய முட்டியைத் தனது முழங்காலுக்குக் கொண்டு வந்தபடி, திருப்பிச் சொன்னான். ''அது எனது உள்ளுக்குள்ளாகவே தங்கும். நீ புரிந்து கொள்வதற்காக அல்ல. அவளிடத்தில் நீ எதையும் சொல்லவில்லை.''

பபோவா மீது அவன் கொண்டது இச்சையல்ல. அவளுடைய கனவுகளிலே, அவன் விரும்பிய ஒரு பெண் போல அல்ல, ஆனால் இனிய, முறையான வாழ்க்கைக்கு, அவளுடைய வீட்டின் உகந்த வசதிக்குத் தவிர்க்க இயலாத

உடைமையாக அவள் தோன்றினாள். எனினும், இந்தப் பெண் நகரத்திற்குச் சென்ற போது, அவளை அடிக்கடி அவன் அலெக்ஸியின் வீட்டில் காணத் தொடங்கினான். ஒரு நாள் அவன் உள்ளே வந்த போது, ஓல்கா உடல் நலமில்லாததை அவன் கண்டான். பபோவா படுக்கை யருகே நின்றாள், அவளுடைய சட்டை கையைச் சுருட்டி விட்டுக் கொண்டு, நீர் வட்டிலில் ஒரு துவாலையை அமுக்கிக் கொண்டிருந்தாள். நீருக்கு மேலாக அவள் குனிந் தாள், பிறகு நிமிர்ந்தாள்— வியப்பூட்டுகிற நல்ல உடற் கட்டு, சிறிய, சிறுமிக்குரிய மார்பகங்கள்— தடுக்க இயலாத படி கவர்ச்சியானவை. அர்தமோனவ் வாசல் நடையிலேயே நின்றான், அவளது வெள்ளிய கைகளை, அவளுடைய இடையை அமைதியாக உற்றுப் பார்த்தபடி இருந்தான். திடீரென்று பொங்கியெழுகின்ற வேட்கை அவளது கைகள் அவனைச் சுற்றுவது போல உணரச் செய்தது. அவளது வாழ்த்துக்குப் பதிலாக தன்னைத்தானே கட்டாயப் படுத்தி தலையசைத்தான், அறைக்குள்ளாக நுழைந்து சன்னல் அருகே அமர்ந்தான். உவகையின்றி அவன் கேட்டான்:

''உனக்கு என்ன கோளாறு, ஓல்கா? நீ வியாதியை இது போல இழுத்துக் கொள்ளக் கூடாது...''

இதற்கு முன்னர் ஒருபோதும் ஒரு பெண் அவனை இந் தளவுக்குச் சிதறடிக்கவும், இவ்வளவு அடக்க முடியாம லும் செய்ததில்லை. வெறுமையான இடர்வரவு மற்றும் ஆபத்துகளின் முன்னுணர்வைக் கொண்டு வந்தபடி அது அவனை நடுக்குறச் செய்தது. டாக்டரை அழைத்துவர தனது வண்டியை அனுப்பினான், அவனும் அவசரமாக நடையில் கிளம்பி, ஆலைக்குச் செல்கின்ற பாதையை அடைந்தான்.

அது பிப்ரவரி மாதத்தின் பின் பகுதி. எதிர்வரும் புய லையும் பனியையும் உறுதி கூறியபடி வானிலை வெது வெதுப்பானதாக மாறியிருந்தது. அர்தமோனவைச் சுற்றி லும், கவிழ்த்துப் போடப்பட்ட பாத்திரத்தைப் போன்று மேலேயும், வானத்தை மறைத்துக் கொண்டும், இடத் தைச் சுருக்கியபடியும், பூமிக்கு மேலாகப் பழுப்பு நிற மூடுபனி தொங்கிக் கொண்டிருந்தது. ஈரஞ்செறிந்த குளு மையான தூசியானது கீழ் நோக்கி மெதுவாக நகர்ந்து, தாடியின் மீதும் மீசையின் மீதும் அழுத்தமாகப் படிந்த படி சுவாசிப்பதைச் சிரமமானதாக்கியது. நிகீதாவின் தற்

கொலை முயற்சி நடந்த இரவின் போதும், பாவெல் நிக நோனாவ் கொலை நடந்த பகலின் போதும் உணர்ந்திருந் ததைப் போன்று, அர்தமோனவ் தனக்குத்தானே அழுத்தப் பட்டு நோவது போல உணர்ந்தான். இந்த இரு அநு பவங்களுக்கும் இடையிலான உறவின் ஈர்ப்பாற்றலானது அவனுக்குத் தெளிவாகவே தெரிந்தது; அதைத் தொடர்ந்து, மூன்றாவது எல்லாவற்றுக்கும் மேலாகத் துன்ப நெருக்கடி யானதாகக் காணப்பட்டது. இந்தப் பெண்ணைத் தனது காமக்கிழத்தியாக ஆக்கிக் கொள்வதில் அவனால் ஒரு போதும் வெற்றியடைய முடியாது என்பது தெளிவாகத் தெரிந்தது. மேலும் பபோவாவுக்கான அவனது திடீர் விருப்பமானது உடைந்து கொண்டும், கறைப் படுத்திக் கொண்டும் இருப்பதையும், மிகவும் நெருக்கமானதாக அவன் கொண்டிருந்த ஏதோ ஒன்று, இந்தப் பெண்ணைச் சாதாரணப் பெண்ணின் வரிசைகளுக்குத் தாழ்த்தி விட்ட தையும் அவன் ஏற்கெனவே உணர்ந்து விட்டான். ஒரு மனைவி என்பது என்ன என்பதை மட்டுமே அவன் மிக நன்கு அறிவான்; எந்தப் பெண்ணினுடைய சலிப்பைத் தருகின்ற, கடமைப்பட்ட தழுவல்களானது இப்போது பெரும்பாலும் இவனுக்குக் கிளர்ச்சியைத் தரத் தவறி யதோ, அவளைக் காட்டிலும் அந்த ஆசைநாயகி எந்த வகையிலும் சிறந்தவளாக இருப்பாள் என்பதைச் சிந்திப் பதற்கு அவன் எந்தக் காரணத்தையும் பெற்றிருக்கவில்லை.

''உனக்கு என்ன வேண்டும்?'' அவன் தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். ''சிற்றின்ப ஆசையா? அதற்குத் தான் நீ மனைவியைப் பெற்றிருக்கிறாய்.''

எப்போதுமே, ஏதாவது அவனை அச்சுறுத்துகின்ற கணங்களில், எவ்வளவு முடியுமோ அவ்வளவு விரைவாக ஆபத்தைப் பின்னுக்குக் கடத்திவிடும் சங்கடமான ஆர்வத் தை உணர்ந்தான், ஒருபோதும் அதைப் பின்னுக்குத் திரும் பிப் பார்ப்பதில்லை. இரவின் கருமையில், ஓர் ஆழமான நதியில் எளிதில் நொறுங்கக் கூடிய வசந்தகாலத்துப் பனிப் பாறையின் மீது நின்று கொண்டிருப்பது போன்ற அச் சுறுத்துகின்ற ஆபத்தை எதிர்நோக்கினான். இளமைப் பிராயத்தில் இது போன்ற பயங்கரத்தை அவன் உணர்ந் திருந்திருக்கிறான், இந்த முழுமையான திகைப்பு நினைவில் ஏற்பட்டது.

ஓரிரு நாட்கள் சோர்வாக, உணர்ச்சியற்ற அவல நிலை

யில் கழிந்தன. பிறகு, ஒரு நாள் அதிகாலையில், தூக்க மில்லாத இரவுக்குப் பின்னர் முற்றத்தை நோக்கி வெளியே வந்த போது, குருதி வெள்ளத்தில் நாய் துலூன் கிடப் பதைக் கண்டான். காலைக் கருக்கலில், குருதி கும்மிருட்டுப் போலக் காணப்பட்டது. தனது காலால் மயிரடர்ந்த அந்தப் பிணத்தை மிதித்தான். அந்நாய் பனியிலே படுத் திருந்தது, அதனுடைய பற்கள் தெரியும்படி இருந்தன, அவ னுடைய காலணியின் முகப்பில் வீங்கிய கண் பளபளத் தது. அர்தமோனவ் தோளைக் குலுக்கிக் கொண்டான். முற்றப் பாதுகாவலனுடைய தங்குமிடத்திற்குச் செல்லும் கீழ்க் கதவைத் திறந்தபடி, வாசல் நடையில் நின்றபடி கேட்டான்:

''நாயை யார் கொன்றது?''

அகல விரிந்த தனது விரல்களில் கின்னத்தைத் தாங்கிய படி தேநீர் பருகிக் கொண்டிருந்த தீஹன் ''நான் கொன் றேன்'' என்றான்.

''ஏன்?''

''அது திரும்பவும் ஆட்களைக் கடித்துக் கொண்டிருக் கிறது.''

''இந்தத் தடவை யாரை?''

''ஸினயீதா— ஸெரஃபீமின் மகள்.''

கண நேர சிந்தனை வயப்பட்ட அமைதிக்குப் பிறகு பியோத்தர் கூறினான்:

''இது பரிதாபத்திற்குரிய ஒன்று.''

''உண்மைதான். இந்த நாய், குட்டியாக இருந்த திலிருந்து நான் வளர்த்து வந்தேன். சமீப காலத்தில், அது என்னிடத்திலும் கூட குரைக்க ஆரம்பித்து விட்டது. ஆமாம், நீங்கள் சங்கிலி போட்டுக் கட்டி வைத்திருந்தால், மனிதனுக்குக் கூட பைத்தியம் பிடிக்கும்...''

''அது உண்மை,'' என்றான் அர்தமோனவ். தனக்குப் பின்னால் இருந்த கதவை மிகவும் கவனமாகச் சாத்திவிட்டு அவன் தனக்குத்தானே நினைத்தபடி வெளியே சென்றான்:

''சில நேரங்களில் அவன் கூட அறிவோடு பேசுகிறான்.''

சற்று நேரத்திற்கு அவன் முற்றத்தில், ஆலையினுடைய இரைச்சலையும், முணகல் ஒலியையும் கேட்டபடி நின்றான். தொலைவிலிருந்த ஒரு மூலையில், ஓர் இலாயத்து சுவரில் தெரிந்த ஸெரஃபீமின் சன்னல், மஞ்சள் ஒளியைப் பாய்ச் சியது. அர்தமோனவ் மேலே சன்னல் வரை சென்று உள்ளே

பாட்டிப் பார்த்தான். மேசையின் மீது ஒரு விளக்கு எரிந்தது. ஸினயீதா, அவளுடைய மாற்றுடையைத் தவிர எதுவுமில்லாமல், குனிந்தபடி ஏதோ தைத்துக் கொண்டிருந்தாள். அவன் அறைக்குள்ளாக நுழைந்த போது, தனது தலையை உயர்த்தாமலேயே அவள் கேட்டாள்:

''எதற்காக நீ திரும்ப வந்தாய்?''

ஆனால், பிறகு அவள் கதவுப் பக்கம் பார்வையைச் செலுத்தினாள். தன் வேலையை நிறுத்திவிட்டு, அவள் குதித்தெழுந்து நின்று, ஒரு முறுவலிப்போடு கத்தினாள்:

''ஓ, கடவுளே! அப்பா என்று நான் நினைத்தேன்...''

''துலூன் உன்னைக் கடித்ததாகக் கேள்விப் பட்டேன்.''

அது ஏதோ பெருமையாக இருந்தது போல, ''கடித்திருக்காதா அது!'' என்றாள். ஒரு நாற்காலியின் மீது தனது காலை வைத்தபடி தனது மாற்றாடையை அவள் இழுத்தாள். ''ஒரு தரம் பாருங்கள்!''

கணுக்காலுக்குச் சற்று கீழே கட்டுப் போடப் பட்டிருந்த வெண்ணிற காலை அர்தமோனவ் வெறித்துப் பார்த்தான். அந்த இளம் பெண்ணுக்கு மிகவும் நெருக்கமாக வந்து அவன் ஒலியெழுப்பாதபடி பேசினான்:

''எதற்காக முற்றத்திற்கு அவ்வளவு முன்னதாக நீ நடந்து போய்க் கொண்டிருந்தாய்? ஏன்?''

உசாவுவது போல அவனைப் பார்த்தாள். புரிந்து கொண்டதில் அகமகிழ்ந்தாள். விளக்கின் புகைப் போக்கியின் கீழே பலமாக ஊதியபடி விளக்கை அணைத்துவிட்டுச் சொன்னாள்:

''நாம் கதவைத் தாழிட்டாக வேண்டும்.''

அரை மணி நேரத்திற்குப் பிறகு, மகிழ்ச்சியில் திளைத்தபடி, பியோத்தர் அர்தமோனவ், தனது காதை இழுத்துவிட்டுக் கொண்டும், அந்த இளம் பெண்ணினுடைய வெட்கமற்ற தழுவல்களை வியப்போடு நினைவு கூர்ந்தபடி அவ்வப்பொழுது காறித் துப்பிக் கொண்டும் அவசரமில்லாமல் ஆலையை நோக்கி நடந்து போய்க் கொண்டிருந்தான். யாரையோ அவன் வெறுமனே முட்டாளாக்கி விட்டதாகவும், மிகவும் புத்திசாலித்தனமாக யாருடைய ஆளையோ பெற்று விட்டதாகவும் எண்ணி அவன் அகமகிழ்ந்து போனான்...

தேனீப்பண்ணைக்குள்ளாக நுழைந்த கரடியைப் போல அவன் ஆலைச் சிறுமிகளுடைய ஒழுக்கங் கெட்ட வாழ்க்

கைக்குள்ளாக நுழைந்தான். அவர்களுடைய வாழ்க்கையோ அவன் கேள்விப்பட்டிருந்த எல்லாவற்றையும் விஞ்சுவதாக இருந்தது, ஆரம்பத்தில் அவனைத் திடுக்கிட வைத்தது, அதனது வார்த்தைகளின் உணர்வுகளின் உடைந்த பனிக் கட்டுத் துண்டு போன்ற தன்மையாலும், அதனது முழுதள வான தடுக்கப்படாத தன்மையாலும், ஐயப்படுகிற தன் மையாலும் எல்லாமே வெளியே பார்வைக்குத் தெரிவது போல இருந்தது. காதல், அதை அவர்கள் அழைத்தார் கள்— ஸினயீதாவும் அவளுடைய தோழிகளும்; மேலும் அது மிகவும் கடுமையான கசப்பைப் பெற்றிருந்தது, ஒயி னைக் காட்டிலும் மிகவும் போதையூட்டுவதாக இருந்தது.

மில் எழுத்தர்கள் ஸெரஃபீமுடைய சிறிய ஓட்டுக் குடி சையை ''கண்ணி'' என்றும், ஸினயீதாவை ''பம்பு'' என் றும் அழைத்ததை அர்தமோனவ் அறிவான். ஸெரஃபீம் தானே தன்னுடைய குடியிருப்பை ''துறவி மாடம்'' என்று அழைத்தான். அடுப்புக்குப் பக்கத்தில் தன்னுடைய பெஞ் சின் மீது உட்கார்ந்தபடி, ஒரு தோளுக்கு மேலே பின்னல் வேலை செய்த துவாலைக்குப் பக்கத்தில் அவனுடைய 'குஸ்லி' யானது தொங்கிக் கொண்டிருக்க, அவன் தனது சுருள்முடி கொண்ட சிறிய தலையை அசைப்பான், அவ னுடைய சிவந்த அவயவங்களை வல்லந்தமாக முறுக்கு வான், கத்துவான், அவர்கள் எல்லாரையும் பார்த்துக் கண் சிமிட்டுவான்:

''மகிழ்ச்சியாக இருங்கள், பெண் துறவிகளே! பெண் துறவிகள்— அதுதான் அவர்கள், பியோத்தர் இல்யீச்— நீங் கள் பார்க்கவில்லையா? அவர்கள் மகிழ்ச்சிமிக்க தீய ஆவிக்குக் கீழ்ப்பட்டவர்கள், நான் அவர்களுடைய முதல் வன், ஒரு வகையான பாதிரியார், அருமை! வாழ்க்கையை மகிழ்ச்சி மிக்கதாக்க, எங்களுக்கு ஒரு ரூபிள் கொடுங்கள்!''

பணத்தைப் பெற்று தன்னுடைய கால் உறைக்குள்ளாக அதைத் திணிப்பான், ஆர்வத்தோடு பாடுவான், தனது குஸ்லி தந்தியால் ஒலியெழுப்புவான்:

சீமாட்டி ஒருத்தி நரகத்தி லிருந்தே
வறுத்த பனிக்கட்டி வேண்டினாள்.
வந்த சாத்தான்களும் தொட்டனர்
மடப் பெண்ணைச் சூட்டுக் கோலாலே!

''உனது கேலிகளுக்கும் பாடல்களுக்கும் முடிவே இல்

லாதது போலக் காணப் படுகிறது,'' என்று அவனது எச மானர் வியப்பான்; அந்தக் கிழவன் தற்பெருமையோடு வம்பளப்பான்:

''ஒரு சல்லடை! நான் ஒரு சல்லடை போல. என்னூ டாக எந்தக் குப்பையையும் அரித்தெடுக்க நீங்க விரும் பினா, நான் ஒரு பாட்டை அரித்தெடுப்பேன். நான் அது போன்ற ஒரு மனிதன்— ஒரு சல்லடை!''

அவன் ஒரு முறை கூறினான்:

''எனக்குக் கற்பித்தது பிரபுக்கள். குதூஸவ்கள்— அவர் கள் அருமையான நற்குடியினராக இருந்தனர். பிறகு அங்கே யாபுஷ்கினும் இருந்தார், அவர் குடிகாரன். ஓர் ஏழையை அவர் பாசாங்கு செய்தார், ஓ, ஏமாத்துக்காரர்! குப்பைகளின் எல்லா வகைகளையும் சுற்றிச் சேர்ப்பது போல, தனது முதுகின் மீது வைத்துக் கொண்டு சுற்றித் திரிந்தார். அவர் பார்த்தது கேட்டது எல்லாத்தையும், எல்லா நேரமும் எழுதிக் கொண்டே இருந்தார். சரி, அவர் எழுதினார், அவர் எழுதினார், பிறகு ஜாரிடம் சென்று 'பார்,' என்றார், 'மேன்மை தங்கிய மன்னரே, நமது குடி யானவர்கள் என்ன நினைக்கிறாங்க!' ஜார் உற்றுப் பார்த் தார், எழுதிய எல்லாவற்றையும் படித்தார், மிகவும் கவலை யுற்றார். குடியானவர்களின் விடுதலைக்கு அவர் உத்தர விட்ட உடனேயே, யாபுஷ்கினுக்கு ஒரு வெண்கல நினைவுச் சின்னம் எழுப்ப அவர் கட்டளையிட்டார். மாஸ்கோவில், அது செய்யப்படும் என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள். யாபுஷ்கினை, அவர்கள் தொடக்கூட இல்லை, ஆனால் உயிரோடு ஸூஸ்தல் நகரத்திற்கு அனுப்பி வைத்தார் கள். அவன் விரும்பிய எல்லாவித சாராயங்களையும் அவ னுக்குக் கொடுத்தார்கள், அதைக் கருவூல கணக்கிலே எழு தினார்கள். ஏனெனில், பாருங்க, யாபுஷ்கின் மக்களைப் பற் றிய எல்லாவிதமான ரகசியங்களையும் எழுதியிருந்தார். ஜாருக்கு எதிராகச் சென்றவர்கள் மட்டுமே, வாய்மூடி இருந்து வருவதாக எழுதியிருந்தார். ஸூஸ்தலிலேயே யாபுஷ் கின் தானாகவே குடித்துச் செத்தார், மேலும், உண்மையில் அவருடைய எழுத்துகளை அவர்கள் திருடிவிட்டார்கள்.''

''நீ பொய் சொல்கிறாய்,'' என்று அர்தமோனவ் குறிப் பிட்டான்.

''பெண்களைத் தவிர்த்து, என் வாழ்க்கையில் நான் ஒருபோதும் பொய் பேசியதில்லை. அது என்னுடைய வியா

பாரமல்ல,'' என்று கிழவன் திருப்பிச் சொன்னான். அவன் எப்போது கிண்டல் செய்கிறான், எப்போது ஒழுங்காகப் பேசுகிறான் என்று சொல்வது எப்போழுதுமே கஷ்டமானதாக இருந்தது.

''உண்மையை அறிந்த மக்கள் தான் பொய் பேசுவார்கள்,'' என்று அவன் வாதிட்டான். ''எனக்கு, என்னால் பொய் சொல்ல முடியாது, ஏனெனில் எனக்கு உண்மை தெரியாது. ஆயினும், நீ தெரிந்து கொள்ள விரும்பினால், என்னால் உனக்கு ஒன்றைச் சொல்ல முடியும்: எனது காலத்தில் நான் ஏராளமான உண்மைகளைப் பார்த்திருக்கிறேன், என்னுடைய பழமொழி இது தான்: உண்மை என்பது ஒரு பெண்ணைப் போல— இளமையாக இருக்கும் போது அருமையாக இருக்கும்.''

அவனுக்கு உண்மை தெரிந்திருக்க முடியாது, ஆனால் மேற்குடி மக்களைப் பற்றிய முடிவற்ற தொடர் கதைகளையும், அவர்களுடைய கேளிக்கைகள் மற்றும் துயரங்கள், அவர்களுடைய கொடுமைகள் மற்றும் அவர்களுடைய செல்வம் இவை பற்றி அறிவான். இந்தக் கட்டுக் கதைகளை எல்லாம் அவன் சொன்ன போது, ஒரே மாதிரியாக, மிகுந்த வருத்தத்துடன் தொடர்ந்து சொல்வான்:

''ஆமாம், ஆனால் இப்போது அவர்கள் கதை முடிக்கப் பட்டு விட்டது! பார்வையினின்றும் அவர்கள் நழுவிப் போய் விட்டார்கள். அவர்கள் தங்களையே புரிந்து கொள்ள வில்லை. தொட்டுத் தொடா நிலையில்...''

தனது தலையைச் சுற்றிலும் அவன் ஒரு வட்டமிட்டுக் காட்டினான், பிறகு, திடீரென்று தனது கையைக் கீழே விட்டபடி, தரைக்குப் பக்கத்தில் மற்றுமொரு வட்டமிட்டுக் காட்டினான்.

''சுற்றிலும் அவர்கள் மிக அதிகமாக விளையாடினார்கள்,'' என்று அவன் முடித்தான், சிமிட்டியபடி பாடினான்:

பிரபுசிலர் வாழ்ந்தனர் முன்னே,
நல்லிறைச்சி உண்டனர் பின்னே,
கணிசமாய் பெற்ற சொத்தாம்
காளைகளைத் தீர்த்தனரே தின்று!

கொள்ளையர் மற்றும் சூனியக்காரர் பற்றியும், விவசாயக் கலகக்காரர் பற்றியும், துரதிர்ஷ்டவசமான காதல் பற்றியும், தாங்கிக் கொள்ள முடியாத விதவைகளுக்கு

இரவின் போது வந்த நெருப்புப் போன்ற பாம்புகள் பற்றியும் ஸெரஃபீம் கதைகள் சொன்னான்; அவனுடைய அடங்காத மகள் கூட அப்படியே ஒரு குழந்தையைப் போல பேராவலோடு தனது கதைகளில் திளைத்தபடி இருக்குமாறு அத்தனை சுவைபடப் பேசினான்.

வாய்ப்பைக் கணக்கிடுகின்ற பழக்கத்துடன், தீவிரக் காம வெறியுடன் ஒன்று கலப்பதை ஸினயீதாவிடம் சுவையற்றபடி அர்தமோனவ் கவனித்தான். ஒன்றுக்கும் மேலாக அவன் பாவெல் நிகனோவினுடைய அவதூறை நினைவு கூர்ந்தான், இப்போது அது தீர்க்கதரிசனமாகி விட்டது.

''இவளை நான் ஏன் தேர்ந்தெடுத்தேன்?'' அவன் தனக்குத்தானே கேட்டுக் கொள்வான். ''அருமையான இளம் பெண்கள் இருக்கிறார்கள். இல்யா இவளைப் பற்றி அறியும் போது, என் நிலைமை மோசமாகப்போகாதா.''

ஸினயீதாவும் அவளுடைய தோழிகளும் தங்களது ஓய்வு நேரத்தை, பணியில் இருக்கின்ற வீரர்களைப் போலப் பெரிதும் ஏதோ தவிர்க்க முடியாத ஒரு கடமையாக நினைப்பது போலக் காணப்பட்டதைக் கூட அவன் கவனித்தான். அந்நேரங்களில் அவர்களுடைய வெட்கமற்ற நடத்தையானது அவர்களையும் மற்றவர்களையும் முட்டாளாக்கும் ஒரு முயற்சி தவிர வேறில்லை என்பது போல அவனுக்குத் தோன்றியது. ஸினயீதாவின் விடாப்பிடியான கெஞ்சுதலால் அவளுடைய பணப் பேராசையால் அவன் சீக்கிரமே வெறுப்புணர்ச்சி கொண்டான். தனது பணம் முழுவதையும் 'தெனெரீஃப்' மது இனிப்பிலும் (இதை ஏதோ காரணத்திற்காக 'டர்னிப் மது' என்று அழைத்தான்), அவனுக்கு விருப்பமான பழப்பாகு, இனிப்பு பன் மற்றும் வெள்ளைப் பூண்டின் காரங் கொண்ட மசாலை இறைச்சி இவற்றிலும் செலவிட்ட ஸெரஃபீமைக் காட்டிலும் அவளிடம் பணம் பறிக்கும் குணம் இருப்பது அதிகம் கவனிக்கக்கூடியதாக இருந்தது.

மிகவும் மகிழ்வூட்டக்கூடிய ஒரு துணைவனாகிய, மிகவும் திறமை வாய்ந்த தொழிலாளியாகிய இளகிய மனம் படைத்த இந்தக் கிழவனை அர்தமோனவ் விரும்பினான். உண்மையில், ஒவ்வொருவரும் ஸெரஃபீமை விரும்பினார்கள். ஆலையில் அவர்கள் அவனை 'துயர்தவிர்ப்பவன்' என்று அழைத்தார்கள். இந்த புனை பெயரில் கேலி இருந்ததை விட உண்மை அதிகமிருந்ததை பியோத்தரால் காண

முடிந்தது, இகழ்ச்சி கூட பாசத்திற்குரியதாக இருந்தது'

ஸெரஃபீமுக்கும் தீஹனுக்கும் இடையே இருந்த நட்புறவைப் புரிந்து கொள்வதும் செரிமானம் செய்வதும் எல்லாவற்றிலும் மிகவும் கடினமானதாக இருந்தது. தன் எசமானருடைய வெறுப்பை வேண்டுமென்றே ஆழப்படுத்த முயற்சிப்பது போல தீஹன் காணப்பட்டான். இது அர்த மோனவுடனான வியாலவினுடைய பணியின் இருபதாவது ஆண்டு என்பதனால், அவன் பெயருக்குரிய திருத்தகைப் புனிதர் திருநாளை குறிப்பிட்ட வினைமுறையோடு கொண்டாடுவது என நதால்யா தீர்மானித்தாள்.

''அவனைப் போன்ற ஆட்களை நீ அடிக்கடி சந்தித்ததில்லை? சற்று நினைத்துப் பார், இருபது ஆண்டுகளில், ஒரு போதும் அவன் நமக்கு எந்தத் தொல்லையும் தந்ததில்லை. நல்ல தேன்மெழுகு வத்தியின் சுவாலையைப் போல அமைதியானவன், நிதானமானவன்,'' என்று அவள் தன் கணவனிடம் கூறினாள்.

முற்றப் பாதுகாவலனுக்கு சிறப்பு மரியாதை நிமித்தம் பியோத்தர் தானே அவனுக்குப் பரிசுகளை எடுத்துச் சென்றான். ஸெரஃபீம் தன்னுடைய சிறந்த விடுமுறை நாள் உடையணிந்து தங்கும் விடுதியில் இருந்தான். தனது எசமானருடைய கால் விரல் நுனிகளைப் பார்த்து, தலை குனிந்தபடி, தீஹன் அவனுக்குப் பின்னால் நின்றான்.

''இதோ— கடிகாரம் என்னிடமிருந்து! கம்பளித்துணி என் மனைவியிடமிருந்து. இதோ கொஞ்சம் பணம் இருக்கிறது.''

''பணத்திற்கு எந்தத் தேவையும் இல்லை,'' தீஹன் முணுமுணுத்தான். சற்று இடைவெளிக்குப் பிறகு, மேலும் தொடர்ந்தான்:

''நன்றி.''

ஸெரஃபீம் அவனுக்குக் கொண்டு வந்த 'தெனெரீஃப்' மதுவை அருந்திப் பார்ப்பதற்காகத் தனது எசமானனை அவன் அழைத்தான். சின்னஞ்சிறு தச்சன் உடனடியாகத் தனது வம்பளப்பைத் தொடங்கினான்:

''எங்களை எப்படி மதிப்பதென்று உனக்குத் தெரியும், பியோத்தர் இல்யீச், உன்னை எப்படி மதிப்பதென்று நாங்களும் அறிவோம். அதை நாங்கள் இம்மாதிரி பார்க்கிறோம்: ஒரு கரடி தேனை விரும்புகிறது, ஒரு கொல்லன் இரும்பை அடித்துக் காய்ச்சுகிறான். மேட்டுக் குடியினர்

எங்களுக்குக் கரடி போல, நீ கொல்லன் போல. உன்னுடைய வியாபாரம் எவ்வளவு பெரியது என்பதும், அது எவ்வளவு வேலையை எடுத்துக் கொள்கிறது என்பதையும் நாங்கள் காண முடிகிறது.''

வியாலவ் வெள்ளிக் கடிகாரத்தை விரல்களால் தடவிக் கொண்டிருந்தான். அவனுடைய கண்கள் அதிலேயே நிலைத்திருந்தபடி, அவன் சொன்னான்:

''தொழில் என்றால் வேலியிடுவது ஒரு மனிதனுக்கு. ஒரு குழியின் ஓரம் நெடுகிலும் நடக்கின்ற போது, நாம் எதைப் பற்றிக் கொள்கிறோமோ அது.''

''அப்படிச் சொல்!'' என்று ஏதோ மகிழ்ச்சியோடு கத்தினான் ஸெரஃபீம். ''அது சரிதான்! இல்லையெனில் நாம் அதற்குள்ளாக விழுந்து விடுவோம், பார்!''

''அது உண்மையல்ல,'' என்று அறிவித்தான் அர்தமோனவ். ''ஏனெனில் நீங்கள் வியாபார உரிமையாளர்களில்லை. அத்தகைய விஷயங்களை உங்களால் புரிந்து கொள்ள முடியாது...''

தீஹனுடைய வார்த்தைகள் அவனுக்கு உடனடியாகக் கோப மூட்டியிருந்தாலும் அவற்றில் கடுமையான எதிர்ப்புகளை அவன் எதிர்நோக்கினான், ஆனால் அவற்றில் அதைக் காணத் தவறினான். தன்னுடைய பிடிவாதமான, விளக்கமில்லாத சிந்தனையை இத்தகைய வார்த்தைகளில் தீஹன் வெளியிடுவது இது முதல் முறையல்ல; திரும்பக் கூறும் ஒவ்வொரு முறையும் அவை அவனுடைய எசமானனுக்கு அதிகமான கவலையைத் தந்தது. பியோத்தர் மூச்சை இழுத்துக் கொண்டான், தனது காதை இழுத்துவிட்டுக் கொண்டான், அவனைத் திட்டுவதற்கான வார்த்தைகளைத் தேடிக் கிடைக்காதபடி முற்றப் பாதுகாவலனுடைய சரியாக வெட்டப்படாத அதிகம் தைலமிடப்பட்ட தலையை உற்றுப் பார்த்தபடி இருந்தான்.

''உண்மையில், வியாபாரத்தில் பல்வேறு வகை இருக்கின்றன. கெட்டதும் நல்லதும்...'' என்று சமரசப்படுத்துவது போல ஸெரஃபீம் பேசினான்.

''சிறந்த கத்தி என்பதால் உன் தொண்டையை அறுக்காமல் இராது,'' என்று தீஹன் முணுமுணுத்தான்.

அவனுடைய எசமானன் அவனைச் சரியாகத் திட்ட வேண்டும் என உணர்ந்தான். அது தீஹனுடைய பெயருக்குரிய திருத்தகைப் புனிதர் திருநாள் என்பதால் இந்த

உணர்வினைச் சிரமப்பட்டு கட்டுப்படுத்திக் கொண்டு, அவன் கண்டிப்போடு கேட்டான்:

''உனக்கு என்ன கோளாறாகி விட்டது—எப்போது பார்த்தாலும் தொழிலைப் பற்றி முட்டாள்தனமாகப் பிதற்றிக் கொண்டிருக்கிறாய்? என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை...''

மேசைக்குக் கீழாகப் பார்த்துக் கொண்டிருந்த தீஹன் ஒப்புக் கொண்டான்:

''ஆமாம், புரிந்து கொள்வது கஷ்டந்தான்.''

தச்சன் மறுபடியும் பேசினான்:

''பாருங்கள், பியோத்தர் இல்யீச் தீங்கு பயக்காத வியாபார வகைகள் மட்டுமே இருக்க வேண்டும் என்று நினைக்கிறான்...''

''நிறுத்து, ஸெரஃபீம், அவனுக்காக அவனே பேசட்டும்.''

பிறகு தீஹன், நகராதபடி, உள்ளங்கை போல பெரிதான, தனது தலையில் உள்ள இளம் பழுப்பு நிறமான வழுக்கையைத் தனது எசமானர் பார்க்கும் படியாகக் குனிந்து, பெருமூச்சு விட்டான்:

''தொழில்கள் என்பது என்னவென்றால் சாத்தான் காயீனுக்குக் கற்றுக் கொடுத்தது...''

''அருமையான சொற்கள்!'' என்று ஸெரஃபீம் கத்தினான், தனது முழங்காலைத் தட்டியபடி. அர்தமோனவ் எழுந்து நின்றான், முற்றப் பாதுகாவலனுக்குக் கோபத்தோடு அறிவுறுத்தினான்:

''உன்னால் எதைப் புரிந்து கொள்ள முடியவில்லையோ அதை நீ பேசாமல் இருப்பது நல்லது. ஆமாம்.''

தீஹன் வெளியேற்றப்பட்டாக வேண்டும் என்று சிந்தித்தபடி, மிகவும் எரிச்சலோடு, அவன் அந்த இடத்தை விட்டுக் கிளம்பினான். நாளைக்கு அவனை வெளியேற்ற வேண்டும். சரி, நாளைக்கு அல்ல. அடுத்த வாரம். அலுவலகத்தில், பபோவா தனக்காகக் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். அந்நியளைப் போல அவனுக்கு வாழ்த்துத் தெரிவித்தாள். கீழே உட்கார்ந்தபடி, தனது கைக்குடையால் தரையை அழுத்தினாள். அவளால் உடனடியாகக் கொடுக்க முடியாத, தனது அடை மானத்திற்கான வட்டியைப் பற்றி அவள் பேசத் தொடங்கினாள்.

அவள் பக்கம் திரும்பிப் பார்க்காமலே, ''அதைப் பற்றிப்

பரவாயில்லை,'' என்று அமைதியாக பியோத்தர் கூறினான். அவள் தொடர்ந்து பேசினாள்:

''காலக் கெடுவை நீட்டிக்க நீங்கள் விரும்பவில்லை என்றால், அதை மறுப்பதற்கு உங்களுக்கு உரிமை உண்டு,'' என்று சங்கடப்பட்ட குரலில் சொல்லியபடி, குடையால் தரையைத் திரும்பவும் குத்திவிட்டு, எதிர்பாராத அளவு வேகத்தோடு புறப்பட்டாள், அவள் கதவைச் சாத்திக் கொண்டிருந்த நேரத்தில் அவன் நிமிர்ந்து பார்த்தான்.

''அவள் கோபமாக இருக்கிறாள். எதற்காக என்று வியப்பாக இருக்கிறது?'' என்று அர்தமோனவ் நினைத்தான்.

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு, ஓல்காவினுடைய வரவேற்பறையில் அவன் உட்கார்ந்து கொண்டிருந்தான், தனது குல்லாயை சோபாவின் மீது அழுத்தத்தைக் காட்டத் தட்டியபடி கூறினான்:

''எந்த வகையிலும், அவளுடைய வட்டியையோ, அவளுடைய பணத்தையோ விரும்பவில்லை என்று அவளிடம் நீ சொல்லு. அது ஏதோ அதிகமிருப்பது போல! அவள் கவலைப்பட வேண்டியதில்லை, புரிந்ததா?''

தன்னுடைய பட்டு நூற்கண்டின் பொருத்தமற்ற முடிச்சுகளுக்கும், பாசி மணிப்பெட்டிகளுக்கும் மேலாகக் குனிந்தபடி, ஓல்கா சிந்தனை வயப்பட்டவளாகக் கூறினாள்:

''நான் புரிந்து கொண்டேன், சரி, ஆனால் அவள் புரிந்து கொள்வாள் என்று நான் நினைக்கவில்லை.''

''சரி, அவளும் புரிந்து கொள்வது மாதிரி ஏதாவது செய். என்னை நீ புரிந்து கொண்டது என்ன?''

''நன்றி,'' என்றாள் ஓல்கா. கண்ணாடி போன்ற முறுவலிப்புடன் அவள் தலை நிமிர்த்திய போது, அவளது மூக்குக் கண்ணாடி மின்னியது அவனுக்குச் சினத்தை மூட்டியது.

''கேலி செய்யாதே,'' என்றான் அவன் முரட்டுத்தனமாக. ''அவளுடைய இதயத்திலே நான் ஒன்றும் காலூன்றப் போவதில்லை. அதைச் செய்ய முயலவும் இல்லை. அது மாதிரி நீ நினைக்க வேண்டாம்!''

''ஓ, நீ ஒரு குடியானவன்,'' என்ற ஓல்கா, சந்தேகத்தோடு தனது மென்மையான தலையை ஆட்டியபடி பெருமூச்செறிந்தாள்.

பியோத்தர் கத்தினான்:

''என்னை நம்பு! நான் என்ன பேசிக் கொண்டிருக்கிறேன் என்பது பற்றி எனக்குத் தெரியும்...''

''ஓகோ, உண்மையிலேயே உனக்குத் தெரியுமா?''

அவளுடைய பெருமூச்சில் பரிதாப உணர்வு இருந்ததை அர்தமோனவ் உணர்ந்து கொண்டான். கண்ணாடிக்குப் பின்னால் அவளுடைய கண்கள் இரக்கத்துடன் தெரிந்தன, பெரும்பாலும் பரிவுணர்ச்சியே காணப்பட்டது. ஆனாலும் அது அவனுக்குக் கோபத்தை மூட்டியது. அதை இன்னும் தெளிவாக அவளுக்கு விளக்கிச் சொல்ல முயன்றான், ஆனால் சரியான வார்த்தைகள் கிடைக்காது தத்தளித்தபடி, நன்கு பருத்துக் கொத்துக் கொத்தாகத் தொங்கிக் கொண்டிருந்த இலைகளுக்கு மத்தியில், விலங்கின் காதுகளைப் போலக் காணப்பட்ட பிகோனியாச் செடியின் இலைகளைச் சன்னல் சட்டத்தின் வழியாகப் பார்த்தான். கடைசியாக அவன் சொன்னான்:

''அவளுடைய எஸ்டேட்டுக்காக நான் வருந்துகிறேன். அது ஓர் அற்புதமான எஸ்டேட். ஆம், அவள் அங்கு தான் பிறந்தாள்...''

''அவள் ரியஸானில் பிறந்தாள்...''

''அவள் அங்கேதானே வசித்துக் கொண்டிருப்பது வழக்கம். என்ன வித்தியாசமிருக்கிறது? மேலும் அங்கே தான் என்னுடைய ஆன்மா முதலில் அமைதியாக உறங்கியது...''

''விழித்துக் கொண்டிருக்கிறது,'' என்று திருத்தினாள் ஓல்கா.

''ஆன்மாவுக்கு எல்லாமே ஒன்றுதான், நீ எப்படி அழைத்தாலும் சரி— அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறது அல்லது விழித்துக் கொண்டிருக்கிறது...''

தான் என்ன பேசிக் கொண்டிருக்கிறோம் என்பதைப் பற்றி தானும் புரிந்து கொள்ளாமலேயே அவன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தான். ஓல்கா கை மீது கன்னத்தை வைத்தபடி கேட்டாள். அவன் தானாகவே பேசி முடித்த போது, அவள் கூறினாள்:

''இப்போது நான் சொல்வதைக் கேள்...''

அந்த நூல் கண்டு சுற்றும் பெண்ணுடனான இவனது தகாத உறவை நதால்யா அறிவாள் என்பதையும், அவள் புண்பட்டுப் போய், அழுது புகார் செய்தாள் என்பதையும் அவனிடம் அவள் கூறினாள். ஆனால் இது அர்தமோனவின் உள்ளத்தைத் தொடவில்லை.

''அவள் ஒரு தந்திரக்காரி,'' என்று முறுவலிப்புடன் கூறினான். ''அவளுக்குத் தெரியும் என்பதை அவள் ஒரு போதும் சாடையாகக் கூட என்னிடம் காட்டியதில்லை. அவள் உன்னிடத்தில் புகார் செய்திருக்கிறாளா? சரி. ஆனால் அவள் உன்னை விரும்பவில்லை.''

கண நேரம் சிந்தித்தவன் மேலும் தொடர்ந்தான்:

''அவர்கள் ஸினயீதாவை 'பம்பு' என அழைக்கிறார்கள். இது சரிதான்! என்னிடமிருந்து எல்லா உரத்தையும் உறிஞ்சிவிட்டாள்.''

''அருவருப்பான விஷயங்களை நீ பேசுகிறாய்,'' என்று பழிப்புக் காட்டியபடி ஓல்கா கூறினாள், பெருமூச்செறிந்தாள். ''உன் ஆன்மாவை ஓர் எடுப்புப் பிள்ளையைப் போல நடத்துகிறாய் என்று உன்னிடம் ஒரு நாள் நான் சொன்னது எனக்கு நினைவிருக்கிறது. அது முற்றிலும் சரியானது, பியோத்தர். நீ உன்னைப் பற்றியே பயப்படுகிறாயே, நீ தான் உன்னுடைய எதிரி என்பது போல...''

இந்த வார்த்தைகள் அவனைப் புண்படுத்தின.

''நீ அத்து மீறிச் சென்று விட்டாய். நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய், நான் ஒரு பையனா? அது போன்ற விஷயத்தை நீ நினைப்பது நல்லது: இங்கே உட்கார்ந்து உன்னோடு நான் பேசிக் கொண்டிருக்கிறேன், என்னுடைய ஆன்மா திறந்து விரிந்திருக்கிறது, இது போல வேறு யாரிடம் என்னால் பேசமுடியும்? நதால்யாவோடு அதிகம் பேசிக் கொண்டிருக்க முடியாது. சில நேரங்களில், அவளை அடிக்க விரும்புகிறேன். மேலும் இங்கே நீ... ஓ, நீங்கள் பெண்கள்!..''

தனது குல்லாயைப் போட்டுக்கொண்டு பேச்சற்ற மனச் சோர்வால் பிடிக்கப்பட்டு, அவன் கிளம்பினான். தன்னுடைய மனைவியின் பால் அவன் மனம் திரும்பியது. கடந்த காலத்தில் அவளைப் பற்றி சிந்திக்காமலேயே இருந்து விட்டான்— ஒவ்வொரு இரவிலும் கூட, கடவுளிடம் வேண்டிக் கொண்ட பிறகு, வழக்கமான பாசத்தோடு அவனுக்குப் பக்கத்தில் அவள் படுத்துக் கொண்ட போதும், மிகவும் அரிதாகத்தான் அவளைக் கவனித்திருக்கிறான்.

''அவள் அறிவாள், இருந்தும் அவள் வழக்கம் போலவே இருந்தாள்,'' என்று சீற்றத்தோடு சிந்தித்தான். ''பன்றி.''

பியோத்தருடைய மனைவி அறிமுகமான பாதை போல இருந்தாள், அதில் அவனால் நடை பிசகாமல் குருட்டுத்

தனமாக மிதிக்க முடிந்தது. அவளைப் பற்றி சிந்திக்க அவனுக்கு விருப்பமிருந்ததில்லை. ஆனால், வீங்கிய முகத்துடனும், செந்நிறமான, கோரமாக ஊதி உப்பிய உறுப்புகளுடன், கைவைத்த நாற்காலியில் மெதுவாகச் செத்துக் கொண்டிருந்த அவனுடைய மாமியாரை அவன் நினைத்துப் பார்த்தான்; அதிகமாகிக் கொண்டிருந்த வெறுப்புடன் அவனை மதிக்கத் தொடங்கியிருந்தாள். ஒரு காலத்தில் அழகாக இருந்த அவளுடைய கண்கள் இப்போது வெண் படலம் பரவி, பீளை சுரந்தது, அதினின்னும் வருந்தத் தக்கவாறு நீர் ஓடியது, அவளுடைய உருக்குலைந்த உதடுகள் அசைந்தன, ஆனால் அவளால் பேச முடியவில்லை: அவளது நாக்கு வலிமையற்று, வாய்க்கு வெளியே தொங்கிக் கிடந்தது; பாதி உயிருடனிருந்த தனது இடது கையால் அதை அவள் உள்ளுக்குத் தள்ளிவிட்டுக் கொள்ள வேண்டியிருந்தது, ஏலவே உல்யானா பய்மகோவா பாதி செத்தது போலிருந்தாள்.

''அவளுக்கு உணர்ச்சிகள் இருக்கின்றன. அவளுக்காக நான் வருந்துகிறேன்.''

ஸினயீதாவுடனான தனது வெட்கமற்ற தொடர்பைச் சுருக்கிக் கொள்ள வேண்டும் என்பதற்கான மனவலிமை எதிர்பார்த்திருந்ததை விட அதிகமாகத் தேவைப்பட்டது. அது முடிந்து போன உடனேயே, நூல் கண்டு சுற்றும் பெண் பற்றிய அவனது நினைவுகள் அருகருகே நின்று அவனை வருத்தும் புதிய சிந்தனைகள் தோன்றின. இன்னொரு பியோத்தர் அர்தமோனவ் ஒருவன் தோன்றி, அவனருகே வாழ்ந்து வருவதாகவும், அவன் செல்லுமிடங்களுக்கெல்லாம், அவனைப் பின் பற்றி வருவதாகவும் அவன் எண்ணி மயங்கினான். இந்தப் புதிய ஒத்த உருவினன் நாளுக்கு நாள் வளர்ந்து மிகவும் சிக்கலாவதாகவும், உண்மையான பியோத்தர் அர்தமோனவ் ஆன, தனக்குள்ளாக நுழைந்து தான் செய்ய வேண்டிய அல்லது செய்து முடிக்க எல்லாவற்றிலும் முட்டுக்கட்டை இடுவதாக உணர்ந்தான். சில வேளைகளில் அவன் சிந்தனையை விட்டுவிட்டுத் திண்டாடும் போது, இரண்டாவது உருவம் அவனைத் தந்திரமாக பற்றிப் பிடித்து மரணபயத்தை ஊட்டும் கசப்பான எண்ணங்களை அவன் மனத்திலே உருவேற்ற முயலுவான்:

''நீ ஒரு குதிரை போல வேலை செய்கிறாய். எதற்காக? வாழ்நாள் முழுமைக்கும் போதுமானதை நீ பெற்றிருக்

கிறாய். உன் மகன் வேலை தொடங்கி இருக்க வேண்டிய நேரமிது. நீ உன் மகனை நேசிக்கிறாய்— ஆகவே அப்பாவிப் பையன் ஒருவனைக் கொன்று விட்டாய். ஓர் அருமையான பெண் உன் கண்ணில் பட்டுவிட்டாள்— ஆகவே நீ மிருகமாக ஓடினாய்.''

மேலும் எப்போதுமே, அது போன்ற சிந்தனைகளுக்குப் பிறகு, வாழ்க்கை சோர்வானதாகவும், மிகவும் ஒளியற்றதாகவும் காணப்படும்.

இல்யா வளர்ந்து விட்டதை ஒருவகையில் இவன் கவனிக்கத் தவறி விட்டான். இது மட்டுமல்லாது, கூர்ந்து கவனிக்காத எல்லாமே அவனைக் கடந்து சென்றன. கடைசியில் மாவட்ட நகரத்தைச் சேர்ந்த பணக்கார நகை வியாபாரியின் மகனான, கருத்த அரும்பு மீசை கொண்ட ஒரு துடிதுடிப்பான இளைஞனுக்கு மணமுடித்து வைக்க அவர்களுடைய மகள் எலேனாவுக்கான நதால்யாவின் முயற்சிகளிலும் இது உண்மையானதாக இருந்தது. இதற்கிடையில், இறுதியாக ஜூன் மாதத்தில் புழுக்கமான ஒரு நடுப் பகலில், புயலுக்குச் சற்று முன்னர் காலமாகிப் போன அவனுடைய மாமியார் கூட மூச்சுத் திணறிப் போனாள். அவளை அவர்கள் படுக்கையில் கிடத்திக் கொண்டிருக்கையில் இடி முழங்கியது, அவர்கள் அனைவரையும் அச்சுறுத்தியது.

''கதவுகளையும் சன்னல்களையும் சாத்துங்கள்!'' தன் தாயாருடைய காலை கீழே விட்டுவிட்டு, தனது கைகளால் காதுகளில் பொத்தியபடி நதால்யா கத்தினாள். வீங்கிய குதிங்கால் தரை மீது விழுந்து மெத்தொலி எழுப்பியது.

உயரமும் உடற்கட்டும் கொண்ட இளைஞனாகத் தன் மகன் அலுவலகத்திற்குள் நடந்து வந்ததை கண நேரத்திற்கு அடையாளம் காண முடியவில்லை என்பதை பியோத்தர் அர்தமோனவ் உண்மையாகவே நினைத்தான். இல்யா சாம்பல் நிற கோடைக்காலச் சீருடை அணிந்திருந்தான். அவனுடைய ஆலிவ் நிற முகமானது மெலிந்து காணப்பட்டது, அவனது மேல் உதட்டில் மீசை வளரத் தொடங்கி இருந்தது. கொழுத்தும் அகன்று போயும் இருந்த யாக்கவ் இன்னமும் தனது பள்ளிச் சீருடையே அணிந்து கொண்டிருந்து, வழக்கம் போலவே காணப்பட்டான். தங்களுடைய தந்தையைப் பணிவான முறையிலே மகன்கள் வணங்கிவிட்டு, அமர்ந்தார்கள்.

அலுவலகத்தில் மேலும் கீழும் நடை போட்டபடி, தந்தை

பேசினான்: ''இதோ, உங்களுடைய பாட்டி இறந்து விட்டாள்.''

இல்யா பதில் பேசவில்லை. அவன் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டிருந்தான். ஒரு வித்தியாசமான புதிய குரலில் யாக்கவ் அறிவித்தான்:

''என்னுடைய விடுமுறையின் போது இது நடந்தது நல்லதாய்ப் போயிற்று, அல்லது நான் வந்திருக்க முடியாது.''

தன் இளைய மகனுடைய புத்திசாலித்தனமற்ற பேச்சில் அர்தமோனவ் கவனம் செலுத்தாது, இல்யாவின் முகத்தைப் பார்ப்பதிலேயே இருந்தான். அவனுடைய முகத்தில் பல பெரிய மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன: அது மிக வலிமையானதாக மாறி இருந்தது, அவனது கருத்த கேசத்தால் நெற்றி மறைக்கப்பட்டிருந்தது, உயரத்தைக் குறைவாகக் காட்டியது. அவனுடைய நீல நிறக் கண்கள் ஆழமானதாகத் தென்பட்டன. ஒரு முறை கம்பீரமான சீருடையில் உள்ள இந்த துயரார்ந்த இளைஞனை அவனுடைய தலைமுடியைப் பிடித்துக் குலுக்கியதைத் தந்தை நினைத்துப் பார்க்க, ஒருவகையில் வேடிக்கையானதாகவும், உணர்ச்சி வயப்படுத்துவதாகவும் இருந்தது. உண்மையில், உண்மையிலேயே அப்படி நடந்தது என்பதை நம்புவது கடினமானதாக இருந்தது. யாக்கவைப் பொருத்த மட்டில், அவன் வெறுமனே உயரமாகவும் பெரிதாகவும் வளர்ந்து போயிருந்தான், பால் நுரை நிறக் கண்களும், குழந்தைத்தனமான வாயும் கொண்டு முன்னைப் போலவே கொழுத்தும் உருண்டையாகவும் இருந்தான்.

''நீ வளர்ந்து பெரியவனாகி விட்டாய், இல்யா,'' என்றான் தந்தை. ''நல்லது, தொழிலைப் பழகிக்கொள், பிறகு சுமார் மூன்று ஆண்டுகளில் நீ தலைமையை எடுத்துக் கொள்வாய்.''

இல்யா தன் தந்தையை உற்றுப் பார்த்தான். மரத்தாலானதும், ஒரு மூலையில் கொத்தப் பட்டதுமான சிகரெட் பெட்டியை தனது கைகளில் வைத்து விளையாடிக் கொண்டிருந்தான்.

''இல்லை, நான் இனியும் படிக்கப் போகிறேன்.''

''அதிக காலமா?''

''நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள்.''

''ஐயோ! நீ என்ன படிக்கப் போகிறாய்?''

''வரலாறு.''

தன் மகன் சிகரெட் பிடிக்கத் தொடங்கியிருந்தது அர்த்தோனவுக்கு அதிருப்தியளித்தது. அந்த சிகரெட் பெட்டியானது கூளமாக இருந்தது. இன்னும் சிறந்ததாக அவன் வாங்கி இருக்க முடியும். இன்னும் அதிகமான அதிருப்தியளித்தது தனது படிப்பைத் தொடர வேண்டும் என்ற இல்யாவின் நோக்கமும், வீட்டிற்கு வந்த முதல் ஓரிரு நிமிடங்களிலேயே அதனை வெளியிட்டதுமாகும்.

குறுகிய குழாயின் திறவை வழியாக சிறிதாக நீராவித் திவளைகள் வெளியேறிய ஆலைக் கூரையில் இருந்த சன்னலைச் சுட்டிக் காட்டி, வேலை நடக்கும் போது ஏற்பட்ட இரைச்சலுக்கிடையே கிளர்ந்துரைத்தபடி, அழுத்தமாக ஆனால் கனிவான குரலில் பேசினான்:

''அங்கே வெளியேறிக் கொண்டிருக்கிறதே அது தான் உனக்கு வரலாறு! நீ படிக்க வேண்டியது அது தான். நார்ப்பட்டு நெய்வது நம்முடைய பணி, வரலாறு— அது நம்முடைய விவகாரமல்ல. எனக்கு ஐம்பது வயது. நான் விடுவிக்கப்பட்டிருக்க வேண்டிய நேரம் இது.''

''மிரோன் உங்களை விடுவிப்பான், யாக்கவும் தான். மிரோன் ஓர் என்ஜினியராகப் போகிறான்,'' என்று இல்யா பதிலளித்தான். சன்னல் வழியாக அவன் தனது சிகரெட்டின் சாம்பலைத் தட்டிவிட்டான். தந்தை நினைத்தான்:

''மிரோன் என்னுடைய தம்பி மகன், என் மகன் இல்லை. சரி, இது பற்றி எல்லாம் நாம் பிறகு பேசுவோம்...''

பையன்கள் எழுந்து வெளியே சென்றார்கள். தந்தை அவர்கள் போவதைப் பார்த்தான். அவனுடைய கண்கள் வேதனையாலும், வியப்பாலும் விரிந்திருந்தன: அவனிடம் கூறுவதற்கு அவர்களிடம் எதுவுமே இல்லாமலா போய் விட்டது? அவனுடைய அலுவலகத்தில் அவர்கள் ஐந்து நிமிடங்கள் மட்டுமே அமர்ந்திருந்தனர். ஒருவன் முட்டாள் போலப் பேசினான், பிறகு தூங்கி வழிந்தபடி கொட்டாவி விட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டான்; மற்றவன் புகையிலை கொண்டு புகைத்தான், ஆரம்பத்திலேயே அவனை நிலைகுலையச் செய்து விட்டான். அதோ, அவர்கள் முற்றத்தில் போய்க் கொண்டு இருந்தார்கள். இல்யாவின் குரலை அவனால் கேட்க முடிந்தது:

''ஆற்றைப் பார்க்க நாம் புறப்பட்டுச் செல்வோமா?''

''வேண்டாம். பயணத்தில் நான் களைப்படைந்து விட்டேன்.''

''நாளைக்குக் கூட ஆறு இருக்கத்தான் போகிறது, தாயார் இறந்ததற்காக நதால்யா துயரப்பட்டுக் கொண்டிருக்கிறாள், இறுதிச் சடங்கு ஏற்பாடுகளால் சங்கடப் பட்டுப் போய் விட்டாள்.''

மகிழ்ச்சியின்மையச் சந்திப்பதற்காக விரைவு படுத்து கின்ற தனது பழக்கத்திற்குக் கீழ்ப்படிந்தபடி, அதைத் தவிர்த்துச் செல்வதற்காக வேண்டி, எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவுக்கு அதை முடித்து வைப்பதற்கு, பியோத்தர் அர்தமோனவ் தன் மகனுக்கு ஒரு வார கால இடை ஓய்வு கொடுத்தான். இந்த ஒரு வார காலத்தில், இல்யா தொழிலாளர்களிடம் பேசுகின்ற போது மரியாதை யாக 'நீர்' என்று அழைத்ததையும், மாலை நேரங்களில் வெளிக் கதவு அருகே பெஞ்சில் உட்கார்ந்து கொண்டு, தீஹனுடனும், ஸெரஃபீமுடனும் மணிக்கணக்காகப் பேசிக் கொண்டிருப்பதையும் கவனித்தான். ஒரு முறை, தனது சன்னலருகே நின்றபடி, அவர்களது உரையாடலை பியோத் தர் ஒட்டுக் கேட்கவும் செய்தான். தீஹனுடைய உயிரற்ற குரலானது மடத்தனமாக இரைச்சலிட்டது:

''ஆக, அப்படித்தான்! பிச்சைக்காரன் போல வாழ் வது என்பதில் வாழ்வதில் எந்த அர்த்தமும் இல்லை என் பது பொருள். அது உண்மை, இல்யா பெத்ரோவிச், பேரா சைப் படுவதை மக்கள் நிறுத்தினால், ஒழுங்காக நடை பெற ஒவ்வொன்றும் இடமேற்படும்.''

ஸெரஃபீம் மகிழ்ச்சியோடு கத்தினான்:

''ஆமாம், எனக்குத் தெரியும்! எவ்வளவோ காலத் திற்கு முன்னர் அது பற்றி நான் கேள்விப் பட்டிருக் கிறேன்...''

யாக்கவ் மிகவும் புரிந்து கொள்ளத் தக்கவாறு நடந்து கொண்டான். ஆலைக் கட்டிடங்களைச் சுற்றிலும் வரத் தொடங்கினான், பெண்களை நோட்டமிட்டான், பெண்கள் குளிக்கச் சென்ற நேரத்தில், சிற்றுணவு நேரத்தில், ஆற் றுக்கு மேலாகப் பார்ப்பதற்காகத் தொழுவத்தின் கூரை மீது ஏறினான்.

''வெறுமனே ஓர் எருதுக் குட்டி,'' என்று தந்தை வேத னையோடு எண்ணினான். ''அவனைக் கண்காணித்துக் கொள்ளவும் அவன் எதையும் பிடித்து விடாமல் பார்த்துக் கொள்ளவும் நான் ஸெரஃபீமிடம் சொல்ல வேண்டி இருக்கிறது...''

மப்பும் மந்தாரமுமாக, துயரார்ந்த அமைதியான நாளாக அந்தச் செவ்வாய்க் கிழமை இருந்தது. அதிகாலையில் சுமார் ஒரு மணி நேரத்திற்கு, நெருக்கமற்ற, சோம்பேறியான, சிறு மழை பூமிக்கு மேலாகக் கொட்டியது. உச்சி வாக்கில் சூரியன் தலைக் காட்டியது, ஆலையிலும், இரண்டு நதிகளின் சங்கமத்திலும் தயக்கத்தோடு ஒளியை வீசியது, இரவு நேரத்தில் தன்னுடைய தூவி போன்ற தலையணைக்குள்ளாகத் தனது இளஞ்சிவப்பான கன்னங்களை நதால்யா புதைத்துக் கொள்வது போல, கதிர்களும் தங்களைத் தாங்களே மெல்லிய பழுப்பு நிறமான இழை மொத்தை போன்ற மேகங்களுக்குள்ளாகத் திரும்பவும் ஒளிந்து கொண்டன.

மாலை நேரத் தேநீர் வேளைக்குச் சற்று முன்னதாக யாக்கவை அர்தமோனவ் கேட்டான்:

''உன் அண்ணன் எங்கே?''

''எனக்குத் தெரியாது. சற்று நேரத்திற்கு முன்னால் குன்றின் மீது ஒரு பைன் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருந்தான்.''

''போ, அவனைக் கூப்பிடு. இல்லை, வேண்டாம். நீங்கள் இரண்டு பேரும் எப்படி நடந்து கொள்கிறீர்கள் என்று என்னிடம் கூறலாமா?''

பதில் கூறுவதற்கு முன்னதாக, அவனுடைய இளைய மகன், வெறுமையாக அறியக் கூடியவாறு முறுவலித்தது போல அவனுக்குத் தோன்றியது.

''பரவயில்லை, அன்பாக.''

''இவ்வளவே தானா? உண்மையை சொல்...''

யாக்கவ் தனது கண்ணைத் தாழ்த்தி, கண நேரம் சிந்தித்தான்.

''கருத்துகளுக்கு வருகின்ற போது, நாங்கள் மிகவும் ஒத்துப் போவதில்லை.''

''என்ன கருத்துகள்?''

''பொதுவாக, ஒவ்வொன்றைப் பற்றியுந்தான்.''

''சரி, நீங்கள் ஒத்துக் கொள்ளாதது எது?''

''அவன் எப்பொழுமே புத்தகங்களின் வழியில் செல்வான், நானோ எளிமையாக எனது மூளையைப் பயன்படுத்துவேன். எனது மூளை எனக்கு என்ன சொல்கிறதோ அது.''

''அப்படியா,'' என்றான் தந்தை. மேற்கொண்டு விவரங்

களை எப்படிப் பெறுவது என்பது அவனுக்குத் தெரிய வில்லை.

முரட்டுத் துணியாலான கோட்டை தனது தோள்களுக்கு மேலாகப் போட்டுக் கொண்டான், அலெக்ஸியிடமிருந்து அன்பளிப்பாகக் கிடைத்த வெள்ளியாலான பறவையின் வளைநகப் பூண் போட்ட தனது கைத்தடியை எடுத்துக் கொண்டான். வெளிவாசலுக்கு அப்பால் நின்றபடி, கையால் கண்ணை நிழல் மறைப்புச் செய்து ஆற்றை அடுத்த குன்றை ஏறிட்டுப் பார்த்தான். அங்கே மரத்திற்குக் கீழே, வெள்ளைச் சட்டை அணிந்து, இல்யா படுத்துக் கிடந்தான்.

''இன்று மணல் ஈரமாக இருக்கிறது. அவனுக்குத் தடுமன் பிடிக்கலாம். மிகவும் கவனக் குறைவாக இருக்கிறான்.''

அவசரமில்லாதபடி, தன் மகனுக்கு அவசியம் தான் சொல்ல வேண்டிய ஒவ்வொரு வார்த்தையையும் தன் மனத்தில் ஒரு சார்பின்றி நிறை போட்டபடி, தந்தை குன்றை நெருங்கிச் சென்றான். பழுப்பு நிறப் புல்லிதழ்கள் காலுக்குக் கீழே சடக்கென முரிந்தன. ஒரு கனமான புத்தகத்தைப் படித்தபடி, முகம் கீழ் நோக்கிப் பார்த்தபடி இல்யா படுத்துக் கொண்டிருந்தான், அவ்வப்பொழுது பென்சில் முனையால் பக்கங்களைத் தட்டிக் கொண்டிருந்தான். காலடி ஓசை கேட்டு, திரும்பிப் பார்ப்பதற்காக உடம்பை வளைந்தான், தன் தந்தையைப் பார்த்ததும், புத்தகத்தின் பக்கங்களுக்கு இடையே பென்சிலை வைத்து விட்டு, அதைத் தடாலென மூடினான். பிறகு எழுந்து உட்கார்ந்தான், அவனுடைய முதுகை மரத்தில் சாய்த்துக் கொண்டு, தந்தையின் முகத்தை நோக்கி நட்புரிமையோடு பார்த்தான். ஏறி வந்ததால் மூச்சு வாங்கச் சிரமப்பட்ட மூத்த அர்தமோனவ், ஒரு வளைந்த வேரின் மீது பக்கத்தில் அமர்ந்து, சிந்தித்தான்:

''இன்று நான் வியாபாரத்தைப் பேசக் கூடாது. அதற்கு நிறைய நேரமிருக்கிறது. வேறு விஷயங்களைப் பற்றி நாம் சற்று பேசலாம்.''

ஆனால் இல்யா, தனது முழங்கால்களை இறுகத் தழுவியபடி, அமைதியாகப் பேசினான்:

''ஆக பாருங்கள், அப்பா, எனது மூளையை விஞ்ஞானத்திற்கு அர்ப்பணிப்பதென்று நானே முடிவு செய்துவிட்டேன்.''

''நீயாகவே அர்ப்பணித்து விட்டாயா,'' தந்தை திரும் பச் சொன்னான். ''அது ஏதோ சமயகுருமார் அமைப்பு முறை போல.''

வேடிக்கையாகப் பேச வேண்டும் என்று அவன் கருதி னான், ஆனால் வார்த்தைகள், சிடுசிடுப்போடு வெளிவந் தன, பெரும்பாலும் கோபக் குரலே வந்தது. தனக்குத் தானே சங்கடப்பட்டு, தனது கைத்தடியை மூர்க்கத்தன மாக மணல் மீது ஓங்கி அடித்தான். அதன் பிறகு மொத்தத் தில் ஏதோ விளங்கிக் கொள்ள முடியாதபடியும், மொத் தத்தில் தேவையற்றபடியும் தொடர்ந்து, இல்யாவினுடைய நீல நிறக் கண்கள் கருமையாயின, அவனது தெளிவான புருவங்கள் சுரித்தன. நெற்றியில் விழுந்த தலை முடியைப் பின்னுக்குத் தள்ளிவிட்டுக் கொண்டு, மகப் பண்பிற்கு ஒவ் வாத பிடிவாதத்தோடு பேசினான்:

''நான் ஓர் உற்பத்தியாளனாகப் போவதில்லை. அதற்கு நான் தகுதி பெற்றிருக்கவில்லை...''

''இது தீஹன் பேசுவது போல இருக்கிறது,'' என்று தந்தை இகழ்ச்சியோடு பேசினான்.

அவனுடைய சொற்களைப் பொருட்படுத்தாமல், தான் ஏன் ஓர் உற்பத்தியாளனாக விரும்பவில்லை அல்லது, பொதுவாக எந்தத் தொழிலுக்கும் எசமானனாக விரும்ப வில்லை என்பதை விளக்க முயன்றான் மகன். அவன் நீண்ட நேரம் பேசினான்— ஒரு வகையில் முழுமையாகப் பத்து நிமிடங்கள்; ஒன்றுக்கும் மேலாக, அவனுடைய பேச்சின் போது, ஏதோ ஒன்று உண்மையானதாகக் காணப்படுவது போல, தனது வெறுமையான முறைப்படுத்தப்படாத சுய ஏக்கங்களுக்கு இசைவாக ஏதோ மகிழ்ச்சி காணப்படுவது போல தந்தை உணர்ந்தான். எனினும், மொத்தத்தில் தன் மகனுடைய பேச்சு குழந்தைத்தனமாகவும், காரண மற்றது போல இருப்பதாகவும் அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தது.

தன் மகனின் காலுக்குப் பக்கத்தில் மணலில் தனது கைத்தடியைத் திணித்தபடி ''நிறுத்து'' என்றான். ''நிறுத்து. அது சரியில்லை. அது பிதற்றம். ஒரு கட்டளை வேண்டும். கட்டளைகள் இன்றி மக்களால் வாழ முடியாது. ஒன்றி னால் எந்தப் பயனும் இல்லை என்னும் போது, யார் வேலை செய்வார்கள்? ஒவ்வொருவரும் சொல்வது என்ன: 'நான் அடையப் போகும் பயன் என்ன?' நாம் எல்லாருமே

அந்தக் கதிரில் தான் சுற்றப்பட்டிருக்கிறோம். எல்லாப் பழமொழிகளையும் பாரு: 'அவனுடைய ஆன்மா ஏதாவது பயன் கருதித் துடித்தால் மட்டுமே மறு நாள் அவன் ஒரு துறவியாகலாம்.' அல்லது இந்த ஒன்று: 'துறவி கூட லாபத்திற்குத்தான் தொழுகிறான்,' அல்லது, 'எந்த ஆன்மா இல்லையென்றாலும் ஓர் எந்திரம் கூட மசகிடப்படுவதையே விரும்புகிறது.' ''

அவன் முற்றிலும் அமைதியாக இருந்து, ஏற்புடைய பழமொழிகளையும், முதுமொழிகளையும் நினைவு கூர்ந்தபடி அவற்றின் காரச் சுவையுடைய அறிவினை இடையிடையே தன் பேச்சில் கலந்தான். வார்த்தைகளுக்காகத் தயங்காமல், ஆனால் எந்த முயற்சியுமில்லாமல் அவற்றைக் கண்டுபிடித்தபடி அத்தனை இணக்கமாகப் பேசிக் கொண்டிருப்பது நல்லதாக இருந்தது; மேலும் உரையாடல் நல்ல விதமாக முடியும் என்பதில் அவன் உறுதியாக இருந்தான். மகனோ கைக்குக் கை விரல்களால் மணலை மாற்றியபடியும், மணலோடு கலந்திருந்த செந்நிற பைன்மர ஊசி இலை சருகுகளைப் பிரித்தெடுத்து, பின்னர் அவற்றைத் தனது உள்ளங் கையில் வைத்து ஊதியபடியும் அமைதியாகச் செவிமடுத்தான். ஆனால் திடீரென்று அவனது தந்தை போலவே இணக்கமாக அவன் கூறினான்:

''அவை எனக்கு எதையுமே நம்ப வைக்கவில்லை. அத்தகைய நீதி வாசகங்களால் இனிமேலும் நமக்கு நாமே வழி நடத்திக் கொள்ள முடியாது.''

தனது கைத்தடி மீது சாய்ந்தபடி, மூத்த அர்தமோனவ் எழுந்தான். அவனுடைய மகன் அவனுக்கு உதவி செய்ய முன்வரவில்லை.

''ஆக. பிறகு உன்னுடைய தந்தை உனக்கு என்ன சொல்கிறானோ அது உண்மையில்லை?''

''மற்றொரு உண்மை இருக்கிறது.''

''நீ பொய் சொல்கிறாய். வேறெதுவுமே இல்லை.''

ஆலை பக்கம் தனது கைத்தடியை அலைத்தபடி தந்தை பேசினான்:

''பார்— அங்கே உண்மை இருக்கிறது! உன்னுடைய தாத்தா அதை ஆரம்பித்தார், அதற்காக என் வாழ்க்கை முழுவதையும் நான் செலவிட்டேன். இப்போது அது உன்னுடைய முறை. அவ்வளவுதான். நீயோ? நாம் வேலை செய்தோம், நீ ஏன் விளையாட வேண்டும்? மற்ற ஆட்களுடைய

தோள்களில் ஒரு துறவியைப் போல நீ வாழ விரும்பு கிறாயா, ஹூம்? கெட்ட எண்ணமல்ல! வரலாறு! வரலாறு காரி உமிழ்ந்து விடு. அது ஓர் இளம் பெண் அல்ல. நீ அதைத் திருமணம் செய்து கொள்ள முடியாது. என்ன மாதிரியான வரலாறு, முட்டாளே? வரலாறு எதற்காக? ஆனால் உன்னை நான் சோம்பேறியாக இருக்க விட மாட்டேன்...''

தன்னுடைய குரல் மிகவும் கடுமையானதாய் மாறிவிட் டதைக் கண்ட பியோத்தர் அர்தமோனவ், விஷயத்தை மூடி மறைக்க முயன்றான்:

''நான் புரிந்து கொண்டேன். நீ மாஸ்கோவில் வசிக்க விரும்புகிறாய்— இது மிகவும் வேடிக்கையானது. அலெக்ஸி யும், கூட...''

இல்யா தனது புத்தகத்தை எடுத்து, அதன் அட்டை யிலிருந்த மணலை ஊதி விட்டுச் சொன்னான்:

''படிப்பதற்கு எனக்கு அநுமதி கொடுங்கள்.''

கைத்தடியை ஆழமாக மணலுக்குள் திணித்தபடி ''நான் அநுமதிக்க மாட்டேன்!'' என்று தந்தை கத்தினான். ''அதற் காகத் திரும்பவும் கேட்காதே.''

பிறகு இல்யாவும் எழுந்தான். தன் தந்தையினுடைய தோளுக்கு மேலாக வானத்தை உற்றுப் பார்த்துக் கொண் டிருந்தான், அவனுடைய கண்கள் திடீரென்று எல்லா வண் ணத்தையும் இழந்தன, அவன் அமைதியாகப் பேசினான்:

''சரி, பிறகு, அநுமதியில்லாமலேயே நான் போக வேண்டியது தான்.''

''நீ துணிந்து விடுவாய்!''

''தனக்குப் பொருத்தமாகக் காண்கின்ற வாழ்க்கை வாழ்வதினின்றும் ஓர் ஆளை எவராலும் தடுத்து நிறுத்த முடியாது,'' என்றான் இல்யா, தனது தலையை அசைத்த படி.

''ஓர் ஆளா? நீ என்னுடைய மகன், ஓர் ஆள் அல்ல. எப்படிப்பட்ட ஆள் நீ? உன்னிடமிருக்கின்ற ஒவ்வொரு கந்தையும் எனக்குச் சொந்தமானவை.''

இது அனிச்சையாகவே வெடித்துக் கிளம்பியது. இதைச் சொல்லி இருக்க வேண்டியதில்லை. அமைதிப் படுத்துவது போல தலையை அலைத்தபடி, தந்தை மிகவும் கனிவோடு தொடர்ந்தான்:

''இப்படித்தான் நீ எனக்குக் கைமாறு செய்கிறாய் போலும்? ஓ, முட்டாள் இளைஞனே...''

இல்யாவினுடைய கன்னங்கள் கன்றிச் சிவந்தன, அவனுடைய கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன. தனது சட்டைப் பைக்குள் விட்டு அவற்றை மறைக்க முயன்றான், ஆனால் அவற்றால் பையைக் காண முடியவில்லை. தன் மகன் தேவையற்றுப் போய்விடக் கூடாது எனப் பயந்து, சரி செய்ய முடியாதபடி ஏதேனும் சொல்லிவிடாதிருக்க, அர்த மோனவ் தானே விரைந்து பேசினான்:

''எல்லாமே உனக்காகத்தான், ஒரு மனித உயிரையே நான் பறித்து கொண்டேன்... ஒருவேளை...''

''ஒருவேளை'' என்பது சேர்க்கப்பட்டது ஏனெனில் அந்த வார்த்தைகள் வெளிவந்த போது, அத்தகு சூழ்நிலையில், விஷயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் துளியுமே இல்லாத இந்தப் பையனிடம் அவை சொல்லப் பட்டிருக்கவே வேண்டியதில்லை என்று அர்தமோனவ் உணர்ந்தது தான்.

''இப்போது, யாருடைய உயிர் என்று அவன் கேட்கலாம்,'' என்று அவன் நினைத்தான், மணற்பாங்கான குன்றுச் சரிவின் கீழே விரைந்து நடந்தான். ஆனால் அவன் மகன் அவனுக்குப் பின்னே உரக்கப் பேசினான்:

''ஒரே ஓர் உயிர் மட்டுமல்ல. பாருங்களேன், அதோ ஆலைக்குப் பலியானவர்களுடைய முழுமையான இடுகாடு.''

அர்தமோனவ் நின்று பின்னுக்குத் திரும்பிப் பார்த்தான். தனது புத்தகத்தால் பழுப்புநிற வானத்திற்குக் கீழே நின்ற சிலுவை அடையாளங்களைச் சுட்டியபடி, கையை நீட்டிக் கொண்டு இல்யா நின்றான். அர்தமோனவ் காலுக்குக் கீழே மணல் அரைபட்டது. ஓரிரு நிமிடங்களுக்கு முன்னர் ஏற்கெனவே அவன் கேட்டிருந்த ஆலை பற்றிய தரக் குறைவான பேச்சையும், இடுகாடு பற்றியும் நினைத்துப் பார்த்தான். மேலும், வாய் தவறிப் பேசி விட்டதை சரி செய்வதற்கு, தன் மகனுடைய நினைவிலிருந்து துடைத் தழித்து விடுவதற்கு அவன் ஆர்வம் கொண்டிருந்தான். விரைந்து திரும்பி, கரடி போல குன்றின் மீது ஏறியபடி, தன் மகனைப் பயமுறுத்த வேண்டும் என்ற நம்பிக்கையுடன் தனது பிரம்பை சுழற்றியபடி, மூத்த அர்தமோனவ் உரக்கக் கத்தினான்:

''நீ என்ன சொன்னாய், நாயே?''

இல்யா மரத்திற்குப் பின்னால் மறைந்தான்:

''நேர்வழிக்கு வாருங்கள்! உங்களுக்கென்ன?''

அடி மரத்திற்கு நேராகத் தந்தை தனது கைத்தடியை சுழற்றினான். குச்சி முறிந்தது, உடைந்த எச்சமிச்சத்தைத் தன் மகனுடைய கால்களை நோக்கி வீசி எறிந்தான். பச்சை நிற உருண்டை கொண்ட தடியின் முனையானது மணலுக்குள் பாய்ந்தது. பியோத்தர் அர்தமோனவ் கடுமையாக அச்சுறுத்தினான்:

''உன்னை நான் கழிப்பிடங்களைச் சுத்தப்படுத்த வைப்பேன்!''

மேலும் தள்ளாடிக் கொண்டு, பெரும்பாலும் குன்றின் கீழ் நோக்கிச் சாய்ந்தபடி அவன் விரைந்து போனான், துயரமான வார்த்தைகளின் தொடர்ச்சியின்மைக்கு நடுவே அவனுடைய மனமானது சிக்குண்ட பாவு நூலின் கதிர் போல அலை மோதியது.

''அவனை நான் வெளியே துரத்தி அடிப்பேன். தேவை தான் அவனைத் திரும்பக் கொண்டு வரும். அதன் பிறகு, கழிப்பிடங்களைச் சுத்தப்படுத்த வைப்பேன். ஆமாம், உன்னுடைய முட்டாள்தனத்தை நிறுத்த!'' முறிந்து போன சிந்தனைகளாய் வெளிவந்தன, ஆடிக் கொண்டிருந்த நூலாம் படையிலிருந்து பிய்த்து வெளிவந்து மோதின; அதே நேரம் வேறு சிந்தனைகளும் இருந்தன: அவன் சரியாகச் செய்ய வில்லை என்றும், மிகவும் அதிகமாக நடந்து கொண்டு விட்டதாகவும், அதிகமாகத் தீங்கு செய்து விட்டதாகவும் இலேசாகச் சுட்டிக் காட்டியது.

ஓகா நதிக்கரைக்கு வந்தபடி, மணற் குன்றின் மீது சோர்வோடு அமர்ந்தான், முகத்திலிருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டான். ஆற்றை நோக்கி அவன் கண்கள் திரும்பின. ஆழமற்ற நீர் வாயிலில் சிறிய ஆற்று மீன் கூட்டம் ஒன்று மின்னியது, திருக்கலான எஃகு ஊசிகளைப் போல நீரைக் குத்தி ஊடுருவிச் சென்றன. தனது துடுப்புகளை எடுப்பாக விரித்தபடி ஒரு பெரிய மீன் தோன்றியது. சற்று நேரத்திற்கு அது நீந்தியது. பிறகு தனது பக்க வாட்டில் திரும்பி, கிளர்ச்சியளிக்காத மேகங்களை சிவந்த ஒற்றைக் கண்ணால் உறுத்து நோக்கியபடி, நீரில் வெண்ணிறப் புகை போல நீர்க் குமிழிகளைத் தொடர்ச்சியாக விட்டது.

மீனை நோக்கி அச்சுறுத்துகின்ற விரலால் அர்தமோனவ் ஆட்டி உரக்கச் சொன்னான்:

''எப்படி வாழ்வது என்று உனக்கு நான் சொல்லித் தருகிறேன்!''

அவனுடைய வார்த்தைகள் தவறாக ஒலிக்கக் கேட்டதனால் அவன் சுற்றிலும் திரும்பிப் பார்த்தான். நதியினுடைய விழுமிய வீறமைதிமிக்க ஓட்டமானது, அவனுடைய சீற்றத்தை அடித்துக் கொண்டு செல்லத் தொடங்கியிருந்தது; மந்தமும் வெதுவெதுப்புமான அமைதி முட்டாள்தனமான சிந்தனைகளை ஏற்படுத்தியது. எல்லாவற்றிலும் அதிகமான தடுமாற்றமானது, தான் அன்பு காட்டி வந்த மகனுக்காகத் திடீரென்று ஏற்பட்டது, அவனுடைய ஆர்வமிக்க, இடைவிடாத சிந்தனைகளின் கருப்பொருளாக கடந்த இருபது ஆண்டுகளாக இருந்து வந்தவன், துயரமான வலியினை மட்டுமே தங்க வைத்து விட்டு, அவனுடைய இதயத்தை விட்டு நழுவிப் போய்விட்டான். இந்த இருபது ஆண்டுகளில், இடைவிடாதபடி, அவன் மகனைப் பற்றி மட்டுமே சிந்தித்து வந்திருக்கிறான், அவனிடம் கொண்ட நம்பிக்கையினால் மட்டுமே, அவனிடம் செலுத்திய அன்பினாலும், பையன் பெரியவனாக வளர்கின்ற போது அசாதாரணமான விஷயங்களை அவனிடம் எதிர்பார்த்து, அவன் வாழ்ந்து வந்திருக்கிறான் என்பதும் அர்தமோனவினுடைய உறுதியான நம்பிக்கை.

''ஒரு தீக்குச்சி போல— கொழுந்து விட்டு எரிந்து அது போய்விட்டது! என்ன இது?''

சாம்பல் நிற வானம் இலேசாகச் சிவப்பாக மாறியது. நைந்துபோன துணியின் வழவழப்புப் போல ஒரு மூலையில் பிரகாசமான ஒளிக்கற்றைத் தென்பட்டது. பின்னர் நிலவின் கொத்திச் செதுக்கிய பகுதி வெளியே தலைக் காட்டியது. காற்று குளுமையாகவும் ஈரப்பதமாகவும் மாறியது, ஆற்றுக்கு மேலாக மெல்லிய பனிமூட்டம் எழுந்தது.

வீட்டிற்கு வந்த அர்தமோனவ், தன் மனைவி ஆடையின்றி இருப்பதைக் கண்டான், தனது இடது காலை வலது கணுக்காலின் மீது தூக்கி வைத்தபடி, முகஞ்சுழித்தபடி கால்விரல் நகங்களை வெட்டிக் கொண்டிருந்தாள். தன் கணவனை மேலாட்டமாகப் பார்த்தபடி வினவினாள்:

''இல்யாவை எங்கு அனுப்பினாய்?''

''நரகத்திற்கு,'' ஆடைகளையத் தொடங்கிபயடி அவன் பதிலளித்தான்.

''இன்னமும் எத்தனை சிடுசிடுப்பு,'' பெருமூச்சு விட்

டாள் நதால்யா. அவள் கணவன் பதில் பேசவில்லை. தனது படுக்கையைத் தயார் செய்தபடி, எவ்வளவு இரைச் சல் செய்ய முடியுமோ அவ்வளவு வேண்டுமென்றே ஏற் படுத்தியபடி, அவன் பலமாக மூச்சு விட்டுக் கொண்டிருந் தான். பலகணிக் கதவுகளில் ஓசை எழுப்பியபடி மழை பெய்யத் தொடங்கியிருந்தது, பழத் தோட்டத்தில் ஈரக் காற்று பரந்து வீசிக் கொண்டிருந்தது.

''படிக்கப் போனதால் இல்யாவுக்கு அதிகமான அகந் தையும் தலைக் கணமும் ஏற்பட்டிருக்கிறது.''

''அவன் ஒரு முட்டாளைத் தாயாகப் பெற்றிருக் கிறான்.''

தாயார் மூக்கைச் சிணுங்கினாள். தானாகவே சிலுவை அடையாளமிட்டுக் கொண்டு படுக்கையில் ஏறினாள். பியோத்தரோ, இன்னமும் ஆடைகளைந்தபடி, நாகரிக மற்ற மகிழ்ச்சியுடன் அவளுக்கு அவாலூட்டினான்:

''நீ எதற்கு அருகதை? ஒன்றுக்குமில்லை. உன் குழந் தைகள் உன்னை மதிக்கிறார்கள் இல்லை. அவர்களுக்கு நீ என்னதான் கற்றுக் கொடுத்தாய்? உனக்குத் தெரிந்தது எல்லாமே எப்படிச் சாப்பிடுவது எப்படித் தூங்குவது என் பது தான். பிறகு உன் மூஞ்சியைப் பூசிக்கொள்வது.''

அவன் மனைவி தலையணைக்குள்ளாக முணுமுணுத் தாள்:

''அவர்களை பள்ளிக்கு அனுப்பியது யார்? நான் உன் னிடம் கூறினேன்...''

''பேசாமல் இரு!''

நிகீதா நட்டுவிட்டிருந்த பறவைச் செடிகளின் இலை களின் மீது மழைத் துளிகள் படிப்படியாய் ஒலி பெருக்கிய படி விழுந்து கொண்டிருந்ததைக் கேட்டபடி, அவனுங்கூட மௌனமாகிப் போனான்.

''அந்தக் கூனன் தனக்கு வசதியானதாக எடுத்துக் கொண்டு விட்டான். குழந்தைகள் இல்லை, வியாபாரமும் இல்லை. தேனீக்கள். அந்தத் தேனீக்களைப் பற்றிக் கூட நான் கவலைப்படப் போவதில்லை. யாராவது தேனை விரும்பினால், அவனே போய் எடுத்துக் கொள்ளட்டும்.''

பனிக்கட்டியின் மீது படுத்துக் கொண்டிருப்பது போல, அவ்வளவு மெல்ல, நதால்யா முதுகுப் புறமாகத் திரும்பிப் படுத்தாள், வெதுவெதுப்பான கன்னத்தைத் தன் கணவனின் தோளுக்கு மேலாக வைத்தாள்.

''இல்யாவோடு சச்சரவேதும் செய்து கொண்டாயா?''

குன்றின் மீது நடந்த மோதலை விவரிக்க வெட்கப் பட்டு, அவன் முணுமுணுத்தான்:

''பெற்றோர்கள் குழந்தைகளோடு சண்டை போடுவதில்லை. பெற்றோர்கள் அவர்களைத் திட்டுகிறார்கள்.''

''அவன் நகரத்திற்குப் போய்விட்டான்.''

''அவன் திரும்பி வருவான். ரொட்டி மரங்களின் மீது வளர்வதில்லை. பணமில்லாமல் அவன் வாழ்க்கையின் ஆர்வத்தினைப் பெறுவான், அவன் திரும்பி வருவான், பயப்பட வேண்டாம். தூங்கப் போ, என்னைத் தனியாக இருக்க விடு.''

கண நேரத்திற்குப் பிறகு, அவன் சொன்னான்:

''யாக்கவிற்கு இதற்கு மேல் பள்ளி தேவையில்லை.''

இன்னும் கண நேரத்திற்குப் பிறகு:

''நாளை மறுநாள் நான் சந்தைக்குப் போகப் போகிறேன். நீ கேட்கிறாயா?''

''ஆமாம்.''

''இங்கு என்ன நடக்கிறது?'' அர்தமோனவ் சிந்தித்தான். அவன் தனது கண்ணை மூடினான், ஆனால் தனக்கு முன்னால் பையனுடைய முகத்தை, அகன்ற நெற்றியை, தன்னுள்ளாக அந்தளவுக்கு பொறுத்துக் கொள்ள முடியாதபடி நுழைந்து விட்ட மின்னுகின்ற கண்களை இன்னமும் அவன் கண்டான். ''ஒரு கூலிக்காரனைப் போல தாழ்வாக அல்லவா தன் தந்தையைக் கருதி விட்டான், இழி மகன்! ஒரு பிச்சைக்காரனை ஒதுக்குவது போல...''

விநோதமான விரிசலின் வேகத்தில் அவனால் மீண்டு எழ முடியவில்லை. விலகிப் போய் விடுவதென்று நீண்ட காலத்திற்கு முன்னமேயே தன் மனத்தை இல்யா தயார் படுத்திக் கொண்டு விட்டான் என்றே அவனுக்குத் தோன்றியது. ஆனால் அத்தகைய ஒரு நடவடிக்கைக்கு அவனை என்ன தூண்டியிருந்திருக்க முடியும்? தன் மகனுடைய கடுப்பான, கண்டிக்கின்ற வார்த்தைகளைத் திரும்ப நினைத்துப் பார்த்தபடி அர்தமோனவ் சிந்தித்தான்:

''மிரோன் தான் அவனுக்குள்ளாக இதைப் புகுத்தி இருக்கிறான், அழுக்கு நாய். தொழில் மனிதனுக்குத் தீங்கிழைப்பதாகச் சொன்ன எல்லா விஷயமும் தீஹனிடமிருந்து தான் வந்திருக்கிறது. முட்டாள், முட்டாள்! தன் நம்பிக்கையை அவன் எங்கே வைத்து விட்டான்? அவனும் கூட

பள்ளிக்குச் சென்றிருக்கிறான்! அங்கே அவன் என்ன கற்றுக் கொண்டான்? தொழிலாளர்கள் மீது இரக்கப்படுகிறான், ஆனால் தன்சொந்தத் தகப்பனிடம் எந்தப் பரிவும் கொண்டிருக்கவில்லை. தனது நேர்மையைத் தானாகவே பேணிக் கொள்வதற்காக எங்கோ ஒரு மூலைக்கு ஓடிப் போகிறான்.''

இப்படி நினைக்கையில், இழைத்த தீங்கு பற்றிய உணர்ச்சி இன்னும் அதிகமாகக் கொழுந்து விட்டு எரிந்தது.

''இல்லை, உன்னால் முடியாது! இதிலிருந்து உன்னால் வெளியேறவே முடியாது!''

அமைதி நிறைந்த சொர்க்கத்திற்குத் தப்பி ஓடிவிட்ட நிகீதாவை அவன் நினைவு கூர்ந்தான்.

''அவர்கள் எல்லாருமே என் மீது வேலைப் பளுவைச் சுமத்திவிட்டு, அவர்களோ ஓடிப் போகிறார்கள்.''

ஆனால் அர்தமோனவ் உடனடியாகத் தனது குற்றத்தை நிரூபித்துக் கொண்டான்: அது உண்மையல்ல. அலெக்ஸி ஓடிப்போய்விடவில்லை. அவர்களுடைய தந்தை நேசித்தது போலவே, அலெக்ஸி தொழிலை நேசிக்கிறான். அவன் பேராசைக்காரனாக இருந்தான், மன நிறைவடையாத பேராசை கொண்டிருந்தான். அவனுக்கு ஒவ்வொன்றும் திறமையுள்ளதாகவும், சுலபமானதாகவும் இருந்தது. ஒரு நாள் தொழிற்சாலையில், குடித்து விட்டு தொழிலாளர்கள் சண்டையிட்ட போது, அலெக்ஸியிடம் தான் கூறியதை பியோத்தர் நினைவு கூர்ந்தான்:

''மக்கள் மிகவும் மோசமாகப் போய்க் கொண்டிருக்கிறார்கள்.''

''அது தெரியத்தான் செய்கிறது'', அலெக்ஸி ஒப்புக் கொண்டிருந்தான்.

''எதற்காகவோ அவர்கள் வெறுப்புற்றவர்கள் போலக் காணப்படுகிறார்கள். அவர்கள் எல்லாருடைய கண்களிலுமே ஒரே மாதிரியான பார்வைதான் தெரிகிறது...''

இதையும் கூட அலெக்ஸி ஒப்புக் கொண்டான்; ஏளன நகைப்புடன் அவன் சொன்னான்;

''அது உண்மையும் கூட. சில நேரங்களில் எனக்கு அந்நினைவு வருவதுண்டு: உன்னுடைய திருமண நாளின் போது கூட, போர் வீரர்களோடு அப்பா மற்போரிட்டதைப் பார்த்தபடி, தனது கண்ணில் இதே போன்ற வெறுப்பைத் தான் தீஹன் பெற்றிருந்தான். பிறகு தீஹனும் மற்போரிடத் தள்ளி விடப்பட்டான். நினைவிருக்கிறதா?''

''தீஹனை எதற்காக இங்கே இழுக்கிறாய்? அவன் வெறுமனே மன உறுதியற்றவன்.''

பிறகு அலெக்ஸி கண்டிப்பாகப் பேசத்தொடங்கினான்:

''மக்கள் மோசமாகிப் போய்க் கொண்டிருக்கிறார்கள், மக்கள் சீரழிந்து கொண்டு வருகிறார்கள் என்று நீ அடிக்கடி பேசுவதை நான் கவனித்திருந்திருக்கிறேன். ஆனால் மொத்தத்தில், அது நமக்குத் தேவையில்லாதது. அது பாதிரியார்களுக்கும், ஆசிரியர்களுக்குமான வேலை, நல்லது—வேறு யார்? எல்லாவிதமான டாக்டர்களும், அலுவலர்களும். மக்கள் கெட்டுப் போகாமல் பார்த்துக் கொள்வது அவர்களுடைய வேலை. மக்கள் தான் அவர்கள் விற்க வேண்டிய பண்டம்— நீயும் நானும்— வாங்கிக் கொள்ள வேண்டியவர்கள். காலப் போக்கில் இந்த உலகத்திலுள்ள ஒவ்வொன்றுமே கெட்டுப் போகத்தான் போகின்றன. எடுத்துக் காட்டாக, நீ கிழவனாகிக் கொண்டு வருகிறாய், அது போலத் தான் நானும். ஆனால் என்றைக்காவது ஒரு நாள் அருவருப்பான தோற்றங் கொண்ட கிழவியாகப் போகிறாள் என்பதற்காக, ஒரு பெண்ணை வாழ்க்கையை விட்டு விடும் படி உன்னால் ஓர் இளம் பெண்ணிடம் கூற முடியாது.''

''அவன் புத்திசாலி, மகா புத்திசாலி,'' என்று மூத்த அர்தமோனவ் நினைத்தான்.

தன் தம்பியினுடைய ஊக்கமுடைமை, கிண்டல்களோடும், புதிய பழமொழிகளோடும் கேட்டறியாத விதத்தில் அமைந்த அவனுடைய சுறுசுறுப்பான பேச்சு இவற்றைப் பொறாமையோடு நினைத்துப் பார்த்தான். பிறகு அவன் மனம் நிகீதா பக்கம் திரும்பியது. அவர்களுடைய தந்தை, கூனன் அவர்களுக்குத் துயராற்றுபவனாக இருப்பான் என்று ஆசைப்பட்டார். மாறாக, அவன் மட்டமான காரியங்களை, ஒரு பெண்ணின் முகத்திற்காக எல்லாவற்றையும் செய்யுமளவிற்குத் தன்னைத்தானே தாழ்ந்து போய் விட்டிருந்தான், வீட்டை விட்டும் போய் விட்டான்.

மழை கொட்டிய அந்த இரவில், மூத்த அர்தமோனவ் மனத்தில் பல்வேறு விஷயங்கள் வந்து சென்றன. அவனுடைய கசப்பான எண்ண அலைகளிடையே புகை போலக் கசிந்து மற்றொரு வகையான சிந்தனைகள் ஒன்று திரண்டன— தொடர்பு கொண்ட சிந்தனைகள், முணுமுணுக்கும் மழைத் துளிகள் போல—சரியான முடிவுக்கு வர முடியாதபடி அச்சிந்தனைகள் தடையாக இருந்தன.

''ஆனால் நான் என்ன தவறு செய்தேன்?'' என்று அவன் யாரையோ கேட்டான்; ஒரு விடையும் கிடைக்கவில்லை, ஒரு வகையில், அந்தக் கேள்வி ஒழுங்கு மீறியதல்ல என்று உணரத் தொடங்கினான். பொழுது புலர்ந்து கொண்டிருந்த போது, துறவி மடத்தில் உள்ள தன் தம்பியைப் போய்ப் பார்ப்பதென திடீரென்று முடிவு செய்தான். ஒருவேளை அங்கே, உணர்ச்சி வேகங்களினின்றும் எச்சரிக்கைகளினின்றும் தனிமைப்பட்ட ஆன்மாவோடு ஓர் ஆறுதலை, ஒரு முடிவினைக் கூட அவன் காண முடியும்.

ஆனால் கிராமப் புறத்துச் சாலைகளின் வழியாக குலுங்கியபடி நீண்ட பயணத்திற்குப் பிறகு, அஞ்சல் வண்டிக் குதிரைகள் துறவி மடத்தை நெருங்கியதும், அர்த்தமோனவ் சோர்வோடு நினைத்துப் பார்த்தான்:

''ஒரு மூலையில் வந்து இருந்து கொள்வது எளிதாக இருக்கிறது. இல்லை, பரந்த வெளியைச் சுற்றி நீ சற்று நேரம் ஓட வேண்டும்! நிலவறையில் ஊறுகாய்கள்கெட்டுப் போகாது, ஆனால் சூரிய ஒளியில் அவை விரைவாகக் கெட்டுப் போகின்றன.''

இந்த நான்கு ஆண்டுகளாக அவன் தன் தம்பியைப் பார்க்கவே இல்லை; மேலும் அவர்களுடைய கடைசிச் சந்திப்புக் கூட உயிரற்றதாகவும், சலிப்புத் தருவதாகவும் இருந்தது. தனது வருகையால் கூனன் உணர்ச்சி வயப்பட்டும், நிலைகுலைந்து போய் விட்டதாகவும் பியோத்தருக்குத் தோன்றியது. தனது கூட்டுக்குள் செல்லும் ஒரு நத்தையைப் போல, தனக்குத்தானே குலையுற்று பதைத்து சுரித்துப் போனான். குறைபட்டுக் கொள்கின்ற குரலில் அவன் பேசினான், கடவுளைப் பற்றியோ, தன்னைப் பற்றியோ, குடும்பத்தைப் பற்றியோ இல்லாது, துறவி மடத்தின் தேவைகளை, புனிதப் பயணம் செய்வோர் மற்றும் மக்களுடைய ஏழ்மை பற்றி மட்டுமே பேசினான். பெரும் முயற்சியுடன் அவனுடைய வார்த்தைகள் ஆர்வமற்றபடி வெளிவந்தன. பியோத்தர் அவனிடம் பணம் தர முன்வந்த போது, முற்றிலும் மாறுபட்ட முறையில் அவன் பதிலளித்தான்:

''அதைத் துறவிமட முதல்வரிடம் கொடு. எனக்கு அது தேவையில்லை.''

அங்கிருந்த துறவிகள் அனைவரும் நிகீதாவை மரியாதை செய்தார்கள் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது; உயரமாகவும், சதைப்பற்றில்லாத மயிரடர்ந்த மேனியும், ஒரு

17*

காது செவிடுமான—காட்டு பூதத்திற்கு நீண்ட இறுக்கமான உள்ளங்கி அணிவிக்கப்பட்டது போல காணப்பட்ட—திரு மடத்துத் தலைவர் தனது கருவிழிகளின் இயற்கை மீறிய பார்வையை பியோத்தரின் முகத்தை நோக்கித் திருப்பி, முற்றிலும் தேவையில்லாதபடி உரத்த குரலில் பேசினார்:

''நிகீதா பாதிரியார்தான் எங்களது ஏழைப் புகலிடத்தை அலங்கரிக்கிறார்.''

அந்தத் துறவி மடமானது தாழ்வான குன்றின் மீது அமைந்திருந்தது, அதைச் சுற்றிலும் பைன் மரங்கள் வளர்ந்திருந்தன, அவைகளின் கனத்த கொப்புகளுக்குள்ளாக அது மறைந்து நின்றது. மாலை நேரத்து வழி பாட்டிற்காக, மெல்லிய ஒலியெழுப்பிய கிளர்ச்சியளிக்காத அந்த மணியோசை அர்தமோனவை வரவேற்றது. நீண்டு மெலிந்த, விறைப்பான வாயில் காப்போன், படகுக் கம்பத்திற்கு மேலே சிறிய தலையையும்,அதற்கு மேலே நசுங்கியும் வெளிறியும் போன குல்லாய் ஒன்றை தேவையற்றபடி வைத்துக் கொண்டிருப்பது போலத் தோற்றமளித்தபடி, திக்கியபடி கூறினான்:

''ந...ல்...ல்...''

மூச்சு வாங்கியபடி பேசினான்:

''வ...ர...வாக...''

சாம்பலும், நீலநிறமுமான மேகம் ஒன்று மடத்திற்கு மேலாக பாதிவானத்தை மறைத்தபடி அசைவற்றுத் தொங்கியது, ஈரமும், புழுக்கமும், பசைபோன்ற தன்மையும் கொண்ட மந்தமான சூழலை தாமிர மணிகளின் ஒலிகளால் கலைக்க முடியவில்லை.

நிகீதாவுக்கான பரிசுகள் அடங்கிய பெட்டியை வண்டியை விட்டு வெளியே இழுக்கும் முயற்சியில் தோல்வி கண்ட பிறகு, ''இது எனக்கு மிகவும் கணமானது,'' என்று விருந்தினர் அறையில் மன்னிப்புக் கோரும் தோரணையில் ஏவல் பணியாற்றும் துறவி ஒருவன் கூறினான்; தனது கருநிறமான சிறிய முட்டியால் பெட்டியின் மூடியை ஓங்கிக் குத்தினான்.

புழுதி படிந்தும் களைத்தும் போயிருந்த பியோத்தர், ஆப்பிள் மற்றும் செர்ரி மரங்களுக்கு மத்தியில் ஒடுக்கமாக மறைந்திருந்த தன் தம்பியின் வெண்ணிறக் குடில் அமைந்திருந்த, பழமரங்களை நோக்கி மெதுவாக நடந்தான். அங்கு வந்து விட்டது முட்டாள்தனமானது என்று அவன் நினைத்துக் கொண்டிருந்தான்; சந்தைக்குப் போயிருந்தால்

நன்றாக இருந்திருக்கும். குறுக்கும் மறுக்குமாக நின்ற முண்டு வேர்கள் நிறைந்த கரடு முரடான காட்டுப் பாதை யில் வந்ததனால் அலைக்கழிக்கப்பட்டுப் போயிருந்தான், கடுமையான வேதனையையும், ஓய்வுக்கும் மறதிக்கும் ஏக் கத்தை ஏற்படுத்தியபடியும், அவனுடைய துயரார்ந்த எல்லாச் சிந்தனைகளுமே குழம்பிப் போய் விட்டிருந்தன.

''எனக்கு என்ன தேவை என்றால், ஒரு நல்ல குடிவெறி யாட்டம் தான்.''

அரைவட்டத்தில் அமைந்திருந்த இளம் லின்டன் மரங் களுக்கு மத்தியில் ஒரு பெஞ்சின் மீது தன் தம்பி உட்கார்ந்து கொண்டிருப்பதைக் கண்டான் அவன். தம்பிக்கு முன்னதாக சுமார் பத்து யாத்திரிகர்கள் அமர்ந்திருந்தனர். ஏதோ பிர பலமான அச்சிட்ட படத்தைப் பார்ப்பது போல அது இருந் தது. அவர்கள்: கனத்த மழைக் கோட்டு அணிந்த கருந் தாடி கொண்ட வியாபாரி ஒருவன், மழைக்கான காலணிக் குள்ளாகக் கந்தையால் சுற்றப்பட்ட ஒரு காலைத் திணித் திருந்தான்; ஒரு தடித்த கிழவன் அலிப் பிறவியான தர கனைப் போலக் காணப்பட்டான்; போர் வீரனுக்குரிய பெரிய அங்கியில், துருத்திய கன்ன எலும்புகளும், ஒளி யற்ற பார்வையும் கொண்ட நீண்ட தலை முடிகொண்ட ஓர் இளைஞனும் இருந்தான்; மேலும், குடிகாரனும், போக் கிரியுமான திரியோமவ் நகர ரொட்டி வியாபாரியாக முர் ஸீனும் இருந்தான். நீதிபதிக்கு முன்னர் நிற்கும் ஒரு திருட னைப் போல, ஒரு கம்பாய் விரைப்பாய் நின்று, முர்ஸீன் கரகரத்த குரலில் பேசினான்:

''அது உண்மைதான்: கடவுள் நீண்ட தொலைவிற்கு அப்பால் இருக்கிறார்.''

நிகீதா அந்த மக்களைப் பார்த்துக் கொண்டிருக்க வில்லை. நன்கு இறுகிப் போன தரையின் மீது தனது வெள் ளைக் கைத்தடியால் உருவரைகள் வரைந்து காட்டி, அவர் களுக்கு நல்லறிவு புகட்டினான்:

''மனிதன் தரமிழந்து கீழே செல்ல, நமது பாவத்தின் அழுகல் முடை நாற்றத்தால் அருவருப்புக் கொண்ட கட வுள் மனிதனுக்கு மேலாக இருக்கிறார்.''

''ஆறுதல் தருகிறான்,'' என நினைத்த மூத்த அர்த மோனவ், அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

''நமது நம்பிக்கை சோம்பிக் கிடப்பதைக் கடவுள் பார்க்கிறார். சாதனைகளின்றி, அவனிடத்தில் வெறுமனே

நம்பிக்கை வைப்பதில் என்ன இருக்கிறது? நமது சகோதரர் களுக்கு நாம் உதவுகிறோமா? நாம் ஒருவரையொருவர் நேசிக்கிறோமா? நமது வழிபாட்டின் போது நாம் எதைக் கேட்கிறோம்? அற்பமானவை, உருப்படியில்லாதவை. நாம் தொழத்தான் வேண்டும், ஆனால் இன்னும்...''

கூனன் தனது கண்ணை உயர்த்தினான். கண நேரத் திற்கு அவன் எதுவுமே பேசவில்லை, தன் அண்ணனைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தான். கைத்தடி கனத்து பளுவாய் இருந்தது போல, அடிக்க எடுப்பது போல மெது வாக நகர்த்தினான். பின்னர் அவன் எழுந்தான், அவனது தலை வலுவற்றபடி மார்பின் மீது தொங்கியது, கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்கு மேலாக சிலுவை அடையாளம் வரைந்தான்; ஆனால் தொழுகைக்குப் பதிலாக அவன் சொன்னது இது தான்:

''அங்கே—என்னைப் பார்ப்பதற்காக என் அண்ணன் இப்போது வந்திருக்கிறான்.''

தடித்த, முடியற்ற கிழவன் பியோத்தரைப் பார்ப்பதற் காகத் திரும்பினான், அவனது செம்பு போன்ற கண்கள் விநோதமாகச் சுழன்றன. அவன் வேண்டுமென்றே அழுத்தத் தோடு, விரைவாகத் தனக்குத்தானே சிலுவை வைத்துக் கொண்டான்.

''கடவுளுடன் செல்லுங்கள்,'' நிகீதா மேலும் சொன் னான்.

மேய்ச்சல் நிலத்தினின்றும் விரட்டப்பட்ட ஒரு மந்தை யைப் போல மக்கள் பரவலாக அப்பால் நகர்ந்து சென்றார் கள். மோசமான காலுடன் இருந்த வியாபாரியின் ஒரு கையைக் கிழவன் பிடித்துக் கொள்ள, மற்றொரு கையை முர்ஸீன் பிடித்துக் கொள்ள, உதவி செய்தார்கள்.

''நல்லது, வணக்கம், உனது அருள்வளம்.''

கருத்த நீண்ட இறுக்கமான உள்ளங்கிக்குள் இருந்த தனது நீண்ட கரத்தை சிறகு போல உயர்த்தி பாதிரியார் நிகீதா, தன் அண்ணனுடைய வணங்கி நின்ற கைகளை விலக்கி விட்டு மெதுவாகவும் மகிழ்ச்சியற்றும் கூறினான்:

''நான் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கவில்லை.''

தனது கைத்தடியால் தனது மடத்து அறை இருந்த திசையைச் சுட்டிக் காட்டி, அதை நோக்கி முன்னே நடந் தான். தனது வளைந்த கால்களை ஒரு பக்கமாக அகலப் போட்டுக் குலுங்கி நடந்தான். அவனது இதயத்தின் மீது ஒரு கை அழுத்தியபடி இருந்தது.

''உனக்கு வயதாகி விட்டது,'' குழப்பத்தோடு பியோத்நர் சுட்டிக்காட்டினான்.

''அதற்காகத்தானே நாம் வாழ்கிறோம். என் கால்கள் வலிக்கின்றன. எங்களுடைய இடம் ஈரமாக இருக்கிறது.''

முன்னிலும் அதிகமாகக் கூனல் விழுந்தது போல நிகீதா காணப்பட்டான். அவனது வலது தோளும், கூனலின் சாய்வும் முன்னுக்குத் தள்ளிக் கொண்டு வந்திருந்தன, தரைக்கு அண்மையில் அவனது உடம்பு வளைந்து கொண்டிருந்தது, அவனைக் குள்ளமாகவும் தடியாகவும் காட்டியது. தலை இழந்து போன ஒரு சிலந்தியைப் போல, சரளை பரத்திய பாதையின் மீது குருடன் போல ஊர்ந்து கொண்டும், நெளிந்து கொண்டும் செல்வது போல அவன் காணப்பட்டான். தன்னுடைய தூய்மையான சிறிய மடத்து அறையின் குறுகலான இடத்தில் பாதிரியார் நிகீதா ஓரளவுக்குப் பெரிதாகவும், திகைப்பூட்டுவது போலவும் காணப்பட்டான். அவன் தன்னுடைய முக்காட்டு மேலங்கியை அகற்றிய போது, அவனுடைய தந்தம் போன்ற வழுக்கைத் தலை, பளபளப்பாக்கப்பட்ட மண்டையோடு போல, மங்கலாக மின்னியது. நரைத்த தலை முடியானது உருக்குலைந்தபடி காதுகளுக்குப் பின்னும், தலையைச் சுற்றி பின்னுக்கும் தொங்கின. தந்தம் போன்ற முகத்தின் எலும்புகளில் சதையில்லாமல் இருந்தது. மங்கிய கண்களில் எந்த ஒளியும் இல்லை, அவற்றின் பார்வையானது, சுருக்கம் விழுந்து போயிருந்த பெரிய மூக்கின் மீது நிலைக்குத்தி நின்றது போலக் காணப்பட்டது. அதற்குக் கீழே இரண்டு கருத்த சுற்று வரிப்பட்டைகள், அவனது வற்றிச் சுரிப்புற்ற உதடுகள், ஓசையின்றி அசைந்தன. அவனுடைய வாய் முன்னிலும் பெரிதாக, முகத்தில் ஆழமாக வெட்டப்பட்ட குழி போல இருந்தது. குறிப்பாக மேல் உதட்டின் மீது வளர்ந்திருந்த நரைத்த மயிரானது அச்சமூட்டுவது போல இருந்தது.

தான் உற்றுக் கேட்டதற்குக் குறுக்காக வேறு ஏதேனும் ஒலிவருவதை விரும்பாதது போல, மிகவும் தாழ்ந்த குரலில், வேகமில்லாது, ஒவ்வொரு வார்த்தையையும் சிரமத்தோடு நினைவு கூர்ந்தபடி, உருண்டு திரண்ட வட்ட முகமுடைய ஏவல் பணியாற்றும் நீராவிக் குளியல் அறையின் பொறுப்பாளன் போலக் காணப்பட்ட துறவியிடம் நிகீதா பேசினான்:

''சமோவார். ரொட்டி. தேன்.''

''எவ்வளவு மெதுவாக நீ பேசுகிறாய்.''

''எனது பற்களெல்லாம் போய்விட்டன.''

வெள்ளை வர்ணம் பூசப்பட்ட மரத்தாலான கை வைத்த நாற்காலி மீது துறவி அமர்ந்தான்.

''எல்லாரும் நலமாக இருக்கிறார்களா?''

''மிகவும் நன்றாக இருக்கிறோம்.''

''தீஹன் இன்னும் உயிரோடு இருக்கிறானா?''

''அவன் நன்றாகத்தான் இருக்கிறான். அவன் என்ன தீங்கை பெற்றுக் கொள்ளப் போகிறான்?''

''அவன் என்னைப் பார்க்க வந்து நீண்ட நாட்களாகி விட்டன.''

அமைதி நிலவியது. நிகீதா அசைந்த போது, அவனுடைய இருக்கமான உள்ளங்கி சரசரத்து, விரைந்து ஓடும் கரப்பான் பூச்சியின் ஓசை போலக் கேட்டது, பியோத்தருடைய அமைதியற்ற நிலையை மேலும் அதிகப்படுத்தியது.

''நான் உனக்காகக் கொஞ்சம் சாமான் கொண்டு வந்திருக்கிறேன். அந்தப் பெட்டியை இங்கே எடுத்து வரச் சொல். அதில் கொஞ்சம் ஒயின் கூட இருக்கிறது. ஒயின் அநுமதிக்கப்படுகிறதா?''

ஒரு பெருமூச்சுடன், அவன் தம்பி பதிலளித்தான்:

''இங்கே கண்டிப்பு எதுவும் கிடையாது, அது சிரமமானது. ஏராளமான ஆட்கள் இங்கே வரத் தொடங்கியதிலிருந்து, இப்பொழுது எங்களிடத்திலும் கூட குடிகாரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் குடிப்பார்கள். என்ன செய்ய முடியும்? உலகம் மூச்சு விடுகிறது, அதனுடைய மூச்சு நச்சாகி விட்டது. துறவிகள் கூட, மனிதர்கள் தான்.''

''ஏராளமான ஆட்கள் உன்னைத் தேடி வருகிறார்கள் என்று நான் கேள்விப்பட்டேன்.''

''அதற்குக் காரணம் அவர்களால் புரிந்து கொள்ள முடியாதது தான்,'' என்றான் துறவி. ''ஆமாம், அவர்கள் வருகிறார்கள். அவர்கள் சுற்றிலும் இடித்துத் தள்ளுகிறார்கள். நேர்மையைத் தேடிச் செல்கிறார்கள் — நேர்மையான ஆன்மா, எப்படி வாழ்வது என்பதை அவர்களுக்குச் சொல்வதற்கு... எப்படியோ அவர்கள் வாழ்ந்தார்கள், இப்போது அவர்களால் முடியவில்லை. இதற்கு மேலும் அவர்களால் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது.''

துறவியினுடைய இந்த வார்த்தைகளால் கூடுதலான சங்கடத்தை உணர்ந்த மூத்த அர்தமோனவ் முணுமுணுத்தான்:

''அடிமுட்டாள்தனம். பண்ணையடிமை முறையை அவர்கள் பொறுத்துக் கொண்டார்கள், ஆனால் சுதந்திரத்தை அவர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை! அவர்களுக்குத் தேவைப் படுவதெல்லாம் இறுக்கமான கடிவாளந்தான்.''

நிகீதா பதில் பேசவில்லை.

''பிரபுக்களுக்குக் கீழாக, மக்கள் தங்களுடைய நேரத்தை வீணாக அலைந்து திரிந்து வீணாக்கவில்லை.''

கூனன் அவனை மேலோட்டமாகப் பார்த்து விட்டு கண்ணைத் தாழ்த்திக் கொண்டான்.

பரட்டைத் தலையுடனான ஏவல் பணிபுரியும் அந்தத் துறவி சமோவார், நறுமணமிக்க எலுமிச்சம் தேன், ஆவி பறக்கும் புதிதாகச் சுடப்பட்ட ரொட்டி இவற்றைக் கொண்டு வருகின்ற வரை, வார்த்தைகளுக்காகத் தேடிக் கொண்டும், காரண காரிய இணைப்பற்ற பேச்சுகளுக்குப் பிறகு நீண்ட இடைவெளி விட்டபடியும் இருந்தார்கள். பின்னர் தரை மீது அருவருப்பான முறையில் உட்கார்ந்து, பெட்டியின் மூடியைத் தூக்கிப் பார்த்துக் கொண்டிருந்த அவனை உற்று கவனிப்பதிலேயே அவர்களுடைய கவனமெல்லாம் இருந்தது. உப்பிட்டு உலர்த்திய உயர்தர மீன் வகையின் கருச்சினை கொண்ட புத்தம் புதிய டப்பா ஒன்றையும், இரண்டு பாட்டில்களையும் பியோத்தர் மேசை மீது வைத்தான்.

அடையாளத் துண்டுகளில் ஒன்றைப் பார்த்தபடி ''போர்ட் ஒயின்'' என்றான் நிகீதா. ''மடத்துத் தலைவர் இந்த ஒயினை விரும்புவார். புத்திசாலி. பல விஷயங்களை அவர் புரிந்து கொள்கிறார்.''

''ஆனால் என்னைப் பொருத்த மட்டில் மிகவும் குறைவாகத்தான் புரிந்து கொள்கிறேன்,'' என்று பியோத்தர் ஐயப்பாட்டோடு ஒப்புக் கொண்டான்.

''எவ்வளவு தேவையோ அவ்வளவுக்கு நீயும் கூடத்தான் புரிந்து கொள்கிறாய்; அதிகமாக இருப்பது எதற்காக? ஒருவருக்கு எவ்வளவு தெரிந்திருக்க வேண்டுமோ அதற்கு மேல் இருப்பதும் நலம் பயப்பதல்ல.''

துறவி சோர்வாகப் பெருமூச்சு விட்டான். அவனுடைய வார்த்தைகளில் ஒருவிதமான மனக் கசப்பை பியோத்தர் செவிமடுத்தான். மாலை நிழல் வளர்ந்து வந்த நிலையில், அவனுடைய இறுக்கமான உள்ளங்கி எண்ணெய் இட்டது

போல பளபளத்தது; ஏனெனில் அந்த அறையின் மூலையில் இருந்த தெய்வ பீடத்திற்குக் கீழாக இருந்த விளக்கின் மங்கலான ஒளியும், மேசையின் மீது மஞ்சள் நிறக் கண்ணாடிக்குள்ளாக இருந்த சாதாரண விளக்கின் ஒளியுமே அங்கே வெளிச்சத்தைத் தந்தன. தன்னுடைய 'மதீரா' ஒயினைத் தம்பி மிகுந்த ஆர்வத்தோடு உறிஞ்சிக் குடிப்பதைக் கண்டு பியோத்தர் கிண்டல் உணர்வுடன் சிந்தித்தான்:

''அவனுடைய ஒயின்களை அவன் அறிந்திருக்கிறான்.''

ஒவ்வொரு கிளாஸ் குடித்த பிறகும் நிகீதா தன்னுடைய சதையற்ற, விநோதமாக வெண்மை படர்ந்த விரல் நுனிகளால் மென்மையான ரொட்டியைக் கிள்ளி எடுத்து, தேனில் முக்கி வாயில் போட்டு, பிடுங்கப்பட்டது போன்ற அடர்த்தியற்ற நரைத்த தனது தாடியை ஆட்டியபடி, அவசரமில்லாதபடி மெல்லுவான். போதைக்கான எந்த அடையாளத்தையும் அவன் காட்டவில்லை; ஆனால் அவனுடைய கலங்கிய கண்கள், இன்னமும் மூக்கின் நுனி மீதே பார்வையைப் பதித்திருந்தாலும், ஒளி மங்கிப் போய் இருந்தது. தன் தம்பிக்குத் தான் விடாக் குடிப் பழக்கமுடையவன் என்பதைக் காட்டக் கூடாது என்பதற்காக பியோத்தர் எச்சரிக்கையோடு அருந்தினான். குடிக்கையில் அவன் சிந்தித்துப் பார்த்தான்:

''அவன் நதால்யாவைப் பற்றிக் கேட்கவே இல்லை. போன முறை கூட அவன் கேட்கவில்லை. அவன் வெட்கப்படுகிறான். யாரைப் பற்றியும் எந்தக் கேள்வியும் இல்லை. நாங்கள் உலகத்தைச் சேர்ந்தவர்கள், அவனோ துறவி. மக்கள் இவனைத் தேடி வருகிறார்கள்.''

அவன் கோபத்தோடு தன் தலையை ஆட்டினான், அவனது தாடி உள்ளாடையில் பட்டு பலமாக ஒலியெழுப்பியது. காதை இழுத்து விட்டுக் கொண்டு அவன் பேசினான்:

''நீயாகவே இங்கே நல்லபடி ஒளிந்து கொண்டாய். இங்கே அருமையாக இருக்கிறது.''

''முன்னர் இது நன்றாக இருந்தது. இப்போது மோசமாகிக் கொண்டு வருகிறது. ஏராளமான யாத்திரிகர்கள். இந்த வரவேற்புகள் எல்லாம்...''

''வரவேற்புகளா?'' பியோத்தர் கிண்டலாக முறுவலித்தான். ''இது பல் மருத்துவருடைய அலுவலகம் போல இருக்கிறது.''

ஒயினை கவனமாக ஊற்றிக் கொண்டே, ''நான் எங்காவது தொலை தூரத்திற்கு மாறுதல் பெற்றுப் போய் விடலாம் என்று விரும்புகிறேன்,'' என்றான் துறவி.

''எங்கே உனக்கு அதிகமான அமைதி கிடைக்கும்,'' பியோத்தர் கூறினான், மீண்டும் பல்லிளித்தான். துறவி தனது ஒயினை உறிஞ்சினான், தனது உறுதியற்ற கருத்த நாக்கால் தனது உதடுகளைத் துழாவியபடி, தந்தம் போன்ற தலையை அசைத்து விட்டுக் கூறினான்:

''கூடுதலான மக்கள் தங்களது மன அமைதியை இழந்து வருகிறார்கள். எண்ணிக்கை கூடிக்கொண்டிருப்பதை உன்னால் காண முடியும். கவலைகளினின்றும் விடுபட்டு ஒளிந்து கொள்ளவே அவர்கள் முயல்கிறார்கள்...''

அது உண்மையல்ல என்று தனக்குத்தானே தெரிந்து கொண்ட பியோத்தர் ''அதை நான் காணவில்லை,'' என்று திருப்பிச் சொன்னான். ''ஒளிந்து கொள்ளும் மனிதன் நீயும் ஒருவன்'' என்பதை அவன் சொல்ல விரும்பினான்.

''மேலும் அவர்களுடைய கவலைகள் கால்களைத் தொடர்ந்து நிழல் போல வருகின்றன.''

கண்டனச் சொற்கள் பியோத்தருடைய உதடுகளில் குவிந்து கொண்டிருந்தன. தன் தம்பியினுடைய வார்த்தைகளை எதிர்த்துப் பேச விரும்பினான், கோபமாகக் கூட அவனிடம் பேச நினைத்தான். தன் மகனைப் பற்றிய எண்ணங்களினால் புண்பட்ட குரலில் அவன் பேசினான்:

''கவலைகளை மனிதன் தானாகவே தேடிக் கொள்கிறான். அவன் தனக்குத்தானே கவலைகளைத் தேடியிருக்கிறான். ஒருவர் தன்னுடைய காரியத்தைச் செய்ய வேண்டும். விறைப்பாக இருக்க முயல வேண்டாம், உன்னால் போதுமான அளவுக்கு அமைதியாக வாழ முடியும்!''

ஆனால் அவன் தம்பியோ, தனது சொந்தச் சிந்தனைகளில் மூழ்கியவனாக, இதைச் செவிமடுத்தது போலக் காணப்படவில்லை. தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தவனைப் போல, அவன் தனது கோணல் உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டான்; அவனுடைய இறுக்கமான உள்ளங்கியானது தரையை நோக்கி கரிய மடிப்பாக விழுந்தது. அவனுடைய உதடுகள் முறுக்குண்டன, பியோத்தரைக் காட்டிலும் குறையாத அளவுக்குக் கோபத்தைக் காட்டுவது போல மிகத் தெளிவாக அவன் பேசத் தொடங்கினான்:

''நல்லொழுக்க போதனை கேட்டு அவர்கள் என்னிடம்

வருகிறார்கள். எனக்கு என்ன தெரியும்? என்னால் அவர்களுக்கு என்ன கற்பிக்க முடியும்? எனக்கு விவேகம் கிடையாது. மடத்துத் தலைவர் என்னைக் கற்பனை செய்தார். எனக்கோ எதுவுமே தெரியாது. அறிவுரை கூறவும் நல்லொழுக்கத்தைக் கற்பிக்கவும்— தவறாகத் தண்டிக்கப்பட்டு விட்ட ஒரு மனிதனைப் போல. அவர்களுக்குக் கற்பி, என தண்டிக்கப்பட்ட ஒரு மனிதனைப் போல நான் இங்கே இருக்கிறேன்.''

''அவன் குத்திக் காட்டுகிறான். புகார் சொல்ல நினைக்கிறான்,'' என்று மூத்த அர்தமோனவ் ஊகித்தான்.

தன்னுடைய விதியைப் பற்றிப் புகார் செய்வதற்கு நிகீதாவுக்குக் காரணம் இருந்திருக்கிறது என்பதை அவன் புரிந்து கொண்டான். முன்னைய வருகைகளின் போது கூட அத்தகைய புகார்களை அவன் எதிர்பார்த்திருந்தான். தன் காதை இழுத்து விட்டுக் கொண்டு, தன் தம்பியை முந்திக் கொண்டு அழுத்தமாக அறிவித்தான்:

''விதியைப் பற்றி பலர் குறைபட்டுக் கொள்கிறார்கள், அதிலிருந்து எந்த நன்மையும் ஏற்படுவதில்லை.''

''உண்மை; மனநிறைவு பெறுவது அரிது தான்,'' என்றான் கூனான். விளக்கு எரிந்த மூலையை நோக்கி அவனது கண்கள் திரும்பின.

''உன்னைப் பொருத்த மட்டில்— நீ ஆறுதல் சொல்! ஆறுதலை தருகிற மனிதராக இரு என்பது தந்தையினுடைய கட்டளை—அவர் ஆன்மா சாந்தி அடையட்டும்.''

நிகீதாவின் உதடுகள் கேலியான முறுவலிப்புடன் நீண்டன. தனது நரைத்த தாடியைத் தனது முட்டிக்குள்ளாக ஒன்று சேர்த்து, முறுவலிப்பை அது கொண்டு மறைத்து விட்டான். அவனுடைய குரலினின்றும் வார்த்தைகள் இருளிலே விழுந்து கொண்டிருந்தன. அவை பியோத்தரைக் குலுக்கின, அவனிடத்தில் ஆர்வத்தைக் கிளறின, அதே சமயம் ஆபத்தின் வெறுமையான எதிர்பார்ப்பையும் அவை ஏற்படுத்தின.

''நான் புத்திசாலி என்பதை என்னை நம்ப வைக்கவும், இந்த உலகத்தை நம்பவைக்கவும், இங்கே அவர்கள் பெரு முயற்சி செய்கிறார்கள். உண்மையில் அது யாத்திரிகர்களைக் கவர்ந்து துறவி மடத்தின் லாபத்தைப் பெருக்குவதற்காகத் தான். ஆனால் என்னைப் பொருத்த வரையில், அது கடினமான பணி. சகோதரனே, இது மிக முக்கியமான காரியம்! என்னால் எங்ஙனம் ஆறுதல் சொல்ல முடியும்? பொறுத்துக்

கொள்ளுங்கள் என்று கூறுகிறேன். ஆனால் அவர்கள் எல்லாருமே பொறுமையினால் சலித்துப் போய்விட்டதை என்னால் காண முடிகிறது. நம்பிக்கையோடு வாழுங்கள் என்று கூறுவேன். அது மட்டுமே—என்ன நம்பிக்கையில்? கடவுளா? கடவுளிடத்தில் அவர்கள் எந்த ஆறுதலையும் காணவில்லை. இங்கே ஒரு ரொட்டிக் கடைக்காரன் சுற்றிச் சுற்றி வருகிறான்...''

''முர்ஸீனைச் சொல்கிறாய். அவன் நமது நகரத்தைச் சேர்ந்தவன். ஒரு குடிகாரன்,'' என்றான் மூத்த அர்தமோனவ், எதையோ தவிர்க்க வேண்டும், ஒதுக்கி விட வேண்டும் என விரும்பினான்.

''அவன் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறான், அதைக் கொண்டு தானே கடவுளை விசாரணை செய்ய முடியும் என்று நினைக்கிறான். அவனுக்கு கடவுள் உலகத்துக்கு எந்த வகையிலும் எசமானன் இல்லை. துணிவும், மட்டு மீறிய தன்னம்பிக்கையும் கொண்ட இத்தகைய ஆட்கள் இப்பொழுதெல்லாம் ஏராளமாக இருக்கிறார்கள். பிறகு தாடியில்லாத மற்றொரு ஆள். அவனை நீ கவனித்தாயா? பொல்லாத மனிதன், உலகம் முழுமைக்குமே அவன் எதிரி. அவர்கள் வந்து என்னிடம் வினவுகிறார்கள். அவர்களுக்கு நான் என்ன சொல்ல முடியும்? அவர்கள் வருவதெல்லாம் என்னுடைய மன அமைதியைக் கொல்வதற்காகத்தான்.''

பெருகிக் கொண்டிருந்த ஊக்கத்தோடு துறவி பேசிக் கொண்டிருந்தான். துறவி மடத்திற்கு முன்னதாக வந்து போனதை நினைவு கூர்ந்தபடி, முன்னர் போல நிகீதா மருள விழித்து மன்னிப்புக் கேட்கும் பாவனையில் இன்று பேசவில்லை என்பதை பியோத்தர் கவனித்தான். அந்த வருகைகளின் போது, கூனனுடைய குற்ற உணர்வு கண்டு ஆறுதல் பெற்றிருந்தான்; ஏனெனில் குற்றவாளிக்குப் புகார் செய்வதற்கு உரிமையில்லை. இப்போதோ அவன் புகார் செய்து கொண்டிருக்கிறான், தான் தவறாகத் தண்டிக்கப் பட்டு விட்டதாக அறிவித்துக் கொண்டிருக்கிறான். தன்னிடம் தன் தம்பி ''என்னைத் தண்டித்தது நீ தான்!'' இப்படிச் சொல்லிவிடக் கூடும் என்று மூத்த அர்தமோனவ் பயந்து போயிருந்தான்.

முகஞ் சுழித்தபடி, தனது கடிகாரச் சங்கிலியைப் பற்றி விளையாடியபடி, தன் தற்காப்புக்கான வார்த்தைகளைத் தேடிக் கொண்டிருந்தான் அர்தமோனவ்.

''ஆமாம்,'' என்று கூனன் தொடர்ந்தான்; தான் புகார் செய்யக் காரணம் இருக்கிறது என்பதால் அவன் ரகசியமாக மகிழ்ச்சியடைவது போலக் காணப்பட்டது. ''மக்கள் மேன் மேலும் நச்சரிப்பவர்களாக இருக்கிறார்கள். தன் மூப்பான எண்ணங்கள் அவர்களது மனத்திலே ஏற்படுகின்றது. நீண்ட காலத்திற்கு முன்பு அல்ல, ஒரு படிப்பாளி எங்களோடு ஓரிரு வாரங்கள் இங்கே தங்கி இருந்தான். இளைஞன் தான் என்றாலும் அவன் கொஞ்சம் ஒரு மாதிரியாக நடந்து கொண்டான். அஞ்சி நடுங்கினான். மடத்துத் தலைவர் எனக்கு அறிவுரை வழங்கிக் கொண்டே இருந்தார்: 'உன்னுடைய எளிமை வாயிலாக அவனுக்கு வலிமையை ஊட்டு. அவனுக்கு அதை, இதைச் சொல்,' என்றார். ஆனால் மற்ற பிற மக்களுடைய சிந்தனைகள் என் மனத்திலே தங்கவில்லை. அந்தப் படிப்பாளியோ மணிக்கணக்காகப் பேசித் தொல்லை கொடுத்தான். அவன் மேன் மேலும் பேசினான், அவன் பயன் படுத்திய சொற்களைக் கூட என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவனுடைய கருத்துகள் அதைவிட என்னால் புரிந்து கொள்ள முடியாததாக இருந்தன. 'நமது சரீரத்தின் எசமானனாக சாத்தானை ஏற்றுக் கொள்வது தவறு. அது இரண்டு கடவுள்களை வழிபடுவது போலாகும், இயேசு நாதரின் இறுதி விருந்துச் சடங்கில் பங்கு கொள்ளும் நாம், இயேசுவின் உடலை அவமதித்தது போலாகும்.' அவன் தெய்வ நிந்தனை செய்தான். 'ஒரே ஒரு கடவுள் மட்டுமே இருக்கட்டும், அது இல்லாமல் வாழ்க்கையே இல்லை என்கின்ற போது, கொம்புகள் உள்ள ஒரு கடவுள்தான் வேண்டும் என்றால் கூட நான் கவலைப்படவில்லை,' என்றான். அவன் என்னைப் புரட்டி எடுத்து விட்டான். ஃபியோதர் பாதிரியாருடைய அறிவுரைகளை எல்லாம் நான் மறந்து விட்டேன், அவனிடம் சீறி விழுந்தேன்: 'உன்னுடைய சதை மாறும், உன்னுடைய ஆன்மா அழிவு பெறும்' என்றேன். பின்னர் மடத்துத் தலைவர் என்னைக் கண்டித்தார்: 'உனக்கு என்னாகி விட்டது? திருச்சபைக்கு முரணாக என்ன மாதிரியான கேலிக் கூத்து இது?' இது? ஆமாம், இப்படித் தான் இருக்கிறது...''

இந்தக் கதை பியோத்தருக்கு வேடிக்கையாகப்பட்டது; தன் தம்பியினுடைய இரங்கத்தக்க நிலையை இது வெளிப் படுத்தியதால், ஓரளவுக்கு அவனுக்கு நிம்மதியாக இருந்தது.

''கடவுளைப் பற்றிப் பேசுவது கஷ்டமானதுதான்,'' என்று அவன் முணுமுணுத்தான்.

''கஷ்டமானதுதான்,'' என்று நிகீதா பாதிரியும் ஒத்துக் கொண்டான், பின்னர் கசப்புணர்ச்சியோடு வினவினான்: ''அப்பா என்ன சொல்வதுண்டு என்பதை நினைத்துப் பார்? நாமெல்லாம் சாதாரணமான உழைக்கின்ற மக்கள். அந்த மாதிரி ஏளனமெல்லாம் நமக்கு மிகவும் அதிகமானது.''

''எனக்கு நினைவிருக்கிறது.''

''ஆமாம். 'நூல்களைப் படி!' என்கிறார் ஃபியோதர் பாதிரியார். நானும் படித்தேன், ஆனால் எங்கோ மரங்கள் அடர்ந்த ஓரிடத்தில், மரங்களிடையே வீசும் காற்றைக் கேட்பது போலத்தான் எனக்குப் படுகிறது. நூல்கள் நமது காலத்திற்குப் பொருந்தி வராது. இப்பொழுதெல்லாம் நீ சந்திக்கின்ற கருத்துகளுக்கு— உன்னால் நூல்களினின்றும் எந்த விடையும் பெற முடியாது. பிரிவினைவாதிகள் ஒவ்வொரு இடத்திலும் இருக்கிறார்கள். கனவிலே கண்டவற்றைச் சொல்லிக் கொண்டிருப்பது போல மக்கள் விவாதம் செய்கிறார்கள். குடிகாரர்கள் விடிந்ததும் பேசுவது மாதிரி. அந்த முர்ஸீனை எடுத்துக் கொள்...''

துறவி கொஞ்சம் 'போர்ட்' ஒயின் அருந்தினான், கொஞ்சம் ரொட்டியை மென்றான். மென்மையான ரொட்டியைக் கொஞ்சம் பிய்த்து எடுத்து, ஒரு சிறிய பந்து போல உருட்டி, பேசிக் கொண்டிருந்த படியே மேசையின் மீது உருட்டிவிட்டான்.

'' 'எல்லாத் தொல்லைகளுமே மனத்திலிருந்து தான் வருகின்றன' என்று ஃபியோதர் பாதிரியார் கூறுகிறார். 'இழிந்த இயல்பு கொண்ட ஒரு நாயை விரட்டுவது போல அதை சாத்தான் விரட்டுகிறான். அவன் சீண்டி விடுகிறான், காரணமில்லாமலேயே நாய் குரைக்கிறது.' அது உண்மையாகக் கூட இருக்கலாம், ஆனால் நம்புவதற்குச் சிரமமானதாக இருக்கிறது. இங்கு ஒரு டாக்டர் இருக்கிறார். எந்த விதமான போலிப் பகட்டும் இல்லாத, மகிழ்ச்சியான ஒரு மனிதன். அவன் அதை வேறு விதமாகப் பார்க்கிறான்: மனம் ஒரு குழந்தை, அது எந்த ஒன்றையும் விளையாட்டுப் பொருளாகவே எடுத்துக் கொள்கிறது, ஒவ்வொரு பொருளும் அதனைக் கவர்கிறது. பொருள்கள் எப்படி வேலை செய்கின்றன என்பதைக் கண்டு பிடிக்க, அவை எங்ஙனம் உருவாக்கப் பட்டன என்பதை அறிய, அதற்குள்ளாக என்ன இருக்

கிறது என்பதைக் காண விரும்புகிறது. உண்மையில், அது பொருள்களை உடைக்கவும் செய்கிறது...''

''இம்மாதிரியான பேச்சு ஆபத்தானது என்பதை நான் சொல்லியாக வேண்டும்,'' என்று பியோத்தர் குறிப்பிட்டான். திரும்பவும் அவன் தம்பியினுடைய வார்த்தைகள் சஞ்சலத்தையும் தவிப்பையும் விதைக்கத் தொடங்கின, அவற்றின் எதிர்பாராத்தன்மை மற்றும் உறைப்பு ஆகியன திடுக்குறவும் நடுங்கவும் வைத்தன. நிகீதாவை நசுக்கி, மதிப்பிழக்கும்படி செய்ய வேண்டும் என்ற வேட்கையை திரும்பவும் அவன் உணர்ந்தான்.

தன்னை அமைதிப் படுத்திக் கொள்வதற்காக வேண்டி ''அவன் குடித்திருக்கிறான்,'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

அந்த அறை மிகவும் புழுக்கமானதாக மாறியது. சமோவாரில் எரிந்து கொண்டிருந்த அடுப்புக் கரியிலிருந்து வெறுக்கத்தக்க நெடியும், தெய்வ பீட விளக்கின் திரியிலிருந்து எண்ணெய் நெடியும் வந்தன. அந்த நெடி பியோத்தரின் சிந்தனைகளைச் சிதறடித்தன. சன்னலின் சின்னஞ் சிறு கருப்புச் சதுரத்திற்கு நேராக, சில செடிகளின் இலைகள் அசைவற்று, இரும்பில் செதுக்கப்பட்ட உருவரைகள் போலக் காணப்பட்டன. மேலும் சிலந்தி போன்று அவனது தம்பியோ, மென்மையாக, இடைவிடாது வார்த்தைகளினால் பின்னிக் கொண்டிருந்தான்.

''எல்லாக் கருத்துகளுமே ஆபத்தானவை. குறிப்பாக எளிமையானவை. தீஹனை எடுத்துக் கொள்.''

''அவன் ஓர் அரைப் பைத்தியம்.''

''ஓ, இல்லை, இது வீணானது! அவனுக்குப் புத்தி சரியாகத்தான் இருக்கிறது. இம்மியும் பிசகாத மனது. ஆரம்பத்தில் கூட அவனிடத்தில் பேசுவதற்கு நான் பயந்திருந்தேன், பேச வேண்டும் என்று விரும்பினேன், ஆனால் அதற்கான துணிவை நான் பெற்றிருக்கவில்லை! அதன் பிறகு, அப்பா இறந்த போது, தீஹன் என்னை வென்றுவிட்டான். பார், நான் விரும்பியது போல நீ அப்பாவை நேசித்ததில்லை. நீயும் அலெக்ஸியும், அவரது மரணத்தின் அநீதியை உணரவில்லை, ஆனால் தீஹன் உணர்ந்தான். அன்றை தினம் அந்தப் பெண் துறவியிடம் அவளது முட்டாள்தனத்திற்காக நான் கோபப்படவில்லை. கடவுளிடம்தான். தீஹனும்

அதைச் சரியெனக் கண்டான். 'இதோ, கொசு உயிர்வாழ்கிறது, ஆனால் மனிதன்...' என்றான்.''

''நீ உளறிக் கொண்டிருக்கிறாய்!'' என்று பியோத்தர் கண்டிப்போடு கூறினான். ''நீ மிகவும் அதிகமாகக் குடித்து விட்டாய். எந்தப் பெண் துறவியைப் பற்றி நீ பேசிக் கொண்டிருக்கிறாய்?''

ஆனால் நிகீதா இடைவிடாது பேசினான்:

''தீஹன் சொல்கிறான்: கடவுள்தான் உலகத்தின் எசமானன் என்றால், பயிர்களுக்கும் மக்களுக்கும் நன்மை பயக்கும் போது அல்லவா சரியான நேரத்தில் மழை பெய்திருக்க வேண்டும். நெருப்புகளை எடுத்துக் கொண்டால், அவை எல்லாம் மனிதனிடமிருந்து வருவதில்லை. மின்னல் தான் காடுகளைப் பற்றி எரியச் செய்கிறது. நமக்கு சாவைக் கொண்டு வருவதற்காக காயீன் ஏன் பாவம் செய்ய வேண்டும்? உடல் ஊனம் எதற்காகக் கடவுளுக்குத் தேவைப் படுகிறது? கூனர்கள்— உதாரணமாக எதற்காக அவர்களை அவர் விரும்புகிறார்?''

தனது தாடிக்குள்ளாகச் சிரித்தபடி ''ஆகா, அதுவா விஷயம்!'' என்று பியோத்தர் நினைத்தான். கடவுளுக்கு எதிராகத் தன் தம்பி புகார் சொல்லத் தொடங்கியது கேட்டு அவன் நிம்மதியடைந்தான். தனது குடும்பத்திற்கு எதிராக துறவி எந்தப் புகாரும் சொல்லாதது நல்லதாகத் தெரிந்தது.

''காயீனை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அதைக் கொண்டே தீஹன் என் கையையும் காலையும் கட்டிப் போட்டுவிட்டான். அப்பா இறந்த அன்றைய நாளிலிருந்தே அது எண்ணிடத்தில் ஏற்படலாயிற்று. நான் துறவி மடத்துக்கு போனேன் என்றால் அது நின்று போய் விடும் என்று நினைத்தேன். ஆனால் அது நிற்கவில்லை. அதே எண்ணங்கள் தொடரத்தான் செய்கின்றன.''

''இது போன்ற விஷயங்களை முன்னர் ஒருபோதும் என்னிடம் நீ கூறியதில்லையே...''

''எல்லாவற்றையுமே உடனடியாகச் சொல்லிவிட முடியாது. உண்மையைச் சொன்னால், என் வாழ்நாள் முழுக்கக் கூட, நான் அதைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டி நேரலாம்; யாத்திரிகர்கள் மட்டுமே எனக்கு அமைதி தருவதில்லை. என்னுடைய மனச்சாட்சியை அவர்கள் அலைக்கழிக்கிறார்கள். பிறகு, அது ஆபத்தானது: என்னுடைய

சலிப்பூட்டும் போதனைகளுக்கு இடையே தீஹனுடைய கருத்துகளும் தலைக்காட்டினால்? இல்லை, அவன் புத்தி சாலி, அவனை நான் விரும்பாவிட்டாலும் கூட. அவன் உன்னைப் பற்றிக் கூட இப்படித்தான் நினைக்கிறான்: இதோ, அந்த மனிதன் தனது குழந்தைகளுக்காக அவனது ஆயுள் முழுக்க உழைத்தான், ஆனால் அவனுடைய குழந்தைகள் அவனுக்கு அந்நியர்களாகிப் போகிறார்கள்...''

''இதென்ன பேச்சு? அது பற்றி அவனுக்கு என்ன தெரியும்?'' என்று பியோத்தர் கோபமாகக் கேட்டான்.

''அவனுக்குத் தெரியும். தொழில் ஒரு பொய் என்கிறான்...''

''அதை நான் கேட்டிருக்கிறேன்... அவன் தூக்கி எறியப் பட்டிருக்க வேண்டும்— முட்டாள்— நம்மைப் பற்றியும், நமது குடும்ப விவகாரங்களைப் பற்றி மட்டுமே மிக அதிகமாகத் தெரிந்திருக்கிறான்...''

நிகீதாவினுடைய தற்கொலையை தீஹன் தவிர்த்து விட்டிருந்த அந்தத் துயரார்ந்த இரவை அவனுக்கு நினைவூட்டுவதற்காகவே இது சொல்லப்பட்டது; ஆனால் பியோத்தரோ நிகனோவ் பையனைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தான். துறவியோ இந்தக் குறிப்பைப் பிடித்துக் கொள்ளவில்லை. தனது கிளாஸை உயர்த்தியபடி, தனது நாக்கை ஒயினில் நனைத்தான், பிறகு உதடுகளை நக்கிக் கொண்டான். உயிரில்லாத வார்த்தைகளை மேலே பேசினான்:

''யாரோ தீஹனையும் கூட துன்புறுத்தி இருக்கிறார்கள், ஆகவேதான் அவன், திவாலாகிவிட்டவனைப் போல, ஒவ்வொருவரிடமிருந்தும் விலகிக் கொண்டு போய் விட்டான்...''

இந்த விஷயத்திலிருந்து பேச்சை கட்டாயம் திசை திருப்பிவிட வேண்டி இருந்தது.

''நல்லது, இறுதி முடிவுதான் என்ன? இதற்கு மேலும் நீ கடவுளை நம்பவில்லையா?'' பியோத்தர் வினவினான். தன்னுடைய தொனி கடுப்புடன் இருக்க வேண்டும் என்று அவன் கருதியிருந்தான், ஆனால், எப்படியோ, அது அப்படி இல்லாது போனது வியப்புக்குரியது தான்.

சற்று இடைவெளிக்குப் பிறகு, ''இப்பொழுதெல்லாம் யார் நம்புகிறார்கள் என்று கூறுவது கஷ்டமானது,'' என்றான் துறவி. ''ஒவ்வொருவரும் சுறுசுறுப்பாகச் சிந்திக்கிறார்கள், ஆனால் நம்பிக்கைக்கான அறிகுறி அதிகம் தெரியவில்லை. நீ நம்பினால், சிந்திக்க வேண்டிய தேவை உனக்

றில்லை. கொம்புகள் உள்ள கடவுளைப் பற்றிப் பேசினாலே அந்தப் படிப்பாளி...''

''அதை விடு,'' என்று அவனது தோளுக்கு மேலாகப் பார்த்தபடி பியோத்தர் அறிவுறுத்தினான். ''இதெல்லாம் சலிப்பினின்றும் தோன்றுபவை, இதற்குச் செயலின்மைதான் காரணம். அவர்களை எல்லாருமே இரும்பு நுகங்களில் போடுவது நல்லது.''

''இல்லை, உன்னால் இரண்டில் நம்பிக்கை வைக்க முடியாது,'' என்றான் நிகீதா பாதிரியார் அழுத்தமாக.

மீண்டும் ஒரு மணி ஒலித்துக் கொண்டிருந்தது, அதனுடைய அளவொத்த அதிர்வுகளானது கருத்த பலகணிச் சட்டத்தின் மீது அடித்துக் கொண்டிருந்தது. பியோத்தர் கேட்டான்:

''நீ தொழுகைக்குப் போய்க் கொண்டிருக்கிறாயா?''

''நான் போக மாட்டேன். என் கால்கள் அப்படி வலிக்கின்றன, என்னால் நிற்க முடியாது.''

''நமக்காக நீ இங்கேயே தொழுவாயா?''

துறவி பதில் பேசவில்லை.

''நல்லது, படுக்கப் போவதற்கு எனக்கு இது தான் நேரம். இந்தப் பயணம் என்னைப் பெரிதும் களைப்படையச் செய்து விட்டது.''

திரும்பவும் நிகீதா எந்த பதிலும் அளிக்கவில்லை. தான் அமர்ந்திருந்த நாற்காலியைத் தானாகவே அழுத்திக் கொண்டு, தனது கூனிய உடம்பை கவனமாக உயர்த்திபடி அழைத்தான்:

''மீத்யா, மீத்யா.''

பிறகு, திரும்பவும் சாய்ந்தபடி, வருத்தம் தோய்ந்த குரலில் பேசினான்:

''வருந்துகிறேன்— நான் மறந்து விட்டேன். எனது உதவியாளன் விருந்தினர் இல்லத்தில் தூங்குவதற்காகச் சென்று விட்டான். மனம் விட்டுப் பேச வேண்டும் என்று விரும்பினேன், அதற்காகவே அவனை நான் அனுப்பிவிட்டேன்; இங்கே அவர்கள் எல்லாருமே உளவு சொல்பவர்கள், கதை கட்டுபவர்கள்...''

விருந்தினர் இல்லத்திற்குச் செல்கின்ற வழியைத் தேவையில்லாதபடி விவரித்தான். குளிர்ந்த தூறல் பெய்து கொண்டிருந்த வெளிப்புறத்தின் இருட்டிற்குள்ளாக வந்தபடி, பியோத்தர் சிந்தித்தான்:

''என்னைப் போகச் சொல்வதற்கு இந்த உளறுவாயன் விரும்பவில்லை.''

மேலும் திடீரென்று, பழகிப் போன அச்ச உணர்வுடன், ஓர் ஆழமான பாழ்க்கிடங்கின் விளிம்பின் வழியாகத் தான் திரும்பவும் நடந்து கொண்டிருப்பது போலவும், எந்தக் கணமும் அதில் தான் விழுந்து விடக் கூடும் என்பது போல வும் மூத்த அர்தமோனவ் உணர்ந்தான். தூறல் விழுந்து கொண்டிருந்ததால் மிகவும் இருண்டு போய்விட்டிருந்த அந்த இரவில், மஞ்சள் நிறமாய் எரிந்து கொண்டிருந்த விளக்கு ஒன்று சுட்டிக் காட்டிய இடத்தின் மீது கண்ணைப் பதித்தவாறு, கைகளை முன்னே நீட்டியபடி தனது நடையைத் துரிதப் படுத்தினான்.

''இல்லை,'' என்று தடுமாறியபடி அவன் அவசரமாக நினைத்தான். ''இதெல்லாம் எனக்கு வேண்டாம். நாளை புறப்பட்டுச் செல்வேன். இது எனக்குத் தேவையில்லை. என்ன நடந்தது? இல்யா திரும்பிவருவான்! இல்லை, வாழ்க்கையில் ஓர் உறுதியான பிடிப்பை நான் மேற்கொண்டாக வேண்டும். அலெக்ஸியைப் பார், எங்ஙனம் அவன் முன்னுக்கு வந்து கொண்டிருக்கிறான். என்றைக்காவது ஒரு நாள் அவன் எல்லாவற்றினின்றும் என்னை வெளியே தள்ளக் கூடியவன்.''

நிகீதாவையும் தீஹனையும் பற்றிய எண்ணத்தை மனத்திலிருந்து வெளியேற்றுவதற்காக அலெக்ஸி பற்றிய சிந்தனையை வலிந்து மேற்கொண்டான். ஆனால் துறவி மடத்தின் விருந்தினர் இல்லத்தின் தனது கடினமான படுக்கையின் மீது பியோத்தர் படுத்த போது, துறவி, முற்றப் பாதுகாவலன் பற்றிய சிந்தனைகள் அவனைத் திரும்பவும் அழுத்தத் தொடங்கின. இந்தத் தீஹன் எப்படிப்பட்ட மனிதன்? அவனைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றிலும் அவனுடைய நிழல் விழுந்திருக்கிறது. இல்யாவின் குழந்தைத்தனமான பேச்சில் கூட அவனது வார்த்தைகள் எதிரொலித்தன, அவனுடைய சிந்தனைகள் நிகீதாவின் மீது ஒரு மந்திர ஆற்றலை ஏற்படுத்தி உள்ளன.

''ஆறுதல் தருபவன்!'' நிகீதாவைப் பற்றிச் சிந்தித்தான். ''ஸெரஃபீமை எடுத்துக் கொள், ஓர் எளிமையான தச்சன்—எப்படி ஆறுதல் அளிப்பது என்பது அவனுக்குத் தெரியும்.''

தூக்கம் வர மறுத்தது. கொசுக்கள் கடித்துக் கொண்

டிருந்தன. அடுத்த அறையில் ஆட்கள் பேசிக் கொண்டிருந்தார் கள். மூன்று குரல்கள் கேட்டன, ரொட்டிக் கடைக்காரன் முர்ஸீன், மோசமான கால் கொண்ட வியாபாரி, அலிப் பிறவி போல முகங்கொண்ட அந்த மனிதன் ஆகிய மூவரு மாகத்தான் இருக்க வேண்டும் என்று பியோத்தருக்குத் தோன்றியது.

''குடிக்கிறார்கள், அநேகமாக இருக்கலாம்.''

நீண்ட இடைவெளிகளில், துறவி மடத்து காவல்காரன் ஒலி எழுப்பினான், பிறகு, திடீரென்று, அவசரமாக, எஞ்சி இருந்தது போல, காலை வழிபாட்டிற்கான மணிகள் ஒலிக்கத் தொடங்கின. அவை அடித்துக் கொண்டிருந்த வேளையில் பியோத்தர் நன்கு தூங்கிப் போய் விட்டான்.

முதல் நாள் பழத் தோட்டத்தில் பார்த்தது போலவே, அதே போன்ற அந்நியமான பார்வையுடன், பக்கவாட்டிலும் மேல் நோக்கியும் பார்த்தபடியும் இருந்த தன் தம்பியைக் காலையில் சந்தித்தான். மூத்த அர்தமோனவ் அவசரமாக முகங்கழுவி உடையணிந்து கொண்டான், ஏவல் பணியாற் றும் துறவியிடம் அண்மையிலுள்ள அஞ்சல் நிலையத் திற்குச் செல்வதற்குத் தனக்கு ஒரு குதிரை அமர்த்தித் தரும்படி கூறினான்.

''ஏன் இத்தனை அவசரமாய்?'' என்று பெரிதும் வியப் பின்றி துறவி வினவினான். ''இன்னும் கொஞ்சம் இருப்பாய் என்று நான் நினைத்தேன்.''

''தொழில் நெருக்கடி தான்.''

தேநீருக்காக அவர்கள் உட்கார்ந்தார்கள். தன் தம்பி யிடம் எதையும் சொல்வதற்காக பியோத்தர் சிந்திப்பதற் குள்ளாகவே நீண்ட நேரம் ஆகிவிட்டது. கடைசியாக, நினை வுக்கு வந்தபடி, அவன் கேட்டான்:

''ஆக இங்கிருந்து போவது பற்றி நீ சிந்தித்துக் கொண் டிருக்கிறாய்?''

''போக விரும்புகிறேன். என்னைப் போகவிடுவதற்கு அவர் கள் விரும்பவில்லை.''

''அவர்களுக்கு என்ன இருக்கிறது?''

''என்னை இங்கே வைத்திருப்பது வருவாய் தருகிறது. நான் பயனுள்ளவனாக இருக்கிறேன்.''

''அப்படியா. எங்கு போவதாக உனது திட்டம்?''

''ஒருவேளை நான் சுற்றித் திரியலாம்.''

''உனது நோயுற்ற கால்களுடனா?''

''காலில்லாதவர்கள் கூட ஒருவகையில் சுற்றி வரத் தானே செய்கிறார்கள்.''

''அது அப்படித்தான். அவர்கள் செல்கிறார்கள்,'' பியோத்தர் ஒத்துக் கொண்டான்.

அமைதி நிலவியது. பிறகு நிகீதா சொன்னான்:

''தீஹனுக்கு என் வணக்கத்தைச் சொல்லவும்.''

''வேறு யாருக்கு?''

''ஒவ்வொருவருக்கும்.''

''சொல்வேன். அலெக்ஸி எப்படி இருக்கிறான் என்று என்னிடம் நீ ஏன் கேட்க மாட்டேன் என்கிறாய்?''

''கேட்பதற்கு என்ன இருக்கிறது? எப்படி வாழ்வதென்பதை அவன் அறிவான் என்பது எனக்குத் தெரியும். வெகு சீக்கிரத்திலேயே நான் இங்கிருந்து போகக் கூடும்.''

''குளிர்காலத்தில் உன்னால் போக முடியாதே.''

''ஏனில்லை? குளிர் காலத்தில் கூட ஆட்கள் வரத்தான் செய்கிறார்கள்.''

''அப்படியா, வருவார்கள்,'' பியோத்தர் திரும்பவும் ஒப்புக் கொண்டான். தன் தம்பிக்கு அவன் பணம் தர முன் வந்தான்.

''சரி. மாவு ஆலையை மராமத்துச் செய்வதற்கு இது போதும். மடத்துத் தலைவரைப் பார்ப்பதற்கு நீ போக வில்லையா?''

''அதற்கு நேரமில்லை. குதிரை காத்துக் கொண்டிருக் கிறது.''

பிரியும் போது சகோதரர்கள் தழுவிக் கொண்டார்கள். நிகீதா கட்டித் தழுவுவது என்பது வசதிக்குறைவானதாக இருந்தது. தன் அண்ணனை அவன் ஆசிர்வதிக்கவில்லை; அவனது வலது கை, அவனுடைய இறுக்கமான உள்ளங்கி யின் கைக்குள்ளாக மாட்டிக் கொண்டிருந்தது, இது வேண்டு மென்றே செய்தது போல பியோத்தருக்குத் தோன்றியது. தனது கூன் பியோத்தரின் வயிற்றை அழுத்திக் கொண் டிருக்க, உணர்ச்சியற்றபடி நிகீதா கேட்டுக் கொண்டான்:

''நேற்று, நான் சொல்லக் கூடாதது எதையும் சொல்லி யிருந்தால், அதை மன்னித்து விடு.''

''பரவாயில்லை! நாம் சகோதரர்கள்.''

''இரவுகள் முழுக்க நான் யோசித்து, யோசித்துப் பார்க் கிறேன்...''

''சரி, சரி! நல்லது, போய் வருகிறேன்...''

துறவி மடத்தின் வெளிக் கதவுகள் பின்னே மறைந்த நும், பியோத்தர் திரும்பிப் பார்த்தான். விருந்தினர் இல்லத்தின் வெண்ணிறச் சுவரின் பின்னணியில் அவன் தம்பியினுடைய உருவம் ஒரு பாறை போலத் தோன்றியது.

''போய் வருகிறேன்,'' என்று முணுமுணுத்தவாறே, அவன் தனது தொப்பியைக் கழற்றினான். அவனது வெறுந் தலையானது தூறிக் கொண்டிருந்த மழையால் சீக்கிரமே நனைந்து போயிற்று. பைன் மரக் காடுகளின் வழியாகப் பாதை சென்றது. அமைதியாக இருந்தது. மழைத் துளிகள் விழுந்த போது பைன் மரத்து ஊசியிலைகள் சரசரத்தன. ஒட்டுநரின் இருக்கையில் மேலும் கீழும் அசைந்தவாறு ஒரு துறவி அமர்ந்திருந்தான். தனது காதுகளில் மயிர் எதுமின்றி, குதிரை செந்தவிட்டு நிறத்தில் இருந்தது.

''அவர்கள் எதைப் பற்றித் தான் பேசுகிறார்கள்!'' என்று பியோத்தர் சிந்தித்துக் கொண்டிருந்தான். ''தவறான நேரத்தில் கடவுள் மழையை அனுப்புகிறார். அது எல்லாமே பகைமையிலிருந்து, பொறாமையிலிருந்து, உடல் ஊனத்திலிருந்து தான் வருகின்றன. இது சோம்பேறித்தனத்தின் பயன், கவலைப்பட எதுவுமில்லாததனால் ஏற்படுவது. கவலைகள் அற்ற ஒரு மனிதன் எசமானன் இல்லாத ஒரு நாய் போலத்தான்.''

நடுங்கியபடியே பியோத்தர் பின்னே நோட்டம் விட்டான். இந்தக் குறிப்பிட்ட மழை, தவறான நேரத்தில் தான் உண்மையாகவே வந்து கொண்டிருக்கிறது என்று நினைத்தான். திரும்பவும் அவனது துயரார்ந்த சிந்தனைகள் கனத்த மேகம் போல அவனைச் சுற்றிச் சூழ்ந்தன. அவற்றினின்றும் விடுபடுவதற்காக, ஒவ்வோரு அஞ்சல் நிலையத்திலும் அவன் வோத்கா சாராயம் குடித்தான்.

மாலைவாக்கில், புகை படர்ந்த நகரமானது முன்னே கண்ணில் பட்ட போது, மூச்சுவிட்டுக் கொண்டு செல்லும் இரயில் ஒன்று சாலையைக் குறுக்கே கடந்து சென்றது. அந்த வாகனம் விசில் அடித்தது, நீராவியை உமிழ்ந்தது, அரைவட்ட வடிவமான பள்ளத்திற்குள்ளாக, பூமியின் மேற்பரப்பினின்றும் மறைந்து, புகுந்தோடியது.

## 3

சந்தையிலே தனது வாழ்க்கையின் கொந்தளிப்பான நாட்களைத் திரும்ப நினைத்துப் பார்க்கையில், பியோத்தர்

அர்தமோனவ் அச்சத்தின் எல்லையைத் தொட்டு விட்ட, முதுகெலும்பைக் குத்துகின்ற நடுக்கமான திகைப்பை உணர்ந் தான். நினைவால் புதுப்பிக்கப்பட்ட இவை அனைத்தையும் உண்மையாகவே பார்த்தது என்பதை அவனால் நம்பக் கூட முடியவில்லை. மிகப் பெரிய கற் கொப்பரை போன்ற அந்த இடத்திலே, அவனும் கொதித்தான். அங்கே ஆண் களும் பெண்களும் கூடிக் கூத்தடிக்க, கரகரப்பான இசை, பாடல்கள் மற்றும் குடிவெறியின் கூக்குரல்கள் ததும்பி வழிந்தோட, இதயத்தையே உலுக்கி எடுக்கும் அவல மக்க ளின் கூச்சல் கேட்டபடி இருந்தது. இவற்றிற்குக் காரண மான ஆண்களையும், பெண்களையும் கிண்டிக் கிளறி உணர்ச்சி வயப்பட வைக்கும், நீண்ட மேற்சட்டையும் உயர மான தொப்பியும் அணிந்து, மழிக்கப்பட்ட, நீலநிற முகத் திலே, பிதுங்கிக் கொண்டிருக்கும் ஆந்தைக் கண்களுடன் உற்று நோக்கிக் கொண்டிருக்கும் ஒரு பெரிய மனிதன் சுருள் முடியோடு இருந்தான். தனது தடித்த உதடுகளைச் சப்புக் கொட்டி ஒலி யெழுப்பினான், அர்தமோனவைக் கட்டியணைத்து, அவனைக் குலுக்கியெடுத்து, கூச்சலிட் டான்:

''அப்படியே இரு, முட்டாளே! ருஷ்யாவின் ஞானஸ் நானம், புரிந்ததா? வோல்காவிலும் ஒகாவிலும் ஆண்டு தோறும் நடக்கும் ஞானஸ்நானம்!''

அவனுடைய முகம் சமையல்காரனைப் போலக் காணப் பட்டது, செல்வந்தர்களுடைய பிண ஊர்வலத்தின் போது, தீப்பந்தங்கள் கொண்டு செல்வதற்குக் கூலிக்கு அமர்த்தப் படும் ஆட்களில் ஒருவரைப் போல உடையணிந்து இருந் தான். இந்த மனிதனோடு சண்டையிட்டது பியோத்தருக்கு மங்கலாக நினைவில் நின்றது. அதன் பிறகு அவர்கள் ஐஸ் கிரீம் கலந்த 'கோன்யாக்' சாராயம் அருந்தினார்கள், அந்த மனிதன் உரக்கத் தேம்பியபடி கூறினான்:

''ருஷ்ய ஆன்மாவினுடைய கர்ஜனையைப் புரிந்து கொள்! என் தந்தை ஒரு பாதிரியாராக இருந்தார், நானோ ஒரு போக்கிரி!''

அவன் குரல் அழுத்தமாக முழக்கமிட்டது, ஆனால் கனி வாகவும் இருந்தது. பாய் நீரோட்டம் போன்ற பித்துக் கொள்ளித்தனமான பேச்சால் அவர்களை மூழ்கடித்தான், அவனுடைய வார்த்தைகளோ தடுக்க முடியாதபடி ஆன் மாவை சிலிர்க்க வைத்தன.

''சதையின் அழுகல்!'' என்று அவன் கர்ஜனை செய் தான். ''சாத்தானோடு போராட்டம்! அவனுக்கு, இந்தப் பன்றிக்கு, அழுக்குக் கப்பத்தை வீசியெறிங்க! உன் உடலி னுடைய கலவரத்தை அமைதிப் படுத்து, பேத்யா! நீ பாவம் செய்யாவிட்டால், உன்னால் பச்சாத்தாபப்பட முடி யாது, நீ பச்சாத்தாபப்படவில்லை என்றால் உன்னைக் காப் பாற்றவும் முடியாது. உன் ஆன்மாவைக் குளிப்பாட்டு! நமது உடல்களைக் கழுவுவதற்காக, நீராவிக் குளியலுக்கு நாம் செல்வதில்லையா? ஆன்மா குறித்துத்தான் என்ன? குளிப்பாட்ட வேண்டும் என ஆன்மா அழுகிறது. ருஷ்ய ஆன்மாவிற்கு, இசைக்கின்ற ஆன்மாவுக்கு, புனிதமான, வீறார்ந்த ஆன்மாவுக்கு இடம் கொடுங்க!''

பியோத்தர் கூடப் பெரிதும் நெகிழ்ந்து போய் அழு தான், முணுமுணுத்தான்:

''நமது ஆன்மா ஓர் அநாதை, கண்டெடுக்கப்பட்ட ஒன்று, அது தான் உண்மை! மறந்து போய் விட்டது. அதற்கு நாம் வருத்தப்படவில்லை.''

எல்லாரும் கத்தினார்கள்:

''சரிதான்! உண்மை!''

வழுக்கைத் தலையும் செந்நிறத் தாடியும் கொண்ட ஒரு மனிதன் சிவந்த முகமும், பழுப்பு நிறக் காதுகளையும் கொண்ட கொழுத்த உடம்பு கொண்ட அவன்—பம்பரம் போலச் சுற்றிச் சுழன்று ஆடியபடி, பெண்ணைப் போல கீச்சுக் குரலில் கத்தினான்:

''ஸ்தியோபா—அது உண்மைதான்! நான் உன்னைப் போற்றுகிறேன். உன்னை இறுதிவரை நேசிக்கிறேன். நான் இறுதிவரை நேசிப்பவை மூன்று விஷயங்கள்—நீ, ஊறுகாய் மற்றும் உண்மை. ஆன்மாவைப் பற்றிய உண்மை!''

அவன் அழவும் செய்தான், பாடினான்:

சாவை வெல்வது சாவேதான்.

அந்த முட்டாள் அந்தோனின் வார்த்தைகளைக் கொண்டே, பியோத்தரும் தொடர்ந்து பாடினான்:

வண்டி சக்கரம் ஒன்றை இழந்தது.

அவனும் கூட கரிய நிறமான ஸ்தியோபாவைக் காதலிப் பதாக நினைத்தான், அவனது கூக்குரல்களைத் தன்னை

மறந்த கவனத்தில் பருகினான். சில நேரங்களில், விநோத மான வார்த்தைகள் ஓரளவுக்கு அவனை அச்சுறுத்தினாலும் கூட, இருண்ட, குழப்பம் மிகுந்த இடத்தினின்றும் விரிந்த கதவு வழியாக அமைதி ஒளிர்கின்ற இடத்திற்குச் செல்வது போல, அவை அவனை ஆழ்ந்த இனிமையில் ஆழ்த்தின. சொற்றொடர்கள் எல்லாவற்றிலுமே மிகச் சிறந்தது ''இசைக்கின்ற ஆன்மா'' என்பது. மிகவும் உண்மையான ஏதோ ஒன்று அதில் இருக்கிறது, மிகவும் துயராய்ந்ததாக இருந்தது, ஒரு காட்சியை நினைத்துப் பார்ப்பதற்குப் பொருத்தமாக இருந்தது: புழுக்கம் நிறைந்த வார நாட்களில் ஒரு நாள், திரியோமவ் நகரத்தின் அழுக்கடைந்த தெருக்களில் ஒன்றில், உயரமான, நரைத்த தாடியுடன் கூடிய ஒரு கிழவன், செத்தவனைப் போல ஒட்டியுலர்ந்து, இசைக் கருவியின் கைப்பிடியை சோகத்தோடு மீட்டிக் கொண்டிருந்தான், அதே வேளை பன்னிரண்டு வயது மதிக்கத்தக்க சிறுமி, கசங்கிப் போன நீலநிற உடையுடன், கண்ணை மூடியவாறு, முகத்தை மேலே உயர்த்தி, களைப்பினால் உடைந்து போன குரலில், வேதனையோடு பாடினாள்:

வாழ்வில் நான் காத்திருப்பது எதுவுமில்லை
சுதந்திரத்தையும் மன அமைதியையும் தேடுகிறேன்...

அந்தச் சிறுமியினுடைய நினைவு, பழுப்பு நிறக் காதுகள் கொண்ட அந்த மனிதனிடம் அர்தமோனவை முணுமுணுக்கும்படி செய்தது:

''இசைக்கின்ற ஆன்மா! மிகச் சரியாகச் சொன்னான்!''

''யார்? ஸ்தியோபாவா?'' என்று அந்த செந்தாடிக்காரன் ஆரவாரஞ் செய்தான். ''ஸ்தியோபாவுக்கு ஒவ்வொன்றும் தெரியும்! எல்லா ஆன்மாக்களைத் திறக்கக் கூடிய ஆணித்திறவு அவனிடம் இருக்கிறது!''

மேன்மேலும் உணர்ச்சிவயப்பட்டவனாக, அவன் கிரீச்சிட்டான்:

''ஸ்தியோபா, மனித இனத்தின் நண்பனே, விடுவிப்பாய்! வழக்குரைஞர் பரதீசொவ், எங்களை அநீதியின் பாசறைக்கு அழைத்துச் செல்! எதுவும் நடக்கும்...''

மனித இனத்தின் நண்பனாகிய அந்த மேய்ப்பன், குடிவெறியில் கூச்சல் போட்ட உற்பத்தியாளர் கூட்டத்தின் ஒளிவிளக்கு. எங்கெல்லாம் அவன் தனது குடிகார மந்தை

போடு தோன்றினானே அங்கே இசை முழங்கியது, பாடல் கள் எதிரொலித்தன. அப்பாடல்கள் ஒரு சமயம் துயர மானதாக, கண்களினின்றும் நீர்பெருக்கெடுத்து ஓடுகின்ற வரை ஆன்மாவைப் பிழியும், ஒரு சமயம் மூர்க்கமாக நடன மாட வைக்கும். ஆனால் பியோத்தருடைய மனச் செவி யில் தங்கியிருந்ததெல்லாம் பெரிய முரசத்தின் மந்தமான ஓசையும், சிறிய குழலினின்றும் பிரிக்க முடியாத கிறீச்சிடும் குரலுமே. சோகப் பாடல்கள் மெதுவாகப் பாடப்படும் போது, சாராயக் கடைகளினுடைய செங்கல் சுவர்கள் சுருங் குவது போலவும், மூச்சுவிடத் திணறும் அளவுக்குப் பியோத் தரை நெருக்கி வருவது போலவும் காணப்பட்டது. குழுப் பாடல்கள் ஆர்வமிகுந்த ஏதோ ராகத்தில் பாடப்படும் போது, நடனக்காரர்கள் தங்களுடைய பளபளப்பான ஒப் பனைகளுடன் சுற்றிச் சுழன்று ஆடும் போது, காற்றானது சுவர்களை அசைத்து அவற்றை அப்பால் தள்ளி விடுவது போல இருந்தது. இவ்வாறு ஒரு மன நிலையிலிருந்து மற் றொரு மனநிலைக்குத் தூக்கி எறியப்பட்டும், மகிழ்ச்சியிலி ருந்து குழந்தைத்தனமான சோக உணர்ச்சிக்குத் திடீரென மூர்க்கத்தனமாகத் தூக்கி யெறியப்பட்டும் தவித்துக் கொண் டிருந்த பியோத்தருக்கு சில நேரங்களில், அசாதாரணமான, வியக்கத்தக்கதான ஒரு செயலை—ஒருவேளை, யாரையா வது கொல்வது—செய்ய வேண்டும், அதன் பின்னர் மக்க ளின் காலடிகளில் விழுந்து, எல்லாருக்கும் கேட்கும்படி இப் படிக் கத்த வேண்டும் என்ற தவிர்க்க முடியாத வெறி யுணர்ச்சி ஏற்பட்டது:

''என்னை விசாரியுங்கள்! மிக மோசமான தண்டனையை எனக்கு வழங்குங்கள்!''

அவர்கள் ''சக்கர''த்தில் இருந்தார்கள், வெறியார்ந்த சாராயக் கடை சுற்றிச் சுழல்கின்ற அமைப்பில் மேசைகளை யும், வாடிக்கையாளர்களையும், பரிமாறுபவர்களையும் அவனோடு சேர்த்தபடி இடையறாது சுற்றிச் சுழன்றது. தலையணைக்குள் அளவுக்கு மீறி திணிக்கப்பட்ட சிறகு களைப் போல அந்த இடமானது ஆடிகளால் நெருக்குண்டி ருந்தது. இரைச்சல் அளவுமீறிச் சென்றது. மூலைகள் மட் டுமே நிலையாக இருந்தன. தரை சுழலத் தொடங்கியதும், பித்தளைக் குழாய் இசைக் கருவிகளை இசைப்பவர்கள் தோன்றினார்கள், மற்றொரு மூலையில் தலைகளிலே மலர்க் கொத்துகளைச் சூடிய வண்ணம் குழுவாகப் பாடல்

இசைத்த பெண்கள் தோன்றினார்கள். மூன்றாவது மூலையில் தட்டுகளும் பாட்டில்களும் கொண்ட அலமாரிகளைப் பிரதிபலிக்கும் ஒளி சிந்தும் சர விளக்குகள் காணப்பட்டன. வாயிலுக்காக வளைவாக வெட்டிவிடப்பட்ட நான்காவது மூலையிலே, மேன்மேலும் ஆட்கள் முண்டியடித்தபடி வந்து கொண்டிருந்தார்கள். சுழல்கின்ற சக்கரத்தின் விளிம்பிலே ஏறும் போது தடுமாறியவர்கள், தங்களுடைய கைகளை ஆட்டியபடி கீழே விழுந்தார்கள், ஏறிச் சென்றவர்கள் சிரித்துக் கூச்சலிட்டனர்.

மனித இனத்தின் நண்பன், கருநிறமான ஸ்தியோபா அர்தமோனவுக்கு விளக்கினான்:

''அற்புதமானது, ஆமாம், ஆனால் அது கூரறிவுத் திறம் வாய்ந்தது! அகலமாக விரிந்த விரல்களிலே தேநீர்த் தட்டை வைத்திருப்பது போல, இந்தத் தரையானது தூண்களால் தாங்கி நிற்கிறது. அந்தத் தூண்கள் அச்சு மரத்தோடு இணைக்கப்பட்டிருக்கின்றன. அதனது அடிபாகத்தில் இரு திசைகளில் இரு கட்டைகள் படுக்கை வசமாக நீட்டிக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு முனையோடும் ஒரு ஜோடிக் குதிரைகள் கட்டப்பட்டிருக்கின்றன. குதிரைகள் சுற்றி வரும் போது, தரையும் சுழல்கிறது. எளிமையானது? ஆனால் அதற்கென்று அருத்தம் உள்ளது. பேத்யா, நினைவிருக்கட்டும்: ஒவ்வொன்றுக்குமே அதற்கென்று சொந்த அருத்தம் இருக்கத்தான் செய்கிறது, ஐயகோ!''

கூரையை நோக்கி மேலாக அவன் சுட்டிக் காட்டினான், அவனுடைய விரலில், ஓநாயின் கண்ணைப் போல, பச்சைக் கல் பளிச்சிட்டது. அகன்ற மார்பும், நாய் போன்ற தலையும் கொண்ட வியாபாரி ஒருவன், அர்தமோனவின் சட்டைக் கையைப் பிடித்து இழுத்து, பிணத்தின் கண்ணைப் போன்ற தனது கண்ணாடிக் கண்களால், அவன் முகத்தை உற்றுப் பார்த்தான். செவிடனுடையதைப் போன்ற உரத்த குரலில், அவன் கோரினான்:

''துன்யா என்ன சொல்வாள், ஹூம்? நீ யார்?''

பதிலுக்காகக் காத்துக் கொண்டிராமல், வேறு யார் பக்கமோ திரும்பி கேட்டுக் கொண்டிருந்தான்:

''நீ யார்? துன்யாவிடம் நான் என்ன சொல்வேன்? ஏய்?''

தனது நாற்காலியில் அவனாகவே தன்னைக் கிடத்திக் கொண்டு, முணுமுணுத்தான்:

''ஓ, சாத்தான்!''

பிறகு கோபத்தோடு கத்தினான்:

''நாம் வேறு ஏதாவது இடத்திற்குப் போகலாம்!''

பின்னர் குதிரைகள் பூட்டிய வண்டியில் முன்னால் அமர்ந்து கொண்டு, ஓட்டுநராக மாறி, தெருவில் செல் கின்ற எல்லாரையும் பார்த்து இடி முழக்கம் போல அறி வித்துக் கொண்டே சென்றான்:

''நாங்கள் பாவுலா வீடு செல்கிறோம்! கூட வாருங் கள்!''

மழை பெய்து கொண்டிருந்தது. வண்டியில் ஐந்து பேர் இருந்தார்கள். அர்தமோனவினுடைய காலடியில் கிடந்த ஒரு வன் முணுமுணுத்துக் கொண்டே வந்தான்:

''அவன் என்னை முட்டாளாக்கி விட்டான், நான் அவனை முட்டாளாக்கி விடுவேன். அவன் எனக்குச் செய் தான், நான் அவனுக்குச் செய்வேன்...''

ஒரு பெரிய வட்டமான ரொட்டியைப் போலத் தோன் றிய ஒரு குன்றின் அடிவாரத்தில் இருந்த ஒரு சதுக்கத்தில் வண்டி குடை சாய்ந்தது. கீழே விழுந்ததில் பியோத்த ருக்குத் தலையிலும் முழங்கையிலும் அடிபட்டுப் போய் விட்டது. ஈரமான புற்கரண் மீது உட்கார்ந்து கொண்டிருந்த படி, செந்நிறத் தாடியும், பழுப்பு நிறக் காதுகளும் கொண்ட அந்த மனிதன் குன்றின் மீது உள்ள மசூதியை நோக்கி ஊர்ந்தவாறு, கர்ஜனை செய்து கொண்டிருப்பதை கவனித் தான்:

''தள்ளிப் போ! தாத்தாரியனாக ஞானஸ்நானம் செய்து கொள்ள விரும்புகிறேன்! ஒரு முஸ்லீமாக விரும்புகிறேன்! என்னைப் போக விடுங்கள்!''

கரு நிற ஸ்தியோபா அவனுடைய கால்களைப் பற்றி குன்றினின்றும் கீழே இழுத்து, அப்பால் எங்கோ ஓரிடத் திற்குக் கூட்டிச் சென்றான். கடைகளினின்றும், சத்திரத் தினின்றும் பாரசீகர்கள், தாத்தாரியர்கள், புக்காரியர்கள் குழுமத் தொடங்கினார்கள். மஞ்சள் நிறக் கோட்டும், பச்சைத் தலைப்பாகையும் அணிந்த ஒரு கிழவன் பியோத் தரை நோக்கி தனது கைத்தடியை ஆட்டினான்.

''ருஷ்யனா, சைத்தான்.''

தாமிர நிறங் கொண்ட முகம் படைத்த ஒரு போலீஸ் காரன் பியோத்தரைத் தூக்கி நிறுத்திக் கூறினான்:

''கூக்கூரலிடுவது கூடாது, இப்போது.''

குடிமயக்கத்தில் இருந்த வியாபாரிகளை வண்டிக்குள்ளாக தூக்கிவைத்த பிறகு, வண்டிகள் ஓடத் தொடங்கின. எல்லாருக்கும் முன்னால் சென்ற மனித இனத்தின் நண்பன், நின்று கொண்டு கையிலே ஏதோ ஒலிபெருக்கி வைத்திருப்பது போல எதையோ கத்திக் கொண்டு இருந்தான். மழை நின்று விட்டது, ஆனால் வானம் இன்னமும் கருத்து, அச்சுறுத்திக் கொண்டிருந்தது. மிகப் பெரிய சத்திரத்தின் கட்டிடத்திற்கு மேலாக மின்னல்கள் பளிச்சிட்டன, இருண்ட வானத்திலே அச்சுறுத்துகின்ற இடி முழக்கம் கேட்டது. பெதான்கூர் கால்வாயின் குறுக்கே மரப் பாலத்தைக் கடந்து செல்கையில் குதிரைகளுடைய குளம்புகள் ஏற்படுத்திய மந்தமான தாள ஓசைகள் இதயத்திலே மிகப் பெரிய அச்சத்தை ஏற்படுத்தியது. பாலம் முறிந்து விழுந்து, தாங்கள் எல்லாருமே கன்னங் கரியதாய்த் தோன்றும் நீரில் மூழ்கத் தான் போகிறோம் என்பது அர்தமோனவுக்கு சந்தேகமில்லாது தோன்றியிருந்தது.

இந்தக் காட்சிகளின் மனக்கிலி ஏற்படுத்தும் நினைவுகளின், துண்டுத் துணுக்கான நிலையில், குடிவெறி மிக்க மக்களுக்கு மத்தியிலே பெரும்பாலும் முற்றிலும் அந்நியன் என்பது போலத் தன்னைத் தானே அர்தமோனவ் உணர்ந்தான். அந்நியனாகிப் போன அவன் வெறி பிடித்தவனைப் போலக் குடித்தான், வாழ்வில் மிகவும் முக்கியமான, மிகவும் அதிசயமான ஏதோ ஒன்று அடுத்த கணத்திலே நடக்கும் என எதிர்பார்த்திருந்தான், மேலும் அது வெறுப்பின் எல்லையற்ற ஆழத்திற்குள்ளாகவோ, மகிழ்வின் எல்லையற்ற உயரத்திற்குள்ளாகவோ நிரந்தரமாக எப்போதும் கொண்டு செல்லும் என்பது போலத் தோன்றியது.

அவை எல்லாவற்றிலும் மிகவும் விசித்திரமானது பாவுலா மெனோத்தி என்ற பெண்ணைப் பற்றிய பளபளக்கும் நினைவாகும். திரைச் சீலைகள் இல்லாத, ஒரு பெரிய, சாதாரணமான அறையில் அவன் அவளைக் கண்டான். பாட்டில்களும், வர்ண ஒயின் கிளாஸ்களும், பூக்களும் பழங்களும் நிறைந்த ஜாடிகளும், மீன் கறிவைக்கப்பட்ட வெள்ளிப் பாத்திரங்களும், ஐஸ் போடப்பட்ட ஷாம்பேன் மதுவும் வைக்கப்பட்டிருந்த ஒரு மேசையானது அந்த அறையின் மூன்றிலொரு பகுதியைப் பிடித்துக் கொண்டிருந்தது. சிவந்த, வழுக்கை விழுந்த பழுப்புநிறத் தலைகள் கொண்ட சுமார் பத்து ஆட்கள் மேசைக்கு முன் அமர்ந்து பொறுமை

இல்லாமல் துடிதுடித்துக் கொண்டிருந்தார்கள். பல நாற்காலிகள் காலியாகக் கிடந்தன. அவற்றில் ஒன்று மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

மெழுகு வர்த்தி போல தங்கப் பூண் போட்ட தனது கைத்தடியை உயரத்தூக்கிப் பிடித்து கருநிறமான ஸ்தியோபா அறையின் நடுவில் நின்று உத்தரவிட்டுக் கொண்டிருந்தான்:

''ஏய் பன்றிகளா, பேராவலுடன் குடிக்க நீங்கள் காத்திருக்க வேண்டும்!''

யாரோ தெளிவில்லாது பேசினான்:

''குரைப்பதை நிறுத்து.''

''மூடு வாயை!'' என்று மனித இனத்தின் நண்பன் சத்தம் போட்டான். ''இங்கு நான் தான் பொறுப்பில் இருக்கிறேன்!''

எப்படியோ, திடீரென்று, அறை இருளடையத் தொடங்கியது. மந்தமான முரசுகளை ஒலிக்கும் ஓசை வெளியே கேட்டது, ஸ்தியோபா கதவை நோக்கி விரைந்து சென்று, அதைத் திறந்து விட்டான். தனது தொந்தியிலே ஒரு முரசத்தைக் கட்டியிருந்த பருத்த மனிதன் உள்ளே வந்தான். வாத்துப் போல நடை போட்டபடி வந்த அவன், தன் பலங்கொண்ட மட்டும் தனது முரசத்தை அடித்துக் கொண்டு வந்தான்:

''பூம், பூம், பூம்...''

ஒன்று போலக் கம்பீரமாகத் தோன்றிய வேறு ஐந்து பேர் தோன்றினார்கள். கிட்டத்தட்ட இரண்டாக வளைந்து, பாரமிழுக்கும் குதிரைகளைப் போல சிரமப்பட்டபடி, ஒரு பெரிய பியானோவை, அதன் கால்களைச் சுற்றிக் கட்டியிருந்த துவாலைகளைப் பிடித்து இழுத்தபடி அறைக்குள்ளாகக் கொண்டு வந்தார்கள். பியானோவின் பளபளக்கும் கருப்பு மூடியின் மீது, மின்னுகின்ற வெள்ளை நிறத்தில் ஒரு பெண், தனது நிர்வாண கோலத்தைப் பற்றி வெட்கப்படாமல் படுத்திருந்தாள். தனது கைகளைத் தலைக்குக் கீழே வைத்தபடி அவள் மல்லாந்து கிடந்தாள்; அவளது கருத்த நீண்ட தலை முடி அவிழ்ந்து, பெருகெண்ணை பூசப்பட்ட பியானோ மூடியுடன் ஒன்றிக் கலந்தது போலக் காணப்பட்டது. அவள் நெருங்கி வரவர அவளது உடலின் நெளிவுகள் கூட மிகத் தெளிவாகத் தெரிந்தன, அவளது அக்கங்களிலும் அடி வயிற்றிலும் திட்டாக இருந்த ரோமக்

கற்றையானது ஒவ்வொரு கண்ணையும் இடைவிடாது கவர்ந்திழுத்தது.

சிறிய செப்புச் சக்கரங்கள் சிணுங்கின. தரை கிரீச்சிட்டது. பாண்டு உரக்க ஒலித்தது. இந்தப் பளுவான ரதத்தை இழுத்து வந்த ஆட்கள் நிறுத்தி விட்டு, நிமிர்ந்தார்கள். ஒவ்வொருவரும் சிரிப்பார்கள் என்று அர்தமோனவ் எதிர்பார்த்தான். அது விஷயங்களைப் புரிந்து கொள்வதை எளிதாக்கி இருக்கும். ஆனால் பியானோ மூடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, சோம்பேறித்தனமாக எழுந்த போது அவளையே, மேசையைச் சுற்றி இருந்த ஆண்கள் அனைவரும் எழுந்து நின்று மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சற்று முன்னர் தான் அவள் தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தது போலவும், கல்லைப் போல இறுகிப் போன இருளின் தொகுதியானது அவளுக்குக் கீழே படுத்து விட்டது போலவும் தோன்றியது. அது தேவதைக் கதை போல இருந்தது. நின்று கொண்டிருந்த அப்பெண் தனது நீண்ட, அடர்த்தியான கூந்தலைத் தனது தோளுக்குப் பின்னால் தூக்கிப் போட்டாள், பியானோவின் மீது மண்டிக் கிடந்த இருளைக் கலைப்பது போல தனது கால்களை ஓங்கி மிதித்தாள். அதன் மூடியை அவளது கால்கள் உதைந்த போது, தந்திகள் முணகுவதை அவர்களால் கேட்க முடிந்தது.

மேலும் இருவர் உள்ளே வந்தார்கள்: நரைத்த தலை முடியுடன் கண்ணாடி அணிந்த ஒரு கிழவியும், நீளமான உடையணிந்த ஓர் ஆணும். அக்கிழவி உட்கார்ந்து, தனது மஞ்சள் நிறப் பற்களைப் பியானோவின் கருப்பும், தந்தம் போன்றதுமான ஸ்வரக் கட்டைகளோடு ஏக காலத்தில் இளித்துக் காட்டினாள். நீளமான சட்டை அணிந்திருந்த அம்மனிதன் வயலினைத் தனது தோளுக்கு உயர்த்தி, குறி பார்ப்பது போலத் தனது சிவந்த ஒற்றைக் கண்ணை உருட்டி விழித்து, தனது வில்லால் தந்திகளை மீட்டி, பியானோவின் மொம்மென்ற இரைச்சலோடு, பிடிலின் மெல்லிய ஒலியைக் கலந்து ஒலிக்கச் செய்தான். நிர்வாணமாக இருந்தவள் வளைந்து நெளிந்து நிமிர்ந்தாள். அவள் தன் தலையை அலைத்தாள், தலைமுடி முன்னால் விழுந்து, அவளது உறுதியான மார்பகங்களை மறைத்தது. அசைந்த வண்ணம் மெதுவாகவும், மூக்காலும் அவள் பாடத் தொடங்கினாள், அவளது தணிந்த குரல் தனிமைப்பட்டும், கனவுத் தோற்றமுடையதாகவும் இருந்தது.

அவளையே கவனித்தபடி, தங்களது தலைகளைக் கொஞ்சம் உயர்த்தியபடி, அவர்கள் அனைவரும் அமைதி யாக இருந்தனர், அவர்களின் முகங்கள் ஒரே மாதிரியான உணர்ச்சி வெளிப்பாட்டையே காட்டின. அவர்களது கண் கள் குருடாகத் தோன்றின. அரைத் தூக்கத்தில் இருப்ப வளைப் போன்று அப்பெண் ஆர்வமற்றுப் பாடினாள். கண் ணைப் பறிக்கிற அவளது உதடுகள் வெளியிட்ட வார்த்தை களை எவரும் புரிந்து கொள்ளவில்லை; எண்ணெய்ப் பசை யால் மூடியிருந்த அவள் கண்கள், கூட்டத்தினரின் தலைக ளுக்கு மேலாக நிலையாகப் பார்த்தபடி இருந்தன. ஒரு பெண்ணினுடைய உடல் இத்தனை வடிவமைப்புடன், இத் தனை கவர்ச்சிகரமான அழகோடு இருக்க முடியும் என்று அர்தமோனவ் ஒருபோதும் சிந்தித்துப் பார்த்ததில்லை. அவள் தனது உள்ளங் கைகளை மார்புகளுக்கும், இடுப் புக்கும் மேலாகத் தொட்டுத் தடவினாள், தனது தலைமுடி கலைந்து விரிகின்றவரை, அவளது தோற்றம் வளர்ந்து கொண்டும், விரிந்து கொண்டும், ஒவ்வொன்றையும் பார்வை யினின்று தடம் இல்லாமல் செய்கின்ற வரை, அவளைத் தவிர எதுவுமே இல்லாதபடி, அவள் மட்டுமே பார்வையில் தெரிகின்ற வரை, தனது தலையைத் தொடர்ச்சியாக ஆட் டிக் கொண்டிருந்தாள். அவளை அடைய வேண்டும் என்ற விருப்பத்தை அவனிடத்தில் அவள் ஒரு கணங்கூட ஏற்ப டுத்தவில்லை என்பதை அர்தமோனவ் தெளிவாக நினைவு கூர்ந்தான். அச்சத்தை மட்டுமே, அவனது உள்ளத்திலே அழுத்துகின்ற நெருக்கத்தையே அவள் ஏற்படுத்தினாள். மாயக்கலையின் அச்சத்தை அவள் பெருக்கெடுக்கும் படி செய்தாள். ஆனால், இந்தப் பெண் அழைத்தால், அவளைத் தான் பின்தொடர்ந்து செல்லக் கூடும் எனவும், அவள் விரும் புகின்ற எதையும் அவளுக்காகச் செய்யக் கூடும் எனவும் அவன் உணர்ந்தான். மற்றவர்களை மேலோட்டமாகப் பார்க்கையில், இந்த உணர்வானது அவனிடத்தில் மேன் மேலும் வலுப்பெற்றது.

''அவர்களில் ஒவ்வொருவரும் இதைச் செய்யக் கூடும்.''

அவனுடைய போதை மயக்கமானது குறைந்து கொண்டே வந்தது, அமைதியாகத் திரும்பி அந்த இடத்தை விட்டுப் போய் விட வேண்டும் என்ற விருப்பத்தை உணர்ந் தான். அந்த விருப்பம் ஒரு முடிவுக்கு வருகின்ற நிலையில், யாரோ உரக்கக் கிசுகிசுத்தார்கள்:

''சரூஸா. இயற்கையின் சூழ்ச்சிப் பொறி. உனக்குத் தெரியுமா? சரூஸா.''

சரூஸா. அது என்ன குறிக்கிறது என்பது அர்தமோன வுக்குத் தெரியும்: சதுப்பு நிலக் காட்டின் நடுவே உள்ள மிகு மதுரமான ஒரு பசும் புல்வெளி; அந்தப் புல்வெளியில் உள்ள புல்லோ குறிப்பாக அழகானதாகவும், குறிப்பாகப் பசுமை யும் பட்டுப் போன்ற தன்மையும் கொண்டது; ஆனால் அதன் மீது கால் பதிக்கக் கூடிய எல்லாருமே அதனுடைய அடியற்ற படுவத்திற்குள்ளாக இழுத்துச் செல்லப் படுவார்கள். எனி னும், தனது நிர்வாண சக்தியால் வென்றபடி அவனைச் செயலற்றவனாக்கிய அந்தப் பெண்ணைப் பார்த்தபடியே இருந்தான். அவளுடைய கனத்த, பளபளக்கும் பார்வை அவன் மீது விழுந்த போது, சிரமப்பட்டபடி தனது தோள் களைக் குலுக்கிக்கொள்வான், கழுத்தை வளைத்துக் கொள் வான், முகத்தையும் அப்பால் திருப்பிக் கொள்வான். பிறகு அவன் மற்றவர்களைப் பார்ப்பான்: ஒருவிதமான கேவல மான வியப்பில் திளைத்தபடி அருவருப்பாகவும், பாதி குடி வெறியிலும், விழிகளை உருட்டியும் பார்த்துக் கொண்டிருந் தார்கள். இது வீட்டிற்கு வர்ணம் பூசும் ஒருவன் ஒரு நாள் சர்ச் கூரையிலிருந்து விழுந்து இறந்த போது திரியோமவ் நகரத்து மக்கள் வெறித்துப் பார்த்தது போல இருந் தது.

கருநிறமானவனும், சுருள்முடி கொண்டவனுமாகிய ஸ்தி யோபா சன்னல் விழிம்பிலே உட்கார்ந்திருந்தான், அவ னது தடித்த உதடுகள் விலகி இருந்தன, நடுங்குகின்ற கை களால் நெற்றியைத் தேய்த்து விட்டுக் கொண்டிருந்தான். அடுத்த கணமே அவன் கட்டாயம் கீழே விழுந்து, தரையில் தனது தலையை மோதிக் கொள்ளப் போகிறான் என்பது போலக் காணப்பட்டான். அவனுடைய சட்டை முன் கை களில் ஒன்று தொளதொளத்துக் கிடந்தது. ஏதோ காரணத் திற்காக திடீரென்று அதை அவன் கிழித்தெடுத்து மூலை யில் வீசி எறிந்தான்.

அந்தப் பெண்ணினுடைய அசைவுகளோ மிகவும் விரைவு பெற்றன, மிகவும் வலிப்போடு கூடியதாக இருந்தன. பியா னோவிலிருந்து கீழே குதிக்க முயற்சி செய்வது போல அவள் வளைந்தாள், நெளிந்தாள், ஆனால் ஏதோ ஒரு சக்தியால் பின்னுக்கு இழுக்கப்பட்டாள். அவளுடைய மென்மையான கூக்குரலானது மூக்கால் பாடுவது போலவும், அவளுடைய

ரலானது மிகவும் அடங்காப் பிடாரித்தனமாகவும் மாறி யது. அவள் கால்களுடைய திருக்கு மறுக்கான அசைவுகளை யும், அவள் தலை கூர்மையாகச் சுண்டி இழுப்பதையும், அடர்த்தியான அவளுடைய தலை முடியானது இறக்கைக ளைப் போல விரிந்து தோளுக்கு மேலாக விழுவதும், விலங் கின் தோல் போல அவளுடைய மார்பை மூடுவதும் திறப்ப துமாக இருப்பதைக் காண்பது அருவருப்பானதாக இருந் தது.

திடீரென்று இசை நின்று போனது, அந்தப் பெண்ணும் தரையை நோக்கிக் குதித்தாள். கருநிற ஸ்தியோபா ஒரு பொன்னிற மஞ்சள் அங்கியால் பரபரத்தபடி அவளைச் சுற்றி, அறையை விட்டு அவளை வெளியே இழுத்துச் சென் றான். அங்கிருந்தவர்கள் கூச்சலும், இரைச்சலும் போட்டு, தீவிரமாகக் கைகளைத் தட்டிக் கொண்டு, ஒருவரையொரு வர் இடித்துக் கொண்டார்கள். வெளிறிய சவங்களைப் போன்றுத் தோன்றிய பரிமாறுபவர்கள் விரைந்து வரவும் போகவுமாக இருந்தனர். கண்ணாடிக் குவளைகள் ஒலியெ ழுப்பின. புழுக்கமான நாளில் தாகமிருப்பது போல ஒவ் வொருவரும் குடிக்கத் தொடங்கினார்கள். அவர்கள் கேவ லமாகவும், நாகரிகமற்றும் உண்டார்கள், குடித்தார்கள். உணவுத் தொட்டிக்கு மேலாக பல பெரிய பன்றிகள் நெருக் கியடித்துக் கொண்டு தின்பது போல, மேசைக்கு மேலாக அவர்களது தலைகளைத் தொங்கப் போட்டுக் கொண் டிருந்ததானது ஏறத்தாழ அருவருப்பூட்டுவதாகவே இருந்தது.

ஜிப்சிகள் கூட்டம் ஒன்று தோன்றியது. அவர்களுடைய பாடல்களும், நடனங்களும் கூட்டத்தை எரிச்சலடைய வைத் தது, அவர்கள் மறைந்து போகின்ற வரை அவர்கள் மீது வெள்ளரிக் காய்களும், துடைப்புக் குட்டைகளும் பறந்தபடி இருந்தன. அவர்களுடைய இடத்திற்கு, கூச்சல் போட்டு அமர்க்களப் படுத்தும் பெண்களை ஸ்தியோபா அனுப்பி வைத்தான். அவர்களில் ஒருத்தி, குட்டையாகவும் தடிப்பாக வும் இருந்தவள், சிவப்பு உடையணிந்தவள், பியோத்தரின் முழங்காலில் அமர்ந்து ஷாம்பேன் மதுக் கிண்ணத்தை அவ னது உதடுகளுக்கு மேலாக உயர்த்தினாள். பிறகு தனது கிண்ணத்தை அவனுடையதுடன் பலமாக மோதி, சத்தம் போட்டாள்:

''மீத்யாவுக்காகப் பருகுங்கள், சிவப்பு தலையரே!''

அவள் விட்டில் பூச்சியைப் போல இலேசாக இருந்தாள், அவளுடைய பெயர் பஷூதா. அவள் கித்தாரை மிக அரு மையாக மீட்டி, நெஞ்சைத் தொடுவது போலப் பாடினாள்:

அத்தனையும் படிகமாய்
நீலவானமாய்
இத்தரை ஒளிர் காலையாகக்
கனாக் கண்டேன்...

அவளது தெளிவான குரலோ இரங்கத்தக்கவாறு ஒலித் தது:

எப்போதோ இழந்திட்ட
அறியாப் பருவத்தின்
கன்னிக் கோலத்தையே
இப்போது கனாக் கண்டேன்.

அர்தமோனவ் அவளது தலையை நட்புணர்வுடனும், தந்தையின் பாவனையோடும் தடவி, அவளை ஆறுதல் படுத்த முயன்றான்:

''நீ சீழ்க்கையடிக்க வேண்டாம்! இன்னமும் நீ இளமை யோடுஇருக்கிறாய்.பயப்படுவதற்குஉனக்குஒன்றுமில்லை...''

இரவிலே, அவளை இறுக அணைத்தபடி, மற்றொருத்தி யான பாவுலா மெனோத்தியைத் திரும்பவும் நினைத்துப் பார்த்துக் கொள்ள முடியும் என்பதற்காகத் தனது கண் ணை இறுக மூடிக் கொண்டான்.

தெளிந்த அறிவுடன் இருக்கின்ற அபூர்வமான சில கணங் களில், இந்த ஒழுக்கக் கேடான பஷூதா தன்னிடமிருந்து பெருவாரியான பணத்தைப் பிடுங்கிக் கொண்டிருந்ததை மிகுந்த வியப்போடு உணர்ந்தான்; தனக்குத்தானே நினைத்துக் கொண்டான்:

''சின்னஞ்சிறு விட்டில் பூச்சி!''

சந்தையில் இருந்த இந்தப் பெண்கள் எவ்வளவு திற மையோடு ஆண்களுடைய பைகளினின்றும் பணத்தைப் பிடுங்குகிறார்கள் என்பதும், குடிவெறி விபசாரத்தின் மூலம் இரவுகளில் சம்பாதித்த பணத்தை அவர்கள் எவ் வளவு அருத்தமில்லாமல் செலவிடுகிறார்கள் என்பதும் வியப்பூட்டுவதாகவே இருந்தது. ஒரு பெரிய கம்பள வியா பாரியான நாய் முகங் கொண்ட அந்த மனிதன் பாவுலா

மெனோத்திக்காக ஆயிரக்கணக்கான பணத்தைச் செலவிட்ட தாக அவன் கேள்விப்பட்டான்; நிர்வாணமாகத் தோன் றும் ஒவ்வொரு முறைக்கும் அவன் மூவாயிரம் கொடுத் திருக்கிறான். பழுப்பு நிறமான காதுகள் கொண்டவன், தனது சுருட்டுகளைப் பற்ற வைக்க ஒரு நூறு ரூபிள் நோட்டைச் சுருட்டி மெழுகு வர்த்தியில் நெருப்புப் பற்றவைத்துக் கொண்டான், பெண்களுடைய மார்பகங்களுக்குள்ளாகப் பெருவாரியான பணத்தைத் திணித்திருக்கிறான்:

''இதோ, ஒரு ஜெர்மானியப் பெண்! என்னிடம் ஏராளம் இருக்கிறது.''

எல்லாப் பெண்களையும் அவன் 'ஜெர்மானியப் பெண்' என்றே அழைத்தான். அர்தமோனவைப் பொருத்த மட்டில் ஒவ்வொரு பெண்ணிடத்திலும் அடர்ந்த தலைமயிர் கொண்ட பாவுலாவினுடைய வெட்கத்தைத் துறந்த நாணமற்ற தன் மை இருப்பதையும், ஒவ்வொரு பெண்ணும் அவள் வாயாடி யாகவோ முட்டாளாகவோ, அறிமடமாகவோ துணிச்சல் காரியாகவோ எப்படியிருந்தாலும் தன்னைப் பகைமை யோடு பார்க்கிறார்கள் என்பதைக் காணத் தொடங்கி னான்; இப்போது நினைத்துப் பார்க்கையில், தன் மனைவி யிடம் கூட, அமுங்கிக் கிடந்த வெறுப்பின் சுவடுகள் இருப் பதை அவன் உணர்ந்தான்.

தன்னுடைய நினைவிலே அத்தனை—தெளிவாகத் தோன்றிய இளமையும் அழகுமிக்க மங்கையர்களின் வண் ணத் தொகுதியை மதிப்பிட்டுப் பார்க்கையில் ''விட்டில் பூச்சிகள்,'' என்று எண்ணினான்.

அவை எல்லாம் எதைக் குறிக்கின்றன என்பதை அவ னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அது எங்ஙனம் அப் படி இருக்க முடியும்? மக்கள் உழைத்தார்கள், தங்கள் தொழிலோடு கட்டுண்டு கிடந்தார்கள், உலகைப் பற்றியே நினையாது, பணத்தைப் பெருக்குவதை மட்டிலுமே முக்கி யக் குறியாகக் கொண்டு—எவ்வளவு பணத்தை அவர்க ளால் முடியுமோ அவ்வளவை—பிறகு அந்தப் பணத்தை எரித்தார்கள், ஒழுக்கங் கெட்ட பெண்களின் காலடிகளில் கைநிறைய அதை வீசி எறிந்தார்கள். அவர்கள் எல்லா ருமே பெரும் புள்ளிகள், வாழ்க்கையில் உயர் நிலையில் இருப்பவர்கள், கணவன்மார்கள், தந்தையர்கள், பெரிய ஆலைகளுக்கும், தொழிற்சாலைகளுக்கும் உரிமையாளர் கள்.

''பெரும்பாலும் அப்பா கூட இது போன்ற தந்திரங் களை விளையாடியிருப்பார்,'' என்ற முடிவுக்கு வந்தான். ஆம், அதில் சந்தேகப் படுவதற்கில்லை. இத்தகைய விருந்து களியாட்டம் மற்றும் வெறியாட்டம் போன்ற வாழ்க்கை யின் இந்த மாதிரியானவற்றில் பங்கு பெற்றவனாக அல்ல, ஆனால் சந்தர்ப்பவசமாக, விருப்பமில்லாத ஒரு பார்வை யாளனாக இருப்பதாக, தன்னைத்தானே அவன் கருதிக் கொண்டான். இந்த எண்ணங்கள் மட்டுமே ஒயினை விட போதை தருவதாக இருந்தன, அவற்றை ஒயினைத் தவிர மற்றவற்றால் கொல்ல முடியாது. மூன்று வாரங்களுக்கு அவன் குடிமயக்கத்தில் வாழ்ந்தான், அலெக்ஸியின் வருகை யினால் மட்டுமே அது நின்றது.

தரையின் மீது ஒடுக்கமான, கல்போன்ற மெத்தையில் மூத்த அர்தமோனவ் படுத்துக் கிடந்தான். அவனுக்கு அருகே ஐஸ், சில குவாஸ் பாட்டில்கள், புளிக்கவைத்த கோசு இருந்த தட்டும் இருந்தன. சோஃபாவின் மீது, திறந்த வாயுடனும், நதால்யாவினுடையதைப் போன்ற உயர்ந்த புருவங்கள் கொண்ட பஷூதா படுத்திருந்தாள். சோஃபாவின் ஓர் ஓரத்தில் பச்சை நரம்புகள் தெரிய, கால் விரல் நகங்கள் மீன் செதிளைப் போலப் பளபளக்க ஒரு வெண்ணிறக் கால் ஆடிக் கொண்டிருந்தது. சன்னலுக்கு வெளியே மாபெரும் அனைத்து ருஷ்யச் சந்தையிலே மன நிறைவு பெறாத ஆயிரக்கணக்கான குரல்கள் கர்ஜனை செய்து கொண்டிருந்தன.

போதையால் தலையில் ஏற்பட்ட ஒருவித இரைச்சலு டனும், தனது நச்சு உடம்பின் பதைபதைக்கிற வலியுடனும், கடந்த இரவின் போது நடந்த நிகழ்ச்சிகளையும், கேளிக் கைகளையும் முகவாட்டத்தோடு எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்த போது, சுவரினின்றும் வெளியேறிய பருப் பொருள் போல அலெக்ஸி திடீரென்று தோன்றினான். அறையைக் கடந்து நொண்டியபடி அவன் வருகையில் அவனது கைத்தடி தரையில் பலமான ஒலியெழுப்பியது. பியோத்தரைக் கீழே குனிந்து பார்த்தபடி அவன் வம்பளந் தான்:

''கட்டையா மேலே? உன் முதுகின் மீது? நேற்று முழுக் கவும் இரவு முழுக்கவும் உன்னைத் தேடினேன், காலையில் தான் என்னால் அறிந்து கொள்ள முடிந்தது.''

பரிமாறுபவனை அவன் உடனடியாக அழைத்து, லெமன்

கிரஸ், கோன்யாக் சாராயம் மற்றும் ஐஸ் கொண்டுவரு மாறு பணித்தான். சோஃபாவுக்குத் தாவிச் சென்று பஷூ தாவின் தோளைத் தட்டினான்:

"எழுந்திரு, இளம் பெண்ணே!"

தனது கண்ணைத் திறவாமலேயே அந்த இளம் பெண் முணுமுணுத்தாள்:

"நரகத்துக்குப் போ. என்னைத் தனியே விடு."

"ஆகா, ஆனால் நரகத்துக்குப் போக வேண்டியது நீ தான்," என்று அலெக்ஸி முற்றிலும் பொருத்தமாக பதில் சொன்னான். அவளது தோளைப் பற்றி உட்கார வைத் தான், பின்னர் ஓர் உலுக்கு உலுக்கி வாசலைச் சுட்டிக் காட்டினான்:

"போடா! அவளைத் தொடாதே," என்றான் பியோத்தர். அவன் தம்பியோ நகைத்து அவனைச் சாந்தப்படுத்தி னான்:

"அதெல்லாம் சரி. அவளுக்காக நாம் சொல்லியனுப் பும் போது, அவள் வருவாள்!"

"பிசாசுகளா," என்றாள் அவள், ஆனால் தனது ஆடை களைப் பணிவோடு சுருட்டத் தொடங்கினாள்.

ஒரு டாக்டரைப் போலவே அலெக்ஸி உத்தரவுகள் இட் டான்:

"எழுந்திரு, பியோத்தர். உன் சட்டையைக் கழற்று, ஐஸ் வைத்து உன்னைத் தேய்த்துக் கொள்!"

பஷூதா தரையில் கிடந்த தனது கசங்கிய தொப்பி யை எடுத்து, அலங்கோலமான தனது தலை மீது வைத்துக் கொண்டாள். எனினும், சோஃபாவுக்கு மேலாகக் கண்ணாடி யைப் பார்த்தபடி, அவள் சொன்னாள்:

"எத்தனை அழகு ராணி!"

தூக்கக் கலக்கத்தோடு கொட்டாவி விட்டுக் கொண்டு, தொப்பியை சோஃபாவுக்குக் கீழே சுழற்றி எறிந்தாள்.

"நல்லது, போய் வருகிறேன், மீத்யா! நினைவிருக்கட் டும், சிமான்ஸ்கி தங்கும் விடுதியில் அறை எண் 13இல் நான் இருக்கிறேன்."

பியோத்தர் அவளுக்காக வருந்தினான். தனது படுக் கையினின்றும் அசையாது இருந்தபடி, தன் தம்பியிடம் சொன்னான்:

"அவளுக்கு ஏதாவது கொடு."

"எவ்வளவு?"

''நல்லது... ஐம்பது.''

''ஓ! அது மிகவும் அதிகம்.''

அந்தப் பெண்ணினுடைய கையில் கொஞ்சம் பணத்தை அலெக்ஸி திணித்தான், அவள் வெளியே போனதும் கதவை இறுக்கமாகச் சாத்திவிட்டு வந்தான்.

''நீ அவளுக்கு மிகவும் குறைவாகக் கொடுத்தாய்,'' என்று பியோத்தர் சந்தேகத்தோடு சொன்னான். ''நேற்று அந்தத் தொப்பிக்காக அவள் அதை விட அதிகம் செலவிட்டாள்.''

அலெக்ஸி கைவைத்த நாற்காலியில் உட்கார்ந்தான். அவனது கைத்தடியின் உச்சி மீது அவனது கைகள் மடித்து வைக்கப்பட்டிருந்தன, கையின் மீது அவனது முட்டுவாய் இருந்தது. வறட்சியான, அதிகாரக் குரலில் அவன் கேட்டான்:

''நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

''குடித்துக் கொண்டிருக்கிறேன்,'' என்று அண்ணன் ஆர்வத்தோடு பதில் சொன்னான். எழுந்து உட்கார்ந்து, செருமிக் கொண்டு, ஐஸ் கட்டியால் உடம்பைத் தானாகவே தேய்க்கத் தொடங்கினான்.

''சாகுமளவுக்குக் குடி, புத்தியை மட்டும் அலைய விட்டு விடாதே! மேலும் நீ என்ன செய்கிறாய்?''

''சரி, என்ன?''

அலெக்ஸி மிகவும் நெருக்கமாக வந்தான், தான் ஓர் அந்நியனைப் போல பியோத்தரை உற்றுப் பார்த்தபடி கண்டிப்போடு பேசினான்:

''ஆக உனக்கு நினைவில்லை? உனக்கு எதிராக ஒரு புகார் இருக்கிறது. ஒரு வழக்குரைஞரைத் தாடையில் அடித்திருக்கிறாய், ஒரு போலீஸ்காரனைக் கால்வாயில் தள்ளி விட்டிருக்கிறாய், மேலும்...''

அவன் பல்வேறு குற்றச் சாட்டுகளை அடுக்கத் தொடங்கியதும் மூத்த அர்தமோனவ் சிந்தித்தான்:

''அவன் பொய் சொல்லிக் கொண்டிருக்கிறான். என்னை அச்சுறுத்த முயல்கிறான்.''

பிறகு அவன் கேட்டான்:

''என்ன வழக்குரைஞர்? மோசமாகப் பேசாதே.''

''நான் மோசமாகப் பேசிக் கொண்டிருக்கவில்லை. கருப்பாக இருப்பானே ஒருவன்—அவன் பெயரை நான் மறந்து விட்டேன்.''

''நாங்கள் முன்னே கொஞ்சம் சண்டை போட்டோம்,''

என்றான் பியோத்தர் வெறி மயக்கமில்லாமல். ஆனால் அவனது தம்பி இன்னும் கடுமையாகப் பேச்சைத் தொடர்ந்தான்:

''மரியாதைக்குரிய ஆட்களை எதற்காக நீ திட்டினாய்? பிறகு உன் குடும்பத்தினரையும் கூட எதற்காக?''

''நானா?''

''ஆமாம், நீ தான்! உன் மனைவியை, தீஹனை, என்னையும் திட்டினாய். யாரோ ஒரு சிறுவனைப் பற்றி நீ உளறினாய், புலம்பினாய்: 'ஆப்ரகாம், ஐசாக், ஆட்டுக்கடாய்!' என்றாயே இதற்கு என்ன அருத்தம்?''

பியோத்தர் மூளைக்குள்ளாக பயம் குடி கொண்டது. ஒரு நாற்காலியில் விழுந்தான்.

''எனக்குத் தெரியாது. நான் குடித்திருந்தேன்.''

''அது ஒரு காரணமல்ல,'' என்று அலெக்ஸி திரும்பச் சொன்னான், இப்போது பெரும்பாலும் அவன் உரக்கக் கத்திக் கொண்டிருந்தான், நொண்டிக் குதிரையில் சவாரி செய்பவனைப் போலத் தனது கைவைத்த நாற்காலியில் மேலும் கீழும் ஆடிக் கொண்டிருந்தான். ''இங்கே ஏதாவது வேறே; இந்தப் பழமொழி தெரியுமா: 'நல்ல நிலைமையில் சிந்திப்பதைத் தான் குடிவெறியில் இருக்கும் போது உளறுவான்.' இது தான் இங்கே. குடும்பப் பிரச்சினைகளைப் பற்றிப் பேசுவதற்குச் சாராயக்கடை ஓர் இடமல்ல. ஆப்ரகாம், தியாகம் என்ற உளறல்களுக்கு என்ன அருத்தம்? இணைந்து தொழில் நடத்திக் கொண்டிருக்கிறோம் என்பதை நீ உணரவில்லையா? என் பெயரையும் கூட கறைப்படுத்துகிறாய். நீ எங்கிருப்பதாக நீ நினைக்கிறாய்—நீராவிக் குளியல் அறையிலா, உன்னைத் திறந்து போட்டுக் கொள்ள? என் நண்பன் லோக்தேவ் அங்கே இருந்தது நல்லதாய் விட்டது. நீ மயங்கி கீழே சாய்கின்ற வரை கோன்யாக் சாராயத்தைக் கொடுத்தவன் அவன் தான். மேலும், வரும்படி எனக்குத் தந்தி கொடுத்தான். அது பற்றி எனக்குச் சொன்னவன் அவன் தான். முதலில் அவர்கள் எல்லாரும் சிரித்திருக்கிறார்கள், ஆனால் பிறகு கேட்கத் தொடங்கி விட்டார்கள் என்று கூறுகிறான். 'மனிதன் என்ன தான் உளறிக் கொண்டிருக்கிறான்?'''

''அவர்கள் எல்லாருமே உளறினார்கள்,'' என்று பியோத்தர் தளதளத்த குரலில் முணுமுணுத்தான். தன் தம்பியினுடைய வார்த்தைகள் அவனது போதையைத் திரும்

பக் கொணர்வது போலிருந்தது. ஆனால் அலெக்ஸி தொடர்ந்து பேசினான், அவனுடைய குரல் பெரும்பாலும் ஒரு கிசுகிசுப்பு அளவுக்குத் தாழ்ந்து போய்விட்டது:

''அவர்கள் ஒன்றைப் பற்றி மட்டிலும் உளறினார்கள், நீயோ ஒவ்வொன்றைப் பற்றியும் உளறினாய்! அவர்கள் ஒவ்வொருவரும் மயங்கி விழும் வரை அவர்கள் குடிக்கு மாறு மதுவை அனுப்பி வைக்க வேண்டும் என்பதை லோக்தேவ் உணர்ந்ததற்காக நீ நன்றி கூறலாம். அது பற்றி அவர்கள் ஒருவேளை மறந்திருக்கக் கூடும். ஆனால் நமது தொழில் அரசியலைப் போன்றது. லோக்தேவ் இன்று நண்பனாக இருக்கிறான், நாளையே அவன் நமது பரம எதிரியாக மாறக் கூடும்.''

தனக்குப் பின்னால் உள்ள சுவரின் மீது தனது தலையை பலமாக அழுத்தியபடி பியோத்தர் அமர்ந்திருந்தான். அவன் பேசவில்லை. தெருவினுடைய மூர்க்கமான இரைச்சலினால் சுவரே நடுங்கிக் கொண்டிருந்தது, சுவரின் இந்த நடுக்கமானது தன் மனத்தில் உள்ள போதைக் குழப்பத்தை அடக்கி, தனது பயத்தைக் கட்டாயம் ஓட்டிவிடும் என்பது போலக் காணப்பட்டது. தன் தம்பி என்னவெல்லாம் விவரித்தானோ அதைத் தவிர எதுவுமே அவன் நினைவில் இல்லை. ஒரு நீதிபதியினுடைய தொனியிலும், தன்னை விட மூத்தவனைப் போன்றும் தன் தம்பி பேசுவதைக் கேட்க கசப்பானதாக இருந்தது. இன்னும் என்னவெல்லாம் சொல்லப் போகிறனோ என்பதை நினைக்க நடுக்கமாக இருந்தது.

இன்னமும் மேலுங் கீழும் அசைந்தபடி ''உனக்கு என்ன ஆகிவிட்டது?'' என்று அலெக்ஸி கேட்டான். ''நிகீதாவைப் பார்க்கப் போய்க் கொண்டிருப்பதாக நீ தெரிவித்தாயே...''

''அவனைப் பார்க்கத்தான் சென்றேன்.''

''நானுந்தான் போனேன். நாங்கள் தந்தி கொடுத்த போது, நீ அங்கே இல்லை என்று அவர்கள் பதில் தந்தார்கள். நானே நேராக அங்கு சென்றேன். ஒவ்வொருவரும் கவலைப்பட்டார்கள். மொத்தத்தில், உலகம் பாதுகாப்பான இடம் அல்ல. நீ எங்காவது கொலை செய்யப்பட்டுக் கூட இருக்கக் கூடும்.''

''எனக்குள்ளாக ஏதோ மோசமான ஒன்று உறுத்திக் கொண்டே இருந்தது,'' என்று மிகவும் தணிந்த குரலில், மன்னிப்புக் கேட்பது போல பியோத்தர் குற்றத்தை ஒப்புக் கொண்டான்.

''ஆக அதனை வெளியே இழுத்து விட வேண்டி இருந் திருக்கிறது? நீ புரிந்து கொள்ள வேண்டும், நமது தொழிலை சீர்குலைத்து விட்டாய்! என்ன தியாகத்தைப் பற்றி நீ பேசிக் கொண்டிருந்தாய்? நீ யார்—பையன்களோடு முட்டாள்தனமாக விளையாட ஒரு பாரசீகனா? எந்தப் பையன்?''

தனது தலையையும் தாடியையும் தடவிக் கொடுப்பதற்காகத் தனது கைகளை முகத்திற்கு மேல் உயர்த்தியபடி, விரல்களின் ஊடாக பியோத்தர் பதிலளித்தான்:

''இல்யா... ஒவ்வொன்றுக்கும் அவன் தான் காரணம்.''

இருட்டிலே வழி தடவிச் செல்வது போல, மெதுவாகவும், தயக்கத்துடனும், இல்யாவுடன் தான் செய்த சண்டையைப் பற்றி அலெக்ஸியிடம் கூறத் தொடங்கினான். அவன் நீண்ட நேரம் பேசவில்லை. அவன் தம்பி நிம்மதிப் பெருமூச்சுடன் உரக்கப் பேசினான்:

''ப்பூ! சரி, சரி, பரவாயில்லை! லோக்தேவ் அதை ஆசிய முறைப்படி அருவருப்பாக எடுத்துக் கொண்டான். அப்படியானால் அது இல்யாவா? சரி, நீ என்னை மன்னிக்க வேண்டும், ஆனால் உனக்குப் புத்திசாலித்தனம் இல்லை. வியாபாரம் என்றால் ஒவ்வொன்றையும் நாம் கற்றாக வேண்டும், எல்லாவற்றிற்கும் செல்ல வேண்டும், மாறாக, நீயோ...''

வியாபாரிகளுடைய மகன்கள் என்ஜினியர்களாகவும், அதிகாரிகளாகவும், இராணுவ அதிகாரிகளாகவும் வர வேண்டும் என்பதை வலியுறுத்தியபடி நீளவும், ஆற்றோட்டம் போலப் பேசினான். அரங்கத்தை நோக்கி ஓட்டிச் செல்லப்படுகின்ற வண்டிகளின் ஓசையும், ஐஸ்கிரீம் மற்றும் குளிர்பான வண்டி தள்ளுவோரின் இரைச்சல்களும், இன்னும், கால்வாய்க்கு மேலாகக் கழிகளின் மீது கண்ணாடியாலும், இரும்பாலும் கட்டப்பட்டிருந்த பிரேசிலியன் காட்சியரங்கத்திலிருந்து வந்த பொறுத்துக் கொள்ள முடியாத இசை முழக்கம் அனைத்தும் சன்னல் வழியாகக் காதைச் செவிடாக்குவது போல உள்ளே நுழைந்தன. முரசு ஒலித்ததானது பாவுலா மெனோத்தியின் நினைவை வரவழைத்தது.

''எனக்குள்ளாக ஏதோ மோசமான ஒன்று உறுத்திக் கொண்டே இருந்தது,'' என்று திரும்பவும் கூறிய மூத்த அர்தமோனவ், தன் காதைத் தொட்டுக் கொண்டு, லெமன் பிரஸ் இருந்த கிளாசுக்குள்ளாக கோன்யாக் ஊற்றத் தொடங்கினான். எச்சரிக்கை செய்வது போன்ற பார்வை

யுடன், அவன் கையிலிருந்த பாட்டிலை அவன் தம்பி பறித்தான்:

''இதோ பார். மீண்டும் நீ விறைத்துப் போகப் போகிறாய். இப்போது, மிரோனை எடுத்துக் கொள், அவன் என் ஜினியராக விரும்புகிறான். நானும் இதில் மகிழ்ச்சியடைகிறேன்! வெளிநாட்டில் பயணம் செய்ய விரும்புகிறான். திரும்பவும் நான் மகிழ்ச்சியடைகிறேன்! அது சுத்தமான லாபம், நட்டம் இல்லை. உன்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லையா? நமது வர்க்கத்தினர் தான் முக்கிய சக்தி...''

எதையும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் பியோத்தருக்கு இல்லாதிருந்தது. தன் தம்பியின் ஆர்வமிகுந்த பேச்சை பாதிக் கேட்டபடி, தனக்குத் தானே சிந்தித்துக் கொண்டிருந்தான், இங்கே, செல்வமும், அவனை விடப் புத்திசாலித்தனமும் பெற்ற ஆட்களுடைய, நாடு முழுக்கப் பரந்த அளவில் வர்த்தகம் நடத்தும் பெரும் புள்ளிகளுடைய, மரியாதையையும், நட்புறவையும் தன் தம்பி ஏதோ வழியில் பெற்றிருந்தான்; அவனது மற்றொரு தம்பி துறவி மடத்தில் ஒளிந்து கொண்டு, அறிவும் நேர்மையும் வாய்க்கப் பெற்ற மனிதன் என்று பெயர் வாங்க முயற்சித்துக் கொண்டிருக்கிறான்; மேலும், இவனோ, பியோத்தரோ முட்டாள்தனமான சந்தர்ப்பங்களின் கொடுமைக்கு ஆளாகி விட்டிருந்தான். ஏன்? என்ன பாவங்களுக்காக?

அலெக்ஸி மேலும் தொடர்ந்தான்: ''ஒழுக்கக் குறைவான காரியங்களுக்காக மரியாதைக்குரிய நபர்களைத் திட்ட வேண்டிய தேவை உனக்கில்லை!'' இப்போது அவன் குரல் ஏதோ மென்மையாகவும், தெளிவுபடுத்துவதாகவும் இருந்தது. ''அது ஒழுக்கக் குறைவானதே அல்ல; அது உபரியான சக்தி. அந்த வழக்குரைஞன் ஓர் அயோக்கியன், ஆனால் அவன் விஷயங்களை ஒழுங்காகப் பார்க்கிறான். அவனுக்கு அருமையான மூளை! உண்மையில், அவர்கள் வயதானவர்கள், அவர்களில் சிலர் கிழவராகிப் போனவர்களும் உண்டு, எனினும் இளைஞர்களைப் போல பொறுமையாக நடந்து கொள்கிறார்கள். நல்லது, ஆனால் இளைஞர்களும் கூட, அவர்களுக்கும் வெறி பிடித்தது போல நடந்து கொள்கிறார்கள், இதற்குக் காரணம் அவர்கள் வளர்ந்து கொண்டிருக்கிறார்கள், அளவுக்கு மீறிய சக்தி பெற்றிருக்கிறார்கள். மேலும், நம்முடைய பெண்கள் கிளர்ச்சியற்றவர்கள் என்ற உண்மையையும் நீ ஏற்றுக்

கொள்ளத்தான் வேண்டும். அவர்களிடத்திலே மரியாதை யிடிப்பு இல்லை. அவர்கள் வாழ்க்கையை சோர்வுடை யதாக்குகிறார்கள்! ஓல்கா இல்லை—நான் அவளைக் குறிப்பிட வில்லை. அவள் வித்தியாசமானவள்! எதிலும் தீமையைக் காணாது கண்ணை முட்டாள்தனமாக மூடிக் கொள்ளும் சில புத்திசாலிப் பெண்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஓல்காவும் ஒருத்தி. அவளை உன்னால் புண்படுத்த முடியாது. அவள் தீமை எதையும் பார்ப்பதில்லை. அவள் தீமை எதையும் நம்புவதில்லை. நதால்யாவைப் பற்றி உன்னால் அப்படிக் கூற முடியாது. அது உண்மை, எல்லாருக்கும் முன்னால் அவளை எப்படி அழைத்தாய்: வீட்டு எந்திரம்!''

''உண்மையிலேயே நான் அப்படிச் சொன்னேனா?'' பியோத்தர் கிளர்ச்சியின்றி வினவினான்.

''சரி, லோக்தேவ் அதைக் கற்பனை பண்ணி இருப்பான் என்று நான் கருதவில்லை.''

கேட்க வேண்டும் என்று பியோத்தர் விரும்பியிருந்த விஷயங்கள் ஏராளம்; ஆனால் தான் ஏற்கெனவே மறந்து போய் விட்டிருந்தவற்றை, ஒருவேளை, புதிய விஷயங்களை அலெக்ஸிக்கு நினைவு படுத்தக் கூடும் என்று அஞ்சினான். பியோத்தரின் மனத்தில் தன் தம்பி மீது பகைமையுணர்ச்சியும், எதிர்ப்புணர்ச்சியும் ஏற்படலாயிற்று.

''அவன் வரவர புத்திசாலியாகிக் கொண்டு வருகிறான், பிசாசு...''

ஒரு துறுதுறுப்பும், புறப்படத் தயாராகின்ற ஒரு பதட்டமும், நரிக்குணம் போன்ற முன்னெச்சரிக்கை உணர்வும் அலெக்ஸியிடம் காணப்பட்டன. அவனுடைய பருந்துக் கண்களையும், இராணுவ வீரன் போன்று முறுக்கி விடப்பட்ட நரைத்த மீசையிருந்த, திருக்கி முறுக்கிய மேல் உதடுக்குப் பின்னே பளபளக்கின்ற தங்கப் பல்லையும், சின்னஞ் சிறு தாடியையும், அதைப் பற்றியிருந்த பறவையின் வளைநகங்கள் போன்ற கைநகங்களையும் காண பியோத்தர் எரிச்சலுற்றான். குறிப்பாக எப்போது பார்த்தாலும் காற்றிலே கற்பனைக் கோடுகளை வரைந்தபடி இருந்த வலது கை ஆள்காட்டி விரல் மகிழ்ச்சியின்மையைத் தந்தது. அலெக்ஸியினுடைய குட்டையான இரும்பு நிற மேற்சட்டை அவனைப் போக்கிரித்தனமான வழக்குரைஞனைப் போன்று காட்டியது.

அவன் அங்கிருந்து போக வேண்டும் என பியோத்தர் திடீரென்று விரும்பினான்.

தனது கண்களைப் பாதி மூடியவாறே ''நான் கொஞ்சம் தூங்க வேண்டும்,'' என்றான்.

''அது புத்திசாலித்தனமானது,'' என்று அலெக்ஸி ஏற்றுக் கொண்டான். ''இன்று நீ எங்குமே போகாதிருப்பது சிறந்தது.''

அலெக்ஸி அங்கிருந்து போன பிறகு ''என்னைச் சின்னப் பையனாகக் கருதி புத்திமதி சொல்கிறான்,'' என்று பியோத்தர் வேதனையோடு நினைத்தான். மூலையிலிருந்த கழுவு தொட்டிக்குப் புறப்பட்டான், ஆனால் அவனைப் போலவே கிட்டத்தட்டத் தோன்றிய ஒரு மனிதன் அவனுக்குப் பக்கத்தில் ஓசையின்றி நகர்ந்து வந்தான்: சுருங்கிய முகமும், அச்சத்தால் துருத்தி நின்ற கண்களும், தனது சிவந்த கையால் ஈரமான தனது தாடியையும், மயிரடர்ந்த மார்பையும் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்த அவனைக் கண்டதும், இடையிலேயே நின்று விட்டான். சோஃபாவுக்கு மேலாக இருந்த கண்ணாடியில் தெரிந்த தனது சொந்த உருவத்தின் பிரதிபலிப்புத்தான் என்பதை பியோத்தரால் முதலில் நம்ப முடியவில்லை, பிறகு, நோய் பிடித்தது போன்ற புன்முறுவலுடன், ஐஸ் கட்டியை எடுத்து மீண்டும் ஒரு முறை தனது முகம், கழுத்து, மார்பு இவற்றில் தேய்க்கத் தொடங்கினான்.

''ஒரு வண்டியை எடுத்துக் கொண்டு நான் நகரத்திற்குச் செல்வேன்,'' எனத் தீர்மானித்தான், தனது ஆடைகள் இருக்குமிடத்திற்குச் சென்றான்; ஆனால் தனது சட்டையைப் பாதி மாட்டிக் கொண்டிருப்பதற்கு முன்னே அதைக் கழற்றி வீசி எறிந்தான், தந்தத்தால் ஆன மணியடிக்கும் பொத்தானை தன் விரல் கொண்டு பலமாக அழுத்தினான்.

''தேநீர், 'ஸ்ட்ராங்'காகத் தயாரி,'' என்று பரிமாறுபவனிடம் கூறினான். ''மேலும் காரமாக ஏதாவதும், கொஞ்சம் கோன்யாக்கும்.''

சன்னலுக்கு வெளியே பார்த்தான். கடைகளின் அகன்ற கதவுகள் ஏற்கெனவே பூட்டப்பட்டிருந்தன. தெருவில் மேலுங் கீழும் மக்கள் மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தார்கள், புழுக்கமான அந்த இருளில் கற்குவியலின் மீது குந்தியிருந்தார்கள். அரங்கத்து நுழைவாயிலில் கிஸ் என்ற ஓசையுடன் ஒரு விளக்கு ஒளி பாய்ச்சிக் கொண்டிருந்தது.

அண்மையில் எங்கோ பெண்களுடைய குரல்கள் பாடிக் கொண்டிருந்தன.

''விட்டில் பூச்சிகள்.''

''நான் சுத்தம் செய்யலாமா?'' என்று அவனுக்குப் பின்னிருந்து ஒரு குரல் வந்தது; விரைந்து சுற்றியபடி திரும்பினான், வாசலில் ஒற்றைக் கண் கிழவி ஒருத்தி கையில் ஒரு பெருக்கு மாறையும் கைநிறையக் கந்தல் துணிகளையும் வைத்துக் கொண்டிருந்தாள். ஒரு வார்த்தை கூட இல்லாதபடி, வெளியே நடைக்கூடத்திற்கு அவன் சென்றான். அங்கே கருப்புக் கண்ணாடியும், கருப்புத் தொப்பியும் அணிந்து பாதி திறந்த கதவின் வழியில் நின்று பேசிக் கொண்டிருந்த ஒருவனோடு மோதிவிட்டான்:

''ஆமாம், ஆமாம், அவ்வளவு தான்!''

ஒவ்வொன்றுமே தொடர்பில்லாமல் இருந்தது. வார்த்தைகளுக்குள்ளாக மறைந்திருக்கின்ற அருத்தத்தைப் புரிந்து கொள்வதற்கு மிகுந்த சிந்தனை தேவைப்பட்டது. பின்னர் ஒரு சிறிய சமோவார் உஸ் என்று ஒலியெழுப்பிக் கொண்டிருந்த ஒரு வட்டமான மேசையின் முன்னர் அர்தமோனவ் உட்கார்ந்தான், தலைக்கு மேலாக இருந்த விளக்கின் புகைப் போக்கியில், கண்ணுக்குப் புலனாகாத கை ஒன்று அதை மெல்லத் தொடுவது போல, ஒலி ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அவனது நினைவிலே குடிவெறியில் திளைத்த விநோத மனித உருவங்கள் பளிச்சிட்டன, பாடலைத் தவிர்த்த சொற்கள், அலெக்ஸியினுடைய அதிகாரப் பேச்சின் துண்டு துணுக்குகள், யாரோ ஒருவரது பளிச்சிடுகின்ற கண்கள் கடந்து போவது போலத் தோன்றின. மேலும், இவை எல்லாவற்றிற்கும் அவனது அறிவானது இருண்ட வெற்றிடமாக இருந்தது. ஒரு மெல்லிய அதிர்கின்ற ஒளிக்கதிர் துளைத்துச் சென்ற அந்த வெற்றிடத்தின் ஊடே தூசி துகள்கள் போல இந்த உருவங்கள் ஆடவும் சுழலவும் செய்தன. இவை காரணமாகத் தன்னுடைய சிந்தனைகளை அவனால் எந்த ஒன்று மீதும், பயங்கர முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றின் மீதும், ஒரு முகப்படுத்த முடியவில்லை.

தேநீரைச் சூடாகக் குடித்தான், அவனது அண்ணம் வெந்துபோகுமாறு கோன்யாக்கைப் பேராவலுடன் பருகினான்; ஆனால் போதை எதையும் அவன் உணரவில்லை—மன உளைச்சல் தான் அதிகரித்துக் கொண்டிருந்தது, வெளி

யேறிப் போக வேண்டும் என்ற விருப்பமும் மேலிட்டுக் கொண்டிருந்தது. மணியை அடித்தான். தலையுமில்லாமல், முடியுமில்லாமல் தந்தத் தலையுடைய கூம்பு போல, பனி மூட்டம் போல யாரோ ஒருவன் தோன்றினான்.

''எனக்குக் கொஞ்சம் பச்சைச் சாராயம் கொண்டு வா, வான்கா. பச்சை ரகம் உனக்குத் தெரியுந்தானே.''

''ஆமாம், ஐயா. சார்ட்ரேஸ்.''

''உன் பெயர் வான்காவா, என்ன?''

''இல்லை, ஐயா. கான்ஸ்தந்தீன்.''

''அது சரி. போ.''

சாராயத்தைப் பரிமாறுபவன் கொண்டு வந்த போது, அர்தமோனவ் வினவினான்:

''இராணுவத்திலிருந்து வந்தவனா?''

''இல்லை, ஐயா.''

''ஒரு போர்வீரனைப் போலப் பேசுகிறாய்.''

''இது ஒருவகையான வேலை—நமக்கிட்ட உத்தரவுப் படி நடக்க வேண்டும்.''

அர்தமோனவ் கணநேரம் சிந்தித்தான், பிறகு அவனுக்கு ஒரு ரூபிள் கொடுத்து விட்டு சில புத்திமதிகளைச் சொன் னான்:

''ஆனால் நீ உத்தரவுப்படி நடக்காதே. எல்லாரையும் அனுப்பிவை... வெளியே சென்று ஐஸ்கிரீம் விற்பனை செய் அவ்வளவுதான்!''

சாராயம் வெல்லப்பாகு போல இறுகியும், நவச்சார நெடியும் கொண்டிருந்தது. அது பியோத்தரின் தலைக்குள் ளாக இருந்த விஷயங்களை எளிமையானதாகவும், தெளி வானதாகவும் ஆக்கிற்று. விஷயங்கள் ஒன்று சேர்வது போலக் காணப்பட்டன; இந்த மனச் செறிவானது ஏற்பட் டுக் கொண்டிருக்கையில், தெருவில் கேட்ட ஓசைகளும் மெல்லக் குறைந்து ஒன்றோடு ஒன்று கலந்து ஒரு மெல்லிய முணுமுணுப்புப் போலாகி, ஓர் அமைதியை ஏற்படுத்தி விட்டு, தொலைவாக எங்கோ மிதந்து போய் விட்டது.

''என்ன, உத்தரவுப்படி நடக்க வேண்டுமா?'' அர்த மோனவ் சிந்தித்தான். ''யாருக்கு? நான் எசமானன். நான் வேலைக்காரன் இல்லை. நான் எசமானனா, இல்லையா?''

ஆனால் இந்தத் தியானங்கள் அச்சத்திற்கு இடமளித்த படி, திடீரென்று குறுகிக் காணாமல் போய் விட்டன. இவைகளினால், தான் குற்றம் சாட்ட வேண்டி இருந்த

ஒருவனை, சுலபமான நம்பிக்கையுடன் அலெக்ஸியைப் போன்ற புத்திசாதுர்யமும் முன்னேற்றமும் கொண்ட வேறு ஆட்களை தனது வாழ்க்கையில் முன்னேறிச் செல்வதைத் தடுத்த ஒருவனை, தனக்கு முன்னே திடீரென்று அர்தமோனவ் கண்டான். தடையாக இருந்த அந்த மனிதன், அகன்ற முகமும் தாடியும் கொண்டு, தாடியை இடது கையால் பிடித்து விட்டுக் கொண்டும், உள்ளங்கையால் கன்னத்தைத் தடவி விட்டுக் கொண்டும் இவனுக்கு முன்னும், சமோவாருக்குப் பின்னுமாக இருந்தான். பியோத்தர் அர்தமோனவிடமிருந்து நிரந்தரமாகப் பிரிபவனைப் போலவும், அதே நேரம் இவனுக்காக இரங்குவது போலவும், எச்சரிப்பது போலவும், இவனைத் துயரத்தோடு வெறித்துப் பார்த்தான். வெறித்துப் பார்த்தபடி அவன் அழுதான், அவனது செந்நிற கண்ணிமைகளுக்குக் கீழிலிருந்து நச்சுக் கண்ணீர் சொட்டியது. அவனது தாடி நெடுகிலுமாக, இடது கண்ணிற்கு அருகே ஒரு பெரிய ஈ படபடத்துக் கொண்டிருந்தது. அவன் ஒரு செத்த பிணம் என்பது போல, இப்போது அவன் முகத்தின் மீது ஊர்ந்து செல்லத் தொடங்கியது. அது நெற்றிப் பொருந்தின் மீதும், பின்னர் நெற்றிக்கும் நகர்ந்தது, அவனது கண்ணிற்குள்ளாக உற்றுப் பார்த்தபடி கண்ணிமைக்கு மேலாகவும் சென்றது.

''என்ன, பயனற்றவனே?'' என்று தன் எதிரியைப் பார்த்து அர்தமோனவ் கேட்டான்; ஆனால் அவனது எதிரியோ அசையவுமில்லை, பதில் பேசவுமில்லை. அவனது உதடுகள் மட்டுமே மெல்ல அசைந்தன.

''புலம்பவா செய்கிறாய்?'' என்று பியோத்தர் அர்தமோனவ் தேடிக் கண்டு பிடித்த மகிழ்ச்சியால் கத்தினான். ''என்னைச் சிக்கலில் மாட்டவைத்து, அழுக்குப் பிடித்த நாயே, இப்போது நீ புலம்பிக் கொண்டிருக்கிறாயா? நீயாகவே வருந்துகிறாயா? ஆ...கா...கா!..''

மேசையிலிருந்த ஒரு பாட்டிலை பற்றிப் பிடித்து, தனது சக்தி முழுவதையும் வரவழைத்துக் கொண்டு அதைச் சுழற்றி, தனது எதிரியினுடைய இப்போது தெரியத்தொடங்கியிருந்த வழுக்கைத் தலையை நோக்கி வீசினான்.

நொறுங்கி விழுந்த கண்ணாடியின் ஓசை, உடைந்த பீங்கான்களின் சப்தம், மேசையினின்றும் சாய்ந்து கீழே விழுந்த சமோவாரின் இரைச்சல் அனைத்தும் ஆட்களை விரைந்து உள்ளே வரும்படி செய்தது. அவர்கள் அதிக

எண்ணிக்கையில் இல்லை, ஆனால் ஒவ்வொருவரும் இரண்டாக உடைந்து வளர்ந்து நிற்பது போலக் காணப்பட்டது. சமோவாரை தூக்குவதற்காக அந்த ஒற்றைக் கண் கிழவி குனிந்தாள், அதே நேரம் அவள் நேராக நிமிர்ந்தபடியும் இருந்தாள்.

தரை மீது உட்கார்ந்தபடி, புகார் செய்து கொண்டிருந்த குரல்களை அர்தமோனவ் கேட்டான்:

''நடு ராத்திரியில். வீடு முழுக்கத் தூங்கிக் கொண்டிருக்கையில்.''

''நீங்கள் கண்ணாடியை உடைத்து விட்டீர்கள்.''

''இது நடந்து கொள்ளும் முறை அல்ல...''

தனது கைகளை நீச்சலடிப்பது போல இங்குமங்கும் அலைத்த அர்தமோனவ் புலம்பினான்:

''அந்த ஈ...''

மறு நாள் மாலைவாக்கில் அலெக்ஸி சுறுசுறுப்போடு உள்ளே நுழைந்தான், தனது நோயாளியைப் பார்க்கின்ற ஒரு டாக்டரைப் போல, அல்லது தனது குதிரையைப் பார்க்கும் ஒரு வண்டிக்காரனைப் போல அக்கறை கொண்டு பியோத்தரைப் பார்த்தான். தனது மீசைக்கு மேலாக ஒரு சின்னஞ்சிறு வாருகோலை ஓடவிட்டபடி, அவன் அறிவித்தான்:

''எல்லாக் கண்ணியத்தையும் ஊதிப் பறக்க வைத்து விட்டாய். இந்தத் தோற்றத்தோடு உன்னால் வீட்டிற்குப் போக முடியாது! இத்துடன், இங்கு நீ எனக்கும் உதவ முடியும். உன்னுடைய தாடியை நீ கத்தரித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது, பியோத்தர், வேறு ஏதேனும் காலணிகளும் வாங்கிக் கொள்ள வேண்டும். வண்டிக்காரனுடையதைப் போன்று உன்னுடையது காணப்படுகின்றன!''

பல்லை இறுகக் கடித்துக் கொண்டு, ஒரு முடிதிருத்தகத்திற்குத் தன் தம்பியைப் பின் தொடர்ந்து அர்தமோனவ் பணிவோடு சென்றான். அங்கே, முடியிலிருந்தும் தாடியிலிருந்தும் எவ்வளவு கத்தரிக்கப்பட வேண்டும் என்பது குறித்து அலெக்ஸி கண்டிப்பான, துல்லியமான அறிவுரைகளைச் சொன்னான்; பிறகு காலணிக் கடைக்குச் சென்றார்கள், அலெக்ஸி அண்ணனுக்காகத் தானே ஒரு ஜோடிக் காலணிகளைத் தேர்ந்தெடுத்தான். இது முடிந்த பிறகு, கண்ணாடியைப் பார்ப்பதென்று பியோத்தர் முடிவு செய்தான், அதில் ஒருவிதத்தில் எழுத்தரைப் போலக் காணப்பட்டான். புதிய காலணிகள் கூட முன் பக்க வளைவைச் சுற்றி

ரிடிப்பாக இருந்தன. ஆனால் அலெக்ஸி சரியாகச் செய் திருப்பான் என்பதை ஏற்றுக் கொண்டு, நாக்கை அடக்கிக் கொண்டான்: முடி வெட்டுதல், காலணிகள் மாற்றம்— இவை எல்லாமே தேவையாய் இருந்தன. பொதுவாக, ஐய மின்றி, கணிசமான எடையுடன் அவனைக் கீழே அழுத்திக் கொண்டிருந்த, தெளிவற்ற, குடிவெறியின் அழுத்தக் கூடிய கசடுகள் அனைத்தையும் ஒட்டு மொத்தமாக அவனிட மிருந்து களைந்து விடுவதற்கும், அவனை ஒரு முகப் படுத் திக் கொள்வதற்கும், அது தான் அவனுக்கு நேரம்.

எனினும் தன் மனத்தில் திணிக்கப் பட்டிருந்த பனி மூட்டத்தின் ஊடாகவும், நஞ்சுண்டு போன உடம்பின் களைப்பின் ஊடாகவும், தன் தம்பியைக் கவனிக்கையில் முன்னைக் காட்டிலும் அதிகமான பகைமையும், மறிப்பும் மறைமுகமான மகிழ்ச்சியும், வெறுப்பும் ஒன்றிக் கலந்த வாறு ஏற்படுவதை அவனால் உணர முடிந்தது. மெலிந் தும், விருவிருப்பு நடையும், கூர்மையான கண்ணுறும் கொண்டு, தனது கைத்தடியை அலைக்கையில், வியாபாரக் கூதாட்டத்திற்காகத் தாங்க முடியாதபடி அவனை அரித்து காய்ச்சலில், தீப்பொறிகளையும், புகையையும் விடும் அனற் பிழம்பு போல அவன் காணப்பட்டான். சந்தையில் சிறந்த மதுக்கடைகளின் தனி அறைகளில், பிரபலமான வியாபாரி கள் குழுவுடன், அவனோடு சேர்ந்து உணவு மற்றும் சிற் றுண்டி உண்கின்ற போது, ஏறத்தாழ தன்னை ஒரு தொழில் முறைக் கோமாளி போல அலெக்ஸி காட்டிக் கொண்டு, அந்தப் பணக்காரக் கூட்டத்தை மகிழ்விக்கவும், களிப்பூட் டவும் தன்னாலானவற்றைச் செய்வதை பியோத்தர் வியப் போடு கண்டான். ஆனால் இந்தக் கோமாளித்தனத்தை அவர்கள் கண்டு கொள்ளவில்லை. அலெக்ஸியை அவர்கள் தெளிவாகவே விரும்பினார்கள், மதித்தார்கள். அவனுடைய இரைச்சல் மிக்க சளசளப்பை கவனத்தோடு செவிமடுத்தார் கள்.

கனத்த, அடர்த்தியான தாடி கொண்ட துணி உற்பத்தி யாளனான கோமோலவ், சிவப்பு முள்ளங்கி நிறத்தினா லான தனது விரலை அலெக்ஸியைப் பார்த்து ஆட்டினான், ஆனாலும் தனது மாட்டுக் கண்களை உருட்டியபடியும், ஒவ்வொரு அல்லது இரண்டு வார்த்தைகளுக்குப் பிறகு உதடுகளால் உரக்க ஒலியெழுப்பியவாறு பாசத்தோடு பேசினான்:

''நீ சுறுசுறுப்பானவன், அல்யோஷா! நீ ஊமைக் குசும்புக்காரன், கிழட்டுக் குள்ளநரி! என்னை முந்திவிட்டாய்...''

''எர்மலாய் இவானவிச்!'' அலெக்ஸி வேகத்தோடு கத்தினான். ''போட்டி—சரியாகச் சொல்கிறேனா?''

''நீ சரிதான். உன் கண்களை அகலத் திறந்து வை, உன்னுடைய ஆஸ் துருப்பைப் பயன்படுத்து!''

''எர்மலாய் இவானவிச், நான் கற்றுக் கொண்டிருக்கிறேன்!''

கோமோலவ் தலையசைத்தான்:

''நீ கற்றுக் கொண்டாக வேண்டும்.''

தனது முள் கரண்டியை அலைத்தபடி ''பெரியோர்களே!'' என்று அலெக்ஸி அறிவித்தான், அவனது குரல் இன்னமும் பெரு மகிழ்ச்சி கொண்டதாக, ஆனால் அதே சமயம் குறிப்புணர்த்துவது போலும் இருந்தது. ''என் மகன், மிரோன், ஒரு புத்திசாலிப் பையன், என்ஜினியராகப் போகிறான், அவன் என்னிடம் கூறுகிறான்: ஒரு காலத்தில் சைராகூசா நகரத்தில் மிகவும் பிரபலமான கற்றறிந்த ஒருவன் இருந்தான். தன்னுடைய அரசனிடம் கூறியிருக்கிறான்: 'நின்று கொள்வதற்கு எனக்கு ஏதாவது கொடு உனக்காக இந்த உலகம் முழுவதையும் தலை கீழாகப் புரட்டுவேன்!' ''

''ஓ, எப்படிப்பட்டவன்...''

''தலை கீழாக என்றான் அவன்! பெரியோர்களே! நின்று கொள்வதற்கு எங்கள் வர்க்கத்தினரிடம் ஏதாவது இருக்கிறது—ரூபிள்! எங்களுக்காக மாற்றித் தருவதற்கு எந்த புத்திசாலிகளும் தேவையில்லை. நாங்களாகவே போதுமான அளவுக்குப் புத்திசாலியாக இருக்கிறோம். ஒன்றே ஒன்றுதான் எங்களுக்குத் தேவை: வேறுபட்ட அலுவலர்கள்! பெரியோர்களே! பிரபுக்கள் வீழ்ச்சியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள். நம் வழியில் அவர்களால் நிற்க முடியாது. ஆனால் அனைத்து அலுவலகங்களிலும் நமது சொந்த ஆட்களை நாம் வைத்துக் கொள்ள வேண்டி இருக்கிறது, எல்லா முக்கிய இடங்களிலும் நமது சொந்த ஆட்களே இருக்க வேண்டும், நமது வியாபாரத்தைப் புரிந்து கொண்ட, வியாபாரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் வர வேண்டும்—அவ்வளவே தான்!''

நரைத்த, வழுக்கைத் தலையர்கள், நன்கு கொழுத்தவர்கள் அனைவருமே மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டார்கள்:

''நீ சரியாகச் சொன்னாய்!''

அவர்களில் கிழவனும், கழிவுத் தரகனுமான லோசெவ்—கூரிய மூக்கும், கட்டுறுதி வாய்ந்த சிறிய உடலும், ஒற்றைக் கண்ணும் கொண்டவன்—அடங்கிய நகைப்பொலியோடு பண்பாடோடு கூறினான்:

''அலெக்ஸி இல்யீச் பசைபோன்ற மனம் பெற்றிருக்கிறான்—ஒவ்வொன்றும் அதனோடு ஒட்டிக் கொள்கிறது! அவனுக்கு என்ன தெரிகிறதோ, அதைப் பயன்படுத்துகிறான்! இது அவனுக்காக!''

கிண்ணங்கள் உயர்த்தப்பட்டன, அலெக்ஸி தன்னுடையதை ஒவ்வொருவருடையதோடும் மகிழ்ச்சியாக உரசினான். கோமோலவின் பரந்த தோளில் தட்டிக் கொடுப்பதற்காகத் தனது சிறிய கையை நீட்டியபடி லோசெவ் கூறினான்:

''நமக்கிடையே புத்திசாலிகள் தோன்றிக் கொண்டு வருகிறார்கள்.''

''அவர்கள் நம்மிடையே எப்போதுமே இருக்கத்தான் செய்கிறார்கள்!'' என்று பெருமையோடு திருப்பிச் சொன்னான் கோமோலவ். ''என் அப்பா கப்பற் சுமையாளாகத்தான் தொடங்கினார், எப்படி உயர்ந்து விட்டார் என்பதைப் பாருங்கள்...''

''ஒரு பணக்கார ஆர்மீனியனைக் கத்தியால் குத்தி விட்டுத்தான் உன் தந்தை பணம் பெறத் தொடங்கியதாக அவர்கள் கூறுகிறார்கள்,'' என்று சொல்லி கெக்களித்தான் லோசெவ். அடர்ந்த தாடிவைத்த உற்பத்தியாளன் கர்ஜனை செய்தபடி சிரித்து பேசினான்:

''அவர்கள் பொய் சொல்கிறார்கள்! மக்கள் முட்டாள்கள், ஆகவே அவர்கள் அப்படிக் கூறுகிறார்கள். நீ அதிர்ஷ்டக்காரனாக இருந்தால், நீ பாவம் செய்தவன் எனப் பொருள்படும் என்கிறார்கள்! குஸ்மா, உன்னைப் பற்றிக் கூட சில ஆபாசப் பேச்சுகள் வந்து கொண்டிருக்கின்றன...''

''என்னைப் பற்றியும் கூட,'' என்று பெருமூச்சு விட்டபடி கூறினான் லோசெவ். ''ஹூம், பேச்சு, அதுவாகவே மறைந்து போகிறது!''

அவ்வப்பொழுது உறுமிக் கொண்டிருந்தபடி, மூத்த அர்தமோனவ் உட்கார்ந்து கேட்டான்; அதிகமாகச் சாப்பிட்டான், முடிந்தளவுக்குக் குறைவாகக் குடித்தான். தன்னைச் சுற்றியிருப்பவர்களுக்கு மத்தியில் தன்னை வேறு ஒரு விலங்கு

வகையென அதிருப்தியோடு அவனாகவே எண்ணிக் கொண்டான். அவர்கள் எல்லாருமே முன்னாளைய குடியானவர்கள் என்பதை அவன் அறிவான்; அவர்களைக் கடற்கொள்ளைக்காரர்கள் போலவும், புராணக் கதைகளில் வருபவர்கள் போலவும் பார்த்தான் அவன். ஏதோ ஓர் உணர்ச்சி அவனை மரியாதை கொள்ளச் செய்தது, அவன் தந்தையை நினைவூட்டுவதாக ஏதோ ஒன்று இருந்தது. அப்பா இருந்தால், வியாபாரத்திலும், விபசாரக் கேளிக்கைகளிலும் அவர்களுடன் நட்புறவோடு இருந்திருப்பார். குடியிலும் விபச்சாரத்திலும் அவர்கள் ஈடுபட்டிருப்பது போலவே பெரும்பாலும் அவரும் மூழ்கி இருக்கக் கூடும், மரச்சீவல் போல பணத்தையும் எரித்திருக்கக் கூடும். ஆமாம். இந்த மனிதர்களுக்குப் பணம் மரச்சீவல் போன்றது தான், பூமியின் மடியிலிருந்தும், ஒருவருக்குள் ஒருவரும், விவசாயிகளிடமிருந்தும் எதையெல்லாம் சுரண்ட முடியுமோ அதைக் களைப்பின்றி செய்வதில் அவர்களுடைய சக்தி ஈடுபட்டிருந்தது.

எனினும், இந்தப் பெரிய மனிதர்களினின்றும் அலெக்ஸி ஒரு வகையில் வேறுபட்டான்; தம்பி மீது வெறுப்பு இருந்தாலும், அவர்களைக் காட்டிலும் அவன் கூர்மையானவன், புத்திசாலி, மிகவும் ஆபத்தானவன் என்று பியோத்தர் சில கணங்களில் உணர்ந்தான்.

''பெரியோர்களே!'' வெறியூட்டப்பட்டவனைப் போல அலெக்ஸி கத்தினான். ''நமது வற்றாத உழைப்பு சக்தியை, லட்சக் கணக்கான விவசாயிகளை எண்ணிப் பாருங்கள்! அவர்கள் வேலை செய்கிறார்கள், பொருள்களை வாங்குகிறார்கள். இத்தனை வசதியோடு இருக்கக்கூடியவர்களை நீங்கள் வேறு எங்குதான் காண முடியும்? எங்குமில்லை! எந்த ஜெர்மானியர்களும் அந்நியர்களும் நமக்குத் தேவையில்லை. நாமாகவே நம்மைச் சமாளிக்க முடியும்!''

''நீ சொல்வது சரிதான்,'' என்று திறந்த வாயும், பாதி மயக்கத்திலும் இருந்த குழு ஒத்துக் கொண்டது.

இறக்குமதி செய்யப்படும் பொருள்களுக்கு அதிகமான சுங்கவரி தேவை என்பது பற்றியும், நில உரிமையாளர்களிடமிருந்து சொத்தினை வாங்குவது பற்றியும், பிரபுக்கள் நடத்தும் சிறப்பு வங்கிகளால் ஏற்படும் தீங்கு பற்றியும் அவன் பேசினான். ஒவ்வொன்றையும் அறிந்தவன் போல அவன் காணப்பட்டான், மூத்த அர்தமோனவுக்கு வியப்பை ஏற்படுத்துகின்ற மாதிரி அவன் சொன்ன ஒவ்வொன்றையும்

அந்த ஆட்கள் பெரு மகிழ்ச்சியோடு ஒப்புக் கொண்டார்கள்.

''நிகீதா சொன்னது சரிதான், எப்படி வாழ்வது என்பதை அலெக்ஸி அறிந்திருக்கிறான்,'' என்று மூத்தவன் பகைமை உணர்வோடு சிந்தித்தான்.

அவனுடைய மோசமான உடல் நலத்திற்கு மாறாக, அலெக்ஸி கூட, விபசாரத்தில் ஈடுபட்டான். அவன் நிரந்தரமாக ஒரு வைப்பாட்டி வைத்துக் கொண்டிருந்தான், மாஸ்கோவிலிருந்து வந்த அவள், ஓர் இசைக்குழுவை நடத்தினாள். அவளுக்குத் தடித்த உடம்பு, ஆனால் நன்கு கட்டுறுதி வாய்ந்தது, தேன் போன்ற குரலும் ஒளிர்கின்ற கண்களும் பெற்றிருந்தாள். நாற்பது வயது என்று சொல்லப்பட்ட போதிலும், எண்ணெய் போல பளபளக்கும் தோலும், வெதுவெதுப்பான குருதியால் சிவந்து போகும் கன்னங்களும் முப்பதுக்கும் குறைவாகவே அவளைக் காட்டியது.

தனது கூர்மையான நரிப் பற்களைக் காட்டியவாறே, ''அல்யோஷா, எனது இராசாளியே,'' என்று கூறுவாள். அவளது தடித்த உடம்புக்குள்ளாக, தனது தாயருகே இருக்கும் ஒரு குழந்தையைப் போல, அலெக்ஸி மறைந்து போவான்.

தனது இசைக்குழுவைச் சேர்ந்த இளம் பெண்களுடன் தொடர்பு கொள்வதை அலெக்ஸி வெறுத்தொதுக்கவில்லை என்பதை அவள் அறிந்தே இருக்க வேண்டும். அதை அவள் காணவும் செய்திருக்கிறாள். இன்னும் அவளுடைய நடத்தையானது எப்போழுதுமே நட்புரிமை கொண்டதாக இருந்தது. ஆட்களைப் பற்றியும் தொழிலைப் பற்றியும் அவளுடைய ஆலோசனையை அலெக்ஸி கேட்பதாக பியோத்தர் திரும்பத் திரும்பக் கேட்டான்—இது அவனுக்கு வியப்புக்குரியதாகவே இருந்தது, மேலும் இது அவனுடைய அப்பா மற்றும் உல்யானா பய்மகோவாவின் நினைவுகளைப் புதுப்பிப்பதாகவும் இருந்தது.

தன் தம்பியைக் கூர்ந்துநோக்கியதில் ''பிசாசே'' என்று நினைத்தான்.

அலெக்ஸி நினைத்த குறும்புத்தனம் ஒரு வகையில் வித்தியாசமானதாகவும், மிகவும் சூழ்திறமிக்கதாகவும் இருந்தது. மேயர் என்ற தடித்த ஜெர்மானியக் கோமாளி ஒருவன் பழக்கிய பன்றி ஒன்றை சர்க்களில் காட்டிவந்தான். தொங்கல் சட்டையும், தடித்த கோட்டும், உயர்ந்த தொப்

பியும், உயர்ந்த தோல் காலணிகளும் அணிவிக்கப் பெற்று, ஒரு வியாபாரியைப் போன்ற அமைப்பில் தனது பின்னங் கால்களால் நடை போட்டது. பார்வையாளர்கள் பயங்க ரமான மகிழ்ச்சியடைந்தார்கள், வியாபாரிகள் கூடச் சிரித் தார்கள். ஆனால் அலெக்ஸி சிரிக்கவில்லை. அதைக் குற்ற மாக எடுத்துக் கொண்டான், அந்தப் பன்றியைத் திருடி வந்து கொல்ல வேண்டும் என்பதைத் தனது நண்பர் குழு விடம் பேசினான். காவலாளிக்குக் கையூட்டுக் கொடுத்து, பன்றியைத் திருடினார்கள்; பர்பதேன்கொ ஓட்டல் தலை மை சமையற்காரன் பல்வேறு விதமாகச் சமைத்துத் தட் டுகளில் பரிமாறிய அதன் இறைச்சியை வியாபாரிகள் வீற மைதியுடன் பேராவலோடு உண்டார்கள். துயரம் தாளா மல் அந்தக் கோமாளி தனக்குத்தானே தூக்குப்போட்டு இறந்து போய் விட்டான் என பின்னர் பியோத்தர் அர்த மோனவ் ஏதோ வதந்தியாகக் கேள்விப்பட்டான். அந்த சந்தையில் இருந்த அலெக்ஸியிடம் புதிதாகக் காணப்பட்ட கூறுகள் அனைத்தும், பியோத்தரின் மனத்தில் மிகுந்த கவ லையை உண்டாக்கும் சிந்தனைகளை ஏற்படுத்தின.

''கூர்மையான கை. மனச்சாட்சியே இல்லை. தன்னை யும் அறியாமல் கூட இவன் என்னைக் கெடுத்துவிடக் கூடும். பேராசையினால் இல்லாவிட்டாலும்—வெறுமனே பிரச்சி னைகளின் அவசரத்தில் கூட நடக்கலாம்.''

இந்த அபாயத்தை உணர்ந்த உடனேயே, அவன் சாதா ரண நிலைக்குத் திரும்பினான். அலெக்ஸி மாஸ்கோ சென்று விட்டதால், தனிமையில் வீடு திரும்பினான். திரியோமவ் நகரத்துக்குத் திரும்பும் போது செப்டம்பர் மாதத்தில் ஈர மும், வாடையும் இருந்தது. மணிகள் கணகணக்க, மழை நீரால் நனைந்த தரையில் குளம்புகள் உரத்த ஒலியெழுப்ப, அஞ்சல் குதிரைகள் திரியோமவ் நோக்கி வண்டியை இழுத் துச் சென்றன: அந்தக் குறுகிய, சேறுபடிந்த சாலையைக் காவல் புரிகின்ற அசையாத காவல்காரர்களைப் போல வரிசையாக நீண்டு கிடந்த குட்டைப் புதர்க் காடுகளின் வழியாகச் சென்றன. சாம்பல் நிறமான பிசைந்த மாவைப் போல இலையுதிர் காலத்து மேகங்கள் வானத்தை அப்பிக் கொண்டிருந்தன. அதே போன்ற சாம்பல் நிறமான சலிப்பு அர்தமோனவின் களைத்துப் போயிருந்த மூளையை நிரம்பி நின்றது. தனக்கு மிகவும் நெருக்கமான, ஒருவகையில் சலித் துப் போன ஒருவனை அடக்கம் செய்து விட்டுத் திரும்புவது

போன்ற உணர்வினை அவன் பெற்றிருந்தான். அது இறந்து போனவனுக்கான பரிவு உணர்வே; ஆனால், எனினும், அவன் தன்னிடம் திரும்பவும் ஒருபோதும் வரப் போவதில்லை என்பதையும், தனது கோரிக்கைகளின் வெறுமையினால் ஒருவனுடைய அமைதியைக் குலைக்க இனிமேல் முடியாது என்பதையும், உண்மையாகவே உயிர்வாழ்ந்து கொண்டிருக்கின்ற ஒரு மனிதனின் வாழ்க்கையை நச்சுப்படுத்த வர முடியாது என்பதையும் அறிய மகிழ்ச்சியாக இருந்தது.

''என்னுடைய வேலை தொழில், அவ்வளவு தான்,'' என்று அவன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். ''அவர்களுடைய வேலைதான் ஒவ்வொருவரையும் இயங்க வைக்கிறது, ஆமாம்.''

அவனால் முடிந்த அளவு சக்தியோடு தனது வேலையை அவன் தொடங்கினான். நாட்கள் அமைதியாகக் கழிந்தன. இந்தியக் கோடைக் காலத்தின் தெளிவான நாட்கள், நிலவு கால இரவுகளின் துயரம் நிறைந்த மாயக் கவர்ச்சிக்குள்ளாக மறைந்து போயின.

இலையுதிர் கால விடியலின் முத்துப் போன்ற பனிமூட்டம் காணப்படுகையில் விழித்தெழும்அர் தமோனவ் வேலைக்கு அழைக்கின்ற ஆலைச் சங்கொலியைக் கேட்பான். அரை மணி நேரத்திற்குப் பிறகு இடையறாத முணுமுணுப்பும், இரைச்சலும், பழகி மரமரத்துப் போன, ஆனால் சக்தி மிக்க தொழிற்சாலை ஒலி ஆரம்பமாகும். காலையிலிருந்து மாலையின் பின் நேரம் வரை, கிட்டங்கிக் கதவுகளில் தங்களது நார்ச் சணலைக் கொண்டு வந்து சேர்க்கும் ஆண் பெண் விவசாயிகளுடைய சத்தம் கேட்கும். கணக்கு இல்லாமல் மரோஸவ்களைச் சேர்ந்த ஒருவனால் வதராக்ஷா நதிக் கரையில் அமைக்கப்பட்ட சாராயக் கடையிலிருந்து, அக்கார்டியன் இசைக்கேற்றவாறு குடிவெறியில் பாடிக் கொண்டிருப்பது கேட்கும். ஒரு பெருக்குமாறு, அல்லது ஒரு மண்வாரி அல்லது ஒரு கோடரியுடன் ஓர் எந்திரம் போன்று துல்லியமாகப் பணியாற்றியபடி, தனது கண்டிப்பான பார்வையை சக மனிதர்களிடம் திருப்பியபடி, வெளி முற்றத்தில் தீஹன் வியாலவ் எப்போதுமே காணப்பட்டான். அவசரமில்லாதபடி பெருக்கிக் கொண்டும், குழி பறித்துக் கொண்டும், மரங்களைத் துண்டு போட்டுக் கொண்டும், விவசாயிகளிடமும் தொழிலாளர்களிடமும் சத்தம் போட்டுக் கொண்டும் இருப்பான். எப்போதுமே நீல நிற உடை

யில், எப்போதுமே நேர்த்தியாகவும், தூய்மையாகவும் தோற்றமளிக்கும் ஸெரஃபீம் அடிக்கடி அவ்விடத்தைக் கடந்து செல்வான். நதால்யா வீட்டுக்குள்ளேயே இருந்தாள். அவளும் கூட தனது வேலையை ஓர் எந்திரம் போலச் செய்தாள். சந்தையிலிருந்து தன் கணவன் தனக்காகக் கொண்டு வந்த அரிய பரிசுகளால் அவள் பெரிதும் மகிழ்ந்து போனாள். அதை விட அவனது அமைதியிலும், மௌனத்திலும் இன்னும் மகிழ்ந்து போனாள். ஒவ்வொன்றும் தடங்கலின்றி நடந்தது; ஒவ்வொன்றும் சரியாகப் பொருந்தி நடப்பது போலக் காணப்பட்டது. ஆலை, ஆட்கள், குதிரைகளும் கூட—எல்லாமே பேரூழி காலத்திற்கும் அப்படியே செல்வது போல இருந்தது. காற்றடித்துச் செல்லும் மேகங்களைப் போல மாதங்கள் உருண்டன. ஆண்டுகளும் ஒன்றின் மீது ஒன்றாகக் குவிந்தன.

காளையைப் போலத் தலையைக் குனிந்தபடி கடைகள் வழியாகவும், முற்றத்தின் குறுக்காகவும், குடியிருப்பு வீதி வழியாகவோ அர்தமோனவ் நடந்து செல்லும் போது ஆலைக் குழந்தைகளுக்கு அச்சத்தை மூட்டின. ஒவ்வொரு இடத்திலும் ஒரு புதியதும், விநோதமானதுமான வளர்ச்சியை அவன் கண்டான். இந்தப் பெரிய வியாபாரத்தில், வெறுமனே பார்வையாளன் என்ற நிலைக்கு மேலாக, ஏறத்தாழ மீமிகையான வளர்ச்சியினைப் பெற்றிருந்தான். தொழிலை யாக்கவ் புரிந்து கொண்டான் என்பதையும், அதில் அவன் தீவிர ஆர்வம் காட்டிவருவது போலக் காணப்பட்டதையும் ஓரளவு மனநிறைவோடு அவன் கவனித்தான். மூத்த மகனைப் பற்றிய சிந்தனைகளினின்று தந்தையை திசை திருப்பவும், இன்னும், இல்யாவுக்கு எதிரான அவனது கோபத்தைத் தணிப்பதற்கும் யாக்கவினுடைய நடத்தை வழி வகுத்தது.

''நீ இல்லாமலே நான் சமாளிக்க முடியும், அறிவாளியே. நீ படிக்கலாம்.''

கொழுத்த உடம்பும், சிவந்த கன்னங்களும், சிரித்த போது சோப்பு நுரைகளைப் போல வானவில் வண்ணம் காட்டுகின்ற கண்களையும் கொண்ட யாக்கவ், தனது உருண்டு திரண்ட உடம்புடன் பெருமையோடு நடமாடினான். கையெட்டு தொலைவில் அண்மையில் வைத்துப் பார்த்த போது ஒரு மாடப் புறாவை விநோதமாக அவன் நினைவூட்டினாலும், தொலைவில் இருந்து பார்க்க விஷ

யங்களில் அறிவுள்ளவனாகவும் திறமையும் கொண்டவ னாகக் காணப்பட்டான். ஆலையின் இளம் பெண்கள் அவ னைக் கண்டு அன்புடன் முறுவலித்தார்கள்; அவர்களிடம் கிசுகிசுப்பதற்காக அவன் நின்ற போதோ, வீட்டுச் சேவ லைப் போல அவர்களைப் பக்கவாட்டில் உரசிக் கொண்டு நடந்து சென்ற போதோ, சுழித்த அவனது கண்களில் சிற் றின்ப நோக்குத் தோன்றும், கம்பீரமான தோற்றம் எதனா லும் அவனுடைய அளவு மீறிய ஆர்வத்தை மூடி மறைக்க முடியவில்லை. தந்தை தனது காதை இழுத்து விட்டபடி, கிளுகிளுத்துக் கொண்டு சிந்தித்தான்:

''நீ ஓர் இளம் முட்டாள்! பாவுலாவைப் பற்றி நீ என்ன கூறுவாய்?''

அலெக்ஸியைப் பார்க்கச் செல்கின்ற போது, மிரோனுக் கும், அவனது நெருங்கிய நண்பனான, அருவருப்பாகத் தோற்றமளிக்கும், படபடத்தபடி இருக்கும் கொரித்ஸ்வேத வுக்கும் இடையே நடைபெறும் இடையறாத விவாதங்களில் யாக்கவ் ஒருபோதும் பங்கு கொண்டதில்லை என்பதைக் காண அவன் விரும்பினான். மிரோனின் வெளித்தோற்றத் தில் வியாபாரக் குடும்பத்தைச் சேர்ந்தவன் என்ற அடை யாளம் எதுவுமில்லை. மெலிந்தும், பெரிய மூக்கும், கண் ணாடி அணிந்த கண்களுடனும் தோன்றிய அவன், தோள் பட்டைகளில் ஒருவிதமான விருதுச் சின்னம் பொறிக்கப் பட்ட, முலாம்பூசிய பொத்தான் வைத்துத் தைக்கப்பட்ட சட்டை யணிந்திருந்தான், ஒரு நீதிபதி போன்ற தோற் றத்தை ஏற்படுத்தி இருந்தது. ஒரு போர் வீரனைப் போலத் தன்னை நிமிர்த்திக் கொண்டு நடந்த அவன் அதிகார தோர ணையில் பேசினான். தன் தம்பி மகனுடைய பேச்சு எப் போதுமே புத்திசாலித்தனமாக இருக்கும் என்பதை பியோத் தர் புரிந்து கொண்டான், ஆனால் அவன் மிரோனை விரும்ப வில்லை.

''நான் உனக்குச் சொல்கிறேன், தம்பி, அது தான் சஞ் சலபுத்தி தத்துவம் என்பது,'' என்று மிரோன், முழங்கைகள் முக்கோணம் போல துருத்திக் கொண்டிருக்க, தனது கை களைச் சட்டைப் பைகளுக்குள்ளாகத் திணித்துக் கொண்டு, ஓர் அறிவுரையாளரைப் போன்ற தொனியில் பேசினான். ''எப்படி என்று அறியாதபடி, சஞ்சல புத்தியிலிருந்து வரு கின்ற ஒருவகையான சிந்தனை அது.''

கொரித்ஸ்வேதவ் முட்டாள்தனமின்றி நன்றாகப் பேசு

வதாகவே அர்தமோனவுக்குத் தென்பட்டது. கொரித்ஸ் வேதவ் ஒருவகையில் சின்னவன்தான். அவனது மாணவப் பருவக் கோட்டும் அதற்குக் கீழாக இருந்த கருப்புச் சட்டையும், எப்போதுமே பொத்தான் மாட்டப்படாமல் தொளதொளவெனத் தொங்கின, அவனது தலைமுடி கலைந்தே இருக்கும், பல நாட்களுக்குத் தூங்காதவனைப் போலக் கண்கள் அதைத்துக் காணப்படும், அவனது கூரிய, கருப்பு நிறமான முகத்தில் பருக்களால் புள்ளி விழுந்திருக் கும். எந்தக் குறுக்கீட்டையும் பொருட்படுத்தாமல் அங்கங் களை வேகமாக அசைத்தபடி, மிரோனைத் தாக்கி கத்திப் பேசுவான்:

''உமது குறிக்கோளை நீர் அடையலாம்: உமது ஆலைச் சங்கின் அழைப்பிற்கு வானத்திலே சூரியன் உதயமாகும்; உமது எந்திரங்களின் அழைப்புக்குச் சதுப்பு நிலங்களினின் றும், காடுகளினின்றும் புகைபடிந்த நாளானது ஊர்ந்து வெளி வரும். ஆனால் மனித இனத்திற்கு நீர் என்ன செய் வீர்?''

மிரோன் தனது புருவங்களை உயர்த்துவான், பின்னர் முகஞ்சுளித்தபடி அவற்றை ஒன்று சேர்ப்பான். தனது கண் ணாடியை சரி செய்து கொண்டு, இருபதாவது முறையாக நிதானமாகவும், அமைதியாகவும் திரும்பத் திரும்பக் கூறு வான்:

''அது தான் சஞ்சலபுத்தி தத்துவம், அது கவிதைகள்! என் நண்பரே, இது வெறுமையான கற்பனைகளில் நாக்கு ஊறியவை. வாழ்க்கை என்பது போராட்டம். உணர்ச்சிக் கவிதையும், வலிப்பு நோயும்—அவற்றிற்கு இடமேயில்லை, பிறகு கேலிக்கூத்து...''

பொதுப்படையான பேச்சிலே இந்த வார்த்தைகளை, பழுப்பு நிறத்தினிடையே நிற்கும் வெண் புறாக்களைப் போல அர்தமோனவ் சிந்தித்தான்:

''இங்ஙனமாகத் தான் வாழ்க்கை செல்கிறது: புதிய பறவைகள், புதிய பாடல்கள்.''

அவர்களது விவாதத்தின் சாரத்தை தெளிவின்றித்தான் அவனால் புரிந்து கொள்ள முடிந்தது. யாக்கவை மேலோட் டமாகப் பார்க்கையில் தன் மகன் கேலிப் புன்முறுவலை மறைப்பதற்காகப் பெரிதும் முயன்று கொண்டிருக்கிறான் என்பதை இன்பத்தோடு கவனித்தான்.

''ஆக, இல்யா என்ன சொல்லியிருக்கக் கூடும்?'' என்று பியோத்தர் சிந்தித்தான்.

கொரித்ஸ்வேதவ் உரக்கக் கத்தினான்:

''பூமியையும் அதன் மக்களையும் இரும்பு விலங்குகளால் நீர் மாட்டும் போது, ஒரு மனிதனை எந்திரத்திற்கு நீர் அடிமைப்படுத்தும் போது...''

ஆனால் தனது பெரிய மூக்கை ஓர் ஆட்டு ஆட்டியபடி, மிரோன் அவனிடம் குறுக்கிட்டான்:

''நீ இந்தளவுக்குக் கவலைப்படுகின்ற மனிதன் எதற்கும் இலாயக்கற்ற ஒரு சோம்பேறி. தன்னுடைய கடைத்தேற்றமானது தொழில் வளர்ச்சியில் தான் இருக்கிறது என்பதை உடனடியாக, அவன் புரிந்து கொள்ளாத வரை அவன் நம்பிக்கைக்கு அப்பாற்பட்டே போய் விடுகிறான்...''

''எது சரியானது? எது சிறந்தது?'' என்று பியோத்தர் அர்தமோனவ் உணர்ந்தான்.

தன் தம்பி மகனைக் காட்டிலும் கொரித்ஸ்வேதவைக் குறைவாகத்தான் விரும்பினான். அவனைப் பற்றி ஓரளவுக்குச் செறிவின்மையும், நம்பிக்கையின்மையும் இருந்தது; எதற்காகவோ அவன் தெளிவாக பயந்து போயிருந்தான், அதன் காரணமாகத்தான் கத்தியிருக்கிறான். குடிவெறியில் உள்ள மனிதனைப் போல சம்பிரதாயமற்று, விருந்தினர்களுக்கு முன்னால் மேசை முன் அமர்ந்து, கரண்டிகளையும் கத்திகளையும் எடுத்துக் கொண்டு பரபரப்படைவான், தனது உதடுகளைச் சுட்டுக் கொள்ளுமாறும், மென்று விழுங்காததினால் மூச்சுத் திணறுவது போலும், நாகரிகமற்று தனது உணவை உண்பான். அலெக்ஸியைப் போலவே இவனிடமும் உடம்பை உலுக்கிக் கொள்ளும் பழக்கம் இருந்தது; முற்றிலும் தேவையற்றதாகவும், தீங்கு விளைவிப்பதாகவும் பியோத்தருக்குத் தென்பட்டது. குருதி கொப்பளிக்கும் அவனது கண்ணின் மணிகள் குருட்டு விழிகளைப் போல வெறுத்துப் பார்த்தன. பியோத்தர் அர்தமோனவிடம் அவன் ஒரு வார்த்தை கூடப் பேசியதில்லை, வணக்கம் தெரிவிக்கும் போது கூட தனது முரட்டுக் கையை முன்னுக்கு நீட்டி அதை உடனடியாக வெட்டி இழுத்துக் கொள்வான். மொத்தத்தில், அவன் ஒரு பயனற்ற மாதிரி, அவனிடத்தில் மிரோனால் எதைக் காண முடிகிறது என்பதைப் புரிந்து கொள்வதே கஷ்டமானதாக இருந்தது.

''பேச்சை நிறுத்து சாப்பிடு, ஸ்தியோபா,'' என்று

ஓல்கா அவனுக்கு ஆலோசனை கூறுவாள், அவனோ மிக வும் எடுப்பான முறையில் திரும்பக் கூறுவான்:

''அழிவைத் தரும் முரண் சமயக் கருத்து போதிக்கப் படும் போது, என்னால் முடியாது!''

இரண்டு மாணவர்களுக்கு இடையில் விவாதம் நடக்கை யில் அதை அமைதியாகக் கவனித்தபடி அலெக்ஸி இருப் பதையும், தன் மகனுக்கு ஆதரவாக ஓரிரு வார்த்தைகளே பேசுவதையும் பியோத்தர் சற்று வியப்பாகவே கவனித் தான்:

''அது சரிதான்! எங்கே பலமிருக்கிறதோ அங்கே தான் வலிமை இருக்கிறது, மேலும் வலிமை தொழிலதிபர்க ளிடம் தான், ஆகவே...''

சிற்றுண்டிக்கும் தேநீருக்கும் பிறகு ஓல்கா தனது பூவே லைத் தையல் சட்டத்துடன் சன்னலருகே அமர்ந்து, குறிப் பிடத்தக்கவாறு பிரகாசமான வண்ணங்களில் உள்ள தனது குமிழ் மணிகளை இடைவைத்து பூந்தையலை அமைதியா கச் செய்து கொண்டிருப்பாள். அவளது நெற்றியில் சுரிப்பு கள் தோன்றியிருந்தன, அவளது கண்களின் ஓரங்களினின் றும் இப்போது மடிப்புகள் ஏற்பட்டிருந்தன; விளிம்பில் லாத அந்தக் கண்ணாடியின் கணத்தால் அவளது மூக்கு முனை கூடச் சிவந்து போயிருந்தது. தன் வீட்டில் இருப் பதைக் காட்டிலும் அலெக்ஸி வீட்டில் இருக்கும் போது பியோத்தர் மகிழ்ச்சியடைந்தான். அங்கே நேரம் ஆர்வமூட் டும் முறையில் கழிந்தது, மேலும் அங்கே எப்பொழுதுமே நல்ல ஒயின் ஒரு குவளை பெற முடிந்தது.

யாக்கவுடன் வீடு திரும்பிய தந்தை அவனிடம் கேட் பதுண்டு:

''அவர்கள் என்ன விவாதித்துக் கொண்டிருந்தார்கள் என்பதை நீ புரிந்து கொண்டாயா?''

''ஆம்,'' என்று பையன் சுருக்கமாக பதிலளிப்பான்.

தான் அதைப் புரிந்து கொள்ளத் தவறி விட்டதைத் தன் மகன் தெரிந்து கொள்ளக் கூடாது என்பதற்காக அர்தமோனவ் அவனிடம் கேட்பான்:

''சரி, பிறகு என்ன?''

யாக்கவினுடைய பதில்கள் எப்போதுமே சுருக்கமாக வும், விருப்பமற்றும் இருக்கும், ஆனால் புரிந்து கொள்ளக் கூடியதாக இருந்தன. அவன் கூறியபடி, ஐரோப்பா முழு மையும் வாழ்வதைப் போல ருஷ்யாவும் வாழ வேண்டும்

பன்பது மிரோனின் கருத்து என்பதும், அதே வேளை மொரித்ஸ்வேதவ் கருதியபடி ருஷ்யா தனக்கென்று சொந்த வழியைப் பின்பற்றிச் செல்ல வேண்டும் என்பதுமாகும். இத்தருணத்தில், இது விஷயத்தில் தனக்கும் சொந்தக் கருத்து உண்டு என்பதைத் தன் மகனிடம் காட்ட வேண்டும் என்பதற்காக, அர்தமோனவ் அழுத்தமாகக் கூறினான்:

''நம்மைக் காட்டிலும் அந்நிய நாட்டவர்கள் வசதியோடு இருந்தால், நம்மை இங்கே நெருக்கித் தள்ளிக் கொண்டிருக்க மாட்டார்கள்...''

ஆனால் இந்தக் கருத்துக் கூட அலெக்ஸியிடமிருந்து இரவல் வாங்கப்பட்டதுதான், தனது சொந்தக் கருத்தாக அவனுக்கு எதுவுமே தோன்றவில்லை. அர்தமோனவ் எரிச்சலோடு முகஞ்சுழித்துக் கொண்டான். ஒருவகையில், இந்த எரிச்சலானது, அவன் மகன் பேசியபோது இன்னும் அதிகரித்தது.

''நம்மை நாமே எவ்வளவு சுறுசுறுப்பானவர்கள் என்று தம்பட்டம் அடிக்காமலும், அது போன்ற பேச்சே இல்லாமலும் நம்மால் வாழ முடியும்...''

மூத்த அர்தமோனவ் முணுமுணுத்தான்:

''நம்மால் முடியுமென்றே நானும் நினைக்கிறேன்...''

முன்னிலும் அடிக்கடி, இது போன்ற சிறு வேதனைகளையும், திகைப்புகளையும் அவன் அநுபவித்தான். ஒரு சாதாரணப் பார்வையாளனாக, ஒவ்வொன்றையும் தூர நின்று கவனிப்பதற்கே அருகதையுடையவன் என்பது போலத் தன்னை அவை இடித்துத் தள்ளுவது போல அவனுக்குத் தோன்றியது. அவனைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றிலும் கண்ணுக்குப் புலனாகாதவாறு, ஆனால் விரைவான மாற்றம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது; எல்லா இடத்திலும், வார்த்தைகளிலும் செயல்களிலும், புதியதும் அமைதியற்றதுமான ஏதோ ஒன்று, தானே புகுந்து நிலை பெற்றுக் கொள்வது போல இருந்தது. ஒரு நாள், தேநீர் வேளையில் ஓல்கா கூறிப்பிட்டாள்:

''ஒரு மனிதனின் ஆன்மா நிறைவாக இருக்கின்ற போதும், அம் மனிதன் அதற்கு மேல் விரும்பவில்லை என்னும் போதும் உண்மை தோன்றுகிறது.''

''அது அப்படித்தான்,'' பியோத்தர் ஒப்புக் கொண்டான்.

ஆனால் தனது தாய்க்குக் கற்பிக்க முயன்ற போது மிரோனுடைய கண்ணாடிகள் பளிச்சிட்டன:

''உண்மை அதுவல்ல, அது மரணந்தான். உண்மை என்பது காரியங்களைச் செய்வதிலும், செய்ய படுவதிலுமே இருக்கிறது.''

ஒரு கனத்த காகிதத்தைச் சுருட்டி தனது கக்கத்துக்குள்ளே வைத்துக் கொண்டு அவன் போன பிறகு, ஓல்காவிடம் பியோத்தர் சுட்டிக்காட்டினான்:

''உன் மகன் உன்னிடத்தில் முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறான்.''

''இல்லவே இல்லை.''

''நான் தான் அவனைப் பார்க்கிறேனே!''

''அவன் என்னை விடப் புத்திசாலி,'' என்றாள் ஓல்கா. ''நான் படிக்காதவள், அடிக்கடி முட்டாள்தனமான விஷயங்களைச் சொல்லி விடுகிறேன். மொத்தத்தில், நமது குழந்தைகள் நம்மைக் காட்டிலும் புத்திசாலியாக இருக்கிறார்கள்.''

இதை அர்தமோனவால் நம்பவே முடியவில்லை. ஒரு குறுஞ் சிரிப்புடன், அவன் பதிலளித்தான்:

''அது உண்மைதான்—முட்டாள்தனமான விஷயங்களை நீ கூறுகிறாய். நல்லது, நம் மூத்தவர்கள் நம்மைக் காட்டிலும் நன்றாக அறிவார்கள். அவர்கள் இப்படிச் சொல்வதுண்டு: 'மகன்கள் கவலையைக் கொண்டு வருவார்கள், மகள்கள் கவலையை இரட்டிப்பாக்குவார்கள்,' பார்த்தாயா?''

தங்களது பெற்றோர்களைக் காட்டிலும் பிள்ளைகள் புத்திசாலிகளாக இருக்கிறார்கள் என்ற அவளது குறிப்பு அவனுக்கு மிகுந்த மனச்சங்கடத்தை ஏற்படுத்தி இருந்தது. உண்மையில், அவள் இல்யாவைத் தான் குறிப்பாகச் சொன்னாள். அலெக்ஸி இல்யாவுக்குப் பணம் அனுப்புவதையும், அவனோடு மிரோன் கடிதத்தொடர்பு வைத்திருக்கிறான் என்பதையும் பியோத்தர் அறிவான்; ஆனால் அவனது செருக்கு இல்யா எங்கே இருக்கிறான் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பதை விசாரிக்க விடாது தடுத்தது. உண்மை, அவனுடைய செருக்கைப் புரிந்து கொண்ட ஓல்கா, அவன் கேட்காமலேயே இந்தத் தகவல்களை மிகத் திறமையாக அவனுக்குத் தெரிவித்துக் கொண்டிருந்தாள். எதோ காரணமாக இல்யா அர்கான்கேல்ஸ்க் நகரத்தில் வாழ்வதற்காகச்

சென்று விட்டிருந்ததையும், பிறகு வெளிநாட்டுக்குச் செல்ல விருப்பதையும் அவளிடமிருந்து அவன் அறிந்து கொண்டான்.

''நல்லது, அவனுக்கு எங்கே பிடிக்கிறதோ அங்கேயே அவன் வசிக்கட்டும். அவனுக்குப் புத்தி வரும்போது, தான் முட்டாளாக இருந்ததை அவன் உணர்ந்து கொள்வான்.''

சில நேரங்களில், இல்யாவைப் பற்றிச் சிந்தித்தபடி, தன் மகனுடைய பிடிவாத குணத்தை நினைத்து வியப்படை வான். ஒவ்வொருவரும் அத்தனை புத்திசாலியாக வளர்ந்து கொண்டு வந்தார்கள். ஏன், பிறகு, இல்யா சுணங்கி விட் டான்?

அலெக்ஸியின் வீட்டில் இருக்கும் போது, வேரா பபோ வாவையும் அவள் மகளையும் பியோத்தர் அடிக்கடி சந்தித் தான். எப்போதும் போல பபோவா அழகாகவும், துய ரம் தோய்ந்த வீறமைதியோடும், அத்துடன் அந்நியமான உறவுடனும் காணப்பட்டாள். அவள் அரிதாகத்தான் அவ னிடம் பேசினாள், அநியாயமான முறையிலே தன் மக னைத் தண்டித்து விட்டோம் என்று அவன் உணர்ந்த போது இல்யாவுடன் அவனாகவே எத்தகைய குரலில் பேசினானோ அதே தொனியில்தான் இவனோடும் பேசினாள். அவனுக்கு வசதியில்லாதபடி அவள் செய்தாள். அமைதியான சிந்தனை உள்ள கணங்களில், அவளது தோற்றம் அவனுடைய நினை வில் தோன்றும்; ஆனால் அது வியப்பைத் தவிர வேறு எந்த உணர்ச்சியையும் தூண்டவில்லை. இதோ, சில நேரங்களில் யாரோ நம்மைக் கவர்ந்தான், நமது சிந்தனைகளில் நிறைந்து நின்றான்; எனினும் அவனைப் பற்றிச் சிந்திக்கும் படி எது செய்ததோ, அதைப் புரிந்து கொள்ள முடியவில் லை, அவன் செவிடாகவும், ஊமையாகவும் இருப்பது போல இருந்தால், அவனிடம் பேசுவது அத்தனை சிரமமானதாக இருக்க முடியாது.

ஆமாம், ஒவ்வொன்றுமே மாறிக் கொண்டிருந்தன. ஆலைத் தொழிலாளர்கள் முன்னிலும் சலன புத்தியுள்ள வர்களாய், பொல்லாதவர்களாய், காச நோய்க்கு ஆட்பட் டவர்களாய் மாறிக் கொண்டிருந்தார்கள், பெண்களும் எப் போதும் போல மேன்மேலும் உரக்கப் பேசுகிறவர்களா கவே இருந்தார்கள். குடியிருப்பினின்றும் எழும் இரைச் சலானது மேன்மேலும் அதிகரித்தது; மாலை வேளைகளில் அங்கே மக்கள் எல்லாருமே ஓநாய்களைப் போல ஊளை

யிடத் தொடங்கி விட்டது போலவும், கூளம் நிறைந்த தெருவின் மணல் கூட கோபத்தில் முணுமுணுப்பது போல வும் இருந்தது.

ஒரு புதிய அமைதியின்மையும், சுற்றித்திரிய வேண்டும் என்ற வேட்கையும் தொழிலாளரிடையே ஏற்பட்டிருந்து. யாரைப் பற்றியும் எதைப் பற்றியும் புகார் செய்வதற் கான எந்தக் காரணமும் இன்றி வாலிபத் தொழிலாளர்கள் திடீரென்று அலுவலகத்திற்குள்ளாக அணிவகுத்து வந்து தங்களுடைய பாக்கியைத் தந்து விடுவிக்குமாறு கோரினார் கள்.

''எங்கே போகப் போகிறீர்கள்?'' என்று பியோத்தர் கேட்பான்.

''மற்ற பகுதிகளில் என்ன இருக்கிறது என்று பார்ப் பதற்குத் தான்.''

''அவர்களை எது அரித்துக் கொண்டிருக்கிறது?'' என்று தன் தம்பியிடம் அர்தமோனவ் கேட்டான். அலெக்ஸி தோளை மட்டுமே குலுக்கி விட்டுக் கொண்டு, நரித்தன மாக நகைத்தபடி, ஒவ்வொரு இடத்திலும் தொழிலாளரி டையே இது போன்ற அமைதியின்மை நிலவுவதாகத் தெரி வித்தான்.

''ஒப்பிட்டுப் பார்க்கையில் நம்முடையது அருமையான தாகவும், அமைதியானதாகவும் இருக்கிறது. பீட்டர்ஸ் பர்க்கை எடுத்துக் கொண்டால்... நமக்குத் தேவைப்படு வது மாறுபட்ட அலுவலர்களும், மாறுபட்ட அமைச்சர் களும்...''

மேலும் அவன் சொல்லிச் சென்றவைகள் மிகவும் செருக்கு மிகுந்ததாகவும், மிகவும் கேலிக்குரியதாகவும் இருக்கவே, அவனுக்கு மூத்தவன் கடுப்போடு புத்தி சொன் னான்:

''அவை எல்லாம் குப்பை! ஜாரிடமிருந்து அதிகாரத்தை எடுத்துக் கொள்வதன் மூலம் பயனடையப் போவது மேற் குடியினர் தான், ஏனெனில் அவர்கள்தான் தங்களது செல் வத்தை இழந்து வருகிறார்கள். அதே வேளை இந்த அதி காரம் இல்லாமலேயே நாமோ பணம் பெறுகிறோம். அப்பா விடுமுறைகளில் தார்பூசிய காலணிகளை அணிந்தார், நீயோ இறக்குமதி செய்யப்பட்ட காலணிகளையும், பட்டு கழுத்துப்பட்டைகளையும் அணிகிறாய். நல்ல வேலையாட் கள்—ஜாருக்கு நாம் அப்படித்தான் இருக்க வேண்டும், பன்

றிகளாக அல்ல. நமது தங்கக் கருவாலிக் கொட்டைகளைக் கொட்டுகின்ற ஓக் மரம் ஜார்.''

இதைக் கேட்டபோது அலெக்ஸி கொக்கரித்தது பியோத்தரின் எரிச்சலை இன்னும் அதிகரிக்கச் செய்தது. பொதுவாகவே, மக்கள் எல்லாம் மிகவும் நகைப்புக்கிடமானவர்களாக மாறிக் கொண்டு வருகிறார்கள் என்று மூத்த அர்தமோனவ் எண்ணினான். ஒருவகையில் இந்தக் கொக்கரிக்கும் புதிய பழக்கத்தை அவர்கள் கொண்டிருக்கிறார்கள், அற்பத்தனமானது. அத்தனை வேடிக்கையாகவும், அத்தனை மகிழ்வூட்டுவதாகவும் நிலைபேறுடைய கிழவன், தச்சன் ஸெரஃபீம் சிரிக்கச் செய்வது போல அவர்களில் எவராலும் முடியாது.

இந்த ஆறுதல் தருபவனோடு அர்தமோனவ் மிகப்பெரும் நண்பனாகி விட்டிருந்தான். சலிப்புணர்ச்சியின் வலிப்பு திரும்பவும் அவனிடம் அவ்வப்பொழுது ஏற்பட்டு, குடிக்க வேண்டும் என்ற அடங்காத தாகத்தை ஏற்படுத்தின. அலெக்ஸியினுடைய வீட்டில் அதிகம் குடிப்பதற்கு அவன் வெட்கப்பட்டான், ஏனெனில் அங்கே எப்போதுமே அந்நியர்கள் இருந்தார்கள், எல்லாவற்றுக்கும் மேலாக தான் குடிப்பதை பபோவா காணக் கூடாது என்று அவன் நினைத்தான். வீட்டில், இத்தகைய வலிப்புத் தோன்றும் போது, நதால்யாவின் தோள்கள் களைத்துத் தொங்கிப் போய் விடும், புண்பட்ட அமைதியோடு அவள் மௌனமாகிப் போவாள். அவள் தன்னை நோக்கிக் கத்த வேண்டும் என்று தான் அவன் விரும்பியிருக்க வேண்டும், ஏனெனில் திருப்பி அவளைப் பார்த்துக் கத்தியிருக்க முடியும். மாறாக, கொள்ளையடிக்கப்பட்ட ஆளைப் போல அவள் நடந்து கொண்டாள், இது கோபத்தை ஏற்படுத்தாது ஒருவித பரிவுணர்வைத் தான் ஏற்படுத்தியது. அர்தமோனவ் வீட்டை விட்டுக் கிளம்பி ஸெரஃபீமை நோக்கிச் செல்வான்.

''நான் குடிக்க விரும்புகிறேன், கிழவா!''

மகிழ்ச்சிமிக்க தச்சன் பல் இளித்தபடி அதை ஏற்றுக் கொள்வான்:

''இது இயற்கையானதுதான்—கோடைக் காலத்துச் சூரியவெப்பம் போல! நீ களைத்தும் சோர்வுற்றும் போயிருக்கிறாய். நல்லது, கொஞ்சம் சாராயம் எடுத்துக் கொள்! உன்னுடைய தொழில் சின்ன வேலையில்லை. கன்னத்திலுள்ள கரணையல்ல!'' என்பான்.

21*

தனது எசமானனுக்காக அவன் மிகவும் அசாதாரண மான மதுவகைகளை வைத்திருந்தான். பல வண்ணப் போத் தல்களை அவற்றின் மறைவிடங்களினின்றும் இழுத்தபடி, அவன் பெருமையோடு கூறுவான்:

''எனது சொந்தக் கண்டுபிடிப்பு, ஒரு பாதிரியின் மனை வியாக இருந்து இப்போது ஒரு கொதித்துப்போன விதவை இந்தச் சரக்கை எனக்காகத் தயாரித்தாள். இதோ, குடி இதை. வசந்த காலத்து செடிப்பால் நிறைந்த பிர்ச் மொட்டுகளால் வாசனையூட்டப்பட்டது. நன்றாக இருக் கிறதா?''

தனக்காகவும் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு சளசளப்பான், தனக்குப் பிடித்த 'டர்னிப் ஒயினை'யும் உறிஞ்சிக் கொள்வான்.

''ஆமாம், அவள் ஒரு பாதிரியின் மனைவியாக இருந் தவள். மிகவும் அதிர்ஷ்டமற்ற பெண். அவள் காதலனாக ஏற்றுக் கொள்ளும் ஒவ்வொருவரும் திருடனாக மாறுகிறார் கள். மேலும் காதலர்கள் இல்லாமலும் அவளால் வாழ முடியாது, அவள் ரத்தம் அந்தளவுக்குச் சூடானது...''

''இல்லை, சந்தையில் நான் ஒருத்தியைப் பார்த்தேன்,'' என்று நினைத்துப் பார்த்தான் அர்தமோனவ்.

''உண்மைதான்!'' ஸெரஃபீம், ஒத்துக் கொள்வது போல அவனோடு சேர்ந்து கொண்டான். ''நாடு முழுக்கவும் அப் படிப்பட்ட ஆட்களைத் தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறார் கள். எனக்குத் தெரியாதா என்ன!''

ஒவ்வொன்றைப் பற்றியும் ஒவ்வொருவரைப் பற்றியும் ஸெரஃபீம் அறிந்திருந்தான். ஆலை ஊழியர்களுடைய, தொழிலாளிகளுடைய தனிப்பட்ட வாழ்க்கைகளைப் பற்றி, ஆர்வமூட்டக் கூடிய வகையிலே அவன் பேசினான், எல்லா ருக்கும் ஒரே மாதிரியான பரிவுக்குரலையே பயன்படுத்தி னான். தன் சொந்த மகளைப் பற்றிக் கூட, அந்நியளைப் போல அதே முறையில் பேசினான்.

''அவளும் குடும்பம் நடத்துகிறாள். ஃபிட்டர் வேலை பார்க்கும் செதோவுடன் வசிக்கிறாள். பார்க்கிறாயா, அவர் கள் அருமையாக வாழ்கிறார்கள்! ஆமாம், ஒவ்வொரு உயி ரும் தனக்குள்ள இடத்தைத் தேடிக் கண்டு கொள்ளத்தான் செய்கிறது.''

தார் நெடி மணக்கும் பைன் மரச் சீவல்களால் நிறைந்து, சுவரில் இருந்த தகர விளக்கின் சுடரொளியானது வெது

வெதுப்பான அரையிருட்டை விலக்கி விடாதபடி இருந்த ஸெரஃபீம் உடைய சின்னஞ்சிறு அறையில் இருப்பது மகிழ்ச்சியாக இருந்தது.

சில முறை குடித்த பிறகு ஆட்களைப் பற்றியும், மனித இனத்தைப் பற்றியும் அர்தமோனவ் புகார் சொல்லத் தொடங்குவான்; தச்சன் ஆறுதல் கூறுவான்:

''கவலைப்பட வேண்டாம். இது எல்லாமே நன்மைக்குத் தான்! மனித இனம் முன்னேறிக் கொண்டிருந்தது—அது தான் விஷயம்! சுற்றிச் சுற்றிப் படுத்துக் கிடந்தான், சிந்தித்துக் கொண்டிருந்தான், இப்போது எழுந்தான் மனிதன்! ஏன் கூடாது? மனத்தை விட்டு விடாதே. மனிதனிடத்தில் நம்பிக்கை வை. உன்னையே நீ நம்பவில்லையா?''

பியோத்தர் அர்தமோனவ் இந்த வினாவை அமைதியாகப் பரிசீலனை செய்தான். அவன் தன்னைத்தானே நம்பினானா, இல்லையா? ஸெரஃபீமோ கலகலத்தான், தங்கு தடையற்ற சொற்கள், அவன் உதடுகளினின்றும் கலகலத்து வந்தன, ஆறுதல் ஒலி போல் இருந்தன.

''யார் கெட்டவன், யார் நல்லவன் என்பது பற்றி உன் தலையைப் போட்டுக் குழப்பிக் கொள்ள வேண்டாம். அது நீடித்து நிற்காது. நேற்று நல்லதாக இருந்தது, இன்றோ கெட்டதாகிவிடுகிறது. இவை எல்லாவற்றிலுமே நல்லதிலும் கெட்டதிலும் என ருசியை நான் பார்த்து விட்டேன், பியோத்தர் இல்யீச், ஹூம், நான் நிறைய விஷயங்களைப் பார்த்தேன்! சில நேரங்களில் பார்க்கிறேன்: இதோ, இது நல்லது! மேலும் அது மறைந்து போகும். இதோ, நான் இங்கே யிருக்கிறேன், அதுவும் மறைந்து போய் விடும். காற்றிலகப்பட்ட தூசி போல. மேலும் அங்கேயே நான் இருந்து விடுவேன்! நல்லது, நான் யார்? ஒரு ஈ கூட்டத்திலே பார்க்க முடியாத அளவுக்கு மிகவும் சின்னவன். ஆனால் நீ...''

தனது சுட்டு விரலை குறிப்பிடத்தக்கவாறு உயர்த்திய ஸெரஃபீம் மௌனமாகிப் போய்விடுவான்.

அவனுடைய பேச்சு அர்தமோனவுக்கு இரட்டை மகிழ்ச்சியைக் கொடுத்தது. ஒரு புறத்தில் அது உண்மையிலேயே பொழுது போக்காக இருந்தது, ஆறுதல் தந்தது; மறுபுறம், அந்தக் கிழவன் பொய் பேசுவதாகவும், நடிக்கிறான் எனவும், உள்ளத்திலிருந்து பேசவில்லை என்றும், ஆறுதல் தருபவனுடைய தொழில் விதிகளின் படி செல்

கிறான் என்பதையும் அர்தமோனவ் தெளிவாக உணர்ந்து கொண்டான். ஸெரஃபீமின் விளையாட்டை புரிந்துகொண்டு, அவன் நினைத்துக் கொள்வான்:

''சுறுசுறுப்பானவன் கிழவன், இந்தக் கிழட்டுப் போக்கிரி! நிகீதாவால் கூட அந்த மாதிரி வேலை செய்ய முடியாது.''

தான் வாழ்க்கையில் கண்டிருந்த பல்வேறு விதமான ஆறுதல் தருபவர்களைப் பற்றிய ஒரு திறனாய்வை அவன் நினைவு திரும்பவும் கொண்டு வந்தது: சந்தையில் இருந்த வெட்கமில்லா பெண்கள், சர்க்கஸ் கோமாளிகள், கழைக் கூத்தாடிகள், மந்திரவாதிகள், விலங்குகளைப் பயிற்று விப்பவர்கள், பாடகர்கள், இசைக்கலைஞர்கள், மற்றும் 'மனித இனத்தின் நண்பனாகிய' கருநிற ஸ்தியோபா. இந்த எல்லா ஆட்களுடன் அலெக்ஸி கூட பொதுவான தன்மை பெற்றிருந்தான். ஆனால் இது மாதிரியான தன்மை தீஹன் வியாலவிடம் எதுவுமே காணப்படவில்லை. பாவுலா மெனோத்தியிடம் கூடத்தான்.

அரைகுறை வெறியில் ஸெரஃபீமிடம் கூறுவான்:

''நீ பொய் பேசுகிறாய், கிழட்டுப் பிசாசே!''

ஆனால் தச்சனோ, தனது எலும்பு முழங்கால்களின் மீது தனது கைகளைத் தட்டி ஒலியெழுப்பியபடி மிகுந்த கண்டிப்பாகத் திரும்பச் சொல்வான்:

''இல்லை, நான் பொய் பேசவில்லை! ஒரு நிமிடம் சற்று யோசித்துப் பார்: எனக்கு உண்மை தெரியவில்லை என்றால், எங்ஙனம் நான் பொய் பேச முடியும்? உன்னிடம் வெளிப்படையாகவே கூறுகிறேன்: எனக்கு உண்மை தெரியாது, ஆக என்னால் எப்படிப் பொய் பேச முடியும்?''

''பிறகு, பேசாதே.''

''நான் என்ன செவிடா?'' என்று ஸெரஃபீம் தனது சிவந்த சிறிய முகத்திலே பிரகாசமாக முறுவலித்தபடி அன்பாகக் கேட்பான். ''நான் ஒரு சின்னக் கிழவன்,'' என்று அவன் கூறுவான். ''எனக்கு இன்னும் கொஞ்சக் காலந்தான் மிச்சமிருக்கிறது, உண்மையில்லாமலேயே என்னால் சமாளிக்க முடியும். இளைஞர்கள் உண்மையைத் தேடி அலை வேண்டியவர்கள். அவர்களது கண்ணாடி இருப்பதே அதற்குத் தான். மிரோன் அலெக்ஸேயெவிச், அவரும் கண்ணாடியில்— எதற்காக எல்லாவற்றையும் உள்ளே புகுந்து பார்க்கிறார்,

...து எப்படி என்பதும் யார் எப்படிப்பட்டவர்கள் என்பதை... ...ம் அவர் அறிவார்.''

தச்சனுக்கு மிரோனைப் பிடிக்கவில்லை என்பதை அறிய... ...ந்த அர்தமோனவுக்கு மகிழ்ச்சியாக இருந்தது; ... ...பீம் தனது குஸ்லியை மீட்டிப் பாடத் தொடங்கிய... ...அவன் கர்ஜிப்பது போலச் சிரித்தான்.

தறிக்கடைப் பக்கம்
தாவுது மரங்கொத்தி
அறிவு கெட்ட சனங்கன்னு
அம்புட்டையும் பாக்குது
ஆலையிலே தான்மட்டும்
அறிவாளின்று எண்ணுது!

''சரிதான்!'' என்று மெச்சினான் அர்தமோனவ்.

இதற்குள்ளாகத் தானும் குடித்து விட்டு, கால அகலமாகத் தனது சுத்தமான சிறிய காலை தரையில் ...படி தச்சன் மறுபடியும் பாடினான்:

கழுகுமில்லே பருந்துமில்லே இங்கே
இழுத்துப் போட கூட்டைத்தானே அங்கே
சாமி தந்த வரந்தானே பாரு
அலெக்ஸி இல்யீச் கேளு!

இதுவும் கூட அர்தமோனவுக்குப் பிடிக்கும்; பிறகு ஸெரஃபீம், யாக்கவைப் பற்றி நாணமின்றி பாடினான்:

கண்டவளையும் கட்டி யாஷா அணைக்கிறாரு
அண்டையிலே இருக்கிறது தெரியலியே பாரு...

இப்படியே பொழுது சென்றது, சில நேரங்களில் விடி...ன்ற வரை கூட நீடித்தது. பின்னர் தீஹன் வியாலவ், ...னது எசமானன் ஏற்கெனவே தூங்கிப் போய் விட்டிருந்...தால் எழுப்புவதற்காகக் கதவைத் தட்டி, வித்தியாசமான முறையில் பேசுவான்:

''வீட்டிற்குப் போக நேரமாகிவிட்டது. சங்கு ஒலிக்கத் தொடங்கும், தொழிலாளர்கள் உங்களைக் கண்டு விடக் கூடும். இது சரியில்லை!''

அர்தமோனவ் உரக்கக் கத்துவான்:

''என்ன சரியில்லை? இங்கே நான் தான் எசமானன்!''

ஆனால் கீழ்ப்படிந்தபடி அவன் எழுந்து, தள்ளாடியபடியே நடந்து வீட்டில் படுக்கைக்குப் போய்ச் சேருவான். சில நேரங்களில் பகல் முழுக்கவே அவன் தூங்கிப்போவான்,

இரவு வந்ததும் மீண்டும் ஸெரஃபீம் இடத்திற்குப் போவான்.

மகிழ்ச்சிமிக்க அந்த தச்சன் வேலை செய்யும் போதே இறந்து விட்டான். டாக்டருடைய ஒற்றைக் கண் உதவியாளனுடைய நீரில் மூழ்கி இறந்து விட்ட மகனுக்காக சவப் பெட்டி தயாரித்துக் கொண்டிருந்த போதுதான், திடீரென்று தரையில் விழுந்து இறந்து விட்டான். கிழவனைக் கல்லறை வரை சென்று பார்க்க வேண்டும் என்று அர்தமோனவ் முடிவு செய்தான். ஆலைத் தொழிலாளர்களால் சர்ச் நிரம்பி வழிந்தது. சாதுவான கிலேப் பாதிரியார் திடீரென்று தனது பாதிரியார் பணியைக் கைவிட்டுவிட்டு நகரத்திலிருந்து காணாமற் போய்விட்டதை அடுத்து பதவிக்கு வந்த சிவப்புத் தலையரான அலெக்சாந்தர் பிரார்த்தனைகளை மிகுந்த முனைப்போடு நடத்தினார். ஆலையைச் சேர்ந்த பள்ளியில் ஆசிரியராக இருந்த கிரியேகவால் பயிற்சியளிக்கப்பட்டிருந்த இசைக் குழுவினர் அழகாகப் பாடினார்கள். அந்தக் கும்பலுக்கு மத்தியில் அநேக இளைஞர்களும் இருந்தார்கள்.

சவ அடக்கத்திற்காகக் கூடியிருந்த பெரும் எண்ணிக்கையின் காரணத்தை விளங்கிக் கொள்ள ''இன்று ஞாயிற்றுக் கிழமை,'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் அர்தமோனவ்.

அந்த சிறிய, எடையற்ற சவப்பெட்டியைத் தூக்க இளம் தறித்தொழிலாளர்கள் கூட முன் வந்தனர். மிகவும் கிளர்ச்சியற்றவர்களும், மரியாதைக்குரியவர்களுமாக இருந்த தொழிலாளர்கள் ஒதுங்கி நின்று கொண்டார்கள். சூழ்நிலைக்குப் பொருத்தமில்லாதபடி பளபளப்பான சட்டையணிந்து சவப்பெட்டியைத் தொடர்ந்து வந்த ஸினயீதாவின் முகத்தில் சோகம் தொனித்தது, ஆனால் கண்ணீர் எதுவும் வரவில்லை. அகன்ற தோள்களைக் கொண்ட, நன்கு உடையணிந்திருந்த ஃபிட்டர் செதோவ் அவளுக்குப் பக்கத்திலே நடந்து சென்றான். சாலையின் ஓரத்தில் இருந்த மணற் பாதையில் தீஹன் வியாலவ் சோர்வாக நடந்து வந்தான். சூரியன் பிரகாசமாக ஒளிவிட்டுக் கொண்டிருந்தது; இசைக்குழுவினர் உரக்கவும், சமரசமாகவும் பாடினார்கள்; மொத்தத்தில் இந்தச் சவ அடக்கத்தைப் பற்றிய சோகம் கொஞ்சமேனும் காணப்படாதிருந்தது விநோதமாகவே இருந்தது. தனது நெற்றியில் வழியும் வியர்வை

யைத் துடைத்தபடி "நல்ல மரண [illegible]," [illegible] அர்தமோனவ் கூறினான். தீஹன் சற்று [illegible], [illegible] பெரு விரல்களை வெறித்துப் பார்த்து விட்டு, [illegible] னைக்குப் பிறகு பதிலளித்தான்:

"அவன் எல்லாரையும் மகிழ்வித்தான். கைப் பிடி[illegible] திருகிய உடனேயே பாடும் கருவி போல, அவன் உங்[illegible] காகப் பாடுவான்..."

கற்பனைக் கைப்பிடியை காற்றிலே அவன் திருகிக் காட்டினான்.

"அந்த மாதிரியான பெட்டியுடன் அந்தக் கிழவன் சுற்றித் திரிந்தான், அவன் வாசிக்கும் போது அந்தச் சிறுமி பாடினாள்... ஆறுதல் தருபவன்."

அவன் தனது எசமானனை மரியாதையற்று கடுமையாக நோக்கினான். அது அர்தமோனவை கோபங்கொள்ளச் செய்தது. பார்த்தபடி அவன் தொடர்ந்தான்:

"அவன் மக்களை மயக்கினான். ஒருபோதும் யாருக்கும் அவன் தீங்கு செய்யவில்லை, ஆனால் சரியாக அவன் வாழவில்லை."

"கெட்டதாவது, நல்லதாவது!" என்று எசமானன் கேலி செய்தான். "துலூன் கம்பிலே கட்டப் பட்டிருந்தது போல, அந்தச் சிந்தனைகளோடு நீ கட்டுண்டு கிடக்கிறாய். அது பைத்தியம் பிடித்துப் போனது மாதிரி நீயும் போய்விடலாம், பார்த்துக் கொள்."

முற்றப் பாதுகாவலனிடமிருந்து திடீரென்று திரும்பி அர்தமோனவ் வீட்டிற்குச் சென்றான்.

அது முன் நேரம், உச்சிப் பொழுது ஆகவில்லை, ஆனால் வெப்பம் கடுமையாக இருந்தது. மணற் பாங்கான சாலை, காற்றின் நீல நிறம், வானம், மெல்ல மெல்ல சூடேறத் தொடங்கின. மாலை வாக்கில், வெண்மேக மலைகளை சூரியன் பரப்பி விட்டது, அவையும், காற்றை இன்னும் அழுத்தமாக்கியபடி, தொடுவானத்திற்கு மேலாகக் கிழக்கு நோக்கி மிதந்து சென்றன. பழத் தோட்டத்திலே அர்தமோனவ் சற்று நேரம் உலவித் திரிந்தான், பின்னர் வெளிவாசலுக்குச் சென்றான். வெளிக்கதவின் கீல்களின் மீது தீஹன் தார் பூசிக் கொண்டிருந்தான். வசந்தகால மழையினால் துருப்பிடித்துப் போய்விட்ட அவை, அடிக்கடி கிரீச்சிடத் தொடங்கின.

"இன்று ஏன் வேலை? இது ஞாயிற்றுக் கிழமை," என்று

ஒரு பெஞ்சின் மீது உட்கார்ந்தபடி அர்தமோனவ் சோம்பேறித்தனமாகக் கூறினான். தீஹன் அவனைப் பக்கவாட்டில் வெள்ளை விழிகளால் மட்டுமே பார்த்துவிட்டு, தணிவான குரலில் சொன்னான்:

''ஸெரஃபீம் கெட்டவன்.''

''அவனைப் பற்றி கெட்டது என்ன?

விடையாகத் தான் பெற்ற விநோதச் சொற்களில், கருப்பு கரப்பான் பூச்சிகள் ஊர்ந்து வருதலைக் கேட்டான்:

''அவன் அருமையான நினைவாற்றல் கொண்டிருந்தான், அதிகமாகவே நினைவு வைத்திருந்தான். தான் பார்த்த ஒவ்வொன்றையும் நினைவு வைத்திருந்தான். மேலும் பார்ப்பதற்கு என்ன இருக்கிறது? பொல்லாங்கு, மடிமை, பரபரப்பு. அது பற்றித் தான் அவன் ஒவ்வொருவருடனும் பேசினான். அமைதியின்மையையும், மனநிறைவின்மையையும் தொடங்கிவைத்தான். எல்லாவற்றையும் நான் பார்க்கிறேன்.''

இன்னமும் வேலை செய்து கொண்டிருந்தபடியே, தீஹன் மேன்மேலும் முணுமுணுத்தான்:

''மக்கள் தலைகளினின்றும் நினைவாற்றலை போக்கி ஆக வேண்டும். தீமைக்கு அது தான் வேர். இந்த முறையில் தான் விஷயங்கள் இருக்க வேண்டும்: ஒரு தலைமுறை வாழ்ந்து மடிகிறது, அதனுடைய எல்லாப் பொல்லாங்குகளும், அதனது எல்லா முட்டாள்தனங்களும் அதனுடனேயே மடிந்து போகிறது. ஒரு புதிய தலைமுறை பிறக்கிறது, அது எந்தப் பொல்லாங்கையும் நினைவு வைத்திருப்பதில்லை. நல்லதை மட்டுமே அது நினைவு வைத்திருக்கிறது. இதோ, நானும் கூட—ஞாபகத்தால் துயரப் படுகிறேன். நான் கிழவனாகி விட்டேன். எனக்கு அமைதி தேவை. ஆனால் அமைதியை என்னால் எங்கே பெற முடியும்? மறந்து போவதில் தான் அமைதியே அடங்கி இருக்கிறது...''

ஒரே நேரத்தில் அவ்வளவு அதிகமாகவும், அவ்வளவு எரிச்சலூட்டும் படியாகவும் தீஹன் முன்னர் ஒருபோதும் பேசியதில்லை. எப்போதும் போல முட்டாள்தனமாக இருக்கும் அவன் பேச்சோ இன்று ஓரளவுக்குக் குறிப்பிடும்படியாக எரிச்சலைத் தூண்டிவிட்டது. முற்றப் பாதுகாவலனுடைய சிக்குப்பிடித்த தாடி, வெளிறிய நீர்வடியும் கண்கள், மடிப்பு விழுந்த நெற்றி இவற்றைக் காண்கையில் இந்த மனிதனுடைய பெருகுகின்ற அருவருப்பால் அர்தமோனவ்

...ப்புற்றுப் போனான். காலணியின் குதிங்காலில் ... மடிப்புகள் விழுந்திருப்பது போல, அவன் நெற்றியில் ... மடிப்புகள் ஏற்பட்டிருந்தன்; வயோதிகத்தினால் ... யில்லாது போன அவனுடைய உயர்ந்த கன்னங்கள் ... போன்ற பழுப்பு நிறத்தில் இருந்தது, அவனுடைய ... மூக்கு கடற்பஞ்சு போல நுண்துளைகளைக் கொண்டதாக இருந்தது.

''அவனுக்கு முதுமைத் தளர்ச்சி வந்துவிட்டது,'' என்று ...தமோனவ் நினைத்தான்; இந்தக் கருத்து அவனை மகிழ்வித்தது. ''அவன் முட்டாள்தனமாகப் பேசத் தொடங்கினான். இதற்கு மேலும் வேலை செய்ய அவனுக்குத் தகுதியில்லை. அவனை நான் வெளியேற்றியாக வேண்டும். அவனுக்கு ஒரு கணிசமான தொகை கொடுக்க வேண்டும்.''

ஒரு கையில் தீட்டுக் கோலும், மற்றொரு கையில் தார் ...ளியுமாக இருந்த தீஹன், தனது எசமானனை நோக்கி நெருங்கி வந்தான். பச்சை மாமிசத்தின் கருஞ்சிவப்பு நிறத்தைப் போல தோன்றிய ஆலைக் கட்டிடங்களைத் தனது தீட்டுக் கோலால் சுட்டிக்காட்டி, அவன் முணுமுணுத்தான்:

''அவர்கள் பேசுவதை நீ கேட்டிருக்க வேண்டும்—...ட்டுக்காரன் செதோவ், ஒற்றைக் கண்ணன் மரோஸவ், அவன் தம்பி ஸகார், இன்னும் ஸினயீதாவும் கூட. அவர்கள் நேரடியாகவே பேசுகிறார்கள்: மற்றவர்கள் கைகளால் கட்டப்பட்ட வியாபாரமானது மோசமானது, அது அழிக்கப்பட்டாக வேண்டும்...''

''உன்னுடைய கருத்துகளைத்தான் அவர்கள் கடன் வாங்கி இருப்பார்கள் போலத் தெரிகிறது,'' என்று எசமானன் கிண்டலோடு கூறினான்.

''என்னுடைய கருத்துகளா?'' மறுப்பது போல தீஹன் தன்னுடைய தலையை ஆட்டினான். ''இல்லை, அவை என்னுடையவை அல்ல. அத்தகைய கற்பனைகளுக்கும் எனக்கும் சம்பந்தமே இல்லை. ஒவ்வொருவரும் தங்களுக்காக உழைக்கட்டும், அதன் பிறகு எந்தத் தொல்லையும், தீங்கும் இராது. ஆனால் அவர்கள் கூறுகிறார்கள்: 'ஒவ்வொன்றுமே எங்களுடைய காரியந்தான். நாங்கள் தான் எசமானர்கள்!' பாரு, பியோத்தர் இல்யீச், அது உண்மை: இது எல்லாமே அவர்களுடைய வேலைதான்! வியாபாரத்தோடு உனக்குச் சேணம் பூட்டியவர்கள் அவர்கள் தான், படுகுழி

யிலிருந்து நெடுஞ்சாலைக்குக் கொண்டு வந்தது நீ தான். மேலும் இப்போது...''

அர்தமோனவ் செருமியவாறே எழுந்தான். கைகளைச் சட்டைப் பைகளுக்குள்ளாகத் திணித்தபடி, தீஹனுடைய தலைக்கு மேலாக மேகங்களைப் பார்த்தபடி பேசத் தொடங்கினான், அவனுடைய வார்த்தைகள் ஓரளவுக்குக் குழம்பிப் போய் இருப்பினும், குரலில் உறுதி தொனித்தது:

''இங்கே பார்: உண்மை தான், எனக்குப் புரிகிறது. இத்தனை ஆண்டுகாலமாக நீ என்னோடு இருந்து வந்திருக்கிறாய். அது உண்மை! நல்லது, ஆனால் இப்போது உனக்கு வயதாகிவிட்டது. உனக்குக் கஷ்டமாக...''

தனது எசமானனுடைய பேச்சைச் செவிமடுக்காதது போல ''இம்மாதிரியான பேச்சை ஸெரஃபீம்தான் ஊக்குவித்தான்,'' என்றான் தீஹன்.

''நிறுத்து! ஓய்வு பெறுவதற்கு இது தான் உனக்கு நேரம்...''

''ஒவ்வொருவருக்கும் இது தான் நேரம். உண்மைதான்.''

''பொறு... உன்னை வைத்துக் கொண்டு செல்வது கஷ்டமானது...''

தனது வேலை நீக்கத்தைக் கேட்டு தீஹன் வியாலவ் வியப்படையவில்லை. அமைதியாக அவன் முணுமுணுத்தான்:

''நல்லது, பிறகு...''

''உண்மையில், உனக்கு கணிசமான தொகை கிடைக்கும்,'' கிழவனுடைய அமைவடக்கத்தால் ஓரளவுக்கு திகைப்புற்றுப் போன அர்தமோனவ், இவ்வாறு உறுதி கூறினான். தனது அருவருப்பான காலணிகளுக்குத் தார் பூசிக் கொண்டிருந்த தீஹன் எந்த பதிலும் அளிக்கவில்லை. பிறகு அர்தமோனவ் உறுதியாகப் பேசினான்:

''ஆக, நீ போய்வா!''

''நல்லது,'' என்று இவன் பதிலளித்தான்.

ஆற்றங்கரையில் குளிர்ச்சியாக இருக்கக்கூடும் என்ற நம்பிக்கையோடு அங்கே சென்றான் அர்தமோனவ். இல்யாவோடு இவன் சண்டை பிடித்துக் கொண்ட பைன் மரத்திற்கடியில், இவனுக்காக ஸெரஃபீம் தயாரித்துத் தந்த வெள்ளை பீர்ச் மரக் கட்டைகளால் ஆன ஒருவகையான ஆசனம் இருந்தது. அந்த இருக்கையில் அமர்ந்தபடி, ஆலைக் கட்டிடங்கள், அவனது வீடு மற்றும் தோட்டம், ஆலைத்

தொழிலாளர்களுடைய குடியிருப்பு, சர்ச் மற்றும் இடுகாடு ஆகியவற்றை அவனால் காண முடிந்தது. ஆலை மருத்துவமனையையும், பள்ளியையும் அவற்றினுடைய பெரிய சன்னல்களில் ஏற்பட்ட பனி போன்ற மினுமினுப்பைக் கொண்டு அறிய முடியும். நூற் சட்டத்தைப் போல இங்குமங்கும் போய் வந்து கொண்டிருந்த சிறிய மனித உருவங்கள், வியாபாரத்தின் முடிவற்ற துணியை நெய்து கொண்டிருந்தார்கள். குடியிருப்பின் மணற்பாங்கான தெருவில் ஓடிய உருவங்கள் இன்னும் மிகச் சிறியதாகத் தெரிந்தன. சர்ச் வேலிக்குப் பக்கத்தில் நின்ற சாம்பல் நிறமான ஆல்டர் மரங்களினூடேயே பொம்மைகளைப் போலத் தோற்றமளித்தபடி மேய்ந்த ஆட்டு மந்தையை டாக்டருடைய ஒற்றைக் கண் உதவியாளனாகிய, பழம் நெசவுத் தொழிலாளியின் பேரனாகிய பரீஸ் மரோஸவ் மேய்த்து வந்தான்; ஆலைப் பெண்களில் அநேகர் தங்களுடைய குழந்தைகளுக்கான ஆட்டுப் பாலை அவனிடமிருந்து தான் பெற்றார்கள். மேலும், மருத்துவமனை அருகில் புல் இல்லாத, வேலியிடப்பட்ட ஒரு சதுக்கத்தில் மற்றொரு மந்தை, தங்களுடைய மஞ்சள் நிற மருத்துவமனை உடைகளுடனும், வெள்ளை இரவுத் தொப்பிகளுடனும் பைத்தியங்களைப் போலத் தோற்றமளித்த—சிறிய மனித உருவங்கள்—மேய்ந்து கொண்டிருந்தன. காக்கைகள், சிட்டுக்குருவிகள், கரிச்சான் குஞ்சுகள் போன்று எண்ணற்ற பறவைகள் வசிப்பதற்காக ஆலையைச் சுற்றிலும் வரத்தொடங்கின, சிறகடித்தபடி அவை இங்குமங்கும் பறந்த போது, அவற்றின் இறக்கைகளின் வெள்ளை நிறமானது சூரிய ஒளியில் மினுமினுத்தன. தங்களுடைய தார்ச்சணலை ஆலைக்குக் கொண்டு வருகின்ற விவசாயிகள் நின்று செல்கின்ற வதராக்ஷா ஆற்றின் கரையிலுள்ள சாராயக் கடையைச் சுற்றித்தான் குறிப்பாக ஏராளமான பறவைகள் இருந்தன.

எனினும், சிறிது காலத்திற்கு முன் வரை அர்தமோனவுக்கு இந்தப் பெரிய பொருளாதாரம் மகிழ்ச்சியையோ பெருமையையோ அளிக்கவில்லை; தொழிற்சாலையானது அவனுக்கு பல்வேறு தொல்லைகளைத் தருவதாக மாறியது. தொழிலில் மூத்தவனாகிய தன்னைக் காணாதபடி தனது தம்பியும் மருமகனும் அவர்களைச் சார்ந்த உதவியாளர்களும் சந்தையில் இருந்த நாடோடிகளைப் போல விவாதிப்பதையும், கத்துவதையும், சைகை காட்டுவதையும்

கண்டு மனம் புண்பட்டுப் போனான். ஆலையைப் பற்றிப் பேச்சு வந்த போதும் கூட, அவன் இருப்பதைக் கூட அவர் கள் மறந்து போவார்கள். அவனுடைய பேச்சை அவர்கள் கேட்கும்படி வரும்போது, அமைதியாகக் கேட்பார்கள். ஒப் புக் கொள்வது போலத் தோன்றும்; ஆனால் ஒவ்வொரு விஷயத்திலும், பெரியதோ, சிறியதோ, அவர்களுக்கு எது பொருத்தமாகத் தெரிகிறதோ அதைத்தான் செய்வார்கள். இந்த மாதிரியான போக்கு எவ்வளவோ காலத்திற்கு முன்பே தொடங்கி விட்டது, இவனுடைய எதிர்ப்பையும் பொருட் படுத்தாமல் ஆலைக்கான மின் உற்பத்தி நிலையத்தைக் கட்ட ஆரம்பித்ததிலிருந்து தொடங்கியது. அதன் பிறகு, மின்சக்தியானது பாதுகாப்பும், சிக்கனமும் கொண்டது என் பதை விரைவாகப் புரிந்து கொண்டான்; ஆனால் புண்பட்ட உணர்வு மட்டும் நீடித்திருந்தது. அற்ப மனத்தாங்கல்கள் ஏராளம் இருந்தன, கூடிக் கொண்டே வந்தது, அவை மிகக் கூர்மையானதாகவும் இருந்தன.

அவை அனைத்திலும் மிகவும் துடுக்குத் தனமானதும், ஏற்றுக் கொள்ளத்தக்க முடியாததுமாக இருந்தது பியோத் தரின் மருமகன் மிரோன் தான். அவனுடைய மாணவப் பருவ நாட்கள் கடந்துவிட்டன, ஏதோ ஒருவிதமான வெளி நாட்டுச் சட்டையைத் தனது ருஷ்யச் சீருடைக்குப் பதிலாக அணியத் தொடங்கியிருந்தான்; அவனுடைய தோற்றம் முழுவதுமே, தங்கப் பூண் போட்ட கண்ணாடியிலிருந்து அவனுடைய மஞ்சள் நிறக் காலணிகள் வரை மினுமினுத் தன. கடுகடுப்போடு கண்களை உருட்டி விழித்தபடி அவன் கூறுவான்:

''அது பழையவை, பெரியப்பா. காலம் மாறிவிட்டது.''

கண்டிப்பான எசமானனுக்குப் பயப்படும் ஒரு வேலைக் காரனைப் போல அவன் காலத்திற்கு அஞ்சுவது போலக் காணப்பட்டான். ஆனால் அவன் அஞ்சியது அது ஒன்றுக் குத்தான். ஒவ்வொன்றிலும் அவன் இது போலவே கட்டுப் பாடின்றி நடந்து கொண்டான். ஒரு சமயம், அவன் உண் மையாகவே கூறினான்:

''இதைக் கேளுங்கள், பெரியப்பா. உங்களையும் உங் களைப் போன்ற ஆட்களையும் இனிமேலும் நம்பிக் கொண்டு ருஷ்யா இருக்கப் போவதில்லை.''

ஏன்? என்ற கேள்வியைக் கூட கேட்க முடியாதபடி அர்தமோனவ் தடுமாறிப் போனான். கடுங் கோபத்தோடு

வீட்டிற்குச் சென்றான், பல வாரங்களுக்கு அலெக்ஸியின் வீட்டிற்குச் செல்லவோ, பேசவோ இல்லை, ஆலையில் மிரோனைப் பார்த்த போது கூடப் பேசவில்லை.

உயரமாக வளர்ந்தும், மெலிந்தும் காணப்பட்டவளும், தன் தாயைப் போலவே சாம்பல் நிற தலைமுடி கொண்ட வேரா பபோவாவின் மகளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று மிரோன் திட்டமிட்டுக் கொண்டிருந்தான். எல்லாரையும் போல அவளிடம் கிளுகிளுத்துச் சிரிக்கின்ற பழக்கம் இருந்தது. தனது கழுத்தைத் தொடர்ந்து ஆட்டிய படியே, தனது பெரிய கண்களை அகல விரித்துக் குறிப்பாகப் பார்க்கின்ற பொழுது, எதிலுமே நம்பிக்கை இல்லாதது போலக் காணப்படும். இரைச்சல் எழுப்புகின்ற ஈயைப் போல, தனது பற்களின் வழியாக முனகிக் கொண்டே, தனது ஓவியச் சட்டத்திற்கு முன்னால் காலை முதல் இரவு வரை உட்கார்ந்து, நல்ல கித்தானை அவள் பாழாக்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய வைக்கோல் தொப்பியானது, ஒரு நாடாவால் அவளது மோவாய்க்குக் கீழே கட்டப்பட்டு, தனது வைக்கோல் நிறத் தலைமயிரை வெளித் தெரியக் காட்டியபடி, எப்போதுமே முதுகுப் பக்கம் தொங்கிக் கொண்டிருந்தது. அவளது உடையணியும் முறை கூட ஒழுங்கில்லாமலேயே இருந்தது, அவளது குட்டைப் பாவாடை பெரும்பாலும் அவளது முழங்கால்களைக் காட்டிக் கொண்டிருந்தன.

அந்த உருப்படாதவனான கொரித்ஸ்வேதவ் கூட எரிச்சலூட்டிக் கொண்டிருந்தான். விரைந்து செல்கின்ற பறவை போல வருவான், போவான், மறுபடியும் திடீரென்று தோன்றுவான், வெறி பிடித்த சிறிய நாய் ஆட்கள் மீது பாய்வது போல, ஒரே விஷயத்தைப் பற்றியே கத்திக் கொண்டிருந்தான்:

''ஆன்மீகத்தில் உயர்ந்த ருஷ்யாவை அமெரிக்காவின் ஆன்ம சூன்யமாக்க நீங்கள் முயற்சி செய்து கொண்டிருக்கிறீர்கள். மனிதர்களுக்காக நீங்கள் எலிப்பொறி கட்டிக் கொண்டிருக்கிறீர்கள்...''

இந்தக் கூக்குரல்களில், சில நேரங்களில் உண்மையாகப் படுவது போல அர்தமோனவ் மனத்தில் சில சிந்தனை ஏற்படும். எனினும், பெட்டியைத் திறந்தவுடன் குதித்தெழும் பொம்மையைப் போல எளிதிற் கையாள முடியாத, வித்தியாசமான, தீஹனை விட வேறு இரண்டு ஆட்கள் ஒன்று

போலவே இருக்க முடியாது என்பதை அறிந்திருந்தாலும், தீஹன் வியாலவினுடைய முட்டாள்தனத்தோடு ஒருவிதப் பொருத்தம் இருப்பதாக மிகவும் அடிக்கடி உணர்ந்தான். எலிஸவேத்தா பபோவா மீது துள்ளிப் பாய்ந்தபடி, கொரித்ஸ்வேதவ் சப்தம் போடுவான்:

''நீங்கள், மிகவும் உணர்ச்சிவயப்பட்டவள், எதற்காக நாக்கை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?''

இதற்கு அவள் புன்னகை செய்வாள்; இது அவளது கனிந்த கண்களில் மட்டுமே தோன்றும், அவளது முகம் அசையாமலும் கர்வத்தோடும் இருந்தது. புதிய சொற்கள் தோன்றின, அவற்றை மூத்த அர்தமோனவ் முன்னர் கேள் விப்பட்டது இல்லை, அவனால் புரிந்து கொள்ளவும் முடிய வில்லை.

''கற்பனைக் கனவுகளின் சாவுப் பிதற்றல்,'' ஒரு துண் டுத் தோலினால் தனது கண்ணாடியை அக்கறையோடு தேய்த்தபடி மிரோன் கூறுவான்.

அலெக்ஸி தொடர்ச்சியாக மாஸ்கோவுக்குப் போய்க் கொண்டிருந்தான். எப்போதும் புளுகக்கூடிய யாக்கவ், எழுச்சியற்றபடி தன்னைத் தனிமைப் படுத்திக் கொண்டு, மிகவும் குறைவாகவே பேசினான்; ஆனால் அவன் நன்றாக வே பேசியிருக்க வேண்டும், ஏனெனில் அவன் சொன்ன தென்னவோ மிரோனையும், கொரித்ஸ்வேதவையும் ஒரே அளவில் திடுக்கிட வைத்தது. தாத்தாரிய பாணியில், அடர்த்தி யான, சதுரமான, செந்நிறத் தாடியை யாக்கவ் தானா கவே வளர்த்துக் கொண்டிருந்தான்; மேலும் தனது இந்தத் தாடியோடு கேலி செய்கின்ற ஒரு விருப்பத்தையும் வளர்த் துக் கொண்டிருந்தான். அமைதியற்ற இந்த ஆட்கள் அனை வரையும் நோக்கிச் சோம்பேறித்தனமாகத் தன் மகன் பேசு வதைக் கேட்க அர்தமோனவ் விரும்பினான்:

''இத்தனை வேகமாக நீங்கள் ஏறினால், ஒருநாள் உங் களது கழுத்துகளை முறித்துக் கொள்வீர்கள், கனவான்களே! கொஞ்சம் எளிதாக ஏன் நீங்கள் வாழக் கூடாது?''

எலிஸவேத்தா பபோவா திடீரென்று மாஸ்கோவுக்குப் போய் அங்கே கொரித்ஸ்வேதவை மணந்து கொண்ட போது, மூத்த அர்தமோனவுக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. அவனைப் போலவே யாக்கவுக்கும் வேடிக்கை யாக இருந்தது என்பதையும் கண்டான். மிரோன் மிகுந்த எரிச்சலடைந்தான், இதை அவனால் மறைக்க முடியவில்லை.

ஒரு வியாபாரி என்ற தோற்றத்தைக் குறைத்துக் காட்டிய அவரது கூர்மையான தாடியை முறுக்கிவிட்டுக் கொண்டே, அதன் நாரிலிருந்து தனது வறண்ட பேச்சை எடுப்பது போன்ற பாசாங்கு செய்து பேசினான்:

''ஸ்தெபான் கொரித்ஸ்வேதவ் போன்ற ஆட்கள் அழிந்து போய்க் கொண்டிருக்கிற ஓர் இனத்தைச் சேர்ந்தவர்கள். அவனையும் அவனைப் போன்று அத்தனை பயனற்ற மனிதர்களையும் உலகத்தின் எந்தப் பகுதியிலும் உங்களால் காண முடியாது.''

சுவாலையில் நிலக்கரியைக் குவிப்பது போல யாக்கவ் கூறினான்:

''மேலும், அந்த இனங்களில் ஒரு மனிதன், உன் மூக்குக்குக் கீழாக இருந்த ஒரு துணுக்கை—இந்தப் பெண்ணைத்—திருடிக் கொண்டு போய்விட்டான்!''

தனது தோள்களை புறங்கவித்து வளைத்தவாறு மிரோன் பதிலளித்தான்:

''நான் கற்பனாவாதியல்ல.''

''என்ன அது? யார் அது?'' என்று கேட்டான் மூத்த அர்தமோனவ்; தீர்ப்பைப் படிக்கின்ற ஒரு நீதிபதியைப் போல, ஒவ்வொரு வார்த்தையையும் தெளிவாகச் சொல்லியபடி மிரோன் பேசினான்:

''கற்பனாவாதிகள் என்றால் யாருக்குமே புரியவில்லை, பெரியப்பா, உங்களாலும் கூட அதைப் புரிந்து கொள்ள முடியாது. வழுக்கைத் தலையில் வைக்கும் பொய் முடியைப் போல, அவை அழகுக்கானவை, அல்லது ஒரு மோசக்காரனின் பொய்த் தாடியைப் போல, எச்சரிக்கை செய்வது.''

''ஆகா! உன்னுடைய பெரிய மூக்கு அறுபட்டு விட்டது,'' என்று மூத்த அர்தமோனவ் குதூகலித்தான்.

வியாபாரத்தில் முன்னிலும் அதிகமான பிடிப்புகளை ஏற்படுத்திக் கொண்டும், இவனைத் தனிமைப்படுத்துவது போல அப்பால் தள்ளிக் கொண்டும் இருந்த இந்த அமைதியற்ற மனிதர்களினால் அடைந்த அநேக மன வேதனைகளுக்கிடையே, இத்தகைய சில்லறை மன நிறைவு பெற்றான். இப்படி, தனிமைப்படுத்தப்பட்ட மனநிலையில், மீண்டும் ஒரு வேடிக்கையான மகிழ்ச்சியைக் கண்டுபிடித்தான், உருவாக்கினான். தனிமை மனநிலையானது அவனுக்குப் புதிய—முற்றிலும் மாறுபட்ட குணாம்சம் கொண்ட—ஓரளவுக்கு மாறு

பட்ட அமைப்புக் கொண்ட பியோத்தர் அர்தமோனவை அறிமுகம் செய்தது.

காட்டு மிராண்டித்தனமான தாக்குதலுக்குப் பிறகும், ஓர் அருமையான, தலை நிமிர்ந்து நிற்கும் மனிதனாக இருந் தான். வாழ்க்கையானது நியாயமில்லாதபடி, மாற்றாந் தாய் போல அவனை நடத்தி விட்டிருந்தது. ஓர் ஊமை யாக, பணிவுள்ள வேலைக்காரனாகத் தன்னுடைய தந் தைக்குச் சேவகம் செய்வதாகத்தான் அது தொடங்கியது, அவரோ மகிழ்ச்சியை அளிப்பதற்கு மாறாக ஒரு முட்டாள் தனமான, மனச் சோர்வூட்டும் மனைவியை இவனுக்கு அளித் திருந்தார், மிகப் பெரியதும் கடினமானதுமான வியாபாரப் பொறுப்பை இவனது தோள்களிலே திணித்து விட்டிருந் தார். உண்மை, அவன் மனைவி இவனை நேசித்தாள், அவர் களுடைய முதலாவது ஆண்டு மோசமானதாக இல்லை; ஆனால் நூல்கண்டு சுற்றும் பெண் ஸினயீதா போன்ற ஒழுக்கக்கேடான பெண்ணால் கூட தனது காதலில் அதிக வெதுவெதுப்பையும், உயிர்ச் சுவையையும் ஊட்ட முடியும் என்பதை இப்போது அறிந்தான். சந்தையிலே கண்ட, காதற்பள்ளியில் பயின்ற கைதேர்ந்த அப்பெண்களை நினைக் காமல் இருப்பதே நல்லது. அவன் மனைவி வாழ்க்கை முழு வதையும் அச்சத்திலேயே கழித்தாள். ஆரம்பத்தில் அலெக்ஸியைப் பற்றிய அச்சத்தாலும், மண்ணெண்ணெய் விளக்குகளுக்கும், பின்னர் மின் விளக்குகளுக்கும் பயந்தாள். விளக்குகள் பளிச்சிடுகின்ற போது, நதால்யா அச்சத்தால் பதறி சிலுவையிட்டுக் கொள்வாள். ஒரு முறை, சந்தையில் இசைப்பெட்டிக் கடையில் இவனுக்குப் பெரும் சங்கடத்தை ஏற்படுத்தி விட்டாள்.

''ஐயோ! அதை வாங்க வேண்டாம்,'' என்று கெஞ்சி னாள். ''ஒருவேளை இது சாபமிடப்பட்டு இருக்கலாம். ஒருவேளை அவனுடைய ஆன்மா இந்தப் பெட்டிக்குள்ளாக இருக்கலாம்!''

இப்பொழுதெல்லாம் மிரோனுக்கும், டாக்டர் யாக்கவ் லெவுக்கும், தனது சொந்த மகள் தத்யானாவுக்கும் பயந் தாள். அளவுக்கு மீறிப் பெருத்துப் போன அவள், காலை யிலிருந்து இரவு வரை சாப்பிடுவதைத் தவிர வேறு எது வும் செய்யவில்லை. இவளால், அவன் தம்பி கூட ஓரள வுக்குத் தன்னைத்தானே கொன்று கொண்டான். அவளது குழந்தைகள் அவளை மதிக்கவில்லை. திருமணம் செய்து

கொள்ளும்படி யாக்கவை அவள் வற்புறுத்திய போது, அவன் கிண்டலோடு அவளுக்கு அறிவுரை கூறுவான்:

''அம்மா, தின்பதற்கு எதையாவது நீ பார்த்துக் கொள் வது நல்லது.''

பணிவோடும், உறுதியில்லாமலும் அவள் பதில் கூறு வாள்:

''ஏன், இதற்கு மேலும் வேண்டும் என்று நான் நினைக்க வில்லை.''

அவள் திரும்பவும் உண்டாள்.

தந்தை பேசினான்:

''ஏதற்காக உன் அம்மாவைக் கேலி செய்கிறாய்? இதற் குள்ளாக உனக்குத் திருமணம் முடிந்திருக்க வேண்டும்!''

''குடும்பத்தோடு கட்டுப் போட்டுக் கொள்வதற்கு இது நேரமல்ல,'' என்று யாக்கவ் காரியரீதியாகப் பதிலளித் தான்.

''காலத்தைப் பற்றி நீங்கள் எல்லாரும் இவ்வளவு பயப் படக் காரணம்?'' என்று தந்தை கோபமாகக் கேட்டான்; ஆனால் மகன் தனது தோள்களை மட்டுமே குலுக்கிக் கொண்டான், பதிலேதும் அளிக்கவில்லை.

அவனுங் கூட அடிக்கடி கூறுவான்:

''உங்களால் விஷயங்களைப் புரிந்துகொள்ளவே முடிய வில்லை, அப்பா.''

அதை அவன் பக்குவமாகவே சொன்னான். ஆனால் மொத்தத்தில், தன் மகன் புரிந்து கொள்வதை விட அப்பா குறைவாகத்தான் புரிந்து கொள்ள வேண்டும் என்பது இல்லை. இன்றைய மக்கள் கடந்த காலத்தைப் பார்க்கி றார்கள், எதிர்காலத்தை அன்று. இங்ஙனமாகத்தான் ஒவ் வொருவரும் வாழ்ந்தார்கள்.

இல்யா, மூத்த மகன், மிகவும் நேசிக்கப்பட்டவன் எங்கோ மறைந்து போய் விட்டான். அவன்மீது கொண்ட அன்புக்காக அப்பா ஒரு காரியத்தைச் செய்திருந்தான், அதை அவன் நினைவுகூர விரும்பவில்லை.

அகன்ற முகமும், தடித்த இடுப்பும் கொண்ட மூத்த மகள் எலேனா, தனது குடிகாரக் கணவனின் செல்வத்தால் அதிகமான சலுகை காட்டப்பட்டு, முற்றிலும் ஓர் அந்நிய ளாக மாறி இருந்தாள். விலையுயர்ந்த ஆடைகளோடும், மோதிரங்களால் விரல்களை நிரப்பிக் கொண்டும், தனது பெற்றோர்களைப் பார்ப்பதற்கு மிகவும் அரிதாகத்தான்

வந்தாள். தங்கச் சங்கிலிகளும், சிற்றணிகளும் குலுங்கி யாட, தங்க பிரேம் போட்ட தொலைநோக்கிக் கண்ணாடியைத் தனது செருக்கு நிறைந்த கண்களுக்கு மேலாக உயர்த்தி, தன்னைச் சுற்றிலும் பார்த்துக் கொண்டு சலிப் போடு கூறுவாள்:

''இங்கே காற்று எவ்வளவு மோசமாக இருக்கிறது; வீடு முழுக்கவும் தூய்மையற்றும், கேடுற்றும் போய்விட்டது. புதிதாக ஒன்றை ஏன் நீங்கள் கட்டக் கூடாது? எந்த வகையிலும், ஆலையை அடுத்து வசிப்பது நல்லதல்ல!''

ஒரு நாள், சந்தர்ப்பவசமாக, தன் தாயாரிடம் அவள் கூறிக் கொண்டிருந்ததை அர்தமோனவ் ஒட்டுக் கேட்டான்:

''அப்பா இன்னமும் மாறாமல்தான் இருக்கிறாரா? ஐயோ, அவரோடு இருப்பது உனக்குக் கட்டாயம் சலிப்பாக இருக்க வேண்டும்! என் கணவர் குடிகாரன், சுற்றிலும் விளையாடுகிறார், ஆனால் ஓரளவுக்கு அவர் சுறுசுறுப்பாகத்தான் இருக்கிறார்.''

தூய்மையாக இருப்பதில் அவளுக்கு இருந்த வேகம் மிகவும் எரிச்சலூட்டுவதாக இருந்தது. உட்கார்வதற்கு முன்னால், தனது கைக்குட்டையால் நாற்காலியைத் துடைத்துக் கொள்வாள்; அதிகமான வாசனைத் தைலங்களைப் பயன்படுத்தினாள், அது ஒருவரை தும்பச் செய்வதாகவே இருந்தது. வீட்டில் உள்ள ஒவ்வொன்றின் மீதும், அவளுடைய கேவலப் படுத்துகின்ற, மரியாதைக் குறைவான வெறுப்பு, அர்தமோனவுக்குள் அவளது இந்த வெறுக்கத் தக்க குணங்கள் அனைத்திற்கும் பழிவாங்க வேண்டும் என்ற உணர்வை ஏற்படுத்தியது. அவள் அங்கிருந்த போது, தனது உள் காற்சட்டை தெரியுமாறு தனது அங்கியின் பொத்தான்களைக் கழற்றி விட்டுக்கொண்டு வீட்டைச் சுற்றிலும் முற்றத்தைச் சுற்றிலும் நடப்பான், ரப்பர் மிதியன்களைத் தான் அவனது வெறுங்கால்கள் அணிந்திருந்தன. மேசைக்கு முன்னால் அமர்ந்து சாப்பிடும் போது தனது உணவை உரத்த சப்தம் எழுப்பியபடி மென்று தின்பான், பஷ்கீரைப்போல ஏப்பமிடுவான். மகள் எரிச்சலோடு கத்துவாள்:

''அப்பா, உங்களுக்கு என்ன ஆகிவிட்டது?''

அவளது எரிச்சலைத்தான் அவன் எதிர்பார்த்தான்.

''பொறுத்துக் கொள்ளுங்கள், ராணி! நான் ஒரு சாதாரண விவசாயி என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே,'' என்பான்.

அவனோ முன்னிலும் அதிகமாக நெறு நெறுவென்று பல்லரைவும், ஏப்பமிடவும் செய்வான்.

எலேனா வெளிநாட்டில் இருந்திருக்கிறாள். மாலை நேரங்களில் கிளர்ச்சியற்றபடி, வளவளத்த குரலில் தன் தாயாரிடம் எல்லாவகையான முட்டாள்தனங்களையும் கூறு வாள்: அவள் பார்த்திருந்த ஏதோ ஒரு நகரத்தில் தங்களது வீடுகளின் வெளிப் புறங்களைப் பெண்கள் பிரஷ், சோப்புக் கொண்டு தேய்த்துச் சுத்தம் செய்திருக்கிறார்கள்; மற் றொரு நகரத்தில் கோடையோ, குளிர் காலமோ எப்போ துமே மூடுபனி இருந்திருக்கிறது, தெரு விளக்குகள் பகல் முழுவதும் எரிந்திருக்கின்றன, அந்நிலையிலும் ஒரு பொரு ளைக் கூடப் பார்க்க இயலாது இருந்திருக்கிறது; பாரீசில் எல்லாக் கடைகளிலும் ஆயத்த ஆடைகள் விற்பனையாகி இருக்கின்றன, அங்கே ஓர் உயரமான கோபுரம் இருந் திருக்கிறது, அதன் உச்சியிலிருந்து பார்த்தால், கடலைத் தாண்டி அப்பால் உள்ள நகரங்களைக் கூடப் பார்க்க முடிந் திருக்கிறது.

எலேனா தனது தங்கையோடு எப்போதுமே விவாதம் செய்து கொண்டும், பலமாகச் சண்டையிடவும் செய்தாள். தத்யானா மெலிந்தும் கருப்பாகவும் வளர்ந்திருந்தாள், அத னால் பார்ப்பதற்குத் தான் அழகாக இல்லை என்று வெறுப் புற்றிருந்தாள். அவளுடைய குட்டையான சடைப் பின் னல், ஒருவேளை, அல்லது அவளது தட்டையான மார்பு மற்றும் நீலம் படர்ந்த மூக்கு இவை தேவாலயத்தில் மணி யடிப்பவனுடைய நினைவைத்தான் அவளுக்குக் கொண்டு வந்தது. அவள் நகரத்தில் தன் அக்காளோடு வசித்தாள். ஏதோ ஒரு காரணத்திற்காகவோ, மற்றதற்காகவோ அவள் பள்ளியில் தேர்ச்சியுறாது தோல்வியுற்றாள். சுண்டெலி யைக் கண்டு அவள் பயந்தாள். ஜாரின் அதிகாரம் குறைக் கப்பட வேண்டும் என்பதில் மிரோனுடன் அவள் ஒத்துப் போனாள், சமீபத்தில் சிகரெட் பிடிக்கும் பழக்கத்திற்கு அடிமையாகி இருந்தாள். கோடையில் அவள் வீட்டிற்கு வந் திருந்த போது, தன் தாயாரிடம் ஒரு வேலைக்காரியிடம் நடந்துவதைப் போலக் கத்தினாள், தந்தையுடன் மூடிய மனத் துடன் பேசுவாள். நாள் முழுக்கப் படித்தாள், மாலையில் நகரத்தில் உள்ள சித்தப்பா வீட்டிற்கு செல்வாள், வீடு திரும்பும் போது தங்கப் பல் டாக்டர் யாக்கவ்லெவ் அவளுக் குத் துணையாக வருவான். தனது அநுபவமற்ற சிறுமியின்

சிந்தனைகளை நினைத்துப் பார்த்தபடி, இரவிலோ தூங்காது விழித்துக் கொண்டு படுத்திருப்பாள், தனது செருப்பால் சுவரில் உள்ள கொசுக்களைத் துப்பாக்கி வெடியின் ஓசை போல ஒலியெழுப்பி அறைந்து கொல்வாள்.

அர்தமோனவுடைய உலகத்தில், மிரோனுடைய துடுக்குத்தனமான பேச்சுக்களிலிருந்து, வளைந்த தொடையும், அடர்த்தியான தலை முடியும் கொண்டு சமையல்காரியைச் சுற்றி வந்து கொண்டிருந்த உலைத் தொழிலாளியான வாஸ்காவின் முட்டாள்தனமான பாட்டுகள் வரை, ஒவ்வொன்றும் இரைச்சலுடையதாகவும், அந்நியமானதாகவும், தாங்கிக் கொள்ள முடியாத எரிச்சலூட்டுவதாகவும் மாறிக் கொண்டு வந்தது. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைகளிலும் விடுமுறை நாட்களிலும் வாஸ்கா சமையல் கூடத்தின் சன்னலுக்கு வெளியே சுற்றியபடி, மூடிய கண்களுடன் தனது அக்கார்டியனை வாசித்தபடி கர்ஜனை செய்வான்:

வெறுமனே சலித்திட்ட பழக்கத்தில்
என்னுடையவள் நீயேதான்!
உன்னரிய அழகைக் காண விரும்பினேன்
மதுவை விரும்புவது போலே!

இல்யாவைப் பற்றி ஓல்கா தகவல் தந்து எவ்வளவோ காலமாகிவிட்டது, அதே வேளை புண்பட்டுப் போன புதிய பியோத்தர் அர்தமோனவ் தன் மூத்த மகனைப் பற்றி மிகவும் அடிக்கடி சிந்திக்கலானான். மிகப் பெரும்பாலும், தனது பிடிவாதத்திற்கு இல்யா வேண்டிய ஊதியம் பெற்றிருந்திருக்க வேண்டும். அலெக்ஸியிடம் அவனுடைய போக்கு மாறிவிட்டதனால் இவ்வாறு இருக்கக் கூடும் என்று உணரப் பட்டது. ஒருநாள் மாலை தன் தம்பியின் வீட்டிற்கு வந்த அர்தமோனவ், நடுப் பத்தியில் தனது கோட்டையும், குல்லாயையும் கழற்றிக் கொண்டிருந்த போது, அப்போது தான் மாஸ்கோவிலிருந்து திரும்பியிருந்த மிரோன் பேசுவதைக் கேட்டான்:

''தங்களது புத்தகங்களின் பக்கங்கள் வாயிலாகவே வாழ்க்கையைப் பார்க்கின்ற நபர்களில் இல்யாவும் ஒருவன், குதிரைக்கும் பசுவுக்கும் வித்தியாசத்தை அவனால் சொல்ல முடியாது.''

தன் தம்பி மகனின் எதிர்ப்பிலிருந்து ஒருவிதமான ஆறு

..லைப் பெற முயன்றபடி ''அது ஒரு பொய்'' என்று நினைத்துக் கொண்டான் அர்தமோனவ்.

அலெக்ஸி கேட்டான்:

''கொரித்ஸ்வேதவ் போல அவன் அதே கட்சிதானா?''

''மட்டமானது,'' என்று மிரோன் பதிலளித்தான்.

இத்தருணத்தில் வரவேற்புக் கூடத்திற்குள்ளாக நுழைந்த ..ந்த அர்தமோனவ் மனத்திற்குள்ளாகவே அவர்களை அச்சுறுத்தினான்:

''சற்று பொறுத்திருங்கள், அவன் திரும்பி வருகையில், ..ங்களுக்குக் காட்டுவான்...''

மிரோன் உடனடியாக மாஸ்கோவின் பிரச்சினைகளை, அரசாங்கத்தினுடைய முட்டாள்தனத்தைக் கோபமாகப் புகார் செய்தபடி பேசத் தொடங்கினான். பிறகு நதால்யாவும் யாக்கவும் வந்தார்கள், தான் கட்ட விரும்பிய காகித ஆலை பற்றி உரையாடலை மிரோன் திருப்பிவிட்டான். கடந்த சில காலமாகவே அவன் இது குறித்து அவர்களைச் சங்கடப்படுத்திக் கொண்டுதான் வந்திருக்கிறான்.

''பெரியப்பா, நமது பணத்தை எல்லாம் பாருங்கள், எந்தப் பயனுமின்றி சுற்றிலும் கீழே கிடக்கிறது,'' என்றான். காதுகள் எல்லாம் சிவக்கின்ற அளவுக்குப் போய் நதால்யா கீச்சுக் குரலில் கேட்டாள்:

''பணம் எங்கே சுற்றிலும் கிடக்கிறது? யாருடைய பணம் சுற்றிலும் கிடக்கிறது?''

அங்குள்ள ஒவ்வொன்றும் தனக்கு மிகவும் அறிமுகமான, சலிப்பூட்டுகின்ற அளவுக்கு உள்ள பொருள்கள் நிறைந்த அறையை, தனக்கு முன்னால் இருந்ததை, யாரோ திறந்து விட்டிருந்த போது, அந்த இடம் வெறுமையாகக் கிடந்தது போன்ற அழுத்துகின்ற சலிப்பினை அர்தமோனவ் திடீரென்று உணர்ந்தான். காதுகளை அடைத்துக் கொள்ளுமாறும், கண்ணை மறைக்கின்றவாறும் உள்ள கனத்த பனிமூட்டத்தில், உடற் சோர்வினையும், உடல் நலக் குறைவு மற்றும் சாவு பற்றிய அச்சுறுத்துகின்ற எண்ணங்களையும் ஏற்படுத்திய இதே போன்ற உடற் சோர்வு உள்ளத்திற்கு வெளியிலிருந்து கூட எப்போதுமே அவனிடம் வந்தது.

''நீங்களெல்லாரும் என்னை நோயாளி ஆக்குகிறீர்களா, என்னை ஒருபோதும் ஓய்வாக இருக்க நீங்கள் விடமாட்டீர்களா?'' என்பான்.

யாக்கவ் முணுமுணுத்தான்:

''நமக்குப் போதுமான தொல்லை இருக்கிறது...''

நதால்யாவோ கூச்சல் போட்டாள்:

''எங்களிடம் நிறையத் தொழிலாளர்கள், சுற்றித்திரிவதற்காக வீட்டை விட்டு வெளியே உன்னால் போக முடியாது! குடிவெறியும், ஆசார அழிவும்...''

அர்தமோனவ் சன்னலை நோக்கிச் சென்றான். வெளியே பழத் தோட்டத்தில், தனது முகத்தை உயர்த்தியபடி ஓர் ஆப்பிள் மரத்தை ஒரு சிறுமியிடம் தீஹன் வியாலவ் சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தான்.

''புதிதாகக் கண்டுபிடித்த ஆதாம்,'' என்று நினைத்தான் பியோத்தர் அர்தமோனவ், அவனது சோர்வு நீங்கியது. இத்தகைய புறச்சார்பான சிந்தனைகள் சில நேரங்களில் துள்ளிப்பாயும் சுண்டெலியைப் போல அவன் மனத்தின் ஊடாகப் பாய்ந்தோடும். அவற்றின் உடனடியான வருகைகளால் அவன் எப்போதுமே மகிழ்ச்சியடைந்திருக்கிறான். அவற்றை அவன் விரும்பினான், ஏனெனில் அவை அவனுக்குக் கவலையைத் தரவில்லை, வெறுமனே மின்னி மறைந்து விட்டன, அவ்வளவே தான்.

தீஹனும் கூட ஒரு பிரச்சினையாக இருந்தான்; ஓராண்டு காலத்திற்கு மேலாகக் காணாமற் போயிருந்த முற்றப் பாதுகாவலன், துறவி மடத்திலிருந்து நிகீதா காணாமற் போய் விட்டான், எங்கிருக்கிறான் என்பது யாருக்குமே தெரியவில்லை என்ற செய்தியுடன் வந்த திடீர்த் தோற்றத்தை அடுத்து அவனைத் தன் தம்பி ஏற்றுக் கொண்டதில் பியோத்தர் அர்தமோனவ் கொடுமையான முறையில் அவமானப் படுத்தப் பட்டான். நிகீதா எங்கே இருக்கிறான் என்பது இந்தக் கிழவனுக்குத் தெரியும் என்பதில் பியோத்தர் உறுதியாக இருந்தான், அதை அவன் ரகசியமாக வைத்ததற்கு ஒரே காரணம்—அடுத்தவர்களைச் சித்திரவதை செய்வதில் அவனுக்குள்ள ஒரே விருப்பந்தான். கிழவனுக்கான அலெக்ஸியின் பாதுகாப்பு பலமாக இருந்தும் கூட, கிழவன் குறித்து அலெக்ஸியுடன் எல்லாவித நியாயத்தோடும் அர்தமோனவ் சண்டையிட்டான்.

''உன் மூளையைப் பயன்படுத்து: இந்த மனிதன் தன் வாழ்நாள் முழுக்க நமக்காக வேலை செய்தான், இப்போது அவனை ஏற்றுக் கொண்டு, வெளியே துரத்துவதா? இப்படிச் செய்வது சரியானது தானா?'' என்று அலெக்ஸி நம்பிக்கை ஊட்டுவான்.

அது சரியில்லை என்பது பியோத்தருக்குத் தெரியும்; ஆனால் வீட்டைச் சுற்றி தீஹன் திரிவதை அவனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவன் மனைவி கூட, ஒரு வகையில் தன் வாழ்நாள் முழுவதிலும் முன் முறையாக அலெக்ஸியுடன் சேர்ந்து கொண்டாள். முற்றிலும் வழமை யற்ற ஓர் உறுதியோடு அவள் அறிவித்தாள்:

''இது சரியில்லை, பியோத்தர் இல்யீச். நீ என்னை அடிக்க முடியும், ஆனால் அது சரியில்லை!''

ஓல்காவின் உதவியோடு தடைச் சொல்லின்றி உடன் படுவதற்கு அவனிடம் அவர்கள் பேசினார்கள். ஆனால் புண்பட்டுப் போன, அவனுக்குள்ளாக உள்ள மனிதன், வெற்றி பெற்றிருந்தான்:

''அதோ! உன்னுடைய விருப்பம் என்பது ஒருவருக்கும் சட்டமாக இல்லை... பார்த்தாயா?''

அந்தப் புண்பட்ட மனிதன் மேன்மேலும் முன்னேறிக் கொண்டும், மேன்மேலும் தெளிவானவனாகவும் வளர்ந்து கொண்டு வந்தான். தனது கனத்த உடம்பை இழுத்துக் கொண்டு குன்றின் பக்கவாட்டில் ஏறி, பைன் மரத்திற்குக் கீழாகக் கிடந்த நாற்காலியில் அமர்ந்து, இந்தப் புண்பட்ட உயிரியைப் பற்றித் தனது இதயபூர்வமான இரக்கத்துடன் நினைத்துப் பார்ப்பான். இந்த மகிழ்ச்சியற்ற மனிதனை மனத்திற்குள்ளாகக் கற்பனை செய்து பார்க்கையில், அத் தனை நல்ல குணங்கள் இருந்தும் கூட அவன் புரிந்து கொள்ள முடியாததாகவும், பாராட்ட முடியாததாகவும் இருந்ததை எண்ண, மகிழ்ச்சியும் கசப்பும் ஒரு சேர எழுந்தது. கோடைக் காலத்தின் ஒரு நாள், சதுப்பு நிலத்திற்கு மேலாக நீலவா னத்தில் ஒன்று திரளும் வெண் மேகங்களைப் போல வெறு மனே சூனியத்திலிருந்து அவனை சுலபமாக உருவாக்கிக் கொண்டான்.

ஆலையையும், அதனைச் சுற்றிலும் உள்ளவற்றையும் பார்த்தபடி, அவன் வலியுறுத்திச் சொல்வான்:

''இத்தகைய கற்பனைகள் இன்றி, வாழ்க்கையை வித்தி யாசமானதாக வாழ்ந்திருக்க முடியும்.''

உற்பத்தியாளன் அர்தமோனவ் மறுத்துப் பேசுவான்:

''அது தீஹனுடைய பேச்சு.''

''கிலேப் பாதிரியாரும் இதையே சொன்னார், கொரித்ஸ் வேதவும் மற்றவர்களும் கூட. ஆமாம், சிலந்தி வலையில்

உள்ள ஈக்களைப் போலவே மனிதர்கள் போராடிக் கொண் டிருக்கிறார்கள்.''

''வெறுமையிலிருந்து உங்களால் எதையும் பெற முடி யாது,'' என்று உற்பத்தியாளன் தனது பதிலைத் தயார் செய்வான்.

சில வேளைகளில், ஒருவனுக்குள்ளாகவே உள்ள இரண்டு மனிதர்களுக்கிடையே இந்த ஊமை வாக்குவாதமானது சூடாக மாறி, புண்பட்ட ஒருவன், கருணையில்லாதபடி போய், சத்தம் போடத் தொடங்குவான்:

''நினைவிருக்கட்டும், சந்தையிலே நீ குடிவெறியில் இருந்த போது, அப்ரகாம் ஐசக்கைத் தியாகம் செய்த வழி யில், உன் மகனைத் தியாகம் செய்வது பற்றி நீ கத்தினாய், ஆட்டுக்கு பதிலாக நிகனோவ் பையன் உனக்குச் சுமையாய் வந்தான். நினைவிருக்கிறதா? உண்மைதான் அது. உண்மை! மேலும் அந்த உண்மைக்காக என்மீது ஒரு போத்தலை விட்டெறிந்தாய். ஐயோ, அப்போது என்னை நீ நசுக்கி னாய், என்னை நீ கொன்றாய்! என்னையும் கூட நீ தியாகம் செய்தாய். யாருக்காக இந்த தியாகத்தைச் செய்தாய், கூறு? நிகீதா கூறிய கொம்பு முளைத்த கடவுளுக்காகவா? அது அவருக்காகத் தானா? ஆ, நீ...''

விவாதம் மிகவும் தீவிரமானதான போது, உற்பத்தி யாளனான அர்தமோனவ், வெட்கத்தாலும் கோபத்தாலும் வெளியேறும் கொடிய கண்ணீரை மறைப்பதற்காகத் தனது கண்களை இறுக மூடிக் கொள்வான்; ஆனால் கண்ணீரோ கட்டுப்பாடில்லாதபடி வழிந்தோடியது. தனது உள்ளங்கை யால் கன்னங்களிலும், தாடியிலும் உள்ள ஈரத்தை அவன் தடவி விடுவான், பின்னர் உள்ளங்கைகள் காய்ந்து போ கின்ற வரை அவற்றை ஒரு சேர உரசிக் கொள்வான், வீங்கிப் போன சிவந்த கைகளைச் சோர்வோடு வெறித் துப் பார்ப்பான். மேலும் 'மதீரா' மதுவை நேரடியாகவே போத்தலினின்றும் ஒரே உறிஞ்சாகக் குடிப்பான்.

இன்னும், இந்த இரக்கத்திற்குரிய கண்ணீரை அவன் வடித்திருந்த போதிலும், புண்பட்ட மனிதன் வரவேற்கப் பட்டான், மூத்த அர்தமோனவுக்குத் தவிர்க்க முடியாதவ னாகி விட்டான்—நீராவிக் குளியலின் போது, மென்மை யான, சோப்பால் நன்கு சுத்தம் செய்யப்பட்ட துணியை, இதமான வெப்பத்துடன், தாங்கிக் கொள்ளக் கூடிய அள

யில் தன்னால் தொட முடியாத முதுகுப் புறத்தில் வைப்பது போல இது இருந்தது.

...திடீரென்று, சைபீரியாவுக்கு அப்பால் எங்கோ தொலைவில், ஒரு கனத்த முட்டியானது ருஷ்யாவிலே குத்தித் துளைத்தது.

தனது நாற்காலியில் மேலுங்கீழும் அசைந்தபடி, கையிலிருந்த செய்தித்தாளைச் சுழற்றியபடி அலெக்ஸி கத்தினான்:

"கடற் கொள்ளை! நெடுஞ்சாலை வழிப்பறித்திருட்டு!" பறவையின் வளைநகம் போன்ற கையை உயர்த்தி, விரல்களை மூர்க்கமாக நெறித்தவாறு, அவன் சீறினான்:

"அவர்களுக்கு நாம்... யாரென்று காட்டுவோம்..."

தங்கப் பல் கட்டிய டாக்டர், தனது கைகளைச் சட்டைப் பைகளுக்குள் வைத்தபடி, அடுப்பின் வெதுவெதுப்பான ஓடுகளில் சாய்ந்து கொண்டு முணுமுணுத்தான்:

"அவர்கள் யாரென்று நமக்குக் காட்டுவதற்குக் கூட வாய்ப்பு இருக்கிறது."

உண்மையில் செம்புபோல் சிவந்த தடித்துப் பருத்த இந்தப் பெரிய மனிதன் இகழ்ச்சியாகப் பேசினான். என்ன விஷயம் குறித்துப் பேசுகிறான் என்பதைப் பற்றிப் பொருட்படுத்தாது, அவன் எப்போதுமே இகழ்ச்சியாகத்தான் பேசினான். நோய் மற்றும் சாவு பற்றிப் பேசும் போதும் கூட இதே மாதிரியான கேலிப் புன்முறுவலுடன், சீட்டாட்ட மேசையில் தோல்வியுற்றவன் உதடுகளைப் பிதுக்குவது போல, பேசினான். தான் அந்நியனானதால், தன்னைச் சுற்றிலும் உள்ளவற்றைப் புரிந்து கொள்ள முடியாது திகைத்துப் போய் முறுவலிக்கும் ஒரு வெளி நாட்டவனை இது மூத்த அர்தமோனவுக்கு நினைவூட்டியது. அர்தமோனவுக்கு அந்த டாக்டரைப் பிடிக்கவில்லை, அவனிடத்தில் எந்த நம்பிக்கையும் அவன் வைத்திருக்கவில்லை, மிகுதியும் பேசாத நகரத்து மருத்துவரான ஜெர்மன் டாக்டர் குரோன் பணியினை நன்றாகச் செய்தார்.

ஒரு கொக்கைப் போல அறையில் மேலும் கீழும் மிரோன் நடை போட்டான், தன்னை மறந்தபடி தனது தாடியை முறுக்கி விட்டுக் கொண்டான், தலைவலி இருப்பது போல முகத்தைச் சுழித்துக் கொண்டு, ஒவ்வொருவருக்கும் அறிவுரை வழங்கினான்:

"இந்தப் பிரச்சினை ஆங்கிலேயர்களின் கூட்டு ஒப்பந்தத்தோடு தொடங்கப்பட்டிருக்க வேண்டும்..."

''என்ன பிரச்சினை?'' மூத்த அர்தமோனவ் வினவினான். சுறுசுறுப்பான அவனது தம்பியாலேயோ, புத்திசாலியான அவனது மருமகனாலேயோ எதற்காக இந்தப் போர் வெடித்திருக்கிறது என்பதை அவனுக்கு அறிவுபூர்வமாக விளக்க முடியவில்லை. தன்னம்பிக்கையும், எல்லாம் அறிந்தவர்களுமான இந்த இருவரையும் குழப்பத்தோடு பார்ப்பது மகிழ்ச்சி தரும் ஒன்றாக இருந்தது. குறிப்பாக வேடிக்கையூட்டும்படி அலெக்ஸி இருந்தான். அந்தளவுக்கு ஐயுறத் தக்கவாறு அவன் நடித்ததைக் கொண்டு, இந்த எதிர்பாராத போரினால் மிகவும் பாதிக்கப்பட்டவன் அலெக்ஸி அர்தமோனவ் எனவும், ஏதோ மிக முக்கியமான குறிக்கோளை அடைவதினின்றும் தடுக்கப்பட்டவன் எனவும் ஒருவர் சிந்தித்திருக்கக் கூடும். நகரத்தில் ஒரு சமய ஊர்வலம் ஏற்பாடு செய்யப்பட்டது. தாடி வைத்த வியாபாரிகள் பகட்டழகோடும், பக்திச் சிரத்தையோடும், தங்க ஜரிகை வைத்த அங்கியணிந்த பாதிரியார் கூட்டத்தை ஒட்டியபடி, புதிதாக விழுந்திருந்த பனிக்கட்டியின் மீது அழுத்தமாகக் கால் பதித்தபடி நடந்து சென்றார்கள். உருவச் சிலைகளும், நீண்ட கொடி வகைகளும் தலைக்கு மேலாக மிதந்தன, நகரத்திலுள்ள அனைத்துச் சர்ச்சுகளையும் சேர்ந்த இசைக் குழுவினர் அவசரமாக ஒரே மாதிரியாகப் பாடினர்:

''உமது மக்களைக் காத்தருளும், ஓ ஆண்டவரே...''

அதிகார பாணி போல இருந்த பிரார்த்தனைச் சொற்கள், வட்ட வடிவமான வாய்களினின்றும் வெளியேறிய போது, நீராவி மூச்சாய் வந்து, குழுப்பாடகர்களுடைய புருவங்களிலும் மீசைகளிலும் உறைந்தன, மேலும் ராகமில்லாதபடி திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்த வியாபாரிகளுடைய தாடிகளிலும் படிந்தன. வண்டி செய்யும் தொழிலாளியின் மகனும் நகரத் தந்தையுமான வரபோன்வ், குறிப்பாக மற்ற எல்லாரை விடவும் ராகமில்லாமலும் ஒத்து வராதபடியும் கிரீச்சிடுகின்ற மாதிரிப் பாடினான். உயரமாகவும், பளபளத்தக் கன்னங்களும், முத்துச் சிப்பியின் நிறங் கொண்ட கண்களும் கொண்ட அவன், தன் தந்தையிடமிருந்து சொத்துகளை மட்டுமல்லாது, அர்தமோனவ்களுடன் கொண்டிருந்த தீராப் பகைமையையும் சுவீகரித்துக் கொண்டிருந்தான்.

அவர்கள் ஏழு பேரும் ஒரு சேர வந்தார்கள். தன் மனைவியைக் கைப்பிடித்தபடி அலெக்ஸி அவர்களுக்கு முன்னால்

நொண்டியபடி வந்தான், பிறகு யாக்கல் தன் தாயாருடனும் ருத்யானாவுடனும் வந்தான், அடுத்து மிரோனும் பாக்ருடனும், அவர்கள் எல்லாருக்கும் பின்னால் மெதுவாக காலணி அணிந்து மூத்த அர்தமோனவ் வந்தான்.

''ஒரு நாடே,'' என்று மிரோன் மெதுவாகச் சொன்னான்.

''வலிமையின் ஓர் அணிவகுப்பு,'' என்று டாக்டரும் அவனுடன் சேர்ந்து கொண்டான்.

மிரோன் தனது கண்ணாடியைக் கழற்றி, கைக்குட்டையால் அதைத் துடைக்க ஆரம்பித்தான். டாக்டர் மேலும் கூறினான்:

''அவர்கள் துடைத்துக் கொண்டு போகப் போகிறார்கள். பொறுத்திருந்து பாருங்கள்!''

''இல்லை, கச்சாப் பொருள். அது ஒன்றும் விரைவாகப் பிடித்துக் கொள்ளாது...''

''பேசாமல் இரு,'' என்று மூத்த அர்தமோனவ் அவனிடம் கூறினான். மிரோன் அவனைப் பக்கப் பார்வை பார்த்தான். பிறகு, தனது நீண்ட மூக்கின் விளிம்புக்கு மேலாக விரலை ஓடவிட்டு, கண்ணாடியை உயரத் தூக்கிவிட்டுக் கொண்டான்.

''உமது மக்களைக் காத்தருளும், ஓ ஆண்டவரே!'' என்று அழுத்தமான குரலில் வரபோனவ் கோரிய போது 'மக்கள்' என்ற வார்த்தையை கிரீச்சிட்டுக் கூறினான். பின்னர் இணக்கமில்லாதபடி திரும்பி, நகரத்து மக்களைத் திரும்பிப் பார்த்தான், ஏதோ ஒரு காரணத்திற்காகத் தனது கம்பளித் தொப்பியை எடுத்து அவர்களை நோக்கி ஆட்டினான்.

பம்யாலவின் மகள் உரக்கவும் நன்றாகவும் பாடினாள். நாற்பது வயதாகியும், இளமையோடும், உருண்டு திரண்டும், உயர்ந்த மார்பகங்களோடும் காணப்பட்ட அவள், மூன்று முறை விதவையாகிப் போனவள், நாணமற்று, வெட்கக் கேடான வாழ்க்கை நடத்துவதில் நகரத்தில் முதன்மையாக இருந்தாள். நதால்யாவிடம் அவள் முணுமுணுத்ததை பியோத்தர் அர்தமோனவ் கேட்டான்:

''உறவுக்காரப் பெண்ணே, உன் கணவரை நீ ஏன் போருக்கு அனுப்பி வைக்கக் கூடாது? அவருடைய தோற்றம் அந்த மாதிரியானது, பார்த்த மாத்திரத்தில் எதிரிகள் ஓடிப்போவது நிச்சயம்.''

யாக்கவிடம் அவள் பேசினாள்:

''நீ ஏன் திருமணம் செய்து கொள்ளக் கூடாது—இளம் வீட்டுச் சேவல் போல் திரிகிறாய்?''

மூத்த அர்தமோனவ் தனது தலையை அசைத்தான். இந்தச் சொற்கள் எல்லாம் அவன் காதுகளிலே ஈக்களைப் போல இரைச்சலிட்டன, அவனது சிந்தனையைப் பெருமளவுக்கு பாதித்தன. அவன் வரிசையை விட்டு விலகிப் பக்க வாட்டில் நடந்து, மற்றவர்கள் தன்னைக் கடந்து செல்ல வழி விட்டான். அன்றைய நாளின் புத்தம் புதிய தூய்மையான பனியில் கருத்த உருவங்களைக் கொண்ட மக்கள் மேன்மேலும் அணிவகுத்துச் சென்றார்கள், அவர்களுடைய மூச்சு கொதிக்கின்ற சமோவாரிலிருந்து வெளிவருகின்ற வெள்ளை நீராவி போல இருந்தது.

உணர்ச்சியற்ற முகத்துடன், தலையை மூடிக் கொள்ளாமல், வேரா பபோவா பள்ளிச் சிறுமிகளை முன் நடத்திச் சென்று கொண்டிருந்தாள். அவளுடைய மென்மையான நரைத்த தலைமுடியில் விழுந்த பனித்துளிகள் மின்னின. அர்தமோனவை நோக்கி அவள் தலையை அசைத்த போது, பனிபடிந்த அவளது இமைகள் துடித்தன. அவளுக்காக அவன் இரக்கப்பட்டான்:

''முட்டாள். வாத்துக் கூட்டத்தை மேய்ப்பதற்குத் தன்னையே வாடகைக்கு விட்டுக் கொண்டிருக்கிறாள்.''

ஒட்ட வெட்டப்பட்ட தலைமுடி கொண்டவர்களின் தலைகள் ஒரு நீண்ட அலை போல உருண்டு சென்றது: நகரத்தின் இரு பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்கள் பிறகு பழுப்புத் துணி போர்த்தப்பட்ட அசைவற்ற எந்திரமாய், போர்வீரர்களின் கம்பெனியில் பாதிப் பேர், பனியுருகும் வசந்த காலத்திலிருந்து பனி படியும் குளிர் காலம் வரை ஒவ்வொரு நாளும் ஓகா நதியில் குளிப்பதனால் நகரம் முழுவதும் பேசிக் கொள்ளப்பட்டவனும், பம்யாலவாவுடன் வசித்து வந்தவன் என்ற முறையில் ஒவ்வொருவராலும் அறியப்பட்டிருந்தவனுமான, எளிதில் அமைதி குலையாத லெப்டினெண்ட் மாவ்ரின் தலைமையில் அணிவகுத்து வந்தார்கள்.

கொழுத்துப் போன குள்ள வாத்து மாதிரி இருந்த காவல்துறைப் பிரிவு அதிகாரியான நெஸ்தெரேன்கொ தனது சீனாக்காரன் மீசையுடன் வந்தான். அவனது நோயாளி மனைவி, காலஞ்சென்ற நகரத் தந்தையின் மகனும், அவ

...டைய தோல்பதனிடும் தொழிற்சாலையின் வாரிசுதாரு ... அவளது சகோதரன் ஜிதேய்கினுடன் கை கோத்து ...ந்து வந்தாள். இந்த ஜிதேய்கின் துறவிப் பெண்களோடு ...ந்தடித்த போதிலும் எழு நூறு புத்தகங்களைப் படித்து ...த்ததாகவும், சின்ன முரசு வாசிக்கும் கலையில் மிக ...நிலையில் தேர்ச்சி பெற்று விட்டான் எனவும், உண் ...மயில் இந்தக் கலையை அவன் போர்வீரர்களுக்கு ரகசி ...மாகக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தான் என்றும் ...பிக் கொண்டார்கள்.

கொழுத்துத் திரண்டிருந்த ஸ்தெபான் பார்ஸ்கி, தனது ...டிகார மருமகனுடனும், மாறுகண் மகளுடனும் ஸ்லெட்ஜ் ...ண்டியில் விரைந்து வந்தான். பிறகு இருளில், முடிவற்றுச் ...செல்லும் நீரோடை போலத் தாழ்ந்த நடுத்தர வகுப்பினர், ...தோல் பதனிடு தொழிலாளர்கள், நெசவாளர்கள், வண் ...டிப் பட்டறைத் தொழிலாளர்கள் இறுதியாக பிச்சைக்கா ...ர்கள், மற்றும் எலிகளை நினைவூட்டக் கூடிய தேவையற்ற ...ல கிழவிகள் ஆகியோரைக் கொண்ட கூட்டம் மெல்ல ...ர்ந்து வந்தது. மூடப்படாத தலைகளில் பனி மெதுவா ...ப் படிந்து கொண்டிருந்தது. தொலைவிலிருந்து வரபோ... ...னுடைய குரல் வந்து கொண்டிருந்தது:

"உமது மக்களைக் காத்தருளும், ஓ ஆண்டவரே!..."

"எதற்காகக் கடவுள் அவர்களைக் காப்பாற்ற வேண் ...ம்? எனக்கு எதுவும் தெரியவில்லை," என்று அர்தமோனவ் ...ந்தித்தான். அவன் நகரத்து மக்களை வெறுத்தான், வியா ...ரத் தொடர்புகளைத் தவிர, அவர்களிடம் வேறு எந் ...த் தொடர்புமே வைத்துக் கொள்ளவில்லை. தன்னைத் ...லைக் கனமும், சிடு மூஞ்சித்தனமும் கொண்டவன் என ...னைத்துக் கொண்டு, நகர மக்கள் தனது வெறுப்பையே ...னிடம் திரும்பக் காட்டினார்கள் என்பதையும் அவன் ...றிவான்; ஆனால் நகரத்தை அழகு படுத்த வேண்டும் ...ன்று வற்புறுத்தியமைக்காக முக்கியத் தெருக்களிலே ...ன்கிரீட் போட்டான், சதுக்கத்தைச் சுற்றி லின்டன் மரங் ...களை நட்டான், ஓகா நதிக் கரையில் பூங்கா அமைத்தான்— ...தற்கு அலெக்ஸியின் மீது அவர்கள் மிகப் பெரும் மரியா ...தை கொண்டிருந்தார்கள் என்பதையும் அவன் அறிவான். ...ரோனையும், யாக்கவையும் பொருத்த மட்டில், எல்லா ...வுகளுக்கும் அப்பாற்பட்ட பேராசைக்காரர்கள் என்றும், ...வர்களது கைகளில் எட்டக் கூடிய ஒவ்வொன்றின் மீதும்

கைவைப்பவர்கள் என்றும், நகர மக்கள் அவர்களிடம் பயந்தார்கள்.

சிந்தனைவயப்பட்ட மக்கள் மெதுவாக நகர்ந்து செல்வதை கவனித்த அர்தமோனவ் முகஞ் சுழித்தான்,—ஏராளமான அறிமுகமில்லாத முகங்கள் தென்பட்டன; அநேகக் கண்கள், அதே வெறுப்புணர்ச்சியோடு அவன் பக்கமாகத் திரும்பின.

அலெக்ஸியின் வாசலில், தீஹன் அவனுக்கு வணக்கம் தெரிவித்தான். அர்தமோனவ் கேட்டான்:

''என்ன, கிழவா, ஆக, நாங்கள் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறோம்?''

அமைதியாக, வழக்கமான, பழகிப்போன உடற் பாவனையுடன், தனது கனத்த கையைத் தூக்கி தனது கன்னத்தைத் தேய்த்து விட்டுக் கொண்டான் தீஹன். அவர்கள் ஒன்று சேர்ந்திருந்த இத்தனை ஆண்டுகளிலும் முதன் முறையாக, அவன் மீது உள்ள நம்பிக்கையுடன் அர்தமோனவ் கேட்டான்:

''அது பற்றி நீ என்ன நினைக்கிறாய்?''

''குழந்தைகள் விளையாட்டு,'' இந்தக் கேள்வியை அவ்வளவு நிச்சயமாக அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது போல, வியாலவ் பதிலளித்தான்.

''ஒவ்வொன்றுமே உனக்குக் குழந்தையின் விளையாட்டுத்தான்,'' என்று தெளிவற்றவனாக அர்தமோனவ் சொன்னான்.

''உண்மைதான். நாமெல்லாம் யார்—நாய்கள்? முரட்டுத்தனமான விலங்குகள் அல்லவே.''

இறுகிப் போய் மெல்ல விழும் பனியின் ஊடாக அர்தமோனவ் நடந்து சென்றான். கருத்துத் தோன்றும் கும்பலானது இப்போது வெகு தூரம் முன்னே போய்விட்டிருந்தது, மரங்களும், வீட்டுக் கூரைகளும் வெண்பனி முகடுகளால் அணிவகுத்துத் தோன்றுவதற்கும் அப்பால் கிட்டத்தட்ட மறைந்து போகின்ற வரை அது பலமாக விழ ஆரம்பித்தது.

ஆறுதல் தருபவன் ஸெரஃபீம் இறந்து போய் விட்ட நிலையில் இப்போது பாதிரியின் விதவை தயீஸியா பரக்லீதவாவிடம் அர்தமோனவ் ஆறுதல் பெறத் தொடங்கியிருந்தான்; மெலிந்தும், வயதைச் சொல்ல முடியாத அவள் நங்கை போலவும், கருத்த வெள்ளாடு மாதிரியும் தோற்ற

...ளித்தாள். அமைதியான ஆத்மாவுடையவளாக இருந்தாள், அவன் சொன்ன ஒவ்வொன்றையும் அவள் எப்போதுமே ஏற்றுக் கொண்டாள்.

''அது சரிதான், அன்பு இதயமே,'' என்று அவள் கூறுவாள். ''ஆமாம், அன்பு இதயம், ஆம் உண்மைதான்!''

அத்து இல்லாமல் அர்தமோனவ் குடித்தான், ஆனால் அதன் விளைவோ மெதுவாகத்தான் இருந்தது; அவனது நிலைத்த, துக்கமான நினைவுகள் தயீஸியாவின் ருசிமிக்க, வாசனையான மதுவகைகளின் முன் ஆவியாகிக் கரைந்து போவதற்கு நீண்ட நேரம் பிடித்தது; அதனால் அவன் எரிச்சலடைந்தான். தன்னைப் பற்றியும் பிறரைப் பற்றியும் அவன் கொண்டுள்ள எண்ணங்களை மிகவும் எரிச்சலும், கசப்பும் உடையதாக்கி, பாசிபடிந்த அழுவத்திலே தன் வாழ்வைப் புகுத்தி, அந்த அழுவத்தின் நீர்ச் சுழி தன்னைச் சுழற்றிக் கிறங்க வைப்பது போல குடித்து முடித்த முதல் நிமிடங்களில் காணப்படும். ஆனால் அடுத்த நிமிடங்களில் எங்கோ எல்லையற்ற செங்குத்துப் பாறைக்கு மேலாகத் தன்னைத் தூக்கிப் போடுவது போலத் தோன்றும். தனது பற்களை நறநறவெனக் கடித்தபடி, தனக்குள்ளாக இருக்கும் இருளார்ந்த கலக்கத்தை உற்றுக் கேட்பான், உற்றுப் பார்ப்பான் அவன்.

பிறகு அந்த விதவையை நோக்கி அவன் கர்ஜிப்பான்:

''ஏன் எதுவுமே சொல்ல மாட்டேன் என்கிறாய்? புதியது ஏதேனும்?''

அந்தப் பெண் வெள்ளாட்டைப் போல விரைவோடு, அவனது முழங்காலின் மீது குதித்து அமர்வாள். வியப்படையும்படி அவள் எடைகுறைந்தும் வெதுவெதுப்பாகவும் இருந்தாள். கண்ணுக்குத் தெரியாத புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டி அவனுக்குப் படித்துக் காட்டுவாள்:

''பம்யாலவா தனது தேட்டையெல்லாம் லெப்டினெண்ட் மாவ்ரினிடம் கொடுத்திருக்கிறாள். அவனோ முன் நூற்று இருபது ரூபிள்களை சீட்டாட்டத்தில் திரும்பவும் இழந்தான். அவனிடமிருந்து அவள் நோட்டெழுதி வாங்கப் போகிறாளாம். மேலும் அந்த அதிகாரி தனது மனைவியை நகரத்தில் வைத்துக் கொள்ளவில்லை, ஏனெனில் அவள் நோயாளியாம். மேலும் அங்கே அவனுக்கு ஓர் ஆசைநாயகி இருந்ததும் காரணமாகும்...''

''அது ஓர் அழுக்கு மூட்டை,'' என்பான் அர்தமோனவ்.

''அழுக்கா எப்படி, என் அன்பே!''

நகரத்து மக்களைப் பற்றி அவள் வம்பளப்பது அர்த மோனவினுடைய குழப்பமடைந்த சிந்தனைகள் மாறுபட்ட வழிகளில் செல்ல வைத்தது; அருவருக்கத்தக்க அந்த நகரத்துப் பாவிகளின் மீது அவனுக்கிருந்த வெறுப்பை அது நியாயப்படுத்தவும் உறுதிப் படுத்தவும் செய்தது. பழைய சிந்தனைகள் இருந்த இடத்தில், சந்தையின் மூர்க்கத்தனமான காட்சிகள் தோன்றி அவன் நினைவிலே வட்டமிடும். பைத்தியம் பிடித்தது போல ஆட்கள் அங்குமிங்கும் குடிவெறியில் போய்வருவது, பேராசையோடு பிதுங்கிக்கொண்டிருக்கும் கண்கள், எல்லாத் தடைகளையும் உடைத்தெறிந்து, எதையும் பொருட்படுத்தாது பணத்தை எரிக்கின்ற அளவுக்குச் சென்ற காமவெறியின் விளையாட்டு, கருத்த பின்னணியில் வெள்ளை நிறத்தில் தடித்த பெண் மினுமினுத்தவாறு, வெட்கமற்றபடி ஆடையின்றி...

பியோத்தர் அர்தமோனவ் வேறுபட்ட வண்ணங்களிலான சாராயத்தை அமைதியாகப் பருகுவான், காளான் ஊறுகாய்களை மென்று தின்பான், குடிவெறியின் பரபரப்பு ஒவ்வொரு நரம்பிலும் ஏற்படுகையில், தனது வலிமையினாலும், எதார்த்தத்தினாலும் அஞ்சத்தக்கதான உலகத்தின் மிகப் பெரிய நன்கொடை, பணமும் பதவியும் கொண்டவர்கள் தங்களது பணத்தையும், வெட்கத்தையும், உடல் நலத்தையும் யாருக்காகக் காற்றிலே பறக்க விட்டார்களோ, சந்தையிலே பணத்திற்காகத் தனது உடம்பைக் காட்டிய அந்த வெட்கங்கெட்ட பெண்ணிடம் தான் அடங்கியிருக்கிறது என்பதாக உணர்வான். அவனைப் பொருத்தமட்டில் இந்தக் கருத்த வெள்ளாட்டைத் தவிர வாழ்க்கையில் எதுவுமே எஞ்சி நிற்கவில்லை.

''உன் ஆடைகளைக் கழற்று, ஆடு!'' என்று கர்ஜிப்பான்.

''இசையில்லாமல் நான் எப்படி ஆட முடியும்?'' என்று பதிலளித்தபடி, தனது ஆடையின் பொத்தான்களைத் தட்டித் தடவித் தேடுவாள். ''அந்த வேடுவன் நாஸ்கோவை நாம் இங்கே அழைத்திருந்திருக்க வேண்டும். அக்கார்டியன் வாசிப்பதில் அவன் கைதேர்ந்தவன்...''

இம்மாதிரியான பொழுது போக்குகளிலே, தெரியாதபடியே நாட்கள் உருண்டோடின; சேறாக ஓடும் அவர்களுடைய வாழ்க்கையில் ஏதேனும் ஒரு விநோத நிகழ்ச்சி மட்

டுமே அவ்வப்போது அவர்களிடையே சவாலாகத் தோன் றும். இவ்வாறாகத் தான் குளிர் காலத்தின் போது, செயின்ட் பீட்டர்ஸ்பர்க்கின் தொழிலாளர்கள் அரண்மனையைத் தகர்க்கவும் ஜாரைக் கொல்லவும் விரும்புகிறார்கள் என்ற அறிக்கைகள் வந்தன.

தீஹன் வியாலவ் முணுமுணுப்பான்:

''அவர்கள் சர்ச்சுகளைக் கூடத் தகர்த்தெறியப் போகிறார்கள். உண்மை. மக்களால் எவ்வளவு தாங்கிக் கொள்ள முடியும் என்பதற்கு ஓர் அளவு இருக்கிறது.''

கோடையின் போது, ருஷ்யக் கடற் பிராந்தியத்தில் நின்ற ருஷ்யக் கப்பல் ஒன்று, கடற்கரையிலிருந்த நகரங்களை நோக்கிச் சுட்டது என்ற பேச்சு அடிபட்டது. தீஹன் சொன்னான்:

''உண்மைதான். போரிடும் பழக்கம் அவர்களிடம் இருக்கிறது.''

திரும்பவும் தெய்வ உருவச்சிலைகள் ஊர்வலமாக எடுத்துச் செல்லப் பட்டன. துருப் போன்ற பழுப்பு நிறக் கோட்டு அணிந்த வரபோனவ், ஜாருடைய ஓவியம் ஒன்றை உயரமாகத் தூக்கிப் பிடித்தபடி குரல் எழுப்பினான்:

''உமது மக்களைக் காத்தருளும், ஓ ஆண்டவரே!''

முன்னைக் காட்டிலும் இப்போது அவன் உரத்த குரலில், அதிகக் கோபமாகக் கத்தினான்; எனினும் உதவி வேண்டிய அவனுடைய நீட்டி முழக்கிய குரலிலே ஒரு கவலை ஒலித்தது.

தொப்பியணியாது செந்நிறமான தனது வழுக்கைத் தலையைக் காட்டியபடி குடிவெறியோடு தோல் பதனிடு தொழிலாளர்களுக்குத் தலைமை தாங்கி வந்த ஜிதேய்கின் தனது கைகளில் இரட்டைக் குழல் துப்பாக்கி ஒன்றை ஏந்தியபடி, அவதூறாகக் கர்ஜித்துக் கொண்டிருந்தான்:

''கூட்டாளிகளே! ருஷ்ய நாட்டை யூதர்களிடம் கொடுத்து விட வேண்டாம்! ருஷ்யா யாருக்குச் சொந்தம்? நமக்குத் தான்!''

''நமக்குத் தான்,'' என்று உரக்கக் கத்திய தோல் தொழிலாளர்களும் குடித்திருந்தார்கள். தங்களுடைய பழைய எதிரிகளான நெசவாளர்களைச் சந்தித்த போது சண்டையில் இறங்கி விட்டார்கள், டாக்டர் யாக்கவ்லெவை ஒரு குச்சியால் அடித்தார்கள், மருந்து வியாபாரியான கிழவன் ஓகாநதியிலே தூக்கி எறியப்பட்டான். ஜிதேய்கின் மருந்து வியா

பாரியின் மகனை நகரம் முழுக்கத் துரத்தி, அவனை நோக்கி இரு முறை சுட்டான். எனினும், அவனது குறி தவறிப் போய் விட்டது, சில குண்டுகளோ தையல்காரனான புருஸ் கோவின் பின் புறத்தில் பாய்ந்தது.

ஆலையில் வேலை நின்றுபோனது. இளம் நெசவாளிகள் தங்களுடைய சட்டைக் கைகளைச் சுருட்டி விட்டுக்கொண்டு, மிரோனும் மற்ற புத்திசாலித் தொழிலாளர்களும் வற்புறுத்திக் கூறியதைச் செவிமடுக்காமல், பெண்களுடைய கதறல் களையும் கண்ணீரையும் பொருட்படுத்தாமல் நகரத்தை நோக்கி ஓடினார்கள்.

ஆட்களில்லாமல் ஆலை வெறிச்சோடிக் கிடந்தது. காற்றுக்கு முன்னால் அது ஒடுங்கி நிற்பது போலவும், அதுவும் புரட்சி செய்வது போல ஊளையிடவும், அலறவும் தொடங்கிற்று; பனி மழையினால் தொழிற்சாலையின் சுவர்கள் படபடத்தன, பிறகு புகைப் போக்கியின் மீது பனி படியத் தொங்கி, கண நேரத்திற்குப் பிறகு அது அழித்துக் கொண்டு போயிற்று.

சன்னலருகே அமர்ந்து, நகரத்திற்குச் செல்லும் பாதையை வெறித்துப் பார்த்த போது, ஆண்களும் பெண்களுமாகக் கருத்த உருவங்களாய் எறும்புபோல இங்குமங்கும் போய்வந்து கொண்டிருப்பதை மூத்த அர்தமோனவ் கண்டான். கண்ணாடியின் ஊடாக அவனது காதுகளை எட்டிய கூக்குரல்களால், மக்கள் மகிழ்ச்சியோடு இருந்ததாகத் தோன்றியது. வெளி வாசலில், தொழிலாளர்களின் கும்பலில் ஓர் அக்கார்டியன் கிரீச்சிட்டுக் கொண்டிருந்தது, நொண்டி வாஸ்கா குரோதவ் பாடினான்:

உலகத்திலே இடமோ சுருங்கிப் போனது
ஜப்பானியர் மீதே சண்டையிட்டோம்!
ஒவ்வொரு தரமும் முகத்தில் குத்துகிறார்கள்
நாமோ சிலையால் விரட்டியடிப்போம்!

மிகப் பெரிய சமோவாரில் ஊற்றப்பட்ட ஓர் ஏரித் தண்ணீர் முழுக்கவும் குமிழியிட்டுக் கொதிப்பது போல, நகரத்திலிருந்து வந்த காற்று மொறுமொறுக்கின்ற முணுமுணுப்பைக் கொண்டு வந்தது. ஒற்றைக் கண் டாக்டரின் உதவியாளனாகிய மரோஸவ், ஓட்டுநர் இருக்கையில் அமர்ந்திருக்க, அலெக்ஸியினுடைய வண்டி வெளிவாசலில் திரும்பியது. ஒரு சால்வையால் தன்னைச் சுருட்டிக்கொண்டு ஓல்

கா வெளியே தாவிக் குதித்தாள். பயந்து போன அர்த மோனவ் துள்ளிக் குதித்து எழுந்து நின்றான், தனது கால் வலியைக் கூட மறந்தவனாய் அவளைச் சந்திப்பதற்கு விரைந்தேகினான்.

"என்ன ஆயிற்று?"

சிறகடிக்கும் கோழியைப் போலத் தன்னை உலுக்கிக் கொண்ட அவள் கூறினாள்:

"அந்தத் தோல் தொழிலாளர்கள் நமது சன்னல்களை நொறுக்கித் தள்ளிவிட்டார்கள்..."

அவள் கடந்து செல்வதற்கு அர்தமோனவ் பக்கவாட்டில் ஒதுங்கி நின்றான். ஒரு கேலி முறுவலிப்புடன், அவன் முணுமுணுத்தான்:

"அதோ!.. அவர்களுடைய பேச்சுக்களால் என்ன வருகிறதென்று பார்! என்னைப் பார்த்துக் கத்தினார்கள்—விஷயங்கள் எப்படி மாறிவிட்டன! இல்லை, ஜார்..."

ஆனால், அதற்கு முன்னர் அவள் பேச்சை அவன் கேட்டிராதது போல திடீரென்று ஓல்கா உரக்கக் கோபத்தோடு பேசினாள்:

"பேச்சை விடு! உன்னுடைய ஜார் ஒன்றும் நேர்மையானவன் அல்ல!"

"ஜார்களைப் பற்றி உனக்கு அதிகந்தான் தெரியும்," என்று தடுமாற்றத்தோடு அவன் திருப்பிச் சொன்னான், அவனுடைய கை காதை நோக்கி உயர்ந்திருந்தது.

எப்போதுமே அவ்வளவு அமைதியாகவும், கண்டிப்பதற்கு அவ்வளவு விருப்பமில்லாமலும் இருந்த, மூக்குக் கண்ணாடி அணிந்திருந்த கிழவி ஓல்காவின் கோபத்தால் அவன் பிரமித்துப் போய் விட்டான். ஓர் எலியைப் பார்க்காதபடியும் அதற்குத் தீங்கு செய்ய வேண்டும் என்ற எண்ணமில்லாதபடியும் ஒரு காளை மாடு தற்செயலாக அந்த எலியினுடைய வாலை மிதித்து விட்டபோது அதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பது போலக் கிரீச்சிடுகின்ற அதனது எதிர்ப்பு முக்கியத்துவமற்றும், பயனற்றும் காணப்படுவது போல அவளது கோபத்தில் நேர்மை இருப்பது போலத் தோன்றினாலும் அர்த்தமற்றுக் காணப்பட்டது. அர்தமோனவ் திரும்பவும் தனது நாற்காலியில் அமர்ந்து, சிந்தனையில் மூழ்கிப் போனான். அநேக வாரங்களுக்கு முன்னால் அவள் மகனோடு சண்டையிட்டுக் கொண்ட பிறகு, அதிலிருந்து அவனை நேருக்கு நேராகச் சந்திப்பதையே தவிர்த்து வந்த

நிலையில் சிறிது காலமாகவே அவன் ஒல்காவைப் பார்க்காது இருந்து வந்தான். கோடைக் காலத்தின் இறுதி வாக்கில், வீங்கிய கால்களுடன் பியோத்தர் அர்தமோனவ் படுக்கை யோடு கட்டுண்டு கிடந்தான். அதிகாரத் தோரணையில், வியர்த்துக் கொட்டியபடி வந்திருந்த வரபோனவ், தனது தடித்த நீல நிறமான உதடுகளைச் சப்புக் கொட்டியவாறு, ஜார் மன்னன் உறுதியாக இருக்க வேண்டும், அவரது அதி காரத்தை வேறு யாருக்கும் அளித்துவிடக் கூடாது என வேண்டிக் கொள்ளும் தந்தியில் அர்தமோனவைக் கை யெழுத்திடுமாறு கேட்டான். நகரத் தந்தையினுடைய இந்தத் தன் மூப்புடைய செயல் அர்தமோனவுக்கு மிகப் பெரும் வியப்பைத் தந்தது; ஆனால் தனது செயல் அலெக்ஸிக் கும் மிரோனுக்கும் எரிச்சல் உண்டாக்கும் என்பதிலும், வர போனவுக்கு பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து கடுமையான எச்ச ரிக்கை கிடைக்கும் என்பதிலும் உறுதியாக இருந்தும் அவன் கையெழுத்திட்டான். அவனைக் கேட்காத இடத்தில் அவன் தன்னைத்தானே நுழைத்துக் கொள்கிறான், தனக்கு அப் பாற்பட்ட விஷயங்களில், தடித்த உதடுகளைக் கொண்ட இம்முட்டாள் தன் மூக்கை நுழைத்துக் கொள்கிறான்!

வரபோனவ் பத்திரத்தை மடித்து வைத்துவிட்டு, தனது கோட்டுப் பொத்தான்களைக் கழுத்து வரை மாட்டிக் கொண்டான். அலெக்ஸி, மிரோன், டாக்டர் மற்றும் யூதர் களால் தூண்டிவிடப்பட்ட அனைவர் பற்றியும், சிலர் அறி யாமையாலும், மற்றவர்கள் சொந்த அக்கறையால் உந்தப் பட்டும் ஜாருக்கு எதிராக வேலை செய்து கொண்டிருந் தார்கள் என்று அவன் குறை சொல்லத் தொடங்கினான். மகிழ்ச்சியை எதிர்பார்க்கின்ற உணர்ச்சியோடு இந்தப் புகார்களை மூத்த அர்தமோனவ் செவிமடுத்து, தனது சம் மதத்திற்குத் தலையாட்டினான். ஆனால் வேரா பபோவா குறித்து நச்சுக் கருத்துகளை அந்த நீலநிற உதடுகள் பேசிய போது அவன் கண்டிப்பாகச் சொன்னான்:

''வேரா நிகலாயெவ்னாவுக்கு இதோடு தொடர்பு ஏதும் இல்லை.''

''ஏதும் இல்லையா? இதெப்படி? எங்களுக்குத் தெரி யும்...''

''உனக்கு எதுவுமே தெரியாது.''

''மேலும் நீங்கள் தொல்லையில் மாட்டப் போகிறீர் கள்,'' என்று அச்சுறுத்தி விட்டு நகரத் தந்தை சென்றார்.

அதே மாலை அர்தமோனவினுடைய மருமகனும் மக னும் அவனைத் தாக்கினார்கள், அவனது வயதைக் கூடப் பொருட்படுத்தாது, நாய்களைப் போல அவன் மீது குரைத்தார்கள்.

''என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், அப்பா?'' என்று இரைந்தாள் தத்யானா, அவளது அழகற்ற முகத்திலே பைத்தியம் பிடித்தது போலக் கண்கள் உருண்டன. சன்னல் அருகே நின்ற யாக்கவ் கண்ணாடியில் தாளம் போட்டான். தன் மகன் கூட தனக்கு எதிராக இருக்கிறான் என்று அர்த மோனவுக்குத் தோன்றியது. மிரோன் கிண்டலோடு கேட்டான்:

''தந்தியிலே என்ன சொல்லப்பட்டிருந்தது என்பதை நீங்கள் படித்தீர்களா?''

''நான் படிக்கவில்லை!'' என்றான் அர்தமோனவ். ''நான் அதைப் படிக்கவில்லை, ஆனாலும் என்ன சொல்லப் பட்டிருந்தது என்பது எனக்குத் தெரியும்: நாய்க் குட்டிகள் அவிழ்த்து விடப்படக் கூடாது!''

மிரோனும் தத்யானாவும் குமுறுவதைக் காண அவன் விரும்பினான்; ஆனால் யாக்கவினுடைய மௌனம் கவலையையுண்டாக்கியது. தன் மகனுடைய வியாபார அறிவிலே அவனுக்கு நம்பிக்கை இருந்தது, ஒருவேளை, அவனது விருப்பங்களுக்கு மாறாக அவன் செயல்பட்டிருக்கலாம் என்பது போலத் தோன்றியது. ஆனால் யாக்கவினுடைய போக்குக் குறித்து எந்த நேரடியான கேள்வியும் கேட்டு அவனை விவாதத்திற்குள் இழுப்பதை அவனது செருக்கு இடந்தரவில்லை. படுக்கையில் படுத்து வேதனையோடு முணுமுணுத்துக் கொண்டிருந்தான், அதே வேளை மிரோன் தனது பெரிய மூக்கை அலைத்தபடி மேன்மேலும் அவனை நச்சரித்தான்:

''உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லையா? ஜாரைச் சுற்றி ஒரு சுரண்டல் கூட்டமே இருக்கிறது. நேர்மையான ஆட்களால் அவர்கள் மாற்றியாகப் பட வேண்டும்...''

அந்த நேர்மையான ஆட்களில் தானும் ஒருவனாக இருக்க மிரோன் விரும்புகிறான் என்பதையும், அரசாங்க டூமா தேசிய அவையிலே மிரோனை ஓர் உறுப்பினராக நியமிக்க யாரையோ பார்க்க அலெக்ஸி மாஸ்கோ சென்றிருந்தான் என்பதையும் அர்தமோனவ் அறிந்திருந்தான். இந்த உயரமான கால்களைக் கொண்ட கொக்கு ஜாருக்கு

அருகிலே இருப்பதை கற்பனை செய்து பார்ப்பது வேடிக்கையாகவும், அதே சமயம் அச்சமூட்டுவதாகவும் இருந்தது. தனது சட்டைக் கழுத்துப் பகுதி தொளதொளக்க, தலை முடி அலங்கோலமாய் இருக்க திடீரென்று உள்ளே நுழைந்த அலெக்ஸி வளவளவென்று பேசத் தொடங்கினான்:

''நீ என்ன செய்து கொண்டிருப்பதாக நினைக்கிறாய், பைத்தியம் பிடித்த மனிதனே?''

ஓர் எழுத்தரிடம் கத்துவது போலக் கூச்சல் போட்டான்.

''நீ நாசமாய்ப் போக!'' என்று கர்ஜித்தான் பியோத்தர் அர்தமோனவ். நீ எனக்குப் பாடம் புகட்ட விரும்புகிறாயா? நீங்கள் எல்லாருமே நரகத்துக்குப் போகலாம்! வெளியே போங்கள்!''

இந்தத் திடீர் கோபத்தால் அவனே திடுக்கிட்டுப் போனான்.

நகரத்தில் நடந்த கலவரங்களை ஓல்கா விவரித்துக் கொண்டிருந்த வேளையில், தனது மூலையில் அமர்ந்து, அன்றைய சண்டையில் யார் செய்தது சரி அவனா, மற்றவர்களா என்பதைப் புரிந்து கொள்ள முயற்சித்துக் கொண்டிருந்தான்.

சிறுபிள்ளைத்தனமான உணர்வுடன் ஓல்கா கூறியவற்றால் அவன் குறிப்பாகக் கலவரமுற்றுப் போய் இருந்தான். மேலும் இப்போதோ அவள் பரிவு கலந்த தொனியில் சாந்தமாகப் பேசிக் கொண்டிருந்தாள்:

''நமது நெசவாளர்கள் எவ்வளவு அருமையானவர்கள்! வரபோனவினுடைய தொழிலாளர்களையும், தோல் தொழிலாளர்களையும் கண நேரத்தில் அப்பால் துரத்தியடித்தார்கள், இப்போது வீட்டைப் பாதுகாப்பதற்காக அவர்கள் அங்கே தங்கியிருக்கிறார்கள்...''

நதால்யாவோ பெருமளவு நடுக்குற்றாள், கோபமாகச் சிணுங்கினாள்:

''உங்களுடைய வீட்டில் இருந்துதான் எல்லாத் தொல்லைகளுமே தொடங்கின. உங்களுக்கு வேண்டும்! எல்லாமே உங்களால் ஏற்பட்டவை தான்.''

'வணக்கம்' என்று கூறாமல் கூட மிரோன் உள்ளே நுழைந்தான். அறையில் மேலுங் கீழும் துள்ளுநடை போட்டபடி, அச்சுறுத்தலைக் காட்டுவதுபோலப் பேசத் தொடங்கினான்:

''கூட்டத்தினர்க்குக் கலகம் செய்யக் கற்றுக் கொடுத்

..நற்காக அந்த வரபோனவ்களும், ஜிதேய்கின்களும் சரி யாகப் பெறத்தான் போகிறார்கள். அதிலிருந்து அத்தலை லபமாக அவர்களால் தப்பி விட முடியாது. எதிர்த்தாக்கு வரப்போகிறது! இல்யா பெத்ரோவிச் அர்தமோனவினு டைய நண்பர்களால் கலவரத்திற்குச் சொல்லிக் கொடுக் கப்பட்டதே போதுமானது இருக்கிறது, அதோடு இவர்களும் சேர்ந்து விட்டால்...''

பியோத்தர் அர்தமோனவ் பேசவில்லை.

வரபோனவினுடைய மனுவைத் தொடர்ந்து ஏற்பட்ட சண்டையிலிருந்து மிரோன் மீதான இவனது வெறுப்பு மொத்தத்தில் தேற்றமுடியாதபடி ஆயிற்று. மேலும் ஆலை யானது, இவன் பார்த்தது போல, இந்த மனிதனுடைய கைகளில் தான் முழுமையாக இருந்தது. மிரோன் தொழிலை திறமையோடும், தன்னம்பிக்கையோடும் நடத்தினான். நக ரத்தில் இருக்கின்ற வேலையாட்களைக் காட்டிலும் அவர் களுடைய தொழிலாளர்கள் இவனிடம் மரியாதை காட்டி னார்கள் அல்லது பயந்தார்கள், மிகவும் பணிவோடு நடந்து கொண்டார்கள்.

கனமாக பனிவிழுந்ததும், காற்று இல்லாமற் போயிற்று. நேராகவும் விரைவாகவும் விழுந்த பெரிய பனிக் கட்டிகள் முற்றம் பார்வைக்குத் தெரியாதபடி சன்னலை வெண்மைத் துகள்களால் மூடிமறைத்தன. பியோத்தர் அர்தமோனவி டம் யாருமே பேசவில்லை, தன் மனைவியைத் தவிர மற்ற அனைவருமே ஒவ்வொன்றுக்கும்—ஒழுங்கீனங்கள், மோசமான காலநிலை, ஜாரினுடைய விநோதமான ஊழல் இப் படி—அவன் மீது குற்றம் சுமத்துவதை அவனால் உணர முடிந்தது.

''யாஷா எங்கே?'' என்று ஆர்வத்தோடு தாய் வினவி னாள். ''யாஷா எங்கே என்று கேட்கிறேன்.''

தன் பெரியம்மாவின் கண்களைத் தவிர்த்தபடி மிரோன் வெறுப்பானதாக முகத்தை வைத்துக் கொண்டு பேசினான்:

''நகரத்திலுள்ள அவனுடைய கோழிக் கூண்டில் அவன் கட்டாயம் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும்.''

''என்ன? எங்கே?'' என்று அச்சத்தோடு நதால்யா முணு முணுத்தாள்.

அர்தமோனவ் சிந்தித்தான்:

''முட்டாள்! யாக்கவினுடைய ஆசைநாயகியைப் பற்றி அவள் அறிந்து கொண்டதாகத் தெரியவில்லை.''

திடீரென்று அவன் உறுதியோடு பேசினான்:

''இதைக் கேளுங்கள்: நீங்கள் விரும்புவது போல வாழுங்கள்! உங்களுக்குச் சரியென்று தெரிவதைச் செய்யுங்கள். ஆமாம். உண்மைதான், நான் புரிந்து கொள்ளவில்லை. நான் கிழவனாகி விட்டேன். ஆனால் இங்கே... இங்கே அது சாத்தானின் வேலை. இத்தனை ஆண்டுகளிலும்... ஒரு விஷயத்தை நான் புரிந்து கொள்ளவில்லை...''

## 4

தனது இருபத்தாறு வயது வரையிலும், குறிப்பிட்டுச் சொல்லும் படியான எந்தவித மகிழ்ச்சியற்ற அநுபவங்களும் குறுக்கிடாதபடி, யாக்கவ் அர்தமோனவ் வசதியாகவும் அமைதியான வாழ்க்கையும் வாழ்ந்தான். ஆனால் அமைதி விரும்பிகள் அனைவருக்குமே எதிரியாகிய அந்தப் பொல்லா நேரம் ஒரு நாள் வந்த போது யாக்கவை அதனது கைக்கருவியாக்கி சிக்கலானதும், நியாயமற்றதுமான விளையாட்டைத் தொடங்கி வைத்தது. நீண்ட காலம் பொறுத்திருந்த மக்களை உலுக்கி எடுத்த அந்தக் கலகங்கள் நடந்து மூன்றாண்டுகளுக்குப் பிறகு ஓர் ஏப்ரல் மாதத்திய இரவில் அது ஆரம்பமானது.

தனது வாழ்க்கையில் மற்ற எதைக் காட்டிலும் பெரிதாக மதித்த, அதுதான் வாழ்க்கையின் ஒரே நோக்கம், இலட்சியம் என்று அவன் மனத்துக்குப் பட்ட, எல்லா விருப்பங்களுமே நிறைவேறிய ஒரு மனநிலையில் திளைத்தபடி யாக்கவ் புகைத்தபடி சோஃபாவின் மீது படுத்திருந்தான். ஓர் அருமையான சாப்பாட்டிற்குப் பிறகு, ஒரு பெண்ணை அநுபவித்து மகிழ்ந்த பிறகு ஏற்பட்ட இந்த மன நிறைவு கூட அதுபோல மகிழ்ச்சி தருவதாகவே இருந்தது.

அறையின் நடுவே மேசைக்கு முன்னால் நின்ற பருத்து உருண்டு திரண்டு காணப்பட்ட அந்தப் பெண், காபி கொதிகலனுக்குக் கீழே கோபமாக எரிந்து கொண்டிருந்த ஊதா நிறச் சுவாலையை நோக்கி சிந்தனை வயப்பட்டவளாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். செந்நிறமான நிழல் மறைப்பின் வழியாக விழுந்த விளக்கொளி, அவளது ஆடையற்ற கைகளையும், குழந்தைத்தனமான முகத்தையும் முறுகலான அப்பப் பொருக்கின் நிறம் போலக் காட்டிற்று. அவளது

...ருந்த கருள் முடியானது கழுத்துக்கும் தோளுக்கும் மேலாக ...ரண்டு கிடந்தது. பொன் மஞ்சள் நிறத்தாலான ...அங்கியையும், பச்சை நிறத்தாலான மோராக்கோ ...களையும் அணிந்திருந்தாள். ருஷ்யப் பண்பட்ட ... ஒன்று பலீனாவிடம் காணப்பட்டது. ஒரு சிறுவ ...ப் போல கவர்ச்சியான சின்னஞ்சிறு முகத்தையும், வடித் ...டுத்த உதடுகளையும், செர்ரிப் பழம் போன்ற துடிப் ... கண்களையும் அவள் பெற்றிருந்தாள். இப்போதும் ..., அவளை ஆசை தீர அநுபவித்த பிறகும், அவளிடம் ...க்கவ் கவர்ச்சியினைக் கண்டான். அவன் அது வரை அறிந் ...ருந்த எல்லாப் பெண்களையும், இளம் பெண்களையும் ... கேள்விக்கு அப்பாற்பட்ட நிலையில் அவள் விஞ்சியே ...றாள். உண்மையில் அவளுடைய முட்டாள்தனமான சுபா ... மட்டும் அவளுக்கு இல்லையென்றால், அவளே முழு ...றைவு பெற்றவளாகத் திகழ்வாள்.

''எனக்கு காபி எதுவும் வேண்டாம், ஆரஞ்சுப் பழமே,'' ...ன்று கனத்த புகையின் ஊடாக யாக்கவ் கூறினான். அவனை ...றிட்டுப் பார்க்காமலேயே பலீனா கேட்டாள்:

''என்னைப் பற்றி என்ன?''

களைப்பினால் கொட்டாவி விட்டபடி ''உனக்கு என்ன ...ருப்பம் என்பது எனக்குத் தெரியாது,'' என்றான் யாக் ...வ்.

''இல்லை, உனக்குத் தெரியும்,'' என்று கத்திய அவள் ...னது தலையை ஆட்டியபடி படபடவெனப் பேசினாள். ...றுத்தலும் குத்தலுமான அவளுடைய சொற்களை ஓரிரு ...ணங்கள் மட்டுமே கேட்ட பிறகு, யாக்கவ் எழுந்து உட் ...கார்ந்தான், தரை மீது தனது சிகரெட்டை வீசி எறிந்து ...விட்டு, தனது காலணிகளை இழுத்து மாட்டியபடி ஒரு ...பெருமூச்சோடு கூறினான்:

''ஓர் இனிமையான மனநிலையைக் கெடுக்கக் கூடிய உன் ...னுடைய பழக்கத்தை என்னால் புரிந்து கொள்ள முடிய ...வில்லை! என் அப்பா சாகின்ற வரை என்னால் உன்னை ...மணக்க முடியாது என்பதை நீ மிக நன்றாக அறிவாய்...''

இத்தருணத்தில், வழக்கம் போலவே, பலீனா அவன்மீது ...வசை மொழிகளைப் பொழியத் தொடங்கினாள்:

''உண்மைதான், சிலந்திப் பூச்சியே, உனக்கு வேண்டிய ...தெல்லாம் இனிமையான மனநிலை! எனக்குத் தெரியும்: ...இந்த மகிழ்ச்சியான மனநிலைக்காக, தாத்தாரியனிடமும்

பழந்துணி வியாபாரியிடமும் கூட என்னை விற்றுவிடத் தயாராக இருப்பாய், ஆம்! நாணயம் என்பது ஒரு துளி கூட உன்னிடத்தில் இல்லை...''

மற்ற எல்லாவற்றுக்கும் மேலாக, தன்னை 'சிலந்திப் பூச்சி' என்று அழைத்ததற்காக யாக்கவ் அவளை வெறுத்தான். இனிமையான மனநிலை உள்ள நேரங்களில் அவனுக்காக மிகவும் மகிழ்வூட்டக் கூடிய மற்றொரு சொல்லை வைத்திருந்தாள்—'காரச் சுவையே'. இன்றோ, எந்த வகையிலும், தன்னுடன் சண்டையிடுவதை அவள் தவிர்க்கக் கூடும் என்றே உணர்ந்தான்: இரண்டு மணிக்கு முன்னால் தான் அவளுக்கு நூறு ரூபிள்கள் கொடுத்திருந்தான்.

''கூச்சலிடுவது உன்னை எங்கும் கொண்டு போய்ச் சேர்க்காது,'' என்று அமைதியான முறையிலே அவளை எச்சரித்து விட்டு, தனது தொப்பியை மாட்டிக் கொண்டு, தனது கையை நீட்டியவாறே மேலும் சொன்னான்: ''போய் வருகிறேன்!''

''பன்றி! தரை முழுக்கத் திரும்பவும் சிகரெட்டுத் துண்டுகள்...''

ஈரக் காற்று தெருவிலே வீசிக் கொண்டிருந்தது. சேற்று மடுக்களைத் துடைத்தெறியும் முயற்சி கொண்டது போல மேகத்தின் நிழல்கள் தரைக்கு மேலாக ஊர்ந்து சென்றன. திடீரென்று நிலவு தலை காட்டுகின்ற போது, மெல்லிய பனிக்கட்டியால் பூசப்பட்டுக் கிடந்த அந்தச் சேற்று மடுக்கள் வெண்கலம் போல மின்னின. அந்த ஆண்டு முன்னோக்கி வந்த வசந்தத்தை மூர்க்கத்தனமாகத் தடுத்துக் கொண்டு குளிர்காலம் நீடித்தது. ஒரு நாளைக்கு முன்னர் தான் கனமான பனி பெய்திருந்தது.

தனது கைகளைச் சட்டைப் பைகளுக்குள் விட்டவாறும், கனத்த கைத்தடியைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு யாக்கவ் அர்தமோனவ் அவசரமில்லாதபடி நெடுகிலும் நடந்து போனான். எங்ஙனம் விநோதமாக, தெளிவில்லாத முட்டாள்களாக மக்கள் இருக்க முடியும் என்பதைச் சிந்தித்துக் கொண்டிருந்தான். அந்த இனிய சின்னஞ்சிறு முட்டாள், பலீனா—அவளிடம் என்ன குறை? அக்கறைகளோ, கவலைகளோ இல்லாமல், தாராளமாக நன்கொடைகளைப் பெற்றுக் கொண்டும், நன்கு உடுத்திக் கொண்டும், செலவு செய்வதற்காக மாதந்தோறும் நூறு ரூபிள் வாக்கில் பெற்றுக் கொண்டும் அவள் பாதுகாப்பாக வசிக்கிறாள். அவள் அவ

...... விரும்பியதை யாக்கவால் தெரிய, உணர முடிந்தது. ...., பிறகு, இன்னும் என்ன? எதற்காக அவளுக்குத் ...... தேவைப் படுகிறது?

''தேன் ஜாடியிலே இருக்கும் சுண்டெலி போல அற் ......மாக,'' என்று முடிவு செய்தான்—இது அவனுக்குப் ......மான பழமொழி, அவனுடைய சொந்தக் கண்டுபி ...... கூட. ஏற்கெனவே பெற்றிருக்கக் கூடியதைக் காட் ...... அதிகமாக எதையும் வேண்டாத ஒரு மனிதனைப் ......, வாழ்க்கை அவனுக்கு மிகவும் எளிமையான விஷய ...... தென்பட்டது. மொத்தத்தில், அதற்குள்ளாக நாம் ......ந்து விட்ட போது, அது முற்றிலும் தெளிவாகவே ......ந்தது; எல்லா மனிதர்களுமே ஒரே ஒரு பொருளுக்காகத் ...... அலைந்தார்கள்—முழுமையான ஓய்வு. ஒரு பெண் ...... தனிமையில் இருந்து, அவளது அரவணைப்பில் ......த்து மகிழ்ந்து, கனவுகள் இல்லாமல் ஆழ்ந்து தூங்கும் ...... அமைதியான இரவுக்கு முந்தியது தானே இந்த ஆர ......மிக்க பகற்பொழுது. உண்மையில் இது மட்டும் தான் ......யமானது, உண்மையில் மெய்யானது. மக்கள்தான் முட் ......கள்; ஏனெனில் அவர்களில் பெரும்பாலோர் வெளிப் ......யாகவோ, ரகசியமாகவோ அடுத்தவனைக் காட்டிலும் ......நான் புத்திசாலி என்று தாங்களாகவே எண்ணிக் கொள் ......ர்கள். மற்றவர்களிடமிருந்து தங்களை வேறுபடுத்திக் ......ள்ள வேண்டும் என்ற நம்பிக்கையில், தான் வெளித் ......யாமல் போய்விடக் கூடும் என்றும், தானாகவே கூடத் ......ப் போகக்கூடும் என்றும் கருதி இம்மாதிரி அளவுக்கதி ......வற்றைக் கண்டுபிடிக்கிறார்கள், இதன் விளைவாக, ......மையில், ஒருவகையான குருட்டுத்தனம் அவர்களைப் ......கிறது.

இல்யா—ஒரு மடையன், பள்ளியில் இருந்த காலத்தில் ......ங்களின் வழிச் செல்ல தன்னை அநுமதித்துக் கொண் ......தான், இப்போதோ சோஷலிஸ்டுகள் மத்தியிலே ......கிக் கொண்டிருக்கிறான். அவன் யாக்கவுக்கு நிறைய ......ங்களைச் செய்தான். இப்போதோ, இல்யா எங்கோ ......ரியாவில் இருக்கிறான். அணிமையில் தான் யாக்கவ் ......க்கு அங்கே பணம் அனுப்பியிருந்தான். அவர்களு ...... தாய்—பொறுத்துக் கொள்ள முடியாத அளவுக்கு, ...... ......க்கிடமான முறையில், முட்டாளாக இருந்தாள்; ......ளுடைய பிடிவாதமான தந்தை, இன்னும் அதிகமாக

வே பொறுத்துக் கொள்ள முடியாத் படி, முட்டாளாக இருந்தான்: யாரோடும் ஒத்துப் போக முடியாத, குடிகார, தூய்மையற்ற ஒரு கிழட்டுக் கரடி. கேலிக்குரிய சித்தப்பா அலெக்ஸியோ—முடுக்கி விடப்பட்ட பொம்மை போல, அர சாங்க டூமாவிலே நுழைய மிகுந்த ஆர்வத்தோடு இருந்தான், இதன் காரணமாக பத்திரிகைகளைப் பேராசையோடு படித்து வந்தான், நகரத்திலுள்ள ஒவ்வொருவரோடும் போலித்தனமான அன்போடு பழகி வந்தான், சிற்றின்ப வெறி கொண்ட கிழவி போல ஆலைத் தொழிலாளர்களிடம் சமரசம் செய்துக் கொண்டிருந்தான். இவர்கள் அனைவரி லும், பயங்கரமான முட்டாளாக இருந்தவன் பெரிய மூக் குக் கொண்ட மரங்கொத்தியான மிரோன்தான். ருஷ்யா விலேயே தன்னைத்தானே மிகவும் கூரிய மதி படைத்தவனாக எண்ணிக் கொண்டு, காபினெட்டில் எதிர்காலத்தில் ஓர் இடத்தை எதிர் பார்த்தபடி இருந்தான்; இப்போதுங்கூட, என்ன செய்ய வேண்டும், எல்லாராலும் என்ன சிந்திக்கப்பட வேண்டும் என்பது பற்றித் தான் ஒருவன் மட்டிலுமே பார்க்க முடியும் என்ற உறைப்பை, மறைத்துக் கொள்ளவும் அவன் முயற்சி ஏதும் செய்யவில்லை. தொழிலாளர்களுக்கு பல் வேறு விதமான பொழுது போக்குகளை ஏற்பாடு செய்வது, கால் பந்தாட்டக் குழுக்களை ஒழுங்கு படுத்துவது, ஒரு நூலகம் தொடங்குவது என்று காரட்டுகளைப் போட்டு ஓநாய்களைப் பிடிக்க முயல்வது போல, அவர்களுடைய அநுதாபங்களைப் பெறுவதற்காக இவனும் கூட முயன்று கொண்டிருந்தான்.

அழகிய துணிகளை நெய்த தொழிலாளர்கள், கந்தை களை அணிந்து கொண்டு, குப்பையிலும் குடிவெறியிலும் வாழ்ந்தார்கள். அவர்களும் கூட ஒட்டு மொத்தமாக பேய்த் தனமான முட்டாள்தனத்திற்கு, ஒளிவு மறைவற்ற முரட் டுத்தனமான முட்டாள்தனத்திற்கு ஆட்பட்டு, ஒவ்வொரு விவசாயியிடமும் இருக்க வேண்டிய, சாதாரண உரிமை யாளனுடைய சூழ்ச்சித்திறன் கூட இல்லாது இருந்தார் கள். யாக்கவ் அர்தமோனவினுடைய சிந்தனைகளில் மற்ற எந்த ஒன்றைக் காட்டிலும், தொழிலாளர்களே பெருமளவு இடத்தைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள்; ஏனெனில் அவர் களோடு நாள்தோறும் நேரடித் தொடர்பு கொண்டிருந் தான், தனது இளமைக் காலத்திலே அவர்களுக்கு எதிராக உருவாகியிருந்த நீண்ட கால எதிர்ப்புணர்ச்சியோடு அவர்

..ளை அணுகினான். பெண்கள் விஷயமாக அந்த நாட்களில் ...ம் நெசவாளிகளோடு கடுமையான சண்டைகளும் பல ...ந்திருக்கின்றன; அவனுடைய முன்னாளைய எதிரிகளுக் ...ப் பகைமைகளை மறப்பது இன்னமும் கூட முடியாததாக ...லை தோன்றியது. அவனுக்குத் தாடி முளைக்கத் தொடங் ...ம் முன்பே, இரண்டு முறை இரவு நேரத்திலே கல்லடியும் ...ங்கியிருக்கிறார்கள் தொழிலாளர்கள். ஒன்றுக்கும் மே ...கவே, பெண்களுடைய அலறல்களால் அவனது தாயார் ...ற்று கையிடப்பட்டு, இழிசெயல்களை மூடி மறைப்பதற் ...க ரொக்கப் பணம் கொடுக்க வேண்டி நேரிட்டது. அம்மா ...ியான சந்தர்ப்பங்களில், அவனது போக்கின் குறைபாடு ...ளைக் கேலி செய்யும் தன்மையில் கூட சுட்டிக் காட்ட ...யன்றிருக்கிறாள்:

''எப்படி நீ நடந்து கொள்கிறாய், சேவல் மாதிரியா ...வா! திருமணம் முடிகின்ற வரை உன்னால் ஏன் பொறுத் ...க் கொள்ள முடியாது? அல்லது எந்த வகையிலோ, நீயா ...வே ஒருத்தியைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு, அவளை ...வைத்துக் கொள்! என்றைக்காவது ஒருநாள் அவர்கள் உன் ...ப்பாவிடம் புகார் செய்வார்கள், அவர் உன்னை வெளியே ...க்கி வீசுவார், இல்யாவைச் செய்தது போல...''

இரண்டு அல்லது மூன்று ஆண்டு காலக் குழப்பத்திலே, ...லையிலே குறிப்பிட்டுச் சொல்வது போல எந்தவிதமான ...யங்கரப் போக்கினையும் யாக்கவால் காண முடியவில்லை. ...னால் மிரோனின் பேச்சு, மாமா அலெக்ஸியின் நிம்மதி ...ற்ற பெருமூச்சுகள், பத்திரிகைகள் இளைய அர்தமோனவ் ...டிப்பதற்கு விரும்பாத போதிலும்—கடமை உணர்வோ ...ம், பகைமை உணர்வுடன் கூடிய வெளிப்படையான அச் ...றுத்தல்களோடும் தொழிலாளர் இயக்கம் பற்றியும், ...தொழிலாளர் பிரதிநிதிகள் டூமாவிலே ஆற்றக் கூடிய உரை ...ள் பற்றியும் அவனுக்குத் தகவல் தந்தன—ஆகியனவும் ...ருந்தன. மேலும் இவை எல்லாமே ஆலை ஆட்களைப் ...ற்றி யாக்கவுக்கு மேலும் பகைமையை ஏற்படுத்தியது, ...வர்களைச் சார்ந்திருக்கக் கூடிய புண்பட்ட உணர்வினை ...ற்படுத்தியது. இதை வேடிக்கைப் பேச்சுகளாலும், புன் ...றுவல்களாலும், சில்லறைச் சலுகைகளாலும் திறமை ...யோடு மறைக்கக் கற்றுக் கொண்டு விட்டதாக அவன் ...நினைத்தான். எனினும், மொத்தத்தில், விஷயங்கள் அவ் ...வளவு மட்டமாகப் போய் விடவில்லை; சில நேரங்களில்

ஒருவித விநோதமான உணர்வினால் தான் பீடிக்கப்பட்டது போல உணர்வான்: எசமானனாகிய யாக்கவ் அர்தமோனவ், தனக்காக வேலை செய்கின்ற மக்களின் விருந்தினன் என்றும், நீண்ட நாட்கள் தங்கி விட்டவன் என்றும், துயரார்ந்த சலிப்புடன் அவன் இருப்பதைத் தொழிலாளர்கள் கவனித்துக் கொண்டிருப்பது போலவும் அவன் உணர்ந்தான். அது அவர்கள் சொல்ல விரும்பியது போலக் காணப்பட்டது.

''ஏன் இன்னும் வெளியேறாமல் இருக்கிறாய்? இது தான் சரியான நேரம்!''

அம்மாதிரியான நேரங்களில், ஆலையில் ஏதோ அழன்றெரிவது போலவும், ஏதோ மறைந்து கண்ணுக்குப் புலனாகாது இருப்பது போலவும், அவனுக்கே தனிப்பட்ட முறையில் ஒரு பெரிய ஆபத்து எதிர் நோக்கிக் கொண்டிருப்பது போலவும், அர்த்தமற்று சிந்தனை செய்வான்.

மனிதன் எளிமையானவன், எளிமையே அவனுக்கு மிகவும் விருப்பமானது என்று யாக்கவ் கருதினான். கவலை தரும் எண்ணங்கள் எதையும் மனிதன் உருவாக்குவதில்லை, அவற்றின் விதைகளைத் தன்னோடு எடுத்துச் செல்வதில்லை. அத்தகைய நச்சுக் கருத்துகள் மனிதனுக்கு வெளியே தான் எங்கோ குடியிருக்கின்றன; அவை மனிதனின் மனத்தை முற்றுகையிடுகின்ற போது, விளங்கிக் கொள்ள முடியாத அளவுக்குக் கலவரமடைகின்றான். இத்தகைய நச்சு எண்ணங்களை அறிந்து கொள்ளாதிருப்பதும், அவை வளர விடாமல் செய்வதும் சிறந்தது. இன்னும், தன்னுடைய இத்தகைய சிந்தனைகளின் எதிர்ப்புக்கு அப்பாற்பட்டு, தனக்கு வெளியே அவை இருப்பதாக யாக்கவ் உணர்ந்தான்; தன்னைச் சுற்றிலும் முட்டாள்தனத்தின் சிக்கலான முடிச்சுகளை அவற்றால் போட முடியாது என்பதையும், அவன் வாழ்க்கையில் நேசித்த தெளிவானதும், எளிமையானதுமான அனைத்து விஷயங்களையும் குழப்ப மட்டுமே அவற்றால் முடிந்தது என்பதையும் அவன் கண்டான்.

அவன் அறிந்த ஆட்கள் எல்லாரிலும் தீஹன் வியாலவ் மிகவும் புத்திசாலியாக அவனுக்குத் தோன்றினான். தீஹனுடைய சலியாத உழைப்பையும், மற்றவர்களிடம் அவன் கொண்டுள்ள உறவுகளின் நிதானத்தையும் கூர்ந்து கவனிக்கையில், அந்தக் கிழட்டு முற்றப் பாதுகாவலன் மீது யாக்கவ் பொறாமை கொண்டான். தூக்கத்தில் கூட தீஹன் புத்திசாலியாகக் காணப்பட்டான், எதையோ கேட்டுக் கொண்

டிருப்பது போல அவனுடைய காது தலையணையை அல்லது தரையை அழுத்திக் கொண்டு இருந்தது.

யாக்கவ் அந்தக் கிழவனிடம் கேட்டான்:

''நீ எப்போதேனும் கனவுகள் காண்பதுண்டா?''

''நான் எதற்காக? நான் பெண்ணில்லை,'' என்று தீஹன் பதிலளித்தான்; இந்த வார்த்தைகளின் பின்னணியில் எளிதில் அலைக்க முடியாத உறுதியான, முதிர்ச்சி பெற்ற வலிமையையும், சக்தியையும் யாக்கவ் உணர்ந்தான்.

''பெண்களின் கனவுகள்,'' தன் சித்தப்பா அலெக்ஸியினுடைய வீட்டில் இந்தப் பேச்சுகளையும், வாதங்களையும் கேட்கின்ற போது இளைய அர்தமோனவ் இப்படித்தான் நினைத்துக் கொள்வான்; அதை நினைத்த மாத்திரத்தில் தனக்குள்ளாகவே சிரித்துக் கொள்வான்.

பொதுவாக, சிந்திப்பது என்பதை அவனால் அவ்வளவு சுலபமாகச் செய்ய முடியவில்லை. அவன் சிந்திக்கத் தொடங்குகின்ற போது, அவனுடைய இயக்கங்கள், ஏதோ பெரிய சுமையைத் தூக்கிக் கொண்டிருப்பது போல, மெதுவானதாகி விடும்; அவன் தலை கீழே சாய்ந்து விடும், கண்கள் தரையை நோக்கிச் சென்று விடும். ஆக அந்த இரவில், பலீனாவின் வீட்டை விட்டு அவன் வந்த போது, இதன் காரணமாகத்தான், இருளினின்றும் வெளியேறிய ஒரு தடித்த உருவம், இவனுக்கு நேராக வந்து, இவனுடைய தலைக்கு மேலாகக் கையை அலைக்கின்ற வரை அவன் பார்க்கவில்லை. யாக்கவ் விரைவாகத் தனது ஒன்றைக் காலில் முழங்காலிட்டு அமர்ந்து, தனது கோட்டுப் பையிலிருந்து கைத்துப்பாக்கியை எடுத்து, தன்னைத் தாக்க வந்தவனின் காலை அதனது முனையால் இடித்துச் சுட்டான். குண்டின் ஒலி மந்தமாகக் கேட்டது, ஆனால் அந்த மனிதன் பின்னுக்குத் துள்ளிக் குதித்தான். அவனுடைய தோள் வேலியில் தட்டி, முனங்கினான், வேலியை ஒட்டி தரையில் சாய்ந்தான்.

அதன் பிறகுதான் தான் மனப் பீதி கொண்டு விட்டதை யாக்கவ் உணர்ந்தான், கூச்சல் போட வேண்டும் என்கிற அளவுக்குப் பயந்து போய் விட்டான், ஆனால் அவனால் முடியவில்லை. அவன் கைகள் நடுங்கின, முழங்காலிட்டு அமர்ந்த நிலையிலிருந்து எழுந்திருக்க அவன் முயன்ற போது அவனது கால்கள் அவனுக்குக் கீழ்ப்படிய மறுத்தன. இரண்டு கால் எட்டுக்கு அப்பால் இந்த மனிதன் நெளிந்து, வளைந்து எழுந்திருக்க முயன்று கொண்டிருந்தான். அவனுடைய

தொப்பி கீழே விழுந்து விட்டது, அடர்த்தியான சுருள் முடியை அவன் தலை காட்டிக் கொண்டிருந்தது.

''பிசாசே! உன் தலையைத் தனியாகச் சுட்டு விடுவேன்,'' என்று தனது கைத்துப்பாக்கியை உயர்த்தியபடி யாக்கவ் கரகரத்த குரலில் சொன்னான். தனது அகன்ற முகம் பார்வைக்குத் தெரியும் படியாக அந்த மனிதன் திரும்பி முணுமுணுத்தான்:

''நீங்கள் என்னை ஏற்கெனவே சுட்டு விட்டீர்கள்...''

அவனை அடையாளம் கண்டு கொண்ட நிலையில் யாக்கவாலும் கூட முணுமுணுக்கவே முடிந்தது, ஏனெனில் அவனுடைய வியப்பு அந்தளவுக்குப் பெரிதாக இருந்தது.

''நாஸ்கோவ்? நாயே! நீயா அது?''

யாக்கவினுடைய நடுக்கம் படிப்படியாக மறைந்து கொண்டு வந்து, மகிழ்ச்சி மிக்க உணர்வு ஏற்படலாயிற்று —தாக்குதலை எதிர்த்து விட்ட நற்பேற்றுக்காக மட்டுமல்லாது, தன்னைத் தாக்க முற்பட்டவன் யாக்கவ் முதலில் நினைத்தது போல ஆலைத் தொழிலாளியாக இல்லாது வெளியாளாக இருந்ததும் ஆகும். வேட்டையாடியும், உள்ளூர் திருமண விழாக்களில் அக்கார்டியன் வாசித்தும் நாஸ்கோவ் பிழைப்பை நடத்தி வந்தான். அவனுக்குக் குடும்பம் என்று ஏதுமில்லை, பாதிரியினுடைய விதவை பரக்லீதவாவுடன் வசித்து வந்தான். இந்த இரவு நேரத் தாக்குதலுக்கு முன்பு வரை, நகரத்தில் யாரும் இவனைப் பற்றித் தவறாகப் பேசியது கிடையாது.

''நீ செய்து கொண்டிருப்பது இவை போன்றவைதானா?'' என்று எழுந்தவாறே யாக்கவ் தொடர்ந்தான். அவனுடைய தோளுக்கு மேலாகப் பார்த்தான். வேலிக்குப் பின்னால் உள்ள மரக்கிளைகளில் காற்று வீசியதைத் தவிர, எங்கும் அமைதி நிலவியது.

''நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்?'' தனது குரலைத் திடீரென்று உயர்த்தியபடி நாஸ்கோவ் கோரினான். ''நான் உங்களைப் பயமுறுத்த வேண்டி வேடிக்கைதான் செய்ய விரும்பினேன், அவ்வளவு தான். நீங்களோ நேரடியாகச் சுடத் தொடங்கி விட்டீர்களே! இதற்காக உங்கள் முதுகில் தட்டிக் கொடுக்க மாட்டார்கள். நானும் பயந்துதான் போய்விட்டேன் என்பதை உங்களுக்குச் சொல்லியாக வேண்டும்...''

''ஓ, அப்படியா?'' என்று யாக்கவ் கேலி செய்கின்ற

பெருமிதத்தில் கூறினான். ''நல்லது, எழுந்திரு. நாம் போய் போலீசைப் பார்க்கலாம்.''

''என்னால் எழுந்திருக்க முடியாது. நீங்கள் என்னை முடமாக்கி விட்டீர்கள்.''

நாஸ்கோவ் தனது தொப்பியை எடுத்தான், அதை உற்றுப் பார்த்தபடி மேலும் தொடர்ந்தான்:

''போலீசுக்கு நான் பயப்படப் போவதில்லை.''

''அங்கு போன பிறகு நாம் அதைப் பார்க்கலாம், கிளம்பு!''

''நான் பயப்படவில்லை,'' நாஸ்கோவ் திரும்பக் கூறினான். ''முதலாவதாக, நான் உங்கள் மீது தாவினேன் என்பதை உங்களால் எங்ஙனம் நிரூபிக்க முடியும்? பயத்தினால் நீங்கள்தான் என்மீது தாவினீர்கள், என்னமோ?''

''அப்படியா. இரண்டாவதாக?'' என்று ஏளனமாக முறுவலித்த படி யாக்கவ் கேட்டான். மேலும் அதே சமயம் நாஸ்கோவினுடைய நிதானப் போக்கைக் கண்டு ஓரளவுக்குத் திடுக்கிட்டுப் போய் விட்டான்.

''இரண்டாவதும் இருக்கிறது. நான் உங்களுக்குத் தேவைப்படுவேன்.''

''தேவதைக் கதையா. பாப்பா பாட்டா!''

மேலும் திடீரென்று உணர்ச்சி வயப்பட்டவனாக, யாக்கவ் தனது கைத்துப்பாக்கியை அக்கார்டியன்காரனின் முகத்துக்கு நேராக நீட்டியபடி, கோபமாகக் கத்தினான்:

''இதோ, உன் மூளையைச் சிதறடித்து விடுவேன்!''

நாஸ்கோவ் அவனை உற்றுப் பார்த்தான், பிறகு கீழ் நோக்கித் தனது தொப்பியைத் திரும்பவும் பார்த்து விட்டு, கம்பீரமாகக் கூறினான்:

''எந்தச் சச்சரவையும் ஆரம்பிக்க முயல வேண்டாம். நீங்கள் பணக்காரனாக இருந்தாலும், உங்களால் எதையும் நிரூபிக்க முடியாது. நான் விளையாட்டுக்குத்தான் செய்தேன் என்று உங்களிடம் சொல்கிறேன். உங்கள் அப்பாவை எனக்குத் தெரியும். அவருக்காக நான் அநேக முறை வாசித்திருக்கிறேன்.''

தனது தொப்பியை வீசி எறிவது போல தலைமீது வைத்துக் கொண்டான், முன்னுக்கு வளைந்து, இறுகக் கடித்த தனது பற்களின் ஊடாக முணங்கியவாறே தனது காற்சட்டையை சுருட்டத் தொடங்கினான். அதைச் செய்து விட்டு, தனது சட்டைப் பையிலிருந்து ஒரு கைக்குட்டையை உருவி,

முழங்காலுக்கு சற்று மேலே கட்டுப் போடத் தொடங்கி னான். தனது தொண்டைக்குள்ளாகவே ஏதோ முணுமுணுத் துக் கொண்டிருந்தான், அதே வேளை வெற்றி பெறாது போன அந்தத் திருடனுடைய விநோதமான நடத்தையால் யாக்கவினுடைய துணிச்சல் இருந்த இடம் தெரியாமல் போகவே அவன் கூறியதைச் செவி மடுக்கவில்லை.

தனக்கேயுரிய அசாதாரணமான சிந்தனை வேகத்தால், யாக்கவ் அர்தமோனவ் நிலைமையைப் பரிசீலித்துக் கொண் டிருந்தான். உண்மையில் அவன் நாஸ்கோவை வேலியருகி லேயே கிடக்கும்படி விட்டுவிட்டு, அவனைப் பார்த்துக் கொள்ள இரவுக் காவல்காரனை வைத்து விட்டு இந்தத் திட்டமிட்ட தாக்குதல் பற்றி போலீஸ் தலைமை நிலையத் தில் புகார் செய்ய வேண்டும். புலன் விசாரணை தொடங் கும், பாதிரியாரின் விதவையுடன் இவன் தந்தை குடித்து விட்டுக் கூத்தடிப்பதை பற்றி நாஸ்கோவ் பேசுவான். இங்கு அவனுக்கு அவனைப் போன்ற கழுத்தறுக்கும் நண்பர்கள் இருக்கக் கூடும், அவர்கள் பழி வாங்க முயற்சிக்கக் கூடும். மேலும், இந்த மனிதன் தண்டிக்கப்படாது போகும்படி விட்டுவிடக் கூடாது...

இரவிலே குளிர் ஒரே நிதானமாகக் கூடிக் கொண்டே இருந்தது. கைத்துப்பாக்கியைப் பிடித்திருந்த யாக்கவினு டைய கை குளிரினால் வலியெடுத்தது. போலீஸ் தலைமை நிலையமும் வெகு தொலைவில் இருந்தது, உண்மையில், அங்குள்ள ஒவ்வொருவரும் தூங்கிப் போய் இருப்பார்கள். எப்படி நடந்து கொள்வது என்பதைத் தீர்மானிக்க முடியாத படியும், இந்த தடித்த முரடனை உடனடியாகத் தீர்த்துக் கட்டாமல் போனமைக்கு கோபத்தோடு வருத்தப்பட்ட படி யும், பலமாக மூச்சு விட்டுக் கொண்டு அங்கேயே நின்றான் யாக்கவ். தனது வாழ்நாள் முழுக்க ஒரு பீப்பாய் மேலே உட்கார்ந்து போல நாஸ்கோவ் வளைந்த கால்களோடு காணப்பட்டான். ஆனால் திடீரென்று மிகவும் எதிர்பா ராது வந்த அவனுடைய அறிவிப்பால் யாக்கவினுடைய சிந்தனைகள் தடைப்பட்டன.

''அது ரகசியமாக இருந்தால் கூட, நான் உங்களிடம் நேரடியாகவே சொல்லி விடுகிறேன்,'' என்று தனது காலை இன்னமும் ஏதோ செய்தபடி நாஸ்கோவ் கூறினான். ''உங் களுடைய தொழிலாளர்கள் மீது ஒரு கண் வைத்துக் கொள் வதற்காக நான் இங்கு வசிக்கிறேன், அதன் காரணமாகத்

தான். என்னமோ, நான் உங்களைப் பயமுறுத்த முயற்சி செய்து கொண்டிருப்பதாக நான் சொன்னதெல்லாம் வெறும் பேச்சுத்தான், இருக்கலாம், உண்மை என்னவென்றால், ஓர் ஆளை வளைத்துப் பிடிக்க வேண்டி இருந்தது, அவன் தான் என்று உங்களை நினைத்து விட்டேன்...''

''பிசாசே,'' என்றான் யாக்கவ். ''எப்படி?''

''அப்படித்தான், ஆமாம்... அதுபற்றி உங்களுக்குத் தெரியாது, ஆனால் பாதிரியாருடைய விதவையின் குளியல் அறையில் எந்நேரமும் சோஷலிஸ்டுகள் கூடிக் கொண் டிருக்கிறார்கள். கலகத்தைப் பற்றி அவர்கள் திரும்பவும் பேசுகிறார்கள், மேலும் புத்தகங்களையும் அவர்கள் படிக் கிறார்கள்...''

''நீ பொய் சொல்கிறாய்,'' ஒவ்வொரு வார்த்தையை யும் யாக்கவ் நம்பினாலும், மெதுவாகச் சொன்னான். ''யார், பிறகு? யார் ஒன்று சேர்கிறார்கள்?''

''அதை என்னால் சொல்ல முடியாது. அவர்கள் பிடி பட்ட பிறகு நீங்களே பார்த்துக் கொள்வீர்கள்.''

வேலியினுடைய பலகைகளைப் பிடித்துத் தொங்கிய படி, நாஸ்கோவ் தானாகவே எழுந்து நின்று பேசினான்:

''உங்களுடைய கைத்தடியைக் கொடுங்கள். அது இல் லாமல் என்னால் நடக்க முடியாது...''

கைத்தடியை எடுப்பதற்காக யாக்கவ் குனிந்து அதை அவனிடம் ஒப்படைத்தான். தன்னுடைய தோளுக்கு மேலாகச் சங்கடத்தோடு பார்த்தபடி, தணிந்த குரலில் கேட் டான்:

''சரி, ஆனால் பிறகு எதற்காக நீ... என் மீது எதற்கா கத் தாவினாய்?''

''நான் உங்கள் மீது தாவவில்லை. உங்களை நான் தவறாகக் கருதி விட்டேன். நான் வேறு ஒருவனைப் பின் பற்றிப் போய்க் கொண்டிருந்தேன். நீங்கள் இந்த விஷ யத்தை விட்டு விடுவது நல்லது. இது வெறுமனே தவறாக நடந்தது தான். நான் உண்மையைத் தான் சொல்லிக் கொண்டிருக்கிறேன் என்பதை நீங்கள் விரைவிலேயே புரிந்து கொள்வீர்கள். என் காலைப் பார்த்துக் கொள்வதற் காக நீங்கள் எனக்குக் கொஞ்சம் பணம் கொடுக்க வேண்டி வரும். அவ்வளவு தான்...''

கைத்தடியை ஊன்றியபடி, பக்க பலத்திற்காக வேலி யைப் பற்றிக் கொண்டு, நகரத்தின் வெளி எல்லைக்கு அப்

பால் விளக்குகளே இல்லாமல் இருந்த சிறிய வீடுகள் இருந்த திசை நோக்கி தனது கோணல் கால்களால் நாஸ்கோவ் மெதுவாக நகர்ந்து சென்றான். முன்னோக்கிச் செல்கையில், தனக்கு முன்னே விழுந்த குளிர் மேகத்தின் நிழல்களை ஒதுக்கி விட்டுச் செல்வது போலக் காணப்பட்டான். சுமார் பத்து எட்டுகள் கடந்ததும், மெதுவாகக் குரல் கொடுத்தான்:

''யாக்கவ் பெத்ரோவிச்!''

யாக்கவ் அவனை நோக்கி விரைந்து சென்றான், நாஸ்கோவ் பேசினான்:

''இந்த விவகாரம் பற்றி யாரிடம் ஒரு வார்த்தைகூடப் பேச வேண்டாம். ஏனென்றால்... சரி, உங்களுக்கே இது தெரியும்.''

யாக்கவை ஊமையாகவும், திகைப்படையுமாறும் செய்துவிட்டு, அந்தக் கைத்தடியை ஆட்டியவாறே அவன் நகர்ந்து சென்றான். இந்த விஷயமானது பல்வேறு பிரச்சினைகளை உள்ளடக்கியதாக இருந்தது, எல்லாவற்றுக்குமே சிந்திக்க வேண்டியிருந்தது, அதுவும் உடனடியாக, அவன் தீர்மானித்தாக வேண்டும், இந்நேரத்திலே: அவன் சரியாக நடந்து கொண்டானா? உண்மைதான், சோஷலிஸ்டுகளை நாஸ்கோவ் கண்காணித்து வந்தால்—அவன் பயன் மிக்கவன், தவிர்க்க முடியாதவனும் கூட. ஆனால் இவை எல்லாமே மோசடியாக இருக்குமேயானால், தனது தோல்விக்கும் தனது காயம் பட்ட காலுக்காகவும் பலி வாங்குவதற்கு சற்று அவகாசம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற நம்பிக்கையில் நாஸ்கோவ் பொய் சொல்லி இருப்பானேயானால்? யாக்கவை வேறு யாரோ என்று கருதி விட்டதும், பயமுறுத்த முயற்சி செய்ததாகக் கூறுவதும் பொய். தெளிவாகவே அது பொய் தான். யாக்கவைக் கொலை செய்வதற்காகத் தொழிலாளர்கள் லஞ்சம் கொடுத்திருப்பார்களோ? நெசவாளிகள் மத்தியிலே பல போக்கிரிகளும், கயவாளிகளும் இருந்தார்கள், ஆனால் சோஷலிஸ்டுகளில்—நம்புவது கஷ்டமானதாக இருந்தது. செதோவ், மாஸ்லவ், கிரிகுனோவ் போன்ற இன்னும் பலர், மரியாதைக்குரிய தொழிலாளர்களாக இருந்தனர், அவர்கள் தாம், நீண்ட காலத்திற்கு முன்பு அல்ல—அதீதமாக படபடத்துக் கொண்டிருந்த ஒரு தொழிலாளியை வேலை நீக்கம் செய்ய வேண்டும் என்று கூறினார்கள். ஆமாம், நாஸ்கோவ் அவசியம் பொய்

சொல்லித்தான் இருக்க வேண்டும். இது பற்றி மிரோனிடம் சொல்லிவிட வேண்டுமா?

அடுத்து என்ன நடக்கும், நாஸ்கோவைப் பற்றி மிரோனிடம் அவன் சொன்னால் என்ன நடக்கும் என்பதை யாக்கவால் தீர்மானிக்க முடியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்: ஒரு பெரிய நீதிபதியைப் போல ஒவ்வொரு சிறிய விஷயத்தையும் மிரோன் விவரமாகக் கேட்டான், இவன் மீது குற்றம் சுமத்த எதையாவது ஒன்றைக் கண்டு பிடிப்பான். அவன் என்ன செய்த போதிலும், அவன் கேலி செய்யப் போவது நிச்சயம். நாஸ்கோவ் உளவாளியாக இருந்தால், அதை மிரோன் பெரும்பாலும் அறிந்திருக்கக்கூடும். மேலும், இன்னும் ஒரு கேள்வி தெளிவாக இருக்கிறதில்லை: தவறு செய்தது யார்—நாஸ்கோவா, யாக்கவா? நாஸ்கோவ் சொல்லிச் சென்றிருந்தான்:

''நான் உண்மையைத்தான் சொன்னேன் என்பதை நீங்கள் சீக்கிரமே கண்டு கொள்வீர்கள்.''

இரவினுள் அந்த வேடுவன் மறைந்து போகின்ற வரை, அவனைப் பார்த்தபடியே யாக்கவ் நின்றான். ஒவ்வொன்றுமே மிகத் தெளிவாகவும், புரிந்து கொள்ளக்கூடியவாறும் நடக்கத் தொடங்கியது போலக் காணப்பட்டது: கொள்ளையடிக்க வேண்டும் என்ற தெளிவான நோக்கத்தோடு தான் நாஸ்கோவ் தாக்கினான், யாக்கவ் அவன் மீது சுட்டான். ஆனால் அதற்குப் பின்னர் தொடர்ந்தவை அனைத்தும் ஏதோ குழப்பமான, அமைதியற்ற கெட்ட கனவு போல ஆகிவிட்டது. வேலி நெடுகிலும் நாஸ்கோவ் நடந்து சென்றது ஏதோ ஒரு விதத்தில் அசாதாரணமானது; அவனைப் பின் தொடர்ந்து சென்ற உருக்குலைந்த நிழல்களில் கூட ஏதோ அசாதாரணமான தன்மை இருந்தது—எவருக்குப் பின்னாலும் நிழல்கள் இந்தளவுக்கு அழுத்தமாக இழுத்துக் கொண்டு சென்றதை யாக்கவ் ஒருபோதும் பார்த்ததில்லை.

இத்தகைய எண்ணங்களினால் களைப்பும், நரம்புத் தளர்ச்சியும் உற்ற யாக்கவ் வாய் பேசாது காத்திருப்பது என்று தீர்மானித்தான். எனினும், நாஸ்கோவைத் தனது மனத்திலிருந்து நீக்க முடியாமல் காய்ச்சலும் வெறுப்பும் கொண்டான். உணவு வேளையின் போது, தொழிற்சாலைக் கட்டிடங்களினின்றும் வெளியேறி தொழிலாளர்கள் போய்க் கொண்டிருக்கும் போது அலுவலகச் சன்னலருகே

நின்று, அவர்களில் யார் சோஷலிஸ்டாக இருக்க முடியும் என்று ஊகிக்க முயல்வான். ஸெரஃபீமிடமிருந்து குறும் புத்தனமான பாடல்களைக் கட்டுவதற்கு மிக அருமையாகக் கற்றுக் கொண்டு விட்ட, சிடுசிடுப்பான முகங்கொண்ட அந்த வாஸ்காவாக நிச்சயம் இருக்க முடியாது?

ஓரிரு நாட்களுக்குப் பின்னர், கட்டுக்கடங்காத குதிரை ஒன்றைப் பயிற்றுவிப்பதாக, காட்டுப்பாதை வழியே சவாரி செய்கையில் ரகசிய போலீஸ் அதிகாரி நெஸ்தெரேன்கொ இவன் கண்ணில் பட்டான். சுவீடன் நாட்டுச் சட்டையும், உயர்ந்த காலணிகளும் அணிந்து, தோள்மீது ஒரு துப்பாக்கியும், பறவைகள் நிறைந்த வேட்டைத் தோல் பையைப் பக்க வாட்டிலும் தொங்க விட்டுக் கொண்டு, காட்டின் விளிம்பில், சாலையை நோக்கி முதுகைத் திருப்பிக் கொண்டு குவிந்த கைகளுக்குள்ளாக சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டிருந்தான். செம் பழுப்பு நிறமான அவனது தோல் சட்டை சூரிய ஒளியில் மினுமினுத்தது, அவனது முதுகுப் புறத்தை இரும்புக் கவசம் அணிந்தது போலக் காட்டியது. தான் கட்டாயம் செய்ய வேண்டியது என்ன என்பதை யாக்கவ் உடனடியாக அறிந்தான். அவனை நோக்கிக் குதிரையை ஓட்டிச் சென்று, அவசரமாக அவனுக்கு வாழ்த்துத் தெரிவித்தான்:

''ஏன், நீங்கள் இங்கேதான் இருந்தீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லையே!''

''நேற்றைக்கு முன் தினத்திலிருந்து இருக்கிறேன். என் மனைவி மிகமிக மோசமாகப் போய்க் கொண்டிருக்கிறாள். ஆமாம்!''

இந்த சோகமான செய்தியை அறிவித்து முடிந்த பிறகு, மிகவும் ரம்மியமான குரலில், தனது தோல் பையைத் தட்டிக் கொடுத்தவாறே மேலும் தொடர்ந்தான்:

''எனது அதிர்ஷ்டத்தை நான் முயற்சி செய்து பார்த்துக் கொண்டிருக்கிறேன். மோசமான வேட்டை அல்ல, ஹூம்?''

''உங்களுக்கு நாஸ்கோவைத் தெரியுமா? அதுதான் அந்த வேடுவன்,'' என்று தனது குரலைத் தாழ்த்தியபடி யாக்கவ் அவனிடம் கேட்டான். அதிகாரியின் செந்நிறப் புருவங்கள் வியப்பால் உயர்ந்தன, அவனுடைய சீன மீசை துடித்தது. தனது விழிகளை உருட்டினான், வானத்தை வெறித்துப் பார்த்தான், மீசையின் ஒரு முனையை இழுத்து

விட்டுக் கொண்டான். அவனைக் கவனித்தபடி யாக்கவ் சிந்தித்தான்:

''அவன் பொய் பேசுவானே. ஆனால் எப்படி?''

''நாஸ்கோவா? யார் அது?''

''ஒரு வேட்டைக்காரன், சுருள் முடியும், வளைந்த கால்களுமாய்...''

''அப்படியா? அந்தப் பயலை இந்தக் காட்டில் நான் பார்த்திருக்கிறேன் போலிருக்கிறது. ஒரு மட்டமான துப்பாக்கியைத் தூக்கித் திரிவான். நல்லது, அவனைப் பற்றி என்ன?''

இப்போது அந்த அதிகாரியின் பழுப்பு நிறக் கண்கள், கருமணியின் நடுவில் ஒரு புள்ளி போல ஒளி மின்ன, யாக்கவை நோக்கி உசாவுகின்ற தோரணையில் அவன் முகத்தைப் பார்க்க ஆரம்பித்தது. நாஸ்கோவுடன் ஏற்பட்ட அந்த மோதலை யாக்கவ் உடனடியாக விவரித்தான். நெஸ் தெரேன்கொ தனது பார்வையைத் தரைமீது செலுத்தி, தனது துப்பாக்கி மட்டையால் ஒரு சவுக்கு மரக் கட்டையைத் தரைக்குள் அழுத்தியவாறு, அவன் சொன்னதையெல்லாம் கேட்டு முடித்தான். யாக்கவ் சொல்லி முடித்து விட்டிருந்த போது, தனது கண்களை உயர்த்தாமலேயே அவன் கேட்டான்:

''நீங்கள் ஏன் போலீசிடம் போகவில்லை? இது போன்ற விஷயங்கள், அவர்களுடைய விவகாரங்கள், என் அருமைத் தம்பி, அவர்களிடம் தெரிவிக்க வேண்டியது உங்களது கடமை.''

''நான் சொல்கிறேனே: அவன் தொழிலாளர்களை வேவு பார்க்கிறான் போல் இருக்கிறது. அது உங்களுடைய விவகாரம்...''

''சரி,'' என்றான் அந்த அதிகாரி சிகரெட் புகையைத் தன் துப்பாக்கிக் குழாய்க்கு நேராக ஊதினான். தனது சுருங்கிய கண்ணைத் திரும்பவும் யாக்கவ் முகத்துக்கு நேராகத் திரும்பியபடி, அழுத்தமாக, ஆனால் யாக்கவிற்குப் புரியாதபடி பேசத் தொடங்கினான். திட்டமிட்ட கொள்ளை முயற்சியைப் போலீசுக்குத் தெரியாமல் மறைத்து விட்ட குற்றத்திற்கு யாக்கவ் ஆளானது போலத் தோன்றியது; ஆனால் இப்போது விவரிப்பது என்பது மிகவும் சுணங்கிப் போன ஒன்று.

''நீங்கள் அவனை நேரடியாகப் போலீஸ் தலைமை

நிலையத்திற்கு இழுத்துச் சென்றிருந்தால், அது மிகவும் தெளிவான ஒரு வழக்காகி யிருக்கும்! அப்படியே இருந்தாலும் கூட முழுமையாகச் சொல்லி விட முடியாது. ஆனால் இப்போது, உங்கள் மீது தாவினான் என்பதை உங்களால் எப்படி நிரூபிக்க முடியும்? அவனுடைய கால்? ஹூம்! பயத்தினால் நீங்கள் அவனைச் சுட்டிருக்கலாம்... தற்செயலாக, முற்றிலும் கவனக் குறைவினால்...''

நெஸ்தெரேன்கொ தட்டிக்கழிப்பதாகவும், சிக்கலாக்கி விடுவதாகவும், தன்னை அச்சுறுத்த முயல்வதாகவும், இந்தக் கதையிலிருந்து யாக்கவையோ, தன்னையோ அவன் எடுத்துவிட முயன்றது போலக் காணப்பட்டது. மேலும் அச்சத்தின் காரணமாகச் சுட்டிருக்கக் கூடும் என்று அந்த அதிகாரி பேசிய போது, இந்த சந்தேகமானது வலுத்தது. யாக்கவ் தீர்மானித்தான்:

''இவன் பொய் சொல்கிறான்.''

''ஆமாம், எனது அருமைத் தம்பி, அது அப்படித் தான் இருக்கிறது. தன்னைத்தானே ஒருவிதமான ரகசிய உளவாளி என்று அறிவித்துக் கொண்ட அந்த முட்டாள் உண்மையில் வாங்கிக் கட்டத்தான் போகிறான். அவனுக்கு என்ன தெரியும் என்பதை அவனிடம் நாம் கேட்கலாம்.''

பிறகு, யாக்கவினுடைய தோள் மீது ஒரு கையைப் போட்டபடி, அந்த அதிகாரி தொடர்ந்து பேசினான்:

''இதோ பாருங்களேன்: இந்த விஷயம் இதைத் தாண்டி எங்கும் போகாது என்று நீங்கள் எனக்கு உறுதிதர வேண்டும். உங்களுடைய சொந்த நன்மைக்காகத் தான் இது, தெரியுமா? சரி, அந்த உறுதி மொழி எனக்குக் கிடைக்குமா?''

''நிச்சயமாக. உண்மையில்.''

''உங்கள் சித்தப்பாவிடம் கூட, அல்லது மிரோன் அலெக்ஸேயெவிச்சிடமோ பேச வேண்டாம். இதுவரை அவர்களிடம் எதுவுமே சொல்லவில்லை என்பதை உங்களால் உறுதியாகக் கூற முடியுமா? பிறகு, மிகவும் நல்லது. இந்த விவகாரத்தை அதனுடைய சொந்தத் தர்க்கத்திற்கே விட்டு விடுவோம். யாரிடமும் ஒரு வார்த்தை கூடப் பேச வேண்டாம்! சரியா? அந்த வேட்டைக்காரன் குண்டை தனது சொந்தக் காலிலேயே போட்டுக் கொண்டான், உங்களுக்கு இதுபற்றி எந்தப் பிரச்சினையும் கிடையாது.''

யாக்கவ் முறுவலித்தான். தன்னிடம் பேசிக் கொண்

டிருந்த மனிதன் முற்றிலும் வித்தியாசமான மனிதனாக மாறி விட்டான்: நகைச் சுவை உணர்வு மிக்கவனாகி விட்டான்.

''போய் வருகிறேன்,'' என்றான். ''நினைவிருக்கட்டும்: உங்களுடைய வாக்குறுதி!''

ஓரளவு மனம் ஆறுதல் பெற்றவனாக, யாக்கவ் வீடு திரும்பினான். அன்று மாலை, மாவட்ட மையத்திற்குப் போய் வரும்படி அவன் சித்தப்பா கூறிய யோசனையை அவன் உடனடியாக ஒப்புக் கொண்டான். எனினும், எட்டு நாட்களுக்குப் பிறகு அவன் திரும்பி வந்த போது, தனது சித்தப்பா வீட்டில் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, மிரோன் கூறிய தகவல்கள் அவனுடைய பயத்தைப் புதிய கோணத்தில் உசுப்பிவிட்டன. மிரோன் சொன்னான்:

''நான் நினைத்திருந்ததற்கும் மாறாக, நெஸ்தெரேன் கொ அவ்வளவு பெரிய சோம்பேறி அல்ல. நகரத்தில் மூன்று பேரைப் பிடித்து விட்டார். ஒரு பள்ளி ஆசிரியர் மதேஸ் தவ், மற்றும் இருவர்.''

''ஆலையில் யாராவது?'' யாக்கவ் கேட்டான்.

''ஆலையிலா? செதோவ், கிரிகுனோவ், அப்ராமவ் மற்றும் ஐந்து பேர், இளைஞர்கள். நகரத்திலிருந்து வந்த அதிகாரிகளால் இந்தக் கைது வேலைகள் நடந்தன, உண்மையில் அவை எல்லாமே நெஸ்தெரேன்கொவின் வேலைதான். ஆக அவர் மனைவியினுடைய உடல் நலக் குறைவினால் லாபமடைந்தவர்கள் நாம் தான். ஆமாம், அவர் ஒன்றும் முட்டாள் இல்லை. தான் கொல்லப் படக் கூடும் என்று அவர் அஞ்சுகிறார்...''

''இப்பொழுதெல்லாம் கொலை செய்வதை அவர்கள் நிறுத்தி விட்டார்கள்,'' என்று அலெக்ஸி குறிப்பிட்டான்.

''ஹூம்,'' என்று திரும்பச் சொன்னான் மிரோன். ''ஓ, ஆமாம், நான் மறந்து விட்டேன். நகரத்தில் மற்றும் ஒருவன், அந்த ஆள்—அவனுடைய பெயரென்ன? வேட்டைக்காரன்...''

''நாஸ்கோவா?'' என்று யாக்கவ் தெளிவில்லாது, பயத்தோடு கேட்டான்.

''அவனுடைய பெயர் எனக்குத் தெரியாது. பாதிரியாருடைய விதவையோடு வசித்து வந்தான். அவளுடைய குளியலறைக்குள்ளே அந்தப் புரட்சிவாதிகள் தங்களது மாநாடுகளை நடத்தி வந்தார்கள். அதே நேரத்தில், உனக்குத் தெரியுந் தானே, உன்னுடைய அப்பா அந்தப் பணி

யாளின் வீட்டில் மகிழ்ச்சியாகப் பொழுதைக் கழித்து வந்தார். மகிழ்ச்சியடையக் கூடிய பொருத்தம் அல்ல...''

''ஓ, ஆமாம்,'' என்று தனது வழுக்கைத் தலையை அசைத்தபடி அலெக்ஸி கூறினான். ''ஆனால் அவனோடு நாம் என்ன செய்ய முடியும்?''

யாக்கவினுடைய தலை கிறுகிறுத்தது, தன் சித்தப்பாவினுடைய அடுத்த பேச்சை அவனால் கேட்டுக்கொள்ள முடியவில்லை. அவன் நினைத்தான்: நாஸ்கோவ் கைது செய்யப்பட்டு விட்டான்; பிறகு, தெளிவாகவே தெரிகிறது, அவனும் ஒரு சோஷலிஸ்டு தான், கொள்ளைக்காரன் அல்ல. எசமானனைக் கொல்லவோ, அடிப்பதற்காகவோ தான் தொழிலாளர்கள் அவனுக்கு உத்தரவிட்டிருக்கிறார்கள். ஐயோ! அதே தொழிலாளர்களைத் தான் யாக்கவ் மிகுந்த அடக்கமும், மிகுந்த மரியாதையும் கொண்டவர்கள் என்று கருதி வந்தான்! செதோவ், எப்போதுமே கவர்ச்சியாகவும், சுத்தமாகவும் இருப்பவன், ஆனால் இளைஞனாக இருக்கவில்லை; ஃபிட்டர் கிரிகுனோவ், பண்பட்டவன், கிளர்ச்சி மிக்கவன்; கண்ணுக்கு மகிழ்வுதரும் அப்ராமவ், ஒரு நல்ல பாடகனும், அற்புதமான தொழிலாளியும் ஆவான். இவர்கள் எல்லாம் இவனுடைய எதிரிகளாக இருப்பார்கள் என்று யாரால் தான் எண்ணிப் பார்த்திருக்க முடியும்?

தான் வெளியூர் சென்றிருந்த இந்த சில நாட்களிலேயே தன் சித்தப்பாவின் வீட்டில் கூடுகின்ற கூட்டமானது மிகவும் இரைச்சலானதாகவும், முன்னைக் காட்டிலும் சஞ்சலம் மிக்கதாகவும் அவனுக்குத் தோன்றியது. யாரைப் பற்றியும், எதைப் பற்றியும் நல்லதே பேசியறியாத, தொலைவிலிருந்த படியே வாழ்க்கையைக் கிண்டல் மிக்கதாகக் காணக் கூடிய தங்கப் பல் கட்டிய டாக்டர் யாக்கவ்லெவ் முன்னை விட முன்னணியில் நின்றார். சரசரக்க அவன் பத்திரிகைகளை புரட்டுகின்ற அந்த முறையே ஏதோ அச்சந்தருவது போல இருந்தது.

''ஆமாம்,'' தனது தங்கப் பற்கள் மினுமினுக்க அவன் கூறினான். ''நாம் இப்பொழுதுதான் இயங்கத் தொடங்கி இருக்கிறோம்; நாம் விழித்துக் கொண்டு வருகிறோம்! தங்களுடைய எசமானன் வெளியூரிலிருந்து எதிர்பாராத படி, திடீரென்று வீட்டிற்குள் வருவதைக் கண்ட சோம்பேறி வேலையாட்களைப் போல மக்கள் நடக்கத் தொடங்கி இருக்கிறார்கள். அவசரப்பட்டு, விரைந்து, தங்களுடைய வேலை

களை இழக்க நேரிடுமோ என்ற அச்சத்தில், கவனிப்பாரற்றுக் கிடந்த வீட்டை பெருக்கவும், தூசி துடைக்கவும் செய்கிறார்கள்.''

''உங்களுடைய பேச்சு இரு பொருள் தருவதாக இருக்கிறது,'' என்று முகத்தைச் சுளித்தபடி மிரோன் குறிப்பிட்டான். ''இவை எல்லாமே உங்களுடைய அராஜகவாதம் மற்றும் ஐயுறவுவாதம்...''

ஆனால் டாக்டருடைய குரல் உரத்துக் கேட்டது, அவருடைய பேச்சு நீண்டு சென்றது, மேலும் அவருடைய வார்த்தைகள் யாக்கவினுடைய மனத்திலே கலவரத்தை விதைத்தன. ஒவ்வொருவரும் எதைப் பற்றியோ பயப்படுவது போலக் காணப்பட்டது. அவர்கள் எல்லாருமே அவப்பேற்றை எதிர்நோக்கி இருந்தனர், மற்றவர்களுடைய அச்சத்தைப் பெரிது படுத்தினார்கள். உண்மையில், மக்கள் என்ன செய்து கொண்டிருந்தார்களோ—அவர்களுடைய சொந்த சிந்தனைகளையும், வார்த்தைகளையும் பற்றித் தெளிவாகப் பயப்படுவது போலவே காணப்பட்டது. இது, தன்னைச் சுற்றிலும் இருக்கக் கூடிய பரந்துபட்ட முட்டாள்தனத்தை ஆழப்படுத்துவது போலவே யாக்கவிற்குத் தெரிந்தது; அதே வேளை அவனுடைய சொந்த பயம் கற்பனையான அச்சுறுத்தல் அல்ல வென்றும், ஆனால் அவை மிகவும் எதார்த்தமான அச்சங்கள் என்றும், தனது கழுத்தைச் சுற்றிப் போடப்பட்ட கயிற்றைப் போல பயங்கரமானவை என்றும் கருதினான். இந்தக் கயிறானது கண்ணுக்குத் தெரியாததாக இருந்தது, ஆனால் அது அவனை ஏதோ மிகப் பெரியதும், தடுக்க முடியாததுமான பேராபத்தை நோக்கி இழுத்துச் செல்வது போல இருந்தது.

சுமார் இரண்டு மாதங்களுக்குப் பிறகு, நகரில் நாஸ்கோவ் திரும்பவும் தலைக் காட்டிய போது, மெலிந்து, வெளிறிப் போய், மொட்டையடிக்கப்பட்ட தலையுடன் ஆலையில் அப்ராமவ் திரும்பத் தோன்றிய போது, அவனுடைய பயம் இன்னும் அதிகரித்தது.

''என்னை, கிழவனைத் திரும்பவும் நீங்கள் எடுத்துக் கொள்வீர்களா?'' அப்ராமவ் முறுவலித்தவாறே கேட்டான். அதை மறுப்பதற்கு யாக்கவுக்குத் துணிச்சல் இல்லை.

''என்னடா, சிறையில் மோசமாக இருந்ததா?'' என்று அவன் கேட்டான். இன்னமும் முறுவலித்தபடி அப்ராமவ் பதிலளித்தான்:

''அங்கே பயங்கரமான கூட்டம்! அந்த டைபாயிடு ஜுரம் மட்டும் உதவி செய்திரா விட்டால், தலைமையதிகாரிகள் எங்கே மக்களை இழுத்து வருகின்றார்கள் என்று எனக்குத் தெரியாது!''

''ஆம், நீ முறுவலிக்கிறாய்,'' என்று நெசவாளி போன பிறகு யாக்கவ் நினைத்தான். ''ஆனால் நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் என்று எனக்குத் தெரியும்...''

அன்று மாலையிலேயே, அப்ராமவ் குறித்து யாக்கவுடன் மிரோான் ஏளனமாகச் சண்டைக்குப் போய் விட்டான், ஒரு வேலைக்காரனிடம் பேசிக் கொண்டிருப்பது போல, காலைத் தரையிலே ஓங்கி மிதித்தான்:

''உனக்குப் பைத்தியமா?'' என்று கத்தினான், அவனது மூக்குக் கோபத்தால் சிவந்து போனது. ''அவனை நாளையே வெளியேற்று...''

அதன் பிறகு, சில நாட்களுக்குப் பின், ஓகா நதியிலே காலைக் குளியலை முடித்து விட்டுவர யாக்கவ் சென்ற போது, தூண்டில்களோடு கரையை ஒட்டி படகைச் செலுத்தியபடி வந்த லெப்டினெண்ட் மாவ்ரினையும், நெஸ்தெரேன்கொவையும் சந்தித்தான். அந்தத் திமிர் பிடித்த லெப்டினெண்ட், யாக்கவைப் பார்த்து எதுவுமே பேசாது தலையசைத்தான், திரும்பவும் ஆற்றின் நடுப் பகுதிக்குப் படகைச் செலுத்தினான்; ஆனால் நெஸ்தெரேன்கொ கரையேறி தன் ஆடைகளைக் களையத் தொடங்கினான். தணிவான குரலில் அவன் பேசினான்:

''நீங்கள் அப்ராமவை வெளியேற்றி இருக்கக் கூடாது. அது பற்றி உங்களுக்கு நான் எச்சரிக்காமல் போனதற்காகப் பெரிதும் வருந்துகிறேன்.''

''அது மிரோான் தான்,'' என்று யாக்கவ் முணுமுணுத்தான், போலீஸ் அதிகாரியினுடைய மூச்சில் சாராய நெடி அழுத்தமாக இருந்ததைக் கவனித்தான்.

''அப்படியா?'' என்று கேட்டான் நெஸ்தெரேன்கொ. ''ஆக அது உங்களால் ஏற்படவில்லை?'

''இல்லை, என்னால் இல்லை.''

''பரிதாபமானது. அவனை ஒரு தூண்டில் புழுவாகப் பயன்படுத்தி இருக்க முடியும். ஒரு கையாள்.''

போலீஸ் அதிகாரி நிமிர்ந்தான், நிர்வாணமாக நின்றான், சூரிய ஒளியில் பொன் மஞ்சள் நிறமாகத் தோன்றினான். துள்ளிப் பாய்கின்ற மீனின் செதில்களைப் போல

அவனுடைய தோல் மினுமினுத்தது. யாக்கவை உடன் சதி காரன் என்பது போலப் பார்த்தபடி கேட்டான்:

''தங்கள் நண்பனைப் பார்த்தீர்களா? வேட்டைக்கார னை?''

போலீஸ் அதிகாரி அமைதியாகக் கிளுகிளுத்தான், தனக் குத்தானே நிறைவு பெற்றுக் கொண்டான்.

''எதற்கான உங்கள் மீது தாக்கினான் என்று உங்களுக் குத் தெரியுமா? அவன் தனக்கென்று ஓர் இரட்டைக் குழல் துப்பாக்கி வாங்க விரும்பினான். எல்லாம் வெறிதான், எனது அருமைத் தம்பி, இதற்காகவோ, அதற்காகவோ வெறிதான், அதுதான் மக்களை ஆட்டிப்படைக்கிறது. ஆமாம், அது அப்படித்தான்! வேட்டைக்காரன் மிகவும் பயன்படக் கூடும், அவன் உங்களிடத்தில் தவறாக நடந்து கொண்டதை வைத்து, அவனை இப்போது என்னுடைய பிடியிலே வைத்திருக்கிறேன்...''

''தவறா? ஆனால் நீங்கள் சொன்னது...''

''தவறு, ஐயா, தவறு!'' போலீஸ் அதிகாரி அழுத்த மாகத் திருப்பிச் சொன்னான். தானாகவே சிலுவை வைத் துக் கொண்டு, குதிரை பாய்வது போல, கால்களை நீட் டியபடி நீருக்குள் பாய்ந்தான்.

''உங்கள் எல்லாருக்கும் சனியன் பிடிக்கட்டும்,'' என்று சோர்வோடு சிந்தித்தான் யாக்கவ்.

திடீரென்று—ஆரவாரமிக்க இரைச்சல் கேட்டு வந்த அறையின் கதவைச் சாத்தியது போல—மரணம் வந்தது.

இரவில் தூங்கிக் கொண்டிருந்த யாக்கவை எழுப்பி, அவன் தாயார் கண்ணீர் மல்கக் கூறினாள்:

''எழுந்திரு. தீஹன் வந்து விட்டான். சித்தப்பா அலெக்ஸி இறந்து விட்டார்!''

படுக்கையினின்றும் துள்ளியவாறு, யாக்கவ் முணுமுணுத் தான்:

''இதெல்லாம் எப்படி! ஏன், அவர் நோய்வாய்ப்படவே இல்லை...''

வாசற்கதவைத் தள்ளிக் கொண்டு, அவன் தந்தை உள்ளே நுழைந்தான், அவனது மூச்சு கனமாக வந்து கொண் டிருந்தது.

''தீஹன்,'' அவன் முணுமுணுத்தான். ''தீஹன் வந் தால்—நல்லனவற்றை எதிர்பார்க்க வேண்டா! அது அப் படித்தான். யாக்கவ், ஹூம்! இவ்வளவு சீக்கிரமாகவா...''

அவன் வெறுங்கால்களோடும், இரவு நேர உடையோடும், தோளுக்கு மேலாக ஒரு கவுன் தொங்கிக் கொண்டிருக்கும் படியாகவும் தோன்றினான். தனது காதை இழுத்துவிட்டுக் கொண்டிருந்தான், அந்த அறை அறிமுகமில்லாத ஒன்று என்பது போலத் தன்னைச் சுற்றிலும் பார்த்துக் கொண்டு, முணுமுணுத்துக் கொண்டிருந்தான்:

''ஹூம்...''

''அது எப்படி யிருக்க முடியும்?'' என்று தடுமாற்றத்தோடு யாக்கவ் கேட்டான்.

''அவருடைய பாவங்கள் அவர் மீது கிடந்தன, அதை ஒத்துக் கொள்ளக் கூட அவருக்கு நேரமிருந்ததில்லை,'' என்றாள் அம்மா, ஒரு பெரிய மாவு மூட்டை போலக் காணப் பட்டாள்.

யாக்கவ் வண்டியை ஓட்ட, ஒரு திறவை வண்டியில் அவர்கள் கிளம்பினார்கள். தனது உயரமான இருக்கையின் மீது அமர்ந்தபடி ஒரு குதிரையின் மீது தீஹன் வருவதைக் கவனித்தான். மேலும் கீழும் அவன் அசைந்து கொண்டு சென்ற போது, அவனுடைய நிழல் தரையின் மீது தட்டையாகப் படிந்து, தரையைத் துளைத்துக் கொண்டு செல்லப் போவது போலக் காணப்பட்டது.

வெளிவாசலுக்கும் விறகுக் கிடங்கிற்குமாக நடை போட்டுக் கொண்டிருந்த ஓல்கா அவர்களை வெளி முற்றத்திலே சந்தித்தாள். தனது இரவு உடைக்கு மேலாக ஒரு வெள்ளை ஸ்கர்ட்டைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்தாள், ஒளி ஊடுருவித் தெரியும் நீலவொளி போலக் காணப்பட்ட நிலவொளியின் கீழே, முற்றத்தில் பதிக்கப்பட்டுள்ள கற்களின் மீது அவளது கால்களினின்றும் நீண்டு பரவிய கனத்த நிழலானது பார்ப்பதற்கே மிகவும் விநோதமானதாக இருந்தது.

''ஆக என் வாழ்க்கை முடிந்து போய் விட்டது,'' என்றாள் மெதுவாக. அவளுக்கு மிக அண்மையில் நின்ற அவர்களுடைய கறுப்பு நாய் கூச்சும், அவளது ஒவ்வொரு எட்டுக்கும் பின் தொடர்ந்து சென்றது.

சமையலறையின் சன்னலுக்கு வெளியே ஒரு பெஞ்சின் மீது மிரோன் கூனிய தோளோடு அமர்ந்திருந்தான்; தீக்கங்குடன் காணப்பட்ட சிகரெட் ஒன்றை ஒரு கையிலும், பளிச் சென்று மின்னிய தங்கச் சங்கிலியுடன் இணைக்கப்பட்டிருந்த கண்ணாடியை மற்றொரு கையில் வைத்து ஆட்டிக்

கொண்டும் இருந்தான். கண்ணாடி கழற்றப்பட்ட அவனுடைய மூக்கானது முற்றிலும் பெரியதாகத் தோன்றியது. மிரோனுக்குப் பக்கத்தில் யாக்கவ் அமைதியாக உட்கார்ந்தான், அதே வேளை அர்தமோனவ், பிச்சை கிடைக்கும் என்ற நம்பிக்கையில் நிற்கும் ஒரு பிச்சைக்காரனைப் போல, திறந்த சன்னலையே வெறித்துப் பார்த்துக் கொண்டு, முற்றத்தின் நடுவிலேயே நின்று விட்டான். வானத்தை நோக்கித் தனது கண்களைத் திருப்பிய ஓல்கா, பண்பு மேம்பட்ட தொனியில் நதால்யாவிடம் பேசினாள்:

''எப்போது என்று எனக்கே தெரியாது... அவருடைய அருமையான தோள் குளிர்ந்து போயிருப்பதையும், வாய் திறந்திருப்பதையும் திடீரென்று தான் பார்த்தேன். கணப் பொழுதுக்குக் கூட, கடைசியாக ஒரு வார்த்தை சொல்லிச் சொல்ல என் அன்புக் கணவருக்கு நேரம் கிடைக்கவில்லை. தனது நெஞ்சு வலிப்பதாக நேற்றுச் சொன்னார்.''

அவள் மிகவும் தணிந்து பேசினாள்; அவளுடைய வார்த்தைகள் கூட நிழல்களை ஏற்படுத்துவது போலக் காணப்பட்டது.

மிரோன் தனது சிகரெட்டை அப்பால் வீசி எறிந்தான். யாக்கவின் தோள் மீது தனது தலையை முட்டியவாறு, மெதுவாக அழுது புலம்பினான்:

''அவர் எவ்வளவு அருமையானவர் என்பது உனக்குத் தெரியாது...''

என்ன சொல்வதென்று தெரியாமல் ''என்ன செய்ய முடியும்?'' என்று யாக்கவ் திருப்பிச் சொன்னான். தன் சித்தியிடமும் அவன் ஏதாவது சொல்லியாக வேண்டும்—ஆனால் என்ன சொல்வது? அவன் மௌனமாகிப் போனான் பெஞ்சுக்குக் கீழே தனது கால்களை மாறிமாறிப் போட்டபடி, தரையையே பார்த்தபடி இருந்தான்.

பியோத்தர் முனகினான், சஞ்சலத்தோடு வீட்டிற்குள்ளாக நகர்ந்தான். யாக்கவ் அவனைத் தொடர்ந்து கட்டை விரல்களைப் பதித்தபடி நடந்தான். அவனுடைய சித்தப்பா ஒரு போர்வையால் மூடப்பட்டுக் கிடந்தார். மோவாயைத் தலையோடு சேர்த்து ஒரு கைக்குட்டையால் கட்டப்பட்டிருந்தது. உச்சியில் போடப்பட்டிருந்த அந்த முடிச்சுகள், துருத்திக் கொண்டிருக்கும் கொம்புகளைப் போலக் காணப்பட்டன. போர்வை விறைப்பாக இழுத்து மூடப்பட்டிருந்தது, ஆகவே கட்டை விரல்கள் இரண்டும் அதைக் கிழித்துக்

கொண்டு வர முயல்வது போலக் காணப்பட்டன. விளிம் பில் குறுகிப் போயிருந்த சந்திரன், சன்னல் வழியாகப் பிரகாசத்தோடு எட்டிப் பார்த்தது. திரை ஆடிக் கொண் டிருந்தது. முற்றத்தில் வெளியே கூச்சும் ஊளையிடத் தொடங்கியது, அதனுடைய பிரதிபலிப்பைப் போல, சிலு வை வைத்துக் கொண்டு அர்தமோனவ் உரத்த குரலில் பேசி னான்:

''எளிய வாழ்க்கை, சுலபமான சாவு...''

சன்னலுக்கு வெளியே பார்த்தபோது, வேரா பபோ வா, துறவிப் பெண்ணைப் போல கருப்பு உடையணிந்து அவளது சித்திக்கு அருகே மேலுங்கீழும் நடை போட்டபடி இருப்பதை யாக்கவ் கண்டான். திரும்பவும் ஓல்கா பண்பு மேம்பட்ட அதே தொனியில் தனது கதையைச் சொல்லிக் கொண்டிருந்தாள்:

''தூக்கத்திலேயே ஆவி பிரிந்து விட்டது...''

''அப்படியே நில்!'' என்று வியாலவ் மெதுவாகக் கத்தி னான். கொஞ்சம் உலர்ந்த புல்லைக் கையில் வைத்துக் கொண்டு தனது குதிரையைத் தேய்த்து விட்டுக் கொண் டிருந்தான்; அது இவனுடைய காதுகளை பற்களால் பற்ற முயன்றதால் தலையை ஆட்டிக் கொண்டே இருந்தான். சன்னலருகே தன் மகனோடு சேர்ந்து கொண்டு, அர்த மோனவ் முணுமுணுத்தான்:

''முட்டாள் எப்படிக் கத்துகிறான். அவனுக்கு ஒன்றும் தெரியாது போய்விட்டது...''

''எதுவும் சொல்ல வேண்டிய தேவையில்லை,'' என்று யாக்கவ் முடிவு செய்தான். வெளி வராந்தாவுக்கு வந்த போது, முற்றத்தில் பதிக்கப்பட்டிருந்த கற்களின் மீது இருந்த தூசியைப் பெருக்கியபடி இருந்த, வெள்ளையும் கருப்புமாக, இரு பெண்களுடைய நிழல்களைக் கவனித்த படி நின்றான். கற்கள் மெல்ல மெல்ல பிரகாசமாயின. நதால்யா தீஹனிடம் கிசுகிசுத்துக் கொண்ருந்தாள், அவ னும் ஒப்புதலுக்குத் தலையசைத்துக் கொண்டிருந்தான். குதிரையும் கூட ஏற்றுக் கொண்டது. அதனது கண்ணிலே செம்பின் பளபளப்பு மின்னியது. பியோத்தர் வெளியே வந்தான், நதால்யா அவனிடம் கூறினாள்:

''நாம் நிகீதா இல்யீச்சுக்கு தந்தி கொடுத்தாக வேண் டும். அவன் எங்கே இருக்கிறான் என்று தீஹனுக்குத் தெரி யும்.''

''தீஹனுக்குத் தெரியுமா!'' பியோத்தர் குறும்பாகத் திரும்பிச் சொன்னான். ''அதை அனுப்பி விடு, மிரோன்.''

மிரோன் எழுந்து கதவை நோக்கி நகர்ந்தான். அவனது தோள் கதவுக் கைப்பிடியில் இடித்துக் கொண்டது, அதைத் தள்ளி விடுவதற்காகக் கணப் பொழுது நின்றான்.

''இல்யாவுக்கும் தெரிவித்து விடு,'' மிரோன் மறைந்து போகும் போது அர்தமோனவ் கூறினான்; ஆனால் இருள் நிறைந்த பாதை வழியாக மிரோன் பதிலளித்தான்:

''இல்யா வர முடியாது.''

''நான் அவரோடு முப்பது ஆண்டுகள் வாழ்ந்தேன்,'' என்றாள் ஓல்கா, இதைச் சொல்லும் போது ஒவ்வொரு வார்த்தைக்கும் அவளாகவே வியந்து கொள்வது போலிருந்து. ''நாங்கள் திருமணம் செய்து கொள்வதற்கு நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் கூட சேர்ந்து வாழ்ந்தோம், நாங்கள் நண்பர்களாக இருந்தோம்; இப்போது நான் என்ன செய்கிறேன்?''

பியோத்தர் யாக்கவுக்குப் பக்கமாக நெருங்கி வந்தான்.

''இல்யா எங்கிருக்கிறான்?''

''எனக்குத் தெரியாது.''

''இது பொய் தானே?''

''இல்யாவைப் பற்றிப் பேசுவதற்கு இதுவல்ல நேரம், அப்பா.''

முற்றத்திற்குள்ளாக விரைந்து வந்த டாக்டர் யாக்கவ்லெவ் கேட்டான்:

''படுக்கை யறையிலா?''

''முட்டாள்!'' யாக்கவ் சிந்தித்தான். ''உன்னால் செத்துப் போனவனைத் திரும்பக் கொண்டு வர முடியாது.''

இந்தத் துயரமான நேரத்தைத் தவிர்க்க இயலாதபடி அவன் தவித்துப் போனான். ஒவ்வொன்றுமே அவ்வளவு கிளர்ச்சியற்றும், அவ்வளவு தேவையற்றும் இருந்தது: ஆட்கள்; அவர்களுடைய வார்த்தைகள்; நிலவொளியில் வெண்கலம் போலப் பிரகாசிக்கும் கருஞ்சிவப்புக் குதிரை; துயர மிகுந்த மௌனத்தோடு இருந்த கருப்பு நாய். தன் கணவனோடு தான் எந்தளவுக்கு மகிழ்ச்சியாக இருந்தேன் என்று அவனது சித்தி ஓல்கா பெருமையடித்துக் கொள்வது போலக் காணப்பட்டது. முற்றத்தின் ஒரு மூலையிலே அமர்ந்திருந்த அவனுடைய அம்மா பொய்யாகப் புலம்பிக் கொண்டிருந்தாள். அவனுடைய தந்தையின் கண்கள் நிலைக்குத்தியது

போல இருந்தன, முகம் மரக்கட்டை போல உணர்ச்சி யற்றுக் காணப்பட்டது. மொத்தத்தில், ஒவ்வொன்றுமே தேவைக்கு மேல் சோர்வானதாகவும், இரங்கத் தக்கதாக வும் காணப்பட்டது.

சவ அடக்க நாளன்று, ஏற்கெனவே சவப் பெட்டியானது கீழே இறக்கப்பட்டு, கைப்பிடியளவு மஞ்சள் நிற மண்ணை அதன் மேலே போட்ட நிலையில், நிகீதா அங்கே தோன்றி னான்.

''ஹூம்,'' என்று அந்தக் கூனல் முதுகுத் துறவியைப் பார்த்து யாக்கவ் எண்ணினான். அவனோ, தானே நட்டு வைத்த ஒரு பிர்ச் மரத்தின் மீது சாய்ந்து கொண்டிருந்தான்.

தனது தம்பியை நெருங்கிய அர்தமோனவ் தனது கண் ணீரை நீவி விட்டுக் கொண்டே ''நீ சுணங்கிவிட்டாய்,'' என்றான். ஓர் ஆமையைப் போல, நிகீதா தனது தலையைத் தனது கூனலுக்குள்ளே இழுத்துக் கொண்டான். அவனது தோற்றம் பிச்சைக்காரனைப் போல இருந்தது: சூரிய ஒளி யால் துறவியின் உடைச் சாயம் போயிருந்தது, ஒரு பழைய தகர வாளியைப் போல முக்காடு தூசி படிந்திருந்தது, கால ணிகள் குதிங்காலுக்குக் கீழே கிழிந்து போயிருந்தன. அவ னது தூசி படிந்த முகம் வீங்கிப்போயிருந்தது. கல்லறையைச் சுற்றி நின்றவர்களுடைய முதுகுகளைத் தனது மங்கலான கண்களால் பார்த்தபடி பியோத்தர் காதில் விழாதபடி ஏதோ சொன்ன போது அவனது சிறிய நரைத்த தாடியா னது நடுங்கியது. யாக்கவ் சுற்றிலும் கள்ளப் பார்வை பார்த் தான். ஊனமுற்ற இந்தச் சகோதரனும், பணக்காரக் குடும் பத்தின் உறவினனுமான இந்தத் துறவியை ஏராளமான கண் கள் ஒரு புது மாதிரியான சண்டையை எதிர் நோக்கியபடி, நிலைக் குத்திப் பார்த்தன. தங்கள் தந்தையினுடைய வியா பார்த்தில் கூனனுடைய பங்கினைத் தங்களது கட்டுப்பாட் டின் கீழ் வைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக, அர் தமோனவ் சகோதரர்கள் இவனைக் கட்டாயப் படுத்தி துறவியாகச் செய்தார்கள் என்பதை நகர மக்கள் உறுதி யாக நம்பினார்கள் என்பது யாக்கவுக்குத் தெரியும்.

தடித்த, மெல்லமைதி வாய்ந்த பாதிரியார், ஃபாதர் நிகோலாய், தனது கனத்த குரலில், பண்பு மேம்பட்ட முறை யில் ஓல்காவிடம் பேசினார்:

''அழுது கொண்டும் அரற்றிக் கொண்டும் நாம் கட

வுளை அவமதிக்காது இருப்போமாக, ஏனெனில் இது அவருடைய விருப்பம்...''

ஓல்காவும் பண்பு மேம்பட்ட முறையிலே பதில் சொன்னாள்:

''ஆனால் நான் அழுது கொண்டிருக்கவில்லை, நான் புகார் செய்து கொண்டிருக்கவில்லை.''

அவளுடைய கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன. விநோதமான, நடுங்குகின்ற அசைவுகளுடன், தனது ஸ்கர்ட் பையைத் துழாவி, கண்ணீரால் நனைந்து போன தனது கைக்குட்டையை அதற்குள் திணிக்க முயன்று கொண்டிருந்தாள்.

குழியை நிரப்பிக் கொண்டிருந்த புதை குழி மேற்பார்வையாளனுக்குத் தனது மண்வாரியால் திறமையான முறையில் தீஹன் வியாலவ் மண்ணை வாரிக் கொடுத்தான். அறிவு மழுங்கியவனைப் போல புதை குழிக்குப் பக்கத்தில் மிரோன் நேராகவும், விறைப்பாகவும் நின்றான். கூன் விழுந்த துறவியோ மெதுவான, பணிந்த குரலில் நதால்யாவிடம் கூறினான்:

''ஐயோ, எப்படி மாறிப் போய் விட்டாய்! அடையாளமே தெரியவில்லை!''

மேலும் தனது முன்பக்கத்துக் கூனில் விரலை வைத்து அழுத்தியபடி, தேவையற்றபடி மேலுங்கூறினான்:

''நானா—என்னை எப்போதுமே அடையாளம் கண்டு கொள்ள முடியும். அது யார் — உன்னுடைய யாக்கவா? அங்கே உயரமாக இருப்பது — அல்யோஷாவினுடைய பையன் மிரோனா? ஆக! சரி, நாம் போய்க் கொண்டிருக்கலாம்...''

யாக்கவ் சமாதியிலேயே தயங்கி நின்றான். கண நேரத்திற்கு முன்னால், தொழிலாளர் கூட்டத்தின் மத்தியில் அந்த நொண்டி வாஸ்காவின் அருகே நாஸ்கோவ் நின்றதை அவன் பார்த்து விட்டான்; மேலும், கடந்து செல்கின்ற போது உசாவுவது போல யாக்கவை அந்த வேடுவன் பார்த்த பார்வை இவனுடைய முதுகெலும்பு வரை நடுக்கத்தை ஏற்படுத்தியது. அவன் என்ன சிந்தித்துக் கொண்டிருந்தான், என்ன திட்டமிட்டுக் கொண்டிருந்தான்? தன்னைக் கொல்லக் கூடிய நிலையிலும் அவ்வாறு செய்யாது தனது காலில் மட்டுமே சுட்ட அந்த மனிதனைப் பற்றி நிச்சயமாக தீய எண்ணங்கள் எதுவும் அவனிடம் இருக்க முடியாது.

தனது கோட்டில் படிந்திருந்த மணலைத் தட்டிவிட்ட படி தீஹன் அருகே வந்து பேசினான்:

''சற்று நினைத்துப் பார், எவ்வளவு கடினமாக அவர் முயன்றார்—அலெக்ஸி இல்யீச். ஆனால் பயன் என்ன?.. நிகீதா இல்யீச் உடல் நலமின்றி இருக்கிறார்...''

''இங்கே ஒருவன் இருக்கிறான்...'' என்றான் யாக்கவ் திடீரென்று, அதே கணமே நிறுத்திக் கொண்டு விட்டான்.

''யார்?''

''சித்தப்பாவுக்காகத் தொழிலாளர்கள் வருத்தப்படுகிறார்கள்.''

''உண்மைதான்.''

''இங்கு ஒரு வேட்டைக்காரன் இருக்கிறான், நாஸ்கோவ்,'' யாக்கவ் திரும்பவும் தொடங்கினான். ''அவனைப் பற்றி என்னால் உனக்கு ஏதோ சொல்ல முடியும்...''

''ஒரு குதிரை செத்தால் கூட—மக்கள் வருத்தப்படுவார்கள்,'' என்று சிந்தனை வயப்பட்ட படி கூறினான் தீஹன். ''அலெக்ஸி இல்யீச் ஓட்டத்திலேயே வாழ்ந்தார், ஓட்டத்திலேயே மாண்டார்—எதனோடோ மோதிக்கொண்டது போல. சாவதற்கு ஒரு நாளைக்கு முன்பாக என்னிடம் சொன்னார்...''

தான் சொல்ல விரும்பியது என்ன என்பதை தீஹன் புரிந்து கொள்ள மாட்டான் என்பதை உணர்ந்தவனாய் யாக்கவ் அதை விட்டு விட்டான். நாஸ்கோவ் பற்றி தீஹனிடம் சொல்வதற்கு அவன் தன் மனத்தைத் தயார் செய்து கொண்டான், ஏனெனில் அவன் யாரிடமாவது சொல்லியாக வேண்டும். சோகமயமான ஈமச் சடங்குக் காரியங்களை விட, நாஸ்கோவைப் பற்றிய சிந்தனை அவனை மேன்மேலும் அழுத்தியது. முதல் நாள் தான், நகரத்தில், ஒரு போர் வீரனுக்குரிய உணர்ச்சியற்ற முகத்துடன் இந்த வளைந்த கால் ஆசாமி திடீரென்று ஒரு தெரு முனையில் யாக்கவுக்கு முன்னால் தோன்றி தனது குல்லாயைக் கழற்றி அதையே வெறித்துப் பார்த்தபடி பேசினான்:

''எனக்குக் கொஞ்சம் கடன் ஏற்பட்டு விட்டது. எனது காலைக் கவனித்துக் கொள்வதற்காகக் கொஞ்சம் பணம் தருவதாக என்னிடம் நீங்கள் வாக்களித்தீர்கள். இத்துடன் உங்கள் சித்தப்பா வேறு இறந்து போய் விட்டார், ஆக, அவருக்காக வேண்டிக் கொள்வதற்காக ஏதாவது கொஞ்சம். உங்கள் அப்பாவுக்கு வாசித்துக் காட்டுவதற்காக ஓர்

அருமையான அக்கார்டியன் வாங்கக் கூடிய வாய்ப்பும் எனக்கு ஏற்பட்டிருக்கிறது...''

இடி விழுந்தவனைப் போல எந்த வார்த்தையும் பேசாது அவனை யாக்கவ் வெறித்து நோக்கினான். பிறகு நாஸ்கோவ் வற்புறுத்தியும், கண்டிப்புடனும் மேலும் தொடர்ந்தான்:

''உங்களுடைய நன்மைக்காக, ருஷ்யாவின் பகைவர்களை எதிர்த்து நான் வேலை செய்து கொண்டிருக்கிறேன் என்பதைப் பார்க்கையில்...''

''எவ்வளவு?'' என்று யாக்கவ் கேட்டான்.

சற்று இடை வெளிக்குப் பிறகு, நாஸ்கோவ் பதிலளித்தான்:

''முப்பத்தைந்து ரூபிள்கள்.''

யாக்கவ் அவனிடம் பணத்தைக் கொடுத்து விட்டு அங்கிருந்து அவசரமாகக் கிளம்பினான், கோபமும் பயமும் கலந்தவாறு சிந்தித்துக் கொண்டே சென்றான். ''என்னை முட்டாளாகக் கருதுகிறான், அவனுக்கு நான் பயப்படுவதாக நினைக்கிறான், போக்கிரி! ஓகோ, யார் என்பதை உனக்குக் காட்டுகிறேன், பார்!..''

மேலும் இப்போது, கல்லறையினின்றும் மெதுவாக வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்த போது, ஒரு சிந்தனையில் யாக்கவ் மூழ்கிப் போனான்: இறைச்சிக் கொட்டிலை நோக்கிச் செல்லும் மாட்டைப் போல, சந்தேகமில்லாதபடி தன்னை இழுத்துச் செல்ல முயலும் இந்த மனிதனிடமிருந்து தான் விடுவித்துக் கொள்வது எங்ஙனம்.

ஆரவாரமிக்க நினைவு விருந்து நேரமில்லாதபடி நீண்டு கொண்டே சென்றது. மகிழ்ச்சிப் பெருக்குண்ட விருந்தினர்கள் ஆலய அதிகாரி கார்த்சேவையும், இசைப்பாடல் குழுவினரையும் இறந்து போனவரின் நினைவுக்குப் பாடவைத்தார்கள். ஜிதேய்கின் அளவுக்கு மீறிக் குடித்து, எல்லாவற்றையும் மறந்தவனாய், தனது முள்கரண்டியைக் காட்டியபடி கர்ஜிக்கத் தொடங்கினான்:

கடந்த காலப் பெருமைதனை வீரர்தாம் நினைத்திட்டார்.
கடைசி மட்டும் போரிட்ட படுகளப் பெருமைதனை...

மெல்லிய சிறகுகளைக் கொண்டு திணிக்கப் பட்ட தலையணை போல, கொழுத்த உடம்பு கொண்ட ஸ்தெபான்

பார்ஸ்கி, தனது வண்டியை நிறைத்தவாறு இருந்து கொண்டு உரத்த குரலில் புகழ்ந்து பேசினான்:

''சரி, பியோத்தர் இல்யீச், உன் சகோதரனை நீ கட்டாயம் நேசித்தாய்! இது போன்ற ஒரு விருந்தை அவ்வளவு சீக்கிரம் மறந்து விட முடியாது!''

நன்கு குடித்திருந்த தனது தந்தை எரிச்சல் மிகுந்த கிண்டலுடன் பதில் பேசியதை யாக்கவ் கேட்டான்:

''வெகு சீக்கிரத்திலேயே எல்லாவற்றையும் நீ மறந்து விடுவாய். நீ சீக்கிரமாகவே உடைத்து விடுவாய்.''

தன் தம்பி மகனுடைய விருப்பத்திற்கு மாறாக ஜிதேய்கின், பார்ஸ்கி, வரபோனவ் மற்றும் சில முக்கியமான நகரத்து ஆட்களை பியோத்தர் அழைத்திருந்தான், எனவே தனது வெறுப்பை மறைப்பதற்கு மிரோன் எந்தவிதமான முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. நினைவு விருந்துக்கான மேசையின் முன்னர் அவன் அரை மணி நேரத்திற்கு மேல் தங்கவில்லை, பிறகு எழுந்து, கொக்கைப் போல விறைப்பாக அப்பால் நகர்ந்து போய்விட்டான். அதற்குச் சற்று பின்னர் ஓல்காவும் அமைதியாக அங்கிருந்து நழுவிச் சென்றாள்; துறவியும் கூட, சீக்கிரமாகவே காணாமற் போய் விட்டான்; துறவி மடத்தில் அவனுடைய வாழ்க்கையைப் பற்றி பாதிகுடிவெறியில் இருந்த விருந்தினர்கள் கேட்ட விசாரணைகளால் சங்கடப்பட்டே அவன் போய் விட்டான் என்பது தெளிவானது போலக் காணப்பட்டது. வந்திருந்த ஒவ்வொருவரையும் புண்படுத்த வேண்டும் எனத் தீர்மானித்திருந்தவனைப் போல பியோத்தர் நடந்து கொண்டான், தன் அப்பாவுக்கும் நகரத்து ஆட்களுக்கும் ஒரு சண்டை ஏற்படும் என்ற எதிர்பார்ப்பில் யாக்கவ் காத்துக்கொண்டிருந்தான்.

நதால்யாவும் எரிச்சலடையத் தொடங்கினாள், பபோவா ஓல்கா மீது அக்கறை காட்டியதால் புண்பட்டு வீட்டிற்குச் சென்றாள்; தகப்பனரோ, ஏதோ ஒரு காரணத்திற்காகத் தன் தம்பியினுடைய அறையிலேயே அந்த இரவைக் கழிப்பதென்று முடிவு செய்தான். இவை எல்லாமே பொருளற்ற, சலனபுத்தியுள்ள தேவையற்ற ஏறுமாறான நடத்தையின் பிரதிபலிப்புத்தான் என்பது போல யாக்கவுக்குத் தோன்றியது; அது அவனது சங்கடத்தை மேலும் அதிகரிக்கச் செய்தது. தனது சோஃபாவில் படுத்தான், தூங்குவதற்காக சுமார் இரண்டு மணி நேரம் கழித்தான். இறுதியில் அவன்

எழுந்து வெளியே முற்றத்திற்குச் சென்றான். அங்கே சமையலறைச் சன்னலுக்கு வெளியே கிடந்த பெஞ்சின் மீது தீஹன் அமர்ந்திருந்தான், அவனுக்கு அருகே துறவியினுடைய கருத்த உருவத்தைக் கண்டான், உடைந்து போன எந்திரத்தின் துணுக்கு ஒன்றை விநோதமாக நினைவுபடுத்துவது போல அவனுடைய தோற்றம் இருந்தது. அவனுடைய தலை தொப்பியில்லாமல் துறவி குள்ளமாகவும், அகன்றும் காணப்பட்டான், குழந்தை முகம் மாதிரி வார்க்கப்பட்டது போல அவன் முகம் காணப்பட்டது. கையிலே ஒரு கிளாஸ் வைத்திருந்தான், அருகிருந்த பெஞ்சின் மீது ஒரு போத்தல் குவாஸ் இருந்தது.

''யாரது?'' மெதுவாகக் கேட்டான், தனது கேள்விக்கு அவனே உடனடியாக பதிலும் சொல்லிக் கொண்டான். ''அது யாஷாவா, இந்தக் கிழவர்களோடு சற்று நேரம் உட்கார், யாஷா!''

நிலவொளியை நோக்கித் தனது கிளாஸைத் தூக்கிப் பிடித்தபடி, அதில் இருந்த திரவத்தை சோதித்துப் பார்த்தான். மணிக் கோபுரத்துக்குப் பின்னே நிலவு ஒளிந்து கொண்டு, அந்தப் பனியின் ஊடாக வெள்ளி போன்று ஒளிர்ந்தது, இரவின் வெது வெதுப்பான கருமையில் விநோதமானதாகத் தோன்றியது. மணிக் கோபுரத்திற்கு வெகு உயரத்தில் கருத்த மேகங்கள் தொங்கின, கரு நீல வெல்வெட் துணி மீது அலங்கோலமானபடி அழுக்கடைந்த ஒட்டுகள் போல அது இருந்தது. அலெக்ஸிக்கு மிகவும் விருப்பமான, பெரிய தலையினைக் கொண்ட நாய் கூச்சும், தனது மூக்கைத் தொங்கப் போட்டபடி முற்றத்தைச் சுற்றி துயரத்தோடு அலைந்து திரிந்தது. முற்றத்தில் பதித்திருந்த கற்களை முகர்ந்து பார்த்தபடி சுற்றித் திரிந்தது, பிறகு திடீரென்று, தனது மூஞ்சியை வானத்தை நோக்கி உயர்த்தியபடி மெல்லிய குரலில் ஊளையிட்டது.

''உஸ், கூச்சும்,'' என்றான் தீஹன் அமைதியாக.

நாய் அவனிடத்தில் வந்து, தன்னுடைய கனத்த தலையை அவனுடைய முழங்கால்களின் மீது திணித்தபடி, எதையோ புகார் செய்வது போல ஊளையிட்டது.

''இதுவும் வருந்துகிறது,'' என்று யாக்கவ் குறிப்பிட்டான். மற்றவர்கள் பதில் ஏதும் பேசவில்லை. ஆனால் யாக்கவ் சிந்திக்காமல் இருப்பதற்காக எதையாவது பேச விரும்பினான்.

''அது புரிந்து கொண்டிருக்கிறது என்று சொல்கிறேன்,'' என்று அழுத்தமாகத் திரும்பவும் சொன்னான். முற்றப் பாதுகாவலனோ மென்மையாக பதிலளித்தான்:

''உண்மைதான்.''

''ஸுஸ்தல் நகரில், தேவாலயத்து நாய் மோப்பம் பிடித்தே திருடனைக் கண்டு பிடித்து விடுகிறது,'' என்று துறவி நினைவு கூர்ந்தான்.

''எதைப் பற்றி நீங்கள் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று யாக்கவ் வினவினான். துறவி கொஞ்சம் குவாஸ் பருகினான், தனது மேலங்கியின் சட்டைக் கையால் உதடு களைத் துடைத்துக் கொண்டான், பற்கள் இல்லாதது போல நடுக்கத்துடன் முணுமுணுத்தான், மாடிப் படியிலிருந்து அவன் இறங்கி வந்தபடி பேசுவது போல அது இருந்தது.

''இங்குள்ள ஆட்கள் திரும்பவும் கலகம் செய்ய நினைப் பதாக தீஹன் குறிப்பிட்டான். மேலும் அது அப்படித்தான் தோன்றுகிறது. ஒவ்வொருவரும் அது போன்ற சிந்தனை யில் மூழ்கியிருப்பதாகத் தெரிகிறது...''

''இந்த மாதிரியான காரியங்களால் மனம் நொந்து,'' என்று கூறிய தீஹன், நாயின் காதுகளைப் பிடித்து விளை யாடிக் கொண்டிருந்தான்.

''நாயைத் துரத்து,'' என்று உத்தரவிட்டான் யாக்கவ். ''அதன் மீது தெள்ளுப்பூச்சிகள்.''

தனது முழங்கால்களின் மீது இருந்த நாயினுடைய உள் ளங்கால்களை தீஹன் விலக்கி விட்டு, தனது காலால் மெது வாக நாயை அப்பால் தள்ளி விட்டான். தனது கால்களுக் கிடையே வாலை வைத்து உட்கார்ந்து கொண்டு, இரண்டு முறை சலிப்படைந்த முறையில் குரைத்தது. மூன்று பேரும் அதையே பார்த்தார்கள்; கல்லறையிலே புதைக்கப்பட்ட அந்நாயினுடைய எசமானனுக்காக வருந்துவதை விட தீஹ னும், துறவியும் பெரும்பாலும் அந்நாய்க்காகவே வருந் தினார்கள் என்று யாக்கவ் நினைத்தான்.

''கலகம் ஏற்படக் கூடும்,'' என்று யாக்கவ், முற்றத் தின் இருளடைந்த மூலைகளை உற்றுப் பார்த்தபடியே கூறி னான். ''நினைவிருக்கிறதா, தீஹன், செதோவும் அவ னுடைய தோழர்களும் கைது செய்யப் பட்டது?''

''உண்மைதான்.''

தன்னுடைய அங்கியிலிருந்து எங்கோ ஓரிடத்தில் இருந்து ஒரு சிறு தகரக் குப்பியை இழுத்து அதினின்றும் விரல்

களால் கொஞ்சம் பொடியை எடுத்து தன் மூக்கருகே கொண்டு போன துறவி, தன் அண்ணன் மகனிடம் விளக்க ஆரம்பித்தான்:

''இதோ, பொடிதான். இது என் கண்களுக்கு உதவியாக இருக்கிறது. முன்னர் போல என்னால் நன்கு பார்க்க முடியவில்லை.''

தும்மி முடித்து விட்டு மீண்டும் பேசினான்:

''கிராமங்களில் கூட கைது செய்திருக்கிறார்கள்...''

''எல்லா இடங்களிலும் உளவாளிகள் இருக்கிறார்கள்,'' இயற்கையாகப் பேச முயற்சித்தபடி யாக்கவ் கூறினான்.

''ஒவ்வொருவர் மீதும் அவர்கள் கண் வைத்திருக்கிறார்கள்.''

தீஹன் முணுமுணுத்தான்:

''பார்த்துக் கொள்ளாவிட்டால் உன்னால் எதையும் காண முடியாது.''

இரவின் குளுமை காரணமாகவோ, ஒருவேளை அச்சத்தினாலோ, நடுங்கியவாறே, பெரும்பாலும் கிசுகிசுத்தவாறு யாக்கவ் தொடர்ந்தான்:

''இங்கும் கூடத்தான் இருக்கிறார்கள். அந்த வேட்டைக்காரன் நாஸ்கோவைப் பற்றி மட்டமாகப் பேசுகிறார்கள்... செதோவையும் நகரத்திலுள்ள ஆட்கள் பற்றியும் தகவல் சொன்னது அவன்தான் என்று பேசுகிறார்கள்...''

''பார்க்கிறாயா, என்ன முட்டாள்,'' என்று கண நேர அமைதிக்குப் பிறகு தீஹன் கூறினான். நாயைப் பிடிப்பதற்காகத் தனது கையை நீட்டினான், ஆனால் திடீரென்று திரும்ப இழுத்துக் கொள்ளவே அது முழங்காலின் மீது விழுந்தது. வீணாகத் தான் பேசி விட்டதாகவும், தனது வார்த்தைகள் தேவையற்றுப் போய் விட்டன வென்றும் யாக்கவ் உணர்ந்தான். ஏதோ ஒன்று முற்றக் காவலனை எச்சரிக்குமாறு செய்தான்:

''நாஸ்கோவைப் பற்றி நீ யாரிடமும் போய்ப் பேசிக் கொண்டிராதே.''

''நான் ஏன் பேசப் போகிறேன்? என்னோடு அவனுக்கு எதுவுமில்லை. மேலும், எந்த வகையிலும் பேசுவதற்கும் ஆட்களில்லை. யாரும் யாரையும் நம்புவதற்கில்லை.''

''ஆமாம்,'' என்றான் துறவி. ''நம்பிக்கை குறைந்து தான் போய்விட்டது. போருக்குப் பிறகு காயம்பட்டுப் போன சில போர்வீரர்களிடம் நான் பேசினேன். போர்

வீரர்களிடம் கூட போரின் மீது நம்பிக்கை கிடையாது என்பதை என்னால் காண முடிந்தது! இரும்பு, யாஷா, எங்கு பார்த்தாலும் இரும்புதான், எந்திரங்கள்! எந்திரங்கள் வேலை செய்கின்றன, எந்திரங்கள் பாடுகின்றன, எந்திரங் கள் பேசுகின்றன! இது போன்ற இரும்பு எந்திரமயமான வாழ்க்கை, புது மாதிரியான மனிதர்களை, இரும்பு மனிதர் களை அழைக்கிறது. இதை பல பேர் புரிந்து கொண்டிருக் கிறார்கள். அவர்களில் சிலரை நான் சந்தித்தேன். 'மென்மை யானவர்களை உங்களுக்குக் காட்டுகிறோம்!' என்று சொல் கிறார்கள். மற்ற சிலர் பொல்லாங்கு கொள்கிறார்கள். ஒரு மனிதன் அவர்களுக்குக் கட்டளை யிடுகின்ற போது, சரி, அத்தகைய விஷயத்திற்கு மக்கள் பழக்கப்பட்டுப் போகிறார்கள். ஆனால் உலோகம் அவர்களுக்குக் கட்டளை இடுகின்ற போது—அவர்கள் பொல்லாங்காகக் கொள் கிறார்கள்! கோடரி, சுத்தியல் போன்ற எல்லாவகையான கருவிகளையும் நம்மால் தூக்கவும் பயன்படுத்தவும் முடி யும்—அவை பழகிப் போனவை; ஆனால் இங்கே இருப்பதோ டன் கணக்கில் கணக்கிறது, இருந்தாலும் உயிருள்ள ஒரு பிராணியைப் போலவே இருக்கிறது.''

தீஹன் மொறு மொறுத்தான், முன்னர் ஒருபோதும் யாக்கவ் கேட்டிராதபடி சிரிக்கத் தொடங்கிய அவன் பேசி னான்:

''குதிரைக்கு முன்னால் வண்டி ஓடுகிறது. ஆகா, பிசாசு களே!''

''பலர் கோபமாகவும் இருக்கிறார்கள்,'' என்று தணிந்த குரலில் துறவி தொடர்ந்தான். ''மூன்றாண்டு காலமாக ஒவ்வொரு இடத்திலும் நான் சுற்றித் திரிந்த போது, என் னால் காண முடிந்தது. மக்களுக்கு பயங்கரமான கோபம்! அவர்களுடைய கோபந்தான் தவறான பாதைக்குத் திரும்பி இருக்கிறது. ஒருவர்க்கொருவர் எதிராக. ஆனால் அவர் கள் எல்லாருமே அவர்களுடைய அறிவுக்காகவும், அவர்க ளுடைய முட்டாள்தனத்திற்காகவும் ஒன்று போல குற்றம் சொல்லத்தான் வேண்டி இருக்கிறது. கிலேப் பாதிரியார் தான் என்னிடம் கூறினார். நன்கு சொன்னார்!''

''அந்தப் பாதிரி உயிரோடு இருக்கிறாரா?'' என்று தீஹன் கேட்டான்.

''இப்போ அவர் பாதிரியாராக இல்லை,'' என்று நிகீதா பதிலளித்தான். ''அவர் பாதிரி வேலையை விட்டுவிட்டார்.

கிராமத்துச் சந்தைகளுக்குப் போய் புத்தகங்கள் விற்று வருகிறார்.''

''அவர் ஒரு நல்ல பாதிரியார்,'' என்றான் தீஹன். ''பாவமன்னிப்புக்காக அவரிடம் நான் செல்வதுண்டு. நல்ல பாதிரியார். ஆனால் அவர் ஏழையாக இருந்ததனாலே, பாதிரியாராகப் பாசாங்கு செய்தார் என்று நான் நினைக்கிறேன். உண்மையிலேயே அவர் கடவுளை நம்பவில்லை.''

''இல்லை, அவர் கிறிஸ்துவை நம்பினார். ஒவ்வொருவரும் முடிந்தளவு நம்புகிறார்கள்.''

''அதிலிருந்து தான் எல்லாத் தொல்லைகளுமே வருகின்றன,'' என்று தீஹன் உறுதியாகச் சொன்னான். திரும்பவும் மோசமாகச் சிரித்தான். ''அங்கு தான் சிந்தனை நம்மைக் கொண்டு சேர்க்கிறது...''

தனது இரவுநேர உடையுடன் வெறுங்காலுடன் சந்தடியில்லாமல் முன் கூடத்திற்கு வந்த மூத்த அர்தமோனவ் வெளிறிய வானத்தைப் பார்த்து விட்டு, பெஞ்சின் மீது இருந்த மூவரையும் பார்த்துப் பேசினான்:

''எனக்குத் தூக்கம் வரவில்லை. நாய் என்னைத் தொந்தரவு செய்கிறது. நீங்களும் கூட இங்கு இருந்து கொண்டு முணுமுணுத்துக் கொண்டும், சளசளத்துக் கொண்டும் இருக்கிறீர்கள்...''

முற்றத்தில் நடுவில் உட்கார்ந்திருந்த நாய் அவ்வப்பொழுது குரைத்துக் கொண்டே இருந்தது. தனது எசமானனுடைய குரலை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல, காதுகளை உயர்த்திக் கொண்டு திறந்திருந்த சன்னலைக் குறிக்கும் இருண்ட துவாரத்தையே பார்த்துக் கொண்டிருந்தது.

''தீஹன், நீயோ இன்னமும் அதே பழைய பல்லவியைத் தான் பாடிக் கொண்டிருக்கிறாய்!'' என்று அர்தமோனவ் தொடர்ந்தான். ''அவனைப் பார், யாக்கவ்: அவன் தலைக்குள்ளாக ஒரு நாள் ஒரு கருத்து புகுந்து விட்டால் போதும், வலையில் சிக்கிய ஓநாய் போல ஆகிவிடுவான். உன் அண்ணன் கூட இப்படித் தான் இருந்தான். உனக்கு இல்யாவைப் பற்றி எதாவது தெரியுமா, நிகீதா?''

''நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.''

''ஆமாம். அவனை வெளியே துரத்தி விட்டேன். அவன் தவறான குதிரை மீது ஏறிக் கொண்டு பாய்ந்தோடிச் சென்று விட்டான்—எங்கே? உண்மையில், அவன் செய்தது

போல செல்வத்தை யெல்லாம் விட்டு விட்டு வாய்க்கும் கைக்குமாக வாழ்பவர்கள் மிகவும் குறைவாகத் தான் இருப் பார்கள்...''

''கடவுளின் அன்பைப் பெற்ற புனித அலெக்ஸி கூட இது போலத்தான் செய்தார்,'' நிகீதா அமைதியாக நினைவூட்டி னான்.

அர்தமோனவ் தனது ஒரு கையை நெற்றிக்கு உயர்த்தி அமைதியாகச் சற்று நேரம் நின்றான். பிறகு பழத் தோட் டத்தை நோக்கிச் செல்லத் தொடங்கியவன் யாக்கவிடம் கூறினான்:

''ஒரு போர்வையும் சில தலையணைகளையும் எனக் காக கோடை இல்லத்திற்குக் கொண்டுவா. அங்காவது கொஞ்சம் தூங்க முயற்சிக்கிறேன்.''

முற்றிலும் வெள்ளை நிறமாக, கலைந்த தலை மயி ருடன், வீங்கிப் போன முகத்துடன் பெரும்பாலும் அஞ்சத் தக்க உருவம் போல அவன் காட்சி தந்தான்.

''எந்திரங்களைப் பற்றி நீ சொன்னதெல்லாம் தவறு, நிகீதா,'' முற்றத்திற்குச் செல்லும் பாதி வழியில் நின்றபடி அவன் கூறினான். ''எந்திரங்களைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?உனது சொந்தக் காரியமாகிய கடவுளைப் பற்றிப் பேசு. எந்திரங்கள் தொல்லை கொடுப்பதில்லை...''

தீஹன் முரட்டுத்தனமாக, உறுதியான முறையில் குறிப் பிட்டுச் சொன்னான்:

''எந்திரம் வாழ்க்கையை நெருக்கமானதாகவும், இரைச் சலுடையதாகவும் ஆக்குகிறது.''

அர்தமோனவ் ஏளனத்தோடு அவனிடமிருந்து பிரிந்து பழத் தோட்டத்தை நோக்கி மெதுவாக நகர்ந்தான். கை நிறையத் தலையணைகளை எடுத்துக் கொண்டு அவனுக்கு முன்னால் சென்ற யாக்கவ் கோபத்தோடும் மனக்காழ்ப் போடும் சிந்தித்துக் கொண்டான்:

''இரத்த உறவு தான்: என் அப்பாவும் என் சித்தப்பா வும்,—ஆனால் இவர்கள் எனக்கு எதற்காக? அவர்களால் எனக்கு உதவ முடியாது.''

தன்னுடன் தங்கிக் கொள்ள வருமாறு பியோத்தர் தன் தம்பியை அழைக்கவில்லை. ஓல்காவின் வீட்டின் அட்டாலி யில் தங்கிய துறவி எச்சரித்தான்:

''நான் அதிகம் தங்க மாட்டேன். சீக்கிரமே புறப் பட்டுப் போவேன்...''

அவன் அந்த வீட்டில் யாரும் அறிந்து கொள்ளாதது போல வாழ்ந்தான். அழைத்தாலன்றி படிகளில் இறங்கி கீழ் அறைகளுக்கு வருவதில்லை. தோட்டத்தில் மரங்களில் காய்ந்து போன குச்சிகளை வெட்டிக் கொண்டிருப்பான், ஆமை போல ஊர்ந்து,கரையில் வளர்ந்திருந்த களைகளைப் பிடுங்குவதிலே நேரத்தைப் போக்க விரும்பினான். ஒவ்வொரு நாள் செல்லவும் அவனது முகம் மிகவும் சுருங்கவும், அவனது உடம்பு மிகவும் கரையவும் செய்தது; அவன் பேசுகின்ற போது, ஏதோ பரம ரகசியத்தை வெளியிடப் போவது போல, அவனது குரல் எப்போதுமே தணிந்து இருந்தது. அவன் சர்ச்சுக்கு அரிதாகவும், விருப்பமில்லாமலும் சென்றான், உடல் நலமில்லை என்று கூறி, வீட்டிலேயே தொழுகைக்காகச் சிறிது நேரத்தைச் செலவிட்டான்; கடவுளைப் பற்றிப் பேசவே அவன் விரும்பவில்லை, இந்தத் தலைப்பில் பேசுவதைக் கூடத் தொடர்ச்சியாகத் தவிர்த்து வந்தான்.

துறவியின் நட்பை ஒல்கா விரும்பினாள் என்பதை யாக்கவால் காணமுடிந்தது, மேலும் அமைதி வடிவான வேராபபோவாவும் ஒவ்வொரு வகையிலும் அவனுக்கு மரியாதை காட்டினாள். தான் சுற்றித்திரிந்த போது, பார்த்த இடங்களையும், சந்தித்த மனிதர்களையும் பற்றி தன்னுடைய சித்தப்பா பேசிய போதுகூட மிரோன் முகஞ் சுழிக்கவில்லை. இன்னும், தன் தந்தையினுடைய சாவுக்குப் பிறகு அவன் முன்னிலும் பிடிவாதக்காரனாக மாறியிருந்தான், தானே ஆலைக்கு முழுச்சொந்தக்காரன் என்பது போல அதனுடைய பிரச்சினைகளில் தலையிடுவதும், ஓர் எழுத்தரிடம் கத்துவதைப் போல யாக்கவிடம் கத்திக் கொண்டும் இருந்தான்.

நதால்யா இருந்த போது, அவளது சிவந்த முகத்தை எல்லாரையும் பார்ப்பது போல அன்புடன் பார்த்தான் துறவி; ஆனால் மற்றவர்களை விட நதால்யாவிடம் குறைவாகத்தான் பேசினான். உண்மையில், அவளாகவே பேசுகின்ற கலையைப் படிப்படியாக மறந்து கொண்டு வந்தாள், மூச்சு விடவே செய்தாள். அவளது அசைவற்ற கண்கள் வெறுமையாக இருந்தன, சில நேரங்களில் அவற்றின் மங்கலான பார்வையிலே உணர்ச்சியின் ஓரளவு ஒளி அரிதாகத் தான் தெரிந்தது—தனது கணவனின் உடல் நலம் குறித்த ஆர்வத்தின் போது, மிரோனைக் கண்டு பயப்படும் போது

அல்லது கொழுத்த தன் மகன் யாக்கவைப் பார்க்கின்றபோது ஏற்படும் மகிழ்ச்சியின் போது மட்டுமே அது ஒளி விட்டது. தீஹனுடன் ஏதோ சில கருத்து வேற்றுமைகளைத் துறவி கொண்டிருந்தது போலக் காணப்பட்டது. அவர்கள் சண்டையிட்டுக் கொள்ளவில்லை என்றாலும், ஒருவரை பார்த்து ஒருவர் முணுமுணுத்துக் கொண்டார்கள், அருகருகே சந்தித்த நேரங்களில் குருடர்களைப் போலக் கடந்து சென்றார்கள்.

தனது சித்தப்பாவின் கூனல் கருப்பு உருவமானது யாக்கவுக்கு வாழ்க்கையில் மேலும் ஒரு நிழலைக் கொண்டுவந்தது, துறவியின் தோற்றம் அவனிடத்தில் கடுமையான முன்னுணர்வுகளை ஏற்படுத்தியது. அவனுடைய கருத்து மெலிந்த முகமானது சாவு பற்றிச் சிந்திக்கும்படி கட்டாயப்படுத்தியது. வீட்டில் நடைபெற்ற எல்லாக் காரியங்களையும் ஒரே ஒரு நோக்கில், தனது சொந்த நலன் பற்றிய சொந்த அக்கறைகளுடன் யாக்கவ் பார்த்தான்; மேலும், எல்லாக் கவலைகள் தொடர்ச்சியாகப் பல்கிப் பெருகிக் கொண்டிருந்த அதே வேளையில், பல புதிய கவலைகளும் வீட்டில் தோன்றியது போலக் காணப்பட்டது. காதல் விவகாரங்களில் அநுபவப்பட்டவன் என்ற முறையில் பலீனா தன் மீது வெறுப்புக் கொள்ளத் தொடங்கி விட்டாள் என்பதை உணர்ந்தான்; மேலும் எளிதில் அமைதி குலையாத லெப்டினெண்ட மாவ்ரினின் நடத்தையாலும் அவனது சந்தேகங்கள் உறுதிப்பட்டன. இப்பொழுதெல்லாம் யாக்கவைச் சந்தித்த நேரங்களில் தனது தொப்பியில் ஒரு விரலை மட்டுமே அக்கறையில்லாதபடி வைத்து வணங்கினான்; ஏதோ மிகவும் சிறிய, தொலைவிலுள்ள ஒன்றை நோக்குவது போலத் தனது கண்ணைச் சுருக்கிக் கொண்டான். முன்னரெல்லாம் அவன் மிகுந்த நாகரிகமிக்கவனாகவும், மிகவும் ஒத்துப் போகக் கூடியவனாகவும் இருந்தான்; நகரத்திலுள்ள சீட்டாட்ட விடுதியில், சீட்டுக்காக யாக்கவிடம் பணம் கடன் வாங்கும் போதோ, கடனைத் திருப்பித்தர காலக்கெடு கேட்கும் போதோ, இப்படியாக அவன் வெளிப்படையாகவே கூறினான்:

''பீரங்கிப் படையில் சேர்வதற்கான உடலமைப்பைப் பெற்றிருக்கிறீர்கள், அர்தமோனவ்.''

அல்லது, இதற்குச் சமமானவாறு மகிழ்ச்சிமிக்க வேறு எதையேனும், தன்னை மிகவும் வஞ்சப் புகழ்ச்சியில் புகழ்

கிறான் என்று யாக்கவ் உணர்வது போல அவன் பேசியிருக்கிறான். இந்திய ரப்பரைப் போல நீக்குப் போக்குடைய இந்த அதிகாரி, தனது திறமையாலும் வலிமையாலும், வேகத்தாலும், வெளியே தெரியாத ஆனால் சந்தேகிக்க முடியாத துணிச்சலாலும் நகரத்து மக்கள் அனைவரையும் வாய் பிளந்து நிற்க வைத்திருக்கிறான். தனது உருண்ட, உறுதி படைத்த விழிகளால், மக்களது முகங்களை நேராகப் பார்த்தபடி, கட்டளையிட்டுப் பழக்கப்பட்ட தொனியில், கரகரத்த குரலில் அறிவிப்பான்:

''நான் உறுதியான ஆள், மிகைப்படுத்தல்களை என்னால் சகிக்க முடியவில்லை.''

ஒரு நாள், யாருடைய குத்தலான பேச்சைக் கேட்டு நகரம் முழுமையுமே அஞ்சியதோ, அந்த நோயாளியான போஸ்ட்மாஸ்டர் கிழவன் திரோனவிடம் சீட்டு விளையாடும் போது சண்டையிட்டுக் கொண்ட மாவ்ரின் அவனிடம் இவ்வாறு கூறினான்:

''அளவு மீறிப் பேசுவதை நான் மறுக்கிறேன், ஆனால் நீங்கள் ஒரு கிழட்டு முட்டாள்!''

மாவ்ரின் தனக்குப் போட்டியாக இருக்கிறான் எனச் சந்தேகித்த யாக்கவ் அவனோடு ஒரு மோதல் ஏற்படும் என்று அஞ்சத் தொடங்கினான்; ஆனால் பலீனாவை இந்த லெப்டினெண்டிற்கு ஒருபோதும் விட்டுக் கொடுக்க மனம் துணியவில்லை. அந்தப் பெண்ணை மேன்மேலும் விரும்பினான் யாக்கவ். இருந்தும், அவளைப் பல முறை ஏற்கெனவே எச்சரித்தும் இருக்கிறான்:

''நினைவிருக்கட்டும்: உனக்கும் மாவ்ரினுக்கும் இடையே ஏதாவது நடப்பதை நான் அறிந்தால், என்னை நீ பார்ப்பது அதுதான் கடைசி!''

இத்துடன், வேட்டைக்காரன் நாஸ்கோவால் ஏற்பட்ட கவலையும் வளர்ந்து கொண்டே இருந்தது. நகரத்திற்கு வெளிப்புறத்திலே, வதராக்ஷா நதிப் பாலத்திற்கு அருகே தங்கி இருப்பான், திடீரென்று சாலையில் தோன்றி, ஏதோ அவனுக்குப் பாக்கி இருப்பது போல, தனது கைகளில் வைத்த தொப்பியின் மீது இருந்த தனது பார்வையை உயர்த்தாதபடி, வற்புறுத்தியபடி, தனக்குப் பணம் தரும்படி கேட்டான்.

வேட்டைக்காரனுடைய தோற்றத்திலே ஏதோ விநோதமும், கள்ளத்தனமும் இருந்தது, முறுக்கி வளர்ந்திருந்த

ஒரு ஜோடி வில்லோ மரங்களைச் சுற்றி அடர்த்தியாக ஒட்டுப்புல்லும், கள்ளிச் செடியும் வளர்ந்திருந்த அதே இடத்தில் தான் எப்போதுமே அவன் தோன்றினான். சுமார் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னாள்தான் இதே இடத்தில், சந்தைத் தோட்டக்காரன் பான்ஃபில் உடைய வீடு இருந்தது; ஆனால் இந்தத் தோட்டக்காரனை யாரோ கொலை செய்து விட்டு, வீட்டுக்குத் தீ வைத்து விட்டார்கள். தீயில் கருகிப் போன அந்த இரண்டு வில்லோ மரங்கள் இன்னமும் அங்கே நின்றன. இங்கே விளையாடுவதற்காக வருகின்ற எறிகட்டையாட்டப் பிரியர்கள், அதனது சாம்பலை மிதித்து மண்ணோடு மண்ணாக இறுக்கி விட்டிருந்தார்கள். அடுப்பு மட்டுமே அப்படியே நிலைத்திருந்தது, செங்கல் இடிபாடுகளுக்கு மேலாக அதனது புகைப் போக்கி மட்டுமே நிமிர்ந்து நின்றது; இரவு தெளிவாக இருந்த போது, நடுங்கியபடி ஒரு பச்சை நிற நட்சத்திரம், உயரே வானத்தில் தொங்கியது. இந்தப் புகைப்போக்கிக்குப் பின்புறத்திலிருந்து தான் நாஸ்கோவ் அவசரமில்லாமல், புதர்களை விலக்கிக் கொண்டும், தனது தொப்பியை மெதுவாகக் கழற்றிக் கொண்டும் முணுமுணுத்தபடி வருவான்:

''உங்களுடைய பணத்தைப் பயனுள்ளதாகச் செய்கிறேன். ஆலையில் திரும்பவும் ஒரு புதிய தொகுதி உருவாகிக் கொண்டு வருகிறது...''

''அது எனக்குரிய பிரச்சினையல்ல,'' என்று யாக்கவ் அவனிடம் கோபமாகச் சொல்வான், நாஸ்கோவ் அதற்கு வெளிப்படையாகவே முரட்டுத்தனமாக பதிலளித்தான்:

''உண்மைதான், நீங்கள் அவர்களை ஒழுங்கு படுத்தவில்லை; ஆனாலும் இந்த விஷயம் உங்களைத் தொட்டு விட்டது.''

''அப்போதே இவனைத் தீர்த்துக் கட்டாமல் போனது வருந்தத்தக்கது,'' என்று இருபதாவது தடவையாக யாக்கவ் வருத்தத்தோடு எண்ணிக் கொள்வான். மேலும் வேவுகாரனுக்குப் பணத்தைக் கொடுத்தவாறே கூறுவான்:

''நீ கவனமாக இருக்க வேண்டும்!''

''எனக்குத் தெரிகிறதே.''

''இந்தச் சிக்கலில் என்னை மாட்டி விடாதே.''

''ஐயோ, எதற்காக இது? பயப்பட வேண்டாம்.''

''ஆமாம், நிச்சயமாக இவன் என்னை முட்டாளாகக் கருதி விட்டான்...'' என்று யாக்கவ் நினைத்தான்.

நாஸ்கோவ் பயனுள்ளவனாக இருப்பதை உணர்ந்தது ஒரு புறமிருக்க, இந்தத் தட்டை மூஞ்சிப் பயலும், கோணக் காலனுமான இவன் தனது தொடையில் பாய்ந்த குண்டிற் காகக் கட்டாயம் பழிவாங்கத்தான் செய்வான் என்பதிலும் யாக்கவ் அதே நேரத்தில் உறுதியாக இருந்தான். பழி வாங் கத்தான் அவன் விரும்பினான். தொழிலாளர்களில் ஒருவர் அல்லது இருவரை பயமுறுத்தியோ, யாக்கவ் தானே கொடுக் கின்ற பணத்தில் ஒரு பகுதியை லஞ்சமாகக் கொடுத்தோ இவனைக் கொல்வதற்கு உத்தரவிடக் கூடும். ஏற்கென வேயே தொழிலாளர்கள் தன்னை மிகவும் நெருக்கமாகவும், மிகவும் பகைமையோடும் பார்க்கத் தொடங்கி விட்டது போல யாக்கவுக்குக் காணப்பட்டது.

சிறந்த நிலைமைகள் வேண்டும் என்பதற்காக அல்லாது, வெளியிலிருந்து தங்களுக்குப் போதிக்கப்பட்ட கேலிக்குரிய, பைத்தியக்காரத்தனமான யோசனையின் காரணமாகவும்—வங்கிகளை, கடைகளை, தொழிற்சாலைகளை நாட்டினு டைய முழுமையான பொருளாதாரத்தைத் தங்களது சொந் தக் கைகளில் கட்டாயம் வைத்துக் கொள்ள வேண்டும் என் பதற்காகவும்—தொழிலாளர்கள் புரட்சி செய்தார்கள் என் பதையே மிரோன் மிகவும் அடிக்கடி கூறி வந்தான். இந்த விஷயங்களைப் பேசிய போது, தனது நீண்ட கால்களால், எட்டி நடைபோட்டபடி, அவனது கழுத்து மெலிந்தும், காலர் இறுக்கமில்லாது இருந்தும் கூட, அதைத் தளர்த்தி விடுவது போல, கழுத்தைத் திருகிக் கொண்டும், காலருக் குக் கீழே ஒரு விரலைத் திணித்துக் கொண்டும், மிகவும் விறைப்பாகவும், நேராகவும் மிரோன் அறையில் நடப்பான்.

''இது சோஷலிஸத்தைக் கூடப் பின்னுக்குத் தள்ளி விடு கிறது. அதை எப்படி அழைப்பதென்று அந்தச் சாத்தா னுக்குத்தான் தெரியும்! இத்தகைய கருத்துகளைப் பரப்பி வரும் ஆட்களில் உன்னுடைய அண்ணனும் ஒருவன். நமது அமைச்சரவையிலே உள்ள அந்தக் கிழட்டுக் காகங்கள்...''

இவை யெல்லாமே, மிரோனுடைய பேச்சைக் கேட் பவர்களையும் — மிரோன் தனக்குத்தானும் — தெளிவு படுத்திக் கொள்வதன் மூலம் டூமா அரசாங்கத்தில் ஓர் இடம் பெற வேண்டிய உரிமையை வலியுறுத்துவதற்காகத்தான் என்பதை யாக்கவ் அறிந்திருந்தான். மேலும் இத்தகைய

பேச்சுகள் அனைத்தும் ஓர் அச்ச உணர்வை ஏற்படுத்திய தோடு நூற்றுக்கணக்கான தொழிலாளர் மத்தியிலே பாது காப்பின்றி தன்னந்தனியனாக இருப்பது போன்ற யாக்கவின் உணர்வினையும் ஆழப்படுத்தியது. ஒரு சமயம், பயத்தி னால் வலிப்பு நோயைக் கூடப் பெரும்பாலும் அநுபவித்து விட்டான். அதிகாலை நேரத்தில் ஆலையின் வெளி முற்றத் திலிருந்து வந்த கூச்சல்களையும், அலறல்களையும் கேட்டு, தலையணையிலிருந்து தனது தலையை உயர்த்திப் பார்த்த போது, கிட்டங்கியின் வழவழப்பான வெள்ளைச் சுவர் களின் மீது மூர்க்கத்தனமாக மோதியடித்து வரும் ஒரு கும்பலின் நிழல்கள் தெரிந்தன. தாவிக் கொண்டும், கைகால் களை ஆட்டிக் கொண்டும் அவர்கள் அந்தக் கிட்டங்கியையே முற்றத்தின் வழியாக தங்களோடு இழுத்துக் கொண்டு வரு வது போலக் காணப்பட்டது. வியர்த்துப் போன நிலையில் யாக்கவ் சிந்தித்தான்—ஓசையின்றி கத்தினான்:

''கலகம்...''

சதையையும் ரத்தத்தையும் விட ஒரு வகையில் மிகவும் அஞ்சத்தக்கதாக இருந்த, விரைந்து வந்த அந்நிழல்கள் சீக்கிரமே மறைந்து போயின. வழமையாகத் திங்கள் கிழமை காலையில் நடைபெறும் அமளி என்பதை யாக்கவ் உணர்ந்து கொண்டான். விடுமுறை நாட்களுக்குப் பிறகு இது போன்ற சண்டைகள் பெரும்பாலும் இருந்துவரத்தான் செய்தன. ஆனால் இந்த கருத்த அச்சத்தரும், ஊளையிடும் உருவங் களை அவனால் மறக்க முடியாது. மொத்தத்தில் வாழ்க்கை யானது பயங்கரம் நிறைந்ததாக மாறிக் கொண்டே வந் தது, பத்திரிகையை வெறுமனே பார்ப்பதும், அதைப் படிப் பது அதை விட இன்னும் மோசமானதாக இருந்தது. எளி மையும் தெளிவும் மறைந்து கொண்டு போயின. ஒவ்வொன் றிலும் மகிழ்ச்சியற்ற தன்மை உருவானது, களத்திலே புதிய நபர்கள் தோன்றினார்கள்.

யாக்கவின் தங்கை தத்யானா திடீரென்று ஒரு கண வனை வோர்கோரதிலிருந்து கூட்டி வந்திருந்தாள்: மெலிந்த உருவம் கொண்ட அவன் என்ஜினியர் சீருடைக்குரிய தொப் பியைத் தனது செம்பட்டைத் தலையில் வைத்திருந்தான், விரைந்து துடிதுடிப்பாக நடக்கும் அவன் மிகுந்த கிண்டல் பேர்வழியாகவும் இருந்தான். தத்யானாவை விட இரண்டு வயது இளையவன் அவன், அவளுடைய உதாரணத்தைப் பின்பற்றி ஒவ்வொருவரும் அவனை வெறுமனே மீத்யா

என்றே அழைத்தார்கள். தனது கித்தாரை மீட்டிக் கொண்டு எல்லா வகையான வேடிக்கைப் பாடல்களையும் அவன் பாடுவான், அவற்றில் ஒன்றை மட்டும் அவன் அடிக்கடி பாடியது தத்யானாவைக் கேவலப்படுத்துவது போன்றதாக பார்க்கவுக்குப் பட்டது. நதால்யாவும் மிகுந்த கோபமடைந்தாள்.

கல்லறை தனிலே சாய்ந்திட்டாள் என் மனைவி
தேவரே, காத்தருளும்,
சுவர்க்கத்தின் அடியார் அவைதனில்
ஏழை உமதடிமைக்கு இடமருளும்!

ஆனால் தத்யானா இதில் சங்கடப்படவில்லை. ஒவ்வொருவரையும் மகிழ்வித்தது போலவே அவளையும் அவன் மகிழ்வித்தான். நதால்யா கூட அடிக்கடி உருகுவது போலக் கூறுவாள்:

''ஆகா, நீ ஓர் இளம் குரங்கு! ஏதாவது சாப்பிடு, கோமாளி!''

சாப்பாட்டைப் பொருத்த மட்டில் அவனை யாரும் மிஞ்ச முடியாது, புறாவைப் போல பெருந்தீனிக்காரன். மூத்த அர்தமோனவ் கனவில் காண்பது போல அவனைக் கவனிப்பான், இமைத்தபடி வியப்போடு கேட்டான்:

''எல்லா அடையாளங்களையும் பார்க்கின்ற போது, நீ கட்டாயம் ஒரு குடிகாரனாகத்தான் இருக்க வேண்டும் நீ குடிப்பதுண்டா?''

''முடியும்,'' என்று மருமகன் பதிலளித்தான்; மேலும் அன்றைய இரவுச் சாப்பாட்டின் போது முற்றிலும் மரியாதைக்குரிய வகையில் தனது குடிகாரத் திறமைகளைக் காட்டினான். அவன் எல்லா இடங்களிலுமே இருந்திருக்கிறான்: வோல்கா பகுதியில், யூரல் பகுதியில், கிரீமியாவில், காகஸஸ் பகுதியில். அவனுடைய கதைகளுக்கும், இழிதிற நகைச்சுவைகளுக்கும், வேடிக்கைப் பேச்சுகளுக்கும் ஒரு முடிவே இருக்கவில்லை. எந்தவிதமான கவலைகளுமே இல்லாத மக்கள் உள்ள நாட்டிலிருந்து வந்த ஒரு விருந்தினனைப் போலக் காணப்பட்டான்.

''வாழ்க்கை என்பது இனிய உண்டி உண்கின்ற அழகு படைத்தது!'' என்பதை உறுதி செய்தான். ஆரம்பத்தொட்டே, வியாபாரத்தின் இடையறாத சுழலில் மாட்டிக் கொண்டு விட்டான். தொழிலாளர்கள் அவனை விரும்பி

னார்கள், இவனது கிண்டல் பேச்சுகளைக் கேட்டு இளை ஞர் கூட்டம் நகைத்தது, வயதான நெசவாளர்கள் நட்புற வோடு தலையசைத்து அவனை வாழ்த்தினார்கள். தன் னுடைய சிரிப்புப் பேச்சுகளை மீத்யா தொடங்கிய போது, மிரோன் கூட தனது முறுவலிப்பை தனது மெல்லிய உதடு களை நக்கிக் காட்ட வேண்டியதாயிற்று. இப்போது அவர் கள் ஆலையின் முற்றத்தைக் கடந்து ஐந்தாவது கட்டிடத் தொகுதிகளுக்குச் சென்று கொண்டிருந்தார்கள். ஆலைக் கான இந்த ஐந்தாவது தொகுதி சிவப்புச் செங்கல்களைக் கொண்டு கட்டப்பட்டிருந்தது, சாரங்கள் கூட இன்னும் அகற்றப்படாமல் இருந்தது. தச்சர்கள் பல்வேறு கட்டங் களில் வேலையில் இருந்தார்கள், அவர்களது கோடரிகள் வெள்ளி போல மின்னின, அந்த ஒளியானது மிரோன் அணிந் திருந்த தங்கப் பூணிலும், கண்ணாடியிலும் பட்டுப் பிரதி பலித்தது. மட்டமான பழைய ஓவியத்திலே காணப்படும் ஊட்டமுள்ள தளபதியைப்போல மிரோன் தனது கையைச் சுழற்றினான். மீத்யா தலையசைத்தான், தரை மீது எதை யோ பரத்துவது போல தனது கைகளை அலைத்தான்.

அவர்களை அலுவலகத்தின் சன்னல் வழியாக யாக்கவ் கவனித்தான். அவனும் கூட இந்தப் புதிய மைத்துனனை விரும்பினான். அவனோடு இருக்கும் போது நேரம் பறந் தோடியது, அழுத்துகின்ற எண்ணங்களை மறக்க முடிந்தது. உண்மையில், அந்த மனிதனுடைய குணத்தைக் கண்டு யாக் கவ் பொறாமைப் பட்டான்; அதே நேரத்தில் ஒரு விநோத மான நம்பிக்கையின்மையையும் உணர்ந்தான்—அவனை ஒரு வழிப்போக்குப் பறவை என்றும், நாளையே கூட அவன் தன்னை ஒரு நடிகன் என்றோ, முடி ஒப்பனையாளன் என்றோ அறிவித்து விட்டு, அவன் வந்தது போலவே எதிர் பாராத முறையில் வெறுமனே மறைந்து விடக் கூடும் என்று நினைத்தான். மீத்யாவிடம் காணப்பட்ட மற்றொரு நல்ல தன்மை பிறர் பொருள் கவரும் ஆசை பெறாதிருந்தது தான். தத்யானாவின் சீதனப் பணம் பற்றிக் கூட அவன் கேட்கவில்லை. ஆனால், உண்மையில் அது தத்யானாவின் சூழ்ச்சித் திறமையாகக் கூட இருக்கலாம். நல்ல தெளி வோடு இருந்த போது தந்தை முணுமுணுத்தான்:

''எனது எல்லா வேலைகளும்—இத்தகைய சின்னஞ்சிறு செம்பட்டைத் தலையனுக்குத் தானா...''

மிரோனும் திருமணம் செய்து கொண்டான்.

மாஸ்கோ பயணத்திலிருந்து திரும்பிய அவன், கொழுத்த உடம்பும், நீல நிறக் கண்களும், சுருள் முடியும், வளைந்த கழுத்தும் கொண்ட ஒரு சிறு பொம்மையைக் காட்டி, ''என் மனைவியை அறிமுகம் செய்து கொள்ள என்னை அநுமதியுங்கள்,'' என்றான். அவளுடைய உருவத்தின் ஒவ்வொன்றுமே மிகவும் சிறியதாக இருந்தது, என்றாலும் அவளது வடிவமைப்பு வித்தியாசமான அழகுடனே இருந்தது, அவளைக் கண்ட யாக்கவின் கண்களுக்குத் தன் சித்தப்பா அலெக்ஸிக்கு மிகவும் விருப்பமான அந்தக் கடிகாரத்தில் இருந்த களிமண் பொம்மை போலத் தோன்றியதோ யொழிய, சதையும் ரத்தமும் கொண்ட ஒரு பெண்ணாகத் தோன்றவில்லை. இந்த பொம்மையினுடைய தலை உடைந்து போய் விட்டிருந்ததாகவும், சற்று தலை சாய்ந்தபடி தலை திரும்பவும் ஒட்டப்பட்டதாகவும், ஆகவேதான் அதனுடைய கண்கள் அறையிலிருந்த ஆட்கள் பக்கம் திரும்பாமல், அது பக்கத்தில் இருந்த கண்ணாடியைப் பார்த்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது. தன் மனைவியின் பெயர் ஆன்னா என்றும் அவளுக்குப் பதினெட்டு வயதாகிறது என்றும் அவர்களிடம் மிரோன் தெரிவித்தான். அவள் காகித உற்பத்தியாளருடைய ஒரே மகள் என்பதையும், அவனுக்கு இரண்டரை லட்சம் ரூபிள் கொண்டு வந்திருக்கிறாள் என்ற உண்மையையும் அவன் குறிப்பிடவில்லை.

''இம்மாதிரியான மனைவிகளைத் தான் சிலர் தேடிக் காண்கிறார்கள்,'' குருதி கொப்பளித்த தனது கண்ணை யாக்கவ் பக்கமாகத் திருப்பியபடி பியோத்தர் முணுமுணுத்தான். ''நீயும் சுற்றியலைகையில் யாரைப் பிடிப்பாய் என்று சாத்தானுக்குத்தான் தெரியும். குப்பையைப் போல இல்யா கணக்கிலிருந்து விலக்கப்பட்டு விட்டான்.''

தனது பருத்த உடம்பைத் தூக்கிக் கொண்டு சிரமத்துடன் பியோத்தர் நடந்தான். இந்தப் பருமனால் தன் அப்பா கோபப்படுவது போலவும், தன்னுடைய அருவருப்பான சதைத் தொகுதிகளை வேண்டுமென்றே மற்றவர்களிடம் காட்ட முயற்சிப்பது போலவும் யாக்கவுக்குத் தோன்றியது. இரவு உடைகளை அணிந்தபடி சுற்றி வந்தும், படுக்கையறையில் வெறுங்காலுடன் மிதியன்களை மாட்டிக் கொண்டு, கொழுத்து மடிப்பு விழுந்த மார்பு தெரியுமாறு, அந்த உடையின் பொத்தான்களைத் திறந்து விட்டபடி திரிந்தான்—தன் மூத்த மகளின் வருகைகளின் போது,

அவளை அச்சுறுத்துவதற்காகச் செய்தது போலவே இப் போதும் நடந்து கொண்டான். சில நேரங்களில் அவன் அலு வலகத்திற்கு வந்து முடிவில்லாதபடி உட்கார்ந்திருப்ப துண்டு, பல மணி நேரத்தை அங்கே கழித்து, இந்த ஆலைக் காகவும், தனது குழந்தைகளுக்காகவும் அவன் எங்ஙனம் தியாகம் செய்தான் என்பதையும், தொழில் என்ற கல்வண் டியில் தனது வாழ்க்கை முழுதும் நுகத்தடியில் மாட்டப் பட்டு, இடைவிடாதபடி கவலை என்ற சாட்டையால் தாக்கப்பட்டது எங்ஙனம் என்பதையும் சொல்லியவாறு யாக்கவினுடைய வேலையில் குறுக்கிடுவான்.

யாக்கவ் அதை அமைதியாகக் கேட்பான். இப்படிப் புகார்கள் செய்வது அவன் தந்தைக்குக் கொஞ்சம் ஆறுத லைத் தந்தன, காலை விடியலின் போது, நகரத்திலுள்ள வீடுகளைப் பார்ப்பதற்கு வெகு நேரத்திற்கு முன்னமேயும், இரவுக்குள்ளாக மறைந்து போவதற்கு முன்னர் கடைசி யாகப் பிரியாவிடை கொடுக்கும் போதும் சூரியன் காணு கின்ற சர்ச் கோபுரத்தின் மணியைப் போல பெரிய அளவில் மகனுடைய கண்களுக்கு அவன் தோன்றினான். ஆனால் இந்தப் புகார்களினின்றும் அறிவுறுத்தக் கூடிய முடிவு ஒன் றினை யாக்கவ் எடுத்துக் கொண்டான்: தன் அப்பா சொன்ற அதே வழியிலேயே தானும் வாழ்க்கையைச் செலவிடுவது முட்டாள்தனமானது என்பதாகும்.

புகார்களைச் சொல்லிய பிறகு, தன் தந்தை காய்ச்சல் கண் டது போன்ற அமைதியின்மையால் ஆட்படுவதும், ஆட் களைத் துன்புறுத்தவும், அவர்களது உணர்வுகளைப் புண் படுத்த விழைவதையும் எப்போதுமே யாக்கவ் கண்டான். பின்னர் தனது கிழட்டு மனைவியிடம் செல்வான், சன்னல ருகே உட்கார விரும்புகின்ற அவள், பழத் தோட்டத்தைப் பார்த்தபடி அமர்ந்திருப்பாள், அவளது உபயோகமற்ற கைகள் உணர்ச்சியற்றபடி அவளது முழங்கால்களின் மீது கிடக்கும், அவளது உணர்ச்சியற்ற கண்கள் வெட்ட வெளியை வெறித்துப் பார்க்கும். அவளுக்கு அருகே அமர்ந்து, அவளை நச்சரிக்கத் தொடங்குவான்:

''எது பற்றி நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய்? நீ தடித்து இருக்கிறாய், ஆனால் நீ காட்டுவதில்லை. உன் பிள்ளைகள் உன்னைக் கவனிப்பது கூட இல்லை. தத்யானா உன்னிடம் நடந்து கொள்வதைக் காட்டிலும், சமையல் காரியிடம் நாகரிகமாக நடந்து கொள்கிறாள். எலேனா

உன்னை உதாசீனப் படுத்துகிறாள். உன்னைப் பார்ப்பதற்காக அவள் ஏன் வருவதில்லை, ஹூம்? அவள் தனக்கொரு புதிய காதலனைக் கண்டு பிடித்திருப்பாள். இல்யா—எங்கே இருக்கிறான் அவன்?''

ஆனால் தன் மனைவியை நச்சரித்த போதும் அவனுக்கு எந்த மகிழ்ச்சியும் கிடைக்கவில்லை. அவளது செந்நிற முகம் சீக்கிரமாகவே கண்ணீரால் ஈரமாகி விடும், ஆனால் அது அவளுடைய கண்களினின்று மட்டுமல்லாமல், அவளது கன்னத்தின் ஒவ்வொரு நுண்ணிய துவாரத்திலிருந்தும் வருவது போலக் காணப்பட்டது, அது அவளது இரட்டை நாடியிலிருந்து விழுகின்ற போது, காதுக்கருகிலிருந்து எங்கோ கசிவது போலிருக்கும்.

''கசிகின்ற பீப்பாய் போல,'' என்று கிழவன் வெறுப்போடு முணுமுணுப்பான், அவளது கண்ணீரைப் பார்க்காது, அவளைத் தனியே விட்டு விட்டுச் செல்வான். அது மிகுந்த சலிப்பாக இருந்தது.

யாக்கவை நச்சரிக்க மட்டும் அவன் எந்த முயற்சியும் செய்வதில்லை; ஆனால் தன் தந்தையினுடைய பார்வையிலே சித்ரவதை செய்கின்ற இரக்கம் காணப்படுவதை அவன் பல முறை பார்த்திருக்கிறான். சில நேரங்களில் தந்தை தனக்குத்தானே பெருமூச்செறிந்து கொள்வான்:

''அட நீ! வெற்றுக் கண்கள்.''

மிரோனைப் பார்த்துச் சிரிப்பது இயலாததாக இருந்தது. பியோத்தர் வெளிப்படையாகவே அஞ்சினான், அவனைத் தவிர்க்கவும் செய்தான். இதை யாக்கவால் மிக நன்றாகப் புரிந்து கொள்ள முடிந்தது. ஒவ்வொருவரும் மிரோனுக்குப் பயந்தார்கள், ஆலையிலும் சரி வீட்டிலும் சரி—அவனது தாய் மற்றும் பளிங்கு பொம்மை மனைவியிலிருந்து, கூப்பிட்ட குரலுக்கு ஓடி வரும் சிறுவன் கிரீஷ்கா வரை. மிரோன் முற்றத்தின் வழியாக நடந்து செல்கின்ற போது, அவனது நீண்ட நிழலே ஒவ்வொரு ஓசையையும் அடக்குவது போல இருந்தது.

தனது செம்பட்டைத் தலை மருமகனைக் கேலி செய்தால் கூட பியோத்தருக்கு எந்த மகிழ்ச்சியும் கிடைக்கவில்லை. மற்றவர்கள் செய்வதைக் காட்டிலும் மிக நன்றாக மீத்யா தன்னைத்தானே கேலி செய்து கொண்டான். சூல் கொண்டதால் வயிறு பெருத்த தத்யானா, தனது உதடுகளை ஆணவத்தோடு பிதுக்குவாள், மதிய உணவுக்குப்

பிறகு படுக்கையில் விழுகின்றவள் ஒரே நேரத்தில் மூன்று புத்தகங்களைப் படித்து முடிப்பாள். பிறகு அவளுடைய கணவன் அவளுக்கு அருகிலே ஒரு சடை நாய் போலத் தொடர்ந்து வர அவள் காலாற நடந்து போவாள்.

மூத்த அர்தமோனவ் வண்டியை வெளியே நிறுத்தும்படி உத்தரவிடுவான், தனது தம்பியையும் தீஹனையும் நச்சரிப்பதற்காக நகரத்திற்கு அதை ஓட்டிச் செல்வான். இது பற்றி யாக்கவ் அடிக்கடி கேள்விப் பட்டிருக்கிறான்.

''நல்லது, முக்காட்டுடன் உள்ள மாணவனே. உனது கடவுளை இழந்து விட்டாயா, அப்படியா?'' என்று தன் தம்பியிடம் கேட்பான்.

தனது கூனலுக்குள் குன்றிப் போவது போல நிகீதா காணப்படுவான். தனது உள்ளங் கைகளை எலும்பு போன்ற தனது முழங்காலின் மீது வைத்து அழுத்தியபடி மென்மையாகவும், இரக்கத்துடனும் பேசுவான்:

''ஆக, நீ சொல்லக் கூடாது...''

''நான் ஏன் சொல்லக் கூடாது? நீ தவறான தொப்பி அணிந்திருக்கிறாய். ஒரு போலித் தொப்பியை நீ அணிந்து கொண்டிருக்கிறாய். உன்னுடைய ஆடைகள் எல்லாமே போலி. நீ என்ன மாதிரியான துறவி?''

''அது என்னுடைய சொந்த ஆன்மாவின் கவலை.''

''பொடிப் போடுகிறாய். இல்லை, நீ உருப்படாமல் போய்விட்டாய். நீ தவறு செய்து விட்டாய். பணம் இல்லாமல் யாரையேனும் ஒரு பெண்ணை—யாரோ ஓர் ஏழை அநாதையை, நீ இளைஞனாக இருக்கின்ற போது திருமணம் செய்து கொண்டிருந்தால், நன்றிக் கடனாக உனக்கு அவள் பிள்ளைகளைப் பெற்றுக் கொடுத்திருப்பாள், என்னைப் போல நீயும் இப்போது ஒரு தாத்தாவாகி இருப்பாய். ஆனால் நீ என்ன செய்தாய், நினைத்துப் பார்த்தாயா?''

ஒரு பெரிய ஆமையைப் போல, துறவியோ மெல்ல நழுவி அப்பால் போய் விடுவான்; பியோத்தர் அர்தமோனவ் ஓல்காவிடம் செல்வான், பெருஞ் சந்தையிலே அலெக்ஸி செய்த சல்லாபங்களைக் கூறுவான். ஆனால் இதுவும் கூட அவனது கவனத்தைத் திருப்பத் தவறிவிட்டது. அவளுடைய கணவன் இறந்ததிலிருந்தே அந்த சின்னஞ்சிறு கிழவி அமைதியின்மையால் பாதிக்கப்பட்டுப் போனாள். எப்போதுமே நடந்து கொண்டேயிருந்தாள், நாற்காலிகளை இடம் மாற்ற

வும், தட்டுமுட்டுச் சாமான்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்தில் வைக்கவும், சன்னல்களுக்கு வெளியே அடிக்கடி பார்த்தபடியும் இருந்தாள். அவள் தனது தலையைத் திருப்புவதே கிடையாது, அவளது மூக்கின் மீது தடித்த மூக்குக் கண்ணாடி இருந்தும் கூட, அவளுடைய தொடு உணர்ச்சியாலேயே அவள் வழிநடத்திச் செல்லப்பட்டாள், கைத்தடியுடன் நடந்தாள், வலது கையை முன்னுக்கு நீட்டிக் துழாவிய வாறும் நடந்தாள். பியோத்தரின் கெடு நோக்கான கதைகளுக்கு ஒரு முறுவலிப்புடன் அவள் பதில் பேசுவாள்:

''என்ன வெல்லாம் விரும்புகிறாயோ அவற்றை நீ சொல்லலாம். எனது அல்யோஷாவுக்கு எந்தத் தீமையும் ஏற்படப் போவதில்லை, எந்தப் பயனும் மேற்கொண்டு சேரப் போவதில்லை.''

''அவன் உன்னைப் பற்றிச் சொன்னது சரிதான்—நீ வாழ்க்கையை ஒற்றைக் கண் கொண்டுதான் பார்க்கிறாய்.''

''அவை இரண்டுமே ஏறத்தாழக் குருடாகி விட்டன,'' என்றாள் ஓல்கா. ''எனக்குக் கண் பார்வை அவ்வளவு மோசமாகி விட்டது, அவருக்கு விருப்பமான ஒரு கோப்பையை நேற்றுத் தான் உடைத்தேன்.''

அர்தமோனவ் தனது கைவரிசையை தீஹன் வியாலவிடமும் காட்ட முயன்றான்; ஆனால் இது எளிதாக அமையவில்லை. தீஹன் ஒருபோதும் கோபமே அடையவில்லை. முணுமுணுக்க மட்டுமே செய்தான், தன்னைத் தாக்க வருபவனைப் பக்கவாட்டில் பார்த்துக் கொண்டு ஒவ்வொரு குத்தல் பேச்சுக்கும் சுருக்கமாகவும், பொறுமையுடனும் பதிலளித்தான்.

''நீண்ட காலமாக நீ வாழ்கிறாய்,'' என்பான் அர்தமோனவ். தீஹன் தகுந்தவாறு பதிலளித்தான்:

''சிலர் இன்னும் நீண்ட காலம் கூட வாழ்கிறார்கள்.''

''சரி, ஆனால் நீ எதற்காக வாழ்ந்தாய், ஹூம்? நீயே அதைச் சொல்லு!''

''ஒவ்வொருவரும் வாழ்கிறார்கள்.''

''அது அப்படித்தான். ஆனால் அவர்கள் தங்களுடைய வாழ்க்கை முழுவதும், முற்றத்தைப் பெருக்கிக் கொண்டும், குப்பை கூளங்களைச் சுத்தம் செய்து கொண்டும் இருப்பதில்லை...''

தீஹனுடைய சிந்தனைகள் அவற்றிற்கே உரிய வழியில் சென்றன.

''நீங்கள் பிறந்தீர்கள், நல்லது, நீங்கள் சாகும் வரை வாழ்வீர்கள்,'' என்று தொடர்ந்தான். ஆனால் அர்தமோனவ் அதைச் செவி மடுக்கவில்லை:

''நீ உன்னுடைய வாழ்க்கை முழுவதையும் கையில் துடைப்பத்துடனே கழித்து விட்டாய். மனைவி இல்லை. குழந்தைகள் இல்லை, சொந்தக் கவலைகள் ஏதுமில்லை. ஏன்? என் தந்தை உனக்கு நல்லதொரு இடத்தைத் தர முன்வந்தார். ஆனால் அதை நீ ஏற்றுக் கொள்ளவில்லை. எது உன்னை அவ்வளவு பிடிவாதமாக இருக்க வைத்தது?''

''நீ கேட்பது ஒரு வகையில் காலங்கடந்த ஒன்று, பியோத்தர் இல்யீச்,'' தனது கண்ணை அப்பால் திருப்பியபடி தீஹன் கூறினான்.

கோபம் ஏற்படவே, பியோத்தர் தொடர்ந்து நச்சரித்தான்:

''கொஞ்சம் பார்—தன்னுடைய வாழ்நாளில் எத்தனை பேர் அதிர்ஷ்டத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொருவருமே சிறந்த வாழ்க்கை வாழ்வும், பணத்தைச் சேகரிக்கவுமே முயல்கிறான்...''

''சேமித்து, சேமித்து சாத்தானிடம் கொடுக்க வேண்டியதுதான்,'' என்று பதில் கூறிய தீஹன் வழக்கத்திற்கு மாறாகத் தன் எழுத்துக்களில் அழுத்தம் கொடுத்துப் பேசினான்.

தன் தந்தை கோபமுற்றுச் சத்தம் போடுவார் என்று யாக்கவ் நினைத்தான்; ஆனால், சற்று நேர அமைதிக்குப் பிறகு, அந்தக் கிழவன் தெளிவில்லாதபடி எதையோ முணுமுணுக்க மட்டுமே செய்து, தன் முதுகைத் திருப்பி, முற்றப் பாதுகாவலனிடமிருந்து அப்பால் நழுவிப் போனான். தீஹன் வயதானதால் நிறம் மாறிப் போய் விட்டான், தனது தலைமுடியை இழந்து விட்டான், அவனது தோல்கூட வண்டல் மண்ணைப் போல நிறம் மாறிவிட்டிருந்தது; ஆனால் இன்னமும் அவன் நலத்தோடும், வலிமையோடும், முதுமைப் பருவத்தின் தாக்குதல்களுக்கு ஈடு கொடுத்து நின்றான். ஒரு விதமான அமைதிப் போக்கையும் பெற்றிருந்தான், பேசுகின்ற போது அவன் குரல் முன்னிலும் அழுத்தமாகவும், அறிவுரை கூறுவது போலவும் இருந்தது. பியோத்தரைக் காட்டிலும், தன்னைத்தானே ''எசமானன்'' போலக் கருதி தீஹன் பேசுவது போலவும் நடந்து கொள்வது போலவும் யாக்கவுக்குத் தென்பட்டது.

குடும்பத்திற்குத் தான் அந்நியமாகப் போய் விட்டதாகவும், அதனுடைய ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரே உறுப்பினன் வெளியாள் ஆன மீத்யா லாங்கினோவ் தான் என்பதை மிகுந்த தெளிவோடு யாக்கவ் உணரலானான். யாக்கவுக்கு மீத்யா புத்திசாலியாகவும் தெரியவில்லை, முட்டாளாகவும் தெரியவில்லை. இன்ன மாதிரியான வகை என்று அவனை வரையறுக்க இயலவில்லை. அவன் எல்லாருக்கும் அருமையான ஆள். மிரோன் அவனிடத்தில் நடந்து கொள்ளும் முறையை வைத்தே அவனது தகுதி உறுதி செய்யப்பட்டது. மீத்யாவிடம் மிரோன் மிகவும் நட்புறவுடன் தான் நடந்து கொண்டான். அவர்கள் அடிக்கடி விவாதம் செய்து கொண்டாலும், அவர்கள் சண்டையிட்டுக் கொண்டதில்லை; மேலும் விவாதம் செய்யும் போது கூட மிரோன் மிகுந்த நிதானத்துடன் நடந்து கொண்டான்,—மிரோன் ஒரு தற்புகழ்ச்சிக்காரன், எல்லா மக்களாலும் அதிகாரம் செலுத்தப்பட்ட ஒரு சர்வாதிகாரப் போக்குடையவன். காலையிலிருந்து இரவு வரை வீட்டில் அவசரமான அழைப்புகள் எதிரொலித்துக் கொண்டே இருந்தன:

''மீத்யா!'' தத்யானா கதறுவாள்.

''மீத்யா எங்கே?'' நதால்யா கேட்பாள்; பியோத்தர் கூட தனது தலையை சன்னலுக்குள்ளாக நீட்டி கர்ஜிப்பான்:

''மீத்யா! சாப்பாட்டுக்கு நேரமாகி விட்டது!''

ஒரு குள்ள நரியைப் போல மீத்யா ஆலைக்குள்ளாகச் சுற்றித் திரிவான், அவனுடைய வேடிக்கைச் சொற்களும் மகிழ்வூட்டும் கிண்டலும் ஒரு கட்டுக்கதை போலக் காணப்பட்டது, தொழிலாளர்களிடமும் எழுத்தர்களிடமும் மிரோன் காட்டிய தீவிரப் போக்கை இது மூடி மறைத்தது. அவன் தொழிலாளர்களை நண்பர்கள் என்றே அழைத்தான்.

''பாரு, நண்பரே, இதெல்லாம் தவறு!'' என்று தச்சர்களின் தலைமையாளான தாடிவைத்த அந்தக் கம்பீரமான ஆளிடம் இப்படிக் கூறுவான், சிவப்புத் தோலால் பைண்டு செய்யப்பட்ட ஒரு குறிப்பேடையும் வெளியே எடுத்தோ, பக்கத்திலுள்ள பலகை ஒன்றில் விரைவாக மாதிரி ஏதோ வரைந்து காட்டியோ கேட்பான்:

''பார்க்கிறாயா? இது போலவா? அது போலவா? அதன் பிறகு இது போலவா? என்ன, சரியா?''

''சரிதான்,'' என்று தலைமைத் தொழிலாளி ஒத்துக் கொள்வான். ''நாமோ எப்போதும் செய்வது போலவே பழைய முறையில் அதனைச் செய்து கொண்டிருக்கிறோம்...''

''இல்லை, அருமை நண்பரே, அது நல்லதில்லை. புதிய முறையில் நீங்கள் செய்ய வேண்டும். அது லாபகரமானது!''

திரும்பவும் தலைமைத் தொழிலாளி ஒத்துக் கொள்வான்:

''அப்படித்தான்.''

மீத்யாவினுடைய சுறுசுறுப்பான வியாபாரத் திறமையானது அலெக்ஸியை நினைவு படுத்தியது; ஆனால் அலெக்ஸியினுடைய எசமானனுக்குரிய பேராசை இவனிடம் காணப்படவில்லை. அவனுடைய மகிழ்ச்சியான கோமாளித் தனம் தச்சன் ஸெரஃபீமை நினைவூட்டியது. இதைப் பியோத்தர் கூட சரியாகப் புரிந்து கொண்டான். ஒரு நாள் இரவுச் சாப்பாட்டு வேளையில், மேசையைச் சுற்றி நிலவிய உற்சாகமின்மையை மீத்யா போக்கிய போது, அர்தமோனவ் பல்லை இளித்தபடி முணுமுணுத்தான்:

''ஒரு காலத்தில் ஸெரஃபீம் என்ற ஆறுதல் அளிப்பவன் ஒருவனை நாங்கள் பெற்றிருந்ததுண்டு... ஆமாம்!''

மிரோனுக்கும் பியோத்தருக்கும் இடையே அடிக்கடி ஏற்பட்ட மோதல்களில் ஒன்றில், தனது மைத்துனன் மிரோனிடம் பேசிய வார்த்தைகளை யாக்கவ் கேட்டான்:

''ஏதோ ஒரு சிறு பயங்கரமானதும், வெறுப்பானதும் ஆன விஷயம், அடுத்த ஏதோ ஒரு இரங்கத்தக்க விஷயத்தோடு கூட்டு—சுத்தமான ருஷ்ய ரசாயனம்!''

அதே சமயம் ஆறுதலாகத் தொடர்ந்து பேசினான்:

''ஆனால், எல்லாம் சரிதான்! அந்த மாதிரியான விஷயம் சீக்கிரத்திலேயே காலாவதியாகும். நம்மை நாமே சுத்தப் படுத்திக் கொண்டு வருகிறோம்...''

விடுமுறை நாள் மாலை வேளையில், பழத் தோட்டத்தில் தேநீர் அருந்தும் போது, பியோத்தர் குறை சொன்னான்:

''ஒரு விடுமுறை நாள் கூட இல்லாமல் என் வாழ்க்கையை நான் வாழ்ந்து விட்டேன்!''

இதற்கு மீத்யா வாய்விட்டுச் சிரித்தான், பட்டாசுப் பொறி போல உணர்ச்சி வயப்பட்டு எதிர்த்துச் சொன்னான்:

''அது உங்களுடைய தவறு, யாருடையதுமல்ல! ஒரு

மனிதன் தானாகவேதான் தனது விடுமுறைகளை ஏற்படுத்திக் கொள்கிறான். வாழ்க்கை என்பது உண்டு மகிழ்வோர் அழகு. அதற்கு அன்பளிப்புகள், பொழுது போக்குகள், விளையாட்டு தேவைப்படுகின்றன. வாழ்க்கையை அநுபவிக்க வேண்டும். ஒவ்வொரு நாளும் மகிழ்ச்சியாக இருப்பதற்கு ஏதாவது வழங்கத்தான் செய்கிறது.''

வார்த்தைகளுக்காகத் தயங்காதபடி அவன் மேன்மேலும் பேசினான். அவன் சுங்கான் புகைத்துக் கொண்டிருப்பது போலக் காணப்பட்டது. மற்றவர்கள் அமைதியாக இருந்தார்கள். அது எப்போதுமே அப்படித்தான் இருந்தது: அவனுடைய பேச்சைக் கேட்கின்ற மக்கள் ஒருவகையான கனவு மயக்கத்திலே ஆழ்ந்தார்கள்; ஓர் எதார்த்தமான உண்மை அதற்குப் பின்னால் இருக்கிறது என்ற உணர்வுடன், யாக்கவ் கூட கவர்ந்திழுக்கப்பட்டான். எனினும் அதே வேளையில் மீத்யாவைக் கேட்க வேண்டும் என்ற ஒரு வேட்கையும் ஏற்பட்டது:

''அந்த நிலையில், அத்தகைய ஓர் அசட்டுத்தனமான கவர்ச்சியற்ற பெண்ணை எதற்காகத் திருமணம் செய்து கொண்டாய்?''

தன் மனைவியுடனான மீத்யாவின் உறவில் மிகைப்படுத்தப்பட்ட ஒரு தன்மை இருப்பதை யாக்கவ் கண்டறிந்தான். அவனது தனிமையுணர்வு மிகவும் அழுத்தமானதாக இருந்தது. இந்தப் போலித்தன்மையை தத்யானாவும் அறிந்து கொண்டாள் என்று யாக்கவ் நினைத்தான். அவளோ சோர்வு கொண்டவளாகவும், அதிகம் பேசாதவளாகவும், எரிச்சலடைபவளாகவும் இருந்தாள், கலகலப்பாகப் பேசும் தன் கணவனுடன் பேசுவதை விடுத்து மிரோனிடம் அரசியலை விவாதிப்பதில் மிகவும் இணக்கம் கொண்டவளாகக் காணப்பட்டாள். எப்படிப் பேசுவது என்று அவள் அறிந்திருந்த ஒரே விஷயம் அரசியல் தான்.

சில நேரங்களில், எந்த விதமான கவலைகளும் மக்களுக்கு இல்லாத ஒரு நாட்டிலிருந்து மீத்யா லாங்கினோவ் வந்தவன் அல்ல வென்றும், ஆனால் படுபயங்கரமான தொல்லைகள் மிகுந்த ஏதோ இருண்ட குழியிலிருந்து வந்தவன் போல யாக்கவுக்குத் தோன்றும், அந்தக் குழியினின்றும் துள்ளிக் குதித்து வெளி வந்த அவன், கடைசியாக புதிய, அறிமுகமில்லாத மக்களைக் கண்டு கொண்ட மகிழ்ச்சியினால் இப்படிக் குதூகலமாகவும், கோமாளித்தனமாகவும்,

புகழவும், வியக்கவும் செய்கிறான் என்பதாக உணர்ந்தான். இந்த வியப்பில் ஏதோ முட்டாள்தனத்தின் போக்கு இருப்பதாக யாக்கவ் உணர்ந்தான். விளையாட்டுச் சாமான்கள் நிறைந்த கடையை வியப்போடு உற்றுநோக்கும் ஒரு பையன் போல மீத்யா இருந்தான்—ஆனால் அந்த விளையாட்டுச் சாமான்களில் எவை பயனுள்ளவை என்பதை விரைவாகவும் புத்திசாலித்தனமாகவும் அறிந்து கொள்ளக் கூடிய பையனாக இருந்தான்.

குடும்பத்தினர் அனைவரிலும், வேலையாட்கள் அனைவரிலும் தத்யானாவின் கணவனை நிச்சயமாக வெறுத்தவர்கள் இரண்டே பேர்தான்: நிகீதாவும் தீஹன் வியாலவும். மீத்யாவைப் பற்றி என்ன நினைக்கிறாய் என்று முற்றக் காவலனிடம் யாக்கவ் கேட்ட போது, அவன் அமைதியாகப் பதிலளித்தான்:

''சரியில்லாதவன்.''

''எது உன்னை இப்படி எண்ண வைத்தது?''

''அவன் ஓர் ஈயைப் போல. எந்தக் குப்பையின் மீதும் உட்கார்ந்து விடும்.''

யாக்கவ் அந்தக் கிழவனிடம் நீண்ட நேரம் தொடர்ச்சியாகக் கேள்வி கேட்டான், ஆனால் இதைத் தவிர மிகத் தெளிவாக எதையும் அவனால் பெற முடியவில்லை.

''நீயாகவே பார்த்துக் கொள்ள முடியும், யாக்கவ் பெத்ரோவிச், நீ பார்க்கவில்லையா? அந்த மனிதன் எல்லா வகையான தந்திரங்களையும் செய்கிறான்.''

யாக்கவின் சித்தப்பாவான துறவி கூட பெரும்பாலும் இதையேதான் கூறினான்:

''புழுதி கிளப்புகிறான்,'' என்று பெருமூச்சு விட்டபடி கூறினான். ''இது போன்ற ஆட்களை நான் ஏராளம் பார்த்திருக்கிறேன், உளறுவாயன்கள். அவர்கள் மக்களைக் குழப்பி விடுவார்கள். அவர்களும் கூட குழம்பிப் போவார்கள், வார்த்தைகளில் சிக்கிக் கொள்வார்கள். இந்த மாதிரியான ஆசாமியிடம் போய் 'ஐயோ, நிம்மதி போச்சு' என்று கூறினால் 'கடலை வந்தாச்சு' என்று உன்னிடம் திரும்ப வந்து நிற்பான். ஐயோ... ஆமாம், அந்த மாதிரியான ரகம்.''

தனது வழக்கமான முறைக்கு முற்றிலும் மாறுபட்டபடி, அமைதியான சப்பாணியோ எரிச்சலுடன் பெரும்பாலும் கோபங்கொண்ட தொனியில் பேசினான். இதை

யாக்கவ் விநோதமானதாக நினைத்தான். தத்யானாவின் கணவனைப் பற்றிய தங்களது மதிப்பீட்டில் தீஹனுக்கும் நிகீதாவுக்கும் உடன்பாடு இருந்தது இன்னும் விநோதமான தாக இருந்தது. இந்தக் கிழவர்கள் இருவரும் தங்களது விரோதப் போக்கை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ள வில்லை என்றாலும், எதுவும் பேசாமல், சந்திப்புகளைத் தவிர்த்துக் கொண்டு, அபூர்வமாக ஓரிரு வார்த்தைகள் மட்டுமே பேசிக் கொண்டார்கள். மனிதர்களின் எத்தகைய முட்டாள்தனத்தைக் கண்டு மிகவும் சலிப்புற்றுப் போயிருந் தானோ அதை இவர்களிடமும் கண்டான் யாக்கவ். கல்ல றையிலே ஏற்கெனவேயே ஒரு காலை வைத்து விட்ட இந்த இருவருக்கிடையே என்ன வித்தியாசம் இருக்கப் போகிறது? சித்தப்பா நிகீதா செத்துக் கொண்டிருந்தான். துறவியை அவனுடைய கல்லறைக்கு அனுப்பிவைப்பதில் பியோத்த ரும் பெருமளவுக்கு உதவி செய்து கொண்டிருப்பதாக யாக் கவ் உணர்ந்தான். பெரும்பாலும் ஒவ்வொரு சந்திப்பின் போதும் அவன் தன் தம்பியை சித்திரவதை செய்வதுண்டு, கண்டனம் தெரிவித்து அடக்கினான்:

''என் வாழ்நாள் முழுக்க பொதி சுமந்த எருது போல நான் வாழ்ந்திருக்கிறேன், நீயோ பூனை போல வாழ் கிறாய். எல்லாரும் உன்னை அமைதிப்படுத்தவும், மகிழ்ச்சி யடையச் செய்யவும் முயல்கிறார்கள். நீ கூனன் என்பதைக் கூட அவர்கள் கவனிப்பது இல்லை. நானோ— ஒவ்வொரு வரும் என்னைக் கேவலமாக அழைக்கிறார்கள், என்னிடத் தில் என்ன கேவலம் இருக்கிறது? என் வாழ்நாள் முழுக்க வும்...''

தனது கூனல் உடம்புக்குள்ளாகத் துறவி தனது தலையை இழுத்துக் கொண்டு, இடையிடையே இருமியடி பேசு வான்:

''கோபப்பட வேண்டாம்.''

தன் தந்தை பற்றி யாக்கவ் கொண்டிருந்த அருவருப் புணர்ச்சி அவனது வாழ்க்கையைச் சுமை கொண்டதாக்கிய மற்றொரு விஷயமாகும். ஒரு பெரிய மிருதுவான சோப்புக் கட்டிபோல பழுப்பு நிற முடி அடர்ந்த தனது மார்பை பியோத்தர் திறந்து போட்டபடி இருந்ததே யாகும். இந்த உணர்ச்சியை மறைப்பதோ, கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்வதோ அவ்வளவு சிரமமானதாக இருக்கவில்லை.

அவ்வப்பொழுது யாக்கவ் தனக்குத்தானே நினைவூட்டிக் கொள்ள வேண்டி இருந்தது:

''அவர் என் தந்தை. என்னைப் பெற்றவர்.''

ஆனால் இந்த எண்ணமானது அவன் தந்தையினுடைய தோற்றத்தில் எந்த முன்னேற்றத்தையும் ஏற்படுத்த முடிய வுமில்லை, அவன் உள்ளத்தில் தோன்றிய வெறுப்புணர்ச் சியை குறைக்கவும் முடியவில்லை. மாறாக, அந்த எண் ணம் புண்படுத்துவதாகவும், கேவலப்படுத்துவதாகவும் இருந்தது. தன் தம்பி சாவதைப் பார்க்கப் போகிறவனைப் போல, கிட்டத்தட்ட ஒவ்வொரு நாளும் பியோத்தர் நக ரத்திற்கு வண்டியில் சென்று வந்தான். அவனுடைய மாடிப் படிகளில் மூச்சு வாங்க ஏறுவான், துறவியின் படுக்கை அருகே தானாகவே அமர்ந்து கொண்டு, கொழுந்து விட் டெரியும் குருதிபடிந்த கண்களால் அவனைக் குனிந்து பார்ப் பான். அடிக்கடி இருமியபடியும், முகட்டிலுள்ள உத்திரக் கட்டைகளின் மீது கண்ணைப் பதித்த படியும் நிகீதா அமை தியாகப் படுத்திருப்பான். அவனுடைய கைகள், அமைதி யற்றுப் போய், அவனுடைய மேலாடையின் மீது மேலுங் கீழுமாக அலைந்து கொண்டும், மற்றவர்கள் காணாத ஏதோ ஒன்றை தடவிக் கொண்டும் இருக்கும். சில நேரங் களில், மூச்சு விட முடியாதபடி இருமல் தொலைக்கின்ற போது எழுந்திருக்க முயல்வான்.

''தளர்ச்சியாக இருக்கிறதா உனக்கு?'' என்று மூத்த சகோதரன் கேட்பான்.

தனது சகோதரனின் தோளையோ, நாற்காலிகளின் முதுகுகளையோ பக்க பலத்திற்காகப் பற்றியபடி, நிகீதா சன்னலை நோக்கி ஊர்ந்து செல்வான். ஒடிந்து போன பாய் மரத்தின் மீது தொங்கும் துணியைப் போல அவனுடைய மெலிந்த உடம்பின் மீது அங்கி தொங்கியது. சன்னலுக்கு முன்னால் உட்கார்ந்தபடி வெளியே, கீழேயுள்ள பழத் தோட்டத்தையோ, தொலைவில் தெரியும் இருண்ட காட் டையோ பார்ப்பான்.

''நல்லது, பிறகு ஒய்வெடுத்துக்கொள்,'' தனது தொங் கிப்போன காதை இழுத்து விட்டுக் கொண்டே மூத்தவன் கூறுவான். கீழே படிகளில் இறங்கி வந்து ஓல்காவிடம் அறி விப்பான்:

''அவன் தளர்ந்து விட்டான். அதிக நாள் தாங்காது...''

ஃபாதர் மார்தாரி, தடித்த துறவி வந்து சேர்ந்தார்.

நிகீதாவைத் துறவி மடத்துக்கு அனுப்ப வேண்டும் எனவும், அவன் அங்கு தான் சாக வேண்டும், அங்கு தான் அடக்கம் செய்யவும் வேண்டும் என விதி இருப்பதாகவும் தெரிவித்தார். ஆனால் அதை மறுக்கும்படி ஒல்காவை கூனன் கேட்டுக் கொண்டான்:

''நான் இறந்த பிறகு, நீங்கள் என்னை அங்கு அனுப்பி வைக்கலாம்.''

மிகவும் இரங்கிய தொனியில் மூன்று முறை அவன் மன்றாடினான்:

''சவப்பெட்டியின் மூடியை உயரமாகச் செய்யச் சொல்லுங்கள், அப்போது தான் என் கூனை அது தொட முடியாது. தயவு செய்து மறந்து விடாதீர்கள்!''

போர் ஆரம்பமாவதற்கு நான்கு நாட்களுக்கு முன்னால் அவன் இறந்து விட்டான். சாவதற்கு முதல் நாள் துறவி மடத்திற்கு அறிவிக்கும்படி அவர்களை அவன் கேட்டுக் கொண்டான்:

''அவர்கள் இங்கே வரட்டும். அவர்கள் இங்கே வருகின்ற போது நான் இறந்து போய் இருப்பேன்.''

முதல் நாள் காலையில் படிகளில் ஏறிச் செல்வதற்கு யாக்கவ் தன் தந்தைக்கு உதவி செய்தான். பியோத்தர் தானாகவே சிலுவை வைத்துக் கொண்டான், தன் தம்பியினுடைய சாம்பல் நிறம் போன்ற அவயவங்களையும், உள் வாங்கிப் போன வாயையும் பாதி மூடிய கண்களையும் பார்த்தபடி நின்றான். இயல்பு மீறிய உரத்த குரலில் நிகீதா பேசினான்:

''என்னை மன்னித்து விடு.''

''என்ன சொல்கிறாய்? உன்னை மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது?'' பியோத்தர் அர்தமோனவ் முணுமுணுத்தான்.

''என் வரம்பு மீறிய நடத்தைக்காக...''

''நீ என்னை மன்னித்து விடு,'' என்றான் அண்ணன். ''சில நேரங்களில் உன்னோடு நான் கேலியாகப் பேசி விட்டேன்...''

''கேலிப் பேச்சை கடவுள் கண்டிக்க மாட்டார்,'' என்று மெல்லிய கிசுகிசுப்பில் துறவி அவனுக்கு உறுதி சொன்னான். சற்று இடைவெளிக்குப் பிறகு பியோத்தர் கேட்டான்:

''இப்போது விஷயங்களை எப்படி நீ உணர்கிறாய்?.. எங்கே?''

''நான் மறந்து விட்டேன்,'' என்று தன் சகோதரன் பேச்சை இடைமறித்தபடி விரைவாகத் துறவி பேசினான். ''யாஷா, தீஹனிடம் சொல், கோடை இல்லத்தை அடுத்து நிற்கும் அந்தச் சிறிய மேப்பிள் மரத்தை அவன் வெட்டியாக வேண்டும். அது வளராது...''

பொது இயல்பு கடந்த தெளிவோடு இருந்த அவனுடைய குரலை யாக்கவால் சகித்துக் கொள்ள முடியவில்லை, மூடி பெயர்ந்து புடைத்துக் கொண்டிருக்கும் ஒரு பெட்டியைப் போல, துருத்திக் கொண்டிருந்த அவனது மார்பை அவனுக்குக் காணச் சகிக்கவில்லை. பழைய பாணியிலமைந்த செப்புச் சிலுவை ஒன்றைப் பிடித்தபடி கைகளை மடக்கியிருந்த, கருமை சூழ்ந்த எலும்புக் குவியலான அந்த உடம்பில் எந்தவிதமான மனிதத்தன்மையும் எஞ்சியிருக்கவில்லை. தன் சித்தப்பாவுக்காக யாக்கவ் வருத்தப்பட்டான், ஆனால் அதே நேரத்தில், ஒவ்வொருவரும் பார்க்கக் கூடிய இடத்தில் கிழவர்களை, பொதுவாக உறவினர்களைச் சாக விடும் பழக்கம் முட்டாள்தனமானது என்று நினைத்தான்.

தன் தம்பி திரும்பவும் பேசுவதை எதிர்பார்த்தபடி பியோத்தர் சற்று நேரம் அங்கே நின்றான், பிறகு, யாக்கவின் கையைப் பற்றியவாறு அமைதியாகத் தலையைத் தாழ்த்தி விட்டு அங்கிருந்து கிளம்பினான். கீழ்ப்படியில் அவன் கூறினான்:

''நிகீதா செத்துக் கொண்டிருக்கிறான்.''

''அப்படியா?'' ஒரு பெரிய செய்தித்தாளில் தன்னைப் பாதி மறைத்தபடி மேசைக்கு முன்னர் அமர்ந்திருந்த மிரோன் கேட்டான். தான் படித்துக் கொண்டிருந்ததினின்றும் கண்ணை உயர்த்தாமலேயே, அனிச்சையாக இப்படிக் கேட்டான். கண நேரத்திற்குப் பிறகு, மேசையின் மீது பத்திரிகையைப் போட்டு விட்டு, அறையின் மறு மூலையில் இருந்த தன் மனைவியை அழைத்தான்:

''நான் சொன்னது சரி. வந்து இதைப் படி!''

சுருள் அப்பம் போன்ற அவன் மனைவி அறையின் குறுக்காக விரைந்து மேசை நோக்கி வந்தாள், சன்னல் அருகிலிருந்து ஓல்கா பயத்தோடு கேட்டாள்:

''உண்மையாகவா, மிரோன்? உண்மையாகவே தானா போரா?''

''இதோ, இரண்டாவது அர்தமோனவும் தயாராகி விட்

டான்,'' என்று பியோத்தர் உரக்க அவர்களுக்கு நினைவு படுத்தினான்.

''உண்மையில் இவை எல்லாமே பொய்,'' குனிந்து பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்த மிரோன் தன் மனைவியிடமோ, யாக்கவிடமோ இப்படிக் கூறினான். பயமுறுத்தும் செய்திகளைப் படித்த யாக்கவ், தனிப்பட்ட முறையில் தான் எதற்கு பயப்பட வேண்டும் என்பதைக் கணக்குப் போட்டுப் பார்த்துக் கொண்டிருந்தான். அர்தமோனவ் கோபமாகத் தன் கையை அலைத்து விட்டு, வெளியே முற்றத்திற்குச் சென்று விட்டான். கடுமையான சூரிய வெப்பத்தால் முற்றத்தில் பாவப்பட்டிருந்த கற்கள் சூடேறி, அவனுடைய வெல்வெட் காலணிகளின் சிறிய துவாரங்கள் வழியாக அவனுடைய தோலைத் தொட்டது. சன்னல் வழியாக மிரோனின் வறண்ட, அதிகாரக் குரல் கேட்டது. பத்திரிகையுடன் சன்னலருகே வந்த யாக்கவ், யாரையோ அச்சுறுத்துவது போல தனது செந்நிற முட்டியைத் தன் தந்தை அலைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

மூன்று நாட்களுக்குப் பிறகு, காலை விடியலின் போது துறவிகள் வந்தார்கள், அந்த ஏழு பேருமே ஏழு வித்தியாசமான வடிவங்களில் உயரத்தோடும், பருமனோடும் இருந்தார்கள்; ஆனால் அவர்களில் ஒருவரைத் தவிர மற்ற அனைவரும் புதிதாகப் பிறந்த குழந்தைகளைப்போல ஒரே மாதிரி யாக்கவிற்குக் காணப்பட்டார்கள். அவர்களில் உயரமாகவும், ஒல்லியாகவும் அடர்த்தியான தாடி வைத்திருந்தவர் தான், கையிலே ஒரு பெரிய கருப்புச் சிலுவையைத் தாங்கியபடி அவர்களை நடத்திக் கொண்டு முன்னே வந்தார். அவரது குரல் உரத்ததாகவும், மகிழ்ச்சி கொண்டதாகவும் இருந்து, சூழ்நிலைக்குப் பொருந்தாதது போலக் காணப்பட்டது. அவருக்கு முகம் என்ற ஒன்று இருப்பது போலவே தோன்றவில்லை, ஏனெனில் அவரது தடித்த தட்டையான மூக்கு கன்னங்களோடு ஒன்று கலந்தது போலிருந்தது, அவரது வழுக்கைத் தலைக்கும் தாடிக்கும் இடையே இரண்டு கருப்புப் புள்ளிகளைத் தவிர வேறு எதையும் விட்டு வைக்கவில்லை. அவர் தனது கால்களை மெதுவாக எடுத்து வைத்தார், அது அவரைக் குருடன் போலக் காட்டியது, மூன்று குரல்களில் அவர் பாடினார்:

''ஆண்டவர் மகா பரிசுத்தமானவர்,'' என்று மிகவும் தாழ்ந்து, அடிக் குரலில் பாடுவது போலிருந்தது;

''பரிசுத்தமானரே, வல்லமை மிக்கவரே,'' இது ஒரு வகையில் உயர்ந்த குரலில் இருந்தது;

''பரிசுத்தமானவரே, நித்திய சொரூபியே, எங்கள் மீது கருணை காட்டும்!'' மிக அபூர்வமான இந்தக் குரலைக் கேட்டு, வியக்கத்தக்கவாறு மூன்று விதங்களில் பாடும் இந்த நாக்கு ஒளிந்திருக்கும் அந்தத் தாடியையே தெருவில் ஓடிச் சென்ற சிறிய பையன்கள் பார்த்தபடி நின்றனர்.

சவ ஊர்வலம் சதுக்கத்தை அடைந்தபோது, நகர மக்களாலும், ரிசர்வ் படையினராலும் கூட்டம் நிறைந்திருப்பதைக் கண்டார்கள். கூட்டத்தின் மத்தியில் லெப்டினெண்ட் மாவ்ரினும் அவனுடைய ஆட்களும், நகரைச் சேர்ந்த சில அதிகாரிகளும், பாதிரியார் கூட்டமும் நின்று கொண்டிருந்தது. உறுதி தளராத அந்த லெப்டினெண்ட் தனது ஆட்களுக்கு முன்னால் ஒரு நினைவுச் சின்னம் போல நின்றான், அவனது உடைகளில் சூரிய ஒளி பட்டு மினுமினுத்தது. பாதிரியார்களும், சர்ச்சின் பணியாட்களும் செதுக்கி நிறுத்திய சிலைகளைப் போல அசைவற்று விறைப்போடு நின்றார்கள், அவர்களது அங்கிகளுக்கு மேலாக அணிந்திருந்த ஆடையானது உருக்கிய தங்கம் போல பளபளத்து, லெப்டினெண்ட் மீது மஞ்சள் நிறமான ஒளியைப் பரப்பியது. தடித்த அதிகாரி ஒருவர், வேதநூல் வைக்கும் மேசைக்கு முன்னதாக நின்று, பளபளக்கும் தனது தலைக்கு மேலாகத் தனது தொப்பியை அலைத்தபடி குதித்துக் கொண்டிருந்தார்.

மூன்று குரல் கொண்ட துறவி, மனிதச் சுவருக்கு முன்னால் நின்று, தனது கருப்புச் சிலுவையை ஆட்டியபடி, கனத்த குரலில் பேசினார்:

''வழி விடுங்கள்!''

மக்கள் வழி விட்டார்கள், துறவிக்கு அல்ல, துணைப் போலீஸ் அதிகாரி எக்கேயின் மெலிந்த குதிரைக்கு வழி விட்டார்கள். தெருவின் குறுக்காகத் தனது குதிரையை எக்கே பக்கவாட்டில், சதுக்கத்தை நோக்கிச் செல்லும் வழியை அடைக்கும் படி திரும்பி, வெள்ளைக் கையுறை அணிந்த தனது கையை அலைத்தபடி கண்டிப்புடன் கத்தினான்:

''எங்கே? நீங்கள் பார்க்கவில்லையா? திரும்பிப் போங்கள்!''

துறவி தனது சிலுவையை உயர்த்திப் பாடத் தொடங்கினார்:

''ஆண்டவரே மகா...''

''உர்-ரா!'' என்று அந்த அதிகாரி கத்தினான்; சதுக்கத்தில் எல்லா மக்களும் வேகத்தோடு கத்தினார்கள்:

''உர்-ரா!..''

தன் அங்கவடியை மிதித்து உயர்ந்த எக்கே, இரைச்சலுக்கிடையே கத்தினான்:

''பியோத்தர் இல்யீச், தயவு செய்து, பக்கத்துத் தெரு வழியே செல்லுங்கள்! சுற்று வழி! மிரோன் அலெக்ஸேயெவிச், தயவு செய்யுங்கள்! அத்தகைய ஆர்வம், நீங்கள் இங்கு வந்தால்... இது எப்படி ஐயா?''

சவப் பெட்டிக்கு முன்னால், தன் மனைவியும், யாக்கவும் தாங்கி வர முன்வந்த அர்தமோனவ், எக்கேயின் உணர்ச்சியற்ற முகத்தை ஏறிட்டுப் பார்த்து விட்டு, பெட்டியைத் தூக்கி வந்த துறவிகளிடம் சோகந்ததும்பக் கூறினான்:

''பாதிரிமார்களே, திரும்பிச் செல்லுங்கள்...''

விம்மலை அடக்கிக் கொண்டே மேலும் தொடர்ந்தான்:

''கடைசித் தடவையாக நான் ஆணையிட்டுக் கொண்டிருப்பது போலத் தோன்றுகிறது...''

மொத்த நிகழ்ச்சியும் விகாரமானது போலவும், கேலிக்குரியது போலவும் யாக்கவுக்குத் தோன்றியது. ஆனால் பலீனா வசித்த ஒரு சிறிய தெருக்குள்ளாக அவர்கள் நுழைந்த போது, வெண்ணிற உடையணிந்து, ரோஜா நிறக் குடை பிடித்தபடி பலீனாவே தோன்றினாள். சதுக்கத்தை நோக்கிச் செல்லும் திசையில் வந்த அவள், பிரேத ஊர்வலத்தைக் கடந்து சென்றபோது உருண்டு திரண்ட தனது மார்பகங்களுக்கு முன்னால் சிலுவை வைத்துக் கொண்டாள்.

புழுதியாலும், மனப் புகைச்சலாலும் குமைந்து கொண்டிருந்த யாக்கவ் ''மாவ்ரினைப் பார்க்கப் போகிறாள்,'' என்று அதே கணம் முடிவு செய்தான். பாதிரியார்கள் மிகவும் விரைவாகச் சென்றார்கள், கருந்தாடித் துறவி தாழ்ந்த குரலில் பாடினார், இசைக் குழுவினரோ பாடுவதை நிறுத்தினார்கள். நகரத்திற்கு வெளியே, கசாப்புத் தொட்டிக்கு நேராக, கருப்புத் துணியால் போர்த்தப்பட்ட ஒரு விநோத அமைப்புக் கொண்ட வண்டி, புள்ளிகள் கொண்ட இரண்டு குதிரைகளுடன் நின்றது. சவப்பெட்டி வண்டியின் மீது வைக்கப்பட்டது, இறுதிச் சடங்குகள் ஆரம்பமாயின. நகரத்திலிருந்து அந்தத் தெரு வழியே ''கடவுள் ஜாரைக் காப்

பார்,'' என்று பாடிக் கொண்டு பாண்டு வாத்தியம் வந்தது. மூன்று சர்ச்சுகளின் மணிகளும் ஒரு சேர ஒலித்தன, அவை எல்லாவற்றுக்கும் மேலாக புகை மண்டலம் போன்று மக்களின் இரைச்சல் எழுந்தது:

''ரா... ரா!''

லெப்டினெண்ட் மாவ்ரினின் கட்டளையைத் தான் கேட்பதாகக் கூட யாக்கவ் நினைத்து விட்டான்:

''டென்-ஷன்!''

பிரார்த்தனைகள் முடிந்ததும், மற்றவர்களோடு அவனும் சித்தியின் வீட்டிற்கு வர வேண்டியதாயிற்று, நினைவு விருந்துக்கான மேசைக்கு முன் அமர்ந்து, தன் தந்தை கோபமாக முனங்கிக் கொண்டிருந்ததைக் கேட்டான்:

''அந்தக் கசாப்புத் தொட்டிக்கு நேராக எந்த முட்டாள் குதிரைகளை நிறுத்தி வைத்தது?''

''போலீஸ்தான், போலீஸ்தான்,'' என்று மீத்யா நயமாக விளக்கினான். ''அது அருவருக்கத்தக்கதாக இருந்தது, அதை நீங்கள் பார்க்கவில்லையா? ஒரு புறத்தில் ஆர்வமிக்க மக்கள்—மற்றொறு புறத்தில் சவப்பெட்டி வண்டி! அவை இரண்டும் ஒன்று சேரவில்லை...''

துயரமிகுந்த மகிழ்ச்சியற்ற நேரங்களில் எல்லாம் குறிப்பாக முன்னுக்கு வரக் கூடிய அந்த டாக்டர் யாக்கவ்லெவுடன் மிரோன் பேசிக் கொண்டிருந்தான். உதடுகளிலே முறுவலிப்பை மறைத்தபடி, மிரோன் கூறினான்:

''சரி, 'சில்வர் பிரின்ஸ்' என்ற கதையில் வரும் மீத்காவைப் போல, மொத்தத்தில் நாம் எல்லாருமாகச் சேர்ந்து தோள் கொடுத்தால்... இறுதியில், எண்ணிக்கை தான் ஒவ்வொன்றையும் முடிவு செய்கிறது...''

''எண்ணிக்கையல்ல. எந்திர சாதனங்கள் தான்,'' என்று டாக்டர் மறுத்துக் கூறினார்.

''எந்திர சாதனங்களா? நல்லது, அது உண்மைதான்... ஆனால்...''

அலுப்பு மிகுந்த அனைத்து அலுவல்களினின்றும் தன்னை விடுவித்துக் கொண்டு பலீனாவின் வீட்டிற்குச் செல்வதற்கு இரவு ஒன்பது மணிக்கு மேல்தான் முடிந்தது. வழி நெடுகிலும், இதற்கு முன்னர் தனக்கு ஒருபோதும் தோன்றியிராத, அசாதாரணமான நிகழ்ச்சிகளின் முன்னுணர்வினைப் பெற்றான். உண்மையில், அது சரியாகவே இருந்தது.

பின் கதவு வழியாக யாக்கவ் உள்ளே நுழைந்த போது,

அடுப்புக்குப் பக்கத்தில் கிடந்த பெஞ்சின் மீது பதறிப் போய் உட்கார்ந்தபடி ''ஓ, என்னுடைய,'' என்றாள் பலீனாவின் சமையல்காரி.

''அழுக்குப் பிடித்த பரத்தைத் தரகுக்காரியே,'' என்று அவளைக் கடந்து செல்லும் போது யாக்கவ் கூறினான். பலீனாவின் அறைக் கதவுக்கு வெளியே கண நேரம் நின்று, ராணுவக் காலடி ஓசையையும், அறைக்குள்ளாகக் கேட்ட அறிமுகமான ராணுவத்தன்மை வாய்ந்த குரலையும் கேட்டான். அக்குரல் பேசியது:

''நல்லது, பிறகு, நீங்கள் தான் யோசித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும், அம்மையே. அது அப்படித்தானா? இல்லையா?.. உங்கள் மூளையைப் பயன்படுத்துங்கள்!''

யாக்கவ் யோசித்தான்: ''அம்மையே என்கிறான். ஆக இன்னமும் ஏதும் நடந்து விடவில்லை.''

ஆனால் அவன் கதவைத் திறந்து பார்த்தபோது ஒவ்வொன்றும் ஏற்கெனவே நடந்து முடிந்து விட்டிருந்ததை அவன் உடனே கண்டு கொண்டான். மனம் உலைவுறாத அந்த லெப்டினெண்ட் அறையின் நடுவே நின்றான், அவனது கைகள் சட்டைப் பைகளுக்குள்ளாக இருந்தன, புருவங்களைக் கடுமையாக நெளித்தவாறு நின்றான். அவனது சீருடைச் சட்டையின் பொத்தான்கள் மாட்டப்படாமல் இருந்தன, இடைவார்கள் தொங்கின, அவற்றில் ஒன்று காற் சட்டையோடு இணைக்கப்படாமல் இருந்தது. கால்களைப் பின்னிப் போட்டவாறு பலீனா சோஃபாவில் அமர்ந்திருந்தாள், காலுறைகளில் ஒன்று தொய்வாகக் கிடந்தது, கணுக்காலுக்கு மேலாகச் சுருங்கி மடிந்து காணப்பட்டது, அவளது குறும்புக் கண்கள் விசித்திரமாகச் சுற்றிச் சுழன்றன. அவளது கன்னங்கள் பலமாகக் கன்றிச் சிவந்திருந்தன.

''நல்லது? அப்புறம் என்ன?'' என்று மனம் உலைவுறாத லெப்டினெண்ட் கேட்டான்; அவனுடைய இந்தக் கேள்வி, யாக்கவினுடைய மோசமான சந்தேகத்தை உடனடியாக உறுதி செய்தது. அறைக்குள்ளாகக் காலடி வைத்த அவன் தனது தொப்பியை ஒரு நாற்காலி மீது வீசியெறிந்து விட்டு, விநோதமாக மாறிப்போன, இயற்கையற்ற தொனியில் பேசினான்:

''பிரேத ஊர்வலத்திலிருந்து... நினைவு விருந்தை முடித்து விட்டு நான் வருகிறேன்...''

''அப்படியா?'' என்று கூறிய லெப்டினெண்டின் விசாரிக்கின்ற தொனி, அவன் தான் அங்கு எசமானன் என்பது போல இருந்தது. புகையிலை கனன்று விழுகின்ற அளவுக்கு பலீனா தனது சிகரெட்டை புகைத்தாள், பின்னர் புகையை வெளியே விட்டு, தான் தோன்றித்தனமாக, கள்ளமின்றி பேசினாள்:

''இப்பலீத் செர்கேயெவிச் நான் நர்சுகள் பிரிவில் கட்டாயம் சேர வேண்டும் என்று கூறுகிறார்...''

''நர்சுகளா? ஹூம்,'' என்று யாக்கவ் கேலிச் சிரிப்புடன் கூறினான். மனம் உலைவுறாத லெப்டினெண்ட் அவனை நோக்கி ஓர் எட்டு எடுத்து வைத்து மொறுமொறுப்போடு கேட்டான்:

''இந்தச் சிரிப்புக்கு என்ன அருத்தம்? நேரடியாகவே தெரிந்துகொள்ளுங்கள்: மிகைபடக் கூறுவதை நான் விரும்புவதில்லை! என்னால் அதைப் பொறுத்துக் கொள்ளவும் முடியாது!''

இந்தச் சில கணங்களில், கோபத்தாலும் எரிச்சலாலும் யாக்கவ் துளைத்தெடுக்கப்பட்டான். இந்நிலையில், தனக்கு எலும்போ, உடலின் வேறு உறுப்புகளோ எப்படித் தேவையோ அதே போல இந்தச் சிறிய பெண்ணும் தனக்குத் தேவைப்படுகிறாள் என்பதும், தன்னிடமிருந்து அவள் பிரித்து எடுக்கப்படுவதைத் தன்னால் தாங்கிக் கொள்ளவே முடியாது என்பதும் ஏறத்தாழ அவனுக்குத் தவிர்க்க முடியாத ஓர் உண்மையாகப் புலப்பட்டது. இந்த உணர்வு ஏற்பட்ட போதுதான் அவன் கோபமுற்றான். அவனுடைய முதுகெலும்பிற்குள்ளாக ஒரு சில்லிட்ட உணர்ச்சி ஏற்பட்டது. தனது பைக்குள்ளாகக் கையைத் திணித்தான்.

''எனக்குப் பக்கத்திலே வராதே!'' என்று அவன் லெப்டினெண்டை எச்சரித்தான். அவனுடைய கண்கள் வேதனையினால் வீங்கிப் போயிருந்தன.

''ஏன் கூடாது?'' என்று கேட்ட லெப்டினெண்ட் மேலும் ஓர் எட்டு எடுத்து வைத்தான். தனது வார்த்தைகளை லெப்டினெண்ட் திரும்பவும் நீட்டி முழக்கி உச்சரிப்பதை யாக்கவ் விரும்பவேயில்லை. இப்போதோ அது அவனை வெறி கொள்ளச் செய்தது. பையிலிருந்து கையை வெளியே இழுக்க முயன்றபடி அவன் கத்தினான்:

''உன்னைக் கொன்றுவிடுவேன்!''

லெப்டினெண்ட் மாவ்ரின் அவனது மணிக்கட்டைப் பற்றி

வலியேற்படுமாறு அழுத்தினான். கைத்துப்பாக்கி யாக்கவின் பைக்குள்ளாகவே மந்தமாக வெடித்தது. பிறகு, கையை முழங்கையினின்றும் பெரும்பாலும் ஒடித்தெறிவது போல அவனது கை பையினின்றும் வெளியேறியது. அவனது உணர்ச்சியற்றுப் போன விரல்களினின்றும் லெப்டினெண்ட் கைத்துப்பாக்கியை எடுத்து அதை ஒரு நாற்காலி மீது வீசியபடி கூறினான்:

''அது வேலை செய்யவில்லை!''

''யாஷா, யாஷா!'' என்று பலீனா உரக்கக் கிசுகிசுத்துக் கொண்டிருந்தாள். ''இப்பலீத் செர்கேயெவிச்! பெரிய மனிதர்களே! உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? எதற்காகச் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறீர்கள்? என்னைக் கேவலப்படுத்தவா! எதற்காக?''

''இரு, இரு,'' என்று லெப்டினெண்ட் இடிமுழக்கம் போலக் கூறினான். யாக்கவின் தாடியைப் பற்றி, அதைக் கீழ் நோக்கிச் சுண்டி இழுத்தான், யாக்கவைத் தனக்குத் தலை வணங்கச் செய்வது போல செய்தான், ''அட, என்னிடம் மன்னிப்புக் கேள், முட்டாள்!'' என்றான்.

ஒவ்வொரு வார்த்தைக்கும் யாக்கவின் தாடியை அவன் கீழ் நோக்கிச் சுண்டி இழுத்தான். பின்னர் யாக்கவின் மோவாயில் லேசாகக் குத்தி, அவனை நிமிர்ந்து நிற்கும்படி செய்தான்.

''ஐயோ, வெட்கக் கேடு! ஓ, ஓ!'' என்று லெப்டினெண்டின் முழங்கையைப் பற்றியபடி பலீனா கிசுகிசுத்தாள்.

யாக்கவின் வலது கை உணர்ச்சியற்றபடி தொங்கியது, ஆனால், தனது பற்களை நெறித்தபடி, தனது இடது கையால் லெப்டினெண்டை அப்பால் தள்ளிவிட முயன்றான். கேட்காதபடி முணுமுணுத்தான், அவமானத்தால் ஏற்பட்ட கண்ணீர் அவனது கன்னங்களின் வழியாக வழிந்து ஓடியது.

''என்னைத் தொடாதே!'' என்று லெப்டினெண்ட் உரக்கக் கூச்சலிட்டு, கைத்துப்பாக்கி கிடந்த நாற்காலியின் மீது யாக்கவைத் தள்ளி விட்டான். தன் கண்ணீரை மறைப்பதற்காகக் கைகளுக்குள்ளாக முகத்தைப் புதைத்தபடி யாக்கவ் அசைவற்று அமர்ந்தான், பெரும்பாலும் மயக்கமுற்றுப் போனான். இரைந்து கொண்டிருந்த தனது காதுகளின் வழியாக, லெப்டினெண்டை நோக்கி பலீனா கூச்சலிடுவதைக் கேட்டான்:

''ஓ, கடவுளே, என்ன கேவலம்! நீங்களெல்லாம் மனிதர் கள் தானா! எத்தனை அவமானம்! எதற்காக?''

''நாசமாய் போடி, நல்ல பெண்ணே!'' என்று இரைந் தான் லெப்டினெண்ட். ''இதோ அந்த இன்பத்திற்காக உனக்கு ஒரு ரூபிள். இது போதும்! எனக்குப் புகழ்ச்சியே பிடிக்காது, ஆனால் நீயும் வெறுமனே சாதாரணமான...''

பின்னர் லெப்டினெண்ட் அறையை விரைந்து கடந்து மறைந்து போனான், கதவைத் தடாலென்று சாத்திச் சென் றான், பலீனாவே நடுக்குற்று கிரீச்சிட்டாள், தொங்கிக் கொண்டிருந்த விளக்குக் கூட லேசாக ஆடியது. யாக்கவ் எழுந்து நின்றான். அவனது கால்கள் மரம்போல உணர்ச்சி யற்றுப் போய் விட்டன, குளிர்க் காய்ச்சல் வந்தது போல அவனது உடம்பு முழுக்க நடுங்கியது. அறையின் நடுவில் விளக்கிற்குக் கீழே பலீனா நின்றாள், காற்றுக்காக அவளது வாய் திறந்திருந்தது, அவளது கண்களோ அவள் பற்றியிருந்த கேவலமான நாணயத்தை வெறித்துப் பார்த்த படி இருந்தன.

''கேவலச் சிறுக்கி!'' என்றான் யாக்கவ். ''எதற்காக இப்படிச் செய்தாய்? நீ என்னிடம் எப்போதும் சொன் னாய்... நான் உன்னைக் கொன்றிருக்க வேண்டும்...''

அவனை அவள் ஏறிட்டுப் பார்த்தாள், தரையின் மீது பணத்தை வீசியெறிந்தாள், கரகரத்த குரலில் வியப்பு மேலிடக் கூறினாள்:

''எப்படிப்பட்ட அயோக்கியன்...''

நாற்காலியில் சாய்ந்து இரு கைகளாலும் தலையைப் பற்றிக் கொண்டாள். தனது முட்டியை மடித்து அவள் தோள் மீது குத்தியவாறு கத்தினான் யாக்கவ்:

''எழுந்திரு! துப்பாக்கியை எடுத்துக் கொள்கிறேன்...''

அவள் அசையவில்லை, அதே வியப்புக் குரலில் அவள் கேட்டாள்:

''ஆக என்னை நீ காதலிக்கிறாய்?''

''உன்னை நான் வெறுக்கிறேன்!''

''அது பொய்! இப்போது கூட என்னை நீ காதலிக் கிறாய்!''

அவளை அவன் தள்ளி விடுவதற்கு முன்பாக திடீரென்று குதித்து எழுந்து அவனது கழுத்தைச் சுற்றி தனது கை களைப் போட்டவாறு, வெறித்தனமான முத்தங்களால் அவனது உதடுகளைப் பொசுக்கினாள், அவள் விட்ட வெப்ப

மான மூச்சு அவனது கண்ணிலும் வாயிலும் உறைத்தது, அழுத்தந்திருத்தமாக கிசுகிசுத்தாள்:

''அது பொய். நீ என்னைக் காதலிக்கிறாய், நீ காதலிக்கிறாய். நானும் உன்னை! ஆ, எனது மென்மையான சிறிய காரச்சுவையே...''

அவனை மிகவும் செல்லமாக இந்தப் பெயரால் தான் அழைத்தாள், பெரிதும் உணர்ச்சி வயப்பட்டுப் போன கணங்களில் இப்படி மொழிவாள்; இது நிரந்தரமாக யாக்கவுக்குப் போதையூட்டியது, வெறித்தனமான காதலைத் தோற்றுவிக்கும். இப்போதும் கூட, அதே போன்ற விளைவை ஏற்படுத்தியது. அவளைத் தன்னோடு இறுகச் சேர்த்துக் கட்டிக் கொண்டான், கசக்கினான், பிறாண்டினான், முத்தமழை பொழிந்தபடி, இடையிடையே மூச்சுவிட முடியாமல் முணுமுணுத்தான்:

''வேசியே. விலைமகளே. உனக்குத் தெரியுமே...'' ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அவன் ஒரு சிறிய சோஃபாவில் உட்கார்ந்திருக்க, அவனது காலின் மீது அவள் கிடந்தாள்; இருத்தி ஆட்டிக் கொண்டிருப்பதைக் கண்டு, வியப்போடு சிந்தித்தான்:

''எவ்வளவு சீக்கிரமாக எல்லாம் போய் விட்டது!..''

அவன் மீது களைப்பாகச் சாய்ந்தபடி அவள் கூறினாள்:

''உன் மீது எனக்குக் கோபம், உன்னைக் கைவிட்டு விடலாம் என்று கூட நினைத்தேன். எல்லா நேரமும் குடும்பத்தோடும், இறுதிச் சடங்கிலுமாக மூழ்கியிருந்தாய், நான் தனிமையில் இருந்தேன். நீ எந்தளவுக்கு என்னை உண்மையாகக் காதலிக்கிறாய் என்பது எனக்குத் தெரியவில்லை. இப்போது முன்னைக் காட்டிலும் அதிகமாக என்னைக் காதலிக்கிறாய், ஏனெனில் நீ பொறாமையாக இருக்கிறாய், அதனால் தான். இந்தப் பொறாமையாக இருக்கும் போது...''

''இங்கிருந்து நாம் எங்காவது போய்விட முடிந்தால்,'' என்று யாக்கவ் சோர்வோடு கூறினான்.

''ஆமாம். பாரிசுக்கு. என்னால் பிரெஞ்சு பேச முடியும்.''

அவர்கள் விளக்கை ஏற்றி வைத்திருக்கவில்லை, அறை இருட்டாகவும் புழுக்கமாகவும் இருந்தது. வெளியே தெருவில், நடு இரவைக் கடந்து விட்ட போதிலும் கூட, ரிசர்வ் படையினரின் குரல்கள் கேட்டன, பெண்களின் குரல்களும் கேட்டன.

''இப்போது நாம் வெளிநாட்டிற்குச் செல்ல முடியாது. அங்கே போர் நடந்து கொண்டிருக்கிறது,'' என்று நினைவு படுத்தினான். ''போர்—அவர்கள் எல்லாரையும் சனியன் கொண்டு போக...''

அவளோ திரும்பவும் தனது சிந்தனைத் தொடரை எட்டிப் பிடித்தாள்:

''பொறாமை இல்லாமல் காதல் என்பது இல்லை, ஒரு வேளை நாய்கள் அப்படிக் காதலிக்கலாம். எல்லா சோகக் கதைகளையும், நாடகங்களையும் பார்—எல்லாமே பொறாமையால் ஏற்பட்டது தான்...''

யாக்கவ் ஒரு குலுங்கு குலுங்கிக் கொண்டு, லேசாகச் சிரித்தான்:

''குண்டு வெடித்த முறை அதிர்ஷ்ட வசமாகிப் போனது. அது என் காலிலே பாய்ந்திருக்கக் கூடும், ஆனால்—பார்: என் காற்சட்டையில் ஒரு துளை மட்டுந்தான்.''

பலீனா அந்தத் துளைக்குள்ளாகத் தனது விரலைத் திணித்தாள். திடீரென்று, இலேசாகத் தேம்பியவாறு, உள்ளடக்கிய குரலில் எரிச்சலோடு பேசினாள்:

''ஆ, நீ அவனை சுடாமல் போனது எவ்வளவு கேவலமானது! சரியான அவனுடைய இந்தியா ரப்பர் தொந்தி மீது!''

''அமைதியாக இரு!'' என்று கூறிய யாக்கவ், அவளை பலமாக உலுக்கினான்; ஆனால் அவளோ பற்களை நெறித்துக் கொண்டு கிசுகிசுத்தாள்:

''பன்றி! என்னை எவ்வளவு கேவலப்படுத்தி விட்டான்! நீங்கள் எல்லாம் எப்படி... ஒரு பெண்ணைப் புரிந்து கொள்ள முடியவில்லை!''

வீங்கிப்போன உதடுகளை விரித்து, இறுகிப் போயிருக்கும் தனது நரிப் பற்களைக் காட்டி, மேலும் கூறினாள்:

''ஒரு பெண் உனக்கு நம்பிக்கை துரோகம் செய்தால், அது அவள் உன்னைக் காதலிக்கவில்லை என்பது பொருளாகாது!''

''சும்மா இரு, நான் சொல்கிறேன்!'' வேதனையால் அவள் கத்துகின்ற அளவுக்கு அவளை இறுக அணைத்தவாறு யாக்கவ் இரைந்தான்.

''ஆகா, என்னை நீ காதலிக்கிறாய் என்பதை இப்போது என்னால் உணர முடிகிறது! யாஷா, எனது காரச்சுவையே...''

அவளிடமிருந்து அவன் புறப்பட்ட போது காலை விடிந்து விட்டது; ஆபத்தான போட்டியில் விலைமதிக்க இயலா பரிசினை சற்று முன்னர் வென்ற ஒரு மனிதனுடைய உணர்வுடன் அவன் தெருவில் மெதுவாக நடந்து போய்க் கொண்டிருந்தான். புறப்படுவதற்குச் சற்று முன்னர் தான், அவன் உள்ளத்திலே நிறைந்து நின்ற பெரு மகிழ்ச்சியானது புதிய ஊக்கத்தைப் பெற்றது. புறப்படத் தயாராகி விட்ட போது, எங்கோ ஓரிடத்தில் பலீனா மறைத்து வைத்திருந்த அவனுடைய கைத் துப்பாக்கியை அவளிடம் கேட்டான்; அவனிடம் அவள் தர மறுத்த போது, தெருவில் அது இல் லாமல் தான் நடந்து போகப் பயப்படுவதாகவும், நாஸ் கோவுடன் நடந்த மோதலையும் அவளிடம் விவரிக்க வேண் டிய கட்டாயத்திற்கு ஆட்பட்டான். பலீனாவின் அச்ச உணர்வு மிகவும் மன நிறைவு தருவதாக இருந்தது; அவள் தன்னை உண்மையாகவே அன்போடு காதலிக்கிறாள் என் பதை அது அவனுக்கு உறுதிப்படுத்தியது. அவள் தனது கைகளை அசைத்தபடி 'ஓ', 'ஆ' என்று பல முறை சொல்லி, கண்டித்துச் சத்தம் போட்டாள்:

''இதை ஏன் நீ என்னிடம் முன்னரே கூறவில்லை?''

பிறகு, அவற்றைத் தன் மனத்துக்குள்ளாகவே ஆர்வத் தோடு நினைத்துப் பார்த்துச் சொன்னாள்:

''உண்மைதான், அது மட்டுமீறிய விருவிருப்புடையதா கத்தான் இருக்கிறது. ஓர் உண்மையான துப்பறியும் ஆசாமி! நீ ஷெர்லாக் ஹோம்ஸை எடுத்துக் கொண்டால்—எப்போ தாவது அதை நீ படித்திருக்கிறாயா? இங்குதான் துப்பறி பவர்கள் கூட அயோக்கியர்களாக இருக்கிறார்கள் என்று நான் நினைக்கிறேன்.''

''உண்மையில் அவர்கள் அப்படித்தான்,'' என்று யாக் கவ் ஒப்புக் கொண்டான்.

கைத்துப்பாக்கியைத் திருப்பித் தருகையில், அது எந் தளவுக்கு நன்றாக வேலை செய்கிறது என்பதைச் சோதிக்க அவள் விரும்பினாள், புகைப் போக்கிக் குழாயின் உச்சியில் சுடுமாறு யாக்கவை அவள் வற்புறுத்தினாள். இதைச் செய் வதற்கு, அவன் தரையின் மீது படுக்க வேண்டியதாயிற்று. அவனுக்குப் பக்கத்திலே அவளும் படுத்தாள். விசையை அவன் அழுத்தினான், திறவையான அடுப்பிலிருந்து சாம்பல் மேகங்கள் கீழே அவர்கள் மீது கொட்டியது. பயத்தினால்

அலறியபடி, பலீனா அப்பால் விலகிக் கொண்டாள். திடீ ரென்று, சுட்டிக்காட்டி மெதுவாகப் பேசினாள்:

''பார்!''

வர்ணம் பூசப்பட்ட பலகையில் ஒரு குறுகிய துவாரம் இருந்தது, அதன் வழியாகப் பக்கவாட்டில் பார்க்க முடிந் தது.

''அந்த துவாரத்தின் வழியாகத்தான் சாவு சென்றது என்பதைச் சற்று எண்ணிப் பார், ஐயோ!'' என்றாள் பலீனா, பெருமூச்சு விட்டாள், அப்போது வளைந்த புருவங் கள் இரண்டும் ஒரு சேரச் சுழித்தன.

ஒருபோதும் இத்தனை இனிமையானவளாகவும், இந் தளவுக்கு அவனுக்குச் சொந்தமானவளாகவும் அவள் இருக்கவில்லை. நாஸ்கோவைப் பற்றி அவளிடம் அவன் சொன்ன போது, அவளுடைய கண்கள் குழந்தைத்தனமான வியப்பில் உருண்டன. பையனுடையதைப் போன்ற அவ ளது சிறிய முகத்திலே கோபத்தின் அறிகுறி என்பதே காணப் படவில்லை.

''அவள் அதைக் குற்றமாகக் கருதவில்லை,'' என்று யாக்கவ் வியப்போடு நினைத்தான்; இந்தச் சிந்தனை மகிழ்ச் சியானதாக இருந்தது.

பிரிகையில், அவனது தாடியை அன்போடு தடவி விட்டுச் சொன்னாள்:

''ஓ, யாஷா, யாஷா! அது அப்படித்தானா! ஆபத்தான வனா? ஓ, கடவுளே!... ஆனால் அந்தப் பன்றி!''

தனது இரு கைகளையும் ஒரு சேர நெறித்தவாறு, குறைபட்டுக் கூறினாள்:

''கடவுளே! எத்தனை பன்றிகள்!''

ஆனால் திடீரென்று, யாக்கவினுடைய கையைப் பற்றி, சிந்தனையோடு முகஞ் சுழித்தவாறு, தணிந்த குரலில் பேசி னாள்:

''பொறு! நான் யோசித்துப் பார்க்கிறேன்! இந்த நகரத் தில் ஒரு பெண் இருக்கிறாள்... ஆமாம், உண்மைதான்!''

முறுவலித்தபடி, யாக்கவுக்கு மேலாக சிலுவைக் குறி யிட்டு விட்டு, அவனை வழியனுப்பி வைத்தாள்.

''போய் வா, எனது காரச்சுவையே!''

காலை நேரமானது குளுமையாகவும், பனியாகவும் இருந்தது. பழத் தோட்டத்தில் தென்றல் காற்று வீசியது, பசுமை நிற வானத்திலே ஆப்பிள் மணம் கமழ்ந்தது.

''உண்மைதான், கெட்ட புத்தியால் தான் சுற்றி விளையாடத் தொடங்கியிருக்கிறாள், அப்பா இறந்ததும், அவளை நான் திருமணம் செய்து கொள்ள வேண்டும்,'' என்று பெருந்தன்மையோடு சிந்தித்தான்; ஆறுதல் தருவோன் ஸெரஃபீமின் கேலிப் பேச்சு ஒன்று மனத்தில் பட்டது:

''எந்தப் பெண்ணும் நீரில் மூழ்கிக் கொண்டிருக்கும் மனிதனைப் போன்றவள்—துரும்பைக் கூட அவள் பிடிப்பாள். ஆகவே, இந்தக் கணத்தில் அவளைப் பற்றுவதற்குத் தவறி விடாதே!''

அந்த லெப்டினெண்ட் பற்றிய சிந்தனையோ கவலை தருவதாக இருந்தது. அந்த லெப்டினெண்ட் துரும்பு அல்ல. அவன் கோபமடைந்தான், பெரும்பாலும் மகிழ்ச்சியின்மையை ஏற்படுத்தக் கூடும். எனினும், அவனைப் போருக்காக அநேகமாக வெளியே அனுப்பப்படக் கூடும். நாஸ்கோவினுடைய நினைவு கூட வழக்கத்தை விட குறைவான சஞ்சலத்தையே யாக்கவுக்கு ஏற்படுத்தியது. இம்மாதிரி போய்க் கொண்டிருந்த நேரத்தில் தான் மிகவும் அடிக்கடி அவனை வழி மறித்திருக்கிறான், ஆகவே சந்தேகத்தோடு சுற்றிலும் பார்த்தபடி, துப்பாக்கி இருந்த பைக்குள்ளாகக் கையை விட்டு, சிறு அரவத்தையும் கூர்ந்து கேட்டான்.

ஆனால் ஒன்று அல்லது இரண்டு வாரங்களுக்குப் பிறகு வேட்டைக்காரனைப் பற்றிய யாக்கவினுடைய பழைய அச்சமானது, புகை போல அவனைச் சுற்றி வளைக்கத் தொடங்கியது. ஒரு ஞாயிற்றுக் கிழமை யன்று தான் வாங்கியிருந்த மரங்களைப் பார்ப்பதற்காக யாக்கவ் காட்டிற்குச் சென்ற போது, நாஸ்கோவ் ஒரு புதரின் மறைவிலிருந்து புதரை ஒதுக்கித் தள்ளிக் கொண்டு வருவதையும், அவனது முதுகிலே ஒரு பெரிய சாக்குப் பையும், இடைவாரில் எண்ணிக்கையற்ற வேட்டைக் கண்ணிகள் தொங்கிக் கொண்டிருப்பதையும் யாக்கவ் கண்டான்.

''உங்களைச் சந்திப்பது அதிர்ஷ்டந்தான்,'' யாக்கவை நோக்கி வந்த அவன், தனது தொப்பியைக் கழற்றியபடி கூறினான். அதை அவன் போர்வீரன் பாணியில் அணிவதை யாக்கவ் கவனித்திருந்திருக்கிறான்—வலது கண் பக்கத்திலே சரிந்து இருக்கும்; பக்கவாட்டில் பிடித்து எடுக்காது, உச்சியைப் பிடித்து இழுத்தான்.

அவனுடைய விநோதமான வாழ்த்துக்கு யாக்கவ் எந்த பதிலும் அளிக்கவில்லை, அதில் ஏதோ ஆபத்தின் அடையா

ளம் இருப்பது போல அவனுக்குக் காணப்பட்டது. பற்களை இறுகக் கடித்துக் கொண்டும், பையிலுள்ள கைத் துப்பாக்கியைப் பற்றியவாறும் பொறுத்திருந்தான். நாஸ்கோவும் அமைதியாக இருந்தான், யாக்கவின் பார்வையைத் தவிர்த்தவாறு, தனது தொப்பியின் விளிம்பை சரி செய்து கொண்டிருந்தான். ஒரு நிமிடம் சென்றது.

''சரி?'' என்றான் யாக்கவ்; நாஸ்கோவ் தனது நாய்க் கண்களை உயர்த்தியவாறு மிகவும் தெளிவாக, குத்திட்டு நிற்கும் தனது மயிரைத் தடவிக் கொடுத்தவாறு, பேசினான்:

''உங்களுடைய அன்புக் காதலி, பலீனா அந்திரேயெவ்னாவைத் தான் குறிப்பிடுகிறேன், பாதிரியார் ஸ்லாத்கொபேவ்த்ஸெவின் மகளுடன் நட்புப் பாராட்டி வருகிறாள். அதைக் கைவிட்டு விடும்படி கூறுங்கள்.''

''நான் ஏன் சொல்ல?''

''ஏனென்றால்...''

சற்று இடைவெளிக்குப் பிறகு, இதில் நகரத்திலிருந்து சர்ச் மணி ஒலித்ததைக் கேட்டு விட்டு, வேட்டைக்காரன் மேலும் தொடர்ந்தான்:

''அது என்னுடைய நேர்மையான புத்திமதி, ஏனென்றால் நீங்கள் நன்றாக இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். எனக்கு நீங்கள் காசு கொடுக்கலாம்...''

வானை நோக்கிப் பார்த்தபடி யோசித்து விட்டு, பேச்சை முடித்தான்:

''முப்பத்தைந்து ரூபிள்கள்...''

''இவனை சுட்டுத் தள்ளத்தான் வேண்டும், நாய்ப் பயல்!'' என்று நினைத்த யாக்கவ் அர்தமோனவ், பணத்தை எண்ணிக் கொடுத்தான்.

அந்த வேட்டைக்காரன் பணத்தைப் பெற்றுக் கொண்டு, தனது இடைவாரில் தொங்கும் கண்ணிகள் ஒலியெழுப்ப, தனது வளைந்த கால்களைச் சுழற்றி வீசியபடி புதரை நோக்கிச் சென்றான், அவனுடைய தொப்பி இன்னமும் கைகளிலேயே இருந்தது. அவன் போவதையே கவனித்துக் கொண்டிருந்த யாக்கவ், இந்த மனிதன் இன்னும் மகிழ்ச்சியற்றவனாகவும், முன்னைக் காட்டிலும் பொறுத்துக் கொள்ள முடியாதவனாகவும் ஆகிவிட்டதை உணர்ந்தான்.

''நாஸ்கோவ்!'' அமைதியாகக் கூப்பிட்டான்; வேட்டைக்காரன் நின்ற போது, குட்டைப் புதர்களில் பாதி

மறைந்தும் மறையாமலும் காணப்பட்டான். யாக்கவ் யோசனை சொன்னான்:

''இந்தத் தொழிலை நீ ஏன் விட்டுவிடக் கூடாது?''

''நான் ஏன் விடவேண்டும்?'' தன் முகத்தை முன்னுக்கு நீட்டியவாறே நாஸ்கோவ் கூறினான். வேட்டைக்காரனின் ஒளியற்ற கண்களில் அச்சத்தின் சாயல், அல்லது ஒருவேளை காழ்ப்பு தென்படுவதைத் தான் கண்டு பிடித்து விட்டதாக யாக்கவ் நினைத்தான்.

''அது ஆபத்தானது,'' அவன் விளக்கினான்.

''எப்படி என்பதைத் தெரிந்து கொண்டால் போதும்,'' என்றான் நாஸ்கோவ், அவன் கண்களில் காணப்பட்ட அந்த மினுக்கம் மறைந்து விட்டது. ''எப்படி என்பது உங்களுக்குத் தெரியவில்லை என்றால், எந்தத் தொழிலுமே ஆபத்தானதுதான்.''

''உன் விருப்பம்.''

''நீங்கள் உங்களுடைய சொந்த நலன்களுக்கே எதிராகப் பேசுகிறீர்கள்.''

''பகைமையில் என்ன நலன் இருக்க முடியும்?'' யாக்கவ் முணுமுணுத்தான், அந்த உளவாளியிடம் எதுவுமே சொல்லியிருக்கக் கூடாது என்பதற்காக வருந்தினான்.

''அவன் தன்னை யார் என்று நினைக்கிறான்? என்னோடு விவாதம் செய்கிறான், முட்டாள்!..'' என்று யாக்கவ் நினைத்தான்.

அறிவுரை சொல்வது போல நாஸ்கோவ் சொன்னான்:

''அது இல்லாமல் உங்களால் இருக்க முடியாது. ஒவ்வொருவரும் தனக்கென்று சொந்தப் பகைமையை வைத்திருக்கிறார்கள், சொந்த நலன்களும் தான். போய் வருகிறேன்!''

அவன் யாக்கவ் பக்கம் முதுகைத் திருப்பி, அடர்ந்த பச்சைப் புதருக்குள்ளாக மறைந்தான். முள் நிறைந்த புதர்ச் செடிகளை விலக்கிக் கொண்டு அவன் செல்கையில் ஏற்படும் சலசலப்பையும், காலடியில் மிதிபட்டு ஒடியும் காய்ந்த சுள்ளிகளின் சப்தத்தையும் யாக்கவ் சற்று நேரம் காது கொடுத்துக் கேட்டான். பிறகு விரைவாக அந்த இடத்தை விட்டு நீங்கி, சேணம் பூட்டப்பட்ட குதிரை காத்துக் கொண்டிருந்த இடத்திற்கு வந்து, நகரத்திற்கு பலீனாவின் வீட்டிற்கு விரைந்து ஓட்டிச் சென்றான்.

''பன்றி!'' பெரும்பாலும் மகிழ்ச்சி மிக்க வியப்பால்

பலீனா கத்தினாள். ''அவள் என்னைப் பார்க்க வருகிறாள் என்பதை எப்படி இவ்வளவு சீக்கிரமாகக் கண்டு பிடித்தான்? வியப்பாக இருக்கிறது!''

''அந்த மாதிரி ஆட்களிடம் எதற்காக நட்புக் கொள்கிறாய்?'' என்று யாக்கவ் உரத்துக் கேட்டான். அதற்கு அவள் தனது மஞ்சள் நிறக் கழுத்துப் பட்டையை திருகியவாறு, உரத்துப் பேசினாள்:

''முதலாவதாக, அது உன்னுடைய சொந்த நன்மைக்காகத்தான்! இரண்டாவதாக — நான் என்ன தான் செய்வது? பூனைகளை அல்லது நாய்களை வைத்துக் கொள்ளலாம்? அல்லது மாவ்ரினையா? சிறையில் இருப்பது போல நான் நாள் முழுக்கத் தனிமையில் இருக்கிறேன். நடந்து போய் விட்டு வரவும் யாரும் துணை வருவதில்லை. அவள் ஆர்வமூட்டுபவளாக இருக்கிறாள். படிப்பதற்குப் புத்தகங்களும், சஞ்சிகைகளும் தருகிறாள். அவளுக்கு அரசியல் ஆர்வமுண்டு. அது பற்றி எல்லாவற்றையும் கூறுகிறாள். பபோவாவின் பள்ளிக்கு நாங்கள் ஒன்றாகச் சென்றோம், அதன் பிறகு நாங்கள் சண்டையிட்டுக் கொண்டோம்...''

அவனது தோள் மீது தனது விரலை வைத்தவாறு கோபமாக மேன்மேலும் பேசிக்கொண்டே போனாள்:

''இந்த மாதிரி வாழ்க்கை வாழ்வது, ஒரு ரகசிய ஆசை நாயகியாக இருப்பது, சுலபமானதென்று நீ நினைக்கிறாயா? ஸ்லாத்கொபேவ்த்ஸெவா, ஆசைநாயகி என்பவள் ஒரு ஜோடி ரப்பர் மிதியன்களைப் போன்றவளாம், சேறு இருக்கும் போது மட்டுமே தேவைப்படுவாள் என்று கூறுகிறாள். அதோ! உங்களுடைய டாக்டரோடு அவள் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறாள். அதை அவர்கள் ரகசியமாக வைத்துக் கொள்ளவில்லை. நீயோ ஒரு குடற் புண்ணைப் போல என்னை மறைத்தே வைக்கிறாய். நான் ஏதோ கூன் அல்லது ஒற்றைக் கண் குருடி அல்லது வேறு ஏதோ ஒன்று போலக் கருதி வெட்கப்படுகிறாய். நான் ராட்சஷி அல்ல...''

''நிறுத்து!'' என்றான் யாக்கவ். ''நான் உன்னை மணந்து கொள்ளப் போகிறேன், உனக்கு நான் வினயமாகவே கூறுகிறேன், எல்லாவற்றிற்கும் நீ ஒரு பன்றி தான், மேலும்...''

''நம்மில் யார் பன்றி என்பதை இனிமேல் தான் தீர்மானிக்க வேண்டும்!'' என்று கத்தினாள், பின்னர் பயங்கரமாகச் சிரித்தாள், திரும்பவும் கூறினாள்: ''பன்றியாவது ஒன்றாவது—ஹூம், எனக்கு எல்லாமே குழம்பிப் போய்

விட்டது! என் காரச்சுவையே!.. தன்னலமற்ற எனது இனிய வரே! மற்றொரு ஆள் வாயே] திறந்திருக்க மாட்டார். மொத்தத்தில், உளவு என்பது உனக்குப் பயனுள்ளது...''

எப்போதும் போல, அவள் மனத்தை அமைதிப் படுத்திய பிறகுதான் யாக்கவ் கிளம்பினான். சரியாக ஒரு வாரத்திற்குப் பின் அம்மைத் தழும்பு விழுந்த கோணல் மூக்குக் கொண்ட 'டைம்கீப்பர்' எலாகின், ஒரு நாள் காலையில் மோர்த்வீனவ் என்ற நெசவாளி மருத்துவமனையில் இருப்பதாக அறிவித்தான். ஒருநாள் காலை விடியலின் போது வலைகளோடு சில நெசவாளிகள் மீன் பிடிக்கச் சென்றனர், மூழ்குவதினின்றும் வேட்டைக்காரன் நாஸ்கோவைக் காப்பாற்றுகின்ற முயற்சியில் மோர்த்வீனவ் அவனே பெரும்பாலும் மூழ்கிப் போய் விட்டான். அவனது மூக்கொலி அடங்கிய போது, நடுங்குகின்ற தனது கைகளைத் தனது பைக்குள்ளாக நன்றாகத் திணித்துக் கொள்வதற்காக, யாக்கவ் சாய்வு மேசைக்கு அடியில் தனது கால்களை விறைக்க நீட்டினான்.

''அவர்கள் அவனை மூழ்கடித்திருக்கிறார்கள்,'' என்று நினைத்தான். ஆனால் மோர்த்வீனவினுடைய நல்லியல்பையும், மென்மையான, பெண்மைக்குரிய முகத்தையும் நினைத்துப் பார்க்க, இந்த மனிதன் கொலை செய்யக் கூடியவன் என்பதை அவனால் நம்ப முடியவில்லை.

''அதிர்ஷ்டமான விபத்து,'' நிம்மதிப் பெருமூச்சு விட்டபடி, அவன் முடிவு செய்தான். இது அதிர்ஷ்டமானது என்பதைப் பலீனா கூட ஒப்புக் கொண்டாள்.

''நிச்சயமாய்,'' என்றாள் முனைப்போடு, ''அது நல்லதும் கூட. ஏனெனில் அவன் வேறு விதமாகக் கொல்லப் பட்டிருந்தால் ஒரு பெரிய கலவரமே ஏற்பட்டிருக்கும்.''

இருந்தும், அவள் பரிதாபப்பட்டாள்:

''அவனைப் பிடித்து, உண்மை சொல்ல வைத்து—பின்னர், நல்லது, அவனைத் தூக்கிலிட்டோ, சுட்டோ கொன்றிருந்தால் மிகவும் விருவிருப்பாக இருந்திருக்கும். நீ படித்து...''

''அபத்தமாகப் பேசுகிறாய், பலீனா,'' அவளது பேச்சில் குறுக்கிட்டபடி யாக்கவ் கூறினான்.

ஓரிரு நாட்கள் அமைதியாகக் கழிந்தன. யாக்கவ் வோர்கோரதிற்கு ஒரு பயணம் சென்றான். அவன் திரும்பி வந்ததும், கவலையால் முகஞ்சுழித்தபடி மிரோன் கூறினான்:

''ஆலையில் திரும்பவும் ஓர் அருவருப்பானது நடக்க ஆரம்பித்து விட்டது. அந்த வேட்டைக்காரன் மூழ்கியதற்கான சூழ்நிலைகளைப் புலனாயும் படி நகரத்திலிருந்து எக்கே உத்தரவு கொண்டு வந்திருக்கிறான். மோர்த்வீனவ், கிர்யாகோவ் மற்றும் உலையூட்டி குரோதவ் ஆகியோரைக் கைது செய்திருக்கிறார்கள்—அவனோடு அன்றைய தினம் மீன் பிடிக்கச் சென்ற அனைவரையும். மோர்த்வீனவினுடைய முகத்தில் ஒரே சிராய்ப்புகள், அவனது காது கூடக் கிழிந்து போயிருக்கிறது. அதில் ஏதோ அரசியல் இருப்பதாக அவர்கள் கருதுகிறார்கள்... உண்மையில், காதைப் பற்றி எதுவுமில்லை...''

பியானோவுக்கு அருகே நின்று கொண்டிருந்த அவன், ஒற்றை விரலால் தனது மூக்குக் கண்ணாடியைச் சரி செய்து விட்டு, கண்ணை உருட்டி விழித்து அறையின் மூலையைப் பார்த்தான். சுவீடன் நாட்டு ஜாக்கெட்டையும், துருப் போன்ற பழுப்பு நிறத்தாலான காற்சட்டையும், குதி உயர்ந்த காலணிகளும் அணிந்து ஓர் என்ஜின் டிரைவர் போலவே காணப்பட்டான்; அதே வேளை அவனது எலும்புகள் புடைத்துக் காணப்பட்ட, நன்கு மழிக்கப்பட்ட கன்னங்களையும், நன்கு வெட்டிவிடப்பட்ட மீசையையும் பார்க்க ராணுவத்தான் போலக் காட்சியளித்தான். எந்த விஷயம் பற்றிப் பேசினாலும் அல்லது என்ன தொனியில் பேசினாலும் ஓரளவு விறைப்பான அவனுடைய தோற்றத்தில் எந்தப் பெரிய மாறுதலையும் செய்யவில்லை.

''முட்டாள்தனத்தின் காலம்!'' என்று சிந்தனை வயப்பட்டபடி கூறினான். ''இப்போது மற்றுமொரு போரில் நாமாக நுழைந்திருக்கிறோம். எப்போதும் போலவே நமது சொந்த முட்டாள்தனத்தைத் திசை திருப்புவதற்காக நாம் போருக்குச் செல்கிறோம்; முட்டாள்தனத்தை எதிர்த்துப் போரிடுவதற்கு நமக்கு அறிவோ சக்தியோ கிடையாது. எனினும் இதுவரை ஏற்பட்டுள்ள நமது பிரச்சினைகள் அனைத்தும் உள்நாடு சம்பந்தப்பட்டதே. ஒரு விவசாயிகள் நாட்டில், தொழிலாளர்களின் கட்சி ஆட்சியைக் கைப்பற்றுவது பற்றிக் கனவு கண்டு கொண்டிருக்கிறது. அந்தக் கட்சியிலே, இல்யா அர்தமோனவ், ஒரு வியாபாரியின் மகன்—எந்திரத் துறையிலும், தொழில் நுணுக்கத் துறையிலும் நாட்டை ஐரோப்பிய முறையில் மாற்றியமைக்கும் மகத்தான பணியைச் செய்யும் வர்க்கத்தைச் சேர்ந்தவனுடைய

மகன். அபத்தத்துக்கு மேல் அபத்தம்! வர்க்க நலன்களைக் காட்டிக் கொடுப்பதை ஒரு கிரிமினல் குற்றமாகக் கருதி கட்டாயம் தண்டிக்க வேண்டும். இதை நாம் ஆழ்ந்து கவனித்தால், அது தேசத் துரோகம் போலவும்... இத்தகைய விஷயங்கள் கொரித்ஸ்வேதவ் போன்ற அறிவுஜீவிகளிடத்திலே ஏற்பட்டால் என்னால் புரிந்து கொள்ள முடியும், ஏனெனில் அவனுக்கு எந்த விதமான உறவுகளும் கிடையாது, எந்த வசதியும் கிடையாது, எந்த மாதிரியான வேலை செய்வதற்கும் லாயக்கற்றவன், படிப்பது பேசுவதைத் தவிர்த்து. பொதுவாக, ருஷ்யாவில் புரட்சி நடவடிக்கைகள் எல்லாம் எந்த விதமான சொத்தோ திறமைகளோ இல்லாதவர்களுடைய தொழில் ஆகிவிட்டது என்பது எனது கருத்து...''

தனது பேச்சைக் கேட்க அறை முழுவதும் ஆட்கள் நிறைந்திருக்கிறார்கள் என்பது போல மிரோன் பேசினான் என்று யாக்கவ் நினைத்தான். கண்கள் கடைசியாக முற்றாக மூடிப் போகின்ற வரை அவற்றைச் சுழற்றித் திருகிக் கொண்டே இருந்தான். யாக்கவ் கேட்பதை நிறுத்திவிட்டு, தன்னுடைய சொந்த சிந்தனைகளிலேயே மூழ்கிப் போனான்: நாஸ்கோவ் சாவு பற்றிய விசாரணை எப்படி முடியும், அது தன்னை எங்ஙனம் பாதிக்கும்?

மிரோனின் மனைவி ஒரு பெரிய அலமாரியைப் போல தனது சூலுற்ற வயிறுடன் உள்ளே வந்தாள். தன் கணவனை ஏறிட்டுப் பார்த்து விட்டு, களைப்போடு கூறினாள்:

''போய் உன் உடைகளை மாற்று.''

மிரோன் தனது மூக்குக் கண்ணாடியைச் சரி செய்து கொண்டு பணிவோடு அறையை விட்டு நீங்கினான்.

சுமார் ஒரு மாத காலத்திற்குப் பிறகு, கைது செய்யப்பட்ட தொழிலாளர்கள் அனைவரும் விடுதலை செய்யப்பட்டார்கள். எந்த விதமான விவாதத்திற்கும் இடமளிக்காதபடி மிரோன் கண்டிப்போடு யாக்கவிடம் கூறினான்:

''அவர்கள் எல்லாரையும் நீக்கிவிடு.''

மிரோனுடைய கண்டிப்பான உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து போகும் பழக்கத்தை யாக்கவ் நீண்ட நாட்களுக்கு முன்பே சிறிது சிறிதாகக் கடைப் பிடித்து வரத் தொடங்கியிருந்தான். ஒரு வகையில் அது வசதியானதாக இருந்தது, ஏனெனில் ஆலையை நடத்துவது சம்பந்தமான பிரச்சினைகளின் பொறுப்பிலிருந்து அவன் தன்னை விடுவித்துக்

கொள்ள முடிந்தது. எனினும், இந்த முறை, அவன் குறிப் பிட்டான்:

''அந்த உலையூட்டியைத் தொடமலிருப்பது நல்லது.''

''ஏன்?''

''அவன் மிகவும் வேடிக்கைப் பேர்வழி. மேலும் அவன் பல்லாண்டு காலமாக நம்மிடையே வேலை செய்து கொண்டு வந்திருக்கிறான். ஆட்களை மகிழ்ச்சியாக வைத்துக் கொள் ளக் கூடியவன்.''

''அப்படியா? நல்லது, பிறகு அவனை நாம் வைத்துக் கொள்ளலாம்.''

தனது உதடுகளை நக்கிக் கொண்டு மிரோன் தொடர்ந் தான்:

''கோமாளிகள் பயன்படக் கூடியவர்கள். உண்மை தான்.''

சிறிது காலம் வரையில் மொத்தத்தில் எல்லாமே நல்ல முறையில் நடந்து வந்தன போல யாக்கவுக்குத் தோன்றி யது. போர் மக்களுக்கு ஒரு தடைக்கல்லாக இருந்தது, ஒவ் வொருவரையும் அதிகம் சிந்திப்பவர்களாகவும், அதிகம் பணிந்து போகிறவர்களாகவும் மாற்றி இருந்தது. ஆனால் யாக்கவோ மகிழ்ச்சியற்ற அநுபவங்களைப் பெறப் பழக்க மாகிருந்தான், தனது தொல்லைகள் இன்னமும் முடிந்து விடவில்லை என்றும், புதிய அடிகள் விழக்கூடும் என்ற வெறுமையான எதிர்பார்ப்பிலும் காத்துக் கொண்டிருந் தான். அதற்காக அவன் அதிகம் காத்திருக்க நேரிடவில்லை. வேரா பபோவாவை ஒத்திருந்த ஓர் உயரமான பெண் ணுடன் கைகோர்த்தபடி நெஸ்தெரேன்கொ திரும்பவும் நகரத்தில் தலைக் காட்டினான். தெருவிலே யாக்கவை சந்தித்த அவன், ஊடுருவிப் பார்க்கின்ற முறையில் அவனை வெறித்துப் பார்த்தான்; வாழ்த்துகள் கூறி முடிந்ததும், அவன் கேட்டான்:

''இப்போதிலிருந்து ஒரு மணி நேரத்தில் என்னைப் பார்க்க நீங்கள் வரமுடியுமா? என்னுடைய மாமனாருடைய வீட்டில் இருக்கிறேன். என் மனைவி செத்துக் கொண்டிருக் கிறாள், ஆகவே முன் கதவு மணியை அடிக்க வேண்டாம் என்று மட்டும் உங்களை நான் கேட்டுக் கொள்கிறேன்— மணி ஒலிப்பது அவளுக்குத் தொல்லை கொடுக்கும். ஆகவே பின்வாசல் வழியாக வாருங்கள். போய் வருகிறேன்!''

ஒரு மணி நேரம் நீண்டு கொண்டே சென்றது. அது

முடிந்த போது, புத்தகங்கள் நிறைந்த அந்த அறையில் யாக்கவ் சோர்வோடு உட்கார்ந்தான், ஏதோ வேறு ஓசையைக் கேட்டுக் கொண்டிருப்பது போல நெஸ்தெரேன்கொ அமைதியாகப் பேசினான்:

''நல்லது, நமது நண்பன் கொலை செய்யப்பட்டு விட்டான். நிரூபிக்கப்படவில்லை என்றாலும் இது உறுதி. ஒரு திறமையான வேலை, நான் கட்டாயம் ஏற்றுத்தான் தீர வேண்டும். இப்போது, விஷயம் இது தான்: உங்களுடைய காதலி பலீனா நஸாரொவா, ஸ்லாத்கொபேவ்த்செவா என்ற பெண்ணுடன் நட்பாக இருக்கிறாள், அவள் அன்று வோர் கோரதில் கைதுசெய்யப் பட்டிருக்கிறாள். உங்களுக்கு அவளைத் தெரியுமா?''

''எனக்குத் தெரியாது,'' என்றான் யாக்கவ்; அவனுடைய நெற்றியில் குளிர்ந்த வியர்வைத் துளிகள் முத்துகள் போல அரும்பின. தனது மூக்கு வரை கையை உயர்த்திய அந்த போலீஸ் அதிகாரி, தனது விரல் நகங்களைப் பார்த்துக் கொண்டிருந்தபடி, மிகவும் நிதானத்தோடு பேசினான்:

''உங்களுக்குத் தெரியும்.''

''சரி, அவளைச் சந்தித்தாள் என்பதை நான் நம்புகிறேன்.''

''அது தான் உண்மை.''

''அவனுக்கு என்ன வேண்டும்?'' என்று நினைத்தான் யாக்கவ், நெஸ்தெரேன்கொவினுடைய தட்டையான, செம்மை படர்ந்த முகத்தையும், அவனது அகன்ற மூக்கையும், சாராயத்தின் மணம் வீசிய கனமான கலங்கிய கண்களையும் சோர்வோடு பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்னுடைய அதிகார தோரணையில் நான் உங்களிடம் பேசிக் கொண்டிருக்கவில்லை, ஆனால் உங்களது நலனிலும், உங்களுடைய தொழில் மீது உள்ள இதயபூர்வமான அக்கறைகளின் காரணமாகவே சாதாரணமாகப் பேசுகிறேன்,'' அவனது கரகரத்த குரல் தொடர்ந்தது. ''விஷயம் எப்படி என்பதை நீங்களே பாருங்கள், எனதருமை... வேட்டை நிபுணரே!'' போலீஸ் அதிகாரி கொக்கரித்துச் சிரித்தான். சற்று இடைவெளிக்குப் பிறகு, அவன் விளக்கிச் சொன்னான்:

''வேட்டை நிபுணர் என்று நான் கூறியது ஏனென்றால் முன்னர் ஒரு முறை நீங்கள் அதிர்ஷ்டமில்லாதபடி சுட்டீர்கள். நல்லது, பாருங்கள், விஷயம் இது தான்: ஸ்லாத்

கொபேவ்த்செவா உங்களது காதலியாக உள்ள நஸாரொவாவுடன், தொடர்பு வைத்திருக்கிறாள். இப்போது, நீங்களாகவே இதைச் சிந்தித்துப் பாருங்கள்: நாஸ்கோவின் வேலையைப் பற்றி உங்களையும் என்னையும் தவிர வேறு யாருக்கும் தெரிந்திருக்க முடியாது. நான் சுட்டிக் காட்டவில்லை. நாஸ்கோவ் அசமந்தனான இருந்தாலும், அவன் முட்டாளாக இருக்கவில்லை. மேலும்...''

நெஸ்தெரேன்கொ பெருமூச்சு விட்டான், அவனது கண்கள் அவனிருந்த பெஞ்சுக்குக் கீழாகத் தரையைப் பார்த்தபடி இருந்தன:

''நாம் எல்லாருமே மாள்வுக்குரியவர்கள் தாம். ஆக, அதைச் சொன்னது நீங்கள் தான்...''

அந்தப் போலீஸ் அதிகாரியின் உதடுகள் வார்த்தைகளை வடிப்பதற்கு மாறாக கண்ணிகளை உருவாக்குவது போல யாக்கவுக்குத் தோன்றியது. கண்ணுக்குப் புலனாக அந்தச் சுருக்கு தன் கழுத்தைச் சுற்றிலும் விழுந்து, தன்னை இறுக்குவது போலவும், அதனால் தனது நெஞ்சு அப்படியே நின்று விட்டது போலவும் தோன்றியது, அதே வேளையில் தன்னைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றும் மாரிக் காலத்துக் காற்றைப் போல சுற்றிச் சுழற்றி அடிப்பது போல இருந்தது. ஆனால் நெஸ்தெரேன்கொ, மிகவும் தெளிவாக, நிதானமாகத் தனது பேச்சைத் தொடர்ந்தான்:

''நான் நினைப்பது, உண்மையில் பெரும்பாலும் நான் நிச்சயமாகக் கருதுவது, எந்தளவுக்கு கவனமாக நீங்கள் இருந்திருக்க வேண்டுமோ அந்தளவுக்கு இல்லை என்பதே. நீங்கள் ஏதேனும் சொல்லியிருக்கக் கூடும். ஹூம்? உங்களுக்கு நினைவிருக்கிறதா?''

''அப்படி ஒன்றுமில்லை,'' என்றான் யாக்கவ் கம்மிய குரலில், தனது குரல் தன்னைக் காட்டிக் கொடுத்துவிடக் கூடாது என்று நம்பினான்.

''நிச்சயமாகச் சொல்கிறீர்களா?'' தனது மீசையின் ஓரங்களை விரலால் தடவியவாறே அந்தப் போலீஸ் அதிகாரி கேட்டான்.

''அப்படி ஒன்றுமில்லை,'' தனது தலையை ஆட்டியபடி யாக்கவ் திரும்பவும் கூறினான்.

''விநோதமானது, மிகவும் விநோதமானது. எனினும், விஷயங்கள் சரிப்படுத்தக் கூடியவைதாம். பாருங்கள்: நாஸ்கோவினுடைய இடம் வேறு ஒருவரால் நிரப்பப்பட வேண்

டும், உங்களுக்கும் சமமான முறையில் பயன்படக்கூடியது யாராக இருக்க முடியும். உங்களைப் பார்ப்பதற்காக மினாயெவ் என்ற பெயருள்ள ஒருவன் வருவான், அவனை நீங்கள் அமர்த்திக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன், இல்லையா?''

''நல்லது,'' என்றான் யாக்கவ்.

''அவ்வளவுதான். விஷயம் முடிந்தது. எச்சரிக்கையோடு இருங்கள் என்று மட்டுமே உங்களிடம் நான் கூற விரும்புகிறேன்! எந்தப் பெண்ணிடமும் எந்த வார்த்தையும் வேண்டாம்! ஊமையாக இருங்கள்! தெளிவாகி விட்டதா?''

''நான் ஏதோ சிறுவன், முட்டாள் போல அவன் பேசுகிறான்,'' என்று யாக்கவ் சிந்தித்தான்.

பிறகு அந்தப் போலீஸ் அதிகாரி எதிர்வரும் இலையுதிர் காலத்தில் இடம் பெயர்ந்து திரியும் பறவைகளைப் பற்றி, போரைப் பற்றி, தன் மனைவியின் சுகவீனம் பற்றி, அவளை கவனித்துக் கொள்ளும் தன் சகோதரியைப் பற்றிப் பேசினான்.

''ஆனால் எந்த மோசமான நிலைமையையும் சமாளிக்க நாம் தயாராக இருந்தாக வேண்டும்,'' என்று கூறி முடித்தான், தனது மீசை முனைகளைக் கொழுத்த தனது காதுகளின் வரையிலும் இழுத்துவிட்டுக் கொண்டான். இதனால் அவனது மேலுதடு உயர்ந்து, அவனது மஞ்சள் நிறப் பற்களைக் காட்டியது.

''நான் இங்கிருந்து போயாக வேண்டும்,'' என்று யாக்கவ் சிந்தித்தான். ''ஏதோ ஒன்றுக்குள் அவன் என்னை இழுக்கப் பார்க்கிறான். இந்தப் பகுதியை விட்டே நான் போயாக வேண்டும்.''

ஒகா நதிக்கரை வழியாக அவன் வீடு திரும்பிக் கொண்டிருந்த போது, சிந்தித்துக் கொண்டு வந்தான்: ''உங்கள் எல்லாரையும் சாத்தான் கொண்டு போக. உங்களால் எனக்கென்ன பயன்? என்ன பயன்?''

இலையுதிர் காலத்தின் வரவை அறிவிக்கும், இலேசான மழை தரையின் மீதும், மஞ்சள் நிற நதியின் மீதும் அவசரமில்லாதபடி விழுந்தது; வெறுக்கத்தக்க வெப்பத்தோடு வீசிய காற்று யாக்கவின் சஞ்சலத்தைத் தீவிரப்படுத்தியது; பிறகு, இத்தகைய அர்த்தமற்ற, தேவையற்ற அச்சங்கள் இன்றி, எளிமையாகவும், அமைதியாகவும் வாழ்வது உண்மையாகவே சாத்தியமற்றது தானா?

ஆனால், பலமான புதிய எச்சரிக்கைகளை உள்ளடக்கிய பனிக்காலத்து காற்று மற்றும் பனியின் வழியாக இழுத்துக் கொண்டு செல்லும் ஒரு சரக்கு ரயில் போன்று, மாதங்கள் உருண்டோடின.

மரோஸவ்களில் ஒருவனான ஸஹார், தனது நெஞ்சில் புனித ஜார்ஜ் சிலுவையுடன் போரிலிருந்து திரும்பி வந்தான். அவனது தலைமுடி போய்விட்டிருந்தது, தீக்காயம் பட்ட தலை சிவப்பு நிறப் புண்களால் நிறைந்து இருந்தது; ஒரு காது கிழிந்து போய்விட்டது; வலது புருவம் இருந்த இடத்தில் செந்நிறமான வடு இருந்தது—அதற்குக் கீழே குருடாகிப் போன கண் இருந்தது. மற்றொரு கண் கூர்மையான கவனத்தோடு உலகத்தைப் பார்த்தது. ஸஹார், நொண்டி உலையூட்டியான குரோதவுடன் நட்பு ஏற்படுத்திக் கொண்டான், ஆறுதல் தருவோன் ஸெரஃபீமின் இந்த மாணவனும் விரைவிலேயே ஒரு புதிய பாடலைப் பாடினான்:

மழையும் காற்றும் மாறிமாறி அடித்தது,
காப்பகழிலே அடிமுட்டாளாய் படுத்திட்ட,
அடியேனும் ஐரோப்பாவில்
போர் மூள உதவினேன்.

யாக்கவ் மரோஸவிடம் கேட்டான்:

''என்ன, ஸஹார்? நாம் மோசமான சண்டை போடுகிறோமா?''

''முறையாகப் போரிட நம்மிடம் எதுவுமே இல்லை,'' என்று நெசவாளி பதிலளித்தான். அவனுடைய குரல் உரத்தும் முரட்டுத்தனமாகவும் இருந்தது, உலையூட்டியின் பாடல்களில் காணப்பட்ட அதே ஆணவம் அவனுடைய வார்த்தைகளிலும் காணப்பட்டது.

''எங்களுக்கு எசமானர் எவருமில்லை, யாக்கவ் பெத்ரோவிச்,'' என்று தன் எசமானனின் முகத்துக்கு நேராகக் கூறினான். ''ஒவ்வொரு இடத்திலும், ஏமாற்றுபவர்களும், அயோக்கியர்களுமே பொறுப்பில் இருந்தார்கள்.''

இலையுதிர் காலத்து இரவில் ஏற்றப்பட்ட லாந்தர் விளக்குகளைப் போல தொழிலாளர்களுக்கு மத்தியில் அவனும், உலையூட்டி வாஸ்காவும் நின்றார்கள். தத்யானாவின் மகிழ்ச்சியான கணவன், ஸஹாரின் ராணுவக் கோட்டைப் போன்ற மட்டமான நிறத்தில் பின்பக்கம் மிகவும் அகன்ற

கேலிக்குரிய காற்சட்டையை அணிந்து வந்ததும் அவனை மேலுங்கீழுமாகப் பார்த்துவிட்டு உலையூட்டி பாடினான்:

காட்டுப் புறத்தான் காற்சட்டை ஆகா!
தொட்டுப் பாரு தொளதொள!
சிலரோ தலை வளர நினைக்கிறார்
பலரோ தொந்தி வளரத் துடிக்கிறார்!

இந்தக் கேலியைக் கேட்டு மீத்யா சங்கடப்படாதது கண்டு யாக்கவுக்கு வியப்பாக இருந்தது, ஆனால் மனதாரச் சிரித்து அவனை மேலும் உற்சாகப் படுத்தினான். தொழிலாளர்களும் கூடச் சிரித்தார்கள். ஒரு நாள் தன்னுடைய வாலை முதுகுக்கு மேலாக எடுப்பாக நிமிர்த்தியபடி இருந்த ஒரு சடை நாயை ஸஹார் மரோஸவ் ஆலையின் முற்றத்திற்குள்ளாகக் கூட்டி வந்த போது ஆலை முழுக்க கர்ஜித்தது: வாலின் நுனியில் வெண்ணிறத்திறத்திலான ஒரு சிறிய புனித ஜார்ஜ் சிலுவை ஒரு நாரினால் கட்டப்பட்டிருந்தது. இது மிரோனுக்கு மிகவும் அதிகமாகத் தோன்றியது, ஸஹார் கைது செய்யப்பட்டான், நாய்க் குட்டியானது தீஹன் வியாலவிடமே தங்கி விட்டது.

ராணுவ கம்பளிக் கோட்டுகள் அணிந்த உடல் ஊனமுற்றவர்கள், கையில்லாமல், காலில்லாமல், கருகிப்போய், குருடானவர்கள் தெருக்களிலே காணப்பட்டார்கள்; நகரம் முழுவதிலும் அவர்களுடைய சீருடைகளே காணப்பட்டன. நகரத்துப் பெண்களால் ஊனமுற்றவர்கள் உலாவி வர அழைத்துச் செல்லப்பட்டார்கள். ஒரு விளக்குமாறு போல மாறியிருந்த வேரா பபோவா இந்த ஏற்பாட்டைச் செய்திருந்தாள். பலீனாவும் கூட இப்பணிக்குத் தெரிவு செய்யப்பட்டிருந்தாள்; ஆனால் யாக்கவிடம் எதிர்ப்புத் தெரிவிப்பது போல தனது தலையை ஆட்டியபடி அவள் கத்துவாள்:

''ஐயோ, என்னால் முடியாது, என்னால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியாது! அது அருவருப்பாக இருக்கிறது! அது பற்றி சற்று யோசித்துப் பாரு, யாஷா, அவர்கள் எல்லாருமே இளைஞர்கள், வலுவானவார்கள், ஆனால் எல்லாருமே ஊனமுற்றுப் போய் விட்டார்கள். அவர்கள் உடம்பின் நாற்றமோ! என்னால் அதைத் தாங்கிக் கொள்ள முடியாது! பாரு — நாம் இங்கிருந்து எங்காவது போய் விடலாம்!''

''எங்கே போவது?'' என்று யாக்கவ் சோர்வோடு கேட்பான். அவனுடைய இப்பெண் மேன்மேலும் எரிச்சல் தருபவளாக மாறிவருவதை அவன் கண்டான். அவள் அதிகமாகப் புகைத்தாள், அவளது மூச்சிலே புகையிலை நெடி மணத்தது. எல்லாப் பெண்களுமே, பொதுவாக—நகரத்தில், குறிப்பாக ஆலையில் உள்ளவர்கள், கொடுமையான குணங்களுக்கு ஆளாகி வந்தார்கள், மொறுமொறுப்பதும், கிண்டல் பேசுவதும், கூடிவரும் விலைவாசியைப் பற்றிப் புகார் செய்வதுமாக இருந்தார்கள். அவர்களுடைய கணவன்மார்களோ, கவலையின்றி சீட்டியடித்துக் கொண்டு, கூடுதல் கூலி கோரினார்கள், அதே நேரம் தங்களுடைய வேலையில் வரவரக் குறைவான சக்தியையே செலவிட்டார்கள். மாலை நேரத்தில், ஆலைக் குடியிருப்பில் ஏற்பட்ட இரைச்சலானது, முன்னைக் காட்டிலும் உரத்ததாகவும், கடுகடுப்பானதாகவும் இருந்தது.

தொழிலாளர் மத்தியிலே கம்பீரமாக உருவான ஃபிட்டர் மினாயெவ் என்பவனும் சுற்றிவந்தான். பெரிய மூக்குக் கொண்ட, கருப்பு நிறமான, யூதனைப் போலத் தோற்றமளித்த அவனுக்கு முப்பது வயது இருக்கலாம். அவன் கண்ணிற் படுவதை யாக்கவ் எச்சரிக்கையோடு தவிர்த்து வந்தான்; அந்த ஃபிட்டர் எதையோ மறந்து விட்டவனைப் போன்றும், அதை நினைத்துப் பார்க்கும் வீண் முயற்சியில் இருப்பது போன்றும் ஆட்களை உறுத்து நோக்கினான்.

அழுக்கடைந்த ஓர் இடிபாட்டின் துணுக்கைப் போல வலியெடுக்கின்ற தனது கால்களை இழுத்தவாறு பியோத்தர் முற்றத்திலே அலைந்து திரிந்தான். அவனுடைய அகன்ற தோள்களின் மீது நரித்தோல் வைத்துத் தைக்கப்பட்ட பழைய பயணக் கோட் ஒன்று தொங்கியது. தன்னைக் கடந்து செல்கின்ற மக்களை நிறுத்தி, அவர்களிடம் கண்டிப்பான முறையில் கேட்டான்:

''எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?''

அவர்கள் பதில் சொல்லி முடித்த பிறகு, தனது கையை அலைத்து முணுமுணுப்பான்:

''நல்லது, போடா. தெருப் பொறுக்கிகள். என் குருதியைக் குடிக்கும் மூட்டைப் பூச்சிகள்!''

பழுப்பு நிறமான வீங்கிப் போன அவனது முகம் வெறுப்போடு நடுநடுங்கும், அவனது கீழ் உதடு ஒட்டிக் கொள்ளாது நிற்கும். இம்மாதிரி நிலையில் தன் தந்தையை யாரேனும்

பார்த்தபோது யாக்கவ் வெட்கிப் போனான். தனது நாட்களை எல்லாம் பத்திரிகைகளைப் படிப்பதிலேயே தத்யானா செலவிட்டாள், ஏதோ ஒன்று அவளை அச்சுறுத்திக் கொண்டு வந்ததனால் அவளது காதுகள் எப்போதுமே சிவந்து போய் இருந்தன. இறக்கை கட்டிக் கொண்டது போல மிரோனோ மாவட்ட மையத்திற்கும், மாஸ்கோவுக்கும், பீட்டர்ஸ்பர்க்கிற்கும் அடிக்கடி போய் வந்து கொண்டிருந்தான். வீடு திரும்பிய அவன், அகன்ற குதிங் கால்களைக் கொண்ட அமெரிக்கக் காலணிகளை அணிந்தபடி அறையில் மேலுங் கீழுமாக நடப்பான், ஜாரிடம் அட்டை போல ஒட்டிக் கொண்ட குடிகாரனும், ஒழுக்கங் கெட்டுப் போன ஒரு விவசாயியும் குறித்து மகிழ்ச்சி பொங்கப் பேசுவான்.

''அது போன்ற ஒரு விவசாயி உண்மையில் இருப்பதாக நான் நம்பவில்லை!'' என்று தனக்கருகிலேயே விளையாடிக் கொண்டும், கத்திக் கொண்டும் இருந்த தனது இரண்டு வயதுப் பேரன் பிலத்தோனுடன், தன் மருமகள் அமர்ந்திருந்த சோஃபாவில் இருந்தபடியே, இப்போது அரைக் குருடாகிப் போன ஓல்கா கண்டிப்பாகக் கூறினாள். ''ஒரு பாடம் புகட்ட வேண்டும் என்ற நோக்கத்திற்காக இது எல்லாமே கட்டிவிடப்பட்டவை...''

''அருமை!'' என்று தத்யானாவின் கணவன் கத்தினான். ''அபாரம்! கிராமப் புறத்து மக்கள் பழிவாங்குகிறார்கள்! ஹாம்?''

செம்பட்டை மயிர் அதிகம் வளர்ந்திருந்த தனது கொழுத்த சின்னஞ்சிறு கைகள் இரண்டையும் ஒன்று சேர்த்து பெரு மகிழ்ச்சியோடு உரசிக் கொண்டான். அவர்கள் அனைவரிலும் அவன் மட்டுமே ஏதோ ஒரு பெரிய விழாவுக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

''கடவுளே!'' என்று விரக்தியோடு தத்யானா வியந்து கூறினாள். ''எதற்காக இத்தனை மகிழ்ச்சியோடு இருக்கிறாய் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை!''

வியப்புறும்படி தனது வாயைத் திறந்து மீத்யா கரைந்தான்:

''என்ன? உனக்குத் தெரியவில்லையா? ஏன், இத்தனை காலமும் பொறுத்துக் கொண்ட கிராமப்புறம் தானாகவே பழிவாங்கத் தொடங்கி விட்டதை உன்னால் புரிந்து கொள்ள

முடியவில்லையா! இந்த ஒரு விவசாயியினுடைய வடிவத்திலே அது அழிக்கின்ற நஞ்சாக வளர்ந்திருக்கிறது...''

''நிறுத்துங்கள்!'' என்று மிரோன் சொன்னான். ''அவ்வளவு நீண்ட காலத்திற்கு முன்பு அல்ல, நீங்கள் வித்தியாசமான ராகத்தைப் பாடினீர்கள்...''

ஆனால் மீத்யாவோ மூச்சு விடாதபடி உணர்ச்சி மேலீட்டால் தனது வார்த்தைகளைக் கொட்டிக் கொண்டிருந்தான்:

''ஓர் அடையாளம்—அது தான் அவன், வெறுமனே ஒரு விவசாயி அல்ல! மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் தான் அவர்கள் தங்களுடைய ஆட்சியின் மூன்றாவது நூற்றாண்டைக் கொண்டாடினார்கள், மேலும் இப்போதோ...''

''குப்பைக் கூளம்,'' என்று மிரோன் நயமற்றுக் கூறினான். டாக்டர் யாக்கவ்லெவ் வழக்கம் போல கொக்கரித்தான். இந்த மாதிரியான பேச்சுகள் அந்த அதிகாரி நெஸ்தெரேன்கொவுக்கு அறிவிக்கப்பட்டால் என்ன என்பது குறித்து யாக்கவ் அர்தமோனவ் சிந்தித்தான்.

''இதெல்லாம் எதற்காகச் சொல்கிறீர்கள்? அதனால் என்ன நன்மை இருக்கிறது?'' என்று அவன் கேட்டான்.

மேலும் அவர்களை வலியுறுத்திக் கேட்டான்:

''அதை விட்டு விடுங்கள்!''

மற்றதைக் காட்டிலும் இது மிரோனுக்கு மிகக் கவலையைத் தந்தது என்பதை உணர்ந்த யாக்கவ் அசாதாரணமான அளவுக்கு உணர்ச்சி வயப்பட்டுப் போனான். மொத்தத்தில் பார்க்கையில், யாக்கவ் அறிந்திருந்த எல்லாரிலும் மீத்யா மட்டுமே மாறாமல் எப்போதும் போலச் சுற்றிச் சுழன்று கொண்டும், கேலி பேசிக் கொண்டும், மாலை வேளைகளில் கித்தார் மீட்டிப் பாடிக்கொண்டும் அப்படியே இருந்தான்:

கல்லறை தனிலே தூங்குகிறாள் என் மனைவி...

ஆனால் இவனுடைய பாடல்கள் இப்போதெல்லாம் தத்யானாவுக்கு மகிழ்ச்சியூட்டவில்லை.

''ஹூம்! என்னை நீங்கள் நோயாளி ஆக்குகிறீர்கள்!'' என்று கூறுவாள், மாலை நேரத்தைத் தன் குழந்தைகளுடன் செலவிடுவதற்காக அறையை விட்டு வெளியேறிச் செல்வாள்.

தொழிலாளர்களை மன நிறைவோடு வைத்துக் கொள்வதில் மீத்யா மிகவும் புத்திசாலியாக இருந்தான். உணவுப்

பொருள் மலிவாகக் கிடைக்கக் கூடிய கிராமப் புற மாவட்டங்களில் மாவு, தானியங்கள், காய்ந்த பட்டாணிகள் மற்றும் உருளைக்கிழங்கு ஆகியவற்றை வாங்கி ஆலைத் தொழிலாளர்களுக்கு அதே விலைக்கு விற்கும்படி அவன் மிரோனுக்கு ஆலோசனை கூறினான். இது தொழிலாளர்களை மகிழ்வித்தது, மிரோனைக் காட்டிலும் அவனிடம் அவர்கள் அதிக நம்பிக்கை கொண்டிருந்ததை யாக்கவ் பார்த்தான். மேலும், மிகவும் அடிக்கடி மிரோன் மீத்யாவுடன் சண்டை போடத் தொடங்கி இருப்பதையும் யாக்கவ் பார்த்தான்.

''என்ன செய்ய முயற்சித்துக் கொண்டிருக்கிறீர்கள்—காற்றோடு போகவா?'' தனது வெறுப்பை மூடி மறைக்க முயலாதபடி மிரோன் கேட்பான்; ஆனால் மீத்யாவோ முறுவலிப்போடு கூறுவான்:

''மக்களின் விருப்பம்... மக்களின் உரிமைகள்...''

''நீங்கள் உண்மையில் யார்? நான் தெரிந்து கொள்ள விரும்புவது அது தான்,'' என்று மிரோன் சத்தம் போடுவான்.

''இந்த இரைச்சல் போதுமானது,'' என்று மூத்த அர்தமோனவ் முணுமுணுப்பான்; ஆனால் தன் தந்தையினுடைய ஒளி மங்கிய கண்களில் மகிழ்ச்சியின் மினுமினுப்புத் தெரிவதை யாக்கவ் கண்டு கொள்வான். தன் தம்பி மகனும் மருமகனும் சண்டையிட்டுக் கொள்வதைக் காண அந்தக் கிழவன் விரும்பினான். தத்யானாவினுடைய கீச்சுக் குரல் தன்னை நோக்கிப் பாயும் போது நதால்யா பயந்தபடி சொல்வதைக் கேட்டுக் கிளுகிளுத்தான்:

''தான்யா, எனக்கு இன்னொரு கோப்பை ஊற்று...''

ஒவ்வொரு புதிய வளர்ச்சியும், புது மாதிரியான எச்சரிக்கையைக் கொண்டு வந்தது. முன்னர் என்ன நடந்திருந்தது என்பதைப் பற்றிய எந்த விதமான தொடர்பும் இல்லாமல் ஒவ்வொரு நிகழ்ச்சியும் தானாகவே குதித்து வருவது போலக் காணப்பட்டது. முற்றிலும் கண் பார்வையற்றுப் போன ஒல்கா திடீரென்று தடுமன் பிடித்து, இரண்டு நாட்களுக்குப் பிறகு இறந்து போனாள். அவளுடைய மரணத்திற்கு ஓரிரு நாட்களுக்குப் பிறகு, ஜார் முடி துறந்தார் என்ற செய்தி இடி முழக்கம் போல நகரத்தையும், ஆலையையும் குலுக்கியது.

''இப்போது என்ன? ஒரு குடியரசா?'' மிகுந்த ஆர்வத்

தோடு பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்த தனது சகோதரனிடம் யாக்கவ் கேட்டான்.

''உண்மையில், குடியரசுதான்!'' என்று மிரோன் பதிலளித்தான். தனது மேசைக்கு மேலாக அவன் சாய்ந்து கொண்டிருந்தான், திறந்திருந்த பத்திரிகையின் மீது அவனது கைகள் அழுத்திக் கிடந்தன; திடீரென்று, அவனது எடையால் காகிதம் இரண்டு துண்டாகிப் போனது. இது ஒரு கெட்ட சகுனம் போல யாக்கவுக்குத் தெரிந்தது. ஆனால் மிரோன் நிமிர்ந்து நின்றான், அவனது முகத் தோற்றம் பொலிவு பெற்றிருந்தது, விநோதமாக மாறிவிட்டது போன்ற குரலில் ஆனால் சகித்துக்கொள்ளுமாறு பேசினான்:

''புதிய தொடக்கம், திரும்பப் பெறுதல்—இதுதான் ருஷ்யாவுக்காகத் தொடங்கி இருப்பது, சகோதரனே!''

யாக்கவைக் கட்டித் தழுவுவது போல தனது கைகளை விரித்தான், ஆனால் அவசரமாகத் தனது ஒரு கையைப் பக்கவாட்டில் தொங்கப் போட்டு விட்டு, மற்றொரு கையைத் தூக்கித் தனது மூக்குக் கண்ணாடியைச் சரி செய்தான். பிறகு, கைகாட்டி மரம் போலக் காணப்படுவதற்காகத் தனது கையைத் திரும்பவும் நீட்டியபடி, அடுத்த மாலையே தான் மாஸ்கோவுக்குப் போகப் போவதாக அறிவித்தான்.

மீத்யாவும் கூட, குளிரால் விறைத்துப்போன ஒரு வண்டியோட்டியைப் போல, உறுப்புக்களை அசைத்தபடி கத்தினான்:

''இப்போது எல்லாமே அருமையாக இருக்கும். கடைசியாக, இப்போதாவது, இத்தனை காலமாகத் தங்களது இதயங்களிலே தேக்கி வைத்துக் கொண்டிருந்த உணர்ச்சிகளை வெளியிடுவார்கள் மக்கள்!''

மிரோன் இதற்கு மேலும் மீத்யாவுடன் விவாதம் செய்யவில்லை, சிந்தனை வயப்பட்டபடி முறுவலிக்கவும், தனது மெல்லிய உதடுகளை நாக்கால் துழாவவும் மட்டுமே செய்தான். உண்மையில் ஒவ்வொன்றும் அருமையாக இருந்ததாகவும், ஒவ்வொருவரும் மகிழ்ச்சியடைந்ததையும் யாக்கவ் பார்த்தான். தொழிலாளர்கள் வெளி முற்றத்தில் கூடியிருந்த போது, முன்கூடத்தில் இருந்தபடி பீட்டர்ஸ்பர்க்கில் என்ன நடந்து கொண்டிருந்தது என்பதை மீத்யா அவர்களுக்குத் தெரிவித்தான், மகிழ்ச்சி ஆரவாரம் செய்த அவர்கள் அனைவருமே, முன்கூடத்திலிருந்து அவனை வெளியே

இருந்து உயரே வீசி ஏறியத் தொடங்கினார்கள். மீத்யா வும் சுருண்டு ஒரு பந்தைப் போல உயரப் போய் வந்தான்; அதே சமயம், மிரோனையும் கூட அவர்கள் அது போலவே தூக்கி வீசியபோது, தனது கை கால்களை அகலப் பரப்பிய படி துண்டு துணுக்கானது போல அவன் கீழே விழுந்தான். வயதான தொழிலாளர்கள் மீத்யாவைச் சுற்றிக் கூட்ட மாகக் கூடினார்கள், தடித்தும், திண்ணிய தோற்றமும் கொண்டிருந்த நெசவாளி கெராசிம் வொய்னோவ் உரக்கச் சொன்னான்:

''நீ ஒரு வசதியான ஆசாமி, மீத்ரி பாவ்லொவிச், வசதியான ஆள் பார்க்கிறாயா? நண்பர்களே, மீத்ரி பாவ் லொவிச்சுக்கு வாழ்த்தொலி எழுப்புங்கள்!''

அவர்கள் உரக்க வாழ்த்தொலி எழுப்பினார்கள், மேலும் உலைத் தொழிலாளியாகிய வாஸ்கா, தனது வழுக்கைத் தலை பளபளக்க, குடிவெறியில் இருந்தவனைப் போல எழுச்சியோடு நடனமாடிப் பாடத் தொடங்கினான்:

மக்களோ கீழே கிடக்க
ஜாரோ அரியாசனத்திலே
உயரயேறி ஆசனத்தைப் பார்க்க
அற்பப் பறவை அங்கிருந்தது!

''வாஸ்கா, இன்னும் பாடு!'' என்று தொழிலாளர்கள் கத்தினார்கள்.

யாக்கவையும் கூட அவர்கள் சுழற்றி மேலே வீச விரும்பி னார்கள், ஆனால் வீட்டில் ஒளிந்து கொள்வதற்காக அவன் ஓடிப் போய் விட்டான்; ஏனெனில் அவனை வீசி எறிந்ததும் கைகளை விட்டுவிட்டு தரையில் விழவைத்து விடுவார்கள் என்று நிச்சயமாக நம்பினான். மாலை வாக்கில், அலுவல கத்தில் உட்கார்ந்து இருந்த போது, சன்னலுக்கு வெளியே சற்று தள்ளி தீஹன் வியாலவ் பேசுவதை அவன் கேட்டான்:

''அந்த நாய்க் குட்டியை உன்னுடன் வைத்துக் கொள்ள வேண்டும் என்று ஏன் விரும்புகிறாய்? என்னிடம் அதை விற்று விடு. அதை ஒரு நல்ல நாயாக நான் ஆக்கி விடுகிறேன்.''

''நாய்களைப் பயிற்றுவிப்பதற்கு இதுதான் நேரமா, கிழவா?'' என்று ஸஹார் மரோஸவுடைய குரல் திரும்பக் கேட்டது.

''நல்லது, பிறகு, அதை வைத்துக் கொண்டு நீ என்ன செய்வாய்? இதோ—ஒரு ரூபிள், அதை விற்றுவிடு.''

''அதை விடு.''

சன்னலுக்கு வெளியே தனது தலையை நீட்டி யாக்கவ் சொன்னான்:

''என்ன செய்தி—ஹூம்? ஜார் பற்றி, தீஹன்?''

''ஊஹூம்,'' என்று கிழவன் பதிலளித்தான், வீட்டின் மூலையைச் சுற்றிப் பார்த்தபடி, மெதுவாகச் சீட்டியடித்தான்.

''ஜார்—ஆக அவனை அவர்கள் இறக்கிவிட்டார்கள்!''

தனது காலணியை நேராகக் கட்டிக் கொள்வதற்காக தீஹன் குனிந்தான். தரையை நோக்கி அவன் பேசினான்:

''மக்கள் கிளம்பிவிட்டார்கள். அந்தோனுஷ்கா சொல்வது போல வண்டி சக்கரம் ஒன்றை இழந்து விட்டது!''

நிமிர்ந்து நின்று, வீட்டின் மூலையை நோக்கி அமைதியாகக் கூப்பிட்டபடி நடக்கலானான்:

''துலூன், துலூன்...''

மகிழ்ச்சியோடும் , கலகலப்போடும் கிழமைகள் உருண்டன. மிரோன், தத்யானா, டாக்டர் மற்றும் எல்லா ஆட்களுமே மகிழ்ச்சியாகவும் ஒருவரோடு ஒருவர் நட்புடனும் நடந்து கொண்டார்கள். யாரோ சில அந்நியர்கள் நகரத்திலிருந்து வந்து ஃபிட்டர் மினாயெவைத் தங்களோடு கூட்டிச் சென்றார்கள். வெப்பமும், சூரிய ஒளியும் நிறைந்த வசந்த காலம் வந்தது.

''இதைக் கேள், காரச்சுவையே,'' என்றாள் பலீனா. ''நீ என்ன வேண்டுமானாலும் சொல், என்னால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. எதெப்படி? ஆட்சி செய்வதற்கு ஜார் மறுத்து விட்டார், எல்லாப் போர் வீரர்களும் உடல் ஊனமுற்றோ, கொல்லப்பட்டோ போய் விட்டார்கள், போலீஸ் கலைக்கப்பட்டு விட்டது, யாரோ ஒருவகையான சிவில் அதிகாரிகள் எல்லாவற்றையும் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். நாம் எப்படி வாழப் போகிறோம்? ஒவ்வொரு போக்கிரியும் தான் விரும்பியதைச் செய்ய முடியும், இப்போது ஜிதேய்கினால் எனக்கு எந்த அமைதியையும் தர முடியாது. அவனும் சரி நான் வெறுத்தொதுக்கிய மற்றவர்களும் சரி என்னை நிம்மதியாக இருக்க விடுவதில்லை. ஒவ்வொன்றுமே குழறுபடி ஆகிக் கொண்டிருக்கின்ற நிலையில், என்னால் இதற்கு மேல் இங்கே தங்க முடியாது. என்னை யாருமே அறியாத எங்காவது ஓரிடத்தில் நான் வசிக்க வேண்டி இருக்கிறது! மேலும், புரட்சியும் சுதந்திர

மும் முடிந்துவிட்ட நிலையில், ஏன், உண்மையில், ஒவ்வொருவரும் விரும்பியது போல வாழத்தான் முடியும்!''

இது பற்றி பலீனா மேன்மேலும் அவசரமாகவும், மேன்மேலும் வாயாடித்தனமாகவும் பேசினாள்; அவளுடைய விவாதங்களிலே மறுக்க முடியாத தர்க்கம் இருப்பதை உணர்ந்த யாக்கவ் ஆறுதலளிப்பது போல பதிலளிப்பான்:

''இன்னும் சற்று பொறுத்திரு, நிலைமைகள் அமைதியடையும், பிறகு...''

ஆனால் தன்னைச் சூழ்ந்துள்ள குழப்பங்கள் சீரடையும் என்பதை அவன் நம்பவில்லை. நாளுக்கு நாள் தொழிற்சாலையின் ஆரவாரம் மேன்மேலும் பெருகி வருவதை அவன் உணர்ந்தான். பய உணர்ச்சிக்குப் பழக்கப்பட்டுப் போன ஒரு மனிதனுக்கு எப்போதுமே அது அச்சத்தை ஏற்படுத்துவதாக இருக்கும்; யாக்கவும் ஸஹார் மரோஸவின் கருகிப் போன மண்டையோட்டைக் கண்டு பயப்படத் தொடங்கினான். தன்னை ஓர் ஏற்றுக் கொள்ளப்பட்ட சக்கரவர்த்தி போல ஸஹார் கருதத் தொடங்கினான். நாய்க்குப் பின்னே செல்லும் ஆட்டு மந்தையைப் போல தொழிலாளர்கள் அவனைப் பின் தொடர்ந்து செல்ல ஆரம்பித்தனர், மீத்யாவும் ஒரு பழகிய பறவையைப் போல அவனைச் சுற்றி வந்தான். உண்மையில், நேராக நிமிர்ந்து நடக்கக் கற்றுக் கொடுக்கப்பட்ட நாயினுடையதைப் போல ஸஹார் சில தன்மைகளைப் பெற்றிருந்தான்; ஏனெனில் அவனுடைய கருகிப் போன உச்சந்தலையானது அவனைத் தொல்லைப் படுத்தியது, சில சமயங்களில் துருக்கித் துவாலைத் துண்டினால் தலையைக் கட்டிக் கொள்வான். தத்யானாவிடமிருந்த இதனை மீத்யா அவனுக்குக் கொடுத்திருந்தான். இந்தப் பெரியத் தலைக் கட்டானது அவனது தோள்களை அழுத்தச் செய்து, அவனுடைய உருவத்தைக் குறுக்கிக் காட்டியது. தடித்த அந்த உதவி அதிகாரி எக்கேயைப் போலவே, தனது கட்டை விரல்கள் இரண்டையும் அழுக்கடைந்த ராணுவக் காற்சட்டையின் இடைவாருக்குள் சொருகியவாறும், மற்ற விரல்களை மீன் செதில்களைப் போல ஆட்டிக் கொண்டும், அவ்வப்போது கத்திக் கொண்டும் திரிவான்:

''ஒழுங்கு, தோழர்களே!''

செயற்கைப் பட்டைத் திருடிக் கொண்டிருந்த போது பிடிபட்ட மூன்று இளைஞர்களைத் தன் முன்னே நிறுத்தி விசாரித்தான். ஆலையினுடைய முற்றம் நெடுகிலும் ஒலிப்

பது போன்ற குரலில் அந்தத் திருடர்களிடம் கேட்டான்:

''யாரிடமிருந்து திருடுகிறீர்கள் என்பதை நீங்கள் அறிவீர்களா?''

அவனாகவே பதில் சொல்லிக் கொண்டான்:

''உங்களிடமிருந்து தான், நம் எல்லாரிடமிருந்தும் தான்! உங்களால் இப்போது திருட முடியுமா, நாய்க் குட்டிகளே!''

குற்றவாளிகளுக்குக் கசையடி கொடுக்கும்படி அவன் உத்தரவிட்டான், தொழிலாளர்களில் இரண்டு பேர் மூங்கில் விளாறினால் அடிக்க நியமிக்கப்பட்டு, மகிழ்ச்சியோடு அந்தப் பணியைச் செய்ய, உலை வேலையாள் வாஸ்கா உற்சாகத்தோடு பாடினான்:

அட்டைகள் எப்படி சவுக்கடி
வாங்குது இன்று!
சட்டப்படி நியாயம் வழங்கினர் நன்று...

பாட்டு நின்று போனது. பிறகு அவன் தனக்குத்தானே எதையோ முணுமுணுத்துக் கொண்டும், தோளைக் குலுக்கிக் கொண்டும், பிறகு திடீரென்று கத்தினான்:

ஆண்டவரே, உன் மக்களைக் காப்பாற்றும்!

மீத்யா சத்தமிட்டான்:

''அருமை!''

சாம்பல் நிறக் காற்சட்டை அணிந்து தோல் தொப்பியானது தலையின் பின்புறம் தொங்க, செம்பட்டை மீசை அரும்பியிருந்த முகத்தில் வியர்வைத் துளிகள் அரும்ப, கண்ணிலே மகிழ்ச்சி மின்னிட சுற்றிலும் ஓடினான் மீத்யா. முந்திய இரவில் தான் அவன் தன் மனைவியோடு மோசமாகச் சண்டை போட்டிருந்தான். அவர்களுடைய சன்னலை விட்டு வெளியே முற்றத்திற்குள்ளாக மிதந்து வந்த உரத்த கிசுகிசுப்புகளை யாக்கவ் கேட்டான், பிறகு தத்யானாவுடைய குரல் அடக்க முடியாது கோபத்தோடு வந்தது:

''நீங்கள் ஒரு கோமாளி! உங்களுக்கு எந்த மரியாதையும் இல்லை! உங்களது கொள்கைகளோ? பிச்சைக்காரர்களுக்கு எந்தக் கொள்கையும் கிடையாது. அவை எல்லாம் பொய்! ஒரு மாதத்திற்கு முன்னால் உங்களுடைய அந்தக் கொள்கைகள் எல்லாம்... எனக்குப் போதுமானவை! என்

சகோதரியிடம் தங்குவதற்காக நாளைக்கே நான் நகரத்திற்குப் போகிறேன்... ஆமாம், குழந்தைகளும் என்னுடன் வருவார்கள்...''

இது யாக்கவுக்கு வியப்பை அளிக்கவில்லை. செம்பட்டைத் தலை முடி கொண்ட மீத்யா வரவர மிகவும் பிரச்சினைக்குரியவனாக மாறிக் கொண்டு வந்ததை அவன் எப்போதோ கவனிக்கத் தொடங்கியிருந்தான். யாக்கவை வியப்பில் ஆழ்த்தியது என்ன வென்றால், ஒருவகையில் அவனைப் பெருமைப்பட வைத்தது: செம்பட்டைத் தலையன் நம்புதற்கு அரியவன் என்பதை முதன் முதலாகக் கண்டு பிடித்ததாகும். தானிய முற்றத்திலே கோழிகளை வளர்த்தது போல நதால்யா அவனையும் கவனித்து வந்திருக்கிறாள், இப்போதோ இம்மாதிரி முணுமுணுத்தாள்:

''இவனுக்கு என்ன தான் ஆகிவிட்டது, எத்துவாளி போல எப்போது பார்த்தாலும் விவாதம் செய்து கொண்டே இருக்கிறான்! இப்படிப்பட்டவர்களுக்கு உணவு கொடுத்து நன்றியைப் பார்...''

மீத்யா கத்துவான்:

''ஒவ்வொன்றும் அருமையாக இருக்கிறது! வாழ்க்கை அழகானது; மூளையுடன் அழகானது! ஆனாலும் ஓநாயும் ஆட்டுக் குட்டியும் சமாதானமாக வாழ்ந்த தேவதைக் கதையை இந்த முறை நாம் மறந்து விட்டோம். அதற்கான நேரம் கடந்துவிட்டது, தத்யானா பெத்ரோவ்னா!''

மிரோனோ கடுமையான கோபத்தோடு கேட்டான்:

''நாளைக்கு நீங்கள் என்ன சொல்வீர்கள்?''

''வாழ்க்கை எதையெல்லாம் கற்றுக் கொடுக்கிறதோ! அது தான் அது! நல்லது, மேலும் என்ன?''

கரியைப் பூசிக் கொண்டு திரிபவனைப் பார்த்து வெறுப்பவனைப் போல மிரோனும் தத்யானாவும் மீத்யாவை வெறுத்தார்கள். சில நாட்களுக்குப் பிறகு, தன் உடைமைகளுடன் அவன் நகரத்திற்குச் சென்று விட்டான்: மூன்று பெரிய புத்தகக் கட்டுகள், துணிகள் அடங்கிய ஒரு பெட்டி.

பெருந் தீ விபத்தின் போது காணப்படுவது போன்ற ஆரவாரமிக்க குழப்பம் ஒவ்வொரு இடத்திலும் இருப்பதை யாக்கவ் கவனித்தான், தன்னைச் சுற்றியுள்ள அத்தனை பேரும் அழன்றெரிவது போலவும், முட்டாள்தனத்தைப் புகையாக விட்டுக் கொண்டிருப்பது போலவும் உணர்ந்தான். இந்தப் பைத்தியக்காரத்தனம் விரைவிலேயே முடி

வுக்கு வந்துவிடும் என்பதற்கான அறிகுறி எதுவும் காணப் படவில்லை.

''நல்லது,'' என்றான் பலீனாவிடம். ''என் மனத்தை நான் தயார் செய்து கொண்டேன். நாம் புறப்படுகிறோம். முதலில் நாம் மாஸ்கோவுக்குப் போகிறோம், பிறகு நாம் பார்க்கலாம்...''

''கடைசியாக!'' அவள் மகிழ்ச்சியோடு கத்தினாள், அவனைச் சுற்றி அணைத்து, வெதுவெதுப்பாக முத்தமிட்டாள்.

ஜூலை மாதத்து மாலை நேரமானது சன்னலுக்கு மேலாகச் செந்நிறத்தைப் பாய்ச்சியது, மழையின் ஈரத்தாலும், சூரியனின் வெப்பத்தாலும் காய்ந்திருந்த கனத்த மண்வாசனை சன்னல்களுக்குள்ளாக நுழைந்தது. மகிழ்ச்சியான மாலை, ஆனால் முற்றிலும் துயரமிக்க சிந்தனைகள்.

தனது தோள்களின் மீது கிடந்த பலீனாவின் வெதுவெதுப்பான கைகளை விலக்கிவிட்ட யாக்கவ், தன்னை மறந்தவனாகப் பேசினான்:

''எதையாவது எடுத்துக் கொள். பொத்தான் மாட்டு... இதைப் பற்றி நாம் வினயமாகப் பேசியாக வேண்டும்.''

அவன் முழங்கால்களினின்றும் நழுவியபடி, படுக்கையின் மீது துள்ளி, மேலங்கியைச் சுற்றிக் கொண்டாள். பிறகு, ஒழுங்கான முறையிலே அவனுக்கருகிலே அமர்ந்தாள்.

''பார்,'' என்று யாக்கவ் தொடங்கினான், தனது தாடி மயிர் சப்தம் எழுப்புகிற வரை அதைத் தேய்த்தபடி இருந்தான். ''எங்கே அமைதியாக இருக்கிறதோ அங்கே ஏதாவது இடத்தை, ஏதாவது ஒரு நாட்டில் நாம் கண்டு பிடித்தாக வேண்டும். அங்கே நீ எதையும் புரிந்து கொள்ள வேண்டிய அவசியமிருக்காது, மற்றவர்களுடைய பிரச்சினைகள் பற்றி உனது மூளையைப் போட்டுக் குழப்பிக் கொள்ள வேண்டிய தேவை இருக்காது. நமக்குத் தேவை அதுதான்!''

''உண்மைதான்,'' என்றாள் பலீனா.

''அதே சமயத்தில் நமது போக்கினையும் நாம் கண்காணித்துக் கொள்ள வேண்டும். ஓடிப்போகின்ற போர் வீரர்களால் இரயில்கள் நிறைந்து வழிவதாக மிரோன் கூறுகிறான். நாம் ஏழையைப் போல நடிக்க வேண்டி இருக்கிறது...''

''கூடவே போதுமான பணத்தை எடுத்து வருவதை நிச்சயப் படுத்திக் கொள்.''

''ஆமாம், உண்மைதான். எங்கே போகிறேன் என்பதை எனது ஆட்களுக்கு நான் தெரிவிக்கப் போவதில்லை. வோர் கோரதுக்கு வெறுமனே ஒரு பயணம் என்று தான் கூறுவேன் —புரிகிறதா?''

''அதை ஏன் ரகசியமாக வைத்திருக்கிறாய்?'' வியப்புடனும், சந்தேகத்துடன் பலீனா வினவினாள்.

ஏன் என்று அவனுக்குத் தெரியவில்லை. அப்படிப்பட்ட ஓர் எண்ணம் எழுந்தது, அவ்வளவு தான். ஆனால் அது ஒரு நல்ல கருத்து என்பதாக உணர்ந்தான்.

''நல்லது, என் அப்பாவையும், மிரோனையும் உனக்குத் தெரியும். அவர்கள் கேள்விகளைத் தொடுப்பார்கள்... அது எல்லாம் வேண்டாம். மாஸ்கோவில் பணம் இருக்கிறது. அங்கே என்னால் போதுமான பணத்தைத் திரட்ட முடியும்...''

''ஆனாலும், அதை விரைவாகச் செய்ய வேண்டும்!'' என்று கெஞ்சினாள் பலீனா. ''நீயாகவே இதைக் காண முடியும். இங்கே நம்மால் வசிக்க முடியாது. ஒவ்வொன்றும் அத்தனை அரிதாக இருக்கிறது, உன்னால் ஒன்றைக் கூடப் பெற முடியாது. கொள்ளையடிக்கப்படுவது நிச்சயம், ஏனெனில் வாழ்க்கை அவ்வளவு கஷ்டமாகிக் கொண்டு வருகிறது.''

வாசல் பக்கமாகத் தனது தோளைத் திருப்பி, அவள் கிசுகிசுத்தாள்:

''உதாரணமாக என் சமையல்காரியை எடுத்துக் கொள். அவள் அவ்வளவு அருமையாக இருப்பது வழக்கம், இப்போதோ என் மீது எரிந்து விழுகிறாள், எப்போது பார்த்தாலும் குடித்தது போலக் காணப்படுகிறாள். ஏதாவது ஓர் இரவில் அவள் என்னைக் கொலை செய்யக் கூடும், ஏன் கூடாது, ஒவ்வொன்றுமே இப்படிக் குழம்பிப் போய்க் கிடக்கும் போது? நேற்று அவள் யாரிடமோ கிசுகிசுத்துக் கொண்டிருந்ததைக் கேட்டேன். 'ஆண்டவரே! இப்போது அது வந்து விட்டது!' என்று நான் நினைத்தேன். ஆனால் நான் கதவைத் திறந்தேன், மெல்ல ஒரு கிரீச் ஒலிதான், அந்தளவுக்கு அமைதியாகத் திறந்தேன், அவள் முழங்காலிட்டு இருந்தாள், குறைபட்டுக் கொண்டிருந்தாள்! அது கோரமானதாக இருந்தது!''

''நிறுத்து,'' என்று அவளுடைய துடிப்பான முணுமுணுப்பை நிறுத்தினான் யாக்கவ். ''நான் முதலில் போகிறேன்...''

தனது முட்டியை அவளுடைய முழங்காலின் மீது கொண்டு வந்தபடி ''முடியாது,'' என்று உரக்கக் கத்தினாள். ''நான் தான் முதலில்! எனக்குப் பணம் கொடு, மேலும்...''

''என் மீது நம்பிக்கை இல்லையா, பிறகு?'' என்று அவமானப் பட்டுக் கோபமாகக் கேட்டான் அவன்; உறுதியான பதிலைப் பெற்றான்:

''இல்லை. என்னால் முடியாது. நான் வெளிப்படையான பெண், நான் நேரடியாகவே உன்னிடம் சொல்லி விடுகிறேன்: முடியாது! ஒவ்வொருவரும் ஜாரைக் காட்டிக் கொடுத்துவிட்டபோது, பூமியிலுள்ள ஒவ்வொன்றையும் ஏமாற்றிய பிறகு, ஒருவன் யாரையும் எப்படி நம்ப முடியும்? நீ யாரையும் நம்புகிறாயா?''

அவளுடைய விவாதம் ஏற்புடையதாக இருந்தது; அவளது போர்வை மடிப்பினின்றும் அரைகுறையாகத் தெரிந்த அவளது மார்பகங்களோ இன்னும் ஏற்புடையதாக இருந்தன. யாக்கவ் அர்தமோனவ் பணிந்து போனான். அடுத்த நாள் காலையிலேயே அவள் சாமான்களை மூட்டை கட்டிக் கொண்டு வோர்கோரத் புறப்பட்டுச் சென்று, அவனுடைய வருகைக்காகக் காத்திருப்பது என்று முடிவு செய்யப்பட்டது.

மறுநாள் காலை தலை வலியும், வயிற்று வலியும் இருப்பதாக யாக்கவ் வீட்டில் புகார் செய்தான், கடந்த சில மாதங்களில் அவன் தனது எடையை அதிகளவு இழந்திருந்ததும், சோம்பேறித்தனமும், மறதியும் கூடியிருந்ததும், அவனுடைய வானவில் கண்களுக்கு மேலாக மங்கலாக ஒன்று படிந்திருந்ததும்—அதை எளிதில் நம்பவைப்பதாக இருந்தது. எட்டு நாட்களுக்குப் பிறகு, புறக்கணிக்கப்பட்ட நெடுஞ்சாலை ஓரத்தின் வழியாக மெதுவாக வண்டியை ஓட்டிக் கொண்டு ரயில் நிலையத்தை நோக்கிப் பயணமானான். இங்குமங்குமாக சரளைக் கற்கள் கிடந்தன, ஆழமாக வெட்டப்பட்ட குழிகளில், சூரிய வெப்பத்தினால் காய்ந்து, பிளவுபட்ட சகதி நிறைந்து காணப்பட்டது. அவனுக்குப் பின்னே அதே போல வேரோடு பிடுங்கப்பட்ட வாழ்க்கையானது பரத்திக் கிடந்தது; முன்னேயோ புகையார்ந்த மேகங்களுக்கிடையே தோன்றிய மென்மையான குழிகளினிடையே மந்தமான சூரியன் கீழே தலையை எட்டிப் பார்த்தது.

ஒரு மாதத்திற்குப் பிறகு, மாஸ்கோ பயணத்தினின்றும் திரும்பிய மிரோன் அர்தமோனவ் தத்யானாவைப் பார்ப்பதற்காகத் தங்கினான். தனது தலையைத் தாழ்த்தி, தனது உள்ளங்கையைப் பார்த்துக் கொண்டபடி, கூறினான்:

''ஒரு வகையில் ஒரு துயரமான செய்தியை உனக்காக நான் வைத்திருக்கிறேன். யாக்கவுடன் வசித்து வந்த அந்த வேசி மாஸ்கோவில் என்னைப் பார்ப்பதற்காக வந்தாள். இரயிலில் இருந்த சில ஆட்கள்—இந்தக் காலத்தில் இருப்பவர்கள் தான் எப்படிப்பட்ட ஆட்கள் என்று உனக்குத் தெரியுமே—யாக்கவை அடித்து வண்டியை விட்டு வெளியே தூக்கி எறிந்து விட்டார்கள் என்று கூறினாள்...''

''இருக்காது!'' தனது நாற்காலியிலிருந்து எழுந்து நிற்க முயற்சித்தவாறே, தத்யானா கத்தினாள்.

''அப்போது இரயில் போய்க் கொண்டு இருந்திருக்கிறது. இரண்டு நாட்களுக்குப் பிறகு அவன் இறந்து போனான், பெதுஷ்கி நிலையத்திற்கு அருகே ஒரு கிராமத்துக் கல்லறையில் அவனைப் புதைத்திருக்கிறாள்.''

தத்யானா தனது கைக்குட்டையால் தனது கண்களின் மீது அழுத்தினாள். அவளது மெலிந்த தோள்கள் விம்மின, அவளுடைய கருப்பு உடையானது தரையை நோக்கி அருவியாய் ஓடுவது போலக் காணப்பட்டது, இந்த மெலிந்த உடலும், நீண்ட கழுத்தும் கொண்ட பெண் உருகிக் கரைவது போல அது இருந்தது.

மிரோன் தனது கண்ணாடியைச் சரிசெய்து கொண்டான், தனது விரல்களை சொடுக்கு விட்டுக் கொண்டான், கைகளை ஒன்று சேர்த்துத் தேய்த்தான், மாலை நேரத்து வழிபாட்டிற்காக அழைப்பு விடுத்தபடி ஒலித்துக் கொண்டிருந்த சர்ச்சின் ஒற்றை மணியோசையைச் சற்று நேரம் செவிமடுத்தான், அறைக்குள்ளாக மேலும் கீழும் நடை போட்டபடி இறுதியாகக் கூறினான்:

''அழுது கொண்டிருப்பதிலே என்ன அருத்தம் இருக்கிறது? உனக்கும் எனக்கும் இடையே அவன் எதற்கும் பயனற்றவனாக இருந்தான். மேலும் நான் இவ்வாறு சொல்வதற்கு நீ மன்னிப்பதாக இருந்தால், அநாகரிகமான அளவுக்கு முட்டாளாகவும் இருந்தான்! உண்மையில் அது வெட்கப்படத்தக்கது. ஆம்.''

கண்ணைச் சிமிட்டியவாறே ''கடவுளே!'' என்றாள் தத்யானா. அழுததனால் அவளுடைய இமைகள் சிவந்திருந்

தன. விரல் நுனியைத் தன் நாக்கில் நனைத்து, தனது புரு வங்களை அதனால் தடவி விட்டுக் கொண்டாள்.

தனது கைகளைச் சட்டைப் பைகளுக்குள் திணித்த படி ''அந்த துணிச்சல்கார வேசி,'' என்று தொடர்ந்து பேசினான் மிரோன். ''தேற்றமுடியாத விதவை என்று காட்டிக் கொள்வது போலத்தான் மிகவும் முயன்றாள். ஆனால் அவள் அந்தளவுக்கு உடுத்தியிருந்தது, யாக்கவை முற்றிலுமாகக் கரந்து விட்டாள் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. குடும்பத்திற்குக் கடிதம் எழுதியதாக அவள் கூறுகிறாள்.''

தத்யானா தனது தலையை அசைத்தாள்.

''ஆக அவள் எழுதவில்லையா? அப்படித் தான் நான் நினைத்தேன். என்ன நடந்தது என்பதை உன் அப்பாவுக்கும் அம்மாவுக்கும் தெரிவித்தாக வேண்டும் என்று நான் நினைக்கவில்லை. எங்கோ ஓரிடத்தில் யாக்கவ் உயிரோடு இருப்பதாக அவர்கள் நினைத்துக் கொள்ளட்டும். சரியா?''

''ஆமாம். அதுதான் சிறந்தது,'' தத்யானா ஒப்புக் கொண்டாள்.

''ஆமாம், பெரியப்பா பியோத்தர் எதையும் புரிந்து கொள்ளக்கூடிய நிலையில் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் உன்னுடைய அம்மா அழுதே தொலைந்து போவாள்...''

தனது தலையை அலைத்தபடி, தத்யானா கூறினாள்: ''நாம் எல்லாருமே சீக்கிரத்தில் தொலைந்து போவோம்.''

''நாம் இங்கேயே தங்கினால், சாத்தியந்தான். ஆனால் என் மனைவியையும் குழந்தைகளையும் இப்போதே நான் அனுப்பிக் கொண்டிருக்கிறேன். ஸஹார் மரோஸவ்... முன்னமேயே நீயும் வெளியேறிப் போகுமாறு உனக்குக் கூறுகிறேன். ஆக வயதான ஆட்களிடம் எதையும் சொல்ல வேண்டியது இல்லை. மேலும் இப்போது, நீ என்னை மன்னிப்பதாக இருந்தால், நான் வீட்டுக்குப் போக வேண்டும். என் மனைவிக்கு உடல் நலமில்லை...''

தனது நீண்ட கையை நீட்டி, சகோதரி கையை அவன் குலுக்கினான், புறப்படும் போது, மேலும் சொன்னான்:

''இப்பொழுதெல்லாம் பயணம் செய்வது என்பது மிகவும் கஷ்டமானதாக இருக்கிறது. சாலைகள் அஞ்சத்தக்க நிலையில் இருக்கின்றன!''

மூத்த அர்தமோனவ் பாதி உணர்விழந்த தன்மையில்

வாழ்ந்தான், படிப்படியாக ஆழ்ந்த உறக்கத்திலே மூழ்கிக் கொண்டிருந்தான். இரவையும், பகலின் பெரும் பகுதி நேரத்தையும் படுக்கையிலேயே செலவிட்டான், எஞ்சிய நேரத்தைத் தனது நாற்காலியை சன்னலருகே போட்டு உட்கார்ந்து கழித்தான். சன்னலுக்கு வெளியே நீல வானம் பரந்து கிடந்தது, அவ்வப்பொழுது மேகங்களால் மங்கித் தோன்றியது. பிறகு துயரார்ந்த முகமும், வீங்கிய கண்களும், நரைத்த சிக்குப் பிடித்த தாடியும் கொண்ட உடல் பருத்த கிழவனைக் கண்ணாடி பிரதிபலிக்கும். தனது உருவத்தைப் பார்த்தபடி, அர்தமோனவ் தனக்குத்தானே சொல்லிக் கொள்வான்:

''என்ன கொசு!''

அவன் மனைவி வருவாள், அவனுக்கு மேலாகக் குனிந்து அவனை எழுப்புவதற்காக அப்படியிப்படியுமாக அசைக்க முயன்றபடி, தேம்பித் தேம்பி அழுதபடி கூறுவாள்:

''நீ எங்காவது போக வேண்டும். உனக்குப் பண்டுவம் தேவைப்படுகிறது...''

''வெளியே போ,'' என்று அர்தமோனவ் களைப்புற்ற குரலில் அவளிடம் கூறுவான். ''வெளியே போ, நச்சரிப்பு. உன்னால் தான் என் நோய். என்னைத் தனியே விடு.''

தனியே விடப்பட்ட அவன், காதில் விழுவதைக் கேட்டபடி உட்கார்ந்து இருப்பான். முற்றத்திலும், பழத் தோட்டத்திலும், எல்லா இடங்களிலும் மக்கள் உற்சாகத்தோடு ஒலியெழுப்பிக் கொண்டிருப்பார்கள்; ஆனால் ஆலை — ஆலை அமைதியாகக் கிடந்தது.

அவனுக்குள்ளாகவே மிகவும் பழக்கப்பட்டுப் போன துணைவன், அர்தமோனவுக்கு எழுச்சியூட்ட தனது குத்துகின்ற சிந்தனைகளால் மயக்கம் தெளிவித்து வந்த தோழன், போய்த் தொலைந்து, செத்துப் போனான். ஒரு நல்ல காரியம்,—கிழவன் சிந்திக்க முடியாமல் சிரமப்பட்டான், அதற்கான எல்லா விருப்பங்களையும் இழந்து போய் விட்டிருந்தான். மேலும், சிந்திப்பது பயனற்றது என்பதை அவன் எப்போதோ உணர்ந்து விட்டான், ஏனெனில் அப்படிச் சிந்தித்தாலும் எதையும் புரிந்து கொள்ள இயலாது என்பதைக் கண்டு கொண்டான். ஒவ்வொருவரும் எங்கே காணாமற் போய் விட்டார்கள்—யாக்கவ், தத்யானா, மீத்யா?

சில நேரங்களில் தன் மனைவியிடம் அவன் கேட்பான்:

''இல்யா திரும்பி விட்டானா?''

''இல்லை.''

''இன்னுமா இல்லை?''

''இன்னும் இல்லை.''

''யாக்கவ்?''

''யாக்கவ் கூடத்தான்.''

''அதுவா. அவர்கள் வாழ்க்கையைச் சுலபமாக எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். மிரோன் அட்டை போல தொழிலை உறிஞ்சுகிறான்.''

''அது பற்றி நினைக்க வேண்டாம்,'' நதால்யா அறிவுரை சொல்வாள்.

''அப்பால் போ.''

அவள் நகர்ந்து சென்று, மூலையில் உட்காருவாள், ஒரு காலத்தில் யாருடன் தனது வாழ்நாளையெல்லாம் செலவிட்டாளோ அந்த மனிதனைத் தனது ஒளியிழந்த கண்ணைத் திருப்பிப் பார்ப்பாள். அவளுடைய தலை நிதானமில்லாமல் நின்றது, அவளது கைகள் மூட்டு விலகியவைப் போன்று தொளதொளத்துக் கிடந்தன. அவள் மெலிந்து போய்விட்டிருந்தாள், கொழுப்பு மெழுகு வர்த்தியைப் போல உருகி நின்றாள்.

அவ்வப்பொழுது, கூடுகின்ற இடை வெளிகளில், அவனது அறைக்குள்ளாக வந்த அந்நியர்களின் வருகையால் ஏற்படும் புரிந்து கொள்ள முடியாத இரைச்சலால் விழித்தெழுவான். அவர்களை வெறித்து நோக்கி, அவர்களுடைய உரத்த பிதற்றல்களைப் புரிந்து கொள்ள முயல்வான், அதே வேளை அவன் மனைவியோ அழுது அரற்றுவாள்:

''கடவுளே, இதென்ன? ஏன்? அவர்தான் எசமானர், அதைச் சொல்கிறேன். நாங்கள் தான் எசமானர்கள்! பிறகு, அவரையாவது எடுத்துப் போக விடுங்கள். அவருக்குப் பண்டுவம் தேவைப்படுகிறது. அவர் நகரத்தில் இருக்க வேண்டி இருக்கிறது! அவரை அழைத்துப் போக விடுங்கள்...''

''அவள் என்னை மறைக்க விரும்புகிறாள், எதற்காக?'' அர்தமோனவ் நினைத்தான். ''முட்டாள். அவள் வாழ்க்கை முழுதுமே முட்டாள் தான். யாக்கவும் அவளை மாதிரி தான். எல்லாருமே அப்படித்தான். ஆனால் இல்யா—என்னை மாதிரியே இருக்கிறான். அவன் வீடு திரும்பும் வரை பொறுத்திருங்கள். அவன் எல்லாவற்றையும் சரி செய்வான்...''

மழை; பிறகு பனி, கடும் உறைபனி; சீறுகின்ற புயற்காற்று.

இந்த அரைகுறை மயக்க நிலையினின்றும், கடுமையான பசி உணர்வால் அர்தமோனவ் குலுங்கியெழுந்தான். பழத் தோட்டத்தில், கோடை இல்லத்தில் தான் இருப்பதை உணர்ந்தான். அவனுக்கு எதிரே இருந்த கண்ணாடிச் சுவர் களின் வழியாக, அதைத் தொட்டுக் கொண்டு ஈரமான கிளைகள் இருந்ததையும், வானம் செந்நிறமாகவும், அதி சயிக்கத்தக்கவாறு அண்மையில் இருப்பதையும் கண்டான். மரங்களுக்கு அப்பால் கையால் தொடுகின்ற அளவில் வளைந்து நிற்பது போலக் காணப்பட்டது.

''நான் பசியாக இருக்கிறேன்,'' என்றான். பதில் ஏதும் கிடைக்கவில்லை.

பழத் தோட்டத்திற்கு மேலாக ஈரமான, நீல நிற இருள் கவிந்து கிடந்தது. கோடை இல்லத்திற்கு முன்னால் இரண்டு குதிரைகள் ஒன்றின் தலையை மற்ற தன் கழுத்தில் வைத்த வாறு நின்று கொண்டிருந்தன. ஒன்று பழுப்பு நிறம், மற் றது கொஞ்சம் இருண்ட நிறம். ஒரு பெரிய கயிற்றுச் சுருளை ஒழுங்காக வைத்தபடி, வெள்ளைச் சட்டையணிந்த ஒருவன் பக்கத்திலிருந்த ஒரு பெஞ்சின் மீது அமர்ந்திருந் தான்.

''நதால்யா, உனக்குக் கேட்கவில்லையா? எனக்குச் சாப் பிட எதாவது கொடு...''

அரை உணர்வு நிலையிலிருந்து அவன் விழித்த போதெல் லாம், அவனுடைய முதல் அழைப்பிலேயே அவன் மனைவி எப்பொழுதுமே வந்து விடுவாள். கைக்குப் பக்கத்திலேயே அவள் எப்போதும் இருந்து வந்திருக்கிறாள். இப்போதோ, அவள் அங்கே இல்லை.

''ஒருவேளை அவள்...'' அவன் வியப்புற்றான், அவனது மயக்கம் தெளிந்தது. ''அல்லது உடல்நலமில்லாது போய் விட்டாளோ?''

தன் தலையை அவன் உயர்த்தினான். குளியல் வீட்டுக் கதவுக்குப் பக்கத்தில், புதர்களின் வழியாக ஏதோ ஒன்று மினுமினுத்தது. மூஞ்சியில் கத்தி சொருகப்பட்ட துப்பாக்கி என்பதையும், புதர்களுக்குள் உடல் மறைந்து நின்ற பச்சை நிறப் போர்வீரனின் முதுகில் அது தொங்கியதையும் அவன் பார்த்தான். முற்றத்தில் யாரோ உரக்கக் கத்தினார்கள்:

''என்ன இது, தோழர்களே? குதிரைகளை நடத்துகிற முறை இது தானா? பன்றிகளைக் கூட இப்படி நடத்துவ தில்லை! எதற்காக புல் ஈரமாகும்படி வெளியே போடப்

பட்டிருக்கிறது? என்ன, உன்னை இந்தக் குளியல் வீட்டுக் குள்ளாகப் போட்டுப் பூட்ட வேண்டுமா?''

வெள்ளைச் சட்டையில் இருந்த மனிதன், கயிற்றைக் கீழே போட்டுவிட்டு எழுந்து, அந்தப் போர்வீரனை நோக்கி எச்சரிக்கையோடு பேசலானான்:

''அவன் தான் என்று அவன் நினைக்கிறான், அவனைச் சனியன் கொண்டு போக!''

''இருக்க வேண்டியதைக் காட்டிலும் இப்போது அதிக மான தளபதிகள் இருக்கிறார்கள்,'' என்று போர்வீரன் பதிலளித்தான்.

''அவர்களை யெல்லாம் இங்கே எந்தச் சனியன்கள் நியமிப்பது?''

''அவர்கள் தாங்களாகவே நியமித்துக் கொள்கிறார் கள். இந்தக் காலத்தில் ஒவ்வொன்றும் அதனதன் போக்கில் தான் நடைபெறுகிறது, சகோதரனே. பழைய பாட்டி கதை களைப் போல.''

அவன் குதிரைகளை நோக்கி நடந்து சென்று, அவற்றின் பிடரி மயிற்றால் அவற்றைப் பற்றினான். மூத்த அர்தமோ னவ் எவ்வளவுக்கு முடியுமோ அந்தளவுக்கு உரக்கக் கத்தி னான்:

''ஏய், யாரங்கே! என் மனைவியைக் கூப்பிடு!''

''மூடு வாயை, கிழவா,'' என்று பதில் வந்தது. ''ஹூம், அவன் மனைவி வேண்டுமாம்...''

குதிரைகள் அப்பால் ஓட்டிச் செல்லப்பட்டன. அர்த மோனவ் ஒரு கையால் முகத்தையும் தாடியையும் தடவி னான், குளிர்ந்து போன விரல்களால் தனது காதைத் தொட் டான், தன்னைச் சுற்றிலும் பார்த்தான். செந்நிறப் பேரிப் பழங்களைப் போல, சிவப்புப் பழங்கள் கொத்துக் கொத் தாய் தொங்கும் ஓர் ஆப்பிள் மரம் வர்ணம் தீட்டப்பட்டி ருந்த கோடை இல்லத்தின் சன்னலற்ற சுவருக்குப் பின்னால் அவன் படுத்துக் கிடநதான். கரடு முரடாகவும், கடினமாக வும் இருக்கக் கூடிய ஏதோ ஒன்றின் மீது அவன் படுத்துக் கிடந்தான். அவனது அழுக்கடைந்த நரித்தோலால் தைக் கப்பட்ட கோட்டு அவனுக்கு மேலாகப் பரந்து கிடந்தது, வெதுவெதுப்பான குளிர் காலச் சட்டை அணிந்திருந்தான், இன்னும் அவனுக்கு சூடாகத் தெரியவில்லை. தான் ஏன் இங்கே வெளியே தூக்கி வரப்பட்டோம் என்பதை அவ னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவேளை விடு

முறைக்காக வீடு துப்புரவு செய்யப்பட்டுக் கொண்டிருக்க லாம்? என்ன விடுமுறை? பழத் தோட்டத்தில் குதிரைகள் எதற்காக நின்றன? குளியல் வீட்டிற்குப் பக்கத்தில் ஒரு போர்வீரன் இருந்தது ஏன்? முற்றத்தில் கத்திக் கொண் டிருந்தது யார்? இதோ: ''தோழரே, நீங்கள் வெறுமனே மூளையற்ற பையன் தான்! என்ன? ஆட்கள் களைத்துப் போய் விட்டார்களா? அவ்வளவு சீக்கிரம் களைத்துப் போக வேண்டியதில்லை! முட்டாள் விளையாட்டு விளையா டாதே!..''

சத்தம் தொலைவிலிருந்து கேட்டாலும், அது அவனைச் செவிடாக்கியது, அவன் தலையை இரையச் செய்தது. அவ னுடைய கால்கள் காணாததைப் போலத் தோன்றின. முழங் காலுக்குக் கீழே அவை அசையவே மறுத்தன. சுவரில் இருந்த ஆப்பிள் மரமானது இவான் லூக்கீனால் வரையப்பட்டது. ஒரு திருடனாக இருந்தான், பிறகு ஒரு சர்ச்சில் கொள்ளை யடித்தான், சிறையிலேயே செத்துப் போனான்.

அழுக்கடைந்த தொப்பி அணிந்த ஓர் அகன்ற உருவம், குளுமையான நிழலையும், கடும் தார் நாற்றத்தையும் கொண்டு வந்தபடி கோடை இல்லத்திற்குள் நுழைந்தது.

''யார் அது—தீஹனா?''

''வேறு யார்?..''

தீஹனுடைய முரட்டுத்தனமான பதில் கூட காதைச் செவிடாக்கியது. கிரீச்சிடும் அந்தத் தரைக்குக் குறுக்காக நீந்தி வந்து கொண்டிருப்பது போல, அந்தக் கிழட்டு முற்றப் பாதுகாவலன் தனது கைகளை அலைத்து வந்தான்.

''அங்கே யார் கத்திக் கொண்டிருப்பது?''

''ஸஹார் மரோஸவ்.''

''அந்தப் போர்வீரன் இங்கே என்ன செய்து கொண் டிருக்கிறான்?''

''போர் நடக்கிறது.''

சற்று அமைதிக்குப் பிறகு, அர்தமோனவ் வினவினான்:

''இங்கே வரைக்கும் வருவதற்கு எதிரிகளால் முடிந் ததா?''

''இந்தப் போரே உனக்கு எதிராகத்தான், பியோத்தர் இல்யீச்...''

எசமானன் கண்டிப்பாகப் பேசினான்:

''என்னிடத்தில் கிண்டல் வேண்டாம், நீ கிழட்டு முட் டாள். நான் உன்னுடைய தோழன் அல்ல!''

அதற்கு இப்படி அமைதியான பதிலைப் பெற்றான்:

''இது கடைசிப் போர். இதற்கு மேலும் அவர்கள் விரும்பவில்லை, இப்போது ஒவ்வொருவருமே தோழர்கள் தாம். முட்டாளைப் பொருத்த மட்டில்—நான் ஒருவிதமான கிழட்டு வகை—அது உண்மை தான்.''

தெளிவாகவே, தீஹன் கேலி செய்து கொண்டிருந்தான். தனது தொப்பியைக் கூடக் கழற்றாமல், தன் எசமான னுடைய காலடியில் மரியாதை இல்லாமல் இப்போது கீழே உட்கார்ந்தான். வெளியே முற்றத்தில் ஒரு கரகரப்பான குரல் கட்டளையிட்டது:

''மேலும் நினைவிருக்கட்டும்: எட்டு மணிக்குப் பிறகு தெருக்களில் பொது மக்கள் வரக் கூடாது!''

''என் மனைவி எங்கே?'' அர்தமோனவ் கேட்டான்.

''ரொட்டியைத் தேடிக் கண்டு பிடிப்பதற்காகச் சென் றிருக்கிறாள்.''

''என்ன சொல்கிறாய்—தேடிக் கண்டு பிடிக்கவா?''

''அதைத் தான் சொல்கிறேன். ரொட்டி என்பது செங் கல் அல்ல. அது சுற்றிலும் கிடக்காது.''

பழத் தோட்டத்தில் இருந்த நீலநிறக் கருமையானது அடர்த்தியாகிக் கொண்டிருந்தது; குளியல் வீட்டருகே இருந்த போர்வீரன் உரத்துக் கொட்டாவி விட்டான். அவனை இதற்கு மேலும் பார்த்தறிய முடியவில்லை; நீரில் உள்ள மீன் போல அவனது துப்பாக்கியிலிருந்த கத்தி மட்டுமே பளபளத்தது. இன்னும் பல வினாக்களைக் கேட்பதற்கு விரும்பி இருக்கக் கூடும்; ஆனால் அவன் தன் நாவை அடக் கிக் கொண்டான். தீஹனிடமிருந்து புரிந்து கொள்ளுமாறு எதையும் பெற முடியவில்லை. எப்படியும், கேள்விகள் அவ னது மூளைக்குள்ளாகவே வட்ட மடித்துக் கொண்டிருந்தன, அதனால் அவை குழப்பமுற்று, எது முக்கியமானது என் பதை அவனால் கூற முடியவில்லை. மேலும் அவன் கடும் பசியோடு இருந்தான்.

தீஹன் முணுமுணுத்தான்:

''நான் ஒரு முட்டாளாக இருக்கலாம், ஆனால் உண் மையை முதலாவதாகப் பார்த்தது நான் தான். வாழ்க்கை எப்படி மாற்றம் கண்டு விட்டது பார். நான் எப்போதுமே கூறினேன்: உங்களுக்கெல்லாம் கடுமையான தண்டனை என்று! அது வந்துவிட்டது. தூசியைப் போல, பெரும்பா லும் மரச்சீவலைப் போல அவர்கள் உங்களை ஊதிவிட்

டார்கள். இங்ஙனமாகத் தான் இருக்கிறது, பியோத்தர் இல்யீச். ஆமாம், சாத்தான் சீவிவிட்டது, அவனுடைய கத்தியை நீதான் கூராக்கிக் கொடுத்தாய். அதெல்லாம் எதற்காக? நீங்கள் பாவம் செய்தீர்கள், மேலும் பாவம் செய்தீர்கள்—இந்தப் பாவங்களுக்கு எண்ணிக்கையே இல்லை! நான் எல்லாவற்றையும் பார்த்திருக்கிறேன், அதிசயித்திருக்கிறேன். அது எப்போது முடியும்? இப்போது உங்களுடைய முடிவு வந்துவிட்டது. உனக்கு இப்போது திரும்பி வருகிறது... வண்டி ஒரு சக்கரத்தை இழந்தது...''

''அவன் உளறிக் கொண்டிருக்கிறான்,'' என்று அர்தமோனவ் முடிவு செய்தான். எனினும், அவன் வினவினான்:

''எதற்காக நான் இங்கே வெளியே கிடக்கிறேன்?''

''அவர்கள் உன்னை வீட்டை விட்டு வெளியேற்றி விட்டார்கள்.''

''மிரோன்?''

''ஒவ்வொருவரையும் தான்.''

''யாக்கவ் என்ன ஆனான்?''

''அவன் எப்போதோ போய் விட்டான்.''

''இல்யா எங்கே?''

''புதிய ஆட்சியுடன் என்று அவர்கள் கூறுகிறார்கள். நீ இன்னமும் உயிரோடு இருப்பதே கட்டாயம் அதனால் தான்—ஏனெனில் அவன் அவர்களோடு இருக்கிறான். இல்லையெனில்...''

''அவன் உளறிக் கொண்டிருக்கிறான்,'' அது பற்றி இப்போது அர்தமோனவ் உறுதியாக இருந்தான், மௌனமாகி விட்ட அவன் சிந்தித்தான்: ''அவனுக்கு வயதாகி விட்டதால் பிதற்றிக் கொண்டிருக்கிறான். இதைத் தானே எதிர்பார்க்க முடியும்.''

வானத்தில் சிறிய, மங்கலான நட்சத்திரங்கள் தோன்றின. பியோத்தர் நினைவு கூர்ந்த வரையிலும் முன்னர் ஒரு போதும் நட்சத்திரங்கள் அப்படிக் காணப்பட்டதில்லை. இவ்வளவு அதிகமாகக் கூட அவை இருந்ததில்லை.

தீஹன் தனது தொப்பியைக் கழற்றினான், அதைத் தனது கைகளில் வைத்து முறுக்கியபடி, தனது முணுமுணுப்பைத் தொடர்ந்தான்:

''உங்களுடைய வஞ்சகமான முட்டாள்தனங்கள் எல்லாம் உங்களிடம் திரும்பி வந்து கொண்டிருக்கின்றன. பிச்சைக்காரர்கள் அதைச் சுலபமாக எடுத்துக் கொள்வார்கள்.''

திடீரென்று, முற்றிலும் மாறுபட்ட குரலில் அவன் கேட்டான்:

''அந்தப் பையனை உனக்கு நினைவிருக்கிறதா? எழுத்தருடைய சின்னப் பையன்?''

''சரி, அவனைப் பற்றி என்ன?''

தான் நடுங்கிப் போய் விட்டோமா, எதிர்பாராத இந்த வினாவால் வெறுமனே வியப்புற்று விட்டோமா என்று பியோத்தர் அர்தமோனவுக்குத் தெரியவில்லை. ஆனால் கண நேரத்திற்குப் பிறகு, தீஹன் பேசிய போது, அவன் மிக நன்றாகப் புரிந்து கொண்டான்:

''ஸஹார் தனது நாய்க் குட்டியைக் கொன்றது போல, நீ அவனைக் கொன்றாய். எதற்காக அவனை நீ கொன்றாய்?''

இப்போது அர்தமோனவ் புரிந்து கொண்டான்: இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது, அவனைப்பற்றி தீஹன் கோள் சொல்லியிருக்கிறான். அதனால் தான் நோயாளியாகவும், சிறைப்பட்டும் இருக்கிறான். ஆனால் இது அவனை அச்சுறுத்த வில்லை. ஒருவகையில், அதனது மனிதத் தன்மையற்ற முட்டாள்தனத்தால், அது அவனுக்கு எரிச்சலையூட்டியது. தனது முழங்கைகளால் தாங்கிக் கொண்டு, தனது தலையை உயர்த்தினான், கண்டனமும் கேலியும் ஒரு சேர அமைதியாகப் பேசத் தொடங்கினான். அவனது வாய் வறட்சியாக இருந்தது, நாக்கிலே ஒரு விதமான கசப்புத் தென்பட்டது.

''அது பொய்! அத்துடன், எந்த ஒரு குற்றமாக இருந்தாலும் அதற்கு ஒரு கால வரையறை உண்டு! அந்தக் காலக் கெடு எப்போதோ கடந்துவிட்டது. நீ தவற விட்டு விட்டாய், ஆமாம்! மேலும் உன் மூளையை விட்டே போய் விட்டது. நீ என்ன பார்த்தாய் என்பதையே மறந்து விட்டாய், அன்றைய தினம் நீயாகவே என்ன சொன்னாய்...''

''நல்லது, நான் என்ன சொன்னேன்?'' கிழவன் பேசினான். ''அதை நீ செய்யும் போது நான் பார்க்கவில்லை, அது அப்படித்தான்; ஆனால் நான் புரிந்து கொண்டேன்! நீ எப்படி நடந்து கொள்ளப் போகிறாய் என்பதைப் பார்ப்பதற்காகவே சொன்னேன். நான் பொய் சொன்னேன், நீயும் மிகவும் மகிழ்ந்து போனாய்—அந்தப் பொய்யை உன் இரு கரங்களாலும் அணைத்துக் கொண்டாய். நான் உன்னைக் கவனித்து வந்தேன், தொடர்ந்து கவனித்து வந்தேன் — பொறுத்திருந்தேன் மேலும் பொறுத்திருந்தேன்...

மேலும் நீங்கள் எல்லாம் ஒரே மாதிரிதான். பார்ஸ்கியினு டைய சாராயக் கடைக்குத் தீ வைக்கும்படி தனது குடிகார மாமனை அலெக்ஸி இல்யீச் தூண்டி விட்டான். அதன் பின் னணியில் இருந்தது யார் என்று உன் அப்பா ஊகம் செய் தார், ஆகவே அந்தக் குடிகாரனை அடித்துக் கொல்வதற்கு அவர் ஏற்பாடு செய்தார். நிகீதா இல்யீச் அறி வான். அவனுக்கு மூளை இருந்தது, ஒவ்வொன்றையும் புரிந்து கொண்டான். தன்னுடைய நாக்கை அவன் அடக்கி வைத்திருக்கலாம், உன் மீது அவன் அத்தனை கோபமாக இருந்தான், அது பற்றி என்னிடம் சொன்னான். நான் அவ னிடம் கூறினேன்: 'நீ ஒரு துறவி, இது போன்ற விஷயங் களை நீ மறந்தாக வேண்டும். ஆனால் எனக்கு—நான் நினைவு வைத்திருப்பேன்!' நீங்கள் அவனை அஞ்சி நடுங்க வைத்தீர்கள், அத்தகைய காரியங்களை நீங்கள் செய்தீர் கள். தூக்குக் கயிற்றை நோக்கி ஓடும்படி துரத்தினீர்கள், பிறகு துறவி மடத்தை நோக்கி—உங்களுக்காக வேண்டிக் கொள்வதற்காக! உங்களுக்காக வேண்டிக் கொள்ளக் கூட அவன் அஞ்சினான். அவன் துணியவில்லை! இது காரண மாகத்தான் தனது கடவுள் நம்பிக்கையையே அவன் இழந்து விட்டான்...''

தீர்ப்பு நாள் வரையில் தீஹன் பேசிக் கொண்டிருப்பான் என்பது போலத் தோன்றியது. எந்தவிதமான காழ்ப்புமின்றி, தெளிவாக, சிந்தனை வயப்பட்டவனாக அவன் பேசினான். முன் வந்து கொண்டிருந்த அந்திப் பொழுதின் அடர்த்தி யான, வெப்பமான இருளில், அவனுடைய உருவமானது பெரும்பாலும் இனங்காண முடியாதபடி போனது. இர விலே சரசரத்து மொய்க்கும் கருத்த கரப்பான் பூச்சிகளைப் போல வந்த அவனுடைய கரகரப்பான சொற்கள் அர்தமோ னவுக்கு அச்சத்தை ஏற்படுத்தவில்லை. ஆனால் அவற்றி னுடைய பளு அவனைக் கீழே தாழ்த்தியது; அவற்றினு டைய எதிர்பாராத்தன்மை அவனை ஊமையாக்கியது. புரிந்து கொள்ள முடியாத இந்த மனிதன் தனது பகுத் தறிவை இழந்து விட்டான் என்ற எண்ணம் மேன்மேலும் வளர்ந்தது. தனது தோள்களினின்றும் கனத்த சுமையை இறக்கியவனைப் போன்று, தீஹன் நீண்டு மூச்சு விட்டான், எப்போதோ மறந்து போயிருக்க வேண்டியவற்றை தோண்டி எடுத்தபடி அதே சலிப்புத் தட்டுகிற குரலில் பேசிக் கொண் டிருந்தான்:

''என்னுடைய நம்பிக்கை கூட அர்தமோனவ்களாகிய நீங்கள் தான் கொன்றீர்கள் என்பது. உங்களால் தான் நிகீதா இல்யீச் என்னுடைய நம்பிக்கையைக் கொன்றான். அவன் தன்னுடையதையும் இழந்தான், என்னுடையதையும் கொன்றான்... உங்களுக்குக் கடவுள் கிடையாது, எந்தச் சாத்தானும் கூடத்தான் கிடையாது. உங்கள் வீட்டிலே இருக்கின்ற தெய்வ பீடமானது வெறுமனே உலகத்தை முட்டாளாக்குவதற்கு. அதில் நீங்கள் என்ன நம்புகிறீர்கள்! அது புரிந்து கொள்ள முடியாதது. உங்களுக்கு எதிலாவது நம்பிக்கை இருக்கிறதா? மோசடிகள். உங்கள் வாழ்க்கை முழுதுமே பொய்யானது. இப்போது அது எல்லாமே வெளி வந்து விட்டது. அவர்கள் உங்களுடைய முகமூடியைக் கிழித்து எறிந்து விட்டார்கள்...''

தனது உடல் எதிர்ப்பையும் மீறி, பயப்படும்படி கனமாக இருந்த தனது கால்களை அர்தமோனவ் கீழே தொங்கப் போட்டான். ஆனால் அவன் கால்களின் அடிப்பகுதி தரையைத் தொட்ட உணர்வே ஏற்படவில்லை, கால்கள் முறிந்து போய் தொங்கிக்கொண்டிருப்பது போன்று அவனுக்குத் தோன்றியது. அச்சமுற்றுப் போய் தீஹனுடைய தோளைப் பற்றினான்.

அவன் கைகளை முரட்டுத்தனமாக உலுக்கியபடி ''எங்கே?'' என்று முற்றப் பாதுகாவலன் கேட்டான். ''என்னைத் தொடதே. எனது சங்கை உன்னால் நெரிக்க முடியாது—அதற்கு உன்னிடம் தெம்பும் இல்லை. உன் அப்பா வலுவாக இருந்தார், ஆனால் வீண் சண்டைகளிலேயே தனது சக்தி முழுவதையும் வீணாக்கினார். நீங்கள் என் நம்பிக்கையைக் கொன்று விட்டீர்கள் என்று கூறுகிறேன். இப்போது எப்படி சாவது என்பது தெரியவில்லை. சனியன் உங்களுடைய தந்திரங்களை எல்லாம் கவனித்துக் கொண்டு வந்ததால்தான்...''

அர்தமோனவுக்கு பசிக் கொடுமை மெல்லமெல்ல அதிகரித்துக் கொண்டே இருந்தது; தனது கால்கள் இருந்த நிலைமையால் அவன் பெரிதும் கலங்கிப் போய் விட்டிருந்தான்.

''நான் என்ன, சாகிறேனா? எனக்கு எழுபத்தி ஐந்து கூட ஆகவில்லை. ஓ, கடவுளே...''

திரும்பவும் படுத்துக் கொள்வதற்கு அவன் முயன்

றான், ஆனால் அவனால் கால்களை உயர்த்த முடியவில்லை. பிறகு தீஹனிடம் கூறினான்:

''உதவி செய், என் கால்களைத் தூக்கு!''

தனது ஒரு காலத்திய எசமானனது செத்துப் போன கால்களைத் தூக்கி, பெஞ்சின் மீது தீஹன் வைத்தான், காறித் துப்பினான், தனது தொப்பிக்கு மேலாகக் குனிந்த படி திரும்பவும் உட்கார்ந்தான். அவனது கையில் ஏதோ மினுமினுத்தது. கூர்ந்து நோக்கிய அர்தமோனவுக்கு அது ஊசி என்பது தெரிந்தது. தனது தொப்பியில் தீஹன் எதையோ தைத்துக் கொண்டிருந்தான், இந்த இருட்டில்—இது அவனுடைய பித்துப் பிடித்த தன்மையை உறுதிப்படுத்தியது. பழுப்பு நிறமான ஒரு வண்ணத்துப் பூச்சி அவன் தலைக்கு மேலே சிறகடித்தது, வெளியே பழத் தோட்டத்தில், மஞ்சள் நிறமான மூன்று ஒளிக் கற்றைகள் தோன்றின. தொலைவில் இருந்து என்றாலும், ஒரு குரல் தெளிவாகப் பேசியது:

''தோழர்களே, பின்வாங்குவது என்பதே நமக்குக் கிடையாது, அது ஒருபோதும் நடக்காது...''

அதை மீறி தீஹன் பேசினான்:

''உன் அப்பாவும் கூட என் சகோதரனைக் கொன்றார்.''

எந்திர கதியில் அர்தமோனவ் ''அது பொய்,'' என்றான், ஆனால் உடனடியாகக் கேட்டான்: ''எப்போது?''

''அப்போதுதான்...''

''மூளைத் திறம்பிய முட்டாளே, எதற்காக பொய், பொய்யாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாய்?'' என்று திடீரென்று ஏற்பட்ட எரிச்சலில் அர்தமோனவ் இரைந்தான். பசி அவனைப் பிழிந்தடுத்தது. அவனது பலத்தை உறிஞ்சிக் கொண்டிருந்தது. ''உனக்கு என்ன வேண்டும்? நீ என்னுடைய மனச்சாட்சியா? என்னுடைய நீதிபதியா? இந்த முப்பது ஆண்டுகளிலும் அதற்கு மேலும் ஏன் நீ எதுவுமே சொல்லாது இருந்தாய்?''

''ஏனென்றால், என்னால் முடியாது. நான் சிந்தித்துக் கொண்டிருந்தேன்.''

''பகைமையைச் சேர்த்துக் கொண்டிருந்தாயா? ஹூம்... நல்லது, போ—போலீசிடம் தெரிவி.''

''போலீசே கிடையாது.''

''அவர்களிடம் சொல்லு: 'இந்த மனிதனைப் பார்த்துக் கொள்ளுங்கள். என் வாழ்நாள் முழுக்க எனக்கு உணவும்

உடையும் தந்தவர். தண்டியுங்கள் இவனை!' ஆனால் நீ அறிவித்து விட்டாயா, இல்லையா நீ? உனக்கு என்ன வேண்டும், நான் அறிய விரும்புகிறேன். என்னை அச்சுறுத்துகிறாயா, அதை ஏன் செய்யவில்லை? என்னிடமிருந்து பணத்தை பிழியப் பார்க்கிறாய், என்ன?''

''உன்னிடத்தில் எந்தப் பணமும் இல்லை. உன்னிடத்தில் ஒன்றும் கிடையாது, இருந்ததில்லை. உனது நீதிபதிகளைப் பற்றி எனக்கென்ன அக்கறை? நானே எனக்கு நீதிபதி.''

''சரி, உளறிக் கொட்டும் முட்டாளே, பிறகு, ஏன் என்னை அச்சுறுத்திக் கொண்டிருக்கிறாய்?''

ஆனால் தீஹன் மொத்தத்தில் அச்சுறுத்திக் கொண்டிருக்கவில்லை என்பதை அர்தமோனவ் தெளிவில்லாதபடி உணர்ந்தான். தீஹன் முணுமுணுத்தான்:

''காயீனின் பிள்ளைகள் எல்லாருக்குமே முடிவு வந்து விட்டது. எதற்காக அவர்கள் என் சகோதரனைக் கொன்றார்கள்?''

''உன் சகோதரனைப் பற்றிய பொய் அது!''

ஒருவரையொருவர் இடைமறித்தபடி கிழவர்கள் இப்போது வேகமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''பொய்யா? அன்று இரவு நான் அவனோடு இருந்தேன்...''

''யாருடன்?''

''என் சகோதரனுடன். உன் அப்பா அவனைக் கொன்ற போது, நான் ஓடிப் போய் விட்டேன். உன் அப்பா இறக்கும் போது ரத்தம் கக்கினாரே, அது அந்த ரத்தம் தான். அவன் ரத்தத்தைச் சிந்த வேண்டிய அவசியம் என்ன இருந்தது?''

''மிகவும் காலங்கடத்தி விட்டாய்...''

''நல்லது. இப்போது உன்னை அவர்கள் கீழே தள்ளி விட்டார்கள், தூக்கி வெளியே எறிந்து விட்டார்கள். உன்னைப் பாதுகாப்பதற்கு யாருமே எஞ்சியிருக்கவில்லை. நான் தான் எப்போதும் போல உன் அருகிலே நின்று கவனித்துக் கொண்டிருக்கிறேன்...''

''எப்போதும் போல பைத்தியமாகவும் இருக்கிறாய்...''

அந்த முன்னாளைய குழிதோண்டுபவன் ஒரு மூலைக்குத் தன்னைத் துரத்திக் கொண்டு போய், தெளிவின்மை, புரிந்து கொள்ள முடியாமை, பயங்கரம் இவற்றால் நிறைந்து

கிடக்கும் ஒரு குழிக்குள்ளாகத் தள்ளி விடுவது போல அர்தமோனவ் உணர்ந்தான். அவன் மீண்டும் மீண்டும் அதையே சொன்னான்:

''நீ மிகவும் காலங்கடத்திவிட்டாய். அது பொய். உனக்கு சகோதரன் ஒருபோதும் இருந்தது கிடையாது. உன்னைப் போன்றவர்களுக்கு ஒன்றும் கிடையாது...''

''எங்களுக்கு மனசாட்சி உண்டு.''

''என் மகன் இல்யாவை நீ குழப்பினாய். அவனைத் தவறான வழியில் போக வைத்தாய்!''

''அர்தமோனவ்களாகிய நீங்கள் தான் என்னைக் குழப்பினீர்கள். நிகீதா இல்யீச் மற்றும் அவனுடைய பேச்சு!''

''நீ தான் அவனுக்கு ஆரம்பித்து வைத்ததாக அவன் சொன்னான்!''

''உன் தந்தையைக் கொல்ல வேண்டும் என்று எத்தனை முறை நினைத்திருக்கிறேன். அவரது தலைக்கு மேலாக எனது மண்வாரியைக் கூட கிட்டத்தட்ட உயர்த்தி விட்டேன்... நீங்கள் நரித்தனம் கொண்டவர்கள்...''

''நீதான், நீ...''

''ஸெரஃபீம், அவனை நீங்கள் வைத்துக் கொள்ள வேண்டி இருந்தது. அவன் கூடத்தான் என்னைக் குழப்பினான். அவன் எவருக்கும் தீங்கேதும் செய்ததில்லை, ஆனாலும் அவன் சரியாக வாழவில்லை. அது எப்படி? நீங்கள் திரும்புகின்ற ஒவ்வொரு பக்கமும் நரித்தனமும் திரும்புகிறது...''

''யார் போவது? எங்கே போகிறாய்?'' என்று உரத்த தொனியில், இருளிலிருந்து ஒரு குரல் கோபமாகக் கேட்டது. ''நாறப் பயல்களா, உங்களுக்கு எத்தனை முறை தான் சொல்வது? எட்டு மணிக்குப் பிறகு வீணாகச் சுற்றித் திரியக் கூடாது என்று!''

தீஹன் எழுந்து வாசலை நோக்கிச் சென்றான், இருளிலே அவன் மறைந்து விட்டது போலக் காணப் பட்டது. பரபரப்பாலும், பசியாலும், களைப்பாலும் அழுத்தப்பட்ட அர்தமோனவ் பழத்தோட்டத்தில் மஞ்சள் நிற ஒளிக் கற்றை ஒன்றைக் கடந்து, கருத்து, அகன்ற ஓர் உருவம் வருவதைக் கண்டான். இதைவிட மேலும் அச்சம் தரும் ஏதோ ஒன்றை எதிர்பார்த்தபடி கண்ணை மூடிக் கொண்டான்.

''நீ ஏதாவது பெற்றுக் கொண்டாயா?'' தீஹன் யாரையோ கேட்டான்.

''இதோ. இவ்வளவுதான்!''

அவனது மனைவியினுடைய குரல். அவள் எங்கே போயிருந்தாள்? இந்தக் கிழவனோடு தன்னைத் தனியாக விட்டு விட்டு எதற்காகப் போனாள்?

அர்தமோனவ் தனது கண்களைத் திறந்தான், தனது முழங்கைகளை ஊன்றியபடி தானே எழுந்து, இப்போது இரண்டு கருத்த உருவங்களால் அடைபட்டுப் போயிருந்த வாசல் வழியை உற்றுப் பார்த்தான். தனது வாழ்நாள் முழுக்க அவனைத் திணரடித்து வந்த பிரச்சினை குறித்துத் திடீரென்று நினைவு கூர்ந்தான்: யாரைக் குறை சொல்வது? தனது வாழ்க்கையானது இந்தளவுக்குத் தாங்கிக் கொள்ள முடியாதவாறு குழம்பிப் போனதும், ஏமாற்றத்தாலும் வஞ்சகத்தாலும் இந்தளவுக்குத் தோய்வுற்றுப் போனதும் யாருடைய தவறால்? இப்போது எல்லாமே தெளிவாகத் தெரிந்தது.

அவனுடைய மனைவி வந்தாள், அவனுக்கு மேலாகக் குனிந்தபடி, கிசுகிசுத்தாள்:

''நல்லது, நல்ல கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும்...''

''அதோ, தீஹன்—இவள் தான் குற்றம் சுமத்தப்பட வேண்டியவள்!'' என்றான் அர்தமோனவ் உறுதியாக, நிம்மதிப் பெருமூச்சு விட்டபடி. ''அவள் பேராசைக்காரியாக இருந்தாள், அவள் என்னைத் துரத்தினாள். அது அப்படித் தான் நடந்தது!''

மேலும், வெற்றிக் களிப்போடு அவன் உறுமினான்:

''நிகீதாவும் கூடத்தான்—எல்லாமே அவளால் தான். உனக்காகவே தெரியும், ஆமாம்...''

அர்தமோனவ் மூச்சுக்கு ஏங்கினான். விநோதந்தான்: அவன் மனைவி கோபப்படவோ, நடுக்குறவோ இல்லை. அழக்கூட அவள் தொடங்கவில்லை. உறுதியற்ற கையால் அவனது தலைமுடியை வருடிக்கொடுத்தபடி, ஆர்வத்தோடு ஆனால் பரிவோடு, அவள் கிசுகிசுத்தாள்:

''சத்தம் எதும் போடாதே. அங்கே வெளியே இருப்பவர்கள் அத்தனை பேரும் அவ்வளவு கோபக்காரர்கள்...''

''சாப்பிடுவதற்கு எனக்கு ஏதாவது கொடு...''

இஞ்சி ஊறுகாய்த் துண்டு ஒன்றையும், ஊறிப்போயிருந்த ரொட்டி ஒன்றையும் அவனது கையில் அவள் திணித்

தாள். ஊறுகாய் வெதுவெதுப்பாக இருந்தது, ரொட்டியோ பச்சை மாவு போல விரல்களில் அப்பிக் கொண்டது.

அர்தமோனவ் வியப்பில் கத்தினான்:

''இது என்ன? இது—எனக்கா? அவ்வளவுதானா?''

''கிறிஸ்துவின் பெயரால், அமைதியாக இரு,'' நதால்யா கிசுகிசுத்தாள். ''அங்கே எதுவுமே இல்லை! மேலும் போர் வீரர்களும் கூட...''

''கடந்த காலத்திய எல்லாவற்றுக்குமாக எனக்கு நீ கொடுப்பது இது தானா? எனது அச்சங்களுக்கெல்லாம், எனது வாழ்க்கைக்கெல்லாம்?''

புரியாதவாறு முணுமுணுத்தபடி, தனது கையால் அந்த ரொட்டியை நிறுத்துப் பார்த்தான். ஏதோ ஒன்று நடந்து போய் விட்டிருந்ததையும், தாங்கிக் கொள்ள முடியாத ஏதோ ஒன்று, கேவலமான ஏதோ ஒன்று என்பதைத் தெளி வில்லாதபடி புரிந்து கொண்டான். இதற்கும் கூட அவளை, நதால்யாவை குறை சொல்ல முடியாது.

அந்த ரொட்டியை வாசலை நோக்கித் தூக்கி எறிந் தான், சோர்வாக ஆனால் தீர்மானமான குரலில் சொன் னான்:

''அதை நான் எடுத்துக் கொள்ளப் போவதில்லை.''

அந்த ரொட்டியை தீஹன் எடுத்து, அதன் மீது ஊதி னான். தன் கணவனின் கையில் திணிப்பதற்காக நதால்யா மீண்டும் ஒரு முறை முயன்றபடி கிசுகிசுத்தாள்:

''சாப்பிடு, சாப்பிடு. கோபப்பட வேண்டாம்...''

அவள் கையைத் தள்ளி விட்டபடி, தனது கண்ணை இறுக்கமாக மூடிக்கொண்டு, மோசமான கோபத்துடன், அர்தமோனவ் திரும்பவும் சொன்னான்:

''அதை நான் எடுத்துக் கொள்ளப் போவதில்லை. அப்பால் போ.''

**1924—1925**

**வாசக நேயர்களுக்கு**

*இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் யோசனைகளை வரவேற்கவும்* **ராதுகா பதிப்பகம்** *மகிழ்வுடன் காத்திருக்கிறது.*

*கடிதங்களைத் தயை செய்து* Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR *என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.*

**விற்பனையாளர்கள்**

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்**

**தலைமை அலுவலகம்**

*41, பி. சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,*
*சென்னை—600098*

**ஷோ-ரூம்**

*136, மவுண்ட் ரோடு, சென்னை—600002*

**கிளைகள்**

*80, மேலக் கோபுர வீதி, மதுரை—625001*
*87/89, ஒப்பணக்கார தெரு, கோயம்பத்தூர்—641001*
*சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி—620008*
*செர்ரி ரோடு, சேலம்—636001*
*1 ஏ, திருவனந்தபுரம் சாலை, வண்ணாரப் பேட்டை,*
*திருநெல்வேலி*

**விற்பனை நிலையம்**

*66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்*

**ராதுகா பதிப்பகத்தின்**
*அடுத்தவெளியீடு*

*அ. பதேயிவ்.* **முறியடிப்பு.** *நாவல்*

*சோவியத் இலக்கியத்தின் சிறந்த படைப்பாளர் அலெக்சாந்தர் பதேயிவ் (1901—1956) அக்டோபர் சோஷலிசப் புரட்சியிலும் உள்நாட்டுப் போரிலும் பங்கு பெற்றார்; தொலைதூரக் கிழக்கில் அவர் குறுக்கீட்டாளர்களுடைய சக்திகளுடன் போரிட்டு, தொலைதூரக் கிழக்குக் குடியரசை வீழ்த்த முயன்றதை அழிக்க உதவினார். போராட்டத்தின் இந்த ஆண்டுகள் எழுத்தாளரிடம் மறக்க முடியாத மனப்பதிவை ஏற்படுத்தின. அந்த நாட்களின் துயரார்ந்ததும், வீரஞ்செறிந்ததுமான நிகழ்ச்சிகள்* **முறியடிப்பு** *நாவலுக்கு ஆதாரங்களாகின. வீழ்ந்துவிட்ட முடியரசின் ஆதரவாளர்களுடனும் பசிபிக் கடற்கரையின் கடலோரம் பகுதி நெடுகிலும் குறுக்கீட்டாளர்களுடனும் நெருங்கிக் கலந்து போரிட்ட கொரில்லாப் படையின் வாழ்க்கையையும் பதேயிவ் துல்லியமாகத் தருகிறார்.*

இரண்டு முக்கிய 'செயல்திட்ட'
றிக்கோள்கள்—''ஆன்மாவின் புத்து
ர்ப்பு'' ஒன்று ''ஆளுமையின் அழிவு''
ன்பது மற்றொன்று—கார்க்கியின்
டைப்புகள் ஒவ்வொன்றிலும் இடம்
பற்றிருக்கின்றன. தனி மனிதன் ஒரு
ன் தனது விதியை மக்களுடைய விதி
யாடு, அவர்களது விடுதலை மற்றும்
மகிழ்ச்சி இவற்றிற்கான போராட்டத்
தில் சேர்க்கின்ற போது அவன் 'புத்து
யிர்ப்புப்' பெறுகிறான், இரண்டாவது
பிறவி எடுக்கிறான். உலகின் பல்வேறு
நாடுகளைச் சேர்ந்த லட்சோபலட்சக்
கான மக்களுடைய வாழ்க்கை நூலாகி
விட்ட ''தாய்'' என்ற நாவலில் இந்
தக் கரு முக்கியமானதாக நிறைந்து
நிற்கிறது. ஆனால் ஒரு தனி மனிதன்
தனது விதியை மக்களினுடைய விதி
யினின்றும் வேறு படுத்திக்கொள்கின்ற
போது, தனது ஆளுமையை அழித்துக்
கொள்கிறான். இதுவே ''அர்தமோனவ்
கள்'' என்ற இந்த நாவலின் முக்கியக்
குறிக்கோளுமாகும்.

''அர்தமோனவ்களை'' எழுத 1900த்தின் தொடக்கத்தில், எண்ணிய கார்க்கி லேவ் தல்ஸ்தோயிடம் கூறினார்: ''நானறிந்த மூன்று தலைமுறைகள் கொண்ட ஒரு வியாபாரியின் குடும் பம் பற்றிய, கீழ் நோக்கிய போக்கின் விதிக்கேற்ப செயல்பட்ட, கதையை அவரிடம் கூறினேன். 'இது மிகவும் அவசியமானது. அந்தக் குடும்பம் முழுவதற்குமாக ஒருவன் துறவி மடத்தில் சேர்வது அருமையானதாக இருக்கிறது! அது வாழ்க்கையில் உண்மையானது தான்: ஒருவன்—பாவம் செய்யட்டும், இன்னொருவன் அவனுக்காக வேண்டிக்கொள்கிறான். அவன் ஒரு குடிகாரன், மிருகம், ஒழுக்கக்கேடானவன், எல்லாரையும் காதலிக்கிறான்... எந்தவகையிலும் இது பற்றி நீங்கள் எழுத வேண்டும்...' ''

''ஒரு முறையான ஆய்வுப் பொருள்,'' என்று சில ஆண்டுகளுக்குப் பிறகு வி.இ.லெனின் குறிப்பிட்டார். ''...ஆனால் இதை நீங்கள் எப்படி முடிக்கப் போகிறீர்கள்? எதார்த்தம் கதைக்கு எந்த முடிவினையும் தந்து விடாது. இதை நீங்கள் புரட்சிக்குப் பிறகே எழுத வேண்டும்...'' லெனின் சரியாகக் குறிப்பிட்டார். ருஷ்யாவில் 1917இல் நடந்த அக்டோபர் சோஷலிசப் புரட்சியின் வெற்றியே நூலுக்கு ஒரு முடிவினைக் காட்டியது.